ஸ்ரீ:

407

ஸ்ரீமத்

# வால்மீகி ராமாயண

## மொழி பெயர்ப்பு

(முதற் பகுதி)

காஞ்சீபுரம் மகாவித்வான்.

பிரதிவாதி பயங்கரம். அண்ணங்கராசாரியார் சுவாமிகளால்,

எழுதப்பெற்று

த. குப்புசாமி முதலியாரவர்களால்

தமது குமரன் அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பெற்று

காஞ்சீபுரம் தமிழ்நூற்பதிப்பகத்தில்

வெளியிடப்பெற்றது.

---

1941



கிளேஸ் பதிப்பு 2-வால்யம் விலை ரூ. 4.

# நூன்முகம்.

---

அன்புடையீர்!

நமது பெரும் பாக்கியம் பரிபக்குவ நிலைமையை அடையப்பெற்றதோர் பரமானந்தத்தை அளவுகடந்த மனக்களிப்புடன் வெளியிடுதற்கு இன்று அவகாசம் கிடைத்தது மிகப் பேரின்பம்.

நம்மால் கவனிக்கப்பட வேண்டியவை இரண்டு விஷயங்கள்; பாவம் போக்குதல் ஒன்று; பொழுது போக்குதல் மற்றொன்று; பாவம் போவது கடவுளின் கருணையினாலாகக் கூடியதென்றும், அது நம் போன்றவர்களால் தெரிந்து கொள்ள முடியாததென்றுங் கூறுவர். பொழுது போக்குவதாகிய இரண்டாவது காரியத்திற்கு என்ன வழியென்று சிந்தித்தல் விவேகிகளின் பணியாகும். சூது சதுரங்க மாடுதல் முதலிய பலவகைக் காரியங்களினாலும் பொழுது போக்கப்படுமாயினும், ஆன்மா கடைத்தேறும் வழியில் பொழுதைப் போக்குவதே சத்காலக்ஷேபமென்று சத்துக்களால் கருதப் படும். பகவானது கதைகளைப் பாராயணஞ் செய்து பொழுது போக்குவதே அஃது என்றதாயிற்று.

பகவானது சரிதைகளை வருணிக்கும் இதிகாச புராணங்கள் பல நூற்றுக் கணக்காக அமைந்திருப்பினும் "ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம்" என்று உலகமெங்கு மோங்கிய புகழ் பெற்ற ஸ்ரீராம சரிதையொன்றே அறம் பொருளின்பம் வீடெனும் நால்வகைப் புருஷார்த்தங்களையும் எளிதில் அளிக்கவல்லதென்பது உலகமறிந்த தொன்றாம்.

மிகக்கடினமான வடமொழி நடையில் அமைந்திருக்கின்ற அந்த ஸ்ரீராமாயணத்தின் ஆழ் பொருளையும் உட்கருத்தையும் உணர்வது மிக அரிதாதலால் தமிழ் மக்களுக்குத் தமிழ் மொழிபெயர்ப்பு இன்றியமையாததாம். ஸ்ரீமத் வால்மீகி ராமாயணத்திற்கு மொழி பெயர்ப்பென்று இதுகாறும் பலரால் பல மொழிபெயர்ப்புகள் வெளியிடப்பட்டிருப்பினும், இப்போது வெளிவருகின்ற இம்மொழி பெயர்ப்

பின் நேர்பாடடை அவரவர்கள் தாம் அனுபவித்து உய்த் துணர வேண்டுமேயல்லாது, நாம் எடுத்துரைக்கத் தக்க தன்றென நினைக்கிறோம்.

இது ஸ்ரீமத் வால்மீகி ராமாயணத்திற்கு நேரான மொழி பெயர்ப்பாயினும், கதையின் போக்கை ஒழுங்காக அறிந்து கொள்வதற்கு இடையூறாக நிற்கும் அதிகமான வருணனைகளும் உவமைகளும் இம்மொழி பெயர்ப்பில் விலக் கப்பட்டுள்ளன. ருசிகரமாக வாசிப்பவர்களின் இன்பத்தை நோக்கியே இங்ஙனம் அமைக்கப்பட்டதாதலின் இவ்வமைப் பிற் குறைகூற நேராதெனக் கருதுகின்றோம்.

நமது உயிர்நண்பரும், இத்தகைய நற்காரியங்களை நிகழ்த்துதலிலேயே இளமை தொடங்கி ஊக்கமுடையவரும், குமரன் அச்சுக்கூடத் தலைவருமான திருவாளர் த. குப்பு சாமி முதலியாரவர்கள் நம்மோடு நட்புக்கொண்ட காலம் முதலாகவே 'இங்ஙனே ஒரு மொழிபெயர்ப்பு வெளியாக வேண்டும்' எனத் தமது மிக்க குதூகலத்தை அடிக்கடி காட்டி வந்தார். பல காரியங்களில் ஈடுபட்டிருக்கின்ற நம்மால் இது இப்போதே நிறைவேற்றலாயிற்று. இதனை வெகு நேர்த்தி யாகவும் பிழையறவும் பதிப்பித்த நம் முதலியாரவர்கட்கு இவ்வுலகம் முழுவதும் நன்றிபாராட்டக் கடமைப்பட்டிருக் கின்றதென்றால் மிகையாகாது.

இங்ஙனமே மேன்மேலும் பலபல நற்காரியங்களை நிகழ்த்துதற்கு ஏற்ற ஆற்றலும் ஆர்வமும் இறைவனருளால் இப்பெரியார்க்குப் பொருந்துமாக.

இரவிலும் விரைவிலும் எழுதநேர்ந்ததனாலும் மானிட ரியற்கைக்குரிய தீக்குணங்களினாலும் இம்மொழிபெயர்ப் பில் நேர்ந்துள்ள பிறழ்வுகளைப் பெரியார் தெரிவித்தருளுவா ராயின் மறுபதிப்பில் அவை திருத்தப்பெறும்.

இங்ஙனம்,

பாகவத பாததூளி

**காஞ்சீ. பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியார்.**

# வெளியீட்டுரை

---

உண்ண உண்ணத் தெவிட்டாத உணவுப் பொருள்களும் உலகத்தில் உண்டு. அவ்வண்ணமாகவே படிக்கப் படிக்கத் தெவிட்டாத பனுவல்களும் பாரினிலே பல உள. அவைகளிலே இராமாயணம் தலை சிறந்ததொரு நூல் என்பதை எல்லோரும் அறிவர்.

இராமாயணம் நமது நாட்டுக்குச் சொந்தமானதொரு பெருநூல். வடக்கே இமயமலையிலிருந்து தெற்கே கன்னியாகுமரி வரையிலும், அவ்வாறே மேற்கிலும் கிழக்கிலும் நாட்டின் எல்லை செல்லும் வரையிலும், இராமாயணக் கதை பேசவும் கேட்கவும் பெறாத இடம் இல்லை என்பது புனைந்துரையாகாது. அந்த அந்த இடத்திலே வழங்கும் மொழியிலே பலபல அறிஞர்களால் இராம சீதைகளின் வரலாறு வரையப்பெற்றிருக்கின்றது. கதையின் பெரும்போக்கு எல்லா நூற்களிலும் ஒரே தன்மையதாக இருந்தாலும், கதையின் பல பகுதிகள் வேறு வேறு வகையாக வேறு வேறு மொழிகளிலே எழுதப்பெற்றிருக்கின்றன. எழுதியவருடைய இடம், காலம், மக்கள் தொகுதியின் பழக்க வழக்கங்கள், மனப்பான்மை, இவைகளுக்கு ஏற்றபடி கதையில் வரும் பல செயல்கள் சில பல மாறுதல்களை அடைந்திருக்கின்றன.

அயல்நாட்டுப் பல மொழிகளிலே இராமாயணம் எழுதப் பெற்றிருப்பதில், நம் நாட்டு நூல்களிலில்லாத மாறுதல் எதுவும் புதிதாக அவ்வயல் மொழி நூற்களிலே புகுத்தப் பெறாது இருப்பது போற்றத்தக்கதேயாம். நமது நூற்

களில் ஒன்றை எடுத்துக்கொண்டு அதற்கு நேர் மொழி பெயர்ப்பாகவோ, அதன் சுருக்கமாகவோ அயல்மொழியிலே எழுதப்பெற்றிருப்பதனால்தான், அயல்மொழி நூற்களில் கதையில் புதுவதான மாறுதல் ஏதும் செய்யப்பெறவில்லை என்று தோன்றுகிறது. ஆனால் நம் நாட்டிலே கதையை மனதிலே வைத்துக்கொண்டு, கவியினுடைய கருத்தையெல்லாம் அக்கதையின் வழியாகத் தெரிவித்துவிடவேண்டும் என்று கவிகள் முயன்றதனால்தான், கதையின் நுணுக்கங்களிலே பலவேறுபாடுகள் வந்து நேரலாயின.

கவிப்பெருமன்னர் கம்பர் இராமாயணத்தை நமது தமிழ்மொழியிலே எழுதியிருக்கிறார். அதை நாம் படிக்கிறோம். இராமர், சீதை, இளையபெருமாள் முதலியவர்களைப்பற்றி கம்பர் என்ன சொல்லுகிறாரோ, அதைத்தான் படிக்கிறோம். அப்படியே வேறு நமது நாட்டு எந்த மொழியிலே உள்ள இராமாயணத்தைப் படித்தாலும் அதை எழுதியவருடைய கருத்து, கதையில் வரும் ஒவ்வொருவரைப்பற்றியும், ஒவ்வொரு செயலைப் பற்றியும், எப்படியிருந்தது என்பதைத்தான் அறிகிறோம். இராமாயணக் கதையையே ஒரு தத்துவ விளக்க நூலாகப் பொருத்திக் காட்டும் புலவர்களும் உண்டல்லவா? மூல கதையை அடிப்படையாக வைத்துக்கொண்டு ஒவ்வொருவரும் (அவரவர்களுடைய) இராமாயணத்தை எழுதலாயினர்.

எத்தனை பேர், எத்தனை மொழியில், எத்தனை வகையாக இராமாயண கதை எழுதினாலும், எல்லோரும், அக்கதையை முதல் முதலிலே உலகினுக்கு அளித்த வால்மீகி முனிவருக்கே கடமைப்பட்டவர்கள் ஆவார்கள். அப்பெரும் புலவர் வடமொழியிலே இனிய விருத்தப்பாக்களாக பல ஆயிரம் எழுதிவைத்துப் போனதைக் கொண்டே பின்வந்த ஒவ்

வொருபுலவரும் தங்கள் காலநிலையும், மொழிவளனும், செலுத்தியவகையிலேயெல்லாம் சிறுசிறு மாறுதல்கள் அமைத்துக் கதையைக் கவித்திறம் பெறப் பாடலாயினர்; படித்தற்கு எளிய உரைநடையிலேயே எழுதலாயினர்.

பிற பலர் வரைந்து வைத்துப் போயுள்ள பல இராமாயணங்களைப் படித்து அவற்றிலுள்ள நலன்களைப் போற்றுவதற்கு இராமாயணக் கதையை முதல் முதலிலே எழுதிய வால்மீகி முனிவர் எப்படி அதனை வரைந்திருக்கின்றார் என்று பார்ப்பது பெரிதும் வேண்டற்பாலதாகும். அம்முனிவரது வளஞ்சிறந்த கவிப்பெருமையை அவர் எழுதிய நூலில் அல்லாமல், அவர் கதையைப் பின்பற்றி எழுதியவர்கள் நூலிலா காணமுடியும்? எனவே, வால்மீகி இராமாயணத்தை, இராமாயணம் படித்தவர், படிக்க விருப்பமுள்ளவர், ஒவ்வொருவரும் பார்க்கவேண்டுவது இன்றியமையாத செயலாகும்.

அப்படியாயின், 'வடமொழியைக் கற்கவேண்டுமே, அது எல்லோருக்கும் நினைத்தவுடனே ஆவதொரு செயலாகாதே' என்று ஏக்கமுறுவார்க்கு 'வேண்டாம் அக்கவலை, இதோ தருகிறேன் வால்மீகியையே தமிழில்' என்று கூறுவது ஒப்ப, நமது காஞ்சீபுரம் மகாவித்வான் பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர் சுவாமிகள், அம்மொழியறியாதார் எளிதில் தெரிந்துகொள்ளுதற்காக வடமொழி இராமாயணத்தைத் தெள்ளத் தெளிந்த தமிழிலே, வர்ணனைகளை மட்டும், நூலைப் பெருக்குமெனவும், சுவைத்துப் படித்தலைத் தடுக்குமெனவும் அஞ்சி விடுத்து, நேர் மொழிபெயர்ப்பாகத் தந்தருளியிருக்கின்றார்கள். அம் மொழிபெயர்ப்பு நூலே இப்போது இவ்வெளியீட்டுரையோடு உலகினுக்கு அளிக்கப் பெறுகின்றது.

நாட்டின் எல்லா மக்களாலும், எல்லாக் காலத்திலும் போற்றப்பெறும் கதை முதல் முதலிலே எப்படி எழுதப் பெற்றதோ அப்படியே தமிழ் மக்கள் அதனைப் படித்தறிந்து முதல் நூல் ஆசிரியரது இன்கவிப் புலமையினை நுகர்ந்து மகிழ்வதோடு, கம்பராமாயணத்தின் சுவையினையும் முதல் நூல் கதையினோடு ஒத்துப் பார்த்துப் பாராட்டுதற்கும் துணையாகும்பொருட்டே இதனை எழுதியிட வேண்டும் என்னும் பரோபகாரச் சிந்தையினராய், கைம்மாறு சிறிதும் வேண்டாது, இம்மொழிபெயர்ப்பைச் செய்து உதவிய திரு. சுவாமிகளுக்குத் தமிழுலகம் என்ன நன்றி செய்ய லாகும்? என்றென்றும் கடமைப்பட்டதாயிருத்தலொன்றே யாகும். அவர்கள்கொண்ட கருத்தைக்கொண்டே. இம் மொழிபெயர்ப்பை எழுதித்தருமாறு நான் வேண்டிக்கொள்ள, எனது கோரிக்கையை, அவர்களுக்குள்ள பல வேலை நெருக் கினுக்கிடையிலே, நிறைவேற்றிக்கொடுத்த அவர்களுக்கு எனது வணக்கம் பலபல செலுத்திக்கொள்ளுகிறேன்.

எல்லோரும் எளிதில் வாங்கிப் படித்துப் பயன்பெற வேண்டும் என்னும் எண்ணத்தோடேயே, காகிதமும், அச்சுக் குரிய பல பொருள்களும், ஒன்றுக்குப் பல மடங்காக விலை யேறியிருக்கும் இவ்வேளையிலே, சுமார் 1300 பக்கங்கொண்ட இந்நூலின் இரண்டு பகுதிகளையும், குறிப்பிட்டதேதிக்குள் முன்பணமாக அனுப்புவோருக்கெல்லாம், மிகக் குறைந்த விலையாகிய ரூ. 3-க்கு கொடுக்கத்தீர்மானிக்கலானேம். தமி ழுலகம் இதனை ஏற்று இம்முயற்சியைப் பாராட்டிப் பயன் பெற வேண்டுமெனக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

தமிழ்நூற் பதிப்பகம்,
17-5-41.

க. குப்புசாமி.

# மதிப்புரை

மகா மகோபாத்யாய தட்சிணாத்ய கலாநிதி.

டாக்டர். உ. வே. சாமிநாதையர் அவர்கள் எழுதியது.

---

மஹாகவியாகிய ஸ்ரீ வான்மீகி முனிவர் இயற்றியுள்ள ஸ்ரீமத் இராமாயணம் மிகச் சிறந்த காவியமாக யாவராலும் கொண்டாடப்படுகிறது. வடமொழிப் பயிற்சியில்லாதவர்கள் அதன் பெருமையை அறிந்துகொள்ள முடியாமையால் அது பலரால் தமிழில் வசனரூபமாக மொழிபெயர்க்கப் பெற்றுள்ளது. ஒவ்வொன்றும் ஒவ்வொரு வகையாக அமைந்திருக்கிறது.

சமீபத்தில் காஞ்சிபுரம் உபய வேதாந்த மகா வித்துவான் ஸ்ரீமத் பிரதிவாதி பயங்கரம். அண்ணங்கராசாரிய ஸ்வாமிகளவர்கள் இவ்வரிய காவியத்தைத் தமிழில் மொழி பெயர்த்து வெளியிட்டிருக்கிறார்கள். இராமாயணத்தைப் பலவாறு ஆராய்ச்சி செய்திருக்கும் அவர்களுடைய இம் மொழி பெயர்ப்பு எல்லா வகையிலும் மிகச் சிறப்புற்று விளங்குகிறதென்பதை நான் சொல்வது மிகையாகும். இம் மொழி பெயர்ப்பு நூலில் உள்ள சிலசில பகுதிகளைப் படிக்கச் சொல்லிக் கேட்டேன். சரித்திரப்பகுதி வேறு விஷயங்கள் கலவாமல் தனியே அமைந்திருப்பதும், யாவரும் சுலபமாகப் படித்தறிந்து கொள்ளுமாறு வசன நடை சிறு சிறு வாக்கியங்களாக இருப்பதும், அர்த்த புஷ்டியுள்ள பதங்களை அங்கங்கே அமைத்திருப்பதும், பக்தி ரசம் தோற்றும்படி விஷயங்களைப் பொருத்தியிருப்பதும் மிகவும் பாராட்டற்குரியன. வான்மீகி ராமாயணத்துக்கும் வேறு இராமாயணங்களுக்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமைகளை நன்கு அறிந்து கொள்வதற்கு இம்மொழி பெயர்ப்பு மிக்க சாதனமாக இருக்கும். ஆதலின் தமிழ் மக்கள் அருமையான இம் மொழி பெயர்ப்பை வாங்கிப் படித்துப் பயனடைவார்கள் என்று நம்புகிறேன்.

# பொருளடக்கம்

## பாலகாண்டம்.

---

## அயோத்தியா காண்டம்

---

## ஆரணிய காண்டம்.

---

## கிஷ்கிந்தா காண்டம்

ஸ்ரீ:

ஸ்ரீராமபிரான் திருவடிகளே சரணம்.

# வால்மீகி ராமாயணம்.

காஞ்சீபுரம் உபய வேதாந்த மஹாவித்வான்

ஸ்ரீமத். பிரதிவாதி பயங்கரம்

**அண்ணங்கராசாரிய ஸ்வாமிகள்**

மொழிபெயர்த்தது.

## முதல்ஸர்க்கம்-ஸங்க்ஷேப ராமாயணம்.

நாரதமுனிவர் வால்மீகிமுனிவருக்கு ஸ்ரீ ராமாயண கதையைச் சுருக்கமாக உபதேசிக்கின்றார் —

**ஸ்ரீ** நாரத முனிவரை நோக்கி வால்மீகி முனிவர் வணக்கத்துடன் "இக்காலத்தில் இவ்வுலகத்தில் எல்லா நற்குணங்களும் பொருந்தி இருப்பவன் யாவன்?" என்று வினவ, யாவும் அறிந்த அந்த நாரத முனிவர் மிக மகிழ்ந்து விடை கூறினார்:—

"இக்ஷ்வாகு வம்சத்திற் பிறந்து ஸ்ரீ ராமன் என்று திருநாமம் பெற்றவன் ஒருவனுளன்; அவன் உலகம் நிறைந்த புகழாளன்; அளவற்ற சக்தி வாய்ந்தவன்; அவனது திருக்குணங்கள் என்னால் எடுத்துரைக்க முடியா; அவனே கோஸல ராஜன் திருமகளான கௌஸல்யா தேவியின் வயிற்றிற் பிறந்த தசரத புத்திரன்; கடல்போல் மகா கம்பீரன்; வீரத்

தன்மையில் விஷ்ணு போன்றவன்; சந்திரன்போல் காண இனியன்; கோபத்தில் காலாக்கினியோடொத்தவன்; பொறுமையில் பூமியை நிகர்த்தவன்; ஸத்யத்தில் தருமதேவதையே வடிவெடுத்தது போன்றவன்.

இப்படிப்பட்ட நற்குணங்களையுடைய மூத்த குமாரனாகிய ஸ்ரீராமனை அவனது தந்தையாகிய தசரத சக்ரவர்த்தி ஒரு சமயத்தில் இளவரசனாக்க விரும்பினன். அப்போது அது சம்பந்தமான முயற்சிகளைக் கண்டு தசரத சக்ரவர்த்தியின் மனைவியருள் ஒருத்தியான கைகேயி யென்பவள் முன் சம்பராசுர யுத்தத்தில் தன் கணவனான தசரதனிடம் இரண்டு வரங்களைப் பெற்றிருந்தவளாகையால், இப்போது அவற்றுள் ஒன்றுக்குப் பயனாக ராமன் காட்டுக்குப் போக வேண்டுமென்றும், மற்றொன்றுக்குப் பயனாகத் தன் புத்திரனான பரதனை ராஜ்யாபிஷேகம் செய்விக்கவேண்டுமென்றும் அவ்வரசனிடம் கேட்டுக்கொண்டாள். அந்த தசரத சக்ரவர்த்தியும் முன்பு கைகேயிக்குத் தான் இரண்டு வரமளிக்க உடன்பட்டிருந்ததை ஞாபகத்திற்கொண்டு ஸத்யந் தவறாமை யென்னும் தர்மமாகிய கயிற்றாற் கட்டுண்டு, ப்ரிய [illegible] தனக்கு மிகவும் அன்பனாகிய ராமனைக் காட்டுக் கனுப்பினன்.

தந்தையிட்ட கட்டளையின்படி காட்டுக்குச் சென்ற ராம பிரானைத் தம்பியான லக்ஷ்மணனும் பேரன்புடன் பின் சென்றான். இராமனது தரும பத்தினியான ஸீதா தேவியும் உடன் சென்றாள். அந்த நகரத்தில் வசிக்கும் குடிமக்கள் ராம [illegible] மிகவும் ஈடுபட்டவர்களாகையால், அவனை விட்டுப் பிரிந்திருக்கமாட்டாமல் வெகு தூரம் பின் சென்றார்கள். ஸ்ரீ ராமன் பின் தொடர்ந்த ஜனங்களைத் திருப்பி

விட்டு, சிருங்கிபேர மென்னும் பட்டணத்துக்கு அருகான கங்கையின் கரையில் வேடர் தலைவனான குஹனென்பவனைக் கண்டு அவனுடன் நேசித்து, தன்னுடன் வந்த சாரதியான ஸுமந்திரனைப் பட்டணத்திற்குத் திருப்பியனுப்பினான்.

பின்பு மூவரும் அந்த குஹனுடைய உதவியினால் கங்கையைக் கடந்து, யமுனை முதலிய மற்ற நதிகளையும் கடந்து கால்நடையாகவே காடு காடாகச் சென்று அங்கு பரத்வாஜ மஹரிஷியைக் கண்டு சேவித்து அவருடைய நியமனப்படி சித்திரகூட மலையைச் சேர்ந்து, அங்கு ஒரு பர்ணசாலையை அமைத்துக்கொண்டு மனதுக் கினிய மலைச்சாரல்களில் வசித்திருந்தார்கள். இங்ஙனம் ராமன் சித்ரகூடத்தை அடையவும்; தசரத சக்ரவர்த்தி புத்திர சோகத்தால் வருந்தி முற்றும் பரகதி யடைந்தனன். பின்பு வசிஷ்டன் முதலிய அந்தணர்கள் பரதனை ராஜ்யாபிஷேகம் செய்துகொள்ளும்படி வேண்ட, அவன் அரசாட்சி புரியவல்லவனாயிருந்தும், அதற்கு இணங்கவில்லை. கைக் கெட்டின ராஜ்யத்தையும் ஒரு பொருளாக மதியாத அப் பரதன், ஸ்ரீ ராமனுடைய திருவடிகளைப் பணிந்து, அவனது அருள் பெறவேண்டிப் புறப்பட்டு, சித்திரகூட மலைச்சாரல் சேர்ந்து ஸ்ரீ ராமனைக் கண்டு தொழுது "ஸ்வாமி! தேவரீர் மூத்த குமாரராகையால் ராஜ்யாபிஷேகம் செய்து முடி சூடி அரசுபுரியவேண்டுவது நியாயம். மூத்தவனிருக்க இளையோன் அரசுபுரிய அதிகாரமற்றவனாதலால் திருவுள்ள மிரங்கி என்னுடைய விண்ணப்பத்தை யேற்று அருளவேண்டும்" என்று வணக்கத்துடன் வேண்டிக்கொண்டனன். ஆயினும் இராமன் தகப்பனுரை பொன்னுரையே சத்தியமாகக்கொண்டதனால் நகரம் திரும்ப விரும்பவில்லை. தனக்குப் பிரதிநிதியாக ராஜ்ய பரிபாலனம்

செய்யத் தன் பாதுகைகளை யீந்து பட்டணத்துக்குப் போகட பரதனைத் திருப்பி யனுப்பினான். பரதன் தன்னுடைய எண்ணம் நிறைவேறப் பெறாமல் ஸ்ரீ ராமனது பாதுகைகளை நாடோறும் போற்றி, ராமன் மீண்டு எழுந்தருள்வதையே யெதிர்பார்த்துக்கொண்டு, அயோத்தியில் வசிக்க ருசிக்காமல் அதற்கு அருகிலுள்ள நந்திக்கிராமத்தில் ராஜ்யஞ் செய்து கொண்டிருந்தனன்.

பின்பு ராமன் 'நாம் இங்கு இருந்தோமானால் நகரத்தி லுள்ள குடிமக்கள் அடிக்கடி வரக்கூடும்' என்றெண்ணியும், தண்டகாரணியத்திலுள்ள முனிவர்களின் கருத்திற்கு இணங்கியும் சித்திரகூடத்தை விட்டுத் தண்டகாரணியம் சேர்ந்து அங்குத் தனக்கு விரோதஞ் செய்த விராதனென்னும் அரக்கனைக் கொன்று பின் சரபங்க முனிவரைக் கண்டுவணங்கி அவரிடம் அனுமதி பெற்று, ஸுதீக்ஷ்ணரையும், அகஸ்தியரையும் அவர் தம்பியாகிய ஸுதர்சன முனிவரையும் சென்று பணிந்தனன். அகஸ்தியரும் தனக்கு இந்திரன் கொடுத்த வில்லையும் கத்தியையும் அழிவில்லாத அம்புகள் நிறைந்த அம்பறாத்தூணிகளையும் வாங்கிக்கொள்ள வேண்டுமென்று ராமனுக்குச்சொல்ல அவனும் அங்ஙனமே அவற்றை ஏற்றுக்கொண்டனன்.

பின்பு ராமன் சரபங்காச்ரமத்தில் வாசஞ் செய்து கொண்டிருக்க, முனிவர்களனைவரும் தமக்கு விரோதிகளான அசுரர்களையும் அரக்கர்களையும் அழிக்கவேண்டுமென்று வந்து வேண்டிக்கொண்டனர். ராமனும் அவ்வண்ணமே செய்வதாக உறுதி கூறினன். அங்கு அப்பொழுது, நினைத்த படி வடிவங்கொள்ள வல்லவளான சூர்ப்பணகையென்னும் ராக்ஷசி வந்து துன்பம் விளைவிக்க, அவளைக் காதையும்

மூக்கையும் அறுத்து மான பங்கப் படுத்தினன். பின்பு சூர்ப்பணகையின் தூண்டுதலால் போருக்கு வந்த கரன், தூஷணன், திரிசிரன் முதலிய அரக்கரனைவரையும் இராமன் போரில் எதிர்த்துக் கொன்றனன். ஜனஸ்தானமென்னு மிடத்திலிருந்த பதினாலாயிரம் ராக்ஷஸர்களும் ராமனால் மாண்டு போயினர்.

பின்பு இராவணன் தன்னுடைய உறவினராகிய கரதூஷணாதியோர் மாண்டு போயினரென்று கேட்டு மிகுந்த கோபாவேசங்கொண்டு சீதையைக் கவர்ந்து செல்லத் துணிந்து, அதற்கு மாரீசனென்னும் அரக்கனைத் துணை வேண்டினன். அம்மாரீசனும் 'ராவணா! ராமன் மிக்க பராக்ரமமுடையவன்; அவனோடு பகைகொள்வது உனக்கு நன்மையன்று' என்று அவனது சொல்லையும் செயலையும் மறுத்தனன். இராவணன் அந்த நல் வசனத்தைப் பேணாமல் அம்மாரீசனைக் கட்டாயப் படுத்தி இணக்கி, அவனுடன் கூடவே ஸ்ரீ ராமனுடைய ஆச்ரமத்தருகு சென்றான். பிறகு ஓர் மான் வடிவங் கொண்ட மாயாவியாகிய மாரீசனைக் கொண்டு ராமலக்ஷ்மணர் களிருவரையும் வெகுதூரம் போகச் செய்து, இராமனோடு இணைபிரியாதிருந்த சீதையைக் கவர்ந்து, இடையில் தடுக்க வந்த ஜடாயுவைக் குற்றுயிராக்கிச் சென்றான். இராமனும் மாரீசனைக் கொன்று ஆச்ரமத்திற்கு வந்து அங்குச் சீதையைக் காணாமல் தேடிக்கொண்டுபோகையில் ராவணனால் அடிபட்டு துவண்டு விழுந்து கிடக்கும் ஜடாயுவைக் கண்டு சீதையை ராவணன் கவர்ந்து சென்றதாகச் சொல்லக் கேட்டு மிகவும் வருந்தினன்.

பின்பு ராமன் ஜடாயுவுக்கு ப்ரஹ்மமேதஸம்ஸ்காரமென்னும் ஈமக்கடனைச் செய்து முடித்து அவ்வனத்தில் சீதையைத்

தெடுக்கொண்டு போகையில், மிகவிகாரமான உருவத்துடன் பயங்கரனாயிருந்த கபந்தனென்னும் அரக்கனைக் கொன்று அவன் வேண்டிக் கொண்டபடி அக்னி ஸம்ஸ்காரம் செய்ய, அவனும் சுவர்க்கம் சென்றான். செல்லும்பொழுது இராமனைப் பார்த்து 'குருசுச்ருஷை முதலிய தருமங்களைச் செய்யுந் தன்மையளான சபரியென்பவளுடைய ஆச்ரமத்திற்குச் செல்வாய்' என்றான். இராமனும் அவன் சொன்ன சொற் கேட்டு மகிழ்ந்து அந்தச் சபரியினிடஞ் சென்றான். அச் சபரியும் இராமனை மிக்க ஆதரத்துடன் நன்றாகப் பூஜித்தாள். பின்பு ராமன் பம்பையென்னுந் தாமரைத் தடாகத்தின் கரை யிற் சென்று சீதாதேவியை நினைத்து மிகவும் பரிதபித்திருக் கையில், ஹனுமான் அவ்விடம் வந்து காண, அவனுடன் கலந்து பேசித்து அவனது சொற்படி சுக்ரீவனையணுகினான்.

இராமன் பிறர் உதவியின்றித் தனியே எதுவும் செய்ய வல்லவனாயிருந்தும் உலக நடைக்கேற்ப உதவியை விரும்பி சுக்ரீவனுக்குக் கீழ்நடந்தவை யெல்லாவற்றையும் தெரியச் சொன்னான். சுக்ரீவனும் ராமனுடைய செய்தியெல்லாம் கேட்டு, தன்னோடொத்த துயரமுள்ள பெருமிடுக்கனொரு வன் தனக்குச் சகாயமாக நேரிட்டதைப்பற்றி மிக மகிழ்ந்து அக்னிசாக்ஷியாக அவனோடு நட்புக்கொண்டான். பின்பு சுக்ரீவன் தனது துயரங்களை நினைத்துக் கண்ணுங் கண்ணீருமாகித் தேம்பி நின்றது கண்டு இராமன் யாதென வினவ, வாலிக்கும் தனக்கும் நடந்த விரோதத்தை விரிவாகச் சொன்னான். ராமனும் அது கேட்டவுடன் வாலியைத்தான் கொல்லுவதாக வாக்களித்தனன். சுக்ரீவனும் வாலிக்குள்ள வலிமையை இராமனுக்கு உரைத்தனன். அன்றியும் சுக் ரீவன் ராமனைக் கண்டதுமுதல் 'இராமன் வீரத்தன்மையில்

வாலியோடொத்திருப்பானோ?, என்று ஐயமுற்றிருந்தான். இன்னும் வாலியின் வலிமையை இராமனுக்கு நன்றாகத் தெரிவிக்கும் பொருட்டும், ராமனது பிடிக்கைத் தான் அறியும் பொருட்டும், துந்துபியென்னும் ஓர் அசுரனுடைய பெருமலை போன்ற எலும்புக்குவியலைக் காட்டி 'இது வாலி காலால் தள்ளினது' என்றான். இராமன் புன்முறுவல் செய்து கொண்டே அதைத் தன் கால் கட்டை விரலால் பத்து யோஜனை தூரத்திற்கப்பால் போய் விழும்படி உயரத் தூக்கியெறிந்தான். அதனாலும் சுக்ரீவனுக்கு முழு நம்பிக்கை ஏற்படவில்லையென்றறிந்த ராமன் பின்னும் ஓர் அம்பைத் தொடுத்து மராமரங்களேழையும், அருகிலிருந்த மலையின் தாழ்வரையையும் பாதாள லோகத்தையும் பிளந்தனன்.

சுக்ரீவனும் இராமபிரானுடைய செயற்கரிய அச்செயல்களைக்கண்டு, 'இவன் வாலியைக் கொல்ல வல்லவனே'யென்று தேறிக் களிப்புற்று ராமனுடன்கூடிக் கிஷ்கிந்தா பட்டணஞ் சென்று சீரிய சிங்கம்போல் கர்ஜித்தான். வானரர்க்கரசனாகிய வாலியும் முன்போலன்றி கம்பீரமான அப்பெருமுழக்கத்தைக் கேட்டு அவனுடன் போர் செய்வதாகப் புறப்பட்டு, அப்போது வேண்டாமென்று தடுத்த மனைவிக்குத் தக்க மறுமொழி சொல்லி, பின் சுக்ரீவனோடு கலந்து போர் புரிந்தான். அப்பொழுது ராமனும் சுக்ரீவனொடு பொருதுகொண்டிருந்த வாலியை ஓர் அம்பினால் முடித்துக் கிஷ்கிந்தா புரியில் சுக்ரீவனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்வித்தான்.

இவ்வாறு ராஜ்யம் பெற்ற சுக்ரீவனும் சீதையைத் தேடும்பொருட்டு ஆங்காங்குள்ள வானரர்களனைவரையும் வரவழைத்து நான்கு திசைகளிலும், சென்று தேடும்படிகட்டளை

பிட்டு அனுப்பினான். பின்பு சீதையைத் தேடப்போனவர்களில் மனவுறுதியும் உடல் வலிமையும் பெற்றவனாகிய அநுமான், ஸம்பாதி யென்னுங் கழுகின் மொழியால் சீதை இலங்கையில் இருப்பதாகக் கேட்டு நூறு யோஜனை விரிவுள்ள உவர்க்கடலைக் கடந்து இராவணனால் ஆளப்பட்ட இலங்கைக்குச் சென்று, அங்கு அசோக வனத்திலே ஸ்ரீ ராமனை இடைவிடாது நெஞ்சிற் கொண்டிருக்கும் சீதாதேவியைக் கண்டு, இராமன் அடையாளமாகக் கொடுத்திருந்த கணையாழியைக் கொடுத்து, ராமன் ஸுக்ரீவனோடு கலந்து நேசித்தது முதலான செய்திகளையெல்லாம் தெரியச் சொல்லி; நாயகனாகிய ஸ்ரீராமன் விரைவில் இங்கு எழுந்தருள்வானென்று ஸமாதானமும் கூறிவிட்டு, அப்பொழிலின் வெளிப்புறத்து வாசற்படியின் கோபுரத்தை இடித்தான்.

அதை அறிந்து இராவணனால் ஏவப்பட்டு வந்த சேனாதிபதிகளைவரையும், மந்திரி குமாரர்களெழுவரையும் முடித்து ராவணனது புதல்வனாகிய அக்ஷனென்பவனையும் பொடிபடுத்தி, இந்திரஜித்தினுடைய பிரம்மாஸ்திரத்தினால் சிறிது பொழுது கட்டுண்டிருந்து, தான் அஸ்திரத்தினின்று விடுபட்டதறிந்தும், தன்னைக் கயிற்றாற் கட்டிக் கொண்டு போகும் ராக்ஷஸர்களைச் சிதறும்படி செய்யவல்ல மஹாவீரனாயிருந்தும், அதையெல்லாம் பொறுத்துக்கொண்டு ஸீதையிருக்குமிடந்தவிர இலங்கை முழுமையும் தீமூட்டிவிட்டு; ஸ்ரீராமனை அடைந்து வலம் செய்து வணங்கி 'கண்டேன் ஸீதையை' என்று யாவும் உள்ளபடி விண்ணப்பம் செய்தான்.

பிறகு ராமன், ஸுக்ரீவன் முதலான வானரப் படையுடன் கடற்கரை சேர்ந்து அது வழிவிடாமையாலே

அம்பினால் அதனை அடிக்கரைக் கலக்கினான். பின்பு கடலரச னும் தன் வடிவங்கொண்டு வந்து தன்மேல் அணைகட்டி அவ் வழியாகப் போகலாமென்ன, ராமனும் நளனைக்கொண்டு அணை கட்டுவித்து அவ்வழியாக இலங்கை சேர்ந்து யுத்தத் தில் இராவணனைக்கொன்று சீதாதேவியை யடைந்தான்.

பின்பு ராமன் 'நம் வீரத்தன்மைக்கு ஏற்ப வைரியை வென்றோமாயினும், பிறவீட்டில் பத்துமாதமிருந்தவளை நாம் எங்ஙனம் ஏற்றுக்கொள்வது' என்று சிந்தித்து, தேவதை களும் வானரர்களும் நிறைந்த சபையில் சீதையைப் பார்த் துக் கடூரமாகச் சில வார்த்தைகள் சொல்ல, கற்பு தானே வடிவெடுத்த சீதாதேவியும் அவ்வார்த்தைகளைப் பொறுமல் அக்கினியிற் பிரவேசித்தாள். உடனே அக்கினியும் அவளைக் கையிலேந்திக் கொண்டு ராமனைப் பார்த்து 'இவள் மாசற்ற வள், இவளை நீர் அங்கீகரிக்கவேண்டும்' என்ன, இராமனும் அங்ஙனமே அங்கீகரித்து அகமகிழ்ந்து விளங்கினான்.

அப்போது தேவதைகள் அனைவரும் ராமனைப் பூஜித் தார்கள். தேவர்களும், முனிவர்களும், மற்றுமுள்ள ஜங்கம ஸ்தாவரங்களும் நிறைந்த மூவுலகங்களும் மிகக் களித்தன. பிறகு ராமன் விபீஷணனை இலங்கையில் அரக்கர்களுக்கு அரசனாக்கித் தான் நினைத்த காரியம் நிறைவேறினதுபற்றி மனக்களிப்புற்று மகிழ்ந்தான். பின்பு தேவர்களின் வைபலத் தினால் போர்க்களத்தில் மாண்டுகிடந்த வானரர்களையெழுப்பிக் கொண்டு அன்பர்கள் புடைசூழப் புஷ்பகவிமானமேறி அயோத்திக்குப் புறப்பட்டுப் போகும்போது, பரத்வாஜாச்ர மத்தையடைந்து, தான் வருவதைப் பரதனிடம் சொல்லு மாறு முந்துற அநுமானையனுப்பினான்.

பின்பு ராமன், சுக்ரீவன் முதலானவர்களோடு மீளவும் புஷ்பக விமானமேறி முன்னடந்த கதைகளைச் சொல்லிக் கொண்டு நந்திக் கிராமத்தையடைந்து, அங்கு நின்று அயோத்யைக்கு வந்து தம்பிகளுடன் சேர்ந்து ஜடையை விடுத்து நன்றாக அலங்காரங்கள் செய்துகொண்டு திவ்ய ஸிம்மாசனத்தில் பிராட்டியோடு அமர்ந்து பட்டாபிஷேகம் செய்துகொண்டு அரசாண்டு வந்தனன்.

இங்ஙனம் ஸ்ரீராமபிரான் ராஜ்யபரிபாலனஞ் செய்யும் போது ஸகல ஜனங்களும் தம் தம் இஷ்டங்களையெல்லாம் பெற்று மகிழ்ந்தனர். இராமனும் அநேக அச்வமேதயாகங்கள் செய்து அந்தணர்கட்குப் பலவகையான தானங்களையுஞ் செய்து வைகுந்தமேறப் போகிறான். இராமன் இவ்வுலகில் ராஜவம்சங்களை நூறுமடங்கு அதிகமாக நிலைநிறுத்தப் போகிறான். இங்ஙனம் உலகில் தர்மஸ்தாபனம் பண்ணிப் பதினோராயிரம் வருஷம் பிரஜைகளின் முகம் கன்றாமல் அரசு புரிந்து பிரமலோகத்தேறப் போகிறான். இந்த ஸ்ரீராம சரித்திரமானது வேதங்களோடொத்து, தன்னை ஆதரிப்பவர்களைப் புனிதராக்கி மேன்மேலும் ஸகல நன்மைகளையும் பயக்கும். எல்லோரும் இக்கதையைப் படித்தும் கேட்டும் இன்புறுவர். (என்று இவ்விதமாக ஸம்க்ஷேப ராமாயணத்தை வால்மீகி முனிவர்க்கு நாரதபகவான் உபதேசித்தனன்.)

முதலாவது ஸர்க்கம் ஸம்க்ஷேபராமாயணம் முற்றிற்று.

## இரண்டாவது ஸர்க்கம்

## வால்மீகிமுனிவர் நான்முகனருள்பெறுதல்.

---

பிறகு நாரதமுனிவர் வால்மீகி முனிவரால் தக்கபடி பூஜிக்கப்பட்டு 'போய் வருகிறேன்' என்று விடைபெற்றுக் கொண்டு ஆகாயத்தை நோக்கிப் புறப்பட்டுத் தேவலோகம் செல்ல, வால்மீகி முனிவரும் உச்சிப் பகலில் நிகழ்த்த வேண்டிய அனுட்டானத்திற்காகக் கங்கைக்கு அருகான தமஸா நதிக்குச் சென்றார். சென்று பக்கத்தில் நிற்கும் பரத்வாஜனென்னும் சீடனை நோக்கி 'அப்பா! கமண்டலுவைக் கீழே வைத்து என் மரவுரியைக் கொடு; நீராடப்போகிறேன்' என்று சொல்ல, சீடன் மரவுரியைக் கொடுத்தனன். வால்மீகியும் அதை வாங்கிக்கொண்டு, தாம் ஐம்புலன்களையும் வென்றவராயிருந்தும் அந்த ஆற்றின் கரையிலுள்ள காணவினிய கானகத்தை நான்கு பக்கத்திலும் பார்த்துக் கொண்டிருக்க, அந்தத் துறையினருகில் ஆணும் பெண்ணுமாகி இரண்டு க்ரௌஞ்சப் பறவைகள் (அன்றில்கள்) ஒன்றோடொன்று கலந்து இன்புற்றுக் கலகலென்று அழகாக ஒலித்துக்கொண்டிருக்கக் கண்டார்.

அங்கே ஒரு வேடன் வந்தான். அவன் விலங்குகளையும் பறவைகளையுங் கொன்று பிழைக்குந் தன்மையுடைமையால் அந்தப் பறவைகளிரண்டும் கூடிக் களித்துக்கொண்டிருக்கக் கண்டும் இரக்கமின்றி அம்மாமுனிவர் கண்முன்னே ஆண் பறவையை அம்பெய்து வீழ்த்தினன். அது நிலத்தில் விழுந்து உதிரம் பொங்கப் புரண்டு துன்பப்படுவதை நோக்கி அதன் பேடை பிரிவாற்றமாட்டாமல் ஏங்கிக் கூவியழுதது. இந்தச் செயலைக் கண்ணுற்ற வால்மீகி மாமுனிவரது மனம் மிகவும் தளர்ந்தது. அப்பொழுது,

மாநிஷாத! ப்ரதிஷ்டாம் த்வமகமச் சாச்வதீஸ் ஸமா:;
யத் க்ரௌஞ்சமிதுநாதேகமவதீ: காமமோஹிதம்.

என்றும் சுலோகம் அம் மாமுனிவரது திருவாக்கில் நின்று பாவசமாகவே வெளிவந்தது.

(இந்த சுலோகம் சிலேடையில் அமைந்தது. இதற்குப் பதம் பிரித்தலும் பொருள் கொள்ளுதலும் இரண்டு வகைப்படும். மா, நிஷாத, ப்ரதிஷ்டாம், த்வ, அம, கம:, சாச்வதீ: ஸமா: என்று மூன்றுறப் பதம் பிரிந்து வேடன் பரமாகப் பொருள் கொள்ள வேண்டும். (பின்னடிகட்கு ஒரே விதமான பதவிபாகமேயுள்ளது.)

[திருவில்லாத வேடனே! க்ரௌஞ்சப்பறவை யிரண்டில் காமமோஹங்கொண்ட ஒரு ஆண் பறவையைக் கொன்றதனால் நீ வெகுகாலம் நன்மையுடன் வாழமாட்டாய் என்பது ஒரு பொருள். மறுபடியும், "மாநிஷாத, ப்ரதிஷ்டாம், த்வம், அகம: சாச்வதீ: ஸமா:" என்று பதம் பிரித்தால், "திருமாலே! நீர் மந்தோதரியும் இராவணனுமாகிற ராக்ஷஸமிதுனத்தில் காமமோஹங் கொண்டவனை இராவணனென்னும் அரக்கனைக் கொன்றீராதலால் நெடுநாள் வாழ்வையடைந்தீர்" என்று ஸ்ரீ ராமபிரான்பரமான பொருளும் செவ்வனே கிடைக்கின்றது.]

இவ்வாறு சுலோகமொன்றைச் சொல்லிய அம் மாமுனிவர் "சிடனே! நான் பக்ஷியைக்கண்டு சோகித்துச் சொன்ன சொல் நாலடியுள்ளதும் ஒவ்வோரடிகளுக்கும் எழுத்துக்கள் சரியாகி, வீணையில் இசையுடன் பாடக் கூடியதுமான ஓர் விருத்தமே யாகவேண்டும்; வேறில்லை" என்று சொல்ல, சிடரும் "ஆம் இது சரியே" என்று ஆநந்தத்துடன் ராமாயணத்தின் பொருள் கொண்ட அவ்விருத்தத்தைத் தன் மனதில் வாங்கிக்கொண்டனர். பின்பு அவ்வால்மீகி முனிவர்

அந் தமஸாநதியில் பகற்காலநீராடலை முடித்துக்கொண்டு அவ் விருத்தத்தின் பொருளை நினைத்துக்கொண்டே தமது ஆச்ர மம் போகத்திரும்பினார். சிஷ்யரும் அவரைப் பின்சென்றனர். மாமுனிவர் சிஷ்யருந் தாமுமாக ஆச்ரமம் சென்று தேவ பூஜாதிகளை முடித்துக்கொண்டு ஆஸனத்தில் உட்கார்ந்து சுலோகத்தை நெஞ்சில் நினைத்துக்கொண்டே வேறு புண்ய கதைகளையும் பாராயணஞ் செய்தார்.

அப்பொழுது, நான்முகக்கடவுள், தன்னிடம் வந்த நாரதரால் புகழ்ந்து சொல்லப்பட்ட வால்மீகியைப் பார்க்கத் தாமே வந்தனர். வால்மீகியும் அவரைப் பார்த்து விரைந் தெழுந்து வணங்கிக் கால்களை யலம்பி அர்க்கியம் கொடுத்து ஆஸனத்தில் உட்காரவைத்து, க்ஷேமம் விசாரித்துப் பூஜித்து அவரது கட்டளையினால் தாமும் அருகில் ஓராஸனத்தில் உட் கார்ந்தார். அப்பொழுது வால்மீகி முனிவர் தமஸாநதியின் கரையில் வேடன் பக்ஷியைக் கொன்ற விருத்தாந்தத்திலே மனஞ் சென்று மிகவுஞ் சிந்தைகூர்ந்து செய்த செயலையுங் கடோரமான சேவலைப் பிரிந்த பேடையையும் நினைத்துச் சோகித்துக்கொண்டே முன்பாடிய சுலோகத்தின் பொருளின் பெருமையை நினைத்து மீளவும் அதனைப் பிரமனருகிற் பாடி னார். பின்பு நான்முகக்கடவுளும் நமது ஆணையின் மேல் தனது நாக்கில் ஸரஸ்வதியிருந்து இவ்வாறு வெளிப்புறப்பட் டமை யறியானிவனென்று சிரித்துக்கொண்டே "மாமுனியே! நீ செய்தது சுலோகமே; இந்த சுலோகரூபமான ஸரஸ்வதி உன்மூலமாக ஸ்ரீராமாயணத்தைப் பூலோகத்தில் வெளியிட வேண்டுமென்று நான் ஸங்கல்பித்தது பற்றியே உன்னிட மிருந்து வெளியாயிற்று. ஸ்ரீராமனது சரித்திரம் எல்லா வற்றையும் இத்தன்மை பொருந்திய சுலோகங்களால் நீ

பிரபந்தமாகச் செய்யவேண்டும். ஸ்ரீராமனுடைய சரித்திரத்தை நாரதரிடங் கேட்டபடி சுருக்கமாகச்சொல். ராமனுடையவும் லக்ஷ்மணனுடையவும் ராக்ஷசர்களுடையவும் ஸீதாதேவியுடையவும் பரதன் முதலானோருடையவும் ரஹஸ்யமாகவும் பிரகாசமாகவுமுள்ள விருத்தாந்தங்களெல்லாம் உனக்குத் தெரியவரும். நீ நாரதரிடம் கேட்கப் பெறாதவைகளும் உனக்குத் தெரியப் போகின்றன. நீ செய்யப்போகிற இக் காவ்யத்தில் உன்னுடைய வாக்கு ஒன்றேனும் பொய்யாக மாட்டாது. ஓர் பதமாயினுங் கெடாது. ஆகையால் பாபங்களையெல்லாம் போக்கிப் பாவனமாக்குவதும் கேட்க மிக இனியதுமாகிய ஸ்ரீராமசரித்திரத்தை இவ்வகை சுலோகங்களடங்கிய ஓர் பிரபந்தமாகச் செய்யவேண்டும். பூமியில் மலைகளும் நதிகளும் எவ்வளவு காலம் நிலையாயிருக்குமோ, அவ்வளவு காலம் ராமாயண கதை உலகங்களெல்லாம் பரவிப் பெருமைபெறும். நீ செய்த ராமாயண கதை எவ்வளவு காலம் உலகங்களில் பெருமை பெறுமோ, அவ்வளவுகாலம் நீ இந்தச் சரீரம் விட்ட பின்பு லோகங்களுக்கெல்லாம் மேலான என்னுடைய லோகத்தில் வந்து வசிக்கப் போகின்றாய்" என்றிவ்வாறு மொழிந்து அந் நான்முகக்கடவுள் மறைய, வால்மீகியும் சிஷ்யர்களும் ஆச்சரிய மடைந்தனர்.

பின்பு வால்மீகி சிஷ்யர்கள் அனைவரும் இந்த சுலோகத்தை மீண்டும் பாடினர். பின்னும் மிகவும் ஆச்சரியமுற்றுக்களித்து அடிக்கடி இதென்ன அற்புதமென்று ஒருவருக்கொருவர் சொல்லிக் கொண்டனர். அப்போது அவ்வால்மீகி மாமுனிவர் நெஞ்சில் ராம புருஷனை தியானஞ் செய்து இனிதான சுலோகங்களால் ராமாயணமென்கிற இக்காவியம் முழுமையும் செய்யவேண்டுமென்று எண்ணங்கொண்டு,

இனிதான ஸ்லோகங்கள் நூறுநூறாக அடங்கியதும், அழகான ராம சரித்திரத்தைச் சொல்லுவதும், எங்கும் கீர்த்தி பெற்ற ராமனுக்கும் மேன் மேலும் பெருங்கீர்த்தியை விளைவிப்பதுமாகிய ராமாயணமென்னுங் காவியத்தை அப்பொழுதே செய்து முடித்து, ரகுவம்சத்திற் பிறந்த ஸ்ரீராமனுடைய விருத்தாந்தங்களைத் தெளியவுரைப்பதும் பத்துத்தலையனாகிய ராவணனுடைய வதத்தைச் சொல்லுவதும் ஸகல ஜனங்களும் ஆதரிக்கத் தக்கதுமாகிய இம் மகா காவியத்தைச் சிடர்காள்! கேளுங்கள் கேளுங்களென்று சொல்லத் தொடங்கினார்.

**இரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.**

---

## மூன்றாவது ஸர்க்கம்

## [ஸ்ரீ ராமாயண விஷய ஸங்க்ரஹம்.]

---

வால்மீகி முனிவர் ஆசமனஞ்செய்து கிழக்கு நுனியாகப் பரப்பின தர்ப்பையின்மீது எழுந்தருளியிருந்து தன் குருவாகிய நாரதருக்கு நமஸ்காரஞ் செய்து நான்முகன் கொடுத்த வரமாகிற தர்மத்தினால் ஸ்ரீ ராமன் முதலானோருடைய விருத்தாந்தங்களை யெல்லாம் ஆராய்ந்தனர். லக்ஷ்மணன், ஸீதை, தசரத சக்ரவர்த்தி, அவனது பத்தினிகளாகிய கௌஸல்யை, ஸுமித்திரை, கைகேயி, நாட்டார் முதலானவர்களது விருத்தாந்தங்களையெல்லாம் உள்ளபடி நன்றாகக் கண்டறிந்தனர். மேலும் ராகவன் முதலானோர் மொழிந்ததும், நடந்ததும், மற்றும் செய்த செயல்களெல்லாவற்றையும் நான்முகன் அருளிய வரத்தின் மகிமையால் உள்ளபடி நன்கறிந்தனர். கனவிற் காண்பது போலன்றிக் கையிலங்கு நெல்லிக்கனி போல நன்றாகக் கண்

டறிந்து ஸ்ரீ ராம பிரானுடைய சரித்திரத்தை இயற்றத் தொடங்கி, 'சப்தங்களினழகால் எல்லோருடைய செவிக்கும் இனிப்பைக் கொடுப்பதும், பொருளின் இனிமையால் அனைவருடைய மனத்தையும் கவரவல்லதுமான ஸ்ரீ ராம சரித்திரத்தை நாரத மஹரிஷி தமக்குச் சொன்னபடி முதலிற் சுருக்கமாகச் செய்து முடித்தனர்.

பிறகு தசரத சக்ரவர்த்தி பல்லாயிரம் ஆண்டுகள் மகப்பேறில்லாமல் தவஞ் செய்ய, அந்தத் தவத்துக்குப் பயனாக விஷ்ணு தானாகவே வந்தவதரித்த ஸ்ரீ ராமனுடைய அவதாரமும், தாடகை முதலானோரைக் கொன்ற அவன் வீரத் தன்மையும், அவன் யாவர்க்கும் அநுகூலமாயிருக்கும் இருப்பும், அவனுடைய பொறுமையும், அழகும், அவன் ஸத்யந் தவறாதிருப்பதும், ராமனும் லக்ஷ்மணனும் விசுவாமித்ர மாமுனியுடன் கலந்து போகையில் நடந்த அற்புதமான பலவிதகதைகளும், ஸீதை ஊர்மிளை முதலியவர்களுடைய விவாஹமும், சிவனுடைய வில்லை முறித்ததும், ராமனுக்கும் பரசுராமனுக்கும் நடந்த விவாதமும்;

ராம குண வர்ணனையும் அவனுடைய பட்டாபிஷேகத் தொடக்கமும், கைகேயியின் மனப் பொல்லாங்கும், அதனால் பட்டாபிஷேகம் தடைபட்டதும், ராமனைக் காட்டுக்குப் போக்கினதும், தசரத சக்ரவர்த்தி சோகித்துப் புலம்பிப் பரலோகஞ் சென்றதும், ஜனங்கள் வருந்திப் பின்தொடர்ந்ததும், ராமன் அவர்களை வஞ்சித்துவிட்டுப் போனதும், வேடனாகிய குஹனோடு கலந்து மொழிந்ததும், சுமந்திரனென்னும் சாரதியைத் திருப்பி யனுப்பியபின் கங்கையைத் தாண்டினதும், பரத்வாஜ மகரிஷியைக் கண்டதும், பரத்வாஜ ரிஷியின் அநுமதியால் சித்திரகூடப் பர்வ

தத்தைப் பார்த்ததும், அங்குப் பர்ணசாலை கட்டிக்கொண்டிருந்ததும், பரதன் வந்து ராமனை ராஜ்யாபிஷேகம் கொண்டருள வேணுமென்று வேண்டினதும், தசரத சக்ரவர்த்திக்கு ராமன் தர்ப்பணஞ் செய்ததும், ராம பாதுகைகளுக்கு ராஜ்யாபிஷேகஞ் செய்வித்ததும், பரதன் நந்திக்கிராமத்தில் குடியிருந்ததும், ராமன் தண்டகாரணியஞ் சென்றதும்,

விராதனைக் கொன்றதும், சரபங்க மஹரிஷியைக் கண்டதும், ஸுதீக்ஷ்ணரோடு சந்தித்ததும், சீதை அநஸூயையோடு கலந்திருந்ததும், அநஸூயை சீதைக்குச் சந்தனங் கொடுத்ததும், அகஸ்தியரைக் கண்டதும், ஜடாயுவோடு சேர்ந்ததும், பஞ்சவடிக்குப் போனதும், சூர்ப்பணகையைப் பார்த்ததும், சூர்ப்பணகையோடு வாதாடினதும், அவளை அங்கப் பழுதாக்கினதும், கரன் தூஷணன் திரிசிரன் என்னும் அரக்கர்களைக் கொன்றதும், ராவணன் கோபங்கொண்டு சீதையைக் கொண்டு போவதாகக் கிளம்பி வந்ததும், மாரீசனை முடித்ததும், சீதையை யெடுத்துக்கொண்டு போனதும், ராமன் சீதையைக் காணாமற் புலம்பினதும், ராவணன் ஜடாயுவைக் கொன்றதும்; ராமன் கபந்தனைக் கண்டதும், சபரியைக் கண்ணுற்றதும், பம்பையைப் பார்த்ததும்,

ஹனுமானோடு சேர்ந்ததும், ருச்யமூக பர்வதம் போனதும், அங்கு சுக்ரீவனோடு கலந்ததும், அவனுக்கு நம்பிக்கையைப் பிறப்பித்ததும், ராமனுக்கும் சுக்ரீவனுக்கும் நடந்த நட்பும், சுக்ரீவன் வாலிக்கும் தனக்கும் உண்டான வைரத்தை ராமனிடத்திற் சொன்னதும், அவர்களது யுத்தமும், ராமன் வாலியை வதஞ்செய்ததும், சுக்ரீவனுக்குக் கிஷ்கிந்தா ராஜ்யம் கொடுத்ததும், தாரை புலம்பினதும், சரத்காலம் பிறந்த

வுடனே ஸீதையைத் தேடவேண்டுமென்று ராமனும் சுக்ரீவ னும் ஸங்கேதம் பண்ணிக்கொண்டதும், மழைக் காலத்தில் இரா பகலெல்லாம் ராமன் ருச்யமூகத்தில் ஸீதையின் பிரிவி னால் வருந்தியிருந்ததும், ஸ்ரீ ராமன் சுக்ரீவன்மீது சீற்றம் கொண்டதும், வானரப் படையைச் சேர்த்ததும், அப்படை களைத் திசைகளிற் புறப்படச் செய்ததும், வானரர்களுக்கு அந்தந்தப் பூமி நிலையைத் தெரிவித்ததும், ராமன் ஹநுமா னிடம் மோதிரங் கொடுத்தனுப்பியதும், ஜாம்பவான் ஸ்வயம் ப்ரபையின் குகையைக் கண்டதும், வானரர்கள் ஸீதையைக் காணாததுபற்றி ப்ராயோபவேசஞ் செய்யத் தொடங்கினதும், ஸம்பாதியைக் கண்டதும்,

ஹநுமான் மஹேந்திர மலையின்மீதேறிக் கடலைக் கடந்த தும், ஸமுத்ரராஜன் கட்டளையினால் மேலெழுந்த மைநாக மலையைக் கண்டதும், ஸிம்ஹிகையைக் கொன்றதும், இரவில் இலங்கையில் நுழைந்ததும், ராவணனைக் கண்டதும், புஷ்பக விமானத்தைப் பார்த்ததும், மத்யசாலைக்குள் போனதும், அந்தப்புரத்தைப் பார்த்ததும், அசோகவனத்திற் சென்ற தும், அங்கு ஸீதையைக்கண்டு கணையாழியைக் கொடுத்த தும், ஹநுமானிடம் ஸீதை சூடாமணியைக் கொடுத்ததும், அசோகவனத்திலுள்ள பலமரங்களை ஹநுமான் முறித்ததும், அதைக்கண்டு ராக்ஷஸிகள் அஞ்சியோடினதும், ஹநுமான் ராவணனனுப்பின வீரர்களைக் கொன்றதும், இந்திரஜித்தால் ஹநுமான் கட்டப்பட்டதும், ஹநுமான் லங்கையைக் கொளுத்தி ராக்ஷஸிகளை அழச் செய்ததும், திரும்பி ஸமுத் திரத்தைத் தாண்டினதும், மதுவனத்தை யழித்ததும், ராம னுக்குத் தேறுதல் சொன்னதும், ஸீதைகொடுத்த சூடா மணியை ராமனிடங் கொடுத்ததும்,

ஸமுத்ரராஜனோடு ஸந்தித்ததும், நளனைக் கொண்டு கடலில் அணைகட்டியதும், கடல் கடந்ததும், இரவில் இலங்கையைத் தகைந்து சூழ்ந்ததும், விபீஷணன் வந்து அடிபடைப் பட்டு இந்திரஜித்து முதலானாரைக் கொல்ல உபாயஞ்சொன்னதும், கும்பகர்ணனைக் கொன்றதும், மேகநாதனை முடித்ததும், ராவணனை வதஞ் செய்ததும், சீதையைப் பெற்றதும், விபீஷணனுக்கு லங்கையில் ராஜ்யாபிஷேகஞ் செய்ததும், புஷ்பக விமானத்திலேறி அயோத்தியைச் சேர்ந்ததும், பரதனோடு கலந்ததும், ராமாபிஷேக மஹோத்ஸவமும், அப் பட்டாபிஷேக மகோத்ஸவத்திற்காக வந்தவர்களை யெல்லாம் விடைகொடுத் தனுப்பினதுமான ஸகல சரிதங்களையும் இந்த நூலில் அடங்கச் செய்தனர். ராமனது வரப்போகிற சரித்திரத்தையும் உத்தர காண்டத்திற் சொல்லி முடித்தனர்.

மூன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

நான்காவது ஸர்க்கம்

## குசலவர்கள் ராமாயணத்தைக் கானஞ் செய்தல்.

அதில் இருபத்து நாலாயிரம் சுலோகங்களும் ஐந்நூறு ஸர்க்கங்களும் ஆறுகாண்டங்களும் ஏழாவதாக உத்தர காண்டமும் மொழிந்து "இதைப் பாடவல்லவன் எவனோ" என்று சிந்தித்துக் கொண்டிருக்கையில் பாடுவதிற் பயிற்சிபெற்று முனிவேஷம் பூண்ட குசலவர்கள் அம் மாமுனியின் திருவடிகளைப் பணிந்து "நாங்கள் இதைக் கற்கவல்லோம்" என்றனர். இனிமையான சாரீரம் பொருந்திய அவர்களை அவ்வால்மீகி மாமுனிவர்கண்டு களித்து அவர்களை யங்கீகரித்து அதை அவ்விருவர்க்கு முபதேசித்தனர். அச்சிறுவர்களும் அவரிடம் உபதேசம் பெற்று வீணையிற் சங்கீதத்துடன் ராமாயணத்தைப் பாடத்தொடங்கினர்.

அவ்விருவரும் ஸங்கீதத்தின் நுட்பமெல்லாம் அறிந்தவர்கள்; வீணைமுதலிய வாத்யங்களில் தேர்ந்தவர்கள்; மெதுவாகவும் நடுத்தரமாகவும் உரக்கவும் உச்சரிக்கவேண்டிய வகைகளை நன்குணர்ந்தவர்கள். மானிட வேஷம் பூண்ட கந்தர்வர் போலிருப்பவர்கள்; பாட்டுக்கிணங்க அபிநயிக்கும்படி நாடக லக்ஷணமுமறிந்தவர்கள்; இனிய குரலுடன் பேசவல்லவர்கள்; அழகிய வடிவங்கொண்டவர்கள். இராஜபுத்திரர்களாயிருந்தும் முனிவேஷம் பூண்ட அவ்விருவரும் அக்காவ்யம் முழுமையும் ஏடுபாராமல் வாயாற் சொல்லும்படி முனிவரிடம் கேட்டபடியே மனத்தில் நிறுத்திக்கொண்டு சபைகளிற்சென்று பாடிக்கொண்டிருந்தனர். கேட்ட யாவரும் கண்ணுங் கண்ணீருமாகி மிக்க ஆச்சரியங்கொண்டு புகழ்ந்தனர். "இந்த மஹாகாவ்யம் வெகுநாளைக்கு முன் நடந்தவற்றையும் இப்பொழுது எதிரில் நடப்பதுபோற் காட்டுகின்றது" என்று கொண்டாடிப் பலவகையான பரிசுகளை அவர்கட்குத்தந்து ஆசீர்வாதஞ் செய்தனர்.

இப்படி விளங்கிவரும் அக் குசலவர்களை ராமன் ஒருகால் பரதன் காட்டக்கண்டு அவர்களைத் தன் மாளிகைக்கு வரவழைத்துப் பூஜனை செய்து ஓர் திவ்ய ஸிம்ஹாஸனத்தில் மந்திரிகளும் தம்பிமார்களுந் தன்னைச் சூழ வீற்றிருந்து "தேவதைகளைப்போல் விளங்குகின்ற இவர்கள் பாடும் அற்புதமான இவ்விதிஹாஸத்தைக் கேளுங்கள்" என்று சொல்லி அவ்விருவரையும் பாடுமாறு கட்டளை யிட்டனன்.

அவர்களும் இனிய ராகத்துடனும் நீண்ட ஆலாபனங்களுடனும் பாடினர். செவிக்கினிய அப்பாட்டானது அச்சபையில் எல்லோருடைய உடலையும் மயிர்க்கூச் செறியச் செய்து மனத்தையும் ஈடுபடுத்தியது. அப்பொழுது ஸ்ரீராமன்

அச் சபையிலுள்ளவர்களை நோக்கி "இவர்கள் முனிவேஷம் பூண்டிருந்தும் ராஜலக்ஷணங்களெல்லாம் அமையப் பெற்றிருக்கின்றனர்; இச்சரித்திரமும் ஸீதையைப்பற்றி யிருப்பதால் மிகவும் பெருமை பொருந்தியது; எனக்கும் இது நன்மையை விளைவிப்பதாகும், இதைக் கேளுங்கள்" என்றனன்.

பின்பு அக் குசலவர்களிருவரும் ராமாயணத்தை வெகு அழகாகப் பாடினர். அப்பொழுது ராமனும் சிங்காசனத்திலிருந்து மெல்ல மெல்ல ஸபையின் நடுவே வந்து சேர்ந்தனன். [இனிமேல் ஸ்ரீ ராமாயண கதை ஆரம்பம்.]

**நான்காவது ஸர்க்கம் முற்றிற்று.**

---

## ஐந்தாவது ஸர்க்கம்

## அயோத்தியில் தசரதன் வாழ்ச்சி கூறல்.

ஸரயூநதியின் கரையில் மிகவும் விசாலமான கோஸலமென்று ஓர் தேசமுண்டு. அதில் அயோத்யையென்று எங்கும் புகழ்கொண்ட நகரமொன்றுண்டு. அது முன்பு மநுவரசனின் மனத்திறாற் படைக்கப்பட்டது. பன்னிரண்டு யோஜனைதூரம் நீண்டு மூன்று யோஜனைதூரம் பரந்து மிகவு மொளிபொருந்தி விளங்கிநிற்கும் அவ்வயோத்திமா நகரைத் தசரத சக்ரவர்த்தி அரசாண்டு வந்தனன். அம்மன்னனிருந்த வல்லமையுடன் உலகத்தை யாண்டுவந்த வைவஸ்வத மநுவைப் போலவே தானும் உலகத்தைப் பரிபாலித்து வந்தனன்.

ஐந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## ஆறாவது ஸர்க்கம்

## தசரதனது பெருமை கூறல்.

இக்ஷ்வாகு வம்சத்திற்பிறந்த அரசர்களில் இவன் மிகுந்த வலிமைவாய்ந்த அதிரத னென்று பேர்பூண்டவன்; நூல்களிற் சொல்லியபடி பலயாகங்கள் செய்பவன்; தர்மத்திலூக்க முள்ளவன்; யாவரையுந் தன்வசமாக்கவல்ல இனியமொழி யுடையவன்; தான் ராஜரிஷியாயினும் மஹரிஷி போன்றவன்; மூவுலகங்களிலும் புகழ் பெற்றவன்; மிகுந்த சதுரங்க பல முடையவன்; பகைவரை யெல்லாம் பறந்தோடச் செய்பவன். அவன் ஆண்டு வருங்காலத்தில், அந்நகரத்தி லுள்ளவர் யாவரும் இன்பமாகக் குடியிருக்க நேர்ந்து மிகவும் களிப்புற்றுத் தருமத்தில் மனஞ்சென்று பலபெரியோரிடத்திலும் பலவகை நெறிகளுங்கேட்டு மனத்தேர்ச்சியடைந்து தத்தம் பொருள்களைக் கொண்டு மனஅமைதி பெற்று லோபமின்றித் தானங்களைச் செய்து உண்மையை யுரைத்து விளங்கி வந்தனர்.

ஆறாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## ஏழாவது ஸர்க்கம்

## தசரதனது மந்திரி முதலானோரைக் கூறுதல்.

அம் மன்னவனுக்கு திருஷ்டி யென்றும், ஜயந்த னென்றும், ஜயனென்றும், விக்தார்த்த னென்றும், அர்த்தஸாதக னென்றும், அசோக னென்றும், மந்திர பால னென்றும், ஸுமந்த்ரனென்றும் எட்டு மந்திரிகளுண்டு. அவ்வெண்மர்களும் அம்மன்னவனுக்குத் தூயமனத்தனராகி அரசகாரியங்களை விருப்பத்துடன் நிறைவேற்றிக் கொண்டிருந்தனர்.

அன்றியும், அவ்வரசனுக்கு வஸிஷ்டரென்றும் வாமதேவரென்றும் இரண்டு முனிவர்கள் புரோஹிதரில் தலைவராயிருந்தனர். அப்படியே ஜாபாலிமுதலிய மற்றுஞ்சிலர் மந்திரிகளாகவும் புரோஹிதர்களாகவுமிருந்து வந்தனர். கௌஸல்யை, ஸுமித்ரை, கைகேயி என மூன்று பட்டமஹிஷிகள் அம்மன்னவனுக்கு இருந்தனர்.

ஏழாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## எட்டாவது ஸர்க்கம்

### தசரதன் புத்ரகாமேஷ்டி செய்ய முயன்றது:—

அம்மன்னவன் தனக்குப் புத்திரனுண்டாக வேண்டி வெகுநாளாகத் தவஞ்செய்து கொண்டிருப்பினும் புதல்வனுண்டாகாமையால் தனக்குள் சிந்தித்துக் கொண்டிருக்கையில் "பிள்ளை பிறக்கும் பொருட்டு அசுவமேதயாகஞ் செய்ய வேணும்" என்று ஓரெண்ணமுண்டாயிற்று. அதை நன்கு நிச்சயித்துக்கொண்டு மந்திரிகளில் தலைவனாகிய ஸுமந்திரனைப் பார்த்து "மந்திரி! நீபோய் எனது குருக்கள் புரோஹிதர்கள் யாவரையும் விரைவில் அழைத்துக் கொண்டு வருவாய்" என்றனன்.

அதைக் கேட்ட ஸுமந்திரன் விரைவாகச் சென்று ஸுயஜ்ஞர், வாமதேவர், ஜாபாலி, காச்யபர், குலகுருவாகிய வஸிஷ்டர், மற்றுமுள்ள உயர்ந்த அந்தணர்கள் ஆகிய அனைவரையும் கூட்டி அரசன் மாளிகைக்கு அழைத்துக் கொண்டு வந்தனன். மன்னவன் அவர்கள் அனைவரையும் பூசித்து அவர்களை நோக்கி, "பெரியீர்! மக்களைப் பெறவேண்டி மனங் கலங்கிப் புலம்புகின்ற எனக்கு அசுவமேதயாகஞ் செய்ய

விருப்ப முண்டாயிருக்கிறது. இதை நீங்கள் இனிதாக நிறைவேற்றியருள வேண்டும்" என்றனன்.

அதுகேட்ட முனிவர்கள் தசரதனை நோக்கி மிகுந்த களிப்புடன் 'யாகத்திற்கு வேண்டிய பொருள்களைச் சேர்ப்பாயாக. பூமியைச்சுற்றும்பொருட்டு யாகக்குதிரையை விடுவாயாக. மக்களைப் பெறவேண்டியதற்காக உனக்கு இந்தத் தருமபுத்தி யுண்டானபடியால் எவ்விதத்திலும் நீ வேண்டின புதல்வர்களைப் பெறுவாய்' என்று மொழிந்தனர்.

அரசனும் அவ்வந்தணர்மொழியைக் கேட்டு மகிழ்ச்சி கொண்டு மந்திரிகளைப் பார்த்து "எனது குருக்கள் சொன்ன சொற்படி எல்லாப் பொருள்களையும் சேர்ப்பீர்களாக. மிக்க வல்லமையுள்ள நீங்கள் இந்த யாகம் நெறிமுறை தவறாது முடியும்படி முயல்வீர்களாக" என்றனன். மந்திரிகளெல்லோரும் 'அப்படியே செய்கின்றோம்' என்றனர். பிறகு அவ்வரசன் தனது மாளிகையைச் சேர்ந்து கௌஸல்யை முதலிய தன் மனைவிகளைப் பார்த்து 'நான் மக்களைப் பெறவேண்டி யாகஞ் செய்யப்போகிறேன். நீங்கள் தீக்ஷை கொள்ள வேண்டும்' என்றுரைத்தனன். அவர்கள் அவ்வார்த்தையைக் கேட்டு ஆனந்தக் கடலில் ஆழ்ந்தவராயினர்.

**எட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.**

---

## ஒன்பதாவது ஸர்க்கம்

### நெடுநாளைக்குமுன் ஸநத்குமாரரிடம் கேட்டிருந்த ரிச்யச்ருங்க [கலைக்கோட்டு] முனிவரின் கதையைச் சுமந்திரர் தசரதர்க்குரைத்தல்.

அச்வமேதயாகம் செய்யவிரும்பிய அவ்வரசனைப் பார்த்துச் சுமந்திரர் தனிமையிற் சொல்லுகிறார். அரசர்க்

காசரே! நீர் இவ்வேள்வி செய்வதைப்பற்றி நான் ஒரு இதிஹாஸம் முன்னமே கேட்டிருக்கின்றேன். ஸநத்குமாரர் உமக்கு மக்கள் உண்டாகும் விதத்தைக் குறித்து முனிவர்களின் முன்னிலையில் முன்னமே சொல்லியிருந்தனர்.

அது வருமாறு; காச்யபருக்கு விபண்டகரென்று பேர்பெற்ற ஓர்புத்திரர் உண்டு. அவருக்கு ருச்யச்ருங்கரென்ற புதல்வர் உண்டாகப் போகிறார். அவர் காட்டிலேயே வளர்ந்து பிதாவுக்குப் பணிவிடை செய்துகொண்டு முனியாகி அக்கானகத்திலேயே திரிந்து கொண்டிருப்பார். ரோமபாதனென்பவன் அங்க தேசத்துக்கு அரசனாகிப் புகழ்பெற்று விளங்கிவரப் போகின்றனன். அம்மன்னவன் நீதிநெறி தவறுதலால் அவனது நாட்டில் வெகு காலம் மிகக் கொடிய பஞ்சம் நேரிடும். அப்பொழுது அவன் மிக்க வருத்தங் கொண்டு அந்தணர்களை வரவழைத்து "மழையின்மையாகிய இப்பஞ்சத்திற்கு மூலமான எனது பாபம் தொலையும்படி தக்க நியமங்களை எப்படி அநுஷ்டிக்க வேண்டுமோ, அதை எனக்குத் தெரிவிக்க வேண்டும்" என்று வினவப் போகின்றனன். அவ்வந்தணர்களும் அம்மன்னனைப் பார்த்து 'ருச்யச்ருங்க மாமுனியை எவ்விதத்திலாவது இங்கு வரச்செய்து பூஜிப்பாயாகில் இக்கொடியவறுமை விலகும்' என்று மொழியப் போகின்றனர். ரோமபாதனும் அவர்களது மொழியைக் கேட்டு, பிரமசரியந்தவறாதிருக்கும் அம்முனியை இங்கு வரவழைக்கும் வழி யாதோவென்று சிந்தித்து மந்திரிகளுடன் கலந்து புரோகிதர்களையும் மந்திரிகளையும் ஸத்கரித்து அங்கிருந்து ருச்யச்ருங்கரை யழைத்துக் கொண்டு வரும்படி நியமிக்கப் போகின்றனன். அவர்களும் மன்னவனது வார்த்தையைக் கேட்டு வருத்தமுற்றுத் தலை

வணங்கிக்கொண்டு 'ராஜனே! விபண்டகரிஷிக்கு நாங்கள் மிகவும் அஞ்சுகின்றோம். அவரிடம் எங்களால் போக முடியாது. ஆயினும் ருச்யச்ருங்கமுனிவரை வரவழைக்கும் உபாயங்களை விசாரித்துச் சொல்லுகிறோம்' என்று அரசனுக்கு நல்வார்த்தை சொல்லப் போகிறார்கள்;

பின்பு அவர்கள் அம்முனிவரை அழைத்துக்கொண்டு வரத்தக்க உபாயங்களை ஆலோசித்து, அழகிய வேசிகளை இனிமையான தின்பண்டங்களுடன் அவருடைய ஆச்ரமத்திற்கு அனுப்பி அம்மங்கையர் மூலமாக அம்முனிவரை வரவழைப்பதென்று தீர்மானித்துக்கொண்டு 'மன்னனே! நாங்கள் இவ்வுபாயத்தால் அவ்வந்தணரை வரவழைப்போம். இதனால் அவரது பிரமசரியத்திற்கு யாதொரு தோஷமும் உண்டாகாது. விபண்டகரைப் பற்றியும் யாதொரு பயமும் நேரிடாது. நமது நாட்டில் பஞ்சப்பிணியும் நீங்கும்' என்று அவ்வரசனுக்குச் சொல்லப் போகின்றனர்.

ஒன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## பத்தாவது ஸர்க்கம்.

### கலைக்கோட்டு முனிவர் அங்கதேசத்திற்கு வரவழைக்கப்பட்ட உபாயத்தையும், அவரது வருகையினால் மழை பெய்து பஞ்சம் நீங்கியதையும் கூறுதல்.

[தசரத ஸுமந்திர ஸம்பாஷணை]

"இக்ஷ்வாகு வம்சத்தில் தசரதனென்னும் ஓர் மன்னவன் தருமத்திற் சிறந்திருக்கப் போகின்றனன். அவ்வரசன் அங்க தேசத்தரசனிடம் சென்று, தான் புத்ரகாமேஷ்டி செய்ய விரும்பியிருப்பதை யறிவித்து அதை நன்கு நிறைவேற்றுதற்காக ருச்யச்ருங்க மாமுனிவரைத்

தனது நகரத்திற்கு அனுப்புமாறு விரும்பப் போகின்றனன். அவ்வரசனும் அவரைத் தசரதனுடன் அனுப்பப் போகின்றனன். அத்தசரத மன்னவனும் அவ்வந்தணரை யழைத்து வந்து அவரால் தான் விரும்பின புத்திரகாமேஷ்டியை நிறைவேற்றி நான்கு புதல்வர்களைப் பெறப் போகின்றனன்" என ஸநத்குமாரர் முன்னமே மொழிந்திருக்கின்றார்.

அவ்வண்ணமாகவே ரோமபாதராஜ நகரத்தின் நின்றும் சில வேசிகள் இனிய பக்ஷணங்களுடன் புறப்பட்டுக் கலைக் கோட்டு முனிவரது வனத்திற் சென்று அவரருகில் அணுகுவதற்கு அஞ்சி எங்ஙனம் அவரைக் கிட்டலாமென்று ஆலோசித்திருந்தனர். அவரோ எப்போதும் தந்தைக்குப் பணிவிடை செய்துகொண்டு ஆச்ரமத்தைவிட்டு ஒருநொடிப் பொழுதும் வெளிப்புறப்படாதவராய், அத்தந்தை யொருவர் தவிர வேறொரு ஆணையும் பெண்ணையும் கண்ணினுங் காணாதவராய் வாழ்ந்திருந்தனர்; அன்னவர் ஒருநாள் தைவவசமாய் அந்த வேசிகளிருக்கு மிடத்தே வந்து அவர்களோடு இனிமையாகப் பேசித் தன்னைப் பற்றியும் நன்கு தெரிவித்து, அவர்களைத் தன் ஆச்ரமத்திற்குள் வெகு குதூஹலத்தோடு அழைத்துச் சென்று பலபல உபசாரங்களைச் செய்தனர். வேசிகளும் அவரை ஆரத்தழுவி, தாங்கள் கொணர்ந்திருந்த பக்ஷணங்களையும் அவர்க்குத் தந்திட; அவரும் அவற்றை வாங்கி அருந்தி அதிசயித்து மகிழ்ந்திருந்தார்.

**பத்தாவது ஸர்க்கம் முற்றிற்று.**

---

## பதினோராவது ஸர்க்கம்

### கலைக்கோட்டு முனிவராலேயே தனது புத்ரகாமேஷ்டி நிறைவேறுமென்று ஸநத்குமாரர் முன்னமே சொல்லியிருந்ததாகச் சுமந்திரரிடம் கேட்டறிந்த தசரதன் அம்முனிவரை அயோத்திக்கு அழைத்து வந்தது.

இங்ஙனம் கலைக்கோட்டு முனிவருடைய நிலைமையைத் தெரிவித்த சுமந்திரன், தசரத மன்னவனை நோக்கி 'மன்னவனே! முன்னம் ஸநத்குமாரர் சொல்லியிருந்த இதிஹாஸத்தில் முடிவான பாகத்தை இனித் தெரிவிக்கின்றேன் கேளாய்' என்று மீண்டும் சொல்லத் தொடங்கினன்.

பிறகு இம்மடந்தையர் அக் கலைக்கோட்டு முனிவரைத் தங்களிடம் மிகவும் ஈடுபடுத்தி அவருடன் கூடவே ஊருக்குத் திரும்பினர். அம்முனிவர் அங்கதேசத்தில் அடியெடுத்த வாறே மிக்கமழை பெய்து பஞ்சம் நீங்கியது. ரோமபாத ராஜனும் அவர்க்குப் பல உபசாரங்களைச் செய்து, தன் மகளான சாந்தையை விதிப்படி விவாஹம் செய்து கொடுத்தனன்; அவர் இப்போது அந்நகரில் மனைவியுடன் வாழ்ந்து கொண்டிருக்கின்றார்.

ஆகையால் நீரே நேரில் சென்று அம்முனிவரை அழைத்துக் கொண்டுவர வேண்டும்' என்று சுமந்திரன் மொழிந்தனன்.

அதைக் கேட்ட தசரதனும் 'நங்குலத்திற்கு வஸிஷ்டர் புரோஹிதர்; அவரை நீக்கி ருச்யச்ருங்கரைப் புரோஹிதராக விரும்புவது நேர்மையன்று. நாமாகச் செய்யாமல் ஸநத்குமாரர் சொன்ன விருத்தாந்தத்தைப்பற்றி அவரை வரித்

தானும் வஸிஷ்டருக்குத் தெரிவித்து அவரிடம் அநுமதி பெற்றுக்கொண்டு செய்வதே நலம்' என்றெண்ணி வஸிஷ்டரிடத்தில் ஸுமந்திரனைக்கொண்டு அக்கதையைச் சொல்லுவித்து அநுமதி பெற்றுக் கொண்டனன்.

பின்பு ருச்யச்ருங்கரை அழைத்துக்கொண்டு வருவதற்காகத் தனது அந்தப்புரஸ்த்ரீகளுடனும், மந்திரி முதலான பரிவாரங்களுடனுங்கூட அந்த ருச்யச்ருங்கரிருக்கிற ரோமபாத ராஜனுடைய நகரத்திற்குப் புறப்பட்டுச் சென்றனன்.

பின்பு ரோமபாதனும் தனக்கு நண்பனான தசரதனை வரவேற்று, ரிச்யச்ருங்கரிடத்திலும் சிறப்பாகத் தெரிவித்து அவரைக்கொண்டும் ஸத்காரம் செய்வித்து மிகுந்த உபசாரங்களுடனே தனது நகரிலேயே வைத்துக் கொண்டிருந்தனன்.

இப்படித் தசரதன் அங்கு ஏழெட்டு தினங்களிருந்து பின் அவ்வரசனைப்பார்த்து, 'மன்னவ! உன் பெண்ணாகிய சாந்தை பர்த்தாவுடன் எனது பட்டினத்திற்கு வரவேண்டுகிறேன். அவர்களால் நடக்கவேண்டிய காரியமொன்று பெரிதாக நேரிட்டிருக்கின்றது' என்று சொல்ல, அவனும் அப்படியே அங்கீகரித்தனன். பிறகு அரசர்களின் விருப்பத்திற் கிணங்க ருச்யச்ருங்கர் தம் மனைவியுடன் அயோத்திக்குப் புறப்பட்டனர்.

தசரதனும் ரோமபாதனிடம் விடைபெற்றுக் கொண்டு புறப்பட்டு, 'அயோத்தி நகரமெங்கும் கொடிகளும் தோரணங்களும் கட்டி அலங்கரிக்க வேண்டும்' என்று நகரமக்களுக்குக் கட்டளையிட்டுத் தூதர்களை அனுப்பினன். பின்பு மன்னவன் அவ்வந்தணரை அழைத்துக்கொண்டு சங்க துந்துபி வாத்ய கோஷங்களுடன், நன்றாக அலங்காரஞ் செய்யப்பெற்று

விளங்கும் அயோத்திமா நகரத்தினுள் புகுந்தனன். அது கண்டு அந்நகரத்திலுள்ளவர் யாவரும் மகிழ்ச்சி யடைந்தனர். அரசனும் அவ்வந்தணரை அந்தப்புரத்திற்கு அழைத்துச் சென்று விதிப்படி பூசைகளைச் செய்து மகிழ்ந்தனன்.

**பதினோராவது ஸர்க்கம் முற்றிற்று.**

---

## பன்னிரண்டாவது ஸர்க்கம்.

### அசுவமேத யாகம் தொடங்குதல்.

இவ்விதம் ருச்யச்ருங்கரை அழைத்துக்கொண்டு வந்த பின்பு வெகுநாள் சென்ற பிறகு வஸந்தருதுவர, அவ்வரசன் தான் முன்செய்ய உத்தேசித்த யாகத்தை நடத்த வேண்டுமென்று எண்ணங்கொண்டனன். பின்பு அந்த ருச்யச்ருங்கரை அம்மன்னவன் ஸாஷ்டாங்கமாகத் தெண்டனிட்டுத் தனது வம்சம் விருத்தியாகும்படி ஸந்தான முண்டாகும் பொருட்டு யாகஞ் செய்விக்க வேண்டினான். அவரும் அரசனிடம் ஸத்காரம் பெற்று அப்படியே யென்று ராஜனை நோக்கி 'யாகத்திற்கு வேண்டிய ஸம்பாரங்களைச் சித்தப்படுத்தவும் யாகக்குதிரையை விடும்படியாகவும் நியமித்தனர். ராஜனும் சுமந்திரனைப் பார்த்து சுயஜ்ஞர், வாமதேவர், ஜாபாலி, காச்யபர், வசிஷ்டர், மற்றுமுள்ள பிராமணர்கள் ஆகிய ருத்விக்குகள் யாவரையும் அழைத்துக்கொண்டு வரக்கட்டளை யிட்டனன். பிறகு சுமந்திரனும் விரைந்தோடிச் சென்று அவ்வந்தணர்களனைவரையும் அழைத்துக்கொண்டு வந்தனன்.

தசரதன் அவர்களைப் பூசித்து அவர்களைப் பார்த்து யான் புத்ரனில்லாமையைபற்றி அசுவமேதயாகஞ் செய்ய

விரும்புகின்றேன். இந்த ருச்யச்ருங்க மாமுனிவரது மகிமையால் எனது இஷ்டங்களெல்லாம் நிறைவேறவேணும்' என்றுரைத்தனன். பின்பு வஸிஷ்டர் முதலிய அந்தணர் யாவரும் அங்ஙனமே யாகுக வென்று ஆசிகூறினர்.

பின்பு தசரத மன்னவன் மந்திரிகளை நோக்கி யாகத்திற்கு வேண்டிய எல்லாப் பொருள்களையும் விரைவில் சேகரிக்கும்படிக்கும் காக்கவல்லவர்களைக் காவல் வைத்துப் புரோஹிதர்களையும் பின்றொடரச் செய்து குதிரையை விடும்படிக்கும், ஸரயூநதியின் வடகரையில் யாகசாலையை ஏற்படுத்தும்படிக்கும் க்ரமம் தவறாமல் விதிப்படியே சாந்தி கருமங்கள் பலவும் நடத்தும்படிக்கும் ப்ரஹ்ம ராக்ஷஸர்கள் இடைதக்கெடுக்க வழி தேடவொண்ணாதபடி மிகவும் பாதுகாப்புடன் நடத்தும்படிக்கும் திட்டம் செய்தனன்.

பின்பு மந்திரிகள் யாவரும் அப்படியே யென்று அக்கட்டளைப்படி யாகத்திற்கு வேண்டிய சடங்குகளை யெல்லாம் முறைப்படி நிறைவேற்றினர்.

**பன்னிரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.**

---

பதின்மூன்றாவது ஸர்க்கம்

## யஜ்ஞஸம்பாரங்களைச் சித்தப்படுத்தல்.

இப்படி முதல் வஸந்த ருதுவில் சாந்தி ஹோமங்களைச் செய்து ருத்விக்குகளை வரித்தபின்பு வல்லராகிய நானூறு ராஜகுமாரர்களுடனும், அத்வர்யு முதலிய ருத்துவிக்குகளுடனும் யாகத்தின் குதிரை பூமியை வலஞ்செய்து திரும்பிவர, ஓராண்டு நிறைந்தது. மீளவும் வஸந்தருது வந்தது.

வந்தவாறே தசரதராஜன் அசுவமேதத்தை நடத்தும் பொருட்டு அத்வர்யுவாக வரிக்கப்பட்ட வஸிஷ்ட முனிவரிடஞ்சென்று தெண்டனிட்டு "நான் ஆரம்பித்த அசுவமேத யாகத்தை விதிப்படி நிறைவேற்ற வேண்டும். அதன் அங்கங்களில் யாதொரு குறையும் வராதபடியும் செய்ய வேண்டும்" என்றுரைத்தனன்.

அந்த வஸிஷ்ட முனிவரும் அரசனைப் பார்த்து, 'நீ விரும்பிய எல்லாவற்றையும் தவறு நேராமற் செய்கின்றேன்' என்று சொல்லி, பின்பு அந்தயாகத்திற்காக வரிக்கப்பட்ட மற்றைய அந்தணர்களையும் சிற்பிகளையும், தச்சர்களையும், பல கலைகளில் தேர்ந்து யாகவிதியறிந்த பெரியோர்களையும், சித்திரக்காரர், நாடகமாட வல்லோர், கணக்கர் முதலிய மற்றும் வேண்டியவர்களையும் அழைத்து,

"ஓ முனிவர்களே! நீங்கள் யாவரும் அரசன் கட்டளைப்படி யாகத்திற்காக விருப்பத்துடன் முயலவேண்டும். மற்றுமுள்ள காரியஸ்தர்களே! வரும் அரசர்களுக்கும் பிராமணர்களுக்கும் தக்கவாறு வெகு அழகான வீடுகளைக் கட்டி அவற்றில் வேண்டிய பொருள்களை அமைத்து வைக்கவேண்டும். அப்படியே நகரத்து ஜனங்களுக்கும் விசாலமான வீடுகளை யேற்படுத்திக் கொடுத்து அங்குப் பலவகைப் பண்டங்களையும் நிறைத்துவைக்கவேண்டும். அவ்வாறே நாட்டுப்புறத்து ஜனங்களுக்கும் மரியாதை செய்து, நாட்டாரென்று அவர்களை ஏளனம் செய்யாமல் முறைப்படி மிகவும் உயர்ந்த உணவுகளைக் கொடுக்கவேண்டும். யாவரையும் ஸமமாக மதிக்கவேண்டும். அனைத்தும் அழகாக நிறைவேறும்படி செய்யவேண்டும்" என்றனர்.

பின்பு எல்லோரும் ஒன்றுகூடி வஸிஷ்டரிடம் வந்து 'மாமுனியே! நீர் சொன்னவை அனைத்தும் குறைவின்றி உமது சொற்படி செய்துமுடித்தனம். மற்றும் மேற்செய்ய வேண்டியவற்றை ஒரு குறையுமின்றி நடத்துவோம்' என்றனர்.

பின்பு வஸிஷ்டர் சுமந்திரனை அழைத்து "உலகத்திலுள்ள அரசர்கள் யாவரையும் வரவழைக்கவேண்டும், எல்லாத்தேசங்களிலுமுள்ள பிராமணர்கள், க்ஷத்திரியர்கள், வைசியர்கள், சூத்திரர்கள் ஆகிய நான்குபிரிவு மனிதர்களையும் வரச்செய்ய வேண்டும். மிதிலாநகரத்திற்கு அரசனாகிய ஜனக மஹாராஜனை நீயேநேரில் போய் நன்கு ஸத்காரஞ் செய்து அழைத்துக்கொண்டு வரவேண்டும். காசி ராஜனையும் நேரில் போய் அழைத்துவர வேண்டும். அன்றியும் நீயேபோய் நமதரசனுக்கு மாமனாகிய கேகயராஜனையும் அவன் புத்திரர்களுடன் கூட அழைத்துக்கொண்டு வருவாயாக. அங்கதேசத்தரசனாகிய ரோமபாதனையும் அழைத்துக்கொண்டு வருவாயாக. அன்றியும் வங்கம் கலிங்கம் முதலிய கீழ்நாட்டரசர்களையும், ஸிந்து ஸௌவீரம்முதலிய மேனாட்டரசர்களையும், சோழம் பாண்டியம் முதலிய தென்னாட்டரசர்களையும், குருபாஞ்சாலம் முதலிய வடநாட்டரசர்களையும் தக்கதூதர்களைக்கொண்டு அழைப்பிக்கவேண்டும்" என்றனர்.

இப்படி வஸிஷ்டமாமுனிவர் சொல்லக்கேட்ட சுமந்திரனும் விரைவில் அரசர்களை அழைத்துக்கொண்டு வரும்படி அந்தரங்கராகிய புருஷர்களை யனுப்பிப் பின் அம் முனிவர் விசேஷித்துச் சொன்ன மன்னவர்களைத் தானே நேரில்போய் அழைத்துவருவதற்குப் புறப்பட்டனன். முன் கட்டளையிடப் பட்ட வேலைக்காரர் யாவரும் யாகத்திற்காகத் தாங்கள்

செய்தவை யனைத்தையும் வஸிஷ்டருக்குச் சொல்லினார். பின் சில நாட்களுக்குள்ளேயே அரசர்கள் தசரதனுக்கு உபஹாரமாக ரத்னம் முத்து பவழம் ஆடையாபரணம் முதலிய உயர்ந்த வஸ்துக்களைக் கொண்டுவந்து சேர்ந்தனர்.

பிறகு வஸிஷ்டரும் அவைகளையெல்லாம் கண்டு களித்துத் தசரதனைப் பார்த்து "ஓ உத்தம புருஷனே! உனது கட்டளைப்படி அரசர்கள் யாவரும் வந்து சேர்ந்தனர். நானும் அச் சிறந்த மன்னவரனைவருக்கும் தக்கபடி மரியாதை செய்தேன். யாகத்திற்கு வேண்டிய எல்லாப் பொருள்களும் மிகுந்த ஊக்கத்துடன் அதற்கென நியமிக்கப்பட்டவர்களால் சித்தஞ் செய்யப்பட்டிருக்கின்றன. யாகசாலையும் ஸமஸ்த ஸம்பாரங்களுடன் நிறைந்திருக்கின்றன. மனத்தினால் நிருமிக்கப்பட்டதோ என்னும்படி வெகு விரைவாக அமைக்கப்பட்ட யாகசாலையைப் பார்க்கவேண்டும். நீயும் யாகஞ் செய்யப் புறப்படலாம்" என்றனர்.

இப்படி வஸிஷ்டரும் கலைக்கோட்டு முனிவருமாகச் சொல்ல, அம் மன்னவனும் சுபதினத்தில் சுப நக்ஷத்திரத்தில் யாக சாலைக்குப் புறப்பட்டுப் போயினன். பின்பு வஸிஷ்டர் முதலிய பிராமணோத்தமர்கள் யாவரும் யாகசாலையிற் சேர்ந்து கலைக்கோட்டு முனிவரை முதன்மைப்படுத்தி முறை யாகக் காரியங்களைச் செய்யத் தொடங்கினர்.

பதின்மூன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## பதினான்காவது ஸர்க்கம்.

## தசரத மன்னவன் அசுவமேத யாகஞ் செய்தல்.

இங்ஙனம் யாகஞ் செய்யவேண்டிக் குதிரையைவிட்டு ஓராண்டு நிரம்பி அக்குதிரையும் திரும்பிவர, ஸரயூ நதியின்

வடகரையில் மன்னவனது யாகம் நடந்தது. அப்பொழுது பிராமணோத்தமர்கள் யாவரும் கலைக்கோட்டு முனிவரை முன்னிட்டுக்கொண்டு வேள்விச்சடங்குகளைச் செய்தனர். அந்த யாகத்தில் 'பிழை'யென்று சொல்லத் தக்கது ஒன்றும் நேரிடவில்லை. மந்திரத்திலாவது தந்திரத்திலாவது யாதொரு குறையும் விளையவில்லை. அந்த மஹா யாகம் நடந்த நாட்களில் திருப்திபெறாதவர் ஒருவருமில்லை.

அசுவமேதஞ் செய்யவேண்டிய நாட்கள் அனேகமாயி னும் கல்பஸூத்ரங்களிலும் அதற்கு மூலமான வேத பிரா மண பாகங்களிலும் முக்கியமாக மூன்று தினங்கள் கணக் கிடப்பட்டிருக்கின்றன. அதில் முதல் நாள் சதுஷ்டோம மென்றும், இரண்டாவது நாள் உக்த்யமென்றும், மூன்றாவது நாள் அதிராத்ரமென்றும் யாகங்களை நடத்துவதால் அந்தந்த யாகத்தின்பேரால் அந்தந்த தினங்களில் செய்யவேண்டிய செயல்கள் நடந்துவருவதுண்டு. அப்படியே அம்மூன்று தினங்களிலும் அம்மூன்று யாகங்களை நடத்தினர்.

இதரசாஸ்திரங்களில் இவ்வசுவமேதத்திற்கு மற்றுஞ்சில யாகங்களைச் செய்யவேண்டுமெனச் சொல்லுவதாலே, அவை களையுங் குறையறச் செய்வித்து நடத்தினர். அவை ஜ்யோதிஷ்டோமமொன்றும் ஆயுர்யாகமொன்றும் அதிராத்ர மிரண்டும் அபிஜித்தொன்றும் விச்வஜித்தொன்றும் அப் தோர்யாமமென்கிற மஹாயஜ்ஞமொன்றும் ஆக ஏழுயாகங் கள். இப்படி அம்மூன்று தினங்களொழிய மற்றைத் தினங்களில் இந்த யாகங்களை அரசன் செய்வித்தனன்.

அப்பொழுது அம்மன்னவன் யாகத்தைக் காணவந்த அந்தணர்களுக்குப் பொன்னைக் கோடி கோடியாகக் கொடுத்த னன். பின்னும் பேதையாகிய ஓர் அந்தணன் உயர்ந்த கைவளை

வேண்டுமென்று யாசிக்க, அரசன் தன்கைவளையை யீந்தனன். இப்படி மிகுதியாகப் பொன்னும் பொருளும் அளிக்க யாவரும் களித்தனர். அவைகளைப்பெற்ற அந்தணரனைவரும் அவ்வரசனுக்கு விதிப்படி ஆசீர்வாதஞ் செய்தனர். இங்ஙனம் யாகங்களனைத்திலும் சிறந்ததான அசுவமேதமென்னும் அம்மஹாயாகத்தைக் குறைவறச் செய்து முடித்து அம்மன்னவன் மிக்க மனக்களிப்புற்றனன்.

பதினான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## பதினைந்தாவது ஸர்க்கம்.

## தேவதைகள் விஷ்ணுவிடம் ராவணனுடைய துஷ்டத்தனத்தைச் சொல்லுதல்.

பிறகு கலைக்கோட்டுமா முனிவர் "அதர்வணவேதத்தில் சொல்லப்பட்ட மந்திரங்களைக்கொண்டு செய்ய வேண்டிய ஓர் யாகத்தை விதிப்படி செய்யப்போகின்றேன்" என்று தசரதனிடம் சொல்லி அப்படியே அந்த வேள்வியைச் செய்து முடித்தனர். பிறகு தேவதைகளும் கந்தருவர்களும் ஸித்தர்களும் நான்முகக் கடவுளும் மற்றும் மஹரிஷிகளும் அந்த யாகத்தில் தங்கள் தங்கள் ஹவிர்ப்பாகம் வாங்கிக் கொள்வதற்காக ஒன்றுகூடிவந்தனர்.

அங்ஙனம் வந்துசேர்ந்த தேவதைகள் யாவரும் அந்த யாகசபையில் பிறர்காணாதபடி யிருந்து பிரமதேவனை நோக்கி 'ஓ பகவானே! உமது அருள்பெற்று மிக்க பராக்ரமங் கொண்ட ராவணனென்னும் ராக்ஷஸன் எங்களனைவரையும் துன்புறுத்திக்கொண்டிருக்கின்றனன். நாங்கள் அவனை அடக்க வல்லமையற்றிருக்கின்றோம். முன்பு நீர் அவனி

டம் மிகுந்த ப்ரீதி கொண்டு எங்களால் எவ்விதத்திலும் அவனுக்குச் சாவுஉண்டாகாதபடி வரம் கொடுத்தீர். நீர் கொடுத்த வரத்தைப் பாராட்டிக்கொண்டு நாங்களும் அவன் செய்யும் செயல்களை யெல்லாம் பொறுத்துக்கொண் டிருக்கின்றோம். அவ்வறிவுகேடன் மூவுலகங்களையும் நடுங் கச்செய்கின்றனன். திக்குப்பாலகர்களையும் பகைக்கின்றனன். தேவர்களுக்கெல்லாம் அரசாகிய இந்திரனையே பட்டத்தி னின்றும் தொலைக்க விரும்புகின்றனன். அவன் நீர் கொடுத்த வரத்தினால் மதிமயங்கிக் கொழுத்து ரிஷிகளையும் யக்ஷர்களையும் கந்தர்வர்களையும் அந்தணர்களையும் மதியாமல் வருத்துகின்றனன். அவன்க்ரீடாபர்வதம்முதலிய இடங்களில் திரிந்துகொண்டிருக்கும்பொழுது சுடும்படி சூரியன் வெய்யிற் காயமாட்டான்; அவன் பூந்தோட்டங்களில் விளையாடிக்கொண் டிருக்கையில் 'வேகமாக வீசினால் மேலே புஷ்பங்கள் விழுமோ' வென்று பயந்து காற்றும் வேகமாக வீசுவதில்லை. எப்பொழுதும் வீசுகின்ற அலைகளையுடைய கடலும் அவனைக் கண்டால் கொஞ்சமும் அசையாமலிருக்கின்றது. கர்ப்பங் கலங்கும்படி மிகவும் பயங்கரமாகத் தோன்றுகின்ற அந்த ராக்ஷஸனிடத்தில் எங்களுக்கும் பயம் அதிகமாக உண்டா யிருக்கின்றது. ஆகையால் அவனைக் கொல்லவேண்டிய உபாயத்தை நீர் ஆலோசித்துச் செய்யவேண்டும்' என்று வேண்டினார்கள்.

இப்படித் தேவர்களனைவராலும் வேண்டிக்கொள்ளப் பட்ட நான்முகனும் சிறிது ஆலோசித்து உடனே ஸந்தோஷ மாக "துராத்மாவாகிய அந்த ராவணனைக் கொல்ல உபாயம் யாதெனில், அவன் கந்தர்வர்களாலும் யக்ஷர்களாலும் தேவர்களாலும் அஸுரர்களாலும் தனக்கு இறப்பு நேரிடக்

கூடாதென்று வரங்கேட்டனன். நானும் அப்படியேயாகட்டுமென்று சொல்லிவிட்டேன். அவ்வரக்கன் அங்ஙனம் வரங் கேட்கும்போது மானிடர்களைப்பற்றிக் கேட்டால், தன் பெருமைக்குக் குறையாகுமென எண்ணி அவர்களால் தனக்கு அழிவு நேரிடக்கூடாதென்று கேட்கவில்லை. ஆகையால் மானிடர்களைக் கொண்டே அவனைக் கொல்லவேண்டும். இவனுக்கு வேறு வகையில் அழிவு இல்லை" என்று மொழிந்தனன்.

அம்மொழியைக் கேட்டுத் தேவர்களும் முனிவர்களும் மிகுந்த சந்தோஷங் கொண்டனர். இங்ஙனமிருக்கும் பொழுது ஸர்வேச்வரனாகிய ஸ்ரீமஹாவிஷ்ணு தாம் சிலரை ரக்ஷிக்கும்படியான காலம் வாய்த்ததென்று சந்தோஷத்தினால் சங்குசக்கரம் முதலிய ஆயுதங்களை யேந்திக் கொண்டு பீதாம்பரம் விளங்க அங்கே யெழுந்தருளி நான்முகக்கடவுளின் அருகே வந்து நின்றனர். இப்படி யெழுந்தருளின ஸர்வேச்வரன் நான்முகனுடன் கலந்து ஆச்ரித ரக்ஷணத்திற்குரிய செயல்களை ஊக்கத்துடன் நினைவிட்டுக் கொண்டிருக்க, தேவர்கள் அனைவரும் எழுந்து பணிந்து பலவகையாகப் புகழ்ந்து 'ஓ மஹாவிஷ்ணுவே! நீர் உலகங்களுக்கு நன்மை செய்யும்பொருட்டுத் தாமாகவே முன்வருந் தன்மையர். அப்படிப்பட்ட உம்மை நாங்கள் உலகைப் பாதுகாப்பான்பொருட்டுத் தூண்டவேண்டியதுமுண்டோ? அதோ யாகஞ் செய்துகொண்டிருக்கும் தசரத மஹாராஜனது மனைவிகள் மூவரிடத்திலும் நீர் உம்மை நான்கு வகையாகப் பிரித்துக்கொண்டு நாலு பிள்ளைகளாகப் பிறந்து ராவணனை யுத்தத்தில் முடிக்கவேண்டும். இதற்காக யக்ஷகந்தர்வ ஸித்தர்களும் முனிவர்களும் மற்றுமுள்ள தேவர்களுமாகிய

நாங்கள் அனைவரும் உம்மையே சரணம் புகுகின்றனம்' என்றனர்.

அது கேட்ட விஷ்ணு, 'ஓ தேவர்களே! நீங்கள் பயப்படவேண்டாம்; உங்களுக்கு இனி நன்மையுண்டாகும். மிகக் கொடியவனான ராவணனையும், அவன் பிள்ளைகளையும், பேரன்களையும், நண்பர்களையும், மந்திரிகளையும், மரபினர்களையும் மற்றுமுள்ள பந்துக்களையும் அழித்துத் தருமத்தை நிலைநிறுத்தும்பொருட்டு இப்பூமியில் தோன்றி உலகமனைத்தும் பரிபாலனஞ் செய்துகொண்டு பதினோராயிரமாண்டுகள் இருக்கப்போகிறேன்' என்றனன்.

**பதினைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.**

---

## பதினாறாவது ஸர்க்கம்.

## யாககுண்டத்தில் திவ்யபுருஷன் பாயஸ கும்பத்தோடு தோன்றுதல்.

இப்படி அம்மஹானுபாவன் தேவர்களுக்கு வரந்கொடுத்து அவர்கள் வேண்டிக்கொண்டபடி நிலவுலகத்தில் தான் வந்து பிறக்கக் கருதி, தசரத மஹாராஜனைத் தகப்பனாக விரும்பி மறைந்தனன்.

பிறகு தசரத மன்னவன் புத்திரகாமேஷ்டியென்னும் யாகத்தைத் தொடங்கிச் செய்தனன். அந்த யாகத்தில் ஆஹவனீயாக்நி குண்டத்தினின்று பெரும் பூதமொன்று மிகுந்த ஒளி பொருந்தி வெளியே கிளம்பிற்று. அது மிகுந்த திறமையும், சிறந்த வலிவும் பெற்று, கருப்புஞ் சிவப்புங் கலந்த ஆடைகளணிந்து, சிவந்த முகத்துடன் தென்பட்டது. மேலும் அது துந்துபி வாத்யம் போன்ற வொலியை யொலித்து, உடம்பிலும் தலையிலும் மீசையிலும்

சிங்கத்தின் மயிர்போல் நிகுநிகென்று நெருங்கி விளங்குகிற மயிர்கள் அமையப்பெற்று, சுபலக்ஷணங்களனைத்தும் பொருந்தியிருந்தது.

அது உயர்ந்த ஆபரணங்களால் அலங்காரம் செய்யப் பெற்றுப் பர்வத சிகரம்போல் உயர்ந்து, கொழுத்த புலி போன்ற உடல்வலியுடையதாகி ஸூர்யனையொத்த உருவங் கொண்டு கொழுந்துவிட்டெரியும் அக்கினிஜ்வாலையை எதிர்த்து மிகவும் அற்புதமாக விளங்கிற்று.

இஃதன்றியும் வெள்ளியினால் செய்தமுடியிடப் பெற்றுப் பொன்னாலமைக்கப்பெற்ற பாத்திரத்தில் திவ்ய பாயஸத்தை நிரப்பி இரண்டு கைகளாலும் அணைத்துக்கொண்டு மேற் கிளம்பித் தசரதனைப் பார்த்து 'அரசனே! நான் பிரம னிடமிருந்து வந்தவனெனத் தெரிந்துகொள்' என்றது.

அப்பொழுது அம்மன்னவன் கையைக் கூப்பிக்கொண்டு 'பகவானே! உனக்கு நல்வரவு உண்டாகவேண்டும்; நான் உனக்குச் செய்யவேண்டியதை அருளிச்செய்தருள்க' என்றனன். பிறகு அந்த ப்ராஜாபத்ய புருஷன் மீளவும் அரசனைப் பார்த்து, 'ராஜனே! நீ அசுவமேதஞ் செய்தும் புத்திரகாமேஷ்டி செய்தும் தேவர்களை ஆராதித்தனையாகை யால் உனக்கு இப்பொழுது இந்தப் பாயஸம் கிடைத்தது. மஹாராஜனே! இப்பாயஸம் ஸ்ரீ மஹாவிஷ்ணுவால் நிருமிக் கப்பட்டது. விரைவில் ஸந்தானத்தையுண்டுபண்ணவல்லது. இதைக் கைப்பற்றிப் பத்தினிகளுக்குக் கொடுத்து உண்ணச் சொல்; பிறகு புத்திரர்களைப் பெறுவாய்' என்று சொல்லிற்று.

அரசனும் மனக்களிப்புற்று, தேவ பாயஸம் நிறைந்த அந்தப் பொன்பாத்திரத்தைத் தலையால் வாங்கிக்கொண்டு அப்பூதத்தை வணங்கி மிகுந்த சந்தோஷத்துடன் அதை

வலம்வந்து பூஜித்தனன். உடனே அப்பூதமும் தான் வந்த காரியத்தை நிறைவேற்றி அந்த அக்கினியில் மறைந்து விட்டது.

அரசனும் அரண்மனைக்குட் சென்று கௌஸல்யையை நோக்கி 'இப்பாயஸத்தைப் பெற்றுக்கொள்' என்றுரைத்து அப்பாயஸத்தில் பாதியைக் கௌஸல்யைக்குத் தந்தனன். மிகுந்த பாதியிலும் பாதியை சுமித்திரைக்குத் தந்தனன். சுமித்திரைக்குத் தந்து மிகுந்ததிற் பாதியைக் கைகேயிக்கீந்தனன். நின்ற பாகத்தை மறுபடியும் சுமித்திரைக்குக் கொடுத்தனன். இங்ஙனம் அரசன் பாயஸத்தை வெவ்வேறாகப் பங்கிட்டுக் கொடுக்க, மனைவிகள் மூவரும் அதை வாங்கிக்கொண்டு மிகுந்த மனக் களிப்புடன் உண்டு, சில காலஞ் சென்ற பின்பு கருவுற்றனர். பிறகு அம்மன்னவன் தனது பத்தினிகள் கர்ப்பம் நிறைந்து விளங்குவதைக்கண்டு மனக்கவலை தீர்ந்து மனமகிழ்ந்தவனாகி வீற்றிருந்தனன்.

பதினைருவது ஸர்க்கம் முற்றிற்று.

---

பதினேழாவது ஸர்க்கம்.

## பிரமனது கட்டளையினால் தேவர்கள் வானரர்களைப் பிறப்பித்தல்.

ஸ்ரீமஹாவிஷ்ணு அம் மஹாராஜனுக்குப் பிள்ளையாக அவதரிக்க உத்தேசித்திருக்கையில் பிரமதேவன் தேவர்களனைவரையும் நோக்கி "தேவர்களே! ஸ்ரீமஹாவிஷ்ணு தான் மொழிந்த மொழிதவறாமல் மானிடனாக அவதாரஞ் செய்து ராவணனை அழிக்கப் போகின்றனன். ஆகையால் அத் திருமாலுக்குப் படைகளாகி உதவியாயிருக்கத்தக்க மிகுந்த பலமுடையவர்களும், ராக்ஷஸர்களோடு போர்புரியவல்ல

காமரூபங்கொள்ளத் தகுந்தவர்களுமாயிருப்பவர்களை நீங்கள் படைக்கவேண்டும். அப்ஸரஸ் ஸ்த்ரீகளிடத்திலும், கந்தர்வ யக்ஷ பன்னக ருக்ஷ வித்யாதர கின்னரஸ்த்ரீகளிடத்திலும், வானரஸ்த்ரீகளிடத்திலும், வானர உருவங்கொண்டு உங்களையொத்த பராக்கிரமமுடைய புதல்வர்களை நீங்கள் படைக்கவேண்டும். முன்னமே நான் கரடிகளுக்குத் தலைவனாகிய ஜாம்பவானென்பவனைப் படைத்திருக்கின்றனன். நான் கொட்டாவி விடும்போது உடனே என் வாயிலிருந்து அவன் விரைவிற் பிறந்தனன்" என்றுரைக்க அது கேட்ட தேவர்களும் அவனது கட்டளையை ஏற்று வானர உருவங்கொண்ட புதல்வர்களைப் பிறப்பித்தனர். ரிஷிகளும், சித்தர்களும், வித்யாதரர்களும், உரகர்களும் சாரணர்களும், மஹா வீரர்களான வானர குமாரர்களைப் பெற்றனர்.

இந்திரன் வாலியையும், சூரியன் சுக்ரீவனையும், ப்ருஹஸ்பதி தாரனையும், குபேரன் கந்தமாதனனையும், அக்னி நீலனையும், அச்விநிதேவதைகளிருவரும் மைந்த த்விவிதர்களையும், வருணன் ஸுஷேணனையும், பர்ஜந்யன் சரபனையும், வாயு ஹநுமானையும் பெற்றனர். இவ் வானரர்களேயன்றி மேலும் அளவிடவொண்ணாத விக்ரமமுடைய வானரர்கள் அநேகமாயிரவர் படைக்கப்பட்டனர்.

இங்ஙனம் காமரூபிகளும் மஹா வீரர்களுமாகிய வானர சேனாபதிகள் நூறு லக்ஷம்பேர் பிறந்தனர்.

மிகுந்த பராக்ரமமுடையவனான வாலி தனது புஜபலத்தினால் கரடிகளும் முசுக்களும் குரங்குகளுமாகிய அவ்வீரர்கள் அனைவரையும் பரிபாலித்துவந்தனன். மேலும் அவர்கள் பலவிதமான உருவங்களும் வேறுவேறான அடையாளங்

களுமானவர்களாகி இப்பூமியிலுள்ள மலைகளிலும் கானகங்களிலும் கடல் தீவுகளிலும் பரந்து நிறைந்திருந்து இராமனுக்குத் துணைபுரிவதற்காக ஸமயம் எதிர்பார்த்திருந்தனர்.

**பதினேழாவது ஸர்க்கம் முற்றிற்று.**

---

## பதினெட்டாவது ஸர்க்கம்

## ஸ்ரீராமாதிகளின் பிறப்பும் அவர்களது கல்விப் பயிற்சியும் விசுவாமித்திரர் வருவதும்.

தசரத மகா ராஜனுடைய அசுவமேத யாகம் புத்திரகாமேஷ்டியுடன்கூட நடந்து நிறைவேறியபின் தேவர்களும் மறைமுகமாகத் தமது ஹவிர்ப்பாகங்களைப் பெற்றுத் திரும்பினர். யாகத்திற்கு வந்த மன்னவர்கள் யாவரும் தக்கபடி உபசரிக்கப்பெற்று மகிழ்ந்து தந்தம் நாட்டை யடைந்தனர். பிறகு தசரதனும் அந்தணர்களை உடன்கொண்டு அயோத்தியுள் பிரவேசித்தனன். பின்பு கலைக்கோட்டு முனிவரும் பரிவாரங்களுடன் தமது இல்லம் சென்றனர்.

ஓராண்டு சென்றபின், கௌஸல்யா தேவி பாயஸம் புசித்தது முதலாகப் பன்னிரண்டாவது மாதமாகிய சித்திரை மாதத்தில், நவமி திதியினன்று, புனர்வஸு நக்ஷத்திரத்தில், சூரியன், அங்காரகன், சனி, ப்ருஹஸ்பதி, சுக்கிரன் ஆகிய இவ்வைவரும் தந்தம்முடைய உச்சஸ்தானங்களாகிய மேஷ மகர துலா கர்க்கடக மீனங்களில் இருக்கையில், அதில் ப்ருஹஸ்பதி சந்திரனோடு கலந்திருக்க, கர்க்கடக லக்கினத்தில், எல்லா சுபலக்ஷணங்களும் பொருந்திய ஒரு புதல்வனைப் பெற்றனள், கைகேயி பின்பு புஷ்ய நக்ஷத்திரத்தில் மீன லக்கினத்தில் ஒரு புதல்வனைப் பெற்றனள். பின்பு ஸுமித்ரா

தேவி ஆச்லேஷா நக்ஷத்திரத்தில் கர்க்கடக லக்கினத்தில் இரண்டு புத்திரர்களை யீன்றனள்.

அச்சமயத்தில் கந்தர்வர்கள் ஆகாயத்தில் மிக மதுரமாகப் பாடினர். அப்ஸரஸ்திரீகளும் கூட்டங்கூடி ஆட்டமாடினர். தேவர்களும் துந்துபி வாத்யங்களைக் கணைகணையென்று முழக்கினர். பின்னும் ஆகாயத்தினின்று பூமழை பெய்வித்தனர். அயோத்தியிலும் ஜனங்கள் யாவரும் விரைந்து மஹோத்ஸவங் கொண்டாடினர். அரசனும் பலர்க்குப் பலவகையான பரிசுகளை வழங்கினன்.

பின்பு பதின்மூன்றாவது நாளில் மன்னவன் புதல்வர்களுக்கு நாமகரணஞ் செய்யத் தொடங்கி, வஸிஷ்ட முனிவரைக் கொண்டு மூத்த குமாரனுக்கு ராமனென்றும், கைகேயியின் புதல்வனுக்குப் பரதனென்றும், ஸுமித்ரா தேவியின் புதல்வர்களில் ஒருவனுக்கு லக்ஷ்மணனென்றும், மற்றொருவனுக்கு சத்ருக்னனென்றும் நாமங்களை யிட்டனன். நாடு நகரங்களிலுள்ள அந்தணர் அனைவர்க்கும் உணவளித்துப் பொன்னையும் ரத்னங்களையும் அநேகமாகக் கொடுத்தனன். பின்பு புதல்வர்களுக்கு ஜாத கருமம் முதலிய சடங்குகளனைத்தும் அடைவே செய்வித்தனன்.

அக்குமாரர்கள் அனைவரும் நாளடைவில் வேதங்களைக்கற்று, தனுர்வேதத்திலும் வல்லமைபெற்று, நூர்த் தன்மை பொருந்தி, உலகங்கட்கு நன்மையைச் செய்வதில் விருப்பங்கொண்டு, நற்குணங்களனைத்தும் நிறைந்து விளங்கினர்.

அவர்களில் ராமன் பிதாவினது சுச்ரூஷையில் மிக்க விருப்பங்கொண்டு விளங்கினன். லக்ஷ்மணன் ராமனுக்குப் பணிவிடை செய்வதான செல்வத்தை மேன்மேலும் பெரு

கச் செய்துகொண்டிருந்தனன். ஸ்ரீராமனுக்கு லக்ஷ்மணன் உடனில்லாது நித்திரையும் நேராது. தாய் உயர்ந்த ஆஹாரங்கொண்டுவந்து கொடுக்கினும் அதை ஸ்ரீராகவன் லக்ஷ்மணனை நீக்கித் தனியேபுசியான். எப்போதாகிலும் ராமன் குதிரையின்மீதேறி வேட்டையாடப் போவானாகில், அப்பொழுதே லக்ஷ்மணன் தானும் அவன் பின்னே பாதுகாத்துச் செல்வான். லக்ஷ்மணனுக்குப் பின் பிறந்த சத்ருக்னனும் பரதனைப் பின்சென்றிருந்தனன். ஆனதுபற்றி, பரதனுக்கு சத்ருக்னன் உயிரைக்காட்டிலும் மிக உயர்வுடையவனாயிருந்தான்.

இங்ஙனம் புதல்வர் நால்வராலும் தசரத சக்ரவர்த்தி மிக்க ஆனந்தமடைந்தகோடு அவர்களுக்கு மணம் செய்விப்பதற்குத் தக்க வயது வரக் கண்டு களித்து அவர்களுடைய மணத்தைப்பற்றிப் புரோகிதருடனும் பந்துக்களுடனும் கூடி ஆலோசித்துக் கொண்டிருக்கையில், விசுவாமித்ரமாமுனிவர் அவ்வரசனைக் காணக் கருதி அவ்விடம் வந்தனர்.

அம்மாமுனிவரைக் கண்டு மகிழ்ந்த மன்னவன் அவருக்குத் தமது புரோஹிதராகிய வஸிஷ்டமா முனியால் அர்க்கியம் கொடுப்பித்து அமரச்செய்தனன். அவ்விசுவாமித்ர மாமுனியும் களிப்படைந்து அரசனையும், வஸிஷ்டர் வாமதேவர் முதலிய ரிஷிகளையும் க்ஷேமம் விசாரித்தனர்.

பின்பு மன்னவன், முனிவரைப் பூஜித்து "மாமுனிவரே! புதல்வர்களின் விவாஹத்தைக் குறித்து நான் ஆலோசித்துக்கொண்டிருக்கையில், நீர் தற்செயலாய் வந்தீர். இதனால் நான் அடையும் ஆனந்தம் அளவற்றது. ஐயனே! நான் உமக்குச் செய்யவேண்டுவதென்? எனது தானத்திற்கு நீரே தகுந்த பாத்ரமாயிருக்கின்றீர். எனது ஜன்மப்

இப்பொழுது நான் பயன்பெற்றது. நீர் முதலில் ராஜரிஷி யாய் விளங்கிப் பின்பு தவஞ் செய்து பிரம ரிஷியானீர். நீர் எனக்கு மிகவும் பூஜிக்கத் தக்கவர். நீர் வந்து எனக்குக் காட்சி அளித்தமையால் நானிருக்குமிவ்விடம் புனிதமா யிற்று. நீர் எந்தப் பயனைக் குறித்து இங்கே வந்திரோ, அதை மொழிந்திராயின் அதை உமது அனுக்கிரகத்தினால் நிறை வேற்ற விரும்புகின்றேன். உமது கட்டளையை நான் செய்வேனோ மாட்டேனோ என்று நீர் ஐயப்படவேண்டாம்" என்றனன்.

பதினெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

பத்தொன்பதாவது ஸர்க்கம்.

விசுவாமித்திரர் இராமனையனுப்ப வேண்ட, தசரதன் மூர்ச்சித்தல்.

இங்ஙனம் செவிக்கினிய வாக்கியங்களைக் கேட்டு, விசுவா மித்ர முனிவரும் மிக்க ஆனந்தமடைந்து, மன்னவனை நோக்கி 'ஓ தரணியாளனே! உயர்ந்த சூரிய குலத்திற் பிறந்து வஸிஷ்டரைப் போன்றவர்களுடைய உபதேசம் பெற்று, அவருடன் குலாவும்படியான பெரும்பேறு உன்னைப் போன்றவனுக்கே தகுமத்தனையன்றி மற்றொருவனுக்கும் தகாது. நான் உனக்குச் சொல்லவேண்டுமென்று நெஞ்சில் நினைத்திருக்கிற காரியமொன்றுண்டு. அதை நீ செய்ய இசைய வேண்டும். நீ சொன்ன சொல் தவறாதிருக்கவேண்டும். நான் ஒரு பயனை உத்தேசித்து அதன்பொருட்டு யாகஞ்செய்யத் தொடங்கி தீக்ஷையிலிருக்கின்றனன். அதற்குக் காமரூபி களாகிய ராக்ஷஸர்களிருவர் மிக்க இடையூறு செய்கின்றனர். எனது விரதம் வெகுவாய் நடந்தேறி முடியவேண்டிய

தருணத்தில் இருக்கின்றது. அதைக் கெடுப்பதன்பொருட்டு ஸுபாஹு மாரீசர்களென்கிற ராக்ஷஸர்களிருவரும் மாம்ஸங்களையும் ரத்த வெள்ளத்தையும் கொண்டுவந்து அந்த யாகவேதிக்கு நாற்புறத்திலும் பொழிகின்றனர். அதனால் மிகவருத்தங்கொண்டு அங்கிருந்து வந்துவிட்டேன். அரசனே! அவர்களை ஏன்சபிக்கக்கூடாதென்றால், யாகஞ்செய்யும் அத்தருணத்தில் கோபங் கொள்ளலாகாதென்பது உனக்குத்தெரியாததல்ல. ஆகவே, இப்போது நீ செய்யவேண்டுவதாவது உனது மூத்த குமாரனாகிய ராமனை என்னுடன் அவசியமனுப்ப வேண்டும். அவன் சிறுபிள்ளையாகையால் அவர்களை யெப்படி வெல்லமுடியுமென்று எண்ணவேண்டாம். இவன் தனது சிறந்த பராக்கிரமத்தினால் யாகத்திற்கு இடையூறுசெய்யும் அரக்கர்களனைவரையும் வேரோடு நாசஞ்செய்யவல்லவன். மேலும் நான் அவனுக்குப் பலவகை நன்மைகளையும் செய்வேன். அம்மாரீச ஸுபாஹுக்கள் ராமனுக்கு முன்னே நின்று போர் செய்யச் சிறிதும் வல்லவரல்லர். ராமனையொழிய மற்றொருவன் எவனாயினும் அவர்களை வெல்லமுடியாது. மன்னவர் மணியே! ராமனிடத்தில் பிள்ளையென்னும் ப்ரீதி பாராட்டி எனது விருப்பத்தைத் தடைசெய்ய வொண்ணாது. நான் சொல்லும் இச்சொல்லை நம்பவேண்டும். அவன் தக்க வல்லமையுடையவன் என நான் உனக்கு உறுதியாகச் சொல்லுகிறேன். அவ்வரக்கர்கள் இருவரும் ஒழிந்தார்களென்றே நினைத்துக்கொள். ஏனெனில், ராமன் மஹாத்மாவென்றும், உண்மையான பராக்ரமமுடையவனென்றும் யான் அறிவேன். யானேயன்றி, மஹானுபாவராகிய வஸிஷ்டரும் அறிவர். தவத்தில் நிலைநின்ற மற்றுமுள்ள இம்முனிவர்களும் அறிவார்கள். அரசர்க்கரசனே!

ஆயிரஞ் சொல்லியென்? இப்பூமியில் மேன்மேலும் தருமத்தின் விருத்தியும் சிறந்த கீர்த்தியும் நிலை நிற்கவேண்டுமென்று விரும்பினையாகில், ராமனை எனக்குக் கொடுக்கவேண்டும். அவனது உதவி எனக்குப் பத்துநாள் வரையிலுமே வேண்டும். அதனால் உனக்கு மிகுந்த க்ஷேமமும் புகழும் உண்டாகும்; மனத்தில் கொந்தளிப்பும் யோசனையும் சோகமும் வேண்டாம்" என்று மொழிந்தனர். அதைக் கேட்ட அரசன் கலங்கி மிக்க மனவருத்தமுற்று ஸிம்ஹாஸனத்தினின்று நடுங்கி விழுந்து மூர்ச்சித்தனன்.

**பத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.**

---

## இருபதாவது ஸர்க்கம்.

## தசரதன் இராமனையனுப்ப இசையாததுகண்டு விசுவாமித்திரர் சீற்றங்கொள்ளுதல்.

சிலநாழிகை கழிந்தபின் தெளிந்த அரசன், "முனிவரே! தாமரையிதழ்போல் விளங்கும் அழகான கண்களையுடைய ராமனுக்குப் பதினறு பிராயமும் நிரம்பவில்லை. (இப்பொழுது பன்னிரண்டாவது பிராயம் நடக்கின்றது.) இங்ஙனம் இளைஞனுகிய இவனுக்குப் போர் செய்யும் வல்லமையுண்டோ? எனது மடியை விடாதிருக்குமிவன் என்னை விட்டிருக்க வல்லனல்லன். இவ்வயதில் விளையாடிக்கொண் டிருக்கவேண்டியவனன்றி யுத்தஞ் செய்யத் திறமுடையவனல்ல. மனிதரோடேயே போராடமாட்டாத இவன் கொடிய அரக்கர்களோடு போராடவல்லவனே? ஆகிலும், யான் சொன்ன சொல்லுக்கு வேறுகச் செய்யேன். இதோ எனது கட்டளைக்கு அடங்கிய படைகள் கோடிக்கணக்கிலிருக்கின்றன. இவைகளைக் கூட்டிக்கொண்டுவந்து நான் அவ்வரக்கர்களோடு போர்

செய்கின்றேன். அவ்வரக்கர்களிருவரேயன்றி மேலும் மேலும் கோடிக்கணக்காக அரக்கர் வரினும் அவர்களோடும் போர் புரிந்து அக்கூட்டத்தையே கருவோடு அழித்துவிடக் காத்துக்கொண் டிருக்கின்றனம். ஆகையால் ராமனை யழைத்துக்கொண்டுபோகவேண்டாம். நானே வில்லுங் கையுமாய் நின்று இப்படைகளோடு முன்னிருந்து எனது உடலில் உயிருள்ளவளவும் அவ்வரக்கர்களோடு போராடுவேன்; ராக்ஷஸர்களோ வஞ்சனைகொண்டு யுத்தஞ் செய்ய வல்லமை பெற்றவர்கள். அன்னவர்களோடு போர் புரிய இப்பாலகன் சிறிதும் பொருத்தமற்றவன் என்பதை யான் சொல்ல வேண்டுமோ? அன்றியும், மாமுனிவரே! எனது உள்ள நிலையைக் கேட்டருளவேண்டும். ஐயனே! ராமனை விட்டு ஒரு முகூர்த்த காலமும் பிழைத்திருக்கமாட்டேன். தேவரீர் ராமனையழைத்துக்கொண்டுபோவது எனது உயிரை உடலினின்றும் பிரிப்பது போலாகும். ரகு குலத்தில் விளக்குப் போல் விளங்கும் எனது ஆருயிரான ராமனையே அழைத்துக் கொண்டு போகவேண்டுமென்று தேவரீருக்குத் திருவுள்ளமாயின் நால்வகைச் சேனையுடன்கூடிய என்னையும் அவனுடன் அழைத்துச் செல்லவேண்டுமெனவேண்டுகிறேன்.

மாமுனிவரே! யான் பிறந்து அறுபதினாயிரம் ஆண்டுகள் சென்றபின்பு எவ்வளவோ விரதங்களையனுஷ்டித்து மிகவும் சிரமப்பட்டு இந்த ராமனை அருமையாகப் பெற்றேன். அதை நினைத்தாயினும், தேவரீர் இவனை அழைத்துக்கொண்டு போக எண்ணியதை விலக்கியருளவேண்டும். மேலும் எனது புதல்வர்கள் நால்வரிலும் எனக்கு ராமனிடத்திலேயே நிறைந்த அன்பு. அவனை அழைத்துக் கொண்டு போவது எவ்வகையிலும் பொருத்தமானதல்ல.

அன்றியும் உமது யாகத்தைக் கெடுக்கின்ற அவ்வரக்கர்களது வல்லமை முதலானவற்றையும் எனக்குச் சொல்லவேண்டும்" என்றனன்.

இதைக்கேட்ட விசுவாமித்திரர் 'அரசனே! புலஸ்திய முனியின் குலத்தில் பிறந்த ராவணனென்பவன் பிரமனிடம் வரம் பெற்று மிகுந்த பலமும் சிறந்த வீரியமும் அமைந்து அநேக ராக்ஷஸர்களுடன் மூவுலகங்களையும் அளவின்றி வருத்துகின்றனன். அவன் குபேரனுக்கு நேரே பின்பிறந்தவன்; விச்ரவஸ்ஸென்னும் முனிவருடைய புதல்வன்; ராக்ஷஸர்க்கெல்லாம் அதிபதி; நீயும் அவனைக் கேட்டிருக்கலாம். அப்பெருமிடுக்கன் தானே நேராக வந்து யாகத்திற்கு இடையூறு செய்யநேராத காலங்களில் மாரீச ஸுபாஹுக்களென்னும் ராக்ஷஸர்களிருவரையும் தூண்டிவிடுகின்றனன். அவர்கள் வந்து யாகத்தைக் கெடுக்கின்றனர்' என்று மொழிந்தனர்.

தசரதர் 'மாமுனிவரே! அப்படிக் கொடுந்தன்மையனாகிய ராவணனோடு யுத்தத்தில் முன்னின்று போர்புரிய நானும் வல்லனல்லன். உமது ஆணைப்படி அக்காரியஞ் செய்யப் பாக்கியமற்றிருக்கிற என்மீது கிருபை செய்தருளவேண்டும். தேவதானவர்கள் கந்தருவர்கள் யக்ஷர்கள் பந்நகர்கள் என்னுமிவர்களே ராவணனோடு முன்னின்று போர்புரிய வல்லமையற்றிருக்கிறார்கள் என்றால், மானிடர்கள் எவ்வளவு? அவனது சைந்யங்களோடும் என்றால் சண்டை செய்ய முடியாது. எனது புதல்வன் உமது கொள்கைபின்படி தேவர்களை நிகர்த்தவனாயிருந்தாலும் நான் அவனை உம்முடன் அனுப்ப எனது கருத்து இசையவில்லை. உமது யாகத்தைக் கெடுக்கவரும் மாரீச ஸுபாஹுக்களோ மிகவும் பயங்கரரா

யிருப்பவர்கள். அவர்களோடு யுத்தஞ் செய்து யாகத்தைக் காக்க எனது குழந்தையாகிய ராமனை எவ்வாறு தேவரீருடன் அனுப்ப மனங்கொள்ளுவேன். மாரீச ஸுபாஹுக்கள் இரு வரும் மிக்க வல்லமைபெற்று யுத்தத்தில் நன்றாகப் பயின்ற வர்கள். நானும் எனது நண்பர்களும் படைகளும் ஒன்றாய்க் கூட்டங்கூடி எதிர்த்தாலும் அவ்விருவரில் ஒருவனோடாயினும் முன்னின்று போர்புரிய இயலாது; க்ஷமித்தருள வேண்டும்' என உரைத்தனன்.

இங்ஙனம் அரசன் சொன்ன சொற்களைக்கேட்டு விசுவா மித்திர மாமுனிவர் அளவற்ற கோபங்கொண்டனர்.

**இருபதாவது ஸர்க்கம் முற்றிற்று.**

---

## இருபத்தோராவது ஸர்க்கம்

## வஸிஷ்டருடைய வார்த்தையினால் தசரதன் இராமனை விசுவாமித்திரருடன் அனுப்ப இசைதல்.

பிறகு முனிவர் தசரதனை நோக்கி 'அரசனே! யான் விரும்பியது செய்வதாக முன்பு நீ உறுதிமொழி கொடுத்து, அதை நிறைவேற்றாது விட்டுவிட நினைக்கின்றனை. சிறந்த வம்சத்திற்பிறந்து சொன்னசொல் தவறுவது பொருத்த மன்று. மன்னவனே! இப்படிச் சொன்னசொல் தவறுவது உனக்குள் அழகென்று தோன்றுமாயின் சொல்லிவிடு. நான் வந்தவழியே திரும்பிப்போகின்றேன். நற்குலத்திற் பிறந்த வனான நீ வந்தவர்கட்கெல்லாம் இப்படியே ப்ரதிஜ்ஞை செய்து பொய்யைப் பேசிக்கொண்டு நன்றாக வாழ்ந்திரு' என்று படபடத்துக் கூறினார்.

மாமுனிவர் இங்ஙனம் அளவற்ற கோபாவேசங் கொள்ளும்போது, பூமியெல்லாம் கிடுகிடுவென்று நடுங்கிற்று. 'இம் மாமுனிவர் என்ன செய்வாரோ?' என்று தேவர்களும் அஞ்சினர். உலகமெல்லாம் இப்படி அஞ்சி நடுங்குவதைக் கண்ட வசிட்டமாமுனிவர் அரசனைநோக்கி இங்ஙனம் உரைத்தனர்.

'மஹாராஜனே! நீ சொன்னசொல் தவறாத இக்ஷ்வாகு வம்சத்திற் பிறந்தவனாயிருந்தும் தருமத்தைத் தவறுவது யுக்தமன்று. சொன்னசொல் தவறாதிருப்பது உன் குலத்திற்கே உரிய தருமம். அதை நீ அனுஷ்டிப்பாயாக. நீ அதர்மத்தை ஏறிட்டுக்கொள்ளலாகாது. ஒப்புக்கொண்டபடி செய்யாதவன், தான் முன்செய்த பலவகை யாகங்களையும் தருமங்களையுட் பயனற்றவைகளாகச் செய்து கொள்வான். ஆகையால் ராமனை அனுப்பிவிடு. ராமன் வில்வித்தையைக் கற்றிருந்தாலென்ன? கல்லாதிருந்தாலென்ன? இவ்விசுவாமித்திரர் அவனைப் பாதுகாத்துக் கொண்டிருக்கையில் அரக்கர்கள் அவனை வெல்லவல்லவராக மாட்டார்கள்;

இம்முனிவர் தருமமே வடிவங்கொண்டாற் போலிருப்பவர். மூவுலகத்திலும் வீரியம் படைத்தவர்களில் இவர் மிகச் சிறந்தவர்; இவர் தவங்களுக்கெல்லாம் இருப்பிடம். இம் மூவுலகங்களிலுமுள்ள பலவகைப்பட்ட வில்வித்தைகளையெல்லாம் இவர் அறிந்தவர். இவரறிந்த அஸ்திரங்களை இதுவரையிலும் எவரும் தெரிந்துகொள்ளவில்லை. இனி மேலும் அவைகளை எவரும் அறியப்போகிறதில்லை. அஸ்திரங்கள் எல்லாம் பரமதார்மிகராகிய ப்ருசாச்வருடைய புத்திரர்கள். முன்பு இக்கௌசிகர் அரசாளுங் காலத்தில் இவருக்கு ப்ருசாச்வர் அவ்வஸ்திரங்களையெல்லாந் தந்தனர். தக்ஷப்ரஜாபதிக்கு ஜயையென்றும், ஸுப்ரபை என்றும்

பெண்கள் இருவருண்டு. அவ்விருவரும் ப்ருசாச்வரை மணந்து அஸ்திரங்களையும் சஸ்திரங்களையும் பிள்ளைகளாகப் பெற்றனர். அவர்களில் முதற்பெண்ணாகிய ஜயையென்பவள் அஸுரப்படைகளை வதைக்கும் பொருட்டு ஐம்பது புதல்வர்களைப் பெற்றனள். பின்பு ஸுப்ரபையும் ஸம்ஹாரங்களென்று பெயர்பெற்ற ஐம்பது புதல்வர்களைத் தானும் படைத்தனள். அவ்வஸ்திரங்களை யெல்லாம் பரிபூர்ணமாகக் குறையின்றி இவ்விசுவாமித்திரர் அறிவார்.

அன்றியும், இம்மாமுனிவர் இதுவரையில் கேட்டறியாத மற்றும் புதியவைகளான அஸ்திரங்களையும் அளவின்றி யுண்டுபண்ண வல்லமையுள்ளவர். ஆதலால் மன்னவனே! ராமனை அனுப்ப நீ சிறிதும் ஐயுறவேண்டியதில்லை. அவ்வரக்கர்கள் அனைவரையும் இவ்விசுவாமித்திரர் ஒருவரே முடிக்கவல்லவர். ஆயினும் உனது புதல்வனுக்கு நன்மை பயக்கும்பொருட்டு உன்னிடம் வந்து இப்படிக் கேட்டுக் கொள்ளுகின்றனர்' என்று கூறினர்.

இங்ஙனம் வஸிஷ்டமா முனிவர் சொன்ன சொற்களைக் கேட்டுத் தசரத மன்னவன் மனக்கலக்கந் தீர்ந்து தெளிந்து இராமனை முனிவருடன் அனுப்ப மனங்கொண்டனன்.

**இருபத்தோராவது ஸர்க்கம் முற்றிற்று.**

---

இருபத்திரண்டாவது ஸர்க்கம்

## ஸ்ரீ ராமலக்ஷ்மணர்களை அழைத்துக்கொண்டு செல்லுகின்ற முனிவர் அவர்கட்கு உபதேசங்கள் செய்தருளல்.

பிறகு மன்னவன், ராமனையும் லக்ஷ்மணனையும் வரவழைத்து மங்களாசாஸன பூர்வகமாக விசுவாமித்திரருக்குத் தந்தனன்.

பின்பு விசுவாமித்திரருடன் ராமன் புறப்படும்போது தேவர்கள் துந்துபிவாத்திய முழக்கத்துடன் புஷ்ப வருஷங்களைப் பொழிந்தனர். விசுவாமித்திரர் முன்னே நடந்தார். அவர்பின்னே ராமன் வில்லும் கையுமாகத் தொடர்ந்தனன். லக்ஷ்மணனும் வில்லைக் கையிற் கொண்டு ராமன்பின் சென்றனன். பின்பு அம்மூவரும் ஒன்றரை யோஜனை தூரம் நடந்து ஸரயூ நதியின் தென்கரைக்குப் போய்ச்சேர்ந்தனர்.

அப்பொழுது விசுவாமித்திரர், 'ராமா' என்று இனிய சொல்லுடன் அழைத்து, 'குழந்தாய்! ஜலத்தை யெடுத்து ஆசமனம்செய்; பலமந்திரங்கள் நிறைந்த பலையென்றும் அதிபலையென்றும் இரண்டு மந்திரங்களை உனக்கு உபதேசிக்கிறேன்; அவ்விரண்டு மந்திரங்களையும் நீ ஜபித்துக்கொண்டிருப்பாயாயின் பராக்கிரமத்தில் உனக்கு ஒருவனும் இப்பூமியில் ஒப்பானவன் அகப்படான், எக்குணத்திலும் உனக்கு நிகரானவன் மூவுலகத்திலும் இரான். இவை பிரமதேவனால் படைக்கப்பட்டவை; இப்படிப்பட்ட மந்திரங்களை அடைய நீயே தகுந்தவனாக இருக்கின்றனை. இவைகளை உபதேசம் பெற்றாயாயின் இவை உனக்கு வெகு பலங்களைக்கொடுக்கும்; நீயும் இவ்வுலகத்தில் பலருக்கும் உபதேசித்துப் பரவச்செய்வாய்' என்று மொழிந்தனர்.

பின்பு ராமனும் ஆசமனஞ்செய்து பரிசுத்தனாகி, மஹரிஷியினிடமிருந்து அவ் வித்தைகளிரண்டையும் பெற்றுக்கொண்டு, பின்பு குருவுக்குச் செய்யவேண்டிய உபசாரங்களனைத்தும் விசுவாமித்திர மாமுனிக்கு நன்கு நடத்தினன். அப்பால் மூவரும் அவ் விரவை ஸரயூ நதிக் கரையில் மிக்க ஆனந்தத்துடன் கழித்தனர்.

**இருபத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.**

## இருபத்துமூன்றாவது ஸர்க்கம்

## விசுவாமித்திரர் ஸ்ரீ ராமலக்ஷ்மணர்களுக்கு அங்கதேசத்தின் வரலாறு கூறுதல்.

பொழுது விடியும்போது அம்முனிவரால் எழுப்பப்பட்ட ராஜகுமாரர்களிருவரும் எழுந்திருந்து தினக் கடமை யாவும் செய்து முடித்து, அங்கிருந்து அம்முனிவர் புறப்படுவதை எதிர் நோக்கிக்கொண்டிருந்தனர். பின் மூவருமாய்ப் புறப்பட்டு ஸரயூ நதி வந்துசேருமிடத்தில் அழகான கங்கா நதியைக் கண்டனர். அங்கு ரிஷிகளின் ஆச்ரமங்கள் அமைந்திருக்கும் ஓரிடத்தைக் கண்டு விசுவாமித்திரரைப் பார்த்து "ஐயனே! அழகான இப் பர்ணசாலை யாருடையது? இதில் குடியிருப்பவர் யாவர்?" என்று தாசரதிகள் கேட்க, முனிவர் சொல்லத் தொடங்கினர்;

"குழந்தைகளே! காமனென்னும் மன்மதன் முன்பு கண்ணுக்குப் புலப்படும்படி உருவத்துடன் இருந்தனன். பார்வதியை சிவன் மணம்புரியும்படி செய்யவேண்டுமென்று தேவர்கள் அம் மன்மதனைக் கேட்டுக்கொண்டனர். அக் காமன், இவ் வாச்ரமத்தில் மிக்க நியமத்துடன் மன ஊக்கங் கொண்டு தவஞ்செய்யும் சிவபெருமானுக்குக் காதலை விளைவிக்கும்பொருட்டுப் புஷ்ப பாணங்களை ஏவினான். மலர்க் கணை பட்ட அம் மஹாநுபாவர் நெற்றிக் கண்ணைத் திறந்து நோக்கி 'ஹூம்' என்ன, நீறாகியொழிந்தமன்மதன் அங்கமற்றவனானது பற்றி அனங்கனென்று பெயர்பெற்றனன். அம்மன்மதன் எவ்விடத்தில் அங்கத்தை இழக்கப்பெற்றானோ, அத்தேசம் இன்னும் அங்கதேசமென்று வழங்கிவருகின்றது. இங்கிருக்கும் இம்முனிவர்கள் அக்காலந் தொடங்கி வம்ச

பரம்பரையாக அச் சிவபெருமானுடைய சிஷ்யர்களாய் இருக்கின்றனர். இன்றிரவு இந்த அங்கதேசத்தில் இப் புண்ணிய நதிகளினிடையில் வசித்திருந்து நாளையதினம் நாம் கங்கையைத் தாண்டிப் போகலாம்" என்று சொல்லிக்கொண்டிருந்தனர்.

அப்போது அங்குள்ள ரிஷிகள் யாவரும் மிக மகிழ்ந்து விசுவாமித்திரருக்கும் ராம லக்ஷ்மணர்களுக்கும் அதிதி பூஜையை நடத்தினர். பின் யாவரும் பல்பல புண்ணிய கதைகளைச் சொல்லிக்கொண்டே அன்றிராப் பொழுதைப் போக்கினர்.

இருபத்துமூன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## இருபத்துநான்காவது ஸர்க்கம்

### மலதகருச தேசங்களைப் பற்றியும் தாடகையைப் பற்றியும் விசுவாமித்திரர் தாசரதிகளுக்குக் கூறுதல்.

பொழுது விடிந்ததும் ராமலக்ஷ்மணர்களிருவரும் நித்ய கருமங்களைச் செய்து முடித்து, மூவரும் கங்காநதியின் கரைக்கு வந்து சேர்ந்தனர். அங்கு ஆச்ரமத்திலுள்ள முனிவர்கள் அனைவரும் ஒரு ஓடத்தை அருகில் கொண்டு வந்து நிறுத்த அம்மூவரும் அதிலேறி ஸரயூ நதியின் பெருமையைப்பேசிக்கொண்டே கங்காநதியின் தென்கரையை யடைந்து, இறங்கி வேகமாக நடந்தனர். ஜன ஸஞ்சாரமில்லாமல் பயங்கரமாயிருக்கின்ற ஓர் கானகத்தைக் கண்டு, 'சிங்கங்களும் புலிகளும் பன்றிகளும் யானைகளும் நிறைந்திருக்கின்ற இக்கானகத்தின் பெயர் யாது?' என்று தாசரதிகள் கேட்டனர்.

அதற்கு விசுவாமித்திரர்— 'முன்பு இது தேவர்களால் நிருமிக்கப்பட்டுத் தேவலோகத்தோடொத்து மலதமென்றும் கருசமென்றும் பெயர் கொண்ட இரண்டு தேசங்களாயிருந்தது. முன்னே இந்திரன் விருத்ராசுரனை வதைக்க, உடனே அவ் விந்திரனை பிரம்மஹத்தி சூழ்ந்ததால் அவனைப் பாவமும் பசியும் வெகுவாய்ச் சூழ்ந்துகொண்டன. அப்பொழுது தேவர்களும் முனிவர்களும் அவ் விந்திரனுக்குக் கங்கை முதலிய புண்ய தீர்த்தங்களால் அபிஷேகஞ் செய்வித்து அவ்விந்திரனது சரீரத்தினின்றும் விலகிய மலமென்றும் கருசமென்றும் சொல்லப்பட்ட பாவத்தையும் பசியையும் இத் தேசத்தில் ஒழியும்படி செய்தனர். இந்திரனும் தனது மல கருசங்களை விட்டுத் தான் தூயனானதற்கு ஆனந்தித்து அத் தேசங்கள் செழித்து விளங்குமாறு செய்தனன். அப்படியே இவை செழித்து விளங்கிச் சில காலஞ் சென்றன. தாடகையென்று பெயர்கொண்ட ஓர் யக்ஷ கன்னிகை உண்டாயினள். அவள் பிறந்தது முதல் ஆயிரம் யானை பலமுடையவளாகி நினைத்தபடி வடிவங் கொள்ள வல்லவளுமாயிருந்தனள். அவளைச் சுந்தனென்பவன் மணம் புரிந்தனன். அவளுக்கு மாரீச னென்னும் ராக்ஷசனொருவன் பிறந்தனன். அவன் மஹா பயங்கரன். அத் தாடகை இம் மலத கருச தேசங்களை எப்பொழுதும் பாழடையச் செய்கின்றனள். அவள்தான் ஒன்றரை யோசனை தூரத்தில் வழியை யடைத்துக்கொண்டு வாசஞ் செய்கின்றனள். அத் தாடகை வசிக்கும் வனம் வழியாகவே நாம் போகவேண்டும். நீ அக் கொடிய தாடகையை எனது சொற்படி முடிக்கவேண்டும். அப்படி முடிக்காயாயின் முன்போலவே இத் தேசங்கள் செழித்திருக்கும். இத் தேசம் புண்ய க்ஷேத்திரமாயிருந்தும் அத்

தாடகையினால் பிடிக்கப் பட்டிருப்பதால் ஒருவரும் இங்கு நாட முடியாமலிருக்கின்றது' என்று மொழிந்தனர்.

**இருபத்துநான்காவது ஸர்க்கம் முற்றிற்று.**

---

## இருபத்தைந்தாவது ஸர்க்கம்

### விசுவாமித்திரர் தாசரதிகளுக்குத் தாடகையின் வரலாறுகளை விரிவாகக் கூறுதலும், அவளை வதம் செய்ய வேண்டியது யுக்தமென்று நிரூபித்தலும்.

பின்பு ராமன் விசுவாமித்திரரைப் பார்த்து 'மாமுனிவரே! யக்ஷர்கள் பலத்தில் மிகவும் குறைந்தவர்களென்று கேட்டிருக்கின்றனம். அப்படிப்பட்டவர்களில் ஒரு பெண்பிள்ளை ஆயிரம் யானை பல முடையவளாயிருப்பது எப்படி?' என்று கேட்க—

விசுவாமித்திரர், "அத்தாடகை இயற்கையாகவே பலமற்றிருக்கும் பெண்பிள்ளையாகப் பிறந்தவளாயினும் வர பலத்தினால் மிகச் சிறந்த பலமுடையவளா யிருக்கின்றனள். எவ்வாறெனில், முன்னொருகால் சுகேது வென்னும் யக்ஷனொருவன் புதல்வனைப் பெறவேண்டிப் பெருந்தவஞ் செய்தனன். அப்பொழுது பிரமன் அந்த யக்ஷாதிபதிக்கு ஆயிரம் யானை வலிவுள்ள தாடகை யென்பவள் உண்டாகும்படி வரங் கொடுத்தனன். ஆனால் அந்த சுகேதுவுக்கு ஒரு புதல்வன் உண்டாகும்படி பிரமன் அருள் புரியாதொழிந்தனன். அத் தாடகையே இவள். பிறகு அத் தாடகையை அவளது தந்தை சுந்தனென்பவனுக்கு விவாஹஞ் செய்வித்தனன். சுந்தனுக்கும் தாடகைக்கும் மாரீசனென்னும் புதல்வன் பிறந்தனன். அம்மாரீசன் சாபத்தினால் ராக்ஷசனாய்விட்டான்.

அந்தச் சாபத்தின் காரணம் யாதெனில், சுந்தன் அகஸ்தியரால் முடிந்து போகையில் அத் தாடகை தனது பிள்ளையைக் கூட்டிக்கொண்டு அம் மாமுனியை வென்று முடிக்க நினைத்து கர்ஜித்துக்கொண்டு அம் மாமுனியைப் பக்ஷிக்கும்பொருட்டு எதிர்த் தோடினள். அப்போது மாமுனிவர் மிகச் சினங்கொண்டு, மாரீசனை 'நீ ராக்ஷசனாகக் கடவாய்' என்று சபித்தனர். தாடகையையும் 'நீ இவ் வுருவம் மாறி, பார்க்க வழங்காதபடி கோரமான முகத்துடன் கூடி, மனிதரைப் பிடுங்கித் தின்னும் தன்மையளாக இருப்பாயாக' என்று சபித்துவிட்டனர். சாபம் அப்படியே பலிக்க உலகமனைத்தும் வருந்தும்படி தாடகை மிகவும் கோரமான வடிவங்கொண்டு கொடிய செய்கை மேலிட்டுத் திரிகின்றனள்; இவளை வதஞ் செய்யவேண்டுமேயென்று நீ அருவருப்புக் கொள்ளத் தகாது. (பிரஜைகளின் நன்மைக்குரிய காரியமொன்று கொடியதாயினும் நல்லதாயினும் அபவாதத்தை விளைப்பதாயினும் உலகத்தைக் காக்கவேண்டி அதைக் கட்டாயம் செய்யவேண்டும்;)

மாதர்களாயினும் கொடியவர்களாயின் அவர்களைக் கொல்லுவது முறைமையே. முன் பூமியையெல்லாம் பாழடையச் செய்யவேண்டுமென்றெண்ணங் கொண்ட விரோசன புத்திரியாகிய மந்தரையென்பவளை இந்திரன் முடித்தானென்பதை யாவருங் கேட்டிருக்கிறோமல்லவா? இன்னமும் சுக்கிரனுக்குத் தாயாகி ப்ருகு மஹரிஷியின் பத்தினியாகிய ஒரு பெண்பிள்ளை முன்பு உலகத்தில் இந்திரனை யில்லாமல் கொலைக்கவேணுமென்று நினைவு கொண்டு யாதொரு தடையுமின்றிக் கடுமையான விரதஞ் செய்யத் தொடங்க, அவளை விஷ்ணு வதைத்தாரென்பதும் உலகில்

யாவரும் அறிந்ததன்றோ. மற்றும் பல மஹாத்மாக்களும் அதர்மத்தில் மனஞ் சென்ற மாதர்களைக் கொன்றனர்" என்று மொழிந்தனர்.

**இருபத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.**

---

## இருபத்தாறாவது ஸர்க்கம்

### இராமன் முனிவர் சொற்படி தாடகையை முடித்தது.

அதைக்கேட்டு ராகவன் பெரியோர்கள் கட்டளையைச் சிரமேற்கொண்டு நடப்பதாக வாக்களித்து உடனே வில்லில் நாணையேற்றி ஒலிப்பித்தனன். அந்நாணொலியைக் கேட்டுத் தாடகையின் வனத்தில் வஸிப்பவர் யாவரும் அஞ்சி நடுங்கினர்.

அதைக் கேட்டுத் தாடகையும் அளவற்ற கோபங் கொண்டு ஒன்றுஞ் செய்யத் தோன்றாமல் கட்டித் தடுமாறி அந்தத்வனியைத் தானே ஊக்கத்துடன் ஆலோசித்துப் பின்னுங் கோபம் மேலிட்டு மூர்ச்சை யடைந்து தெளிந்து அவ்வொலி எத்திசையினின்று உண்டாகின்றதென்று நிதானித்து அறிந்து அத்திசையை நோக்கி வேகத்துடன் ஓடி வந்தனள்.

அவள் ஓடி வருவதைக் கண்டு, ராமன் தம்பியை நோக்கி 'லக்ஷ்மணா! இத்தாடகையின் வடிவத்தைப்பார். இவள் யாவராலும் வெல்லமுடியாதவள். மேலும் இவள் மாயா பலமுள்ளவள்; இவளை இப்பொழுது காதையும் மூக்கின் நுனியையும் அறுத்துத் துரத்திவிடுகின்றனன். இதனால் குருவின் கட்டளையும் முடித்ததாகும். இவள் ஸ்திரீயானதுபற்றி இவளைக் கொல்ல என்மனம் துணியவில்லை. ஆகையால் கைகளையும் கால்களையும் முறித்து விட்டுவிடலாமென்று எனக்குத் தோன்றுகின்றது' என்றனன்.

இப்படி ராமன் சொல்லிக் கொண்டிருக்கையில், அந் தாடகை கைகளிரண்டையும் உயரவெடுத்துக் கர்ஜித்துக் கொண்டே லக்ஷ்மணனை விட்டு ராமனையே எதிர்த்தோடி வந்தனள். அதைக் கண்ட விசுவாமித்திரரும் தாம் ராமனுக்குள்ள அமானுஷ சக்தியை அறிந்தவராயினும் அவ்வரக்கியினது கொடுந்தன்மையைக் கண்டு மனக் கலக்கமுற்று, அவளை 'ஹும்' என்று அதட்டிவிட்டு 'ராமலக்ஷ்மணர்களுக்கு க்ஷேமமும் ஜயமும் உண்டாகவேணும்' என்று மங்களாசாஸனம் பண்ணினர்.

இப்படியிருக்க, அத்தாடகையும் புழுதியை வாரி எங்கும் இறைத்துப் பேரிருளை விளைவித்து ஒரு முகூர்த்த காலம் அந்த ராமலக்ஷ்மணர்களிருவரையும் ஒன்றுந் தெரியாமல் மனம் மயங்கச் செய்து, பின்பு மாயையைக் கொண்டு கண்ணுக்குப் புலப்படாதபடி நின்று கற்களை அளவில்லாதபடி பொழிந்தனள். ராமனும் மிகச்சினங்கொண்டு பாணங்களை ஓயாமற் பொழிந்து அத்தாடகை கொண்டெறியுங் கற்களை யெல்லாம் தடுத்துப் பொடிபொடியாக அடித்து, அவளது கைகளை அறுத்துத் தள்ளினன்.

பின்பும் அவள் கர்ஜித்துக் கொண்டிருக்கையில் லக்ஷ்மணன் அவளது காதுகளையும் மூக்கு நுனியையும் அறுத்தனன். அத்தாடகை நினைத்தபடி வடிவங்கொள்ள வல்லவளாகையால் பலவிதமான வடிவங்களைக் கொண்டு மாயையினால் மறைந்து மிக்க பயங்கரமாகக் கல் மழையைப் பொழிந்து திரிந்து கொண்டிருந்தனள்.

விசுவாமித்திரமாமுனிவர் அப்பொழுது இத்தாடகையை இராமன் முடிக்க நேரிட்டதேயென்று களித்து, 'ராமா! இவ் வரக்கியின்மீது இதுவரையில் நீ தயை செய்தது போதும்;

இவளை இப்பொழுதே முடித்துவிடுதல் நலம்; ராக்ஷஸர்கள் அந்திப்பொழுதில் யாவராலு மெதிர்க்கவொண்ணாத வல்லமை பெறுவார்கள். அப்பொழுது அவர்களை முடிப்பது எப்படிப் பட்ட வல்லமைபெற்றவர்களுக்கும் முடியாது. ஆகையால் அந்திப்பொழுதிற்கு முன்னமே இவளை முடித்து விடுவா யாக' என்று கட்டளை யிட்டனர்.

ராமனும், கண்ணுக்குத் தோற்றமல் கற்களைப் பெய்கின்ற அத்தாடகையின் முழக்கத்தினால் அவளிருக்குந் திக்கை யறிந்து அம்புகளைப் பொழிந்து எங்கும் போகவொட்டாமல் அவ்விடத்திலேயே தடுத்துவிட்டனன்.

தாடகையும் தான் மாயாபலங்கொண்டு கண்ணுக்குப் புலப்படாதபடி நின்றும் அது பயனற்று, ராமபாணங்களால் தடுக்கப்பட்டுச் செய்வதறியாமல் கண்ணுக்குப் புலப்பட்டுக் கடுமையாகக் கர்ஜித்துக்கொண்டு ராமனையும் லக்ஷ்மணனையும் நோக்கி எதிர்த்தோடி வந்தனள்.

இங்ஙனம் கடுமையாக இரைத்துக்கொண்டு ஓடிவருகின்ற தாடகையினது மார்பில் ஓர் அம்பைத் தொடுத்து நாட்ட, அவ்வளவிலே அவள் கீழே விழுந்து மாண்டனள். அப்பொழுது மூவுலகும் களித்த களிப்பு அளவிடமுடியாததாம்.

இதை யறிந்து மிக மகிழ்ச்சி கொண்ட தேவேந்திரன் அமரர்களோடு அங்கு வந்து தோன்றி மாமுனிவரை நோக்கி, "ராகவனிடத்தில் உமக்குள்ள நேசத்தை நீர் இப்போது வெளியிடவேண்டும். நீர் தவ மகிமையால் பெற்ற அஸ்திர வித்தையை ராமனுக்குக் கற்பிக்கவேண்டும். தேவர்களுக் காக ஒரு பெரிய காரியத்தை ராமன் செய்யவேண்டி யிருப்ப தால் அவசியம் கற்பிக்கவேண்டும்" என்று சொல்லி, விசுவா மித்திரரைப் பூஜித்துப் போயினன்.

தாடகையை வதஞ்செய்து அவ் வனத்தை விளங்கச் செய்த ராமலக்ஷ்மணர்கள் அன்றிரவு அவ் வனத்தில் மாமுனிவரோடு தங்கியிருந்தார்கள்.

**இருபத்தாருவது ஸர்க்கம் முற்றிற்று.**

---

## இருபத்தேழாவது ஸர்க்கம்

## விசுவாமித்திரர் இராமனுக்குப் பலவகை அஸ்திரங்களை யுபதேசித்தல்.

பொழுது விடிந்த உடனே முனிவரும் ராமனை எழுப்பி "ராம! பெரும் புகழ் பெற்ற உனக்கு நான் என் அன்பிற்குப் போக்குவீடாக நான் கற்ற திவ்யாஸ்திரங்களனைத்தையும் உனக்குக் கொடுக்கின்றேன்; தண்ட சக்ரம், தர்ம சக்ரம், கால சக்ரம், விஷ்ணு சக்ரம், ஐந்த்ராஸ்த்ரம், வஜ்ராஸ்த்ரம், சிவசூலம், ப்ரஹ்மசிரஸ், ஐஷீகாஸ்த்ரம், ப்ரஹ்மாஸ்த்ரம், ஆகிய இவைகளைக் கொடுக்கின்றேன். இவ்வளவேயன்றி, மோதகி யென்றும் சிகரி யென்றும் இரண்டு கதைகள் மிகுந்த ஒளிபொருந்தியவைகள் என்னிடத்தில் இருக்கின்றன. அவ்விரண்டையும் கொடுக்கின்றேன். இராமா! இன்னமும் தர்மபாசம், காலபாசம், வருணபாசம் முதலியனவும் தருகின்றேன். பெற்றுக்கொள்வாய். தர்ப்பணம், சோஷணம், ஸந்தாபனம், விலாபனம் என்னும் அஸ்திரங்களையும், மதனாஸ்திரத்தையும், மோகனாஸ்திரங்களையும் கொடுக்கின்றேன். பெற்றுக்கொள்" என்றுரைத்து (அம் மாமுனிவர்) பரிசுத்தராகிக் கிழக்கு முகமாக நின்று அன்போடு மிகவும் சிறந்த அவ் வஸ்திர மந்திரங்களனைத்தையும் ராமனுக்கு உபதேசிக்குமாறு அவைகளை நினைத்து ஜபஞ் செய்ய;

அவரது கட்டளைப்படி சிறந்த மஹாஸ்திரதேவதைகள் யாவும் அப்பொழுது காந்தி மயமான சரீரங்களோடு பளபள வென்று விசுவாமித்திரரருகே வந்து நின்று ராமனை நோக்கி நமக்குத் தக்கதோர் இருப்பிடம் கிடைத்ததே யென்று மகிழ்ந்து 'ரகுகுல திலகனே! மிகவும் மகிமை பொருந்திய நாங்கள் உனக்குக் கிங்கரர்களாயினம்' என்று உரைத்தன. ராமனும் 'அப்படியே' யென்று அங்கிகரித்து அவைகளைக் கையினால் தடவிக்கொடுத்து 'யான் மனத்தில் நினைக்கும் போது நீங்கள் வந்து உதவவேண்டும்' என்று அவைகளுக்குக் கட்டளையிட்டனன்.

இருபத்தேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## இருபத்தெட்டாவது ஸர்க்கம்.

## அஸ்திரங்களின் உபஸம்ஹாரக்ரமங்களையும் இராமபிரான் உபதேசம் பெறுதல்.

இங்ஙனம் ராமன் விசுவாமித்திரரால் அஸ்திர மந்திரங்களை உபதேசிக்கப்பெற்றுக் களித்து அவற்றைச் செலுத்தும் முறையை உபதேசித்தது போலவே உபஸம்ஹாரக்ரமத்தையும் உபதேசிக்குமாறு மாமுனியை வேண்ட, மாமுனியும் அங்ஙனமே உபதேசிக்க, ஸ்ரீராமன் அம் மந்திரங்களையெல்லாம் பெற்றுக்கொண்டு அவ் வுபஸம்ஹார மந்திர தேவதைகளை நோக்கி, 'காரியம் நேரிடுகிற சமயத்தில் யான் மனத்தில் நினைத்த மாத்திரத்தில் நீங்கள் வந்து எனக்கு உதவி செய்ய வேண்டும். இப்பொழுது நீங்கள் இஷ்டப்படி போய்வரலாம்.' என்று விடை யளித்தான்.

இருபத்தெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## இருபத்தொன்பதாவது ஸர்க்கம்

## விசுவாமித்திரர் ஸித்தாச்ரமத்தின் வரலாறுகள் கூறுதலும் யாகதீக்ஷை கொள்ளுதலும்.

அதன்பின் மூவரும் வழி நடந்து சென்றுகொண்டிருக்கையில் ஸ்ரீராமன் ஓர் அழகிய சோலையைக்கண்டு வியந்து அதன் வரலாற்றைக் குறித்து மாமுனியை வினவ, அவரும் "ராம! ஸ்ரீ மகாவிஷ்ணு உலகத்தில் தவஞ் செய்யும் பொருட்டும் யோகத்தை யனுஷ்டிக்கும் பொருட்டும் இவ் வனத்தில் நெடுங்காலம் வாஸஞ்செய்துகொண்டிருந்தனர். வாமன மூர்த்தி தவம் புரிந்திருந்த ஆச்ரமமும் இதுவே. இங்குக் காச்யபமாமுனியும் தவம் புரிந்து சித்திபெற்றனர்; ஆனது பற்றி இது 'ஸித்தாச்ரமம்' என்று யதார்த்தமாகிய பேருடன் விளங்குகின்றது.

வாமனனாய் அவதரித்து மாவலியை யாசித்து, த்ரிவிக்ரம ரூபங்கொண்டு, தனது மெல்லடிகளாலே உலகங்களையளந்து யாவர்க்கும் நன்மையைச் செய்த ஸ்ரீமந் நாராயணன் இவ் வாச்ரமத்தில் முன்பு வஸித்திருந்தனன் என்பதே இவ்விடத்திற்கு முக்கியமான சிறப்பு; நானும் அவ் வாமன ரூபியான பகவானிடத்தில் பரம பக்தியைச் செய்து 'வாமனன் மண்ணிது' வென்று இம் மண்ணை மோந்துகொண்டு அவனுடைய தான இவ் வாச்ரமத்தில் குடியிருக்கின்றனன். யாகத்தைக் கெடுக்கும் ராக்ஷசர்கள் இவ் வாச்ரமத்திற்கே வருவார்கள். ராம! கொடிய அவ் வரக்கர்களை இவ்விடத்தில்தான் கொல்ல வேண்டும்" என்று சொல்லிக்கொண்டே போகையில், அந்த சித்தாச்ரமத்தில் வாசஞ் செய்யும் முனிவர்கள் அனைவரும் விசுவாமித்திர மாமுனிவர் வந்தது கண்டு உவந்து அவருக்கும் ராம லக்ஷ்மணருக்கும் ஸத்காரஞ் செய்தனர்.

பின்பு தாசரதிகள் முனிவரை நோக்கி "இன்றைய தினமே யாகதீக்ஷை பெற்றுக்கொள்வீராக" என்று வேண்ட, அவரும் ஐம்புலன்களையு மடக்கிக்கொண்டு அப்பொழுதே யாகஞ்செய்ய தீக்ஷித்துக்கொண்டனர்.

**இருபத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.**

---

முப்பதாவது ஸர்க்கம்.

## ஸ்ரீ ராமலக்ஷ்மணர்கள் ஸுபாஹு மாரீசாதிகளைத் தொலைத்து வேள்வியை நிறைவேற்றினது.

அந்த ராஜகுமாரர்களும் போர்புரிய வேண்டுமென் விருப்பத்துடன் விளங்குவதைக்கண்ட அங்குள்ள முனிவர்கள் 'இன்று முதல் ஆறிரவுகள் நீங்களிருவரும் ஜாகரூகர்களாயிருக்கவேண்டும். இம் மாமுனிவர் தீக்ஷித்துக்கொண்டு அதற்குரிய மௌனவ்ரதத்துட னிருப்பதுபற்றி உங்களிடம் யாதொன்றும் மொழியாதிருப்பர். ஆகையால் அவர்க்குப் பதிலாக நாங்கள் உரைக்கின்றனம்' என்றனர்.

அவ்விருவரும் அம்மொழியைக் கேட்டு மிக்க ஊக்கங்கொண்டு நித்திரையின்றி ஆறு அஹோராத்ரங்கள் அந்தபோ வனத்திற்கு ரக்ஷையாகக் கையில் பெரிய வில்லொன்றேந்திப் பகைவரை யடக்குவதற்குரிய மனோதிடத்துடன் அவ்விசுவாமித்திர மாமுனியைக் காத்துக்கொண்டு வஸித்திருந்தனர்.

இப்படி ஐந்து தினங்கள் கடந்து ஆறுவது தினம் வரும்போது யஜ்ஞவேதியானது யாகப்பொருள்களுடனே திடீரென்று எரிந்தது. அப்பொழுது ஆகாயத்தில் பயங்கரமாகப் பெரிய ஒலியொன்று உண்டாயிற்று. மாரீச ஸுபாஹுக்களென்னும் அரக்கர்களிருவரும் மாயையைப் பலவிதமாகப்

செய்துகொண்டு ஆகாயமெங்கும் பரந்து எதிர் நோக்கி ஓடிவந்தனர். யாகவேதிகையும் இரத்த வெள்ளத்திஞல் நிறைந்து எரிந்துகொண்டிருந்தது.

ராமன் அந்த ஸுபாஹு மாரீசர்கள் தன்மேலெதிர்த்தோடி வருவதைக்கண்டு லக்ஷ்மணனைப் பார்த்து 'லக்ஷ்மணு! இதோ பார்; இம்மாநவாஸ்திரமானது கொடுந் தொழிலாளரான அரக்கர்களைப் பறக்கடிக்கப்போகின்றது' என்றுரைத்துக் கோபம் மேலிட்டு, நெருப்புப்பொறி பறக்கும் மாநவாஸ்திரத்தைத் தொடுத்து மாரீசனது மார்பிலெய்தனன். உடனே அம்மாரீசன் கடல் நீர் வெள்ளத்தில் நூறுயோஜனை தூரத்திற் கப்பால் தள்ளுண்டு விழுந்தனன். பிறகு ஆக்நேயாஸ்திரத்தை யெடுத்துத்தொடுத்து ஸுபாஹுவின் மார்பில் நாட்டினன். அதஞல் அவன் அடியுண்டு கீழேவிழுந்தனன். மற்றுமுள்ள அரக்கர்களையும் முடித்து, அந்த ராகவன் அங்குள்ள முனிவர் அனைவரையும் மிகமகிழ்வித்தனன். அந்த ரிஷிகள் யாவரும் தாசரதிகளை மிகப்புகழ்ந்து பூஜித்தனர்.

பின்பு யாகம் நிறைவேற நடத்தி நான்கு திசைகளும் யாதொரு உபத்ரவமுமின்றி ஸுகமாயிருப்பது கண்டு, விசுவாமித்திர மாமுனிவர் ராமனை நோக்கி 'ராமா! உனது புஜபலத்திஞல் யான் எனது காரியம் நிறைவேறிப் பயன்பெற்றவஞயினேன். நீயும் பிதாவினது வசனத்தைக் காப்பாற்றிஞய். எனது யாகத்தை முடிவடையச் செய்து இவ் வாச்ரமத்தினது ஸித்தாச்ரமமென்னும் பெயரை மெய்ப்பித்துப் பெருங் கீர்த்தியும் பெற்றனை' என்று புகழ்ந்துரைத்தனர்.

முப்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## முப்பத்தோராவது ஸர்க்கம்

## மிதிலாநகருக்குப் புறப்பட ப்ரஸ்தாவித்தல்.

ராம லக்ஷ்மணர்கள் அன்றிரவு சென்றபின் விசுவாமித்திரரை வணங்கி 'மாமுனிவரே! தேவரீர் கட்டளையிட்டபடி யெல்லாம் செய்யப் பாங்கான ஏவலர்களாகிய எங்களுக்கு இன்னமும் உமதிஷ்டப்படி கட்டளையிடவேண்டும்' என்றனர்.

அப்போது அங்குள்ள மஹரிஷிகள்யாவரும் விசுவாமித்ர மாமுனியின் அநுமதி பெற்றுக்கொண்டு ராமனை நோக்கி, "ராமா! மிதிலா நகரத்திற்கரசனாகிய ஜனக மஹாராஜன் ஓர் யாகம் நடத்தப்போகின்றனன். அதற்கு நாங்கள் அனைவரும் போகப்போகின்றனம். நீயும் எங்களுடன்கூட வந்து அங்கு மிகவும் ஆச்சரியமான ஓர் உயர்ந்த வில்லையும் ஸீதை யென்னும் பெண்மணியையும் காணவேண்டும். அவ்வில் லானது, முன்பொரு காலத்தில் இந்த ஜனக ராஜனது வம்சத்திற் பிறந்த தேவராதனென்னும் ஓரரசன் யாகஞ் செய்ய அப்போது தேவர்களால் கொடுக்கப்பட்டது. தேவர்களோ கந்தருவர்களோ அசுரர்களோ அரக்கர்களோ எவரும் அவ் வில்லைவளைத்து நாணேறிடவல்லரல்லர். இனி மனிதர்களைப்பற்றிச் சொல்லவேண்டுமோ? மஹா பலசாலிகளாகிய பலரும் அவ்வில்லினுடைய ஸாரத்தையறியக்கோரி, அங்கே வந்து கடைசியில் அதை நாணேறிடவும் சக்தியின்றி வந்தவழியே திரும்பிப்போயினர். ராமா! நீ வந்தாயாயின் அவ்விடத்தில் ஜனக மஹாராஜனையும், அவ்வில்லையும் அந்த யாகத்தையும் பார்க்கலாம். ஸீதையென்னும் பெண்மணியையும் பெறக்கூடும்' என்று மொழிந்தனர்.

முப்பத்தோராவது ஸர்க்கம் முற்றிற்று.

## முப்பத்திரண்டாவது ஸர்க்கம்

### சோணநதத்தின்கரையில் விசுவாமித்திரர் குசநாபனது பெண்களின் கதையைக் கூறுதல்.
### [அப்பெண்கள் நூற்றுவரும் வாயுதேவனால் கூனிகளாக்கப் பட்டமை.]

பின்பு விசுவாமித்திர முனிவர் அங்குள்ள வனதேவதைகளை நோக்கி, இந்த ஸித்தாச்ரமத்தினின்றும் புறப்பட்டு இமயமலையிலுள்ள தமது ஆச்ரமத்திற்குப் போவதாகச் சொல்லி விடைபெற்றுக்கொண்டு அந்த ஸித்தாச்ரமத்தை வலம்வந்து வடதிசை நோக்கிப் பிரயாணஞ்செய்யத் தொடங்கினர். அங்குள்ள முனிவர்களனைவரும் பலபல வண்டிகளில் அவரைப் பின்தொடர்ந்து சென்றனர்.

இங்ஙனம் விசுவாமித்திரர் முதலிய மஹாரிஷிகளனைவரும் ராம லக்ஷ்மணர்களும் புறப்பட்டு வெகு தூரம் நடந்து சென்று சோணநதத்தின் கரையில் உட்கார்ந்தனர். அப்பொழுது ராமன் 'மஹாநுபாவரே! இந்தச் சோணநதத்தின் கரையில் செழித்த வனங்களால் அழகாய் விளங்குகிற இத் தேசம்யாருடையது?' என்ன, விசுவாமித்திரர் கூறுகின்றார்-

"குழந்தாய்! பிரமனது மானஸபுத்ரனான குசனென்பவன் வைதர்ப்பி யென்னும் தனது பத்தினியிடத்தில் குசாம்பன், குசநாபன், ஆதூர்த்தரஜஸ், வஸு என்னும் நான்கு புதல்வர்களைப் பெற்றனன். அவர்களில் குசாம்பன் கௌசாம்பி யென்னும் பட்டணத்தையும், குசநாபன் மஹோதய மென்னும் பட்டணத்தையும், ஆதூர்த்தரஜஸ்ஸென்பவன் தர்மாரண்யமென்னும் பட்டணத்தையும் வஸுவென்பவன் கிரிவ்ரஜமென்னும் பட்டணத்தையும் படைத்தனர்;

ராமா! இச்சோணநதத்தின் கரையிலுள்ள பூமியானது வஸுவென்னும் அவ்வரசனுடையது. இப்பூமியைச் சுற்றி நாற்புறமும் ஐந்து பெரு மலைகள் இதோ விளங்குகின்றன ஆனதுபற்றி இந்நகரம் கிரிவ்ரஜ மென்று வழங்கி வருகின்றது. இச்சோணநதம் மகததேசத்தின் வழியாகப் பெருகி வருவதுபற்றி மாகதீநதி யென்றும் வழங்கப்படும்.

ரகுநந்தனா! குசநாபனென்பவன் க்ருதாசி யென்னும் அப்ஸரஸ்திரீயினிடத்தில் நூறுபெண்களைப் பெற்றனன். அப்பெண்கள் நன்கு யௌவனம்வரப்பெற்று மேலான ஆடையாபரணங்களால் அலங்கரித்துக்கொண்டு நந்தவனத்திற்கு வந்து அங்குப் பலவிதமாக விளையாடிக்கொண்டிருக்க, அம்மாதரசிகளை வாயுதேவன் கண்டு மோஹங்கொண்டு "எனக்கு உங்கள் அனைவரிடத்திலும் அளவற்ற மோஹம் உண்டாயிருக்கின்றதாகையால் நீங்கள் எனக்கு மனைவிகளாக வேண்டும்; மனிதர்களுக்குத் தேவதைகளோடு தொடர்பு எப்படி நேருமென்று ஐயுறவேண்டுவதில்லை. நீங்கள் மனுஷ்யத் தன்மையைவிட்டு ஆயுள் நிரம்பப்பெறுவீர்கள் என்னை மணம் புரிவீர்களாயின் அழிவில்லாத யௌவனம் பெற்றுத் தேவமாதரைப் போல் விளங்கி வாழ்வீர்கள்' என்று மொழிந்தனன்.

ராமா! பிறகு அப்பெண்மணிகள் வாயுதேவனை நோக்கி "தேவோத்தமா! உனக்குள்ள பெருமையை நாங்கள் அறிவோம்; எங்களை நீ என் அவமதிக்கின்றனை? நாங்கள் அனைவரும் குசநாபனுடைய பெண்கள். உனக்கு இந்த மதிகேடு என் உண்டாயிற்றோ? இதை எங்கள் தகப்பனாகிய குசநாபர் அறிவாராயின், உனக்குப் பெருங்கேடு வாரக்கூடுமே; (உலகத்தில் பெண்களைத் தகப்பன் கொடுப்ப

தன்றோ தருமம்.) அப்படியே எம் தகப்பனாராகிய குசநாபர் எங்களை எவனுக்கு விவாஹம் செய்து கொடுப்பாரோ, அவனையே கணவனாகப்பெற நாங்கள் உரியவர்களாயிருக்கின்றோம். எங்களுக்கு இப்போது தகப்பனே மேலான தெய்வம். அவரது அனுமதியின்றி எங்களை நீ விரும்புவது பிசகு" என்றனர்.

வாயுதேவனும் அதுகேட்டு வெகுண்டு அவர்களுடைய சரீரமெங்கும் புகுந்து உடலை முறித்துக் கூனிகளாகச் செய்துவிட்டனன். கூனிகளான அக்கன்னிகைகளும் தங்கள் தகப்பனிடம் சென்று சரீர விகாரத்தைப் பற்றி மிகவும் வெட்கிக் கண்ணுங் கண்ணீருமாகி நின்றனர்.

அப்பொழுது குசநாபனும் அப்பெண்கள் அவ்விதமாகச் சரீர விகாரமுற்று வருந்துவதைக்கண்டு மிகவும் மனங் கொதித்து, செய்தியை அவர்கள் வாயினால் நன்கறிந்து அவர்களின் குணத்திற்கு மிகவும் உவந்து வியந்து அவர்களுக்கு விடைகொடுத்தனுப்பிவிட்டு அப்பெண்மணிகளின் விவாஹத்தைக் குறித்து மந்திரிகளோடுகூடி ஆலோசனை செய்யத் தொடங்கினன்.

**முப்பத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.**

---

## முப்பத்துமூன்றாவது ஸர்க்கம்

## குசநாபபுத்திரிகளுக்கு விவாஹம் நடந்த வரலாற்றை விசுவாமித்திரர் இராமனுக்குக் கூறுதல்.

ராமா! அக்காலத்தில் சூளியென்னும்ஓர்பிரமசாரி தவஞ் செய்துகொண்டிருந்தனர். அப்பொழுது ஊர்மிளையென்னும் அப்ஸரஸ்திரீயின் பெண்ணாகிய ஸோமதை யென்னும்

ஒரு கந்தருவப்பெண் அவ்விடம் வந்து அம்மாமுனிக்குப் பணிவிடைசெய்து கொண்டிருந்தனள். அவள் ஒருநாள் அம்முனிவரை நோக்கி 'உமது தபோமகிமையைக்கொண்டு எனக்கு ஓர் புதல்வனைத் தரவேண்டும்' என்றனள். அவரும் அவளிடத்தில் அனுக்கிரகஞ் செய்து தன்மனத்தினின்றும் பிறந்த பிரஹ்மதத்தனென்னும் ஓர் உயர்ந்த புதல்வனை அவளுக்குத் தந்தனர். அந்தக் கந்தருவியும் க்ஷத்திரிய ஜாதியானதுபற்றி அவள் பிள்ளையாகிய அந்த பிரஹ்மதத்தனும் அரசனுயினன்.

குசநாபன் தனது பெண்களின் விவாகத்தைக் குறித்து ஆலோசனை செய்கிற அச்சமயத்தில் அந்த பிரஹ்மதத்தன் காம்பில்யா நகரத்தில் அரசு செய்துகொண்டிருந்தனன். குசநாபன் அவனுக்குத் தனது புதல்விகள் நூறு பெயரையும் கொடுக்க நிச்சயித்து அவனை வரவழைத்து அப்படியே விவாகஞ்செய்து கொடுத்தனன். அம் மாதர்களனைவரையும் பாணிக்ரஹணஞ் செய்துகொண்ட அம்மஹாநுபாவன் அவர்களைக் கையிற்பிடிக்கும்பொழுதே அக்கன்னிகைகள் நூறு பெயர்களும் கூன் நிமிர்ந்து அழகிய வடிவங்கொண்டு மிகவும் மகிழ்ந்தனர்.

முப்பத்துமூன்ருவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## முப்பத்துநான்காவது ஸர்க்கம்

## விசுவாமித்திரன் தான் குசநாபனுடைய பேரனென்று சொல்லி அக்கதையை முடித்தல்.

ப்ரஹ்மதத்தன் மணம் புரிந்து தன் பட்டணத்திற்குச் சென்றபின் குசநாபன் மகப்பேறு விரும்பிப் புத்ரகாமேஷ்டியென்னும் யாகத்தைச் செய்தனன். பின்பு சில

காலம் செல்ல, அக்குசநாபனுக்குக் காதியென்னும் ஓர் குமாரன் க்ருதாசி என்னும் அப்ஸரஸ் ஸ்திரியினிடத்தில் ஜனித்தனன். ராமா! அக்காதியே எனக்குத் தகப்பனர். குசவம்சத்திற் பிறந்தேனுகையால் என்னைக் கௌசிகனென்பார்கள்.

என்னுடன் பிறந்தவள் ஸத்யவதியென்னும் ஒருத்தியுண்டு. அவள் எனக்கு முன் பிறந்தவள். அவள் ரிசிகரென்னும் மாமுனியை மணம் புரிந்தனள். அவள் தனது மணுளனுக்குச் செய்த உயர்ந்த பணிவிடையின் மேன்மையால் சரீரத்துடனே ஸ்வர்க்கமேறச் சென்றனள். அன்றியும் அவள் இப்பூமியில் கௌசிகி என்னும் ஓர் மஹா நதியாகவும் தோன்றி ஸ்வர்க்கத்திலிருந்து இமயமலையினருகில் பெருகி வருகின்றனள். நானும் நேசத்தினுல் அம்மலைச்சாரலில்தானே எப்போதும் வசித்திருக்கின்றனன். நான் யாகநியமத்திலன்றி அக்கௌசிகி நதியை விட்டு விலகாசிரமத்திற்கு வந்து உனது பேருதவியினுல் ஸித்தியை யடைந்தவனுயினேன்.

ராமா! உன்மீதுள்ள அன்புமிகுதிபற்றி இங்ஙனம் எனது பிறப்பு முதலியவற்றைத் தெரிவித்தேன். நீ என்னைக் கேட்ட இத்தேசத்தினது வரலாற்றையும் மொழிந்தேன். அதிக நாழிகைபாய்விட்டது. இனிக் கண் வளருவாயாக. விழித்துக்கொண்டிருந்தோமாயின் இனி வழிநடக்கைக்கு அசக்தி நேரிடும்" என்றனர். பிறகு யாவரும் கண்ணயர்ந்தனர்.

முப்பத்துநான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

## முப்பத்தைந்தாவது ஸர்க்கம்

### விசுவாமித்திரர் இராமனுக்குக் கங்கையின் வரலாறு கூறுதல்.

எழுந்தபின் புறப்பட்டு வழியில் பலவிதமான வளங்களைப் பார்த்துக்கொண்டே சென்று கங்கையைக் கண்டனர். அக் கங்கையின் கரையில் விசுவாமித்திர மாமுனியை அமரச் செய்து சுற்றிலுஞ் சூழ்ந்து யாவரும் உட்கார்ந்தனர். அப்பொழுது ராமன் கங்கா நதி மூன்று பிரிவாகப் பிரிந்த வரலாற்றை வினவ விசுவாமித்திரர் சொல்லத் தொடங்கினர்;—

"ராமா! ஹிமாலயமென்னும் பர்வத ராஜனுக்கு மனோரமையென்பவள் மனைவி; அவளிடத்தில் இமவானுக்குக் கங்கையென்றும் உமையென்றும் இரண்டு பெண்கள் உண்டாயினர். தேவர்கள் அனைவரும் ஒரு காரியத்தின் பொருட்டு இமவானிடம் சென்று கங்கையைக் கொடுக்கும்படி வேண்டிக்கொண்டனர். இமவானும் இரப்போர் கேட்டதை மறுக்கவொண்ணாதென்று தனது மகளாகிய கங்கையைத் தேவர்களுக்கு ஈந்தனன். அவள் உலகங்களனைத்தையும் பரிசுத்தமாக்குந் தன்மையள். தான் நினைத்தபடி எவ்வழியிலும் ப்ரவாஹங் கொள்ள வல்லவள். அவளைத் தேவர்கள் மற்றைய உலகங்களுக்கெல்லாம் நன்மையைச் செய்யும்பொருட்டு இமவானிடமிருந்து அழைத்துக் கொண்டு, தமது இஷ்டம் நிறைவேறியதால் மனக்களிப்புடன் சென்றனர். அக் கங்கை முதலில் தேவர்களின் விருப்பப்படி ஆகாயமார்க்கத்தில் சென்றனள். பின்பு தேவலோகத்திற் சென்று தேவநதியென்னும் பெயர் பெற்றனள்.

அந்த இமவானுடைய மற்றொரு பெண்ணாகிய உமையவள் சிவனைக் குறித்துத் தவம் செய்து அப்பெருமானை மணம்புரிந்தனள்.

**முப்பத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.**

---

முப்பத்தாறாவது ஸர்க்கம்.

## பார்வதீ பரமேச்வரர்களின் புணர்ச்சியும், பார்வதி தேவர்களையும் பூமியையும் குறித்துச் சாபமிட்டதும்.

[ஸ்ரீராம விசுவாமித்திர சம்பாஷணை]

சிவபிரான் தபோநிஷ்டனாயிருந்தும் மனமயங்கி உமையவளோடு கலவிசெய்யத் தொடங்கித் தேவமானத்தினால் நூறாண்டுகள் கடந்து செல்ல, ஒருநாள் நான்முகன் முதலிய வானவர் அனைவரும் அச்சிவபிரானிடம் வந்து வணங்கி 'மஹாதேவனே! நீர் உலகங்களுக்கு நன்மையே செய்யும் தன்மையுடையவராகையால் வணங்கி வேண்டிக்கொள்கிற எங்கள் மீது நீர் அருள்புரியவேண்டும். உமது வீர்யத்தினால் பிறக்கும் புதல்வனை உலகங்கள் தரிக்கமாட்டா. ஆகையால் நீர் இச்செயலை விட்டுவிடவேண்டும். மூவுலகங்கட்கும் நன்மையுண்டாகும்பொருட்டு உமது வீரியத்தை உமது தேஜோமயமான சரீரத்திலேயே அடக்கிக்கொள்ளவேண்டும், வெளி விடவேணடாம். தயை புரிந்து இவ்வுலகங்களனைத்தையும் காப்பீராக' என்று இரந்தனர்.

சிவபெருமானும் அப்படியேயென்று இசைந்து, "தேவர்களே! நான் என்னுடைய வீரியத்தை உடலுக்குள்ளேயே அடக்கிக் கொள்ளுவேன், ஆனால் அதில் சிறிது பாகம்

இடம் பெயர்ந்து வெளிநோக்கிவிட்டது. அதை மாத்திரம் விட்டுவிடவேண்டியதாயிருக்கிறது. அது மிகவும் தேஜோமயமானதாகையால் ஒருவராலும் தாங்க முடியாததாயிற்றே; அதைத் தாங்கவல்லவன் யாவன்? அதை எனக்குச் சொல்லவேண்டும்'' என்ன, தேவர்கள் 'அதை இப்பூமி தரிக்க வல்லது' என்று விடைகூற, பின்பு உருத்திரனும் அந்த வீரியத்தைப் பூமியில் விட்டனன்.

அது மலைகளுங்காடுகளுமாகிய பூமியெங்கும் நிரம்பிவிட்டது. அப்போது தேவர்கள் அத்தேஜஸ்ஸு பூமியெங்கும் பரந்து வருவதைக் கண்டு அஞ்சி அக்னிதேவனை நோக்கி 'நீ வாயுவுடன் கூடி இந்தச் சிவ வீரியத்திற்குள் புகவேண்டும்' என்றுரைக்க, அக்னியும் அந்த வீரியத்தில் நுழைந்து வியாபித்திருக்கையில் அது வெள்ளிமலையாயிற்று. பின்பு காலவசத்தினால் அது நாணற்காடாக விளங்கிற்று. அதில் தான் ஆறுமுகன் பிறக்கப்போகின்றனன். பின்பு பார்வதி அவ்வானவர்களனைவரையும் நோக்கி, ''புதல்வனைப்பெற விரும்பி முயன்ற எனது விருப்பத்தைத் தடுத்தீர்களாகையால் உங்களுக்கும் உங்கள் மனைவியர்களிடத்தில் ஸந்தானம் உண்டாகாமற் போகக் கடவது. இன்றுமுதல் உங்கள் மனைவிகள் மலடிகளாகக்கடவர்'' என்று சாபம் கொடுத்தனள்.

இங்ஙனம் தேவர்களுக்குச் சாபம் கொடுத்ததுமல்லாமல் பூமியையும் நோக்கி 'நீ எனக்குப் பிள்ளையுண்டாவதை விரும்பாததனாலும் கோபத்தை விளைத்ததனாலும் அனேக ரூபமுடையவளாயும் பலர்க்கு மனைவியாயும் ஆகக்கடவை; பிள்ளையுண்டாவதனால் விளையும் மகிழ்ச்சியை நீயும் அடையாதிருக்கக் கடவை' என்று சபித்தனள்.

பிறகு சிவபெருமான் பார்வதியோடு மேற்றிசையை நோக்கிச் சென்று இமயமலையின் வடபக்கத்திலுள்ள ஓர் சிகரத்தில் அப்பார்வதியுடன் கூடித் தவஞ் செய்துகொண்டிருந்தனன்.

**முப்பத்தாருவது ஸர்க்கம் முற்றிற்று.**

---

## முப்பத்தேழாவது ஸர்க்கம்

## குமாரக்கடவுள் தோன்றியது.

[ஸ்ரீராம விசுவாமித்திர சம்பாஷணை]

சிவபிரான் இங்ஙனம் தவஞ் செய்யச் சென்றவாறே தேவர்களனைவரும் பிரமனிடம் வந்து தங்களுக்கு மிகவல்லவனை ஒரு சேனாதிபதியை அமைத்துத் தருமாறு வேண்ட, பிரமன் 'பார்வதிதேவி, தேவர்களுக்குத் தங்கள் மனைவிகளிடத்தில் மக்கள் உண்டாகாதென்று சாபங் கொடுத்தமையால், நீங்கள் உங்களுடைய மனைவிகளிடத்தில் மக்களைப் பெறமுடியாது. அத்தேவியினது சாபம் நீக்கமுடியாதது. ஆனால் இவ்வாகாச கங்கையினிடத்தில் அக்னிதேவன் ஒரு புதல்வனை உண்டாக்குவான். அவன் தேவர்களனைவருக்கும் சேனாதிபதியாகி நிற்பான்' என்றனன்.

அதுகேட்டுத் தேவர்களனைவரும் கைலாச பர்வதத்திற்குச்சென்று, அங்குச் சிவனது வீரியத்தினுட் புகுந்து வேறொரு சரீரங் கொண்டிருக்கிற அவ்வக்னிதேவனைப் பார்த்து 'ஓ அக்னியே! தேவர்களின் காரியத்தை நீ நிறைவேற்றவேண்டும். நீ மஹா தேஜஸ்வியாகையால் பர்வத புத்ரியான கங்காதேவியினிடத்தில் உன்னிடமிருக்கும் உருத்திர வீரியத்தை விட்டு மகா வீரனை ஒரு தேவ சேனாதிபதியை எமக்கு உண்டாக்கித் தருவாய்' என்றனர்.

அவனும், "அப்படியேயாகட்டு" மென்று சொல்லிக் கங்காதேவியிடம் வந்து 'தேவி! நீர் சிவனது வீரியத்தைப் பெற்றுக் கருவடையவேண்டும். இது தேவர்களுக்கு மிகவும் விருப்பமாக விருக்கின்றது' என்று கூற, அதைக்கேட்ட அக்கங்கையும் ஓர் அழகான பெண் வேடங் கொண்டு எதிரே வந்து நின்றனள். அக்னி தேவனும் அவளுடைய பேரழகைக் கண்டு மிகவும் அவா மிகுந்தவனாய்த் தன் அவயவங்களனைத்திலும் இருந்த சிவ வீரியத்தை அத்தேவியினது அங்கங்களிலெங்கும் பரவும்படி சொரிந்தனன்.

அவ்வீரியமானது கங்காதேவியினது அவயவங்களிலெங்கும் நிறைந்து நின்று எரிக்கவே, அவள் அதைப் பொறுக்க மாட்டாமல் மிகவும் மனம் தத்தளித்து அவ்வக்னிதேவனை நோக்கி 'நீ என்னிடத்தில் சொரிந்த சிவபிரானுடைய வீரியமானது எனது அவயவங்களெங்கும் பரந்து என்னை யெரிக்கின்றது. நான் அதைத் தரிக்கவல்லவளல்லேன்' என்ன; அவ்வக்னிதேவன் கங்காதேவியைப் பார்த்து 'இதோ இந்த இமய மலையின் அருகிலிருக்கின்ற இச்சிறிய மலையில் இந்தக் கர்ப்பத்தை விட்டுவிடு' என்றனன்.

அதுகேட்ட கங்காதேவியும் அந்தக் கர்ப்பத்தைத் தனது ஸர்வாவயவங்களினின்றும் வாங்கி அப்படியே அம் மலையில் விட்டுவிட்டனள். இங்ஙனம் உருக்கிக்கொட்டின உயர்ந்த பொற்குழம்புபோன்ற அச் சுக்ல சோணிதங்களே தங்கமாகவும் வெள்ளியாகவுந் தோன்றி விளங்கிநின்றன. அதி லுள்ள க்ஷார பாகமானது தாம்பிரமும் இரும்பும் ஆயிற்று. அதன் அழுக்குபாகமானது தகரமும் ஈயமும் ஆயிற்று.

இவ்வாறு கங்கையினிடமிருந்து வெளியான சிவபிரானது வீரியம் பூமியில் வீழ்ந்து பலவித உலோகங்களாகத் தோன்றி வளர்ந்தது. கங்காதேவி அந்தக் கர்ப்பத்தை அங்ஙனம் விட்டவுடனே அவ்வெள்ளிமலையில் முளைத்திருந்த நாணற் காடனைத்தும் அவ்வீரியத்தினுடைய சோதி வெள்ளத்திலாழ்ந்து ஸ்வர்ணமாய்விட்டது. கங்கை வீரியத்தை விட்டபின்பு குமரன் பிறந்தனன். உடனே இந்திரன் முதலிய தேவர்கள் யாவரும் கிருத்திகா தேவிகளைப் பார்த்து 'நீங்கள் பாலைக் கொடுத்து இக்குழந்தையை வளர்ப்பீர்களாக' என்று கட்டளையிட்டனர். அத்தேவிகளும் தேவர்களுக்கெதிரில் 'இக்குழந்தை நம்மனைவர்க்கும் புத்திரனாகட்டும்' என்று கொண்டு அச்சிறுவனுக்குப் பால் கொடுக்கத் தொடங்கினர்.

அக்குழந்தை ஒரு பகல் மாத்திரம் முலைப்பால் குடித்துப் பின்பு க்ரமமாக வளர்ந்துவந்து சிவனது வீரியத்தில் பிறந்தவனாதுபற்றி மிக்க பராக்ரமத்தினால் அசுரப் படைகளைக் கூட்டங் கூட்டமாக வென்றுவிட்டனன். பிறகு தேவர்களெல்லோரும் ஒன்றுகூடி அவ்வாறுமுகக் குமரனைத் தமது படைகளுக்கெல்லாம் அதிபதியாயிருக்கும்படி அபிஷேகஞ் செய்தனர்.

முப்பத்தேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## முப்பத்தெட்டாவது ஸர்க்கம்

### தேவகங்கை மானிடவுலகத்தில் வந்து சேர்ந்த வரலாற்றை இராமனுக்குத் தெரிவிக்க விரும்பிய முனிவர் ஸகர சக்ரவர்த்தியின் வரலாற்றைக் கூறப்புகுந்து அவ்வரசன் அசுவமேதயாகஞ் செய்தமை கூறுதல்.

[ஸ்ரீராம விசுவாமித்திர சம்பாஷணை]

இராகவனே! முன்பு அயோத்யா நகரில் ஸகரனென்னும் ஓர் அரசன் இருந்தனன். அம்மன்னவனுக்குக்

கேசினியென்றும் ஸுமதியென்றும் இரண்டு மனைவிகள் இருந்தனர். அவ்வரசன் அம்மடந்தையரிருவரோடும் மகப்பேறு பெறுதற்காக இமாலயத்தின் அருகிலிருக்கிற ப்ருகு ப்ரஸ்ரவண மென்கிற ஓர் சிறிய மலையையடைந்து அங்குத் தவஞ் செய்துகொண்டிருந்தனன். இங்ஙனம் நூறு வருஷங்கள் சென்றன. அங்கிருந்த ப்ருகு மஹரிஷி அத்தவத்தினால் மனங் கனிந்து அம்மன்னவனது எதிரில் தோன்றி 'உனக்கு வேண்டிய வரையில் அளவின்றி மக்கள் உண்டாவார்கள்; அவர்களால் உனது புகழ் உலகமெங்கும் பரவப்போகின்றது. உன் மனைவிகளில் ஒருத்தி வம்சவிருத்தியைச் செய்யவல்ல ஓர் புதல்வனைப் பெறுவள்' என்று வரமளித்தனர். பின்பு அவ்வரசனும் மனைவிகளோடுகூட அம்மாமுனியை வலம் வந்து வணங்கித் தனது நகரத்தை யடைந்தான்.

பின்பு சில நாள் செல்ல, முதற் பத்தினியாகிய கேசினியென்பவள் ஸகரனிடத்தினின்று அஸமஞ்சனென்னும் ஓர் பிள்ளையைப் பெற்றனள். இரண்டாம் பத்தினியாகிய ஸுமதி யானவள் சுரைக்காயைப் போல் ஓர் கர்ப்பப் பிண்டத்தைப் பெற்றனள். பின்பு அப்பிண்டம் வெடித்து உடைய, அதினின்று அறுபதினாயிரம் பிள்ளைகள் வெளியாயினர். அரசனாணைப்படி செவிலித் தாய்கள் அப்பிள்ளைகளை நெய்க்குடத்திலிட்டு வளர்த்து வந்தனர். அவ்வாறே பல ஆண்டுகள் சென்றபின்பு அவ்வறுபதினாயிரம் பிள்ளைகளும் யௌவனம் பெற்று அழகு பொருந்தி நன்கு விளங்கினர்.

மூத்த மனைவியின் குமாரனாகிய அஸமஞ்சனென்பவன் தினந்தோறும் ஊரிலுள்ள பிள்ளைகளையெல்லாங் கூட்டிச் சென்று ஸரயூ நதியின் வெள்ளத்தில் வீழ்த்தி

அப்பிள்ளைகள் நீரில் மூழ்கிப் பரிதபிப்பது கண்டு ஆனந்தித்துக் கொண்டிருந்தனன். அக்கொடிய புதல்வனை அவ்வரசன் தன் பட்டணத்திலிருக்கவொட்டாமல் துரத்தி விட்டனன். அவ்வஸமஞ்சனது குமாரனை அம்சுமானென்பவன் உலகமனைத்தும் விரும்பும்படி நற்செயல் செய்துவந்தனன். இது இவ்வாருக, அந்த ஸகர மஹாராஜன் யாகஞ் செய்ய விருப்பங் கொண்டு அதை ஆரம்பித்தனன்.

முப்பத்தெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

முப்பத்தோன்பதாவது ஸர்க்கம்

## ஸகரமன்னவன் யாகஞ் செய்தலும், யாகக்குதிரை பூமிவலம் வருகையில் காணுமற் போதலும், அதைத் தேடப் புறப்பட்ட அறுபதினுயிரம் ஸகர புத்திரர்கள் பூமியைக் கோத்துதலும், அது பற்றித் தேவர்கள் பிரமனிடம் முறையிடுதலும்.

[ஸ்ரீராம விசுவாமித்திர சம்பாஷணை]

தசரத குமாரா! ஸகர சக்ரவர்த்தியின் வரலாற்றை விரிவாகச் சொல்லுகிறேன் கேள்; இமய மலைக்கும் விந்திய மலைக்குமிடையான புண்ய பூமியில் அந்த சக்ரவர்த்தி யாகம் நடத்தினர். அந்த யாகத்தில் பூப்பிரதக்ஷிணஞ் செய்யத் தொடங்கிய குதிரையைக் காத்துக்கொண்டு அம்சுமானென்பவன் கையும் வில்லுமாய்ப் பின் செல்ல, இந்திரன் ராக்ஷஸர்களுக்கு உரிய மாயையைக் கைக்கொண்டு வேறுரு சரீரம் பூண்டு அந்த யாகக் குதிரையைப் பிறரறியாவண்ணம் கொண்டுபோய் விட்டனன். அப்பொழுது புரோஹிதர்கள் அனைவரும் யஜமானனுகிய ஸகரமஹாராஜனைப் பார்த்து

'உனது யாகத்தைக் கெடுக்கும்பொருட்டு யாகக் குதிரையை எவனோ அபஹரித்துக்கொண்டுபோய்விட்டனன் என்று தெரிகிறது. அவனைக் கொன்று குதிரையைத் திருப்பிக் கொண்டுவரச் செய்தாலன்றி யாகம் நிறைவேறாது; இனி அக்காரியத்தையே நோக்கவேண்டும்' என்றனர். அவ்வரசனும் அதுகேட்டு அந்த ஸபையில் தனது புதல்வர்கள் அறுபதினாயிரம் பேரையும் பார்த்துப் 'புத்திரர்களே! கடல் சூழ்ந்த இப்பூமியெல்லாந் திரிந்து நமது யாகக் குதிரையைத் தேடிப் பாருங்கள். பூமியோ மிகவும் பரந்து கிடக்கின்றது. ஆகையால் நீங்கள் ஒவ்வொருவர் ஒவ்வொரு யோசனை தூரம் விதம் இப்பூமியெங்குந் தேடுங்கள்; குதிரை எங்கும் அகப்படாவிடில் பின் திரும்பாமலேசென்று அக்குதிரை அகப்படும் வரையில் பூமியைக் கொத்திப் பாருங்கள். நான் யாக தீக்ஷையில் முயன்றிருக்கிறேனாகையால் நீங்களும் குதிரையைப் பார்க்கும் வரையில் இவ்விடத்திலேயே இருக்கக் கடவேன்' என்றனன்.

உடனே அப்புதல்வர்கள் அனைவரும் தகப்பனது கட்டளைப்படி பூமியெங்குந் தேடிக் கிடைக்காமையினால் ஒவ்வொருவரும் ஒவ்வொரு யோசனை தூரம் அகல நீளமுள்ள பூமியாகப் பங்கிட்டுக்கொண்டு, வஜ்ராயுதத்தை நிகர்த்திருக்கின்ற தமது நகங்களால் பூமியெங்கும் கொத்தியெறியவே, பாதாளவாஸிகளான ஸர்ப்பங்களும் அசுரர்களும் ராக்ஷஸர்களும் மற்றுமுள்ள ஜந்துக்களும் துன்புறுத்தப்பட்டுக் கூச்சலிட அதனால் பொறுக்கமுடியாத ஒரு பேரோசை உண்டாயிற்று. இங்ஙனமே அவ்வீரர்கள் அறுபதினாயிரம் யோசனை தூரமுள்ள பூமியைப் பாதாளம் வெளித்தோன்றும்படி தோண்டிவிட்டனர்.

இவ்வாறு தோண்டவே தேவர்கள் முதலிய அனைவ ரும் மனந் தத்தளித்துப் பிரமனிடஞ் சென்று வணங்கி நின்று "மஹானுபாவரே! ஸகர சக்ரவர்த்தியின் புதல்வர் கள் பூமியனைத்துந் தோண்டிப் பாழாக்குகின்றனர். பாதாள வாஸிகள் துன்பத்திற்குள்ளாக்கப் படுவதோடு 'இவனே எமது யாகத்தைக் கெடுத்தவன்; இவனே எமது குதிரை யைக் கொண்டுபோனவன்' என்று சொல்லி அந்தோ! பாதாளத்திலிருந்துவெளிப்படும் எல்லோரையுங் கொன்று விடுகின்றனர்" என்று மொழிந்தனர்.

**முப்பத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.**

---

## நாற்பதாவது ஸர்க்கம்

## ஸகர புத்திரர்கள் அறுபதினாயிரவரும் கபிலமுனியிடத்து அபசாரப்பட்டு நீறாகி யொழிதல்.

[ஸ்ரீராம விசுவாமித்திர சம்பாஷணை]

அதுகேட்டு, பிரமதேவன் தேவர்களைநோக்கி, 'இந் தரணி முழுவதும் ஸ்ரீமஹாவிஷ்ணுவுக்கு அதீனமாயிருக் கின்றது. அம்மஹாநுபாவன் கபிலாவதாரஞ்செய்து இப் பூமிசக்கரத்தைத் தரித்துக்கொண்டிருக்கின்றனன். ஆகை யால் ஸகர மஹாராஜனுடைய குமாரர்கள் பூமியைக் கொத் திக்கொண்டு உள்ளே புகுவார்களாயின் அக் கபில மஹா தேவனுடைய கோபாக்கினியால் கொளுத்தப்பட்டு நீறாகப் போகின்றனர். இவர்கள் வெகு காலம் பிழைத்திராமல் சீக்கிரத்திலே மாளப்போகின்றனரென்பது முன்னமே நிச் சயிக்கப்பட்டிருக்கின்றது' என்று மொழிந்தனன்.

தேவர்கள் மனந்தேறிச்சென்றனர். அந்த ஸகர புத்திரர் கள் பூமியைப் பிளந்து முழுதுஞ் சுற்றித்திரிந்து தேடியும்

குதிரையைக் காணாமல் மீண்டு தகப்பனிடஞ்சென்று 'நாங்கள் பூமியெல்லாம் சுற்றித்திரிந்தும் பிளந்து தேடியும் அக்குதிரையாயினும் அதைத் திருடிக்கொண்டு போனவனாயினும் எங்களுக்குப் புலப்படவில்லை. இன்னமும் என்ன செய்யவேண்டும்? அதற்குத் தக்க உபாயத்தை ஆலோசித்துச் சொல்லவேண்டும்' என்றனர். அதற்கு ஸகரசக்ரவர்த்தி மிகவுங் கோபித்துக்கொண்டு 'மீளவும் போய்ப் பூமியைப் பிளந்து வெட்டுங்கள்; குதிரையைக்கொண்டு போனவனைக் கண்டுபிடித்துக் காரியம்முடித்துக்கொண்டே நீங்கள் திரும்பி வரவேண்டும்' என்று கட்டளை யிட்டனன்.

உடனே அவர்கள் பாதாளத்தை நோக்கி வேகமாகச் சென்று மீளவும் பூமியைத் தோண்டிக்கொண்டிருக்கும்பொழுது அங்குப் பூமியைத் தாங்கிக்கொண்டிருக்கிற விரூபாக்ஷமென்னும் திக்கஜத்தைக்கண்டு பிரதக்ஷிணஞ்செய்து மேன்மைப்படுத்திப் பாதாள லோகத்தைப் பிளந்து கொண்டே சென்றனர்.

அங்ஙனம் கிழக்குத் திசையைப் பிளந்த பின்பு தெற்குத் திசையைப் பிளக்கச் சென்றனர். அத்திசையிலும் மஹாபத்மமென்னும் யானையைக் கண்டு வலஞ்செய்துவிட்டு மேற்குத் திசையைப் பிளந்தனர். அங்கும் ஸௌமநஸமென்னும் யானையைக்கண்டு வலம்வந்து க்ஷேமம் விசாரித்து விடைபெற்றுக்கொண்டு பூமியைத் தோண்டிக்கொண்டே வடதிசைக்குச்சென்று அங்கும் பத்ரமென்னும் யானையை வலம் வந்து மேலும் பூமியைப் பிளந்துகொண்டே வடகிழக்குத் திக்கைநோக்கிப் பயங்கரமான வேகத்துடன் பூமியைப் பிளந்தெறிந்துகொண்டே போகையில் அங்கு அருகியாகக் கபிலாவதாரஞ் செய்து விளங்கிநிற்கிற வாசுதேவனையும்,

அத்தேவனருகில் புற்களை மேய்ந்துகொண்டிருக்கிற தங்கள் குதிரையையும் கண்டு அவ் வாசுதேவனையே குதிரை திருடினவனாக நினைத்துக் கோபத்தினால் கண்கள் சிவந்து மண்வெட்டிகளையும் கலப்பைகளையும் கற்களையும் மரங்களையும் எடுத்துக்கொண்டு அவரை அடிக்க எதிர்த்தோடிவந்து 'எங்கள் யாகக்குதிரையை நீயன்றோ களவாடிக்கொண்டு போனவன்; அடா! அறிவுகெட்டவனே! இதோ ஸகர குமாரர்களாகிய நாங்கள் இங்கு வந்திருப்பதாகத் தெரிந்துகொள்வாயாக' என்றார்கள்.

அச்சொல்லைக்கேட்ட கபிலர் மிகவும் சீறிச்சிவந்து ஒரு ஹுங்காரம் செய்ய அந்த ஸகர புத்திரர்களனைவரும் அக் கபிலரது கோபாக்னியினால் சாம்பற் குவியலாகியொழிந்தனர்.

**நாற்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.**

---

## நாற்பத்தோராவது ஸர்க்கம்

### ஸகரபுத்திரர்கள் நீறாகி யொழிந்ததை யறிந்த அம்சுமான் கருடனது சொற்படி கங்கையைக் கொணரவேணு மென்பதை ஸகரமன்னவனுக்குக் கூறுதலும், அம்மன்னவன் சுவர்க்கமடைதலும்.

[ஸ்ரீராம விசுவாமித்திர ஸம்பாஷணை]

இராமா!, ஸகரமன்னவன் தனது புதல்வர்கள் வேள்விக் குதிரையைத் தேடச்சென்று நெடுங்காலமானதை நினைத்துத் தன் பேரனை அம்சுமானை நோக்கி; "குழந்தாய்! நீ மிகவும் வல்லவனாயிருப்பதால் உடனே புறப்பட்டுச் சென்று, உனது தந்தைகள் போன வழியையும், குதிரையைத் திருடினவன் போனவழியையும் கண்டறியக்கடவை; நிலத்துக்குள்ளிருக்கும் பெரிய கொடிய ஜந்துக்களைக் கொல்வதற்குரிய வாளும்

வில்லுங்கொண்டு புறப்படுவாயாக” என்று கட்டளையிட்டனன்.

பிறகு அம்சுமானும் அப்படியே செய்ய முயன்று ஆயுதபாணியாய் வேகமாகப் புறப்பட்டனன். தன் சிறிய தந்தைகளால் பூமிக்குள் தோண்டப்பட்ட வழியாகச்சென்று ஆங்காங்குள்ள திக்கஜங்களை வணங்கி விசாரித்துக்கொண்டே போனவளவில் ஸகரகுமாரர்கள் நீறாய்க் குவிந்திருக்குமிடத்தையடைந்து அவர்களனைவரும் செத்துச் சாம்பலாய்க் கிடப்பது கண்டு அழுது புலம்பி அங்கு அருகில் மேய்ந்து கொண்டிருக்கிற யாகக்குதிரையையும் கண்டு ஒருவாறு உள்ளந்தேறினன்.

பின் சிறியதந்தைகளாகிய அவர்களுக்குத் தர்ப்பணஞ் செய்யவிரும்பித் தண்ணீர் வேண்டித் தேடி நீருள்ள இடம் ஒன்றும் காணப்பெறாது அங்குத் தற்செயலாகத் தன் சிறிய தந்தைகளுக்கு மாமனாகிய கருடனைக் கண்டனன்.

கருடனும் அம்சுமானைப்பார்த்துப் ‘புருஷசிம்மமே! உன் சிறிய தந்தைகளுக்கு நேரிட்ட இவ்வதமானது உலகங்களுக்கெல்லாம் நன்மையை விளைவிக்கத்தக்கதாக விருக்கின்றது ஆகையால் நீ இதைப்பற்றித் தளர்ச்சியடையவேண்டியதில்லை மஹாதபாவரான கபிலமாமுனிவரால் இம்மஹாபலிஷ்டர்கள் கொளுத்தப்பட்டனர். அக்கபிலர் பிராமணராகையால் அவரால் கொளுத்தப்பட்ட இவர்களுக்கு உலகவழக்கத்தின்படி தண்ணீர்கொண்டு தர்ப்பணஞ் செய்வது விருதும்; ஆகவே அங்ஙனஞ் செய்ய நீ முயலவேண்டாம். இமவானுடைய மூத்த புதல்வியாகிய கங்கை யென்னும் நதியிலிருந்து நீர் கொண்டுவந்து இவர்கட்குத் தர்ப்பணஞ் செய்வாயாக. தர்ப்பணஞ்செய்வது மாத்திரமன்றி, அதன் நீரைக்கொண்டு

இந்தச் சாம்பலை நனைக்கவும்வேண்டும். ஸகரகுமாரர்கள் அறு பதினாயிரம்பேரும் ஸ்வர்க்கலோகம் அடைய இதுவே உபாயம்; அம்சுமானே! நீ மிகுந்த பாக்யமுடையவனாகையால் குதிரையைப் பெற்றனை. அதைக்கொண்டு ஸகரனிடஞ் செல்வாயாக. நீ மஹா வீரனாயிருப்பதுபற்றி நீயே உன் பாட்டன் யாகத்தை நிறைவேற்ற வல்லவன்' என்று மொழிந்து சென்றனன்.

பிறகு அம்சுமான் குதிரையைக் கைக்கொண்டு தனது நாடடைந்து யாகத்தில் தீக்ஷைபெற்றிருக்கிற ஸகர மஹா ராஜனைக் கிட்டிக் கருடன் சொல்லியபடி தன் சிறிய தந்தைகளின் செயலையும் அவர்களுக்கு நேர்ந்த முடிவையும் தெரியச் சொல்லினன். ஸகர சக்ரவர்த்தியும் அம்சுமான் மொழிந்த அப் பயங்கரமான வார்த்தையைக்கேட்டு நடுநடுங்கிப் பின்பு கிரமமாகச் சாஸ்திரங்களிற் சொல்லியபடி யாகத்தை நிறைவேற்றித் தன்பட்டணத்தைச் சேர்ந்தனன். அவ்வரசனுக்குக் கங்காநதியைக்கொண்டுவர யாதொரு உபாயமும் தோன்றாமல் போய்விட்டது. இப்படி ஸகரமஹாராஜன் வெகுகாலம் வரையில் ஆலோசித்தும் அவ்விஷயத்தில் யாதொரு உபாயமும் தோன்றாமல் முப்பதினாயிரம் வருஷங்கள் ராஜ்யபரிபாலனஞ் செய்து சுவர்க்கஞ் சென்றனன்.

**நாற்பத்தோராவது ஸர்க்கம் முற்றிற்று.**

---

## நாற்பத்திரண்டாவது ஸர்க்கம்

அம்சுமானுடைய பேரனாகிய பகீரதன் கடுந்தவம்புரிந்ததன் பயனாகக் கங்கையைப் பூலோகத்தில் பெற நான்முகனது அனுக்கிரகம் பெறுதல். [ராம விசுவாமித்திர சம்பாஷணை]

பின்பு மந்திரிஜனங்கள் அம்சுமானை அரசனாக்க விரும்பினர். அவ்வம்சுமானுக்குத் திலீபனென்ற குமாரன் பிறந்

தனன். அவ்வம்சுமான் திலீபனிடத்தில் ராஜ்யத்தை ஒப்புவித்துவிட்டுக் கங்காநதியைக் கொண்டுவந்து, சாம்பலாய்க் கிடக்கும் தன் சிறிய தகப்பனர்களை நற்கதியடையச் செய்ய உத்தேசங்கொண்டு இமயமலை யுச்சியிலுள்ள ஒரு தபோவனத்திற்குச் சென்று முப்பத்திரண்டாயிரமாண்டுகள் தவம்புரிந்திருந்துங் கங்கையைப் பெருமலை ஸ்வர்க்கத்தை அடைந்தனன்.

பின்பு திலீபமன்னவனும் தனது மூதாதையர் அபமிருத்யுவாக மாண்டுபோனதைக் கேட்டுத் தன் தகப்பனுகிய அம்சுமான் கடுந்தவஞ் செய்தும் பயன்பெருத தறிந்து மனவருத்தங்கொண்டு 'கங்கையைக்கொண்டு வருவது எப்படி?' என்று ஓயாமல் மனக்கவலையுற்றிருந்தனன். நாளடைவில் அவனுக்குப் பகீரதனென்னும் குமாரன் பிறந்தனன். திலீபனும் ஸகரபுத்திரர்களை உய்விக்கும் உபாயம் ஒன்றும் தோன்ருமல் வருத்தத்தினுல் நோய்வாய்ப்பட்டு தன் புத்திரனுகிய பகீரதனுக்கு ராஜ்யாபிஷேகஞ் செய்வித்துத் தேவலோகஞ் சென்றனன்.

அப்பகீரதமன்னவன் தனக்கு மகப்பேறில்லாதிருந்தது பற்றித் தன் ராஜ்யத்தை மந்திரிகளிடம் ஒப்புவித்துக் கங்கையைப் பூமிக்குக் கொண்டுவருவதில் மிக்க விருப்பங்கொண்டு இமாலயச்சாரலில் கோகர்ணமென்னும் ஓர் சிறிய பர்வதத்திற்குச் சென்று பிரமனை நோக்கிக் கைகளிரண்டையும் உயரக்கூப்பிக்கொண்டு ஐம்புலன்களையும் வென்று பஞ்சாக்னி மத்யத்தில் நின்று கொடுந்தவம் புரிந்தனன்.

இவ்வாறு பல ஆயிரமாண்டுகள் செல்ல, பிரமதேவன் அக் கடுந் தவத்திற்கு உவந்து அங்கு வந்து நின்று வரம் வேண்டுமாறு சொல்ல, பகீரத மன்னவன் கைகூப்பி

வணங்கி நின்று அத் தேவனைப் பார்த்து "மஹாநுபாவரே! ஸகர குமாரர்களனைவரும் என்னால் கங்கா நதியின் ஜலப் பிரவாகத்தில் தர்ப்பணம் பெறவும், அவர்களது சாம்பற் குவியலானது கங்கா ஜலத்தினால் நனையவும், இக்ஷ்வாகு வம்சத்திற் பிறந்த எனக்குச் சந்தானம் உண்டாகும்படியும் அனுக்கிரகம் செய்தருளவேண்டும்.' என்றனன்.

அது கேட்டு நான்முகக் கடவுள் 'பகீரதனே! நீ விரும்பினவை அப்படியே நடந்தேறும். இதோ இமயமலையின் அருகில் தோன்றுகிற இக் கங்கையைத் தரிக்கவல்லவன் உருத்திரன் ஒருவனே யாகையால் அம் மஹாதேவனை வேண்டிக்கொள்வாயாக. கங்கை ஆகாயத்தினின்றும் கீழே வருமாயின் அவ்வேகத்தை இப் பூமியால் பொறுக்க முடியாது. அக் கங்கையைத் தரிக்கவல்லவன் சிவனொருவனே' யென்று சொல்லி, கங்கையை நோக்கி 'இம் மன்னவன் விரும்பியபடி அநுக்கிரஹம்செய்வாயாக' என்று மொழிந்து தேவலோகஞ் சென்றனன்.

**நாற்பத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.**

---

நாற்பத்துமூன்றாவது ஸர்க்கம்.

## பகீரதப் பிரயத்தனம் ஸபலமாகி தேவகங்கை நிலவுலகம் வழியாகப் பாதாளம் சென்று சேர்ந்து ஸகர புத்திரர்களை உய்வித்தது.

[ராம விசுவாமித்திர சம்பாஷணை]

பிறகு பகீரத வேந்தன் பூமியில் தன்காற் பெருவிரலை ஊன்றிக்கொண்டு அசையாமல் நின்று ஒரு வருஷ காலம் சிவனை நோக்கித் தவம் புரிந்தனன். பின்பு பசுபதி உமையுடன் கூடி அவனுக்குக் காட்சி யளித்து 'அன்ப! கங்கா

நதியை என் சிரத்தினால் தரித்து உன் மனோரதத்தை நிறைவேற்றுகிறேன்' என்றனன்.

பிறகு கங்காநதி பகீரதன் கோரியபடி தன் உருவத்தைப் பருக்கச்செய்துகொண்டு பயங்கரமான வேகத்துடன் ஆகாயத்தினின்றும் அரன் சிரம் நோக்கிவர அக்கங்கா தேவியின் செருக்கைக் கண்டறிந்த சிவபெருமான் மிகுந்த கோபங்கொண்டு அக் கங்கையை வெளியில் புறப்படவொட்டாமல் தன்னிடத்திலேயே மறைந்திருக்கும்படி அடக்க வேண்டுமென்று மனதில் எண்ணி அவ்வாறே செய்தனன்.

அப் புண்ணிய நதி சிவபெருமானுடைய ஜடாமண்டலங்கள் நிரம்பிய சிரத்தில் மறைந்து கஷ்டப்பட்டு எவ்வித முயற்சி செய்தும் அச்சிரத்தினின்றும் பூமியைச் சேர்தற்குச் சிறிதுஞ் சக்தியில்லாமற் கிடந்தனள்.

இப்படி கங்காதேவியானவள் வெகு வருஷங்கள் அங்கேயே உழன்றுகொண்டிருக்க பகீரதன் கங்கையைக் காணாமல் மீளவும் பெருந்தவம் புரிந்தான். அதற்குச் சிவன் அவன் முன் தோன்றி அவன் உள்ளம் களிக்கும்படி, பிரமதேவனால் நிருமிக்கப்பட்ட பிந்துஸரஸென்னும் பெயர்பெற்ற ஒரு ஸரஸில் அக்கங்கையை விழ விட்டனர். அதனால் ஏழுப்ரவாஹங்கள் உண்டாயின. ஹ்லாதினி, பாவநி, நளினி யென்னும் மூன்று கங்காப்ரவாஹங்கள் கிழக்கு முகமாய்ப் பெருகிச் சென்றன. ஸுசக்ஷுஸ், ஸீதை, ஸிந்து என்னும் மூன்று நதிகள் மேற்கு முகமாய்ப் பெருகிச் சென்றன. ஏழாவதாகிய கங்கா நதிப்ரவாஹ மொன்று பகீரத மன்னவனைப் பின் சென்றது.

அப்போது அப்பகீரத மன்னவன் திவ்வியமான ரதத்தின் மீதில் ஏறி முன்னேசெல்ல கங்கை அவனைப் பின்

தொடர்ந்து போயினள். அங்கங்கையின் ஜலப்ரவாஹமானது பூமி முழுவதும் பரவிற்று. அப்பொழுது ஜலப்ரவாஹத்துடன் விழுந்துகொண்டிருக்கின்ற மத்ஸ்யங்களாலும், ஆமைகளாலும், முதலைகளாலும், மற்றுமுள்ள ஜல ஜந்துக்களாலும் பூமியானது நிறையப்பெற்றது.

பூமியில் கங்கை விழுவது மிகவுமற்புதமாயிருந்தமையால் அதைப் பார்க்க விருப்பங்கொண்டு தேவர்களனைவரும் கூட்டங்கூடி வந்து அவ்விடம் சேர்ந்தனர். அக்கங்கா நதியானது, பகீரதன் எவ்வெவ்விடத்திற்குச் செல்லுகின்றானோ, அவ்வவ்விடமெல்லாம் தானுஞ் செல்ல, அவ்வழியில் ஜஹ்நு வென்னும் மஹரிஷி யாகஞ் செய்துகொண்டிருக்கிற யாகபூமி நேரிட, அதைத் தன் ப்ரவாஹத்தினால் மூழ்கச் செய்தனள். யாகஞ் செய்கின்ற அம்மஹரிஷியும் அதன் செருக்கை யறிந்து, யாவரும் வியக்கத்தக்கவாறு அக்கங்கையின் பெரு வெள்ளத்தையெல்லாம் குடித்து விட்டனர்.

பின்பு தேவர்களும், ரிஷிகளும், கந்தருவர்களும் மிக்க வியப்படைந்து அந்த ஜஹ்நுமஹரிஷியினிடம் வந்து பூஜித்துக் கங்கையை அம்மஹாநுபாவருக்குப் பெண்ணாக ஏற்படுத்த, அம்மஹரிஷி உகந்து மீளவும் வெளியிட்டனர். ஆனதுபற்றியே கங்கையானது ஜஹ்நுமஹரிஷியின் பெண்ணாகி 'ஜாஹ்நவீ' என்று சொல்லப்பட்டு வருகின்றது.

பிறகு கங்கை பகீரதனுடைய ரதம் போகும் வழியாகப்போய் அவனுடைய காரியஸித்திக்காகக் கடலில் விழுந்து பாதாளத்திற்குச் சென்று சாம்பலை நனைக்க, ஸகர குமாரர்களும் பாவமெல்லாந் தொலைந்து சுவர்க்கத்தை யடைந்தனர்.

நாற்பத்துமூன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நாற்பத்துநான்காவது ஸர்க்கம்.

### பகீரதமன்னவன் பிரமனது கட்டளைப்படி கங்கையில் தர்ப்பணம் செய்துவிட்டு நகரம் மீண்டது.

[ராம விசுவாமித்திர சம்பாஷணை]

அப்பொழுது பிரமதேவன் வந்து பகீரத மன்னவனை நோக்கி 'ஆண் சிங்கமே! ஸகரமஹாராஜனது குமாரர்கள் அறுபதினாயிரம் பெயர்களும் உன்னால் ஸ்வர்க்க மடைந்தனர். கடல் நீர் எவ்வளவு காலம் இவ்வுலகத்தில் இருக்குமோ, அவ்வளவு காலம் வரையில் ஸகர குமாரர்களனைவரும் தேவர்களைப்போல் வானுலகில் வாழ்ந்திருப்பார்கள்; இக்கங்கையும் உனக்கு மூத்த பெண்ணென்று [பாகீரதி யென்று] எங்கும் கியாதி பெற்று விளங்கப் போகின்றது. அப்பா பகீரதனே! உனக்குப் பூர்விகனாகிய ஸகரனும் அம்சுமானும் உன் தந்தையாகிய திலீபனும் கங்கா நதியைக் கொண்டுவர வேண்டுமென்று விரும்பியிருந்தனரேயல்லாது கொண்டு வந்தார்களல்லர்; நீயொருவனே பெருமுயற்சியினால் அரியபெரிய இக்காரியத்தைச் செய்து முடித்து நீடூழிகாலம் உலகம் கொண்டாடும்படி சிறந்த கீர்த்தியைப் பெற்றனை; இனி நீ இதில் தர்ப்பணஞ் செய்துமுடித்து உன் பட்டணம் சேர்வாயாக' என்று சொல்லித் தான் பிரமலோகம் போய்ச் சேர்ந்தனன்—என்று கங்கையின் வரலாற்றை விசுவாமித்திர மாமுனிவர் இங்ஙனம் தாசரதிகளுக்கு விரிவாக எடுத்துரைத்தனர்.

நாற்பத்துநான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

## நாற்பத்தைந்தாவது ஸர்க்கம்

### இராமனுக்கு விசாலாநகரத்தைப் பற்றிய வரலாறு கூறுகின்ற விசுவாமித்திரர், முன்பு தேவாசுரர்கள் பாற்கடல் கடைந்த கதையைக் கூறுதல்.

பிறகு விசுவாமித்திரர் முதலிய முனிவர்கள் யாவரும் ஓடத்தினால் கங்கையைத் தாண்டிச்சென்று மிகவும் அழகாக விளங்கும் விசாலையென்னும் நகரத்தைச் சேர்ந்தனர். இராமனது கோரிக்கைக் கிணங்கி மாமுனிவர் விசாலா நகரத்தைப் பற்றிய வரலாற்றையெல்லாஞ் சொல்லத் தொடங்கினர்.

“ராமா! முன்பு கிருதயுகத்தில் திதியின் புத்திரர்கள் மஹா பலிஷ்டர்களாக மாத்திரமிருந்தனர்; அதிதியின் புத்திரர்கள் மஹாபலிஷ்டர்களும் மிக்க தார்மிகர்களுமாயிருந்தனர். அந்த இருவகுப்பினரும், ‘நாம் என்ன செய்தால் சாவும் கிழத்தனமும் நோயுமின்றி இருப்போம்’ என்று ஆலோசித்து ‘நாம் பாற்கடலைக்கடைந்து அம்ருதத்தைப் பெறவேண்டும்’ என்று நிச்சயித்தனர். பிறகு வாஸுகி நாகத்தைக் கயிறாகவும், மந்தரபர்வதத்தை மத்தாகவும் ஏற்படுத்திக்கொண்டு அவ்விருவகுப்பினரும் பாற்கடலைக் கடையத் தொடங்கினர்.

அப்படி ஆயிரமாண்டுகள் சென்ற பின்பு வாஸுகியின் சிரங்களெல்லாம் பயங்கரமாக விஷத்தை வெளியில் கக்க, மத்தாகிய மந்தர பர்வதத்தினுடைய கற்களெல்லாம் வெடித்துப்போயின. இவ்வாறிருக்கையில் நெருப்புப் போல் எரிந்துகொண்டிருக்கிற ஹாலாஹலமென்னும் மஹாவிஷம் மேலே கிளம்பிற்று. அதனால் தேவாஸுர மனுஷ்யர்கள்

அனைவருமடங்கிய உலகங்களெல்லாம் கொளுத்தப்பட்டன. பின்பு தேவர்கள் பசுபதியைச் சரணமடைந்து 'காப்பாற்ற வேண்டும், காப்பாற்றவேண்டும்' என்று துதி செய்தார்கள்.

அப்பொழுது அங்கு ஸர்வேச்வரனாகிய ஸ்ரீமஹாவிஷ்ணு எழுந்தருளிப் புன்சிரிப்புடன் சிவனைக்கண்டு 'தேவாதி பதியே! நீ தேவர்களுக்கெல்லாம் முதலிற் பிறந்தவன். ஆனதுபற்றிப் பாற்கடலைக் கடைகையில், அதில் முதலில் உண்டானது உன்னுடையதன்றோ. ஆகையால் இவ் விஷத்தை அக்ரபூஜையாக நினைத்து அங்கீகரிப்பாயாக' என்று மொழிந்து மறைந்தனன். பின்பு சிவபிரானும் தேவர்களுக்கு உண்டான பயத்தைக்கண்டும் ஸ்ரீமஹாவிஷ்ணு நியமனத்தைக்கேட்டும் அந்த ஆலாகல விஷத்தை அம்ருதம் போல் உட்கொண்டனன்.

பின்பு தேவதைகளும் அசுரர்களும் கடலை மீளவும் கடைகையில் மத்தாகிய மந்தர பர்வதம் பாதாளத்தில் மூழ்கி விட்டது. அப்போது அனைவரும் ஸ்ரீ மஹா விஷ்ணுவைத் துதித்துப் பிரார்த்திக்க, அவரும் உடனே கூர்ம உருவம்கொண்டு தன்முதுகினால் அப்பர்வதத்தைத் தாங்கிக் கொண்டிருந்தது மன்றியில் அப்பர்வதத்தின் நுனியைக் கையால் அழுக்கிக்கொண்டு தேவதைகளின் நடுவில் நின்று தானுங்கடைந்தனர். இங்ஙனம் பல ஆண்டுகள் சென்ற பின்பு தண்டத்தையும் கமண்டலுவையும் தரித்துக்கொண்டு தந்வந்தரியென்னும் தேவலோகத்து வைத்தியன் முதலில் வெளித்தோன்றினன். பின்பு அழகான அப்ஸரஸ் ஸ்திரீகள் அறுபதினுபிரக் கோடிக்கணக்கிற் பிறந்தனர். அவர்களுடன் உண்டான வேலைக்காரிகளும் எண்ணிறந்தவர்கள்.

பின்பு ஸமுத்ராதி தேவதையாகிய வருணனது புத்திரியான வாருணியென்னுந் தேவதை கடலினின்றும் வெளிவந்து தன்னைக் கைப்பற்றுவார் யாரென்று தேடிக் கொண்டிருக்கையில் அவளைத் தேவர்கள் கைக்கொண்டனர்.

பின்பு உச்சைசிரவஸ்ஸென்னும் உயர்ந்த குதிரையும் கௌஸ்துபமென்னும் சிறந்த ரத்னமும் அப்படியே மேலான அமிருதமும் ஸமுத்திரத்தினின்று வெளியாயின. அவ்வமிருதத்தைப் பற்றித் தேவாஸுரர்களிருவரும் பெருத்த போர் செய்து குலங்குலமாக மாண்டனர். அப்போது தேவதைகளே அஸுரர்களை அதிகமாகக் கொன்றனர். பிறகு அஸுரர்கள் அனைவரும் தமக்கு வலிமை அதிகமாகும்பொருட்டு ராக்ஷஸர்களோடு ஒருமித்துக்கொண்டதால் மிகவும் கொடிய யுத்தம் நடந்தது. அதனால் தேவாஸுரர்களனைவரும் அழிந்து போவதைக்கண்டு விஷ்ணுதேவன் அற்புதமான மோஹினிரூபந்தரித்து அவர்களை வஞ்சித்து அவர்களிடமிருந்து அமிருதத்தைப் பறித்துக்கொண்டு, அப்போது தன்னை யெதிர்த்து வந்தவர்களனைவரையும் அம்மஹாவிஷ்ணு வென்றனன். அப்போது மிகக்கொடிதாக நடந்த அந்த தேவாஸுர யுத்தத்தில் அம்மஹாவிஷ்ணுவின் ஆவேசத்தால் பலம் அதிகரிக்கப்பெற்ற தேவர்கள் அஸுரர்களை அடித்துக் கொன்றுவிட்டனர். அதனால் இந்திரன் திரிலோக ராஜ்யம் பெற்று அமிருதம் கைபுகுந்து களித்திருந்தனன்.

நாற்பத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

## நாற்பத்தாறுவது ஸர்க்கம்

## திதியென்பவள் இந்திரனைக் கொல்லவல்ல மகனைப் பெறுதற்குத் தவம்புரிதலும், இந்திரன் அவளை விநயத்தினால் வஞ்சித்தலும்.

[ராம விசுவாமித்திர சம்பாஷணை]

திதி, தன் மக்களான அசுரர்களனைவரும் தேவர்களால் அடியுண்டு மாண்டுபோகவே மிகத் துயரமடைந்து காச்யபரென்னும் தன் பர்த்தாவை நோக்கி 'நாதா! மிகவும் பலிஷ்டர்களான தேவர்களால் நம் பிள்ளைகள் யாவரும் அடியுண்டு மாண்டுவிட்டார்களே; ஆதலால் இந்திரனைக் கொல்லவல்லவனும் மூவுலகங்களையும் ஆளத் தக்கவனுமாகிய ஒரு புதல்வனைப் பெற யான் விரும்பித் தவஞ் செய்யப் போகின்றேன், எனக்கு நீர் கருணை செய்து அநுமதியளிக்க வேண்டும்' என்று வேண்டிக்கொண்டனள்.

காச்யபரும் 'நீ வேண்டினபடி ஆகட்டும். நீ ஆயிரமாண்டு நிரம்பும் வரையில் சுசியாயிருப்பாயாயின் மூவுலகங்களையும் ஆளவல்லவனும் இந்திரனைக் கொல்ல வல்லவனுமாகிய குமாரனைப் பெறுவாய்' என்றுரைத்து அம்மடந்தையைத் தன் கையினால் தடவிக் கொடுத்துத் தேறுதல் சொல்லி வயிற்றைத் தடவி விட்டனர். அதனால் திதி மிக மகிழ்ந்து விசாலாபுரத்திற்குப் பூர்வஸ்தானமாகிய குசப்லவனமென்னும் இவ்விடம் வந்து கடுந்தவம் புரிந்தனள்.

அப்போது தேவேந்திரன் மிக்க விநயத்துடன் அம்மாதாசிக்குப் பணிவிடைகள் யாவுஞ் செய்துவந்தனன். ஆயிரமாண்டுகள் நிரம்பப் பத்து வருஷங்கள் குறைந்திருக்கையில் திதி இந்திரன் செய்த சுச்ரூஷைக்கு மிகவும் உவந்து அவனைப் பார்த்து 'வானவர்க்கதிபதி! உன் தந்தையைக்

கேட்டு, ஆயிரமாண்டு நிறைந்தபின் பிள்ளையைப் பெறும்படி யான் ஒரு வரம் பெற்றனன். அதற்காக யான் தவஞ் செய்துகொண்டிருக்கின்றனன். இன்னும் பத்து வருஷங்கள் குறைவாயிருக்கின்றன. அப் பத்து வருஷங்கள் நிறைந்த பின்பு உனது உடன்பிறந்தவனைக் காண்பாய்; அவன் உன்னை வெல்லுவதற்கு மன எழுச்சி கொண்டிருப்பான். ஆயினும் உனக்காக அவனை யான் சமாதானப் படுத்தி உன்னிடத்தில் நேசத்துடன் இருக்கச் செய்கின்றேன். நீ அவனுடன் கூடி மூவுலகங்களையும் வென்று மனக்கவலை நீர்ந்து சுகமாக வாழ்ந்திருப்பாய்' என்று சுச்ருஷையாலுண்டான சந்தோஷத்தில் மதிமயங்கி மொழிந்தனள்.

பின் அந் திதி ஒருநாள் நடுப்பகலில் நித்திரையால் தேகம் பரவசமாகத் *தலைமாட்டில் காலைவைத்துப் படுத்தனள். இந்திரன் இப்படி அவ்வம்மை சுசிதப்பி நித்திரை செய்திருப்பது கண்டு, இவள் வீண்கருவப்பட்டாளென்று தனக்குள் சிரித்துக்கொண்டு அவளது கர்ப்பத்தைக்கெடுக்க அவகாசம் நேரிட்டதுபற்றி ஸந்தோஷங் கொண்டு அவளது சரீரத்தினுட்புகுந்து அக் கருவை ஏழுதுண்டுகளாகப்

* ஆஸநத்திலிருந்துகொண்டே உறங்கும்போது தலைசாய்ந்து காலில் படுவதால் அசுசித்வம்வந்ததென்று சிலர், வழக்கமாகத் தலைவைக்குமிடத்தில் காலையும் கால்வைக்குமிடத்தில் தலையையும் வைத்துப்படுத்தாளாகையால் அசுசித்வமென்று சிலர், கிழக்கு தெற்குகளில் தலைவைக்க வேணுமென்கிற நூற்கொள்கைக்கு விரோதமாய்ப் படுத்தாளாகையால் அசுசித்வமென்று சிலர், மற்றுஞ்சிலர் கிருஷ்ணஜினத்தின் தலைப்பக்கம் காலையும் கால்பக்கம் தலையையும் வைத்துப் படுத்தாளாகையால் அசுசித்வம் வந்ததென்று கூறுவர். என்று மஹான்கள் எழுதியுள்ளார்கள்.

பிளந்து விட்டனன். இங்ஙனம் இந்திரன்தனது வஜ்ரா யுதத்தினால் கருவைப் பிளந்து கொண்டிருக்கையில் அச்சிசு இனிய குரலுடன் அழத்தொடங்கிற்று. பின்பு திதியும் அவ்வழுகுரலைக்கேட்டு எழுந்திருந்தனள்.

'குழந்தையைக் கொல்லலாகாது, கொல்லலாகாது' என்று சொல்லிக்கொண்டே எழுந்த திதியைக் கண்ட இந்திரன், கருவைத் துண்டித்தலாகிற அக்காரியத்தைச் செய்து முடித்துவிட்டு வயிற்றினின்று வெளிவந்துவிட்டனன். வெளிவந்து திதியை நோக்கிக் கைகூப்பி நின்று 'அம்ம! நீர் தூய்மையின்றிக் கால்மாட்டில் தலையை வைத்து நித்திரை செய்தீர்; அங்ஙனம் நீர் அசுசியாயிருந்த சமயமறிந்து அந்தக் கருவை நான் ஏழாகத் துண்டித்துவிட்டேன்; என்னைக் கொல்வதற்காகவே உண்டாகின்ற அந்தக் கருவை நான் சேதித்ததுபற்றி நீர் என்மீது மிகவும் பொறுமைகொள்ள வேணும்' என வேண்டிக்கொண்டனன்.

நாற்பத்தாறுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நாற்பத்தேழாவது ஸர்க்கம்.

**திதியானவள் தனது கர்ப்பத் துண்டங்களுக்கு ஒரு நன்மை யுண்டாம்படி இந்திரனிடத்து வரம் பெற்றதையும் விசாலா நகரத்தையாண்ட அரசர்களின் வரலாற்றையும் விசுவாமித்திரர் கூறுதல்.**

தனது கர்ப்பம் ஏழு துண்டுகளாகச் செய்யப்பட்டது பற்றி மிக வருந்தின திதியானவள் இந்திரனை நோக்கி "அப்ப! உன்மீது யாதொரு குற்றமுமில்லை; நான் தூய்மை குன்றியதனால் இங்ஙனம் சம்பவித்ததாதலால் என்னுடைய குற்றமே

காண்; கடந்துபோனதைப் பற்றி இனி என்ன விசாரம்? ஏழு துண்டுகளாகச் செய்யப்பட்ட இவற்றுக்கு ஒரு நன்மையை வேண்டிக்கொள்கின்றேன்; அதாவது —"இவ்வேழும் ஏழு குழந்தைகளாய் வளர்ந்து ஸப்த மருத்துக்களின் உலகத்தைப் பாதுகாக்கவேண்டும். ஒன்று பிரம லோகத்திலும், மற்றொன்று இந்திர லோகத்திலும், வேறொன்று விஷ்ணு லோகத்திலும் சஞ்சரிக்கவேண்டும்; மற்ற நான்கும் உனது கட்டளையிலடங்கித் திசைகளில் திரியக் கடவன; இவை 'மாருதர்கள்' எனப் பெயர் பெறுக" என்றனள்.

இந்திரனும் அது கேட்டு 'அவ்வண்ணமே யாகுக' என்றனன்.

ராம! அந்தத் திதியும் இந்திரனும் குசப்லவனமென்கிற ஆச்ரமத்தில் இவ்வாறு முடித்துக்கொண்டு தேவ லோகம் போய்ச் சேர்ந்தனர். திதிக்கு இந்திரன் பணிவிடை செய்துவந்த இடம் இதுவே காண்.

இக்ஷ்வாகு மன்னனுக்கு அலம்புஸை யென்பவளிடத்தில் தோன்றிய விசாலர் என்பவரால் விசாலை யென்கிற இந் நகர் ஏற்படுத்தப்பட்டது. அந்த விசால மன்னவனுக்குப் பிறகு ஹேமசந்திரர், ஸுசந்திரர், தூம்ராச்வர், ஸ்ருஞ்ஜயர், ஸஹதேவர், குசாச்வர், ஸோமதத்தர், காகுத்ஸ்தர் என்கிற புத்திர பரம்பரை நிகழ்ந்து வந்தது. அந்தக் காகுத்ஸ்தருடைய மகனாகிய ஸுமதி யென்பவரே இப்போது இந் நகரை அரசுபுரிந்துவருகின்றார்.

ராம! இன்றிரவு நாம் இங்குத் தங்கியிருந்து நாளை காலை மிதிலை சேர்ந்து ஜனக மன்னவனைக் காண்போம் —என்று விசுவாமித்திரர் கூறினர்.

பின்பு அந்த சுமதி மன்னவன் இவர்களது வருகையை யறிந்து உபசாரங்கள் செய்ய வந்தனன். அன்றே தான் மகா பாக்கியசாலியானதாக விண்ணப்பஞ் செய்துகொண்டனன்.

நாற்பத்தேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நாற்பத்தெட்டாவது ஸர்க்கம்.

## அகலிகையின் முன் செய்திகளை விசுவாமித்திரர் இராமனுக்குக் கூறுதல்.

விசாலா நகராதிபதியான சுமதி மன்னவன் பலவகையான உபசாரங்களையும் நிகழ்த்திவிட்டு, மிக அழகிய இவ்வரச குமாரர்கள் இக் கடுங்கானத்தில் எதற்காக அழைத்து வரப்பட்டனர்?—என்று விசுவாமித்திரரைக் கேட்க, அவரும் வேள்விகாத்த விசேடங்களை யெல்லாம் எடுத்துக் கூறினர். அதனால் அந்த தாசரதிகளின் பெருமையை நன்கு அறியப்பெற்ற அம் மன்னவன் அக் குமாரர்களுக்குத் தக்கவாறு பூஜைகளைச் செய்தனன். அன்றிரவு அங்குத் தங்கியிருந்து அனைவரும் மறுநாட் காலை மிதிலாபுரிக்குப் புறப்பட்டனர்.

வழியிடையே மிக அழகிய ஓர் பழைய ஆச்ரமத்தைக் கண்ட இராமபிரான் முனிவரை நோக்கி 'இவ்விடம் வாஸமற்றதுபோல் காண்கிறதே; இது யாருடையது?' என்று கேட்டனன். அதற்கு விசுவாமித்திரர் கூறத் தொடங்கினர்—

ராம! இவ்விடம் முன்பு கௌதம முனிவருடைய ஆச்ரமமாக இருந்தது. அவர் தமது மனைவியாகிய அகலிகை

யோடு இங்குப் பலவாண்டுகள் தவமியற்றிப் போந்தார்; அப்போது ஒருநாள் இந்திரன் முனி வேடம் பூண்டுவந்து கௌதம முனிவர் வெளியே சென்றிருந்த காலத்தில் அகலிகையினிடத்தில் தனது தீய நினைவைத் தெரிவித்துக்கொண்டனன். அவளும் அவனைத் தேவேந்திரனென அறிந்துகொண்டு ஒருவாறு மகிழ்ந்து, அவனது விருப்பத்திற்கு இணங்கி யிருந்து, கௌதமர் வருங்காலம் அணுகிவிட்டதை நோக்கி இந்திரனை விரைந்து செல்லுமாறு கூறிப் புறப்படச் செய்தனள்.

அவ் விந்திரனும் தனது காதல் நிறைவேறப் பெற்றதற்கு உள்ளம் பூரித்து, உடனே கௌதமரைப் பற்றிச் சங்கித்து விரைந்து வெளிப் புறப்பட முயன்றனன். அப்போது அம்முனிவர் நீராடி ஸமித்து முதலியவற்றைப் பறித்துக்கொண்டு ஆச்ரமத்தினுட் புகுவதைக் கண்டு முகம் வாடி நின்றனன். கௌதமர், அப்போது தமது வேடத்தைப் பூண்டிருக்கின்ற இந்திரனைக் கண்டு, அவனது தீய செயலையும் தெரிந்துகொண்டு மிகவும் சினந்து, 'இந்திர! நீ விருஷண மற்றவனாக ஆய்விடுக' என்று சாபமிட்டனர்.

அப்போதே இந்திரனுடைய விருஷணங்களிரண்டும் அற்று நிலத்தில் வீழ்ந்தன. இந்திரனை அங்ஙனம் சபித்த அம் மாமுனிவர், அகலிகையையும் மேல்வருமாறு சபித்தனர்;

'நீ பல ஆயிரமாண்டளவும் உணவின்றிக் காற்றை மட்டும் அருந்திக்கொண்டு சாம்பலில் வீழ்ந்து தவித்துக் கிடப்பாயாக; ஒருவர் கண்ணிலும் புலப்படாமல் இவ் வாச்ரமத்திலேயே இருப்பாயாக; தசரதாத்மஜனாகிய ஸ்ரீ ராமன் இவ்விடம் நோக்கி எழுந்தருளும்போதுதான் நீ தூய்மை

பெறுவாய்; அப்போது நிஜ உருவம் பெற்று அப் பெருமானை ஆராதித்து என்னருகில் வந்து சேருவாய்' என்றனர்.

ராம! கௌதம முனிவர் இங்ஙனம் சாபமிட்டு இமய மலையுச்சியில் தவம் புரியச் சென்றனர்.

நாற்பத்தெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

நாற்பத்தொன்பதாவது ஸர்க்கம்.

## கௌதம முனிவரால் விருஷணமற்றவனும்படி சபிக்கப்பட்ட இந்திரன் மேஷ விருஷணம் பெறுதலும், அகலிகை சாபம் தீர்ந்து இராமனைப் பூஜித்தலும்.

ராம! பிறகு இந்திரன் விருஷணமற்றவனாய் மிக வருந்தி ரிஷி கணங்களையும் தேவ கணங்களையும் திரட்டி அவர்களை நோக்கி இங்ஙனம் கூறினன் — 'நான் தேவர்கட்குக் காரியஞ் செய்யப்போய் இப் பாடு பட்டனன்; கௌதமருடைய தவத்திற்கு இடையூறு விளைப்பது தேவர்களுக்கு அவசியமாதலால், 'அம் முனிவர் கோபமடைந்து சாபங் கொடுத்துத் தவங் குலையப் பெறட்டும்' என்று நான் கருதி ஒரு தீய செயல் செய்யும் வியாஜத்தினால் அவர்க்குக் கோபத்தை யுண்டாக்கிச் சாபமிடச் செய்து அவரது தவநிலையைக் குலைத்தேன்; இங்ஙனம் தேவகாரியஞ் செய்த எனக்கு நீங்கள் யாவருஞ் சேர்ந்து உதவி செய்து என்னை விருஷண முடையவனாகச் செய்தல் வேண்டும்' என வேண்டினன்.

அவ்வேண்டுகோளுக்கிணங்கிய அவர்கள் பித்ரு தேவதைகளிடஞ் சென்று இந்திரனுக்கு நேர்ந்த குறையைத் தெரிவித்து, 'பித்ருக்களே! யாகத்தில் உங்களுக்குக் கொடுக்

கப்படுகின்ற மேடத்தினுடைய விருஷணங்களைக் கொய்து இந்திரனுக்கு அளித்திடவேண்டும்; அதனால் இந்திரன் விருஷணம் பெற்றவனாகிக் குறை தீர்ந்திடுவான்; விருஷண மற்றதாகச் செய்யப்பட்ட மேடத்தின் மாமிசம் உங்களுக்கு மிகுந்த களிப்பை விளைக்கும்; ஆதலால் விரைவில் இங்ஙனஞ் செய்தல் வேண்டும்' என்று கூற, அவர்களும் உடனே அங்ஙனமே செய்திட்டனர்.

ராம! அது முதலாகவே பித்ரு தேவதைகள் விருஷண மற்ற மேடத்தின் மாமிசத்தை வேள்விகளில் உண்கின்றனர் என்று சொல்லிக்கொண்டே விசுவாமித்திரர் ஸ்ரீராமனையும் லக்ஷ்மணனையும் அழைத்துக்கொண்டு கௌதம முனிவரது ஆச்ரமத்திற்குச் சென்றனர்.

செல்லுகையில் ராமபிரானது திருவடித்தூள் படப் பெற்று வடிவம் பெற்றெழுந்த அகலிகையை அனைவரும் கண்டனர். கௌதமமுனிவர் முன்பு சாபவிடை கூறியிருந்த வண்ணமே, ஒருவர் கண்ணுக்கும் புலப்படாதிருந்த நிலைமை நீங்கிக் கண்ணிற் காணலானாள். மஹாமுனிவருடைய மனைவியென்கிற கௌரவ புத்தியால் தாசரதிகளினால் வணங் கப்பெற்ற அவ்வகலிகை முன்பு கௌதமர் சொல்லியிருந் ததை ஸ்மரித்து இராமபிரானுக்கு உரிய பூஜைகளைச் செய்த னள். அப்போதே இஃதுணர்ந்த கௌதம முனிவரும் ஆங்கு வந்து சேர்ந்து, தூய்மைபெற்ற அகலிகையோடு கூடி விளங்கி, இராமனுக்குப் பூஜைகளைச் செய்து பழையபடி தவத்திலே ஊன்றினர். பிறகு விசுவாமித்திரர் முதலியோர் மிதிலைக்குப் புறப்படலாயினர்.

நாற்பத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## ஐம்பதாவது ஸர்க்கம்

### விசுவாமித்திரர் தாசரதிகளுடன் மிதிலையில் ஜனக மன்னவனது வேள்விச்சாலையில் புகுதலும், ஜனகன் உபசரித்தலும்.

கௌதமமுனிவரது ஆச்ரமத்தில் நின்று வடகிழக்குத் திசையிற் சென்று மிதிலை சேர்ந்து ஜனகமன்னவனது வேள்விச்சாலையருகிற் சேர்ந்தனர் ஸ்ரீராமாதிகள். அங்கு யஜ்ஞஸம்பாரங்கள் வெகு ஆச்சரியமாகவும் அழகாகவும் மிகுதியாகவும் சேகரிக்கப்பட்டிருப்பது கண்டு வியந்துகொண்டே இனியதோர் விடுதியில் சென்று அமர்ந்தனர்.

ஜனகமன்னவனும் விசுவாமித்திர முனிவர் எழுந்தருளியிருப்பதறிந்து தனது புரோஹிதரும் கௌதம புத்திரருமான சதானந்த முனிவரை முன்னிட்டுக் கொண்டு உபசாரங்கள் செய்ய வந்தனன். முனிவரும் உபசாரங்களைப் பெற்றுக்கொண்டு ஜனக சக்ரவர்த்தியை நோக்கி யோகக்ஷேமங்கள் விசாரித்துவிட்டு ஆஸனத்தில் வீற்றிருந்தனர். பிறகு அனைவரும் உட்கார்ந்தனராக, ஜனக மன்னவன் முனிவரை நோக்கி மிகுந்த வினயத்துடன் கூப்பிய கையனாய் "காணவினிய இக்குமாரர்களைப் பற்றின வரலாறுகளைக் கேட்க விரும்புகின்றேன்" என்றுரைக்க, மாமுனிவர், இவர்கள் தசரத மன்னவனது புதல்வர்கள் என்பதையும், தமது யாகத்தை நிறைவேற்றிக்கொள்ள அழைத்து வரப்பட்டது முதலாக அகலிகையின் சாபம் தொலைத்ததீறாகவுள்ள நடத்தைகளையும் சொல்லி முடித்தனர்.

ஐம்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

## ஐம்பத்தோராவது ஸர்க்கம்.

### கௌதம புத்திரரான சதானந்தர் தமது தாய் தூய்மை பெற்றமை கேட்டுக் களித்தலும், விசுவாமித்திரருடைய பழைய கதைகளைச் சொல்லத் தொடங்கி முதலில் வஸிஷ்டாச்ரமம் சென்றதைச் சொல்லுதலும்.

கௌதமமுனிவருடைய மூத்த குமாரரான சதானந்தர் தமது அன்னை சாபம் நீங்கப்பெற்ற செய்தியைக் கேட்டு மிகக்களித்து, தாசரதிகளைக் கண்ணாரக் கண்டு உள்ளம் பூரித்து, தாயின் சாபம் விமோசனமான வரலாற்றையும், தாய் தந்தையரிருவரும் கூடப் பெற்றதையும் விசுவாமித்திரரிடம் விரிவாகக் கேட்டறிந்து மகிழ்ந்து, பிறகு அம்முனிவருடைய தவவலிமை முதலிய பெருமைகளைத் தாசரதிகளுக்கு விரிவாக எடுத்துரைக்க விரும்பி அவ்விசுவாமித்திரருடைய சரித்திரங்களைச் சொல்லத் தொடங்கினர்.

ராம! பிரமனது புதல்வன் குசன்; அவனது புத்திரன் குசநாபன். அவனுடைய மகனான காதி யென்பவர்க்குப் புத்திரராய் க்ஷத்ரியராயிருந்த இம்முனிவர் ஊக்கத்துடன் கலைகளைக் கற்றுத் தரும நுட்பங்களையும் செவ்வனே யறிந்து பழுதொன்றுமின்றி அரசாண்டு வந்தனர். அப்போது ஒருகால் நிலவுலகத்தை வலஞ்செய்யப் புறப்பட்டவிவர் ஸகல ஸைன்னியங்களுடனும் பரிவாரங்களுடனும் பலபல நாடுநகரங்களைக் கடந்துகொண்டே வஸிஷ்டமாமுனிவரது ஆச்ரமத்திற்கு வந்து சேர்ந்து அவ்விடத்தின் பலவகைப்பட்ட அற்புதமான வளங்களை யெல்லாம் கண்டு களித்தனர்.

ஐம்பத்தோராவது ஸர்க்கம் முற்றிற்று.

ஐம்பத்திரண்டாவது ஸர்க்கம்

## வஸிஷ்டர் விசுவாமித்திரருக்கு விருந்தளிக்க முயன்றதை சதானந்தர் கூறுதல்.

அங்கு வஸிஷ்ட முனிவரையுங் கண்டு வணங்கி, அவரால் யோகக்ஷேமங்கள் விசாரிக்கப்பட்டு ஆஸனத்தில் அமர்த்தி அரிய பெரிய உபசாரங்களும் செய்யப் பெற்றுக் களி கூர்ந்த விசுவாமித்திரர், வஸிஷ்ட முனிவருடைய குசலப்பிரச்னங்களுக்கெல்லாம் விடைகூறி நிற்கையில், வஸிஷ்டர் இங்ஙனம் மொழிந்தனர்:—

"விசுவாமித்திரரே! இப்போது இங்கு வந்திருக்கின்ற உமக்கும் உம்மைச் சேர்ந்த ஸேநாபரிவாரங்களுக்கும் விருந்தளிக்க விரும்பியிருக்கின்றேன்; நீர் மிகச் சிறந்த அரசராதலால் உம்மை இங்ஙனம் பூஜிக்க நான் கடமைப்பட்டிருக்கின்றேன், கருணையுடன் எனது பூஜைகளை நீர் ஏற்றுக் கொள்ள வேணும்" என்றார்.

அதற்கு விசுவாமித்திரர், "மாமுனிவரே! இப்போது தேவரீர் இவ்வாச்ரமத்திலுள்ள கனிகாய் கிழங்கு முதலியவற்றால் செய்த மஹோபசாரமே போதுமானது; அதிகப்படியான பரிச்ரமங்கள் வேண்டா; கிருபையோடு கடாக்ஷித்தருளி எமக்கு விடை தந்தருள வேணும்" என்றார். வஸிஷ்டர், பரிபூர்ணமான விருந்துகளைப் பெற்றுக்கொண்டே போகவேணுமென்று வற்புறுத்தியதனால் விசுவாமித்திரர் அதற்கு இணங்கியிருந்தனர்.

பிறகு விசித்திரமான விருந்தினை அளிக்கக் கருதிய வஸிஷ்ட முனிவர் மிக மகிழ்ந்து சபளையென்கிற தமது காமதேனுவை அருகே வரவழைத்து, தமது விசாலமான

விருப்பங்களைத் தெரிவித்து, அறுசுவையடிசில்களையும் மற்றுமுள்ள ஸகலவித பக்ஷ்யவர்க்கங்களையும் குறையறப் பெய்யுமாறு அப்பசுவுக்குக் கட்டளை யிட்டனர்.

**ஐம்பத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.**

---

ஐம்பத்துமூன்றுவது ஸர்க்கம்

வஸிஷ்டரிடத்திலுள்ள காமதேனுவின் சிறப்பைக் கண்ட விசுவாமித்திரர் அப்பசுவைத் தமக்குத் தந்திடுமாறு நிர்ப்பந்தித்ததை சதானந்தர் கூறுதல்.

இங்ஙனம் வஸிஷ்ட முனிவருடைய கட்டளையைப் பெற்ற காமதேனுவானது கரும்பு, தேன், பொரி முதலிய பலவகைப்பட்ட உணவுகளையும் மற்றும் பலவகைப்பட்ட பொருள்களையும் விசேஷமாகப் பெய்தது. அதனால் விசுவா மித்திருடைய பரிவாரங்களெல்லாம் வெகு ஆச்சர்யமாக ஸந்தர்ப்பணை செய்து வைக்கப்பட்டுப் பரம சந்தோஷ மடைந்தன. அப்போது மஹாராஜராயிருந்த இவ் விசுவா மித்திரர் அரண்மனைப் பெண்களோடும் அந்தணர்களோடும் புரோஹிதர்களோடும் மற்றும் பலரோடும் அவ்வரிய பெரிய விருந்தினை உண்டு உடலம் பூரித்தனர்.

இங்ஙனம் பரமானந்த பரவசரான இம்முனிவர் அப்போது வஸிஷ்டரை நோக்கி இங்ஙனம் கூறினர்;—"முனிவரே! இக்காமதேனுவானது அரசர்களிடத்தே யிருக்கத் தகுந்ததாதலால் எம்மிடத்தில் நூறாயிரம் பசுக்களின் விலையை நீர் பெற்றுக்கொண்டு இதனை எமக்குத் தந்திட வேண்டும்; இனி இப்பசு என்னுடைய பொருளேயாகும்" என்றனர்.

அதுகேட்ட வஸிஷ்டர், "வேந்தர் தலைவனே! நூறாயிரம் பசுக்களின் விலையேயல்ல; நூறுகோடி பசுக்களின் விலை

கொடுத்தாலும் ராசி ராசியாய் வெள்ளியைக் கொடுத்தாலும் இக்காமதேனுவைக் கொடுக்க இயலாது; இந்து என்னிடத்தினின்று பிரியத்தகாது. ஹவ்யம், கவ்யம், பிராணுஹூதி, அக்னி ஹோத்திரம், பலி, ஹோமம் முதலியன எல்லாமும் எனக்கு இதனாலேயே ஆக வேண்டியிருக்கின்றன; பல சொல்லி என்? எனக்கு எல்லாப் பொருளும் இந்தக் காமதேனுவே யாகும்; இன்னமும் பல காரணங்களினாலும் இதனை நான் கொடுக்ககில்லேன்'' என்று கூறினர்.

அதுகேட்ட விசுவாமித்திரர் மிகச்சிறந்த ஸ்வர்ணங்களையும் ரத்தினங்களையும் மற்றும் பலவகைப் பொருள்களையும் தாம் தந்திடுவதாகக் கூறி அக்காமதேனுவைத் தவறாது கொடுக்கவேண்டுமென்று மிகமிக வற்புறுத்தினர். எவ்வளவு நிர்ப்பந்தமாகக் கேட்டும் வஸிஷ்ட முனிவர் சிறிதும் இணங்கவில்லை; "இப்பசுவே எனக்கு ஸர்வஸ்வமாகையால் ஒருகாலும் இதனைக் கொடுக்கவே முடியாது'' என்று திண்ணமாகக் கூறி முடித்தனர் வஸிஷ்டர்.

ஐம்பத்துமூன்ருவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## ஐம்பத்துநான்காவது ஸர்க்கம்

### வஸிஷ்டரது பசுவை விசுவாமித்திரர் வலியக் கவர்ந்ததையும், அப்பசு பல படை வீரர்களைப் படைத்ததையும் சதானந்தர் கூறுதல்.

ராம! காமதேனுவைக் கொடுக்கவே முடியாதென்று வஸிஷ்டமுனிவர் உறுத்திக் கூறியிருந்தும் விசுவாமித்திரர் அதனை வலியக் கவர்ந்து செல்லத் தொடங்கினர். அங்ஙனம் பலாத்காரமாக இழுக்கப்படுகின்ற அக்காமதேனுவானது,

"அந்தோ! நான் வஸிஷ்டமாமுனிவருக்கு என்ன குற்றம் புரிந்தேனே, யாது காரணம் பற்றி என்னை முனிவர் கைவிடுகின்றாரோ!" என்று மிகவும் வருத்தமுற்றது. அன்றியும், விசுவாமித்திரருடைய படையாளர்களைப் பலவிதமாகத் துன்பப்படுத்தித் திமிறிக்கொண்டு கனவேகமாய்த் திரும்பி வஸிஷ்டருடைய பாத மூலத்திற் சென்று சேர்ந்து, அழுது கூக்குரலிட்டுக்கொண்டு "ஸ்வாமீ! மாமுனிவரே! என்ன குற்றத்திற்காக என்னைநீர் கைவிடுகின்றீர்? எதற்காக இவர்கள் என்னை இழுத்துக்கொண்டு போக முயல்கின்றனர்?" என்று கேட்டது.

அதற்கு வஸிஷ்டர், "அம்மா! சபளையே!!, உன்னை நான் கைவிடுகின்றிலேன்; எனக்கு நீ செய்த தீமை யாதொன்றுமில்லை; இவ்விசுவாமித்திர வேந்தர் தமக்கு மிக்க வலிமையுள்ளதாகக் கருதி உன்னை வலியக் கவர்ந்து செல்கின்றார்; அவரை அடர்க்கவல்ல வலிமை எனக்கில்லை; அன்றியும் அவர் அரசராகவும் படைத்திரள் மிக்கவராகவும் இன்று எம்மிடத்தில் விருந்து பெற்றவராயுமிருத்தலால் நான் ஒன்றும் செய்வதற்கில்லை" என்று விடை கூறினர்.

அதைக்கேட்ட காமதேனு வஸிஷ்டரை நோக்கி "முனிவரே! நீர் இங்ஙனம் கூறலாமோ? க்ஷத்திரியர்களின் வலிமையிற் காட்டிலும் அந்தணாளர்களின் வலிமையே மிக வீறு பெற்றதென்று பெரியார் கூறுவர்; ஆகவே, அந்தணர்களில் தலைவராய உமது வலிமை அளவிடற்பாலதன்று; க்ஷத்திரியராகிய இவ்விசுவாமித்திரர் பலிஷ்டரேயாயினும் உமது தேஜஸ்ஸின் முன் அவர் நிற்க வல்லவரோ? மாமுனிவரே! உமது மந்திர பலத்தினுல் வளர்ந்து வருகின்ற எனக்குக்

கட்டளையிடுவீராயின் இவ்வரசனுடைய செருக்கை முடித்திடுகின்றேன்" என மொழிந்தது.

வஸிஷ்டரும் அதற்கிணங்கி விசுவாமித்திரருடைய படைகளை யழிக்கவல்ல சேனைகளை விரைவில் படைக்குமாறு காமதேனுவுக்குக் கட்டளையிட்டனர். அப்போதே அப்பசுவின் முக்கலிட்டவொலியில்நின்று படைக்கப்பட்ட பலபல மிலேச்சர்கள் விசுவாமித்திரரது படைத்திரளைப் பங்கமாக்கினர். அதனால் மிக்க சீற்றங்கொண்ட விசுவாமித்திரர் தேரின் மீதேறி நின்று பலவகையான ஆயுதங்களையிட்டு அந்த மிலேச்சர்களை முடித்தனர்.

அதுகண்ட காமதேனு மீண்டும் பல பெருமிடுக்கரான மிலேச்சர்களைப் படைக்க, அவர்கள் வாட்படை கொண்டு விசுவாமித்திரருடைய படைகளைப் பொசுக்கினர். பிறகு விசுவாமித்திரர் தமது மிக்க வலிமையை வெளியிட்டுப் பல அஸ்திரங்களை யெறிந்து அந்த மிலேச்ச வகுப்பினர் பல்லோரையும் பங்கப்படுத்தினர்.

**ஐம்பத்துநான்காவது ஸர்க்கம் முற்றிற்று.**

---

## ஐம்பத்தைந்தாவது ஸர்க்கம்

**வஸிஷ்டருடைய பசு படைத்த வீரர்களால் விசுவாமித்திரர் பங்கப்பட்டதையும், வஸிஷ்டரால் விசுவாமித்திரரது நூறு மக்கள் நீறுக்கப்பட்டதையும், பின்பு விசுவாமித்திரர் தவமியற்றி மஹாதேவனருள் பெற்று வந்து வஸிஷ்டாச்ரமத்தைக் கெடுத்ததையும் சதானந்தர் கூறுதல்.**

அங்ஙனமாகக் கண்ட வஸிஷ்டர் மீண்டும் காமதேனுவுக்குக் கட்டளையிட, உடனே அது ஒரு கோஷம் செய்ய,

அவ்வொலியினின்று கையுங் கத்தியுமான காம்போஜர்கள் உண்டாயினர்; அதன் மடியிலிருந்து 'பப்லவர்' என்ற வகுப்பினரும், யோனியிலிருந்து யவனர்களும், குதத்தி லிருந்து சகர்களும், மயிர்க்கால்களிலிருந்து மிலேச்சர்களும் கிராதர்களுடன்கூட ஹாரீதர்களும் உண்டாயினர்.

ராம! அவ்வவர்களால் விசுவாமித்திரரது ரத கஜ துரக பதாதிகள் யாவும் சின்ன பின்னம் செய்யப்பட்டொழிந்தன. பிறகு விசுவாமித்திரரின் புதல்வர்களான நூற்றுவரும் மிக்க சினங் கொண்டு பலவகையான ஆயுதங்களைக் கையிற் கொண்டு வஸிஷ்ட முனிவரோடு போர் புரியப் புகுந்தனர். அம்முனிவர், 'ஹூம்' என்கிற ஒரு ஒலியைக் கொண்டே அவர்களைப் பொசுக்கிவிட்டனர். அந்நிலைமை கண்ட விசுவா மித்திரர் மிக்க நாணமடைந்து இன்னது செய்வதென்று தோன்றாது திகைத்து நின்று, உயிரோடிருந்த ஒரு புதல் வனை யழைத்து "க்ஷத்திரிய தருமப்படி நீ பூமியைப் பாதுகாத்து வா" என்று அவனுக்குக் கட்டளையிட்டுத் தாம் கடுந்தவம்புரியக் கானகஞ் சென்றனர். அங்கு இமயமலைச் சாரலில் சிவபிரானது திருவருளைப் பெறுதற் காகத் தவம் புரியத் தொடங்கினர்.

பிறகு சின்னாள் கடந்தபின் மனமிரங்கிய சிவபெருமான் இவரெதிரே வந்து காட்சி தந்து நின்று, வேண்டிய வரத் தைப் பெற்றுக்கொள்ளுமாறு புகல, விசுவாமித்திரர் அப் பெருமானை வணங்கி "மஹாதேவனே! அங்கங்களோடும் உபாங்கங்களோடும் உபநிஷத்துக்களோடும் ரஹஸ்யங்களோ டுங் கூடிய தனுர்வேதம் நானிட்ட வழக்காக இருக்கவேண் டும்; தேவ தானவ யக்ஷ ராக்ஷஸாதியர்களிடத்திலெல்லாம்

இருக்கக்கூடிய அஸ்திரங்களத்தனையும் எனக்கு வசப்பட்டிருக்கவேண்டும்; உனது பேரருளால் எனது விருப்பம் நிறைவேறவேண்டும்", என்று வேண்டிக்கொண்டனர். சிவபெருமானும் "அங்ஙனமே ஆகுக" என்று சொல்லிவிட்டு மறைந்துபோயினர். அப்போது இவர் எல்லா அஸ்திரங்களும் பெற்றவராகி வலிமை மிக்குச் செருக்குக் கொண்டனர். வஸிஷ்ட முனிவரைத் தொலைத்திட்டதாகவே எண்ணிவிட்டனர்.

பிறகு இவர் வஸிஷ்டருடைய ஆச்ரமத்திற்குச் சென்று அந்த அஸ்திரங்களைப் பிரயோகிக்கையில் அத் தபோவனம் முற்றும் தஹிக்கப்பட்டதாயிற்று. வஸிஷ்டருடைய சீடர்களும், மிருகங்களும் பறவைகளும் அஞ்சியோடின. அதனால் அவ்வாச்ரமம் சூன்யமாயிற்று. வஸிஷ்டர் அனைவர்க்கும் அபயமளித்துக்கொண்டேயிருந்தும் ஒருவரும் கேளாது ஓடிப்போயினர்.

பிறகு வஸிஷ்டர் தமது தபோவனம் இப்படி அழிந்தது பற்றி மிகுந்த சீற்றங்கொண்டு விசுவாமித்திரரைப் பலவாறு நிந்தித்து, யமதண்டம் போன்றதான தமது பிரமதண்டத்தைக் கையிலே தூக்கிக்கொண்டு நின்றனர்.

ஐம்பத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ஐம்பத்தாறவது ஸர்க்கம்

விசுவாமித்திரர் தாம் பெற்றுவந்த அஸ்திரங்களெல்லாம் வஸிஷ்டருடைய பிரமதேஜஸ்ஸினால் பாழ்படக் கண்டு தாமும் பிரமதேஜஸ்ஸைப்பெறவிரும்பியதை சதானந்தர் கூறுதல்.

விசுவாமித்திரரும் தமது ஆக்நேயாஸ்திரத்தைக் கையிலேந்திக்கொண்டு 'வஸிஷ்டா! இனி உன்னை விடுவ

தில்லை' என்ன; வஸிஷ்டர் இவரை நோக்கி, 'அடா! க்ஷத்திரியர்களில் கடைகெட்டவனே! இதோ நிற்கிறேன்; உனக்குண்டான வலிமையைக் காட்டு, பார்ப்போம்; நீ ஏதோ வலிமை ஸம்பாதித்து வந்ததாகக் கொண்டிருக்கும் செருக்கை இதோ தொலைத்திடுகின்றேன் காண்; எனது பிராமண தேஜஸ்ஸின் முன்னே உனது க்ஷத்திரிய பலம் நிற்குமோ? இதோ எனது பிரமதண்டத்தின் வலிமையைப் பார்' என்று சொல்லிக்கொண்டிருக்கையில், விசுவாமித்திரருடைய ஆக்னேயாஸ்திரமானது வஸிஷ்டர்மீது விழத் தொடங்கிற்று. ஆயினும் அதனுடைய வலிமை வஸிஷ்டரது பிரமதண்டத்தினால் அடக்கப்பட்டொழிந்தது.

பிறகு விசுவாமித்திரர், வாருணம், ரௌத்ரம், ஐந்திரம், பாசுபதம் முதலிய பலபல அஸ்திரங்களை வஸிஷ்டர் மீது பிரயோகித்தும் சிறிதும் பயன்படாதொழிந்தது. இவர் தமது பிரமதண்டமொன்றினாலேயே இவருடைய ஸகலமான அஸ்திரங்களையும் வென்றொழித்தனர். அதன் பிறகு இவர் தமது பிரமாஸ்திரத்தைப் பிரயோகித்தனர். அப்போது தேவர் கந்தருவர் முதலாயினோர் மிக்க குழப்ப மடைந்தனர்; மூவுலகும் நடுக்கமுற்றது. ஆயினும், வஸிஷ்ட முனிவர் அதனையும் தமது பிரமதண்டத்தினாலேயே தடை செய்து தவிர்த்தனர். அத்தருணத்தில் வஸிஷ்டருடைய உருவம் மிகவும் பயங்கரமாயிருந்தது. அவரது மயிர்க்கால்களினின்று நெருப்புப் பொறிகளும் கிளர்ந்தன. அப்போது முனிவர்கள் அவ் வஸிஷ்டரை மிகவும் புகழ்ந்து, உலக நன்மையின் பொருட்டு உமது தேஜஸ்ஸை அடக்கிக்கொள்ளவேண்டியது அவசியமென்று வணங்கி வேண்டிக்கொண்டனர். அவ்வேண்டுகோளுக்கு இரங்கி

பிணங்கிய வஸிஷ்டர் அங்ஙனமே கோபசாந்தி பெற்று விளங்கினர்.

அப்போது விசுவாமித்திரர் தாம் தோல்வியடைந்து தற்குப் பெருமூச்சு விட்டுத் தம்மைத் தாமே நொந்து கொண்டு "சீ! க்ஷத்ரிய பலம் ஒரு பலமா! பிராமண தேஜஸ் ஸின் பலமே பலம்!; எல்லா அஸ்திரங்களும் ஒரு பிரம தண்டத்தினல் தொலைக்கப்பட்டொழிந்தனவே!; ஆதலால் இனி நான் பிராமணத் தன்மை பெறுதற்குரிய தவத்தை அனுட்டிப்பதே நன்று" என்று முடிவு செய்து கொண்டனர்.

ஐம்பத்தாருவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## ஐம்பத்தேழாவது ஸர்க்கம்

### விசுவாமித்திரர் பிரம தேஜஸ்ஸைப் பெறுதற்குத் தென் திசையில் தவமியற்றுதலையும், அப்போது சரீரத்துடனே சுவர்க்கம் செல்ல விரும்பிய திரிசங்கு மன்னவன் வஸிஷ்டரால் மறுக்கப்பட்டு அவரது புத்திரர் களிடத்தில் சென்று வேண்டினதையும் சதாநந்தர் கூறுதல்.

ராம! பிறகு இவ்விசுவாமித்திரர் வஸிஷ்ட முனிவர்மீது கொடிய பகை பாராட்டிக் கடுந்தவம்புரிந்து சித்தி பெறுதற் காகத் தமது மனைவியுடன் கூடித் தென்திசைக்குச் சென்று, ஆங்கு ஹவிஷ்யந்தர், மதுஷ்யந்தர், த்ருடநேத்ரர், மஹாரதர் என்ற புதல்வர்களைப் பெற்றனர். தவநிலையில் ஆயிரமாண்டு நிரம்பியபின்பு, நான்முகக்கடவுள் வந்து காட்சிதந்து 'இத் தவத்தின் பயனாக நீ ராஜரிஷியாயினை' என்றுரைத்து மீண்டு சென்றனர்.

பிரமரிஷியென்கிற பட்டம் பெறவேணுமென்று தவப் புரிந்த தமக்கு 'ராஜரிஷி' என்கிற அந்தப்பட்டம் சிறிதும் மகிழ்ச்சியைத் தராததினால் வெட்கங்கொண்டவிவர் மீண்டுப் கொடுந்தவம் புரியத் தொடங்கினர்.

அக்காலத்தில், இக்ஷ்வாகு குலத்தவனான 'திரிசங்கு' என்கிற மன்னவனொருவன் மிகச் சிறந்த தார்மிஷ்டனா யிருந்து 'இப்போதுள்ள மானிட உடலுடனே சுவர்க்கம் சென்று இன்பம் நுகரவேணும்' என்ற விருப்பமுடையனாய் அதற்காக ஒரு யாகம் நடத்த வேண்டி அவ்விருப்பத்தை வஸிஷ்ட முனிவரிடம் சென்று விண்ணப்பஞ் செய்துகொண் டனன். அங்ஙனம் நடத்த இயலாதென்று வஸிஷ்ட முனி வர் சொல்லிவிட, அவரது புத்திரர்கள் இருக்குமிடம் தேடிச் சென்று, தென் திசையில் கடுந்தவம் புரிந்து கொண்டிருந்த அவர்கள் நூற்றுவரையும் கண்டு வணங்கி, வந்த காரியத்தை விண்ணப்பஞ் செய்து, "உங்கள் தந்தையான வசிட்டரால் விலக்கப்பட்ட அடியேன்மீது மிகவும் கருணை புரிந்து நீங் கள் யாவரும் ஒன்றுகூடி எப்படியாவது யாகத்தை நிறை வேற்றி இவ்வுடலுடன் யான் சுவர்க்கம் சென்றேறும்படி செய்வித்து மிக்க புகழ்பெறுவீர்களாக" என்று மிகவும் கேட்டுக்கொண்டனன்.

**ஐம்பத்தேழாவது ஸர்க்கம் முற்றிற்று.**

---

## ஐம்பத்தெட்டாவது ஸர்க்கம்.

### வஸிஷ்ட புத்திரர்களாலும் மறுக்கப்பட்ட திரிசங்கு மன்ன வன் தான் விரும்பிய யாகம் செய்வித்தற் பொருட்டு விசுவாமித்திரரிடம் சரணாகதி செய்ததைச் சதானந்தர் கூறுதல்.

ராம! இங்ஙனம் திரிசங்கு மன்னவனால் பிரார்த்திக்கப் பட்ட வஸிஷ்ட புத்திரர்கள் அம்மன்னவனை நோக்கி "அடா

அறிவு கேடனே! உண்மையை யுரைத்த குல குருவான வஸிஷ்ட முனிவரை விட்டு வேறு புகல்தேடி எங்ஙனம் வந்தாய்? அவரால் முடியாதென்று கைவிடப்பட்ட காரியத்தை நாங்கள் எவ்வாறு செய்யமுடியும்? வீணான ஆசையை விட்டிட்டு வந்தவழியே திரும்பிப்போய்ச் சேருவாயாக” என்று சீற்றத்துடன் கூறினர்.

பிறகு அம்மன்னவன் நான் வேறு குருவையடைந்து என் மனோரதத்தை நிறைவேற்றிக்கொள்ளுகிறேன்; நீங்கள் சுகமாகவே வாழுங்கள் என்று சொல்லிப் புறப்படுகையில், வேறு குருவையடைவதாகச் சொன்ன சொல்லுக்காக மிகவும் சீறி ‘நீ சண்டாளனாகக் கடவை’ என்று அம்மன்னவனை வஸிஷ்ட புத்திரர்கள் சபித்துவிட்டார்கள்.

பிறகு ஓரிரவு சென்றவுடனே திரிசங்கு மன்னவன் சண்டாளத் தன்மையையடைந்து, உடம்பிலே சண்டாளனுடைய லக்ஷணங்களெல்லாம் அப்படியப்படியே விளங்க நின்றான். அன்னவனைக்கண்ட அவனது மந்திரிகள் முதலாயினோர் யாவரும் வெறுப்படைந்து கைவிட்டு அகன்றனர். பிறகு தனியாகவே அம்மன்னவன் விசுவாமித்திரரிடம் வந்து சரணமடைந்தனன். மிக்க பரிதாப நிலையில் நின்ற அவனை நோக்கி விசுவாமித்திரர் மிகவும் கருணை கொண்டனர். அவனுக்கு அபயப்பிரதானஞ் செய்து வரலாறுகளையெல்லாம் விசாரித்தனர்.

அதற்கு அம்மன்னவன், “ஸ்வாமின்! நான் பல யாகங்கள் செய்தும் சரீரத்துடனே சுவர்க்கம் செல்லுகையாகிற பலனை மாத்திரம் பெற்றிலேன்; நான் ஆபத்காலத்திலும் ஒருபொய்சொல்லி யறியாதவன், பலபல தருமங்கள் செய்

திருக்கின்றேன்; பிரஜைகளை நெறி தவறாது பாதுகாத்திருக்கின்றேன்; மஹாத்மாக்களான குரவர்களை நன்கு ஆராதித்திருக்கின்றேன்; இப்படிப்பட்ட நான் எவ்வளவு வேண்டிக்கொண்டபோதிலும் கோரியவொரு யாகத்தைச் செய்விக்கவே முடியாதென்று எனது குருக்கள் கைவிட்டனர். உம்மைத் தவிர வேறுயாரையும் சரணமடையகில்லேன், உமது கிருபையினாலேயே எனது துயர் நீங்கி மனோரதமும் நிறைவேற வேணும்" என்று உரைத்தனன்.

ஐம்பத்தெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## ஐம்பத்தொன்பதாவது ஸர்க்கம்.

### திரிசங்கு மன்னவன் விரும்பியபடி யாகத்தைச் செய்விக்க முயன்ற விசுவாமித்திரர் இதை நிந்தித்த மஹோதயர் முதலானவர்களுக்குச் சாபமிட்டதைச் சதானந்தர் இராமனுக்குக் கூறுதல்.

ராமா! இங்ஙனம் திரிசங்கு மன்னவனால் யாசிக்கப்பட்ட விசுவாமித்திரர் மிக்க அன்புடனே அஞ்சேலென்று கைகுவித்துக்கொண்டே மறுமொழி கூறினர்; "வேந்தே! நீ மிகவும் தர்மிஷ்டன் என்பதை நான் அறிவேன்; உனக்கு நான் சரணமாகின்றேன்: இனி நீ சிறிதும் அஞ்சவேண்டா; அப்படியே யாகத்தை நடத்தி வைக்கின்றேன்; அதற்காக மஹரிஷிகளெல்லோரையும் நான் வரவழைக்கின்றேன்; யாகம் நடைபெறலாம்! குரு சாபத்தினால் கிடைத்த இந்த சண்டாளவுருவத்தோடு கூடவே நீ சுவர்க்கம் சென்று சேரும்படி நான் செய்விக்கிறேன்" என்றார்.

உடனே தமது புத்திரர்களை யழைத்து யாகத்திற்கு வேண்டிய ஸம்பாரங்களைக் குறைவறச் செய்யும்படி கட்டளையுமிட்டனர். சிஷ்யர்களை யழைத்து, ரிஷிகள் முதலானவர்களை இந்த யாகத்திற்காக அழைத்துக்கொண்டு வரும்படி ஆஜ்ஞை செய்தனர். அழைக்கும்போது யாராவது அலக்ஷியமாக ஏது சொன்னாலும் அதை அப்படியே தம்மிடம் தெரிவிக்க வேணுமென்றும் கட்டளையிட்டார் விசுவாமித்திரர்.

அப்படியே அனைவரையும் அழைத்து வருமாறு ஆங்காங்குச் சென்ற சிஷ்யர்கள் பல தேசங்களிற் போய்த் தெரிவித்துவிட்டுத் திரும்பி வந்தார்கள். 'விசுவாமித்திரரே! உமது கட்டளையின்படி எல்லாரும் வந்துகொண்டிருக்கிறார்கள்; வஸிஷ்டருடைய குமாரர்கள் நூற்றுவரும் மஹோதயர் என்கிற ஒருவரும் சீற்றத்தோடு சில வார்த்தைகள் சொன்னார்கள்; அதாவது, யாகம் செய்து வைக்கும் அதிகாரம் பிராமணனுக்கே உள்ளதாயிருக்க, க்ஷத்ரியன் இதைச் செய்து வைக்கிறானோ? அதுவும் சண்டாளனுக்குச் செய்து வைக்கிறானோ? இது எப்படி நடக்கின்றதோ பார்ப்போம்? அந்த யாகத்தில் கொடுக்கப்படும் ஹவிஸ்ஸைத் தேவர்களும் ரிஷிகளும் எங்ஙனம் கொள்ளுகின்றார்களோ பார்ப்போம் என்றனர்' என்று விண்ணப்பஞ் செய்து நின்றனர்.

அதுகேட்ட விசுவாமித்திரர் மிகவும் கோபமடைந்து "இங்ஙனம் தூஷணைசெய்த துராத்மாக்கள் நீறாகியொழிய வேண்டும்; அவர்கள் இப்போதே காலபாசத்தாற் கட்டுண்டு யமன் மனையிற் புகுந்து வெகுகாலம் பிணத்தைப் பிடுங்கித் தின்பவர்களாயிருக்கவேண்டும்! 'முஷ்டிகர்கள்' என்கிற இழிகுலத்தோர்களாகி நாயின்மாமிசம் தின்பவர்களாய் இவ்வுல

கங்களில் திரியவேண்டும்; மஹோதயனென்பவனும் என்னைத் தூஷித்ததற்காக வேடனாகப் பிறக்கவேண்டும்" என்றிவ்வாறு சாபமொழிகளைப் பெய்தனர்.

ஐம்பத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

அறுபதாவது ஸர்க்கம்.

## விசுவாமித்திரர் திரிசங்கு மன்னவனுக்கு அனுக்கிரகஞ் செய்த வரலாற்றைச் சதானந்தர் இராமனுக்குக் கூறுதல்.

இராமா! வஸிஷ்ட புத்திரர்களையும் மஹோதயனென்பவனையும் இங்ஙனம் சபித்த விசுவாமித்திரர், அப்போது அழைத்தபடியே அவ்விடம் வந்துசேர்ந்த மஹரிஷிகளின் மத்தியில் இங்ஙனம் மொழியலானார்;—"இக்ஷ்வாகு வம்சத்தில் தோன்றினவனும் கருமத்தில் மிகச்சிறந்தவனுமான திரிசங்கு மன்னவன் சரீரத்துடனே சுவர்க்கம் செல்ல விரும்பி அதற்குரிய யாகத்தைச் செய்விக்க வேணுமென்று என்னைச் சரணமடைந்து இதோ வந்திருக்கின்றான்; ஆதலால் இவனது மனோரதம் ஈடேறுமாறு நீங்கள் யாவரும் என்னோடு சேர்ந்து இந்த யாகத்தை நன்கு நடைபெறுத்த வேணும்" என்றது.

அதுகேட்ட முனிவர் யாவரும் கூட்டங்கூடி ஒருவர்க்கொருவர் தம்முள் பேசிக்கொண்டார்கள்—'இக்கௌசிகரோ மிகவும் கோபிஷ்டர்; இவருடைய சொற்களுக்கு நாம் இணங்கியிருக்கவே வேண்டும். இவருடைய கோபத்தீக்கு நாம் இரையாகத் தகாது; நாமும் இவரிடத்தில் சாபம் பெறலாகாது; இப்போது யாகத்தை நாம் நடத்திவைக்க வேண்டியதே நலம்; ஆகவே அவரவர்கள் உரிய ஸ்தானங்களில் இருக்கவேண்டும்' என்று.

அனைவரும் இணங்கி யிருந்ததைக்கண்டு உகந்த விசுவாமித்திரர், அந்த யாகத்தில் தாம் அத்வர்யுவாக இருந்தனர். நெறிமுறை தவறாது அவரவர்கள் ஸகல காரியங்களையும் ஒழுங்குபட நடத்தினர். பின்பு அந்த யாகத்தில் ஹவிஸ்ஸின் பகுதிகளைக் கொடுப்பதற்காகத் தேவர்களை அழைக்க, அவர்கள் ஒருவரும் வாராதிருந்தொழிந்தனர். அதுகண்டு மிக்க சீற்றங்கொண்ட விசுவாமித்திரர், ஹோமஞ்செய்கிற அகப்பையை உயரவெடுத்துக்கொண்டு திரிசங்கு மன்னவனை நோக்கி "மன்னவனே! யாகம் கிடக்கட்டும்; நான் சேர்த்து வைத்திருக்கும் தவத்தின் மகிமையைப் பாராய்; எனது தவவலிமையைக்கொண்டே இதோ உன்னை இவ்வுடலோடே சுவர்க்கம் சேர்ப்பிக்கின்றேன்காண்; அரசர்பெருமானே! நீ சரீரத்துடனே சுவர்க்கம் செல்லுக" என்று கூறினர்.

அப்போது எல்லாரும் பார்த்துக் கொண்டிருக்கையில் அம்மன்னவன் அப்படியே சுவர்க்கத்திற்குச் சென்றனன். அப்போது தேவர்களோடு கூடிய இந்திரன், அங்ஙனம் மேல் நோக்கி வருகின்ற அம்மன்னவனைக் கண்டு வெகுண்டு 'அடா மூடனே! நீ குருசாபம் பெற்றுக் கெட்டுவிட்டாய்; ஆதலால் நீ சுவர்க்கத்திற்கு வரத் தகுதியுடையை யல்லை; திரும்பி உன்னிடத்திற்கே போய்ச் சேருவாயாக; தலைகீழாக நிலத்தில் விழுவாயாக' என்று கடுமையாகக் கூறினன்.

அவ்வண்ணமாகவே கீழ்முகமாக விழத் தொடங்கிய திரிசங்கு மன்னவன் விசுவாமித்திரரை நோக்கி "ஸ்வாமின்! என்னைக் காப்பாற்ற வேண்டும்" என்று கதறினன். அங்ஙனம் கதறுகின்ற கூக்குரலைக்கேட்டு விசுவாமித்திரர் மிக்க கோபங்கொண்டு மன்னவன் மீது அருள்புரிந்த சிந்தையுடனே 'அவ்விடத்திலேயே நிற்கக் கடவாய்' என்று கூறினர். உடனே

'உலகுக்கு இவரும் ஒரு ஸ்ருஷ்டிகர்த்தா' என்று சொல்லும் படி தாமும் ஒரு பிரமனைப் போன்று நூதன ஸ்ருஷ்டிகளைச் செய்யத் தொடங்கி வேறு ஸப்தரிஷிகளையும் வேறு நக்ஷத்திர மண்டலங்களையும் ஸ்ருஷ்டித்து விட்டார். அன்றியும் "வேறு இந்திரனையாவது ஏற்படுத்தி விடுகிறேன், அல்லது, சுவர்க்கம் இந்திரனற்றதாகவாவது [திரிசங்குமன்னவனையே இந்திரனாகவுடையதாகவாவது] இருக்கட்டும்" என்று எண்ணிக்கொண்டு கோபத்துடன் தேவதைகளையும் ஸ்ருஷ்டிக்கத் தொடங்கினர்.

பிறகு தேவர்களும் அசுரர்களும் முனிவர்களும் மிகவும் அஞ்சி நடுங்கி விசுவாமித்திரரிடம் வந்து வணங்கி "மஹாநுபாவரே! இந்தத் திரிசங்கு மன்னவன் குருசாபம் பெற்றுக் கெட்டனனாதலால் சரீரத்தோடு சுவர்க்கத்திற்கு வரத் தகுதியுடையவனல்லனே!; இதைத் தேவரீர் ஆலோசிக்க வேண்டாவா?" என்று வினயமாகவுரைத்தனர். அதுகேட்டு விசுவாமித்திரர் "தேவர்காள்! நீங்கள் சொல்லுவது யுக்தமே; ஆயினும் நான் திரிசங்குமன்னவனுக்கு வாக்குத்தத்தம் செய்திருப்பதனால் அதற்குத் தவறாக நான் நடந்து கொள்ள இயலாது; நான் ஒருபோதும் பொய்யனாக ஆகமாட்டேன்; இம்மன்னவனுக்கு இவ்வுடலோடு கூடவே சாசுவதமான சுவர்க்கம் உண்டாகவேண்டும்; இப்போது நான் ஸ்ருஷ்டித்த நக்ஷத்திரங்கள் யாவும் நிலைபெற்றிருக்க வேண்டியவையே; நீங்கள் யாவரும் இதை ஒப்புக்கொள்ளவே வேண்டும்" என்றனர்.

அதற்கு அத்தேவர்கள் யாவரும் இணங்கவேண்டியதாகவே நிச்சயித்து "விசுவாமித்திரரே! நல்லது. அங்ஙனமே யாகுக; நீர் செய்த இச் செய்கைகள் யாவும் நிலைபெற்றிருக்கக் கடவன; நீர் படைத்த நக்ஷத்திரகணங்கள்

யாவும் சோதி மண்டலத்திற்கு வெளியில் விளங்கட்டும், அங்கு இந்தத் திரிசங்கு மன்னவனும் தலைகீழாகவே இருந்து கொண்டு அமரர்களோடொப்ப அமர்ந்திருக்கட்டும்; இவன் தனது கோரிக்கை நிறைவேறப்பெற்றவனாகவே யிருக்கட்டும்; நக்ஷத்திரங்களும் இவனைத் தொடர்ந்து செல்லட்டும்'' என்று அனுமதிபண்ணி, இவரை மிகவும் துதிசெய்து நின்றனர். யாகமும் முடிந்ததாகி அவரவர்கள் தத்தம் இருப்பிடம் போய்ச் சேர்ந்தனர்.

**அறுபதாவது ஸர்க்கம் முற்றிற்று.**

---

## அறுபத்தோராவது ஸர்க்கம்.

### விசுவாமித்திரர் புஷ்கரக்ஷேத்திரத்தில் தவஞ்செய்து கொண்டிருக்கையில் அம்பரீஷ மன்னவன் சுநச்சேபனை நரபலியாகப் பெற்றுவந்த கதையைச் சதானந்தர் இராமனுக்குக் கூறுதல்.

ராமா! விசுவாமித்திரர் பிரமதேஜஸ்ஸை பெறுவதற்காகத் தவம் செய்துகொண்டிருக்கையில், இத்தகைய இடையூறு நேரிட்டதனால், இனி ஒருவகையான இடையூறும் நேராதபடி வேறொரு திசையிலே சென்று ஏகாந்தமாகத் தவம் புரியவேண்டுமென்று முனிவர்களிடம் சொல்லிவிட்டுப் புறப்பட்டுச் சென்று புஷ்கர தீர்த்தத்தின் கரையில் கோரமாகத் தவஞ் செய்துகொண்டிருந்தார். அப்போதும் ஓர் இடையூறு நேர்ந்த கதையை இனிச் சொல்லுகிறேன் கேளாய்;

[என்று சதானந்தர் மற்றொரு கதை சொல்லத் தொடங்கினர்—]

அயோத்திக் கரசனான அம்பரீஷனென்னும் மன்னவன் ஒரு யாகஞ் செய்கையில், இந்திரன் அந்த யாகப் பசுவைக் களவு முறையில் கவர்ந்து சென்றனன். பசு காணாமற்போய்விடவே, புரோஹிதர் மன்னவனை நோக்கி, 'உனது சோர்வினால் யாகப் பசு காணாமற் போய்விட்டது; விரைவில் அதனைக் கண்டுபிடித்துக் கொண்டுவரவேணும்; அல்லது அதற்குப் பிரதியாக நரபலி கொடுப்பதற்கு ஒரு புருடனையாவது கொண்டுவரவேணும்; வேறு வகை யொன்றுமில்லை' என்று கூறினர்.

அதுகேட்ட மன்னவன், பல்லாயிரம் பசுக்களைக் கொடுத்து யாக பசுவைப் பெறுவதாக எண்ணி நாடுகளிலும் காடுகளிலும் நகரங்களிலும் ஓரிடமும் தப்பாமல் தேடிக் கொண்டு போகையில், ப்ருகுதுங்க மென்னும் மலையில் குடும்பத்தோடு வாழ்ந்துகொண்டிருந்த ரிசீக ரென்பவரைக் கண்டனன். கண்டு அவரைத் தெண்டனிட்டு "மஹாநுபாவரே! என்னுடைய யாகப்பசு காணாமற் போயிற்று; பலவிடங்களில் திரிந்து தேடியும் கிடைக்கவில்லை; எனது யாகம் குறைபாடின்றி நிறைவேறவேண்டியிருத்தலால் பசுவுக்குப் பிரதியாக நரபலி கொடுத்தற் பொருட்டு உமது புதல்வர்களில் ஒருவனைக் கருணையோடு தந்திடவேண்டும்; என்னிடம் நூறாயிரம் பசுக்கள் பெற்றுக்கொண்டு ஒரு புத்திரனை விற்பனை செய்து என்னை க்ருதார்த்தனாக்கியருளவேண்டும்" என்று வேண்டிக்கொண்டனன்.

அதற்கு அவர், "அம்பரீஷ மன்னவனே! நீ எவ்வளவு கொடுத்தாலும் நான் எனது மூத்த குமாரனைக்

கொடுக்கவேமாட்டேன்" என்று உறுத்திக்கூறிவிட்டார். அம்மொழியைக் கேட்டுக்கொண்டிருந்த அவரது மனைவி அம்பரீஷனை நோக்கி, "மன்னவனே! எனக்கு இளைய குமாரன்மீது மிகவும் அன்பாதலால் அவனை நான் விற்கமுடியாது என்று தெரிந்துகொள்" என்று கூறினள். இம்மொழிகளைக் கேட்டுக்கொண்டிருந்த இடைக்குமாரனுகிய சுநச்சேபனென்பவன் உடனே தானுகவே எழுந்துவந்து "மன்னவனே! எனது தந்தையோ மூத்த மகனை விரும்பினுர்; தாயோ இளையமகனை விரும்பினுள்; என்னை ஒருவரும் விரும்பாமையினுல் நான்தான் விற்கப்பட்டேனுகிறேன்; ஆதலால் என்னை யழைத்துக்கொண்டு போகலாம்" என்று அம்பரீஷனிடம் கூறினன்.

மன்னவனும் நூருயிரம் பசுக்களை விலையாகத் தந்து அப் புதல்வனைப் பெற்றுக்கொண்டு பெரு மகிழ்ச்சியுடன் புறப்பட்டுத் தேரின்மீது அக் குமாரனை ஏற்றிக்கொண்டு சென்றனன்.

**அறுபத்தோராவது ஸர்க்கம் முற்றிற்று.**

---

## அறுபத்திரண்டாவது ஸர்க்கம்.

### சுநச்சேபன் புஷ்கர க்ஷேத்திரத்தில் விசுவாமித்திரரைச் சரணமடைந்து உய்ந்ததைச் சதானந்தர் இராமனுக்குக் கூறுதல்.

ராகவ! இங்ஙனம் சுநச்சேபனை விலைக்கு வாங்கிச் சென்ற அம்பரீஷர் நடுப்பகலில் புஷ்கர க்ஷேத்திரத்தில் இளைப்பாறத் தங்கினர். அப்போது சுநச்சேபன் புஷ்கர க்ஷேத்திரத்தில் மகரிஷிகளோடு கூடத் தவஞ்செய்துகொண்டிருக்கும் தனது மாதுலனை விசுவாமித்திரரைக் கண்டனன்.

அவன் தனது மனவருத்தத்தைச் சொல்லிக்கொண்டே அவரது மடியில் வந்து விழுந்து, "ஸ்வாமீ! எனக்குத் தாயுமில்லை தந்தையுமில்லை; உம்மையே புகலாகப் பற்றுகின்றேன்; நீரே அருள் புரிந்து அடியேனைக் காத்தருளவேண்டும்; அம்பரீஷ மன்னவனுடைய யாகமும் குறையற நிறைவேறி நானும் உயிர்வாழ்ந்திருக்கும் வண்ணம் கருணைபுரிய வேண்டும்" என்றனன்.

அதுகேட்ட விசுவாமித்திரர் அப்போதே தமது புதல்வர்களாகிய மதுஷ்யந்தன் முதலானவர்களை யழைத்து, 'தந்தையின் கட்டளைப்படி நடக்கவேண்டியது உங்களுக்குக் கடமையன்றோ; உங்களுடைய நற்குணம் வெளியாவதற்கு இப்போது நல்ல சமயம் நேர்ந்திருக்கின்றது; இந்த சுநச்சேபனுக்கு நான் அபயப்பிரதானம்பண்ணியிருக்கின்றேனாதலால் என்னுடைய வாக்கு மெய்ம்மை பெறுமாறு உங்களில் ஒருவன் அம்பரீஷ மன்னவனுடைய யாகத்திற்குப் பசுவாக இருந்து இவனை உயிர்வாழ்விக்கவேணும்' என்றனர்.

ராமா! அதுகேட்டு அப்புதல்வர்கள் பரிகாசமான பதிலுரையைக்கூறி அக்கட்டளைக்கு இணங்காதொழிந்தனர். அதனால் மிக்க சீற்றங்கொண்ட விசுவாமித்திரர் முன்பு வஸிஷ்டபுத்திரர்களுக்குப் போலவே இவர்களுக்கும் சாபம் கொடுத்துவிட்டு, மிகவும் வாடின முகத்தோடு நிற்கின்ற சுநச்சேபனுக்கு அஞ்சேலென்று கைகவித்து அவனுக்கு இரண்டு மந்திரங்களைச் செவியில் உபதேசித்து "பிள்ளாய்! அம்பரீஷ மன்னவனுடைய யாகத்தில் நீ பசுவாக இருக்க நேரும்போது அங்கு இவ்விரண்டு மந்திரங்களையும் பாடினையாகில் உயிர்வாழப்பெறுவாய்" என்று சொல்லி நியமனம் தந்தனர்.

அவ்வுபதேசத்தைப் பெருமகிழ்ச்சியோடு பெற்றுக் கொண்டு அம்பரீஷனிடம் வந்து சேர்ந்த சுநச்சேபன் அம் மன்னவனோடுகூட விரைவாக யாகசாலைக்கு வந்து சேர்ந்தனன். யாகப்பசுவுக்குச் செய்யவேண்டிய கோலங்களை யெல்லாம் இவனுக்குச்செய்து யூபஸ்தம்பத்தில் இவன் கட்டப்பட்டனன். அப்போது விசுவாமித்திரருடைய உபதேசமொழியின்படியே அவ்விரண்டு மந்திரங்களையும்பாடி இந்திரன் உபேந்திரன் என்ற இரண்டு தேவதைகளையும் தோத்திரம் செய்து தெய்வானுக்கிரஹத்தினால் தீர்க்காயுள் பெற்றனன். மன்னவனது யாகமும் குறையின்றியில் நிறைவேறி சுநச்சேபனும் ஆயுள் பெற்றுக்களிக்கும்படியாக இங்ஙனம் அருள் புரிந்த விசுவாமித்திரர் அந்தப் புஷ்கர க்ஷேத்திரத்தில் ஆயிரமாண்டு தவநிலையில் ஊன்றியிருந்தனர்.

**அறுபத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.**

---

## அறுபத்துமூன்றாவது ஸர்க்கம்.

விசுவாமித்திரர் தவப்பயனாகப் பிரமனருளால் ரிஷிபட்டம் பெற்றும் திருப்திபெறாமல் மீண்டும் தவம் செய்ய, அப்போது மேனகைவந்து தவத்தைக்கெடுக்க, பிறகு வடதிசை சென்று கடுந்தவம் புரிந்து மஹரிஷி பட்டம்பெற்றும் மீளாமல் பெருந்தவ மியற்றியதைச் சதானந்தர் கூறுதல்.

ஆயிரமாண்டு நிறைந்து தவம் முடிவுபெற்றபின் விசுவாமித்திரருக்குப் பேறு அளிக்க வானவர்கள் அனைவரும் அங்கு வந்தனர். வானவர் தலைவராய நான்முகக் கடவுள் விசுவாமித்திரரை நோக்கி 'நீர் செய்த தவத்தின் பயனாக ரிஷி

யானீர்' என்று சொல்லிவிட்டு அமரர்களோடு தன்னுலகம் மீண்டு சென்றனர்.

அவ்வளவிலும் திருப்தியடையாத விசுவாமித்திரர் மீண்டும் கோர மாதவம் புரியத் தொடங்கினர். வெகுகாலஞ் சென்ற பின் ஒருநாள் மேனகை யென்னும் தேவமாது புஷ்கர க்ஷேத்திரத்திற்கு வந்து நீராடுகையில் அவளை விசுவாமித்திரர் கண்ணுற்றுக் காமபரவசராகி இனிய மொழிகளாலே அம்மடந்தையைத் தனது ஆச்ரமத்திற்கு வந்து சேரும்படி செய்துகொண்டனர். பத்து வருஷகாலம் அவளோடு கூடியிருந்து காலங்கழித்த விசுவாமித்திரர் ஒருநாள் கழிவிரக்கங் கொண்டு 'அந்தோ! என்ன காரியம் செய்தோம்!' என்று தம்மைத்தாமே வெறுத்து, 'தவத்திற்கு இடையூறு செய்ய நினைத்த தேவர்களின் மாயையினால் நேர்ந்த பிழையிது' என்று துணிந்து கடுங்கோபங்கொண்டிருக்கையில் அஞ்சி நடுங்கிக் கைகூப்பி நின்ற அவ்வமர மங்கையைச் சபியாமல் இனியசொற்களையே சொல்லி யனுப்பிவிட்டு இமயமலைக்குச் சென்று சேர்ந்தார்.

அங்குக் கௌசிகி நதியின் கரையிலே மிக்க பயங்கரமாகத் தவம்புரியத் தொடங்கினர். ஓராயிரமாண்டு அங்ஙனம் செல்லுகையில் இனி என்னாகுமோவென்று தேவர்கள் அஞ்சி முனிவர்களுடன் பிரமனைச்சென்று சார்ந்து "ஸ்வாமின்! விசுவாமித்திரருக்கு மஹரிஷி யென்கிறபட்டம் அளிப்பதே நலம்" என்று கூறியழைத்தார்கள்.

அப்படியே அளிக்க இணங்கிய நான்முகப் பெருமான் விசுவாமித்திரரிடம் வந்து சேர்ந்து 'அப்பா உனது கடுந்தவத்தினால் மகிழ்ச்சிபெற்ற யான் உனக்கு மஹரிஷி யென்கிற பட்டப்பெயர் தந்திட்டேன்' என்ன; அதுகேட்ட அவர்

களிப்புமின்றி வருத்தமுமின்றிக் கைகளைக் கூப்பிக்கொண்டு 'பெருமானே! உமது திருவாக்கினால் என்னை மஹரிஷி யென்றபோதே நான் ஜிதேந்திரியனாகின்றேனென்று கொள்ளலாமன்றோ' என்றார்; அதற்குப் பிரமன் 'இப்போது நீர் இந்திரியங்களை வென்றவராக ஆகின்றீரல்லீர்; இன்னமும் அதற்குரிய முயற்சி செய்யவேண்டும்' என்று சொல்லிவிட்டுத் தன் இருப்பிடம் சென்றனன்.

பிரமனோடு தேவர்கள் யாவரும் புறப்பட்டுப் போனபின் விசுவாமித்திரர் முன் செய்த தவங்களனைத்தினும் மிகக் கொடியதோர் தவத்தை இயற்றத் தொடங்கிக் கைகளை உயரவெடுத்து அந்தரத்தில் நின்று, வெய்யிற்காலத்தில் தீயிடையே நின்றும் குளிர் காலத்தில் நீர்நிலைகளில் நின்றும் இரவு பகல் வாசியற இங்ஙனம் ஆயிரமாண்டளவும் கோர மாதவம் செய்தனர். அதுகண்டு தேவாதி தேவனான இந்திரன் நடுக்கமுற்று அரம்பையென்னும் வேசியை நோக்கி இங்ஙனம் கூறலாயினன்;

அறுபத்துமூன்றுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## அறுபத்திநான்காவது ஸர்க்கம்

விசுவாமித்திரருடைய தவநிலையைக் கெடுக்க இந்திரன் அரம்பையை அனுப்பினதையும், அவர் அவட்குச் சாபங்கொடுத்துப் பின்பு வருந்தி மீண்டும் கடுந் தவம் புரியக் கருதினதையும் சதானந்தர் இராமனுக்குக் கூறுதல்.

ராமா! இந்திரன் ரம்பையை நோக்கி 'நங்காய்! காம விகாரமடையும்படி விசுவாமித்திரரைக் கலங்கச் செய்ய வேண்டுவது உனது கடமை, தேவர்கட்காக இக்காரியம் நீ தான் செய்யத் தகும்' என்றான். அதுகேட்ட அவள்

'தலைவனே! விசுவாமித்திர முனிவர் மிகவும் கொடியவர்; சீறிச் சிவந்து சபித்திடுவாராதலால் நான் மிகவும் அஞ்சுகின்றேன்; இக்கட்டளையை மாத்திரம் எனக்கு நீர் இடாதிருக்க வேண்டுமென்று பணிந்து கேட்டுக்கொள்ளுகிறேன்' என்றனள்.

அதற்கு இந்திரன், "மாதர்க்குயர்ந்தவளே! நீ அஞ்ச வேண்டா, என் சொற்படி செய்! நானும் வஸந்தருதுவில் குயிலுருவம் தரித்துக் காமனையும் துணை கொண்டு உன்னருகில் ஒரு மரத்தில் வந்து சேர்வேன்; உன் அழகினாலே விவாமித்திரரை ஈடுபடுத்தித் தவநிலையைக் குலைத்துவிடு" என்று துணிவுகூறிப் புறப்படச் செய்தனன். அவளும் புறப்பட்டு மேலான அலங்காரங்கள் செய்துகொண்டு பலவகைச் சிங்காரங்களால் விசுவாமித்திரரை மயக்க வாரம்பித்தாள். அதனைநோக்கிய விவர் 'இது இந்திரனுடைய மாயை போலும்' என்றெண்ணி, பதினாயிரமாண்டு கல்லாய்க் கிடக்கும்படி அவ்வரம்பையைச் சபித்து, 'பிறகு வஸிஷ்ட முனிவர் தவ வலிமையால் உன்னை இச் சாபத்தினின்றும் விடுவிப்பார்' என்று சாப விடையும் கூறினர். இங்ஙனம் கடுஞ்சினங்கொண்டு சாபங்கொடுத்தவர், உடனே 'அந்தோ! கோபத்திற்கு ஆளாயினேமே! என்று கழிவிரக்கம் கொண்டார்!

இவரது சாபத்தின்படி ரம்பை கல்லாகி யொழிந்தனள் குயிலாக வந்த இந்திரனும் துணையாக வந்த மன்மதனும் அஞ்சியோடிப்போயினர். பிறகு விசுவாமித்திரர் 'இனி யார் எது செய்யினும் நாம் சிறிதும் சீற்றங்கொள்ளாமலே யிருக்க வேண்டும். கோபத்தினால் தவநிலை குன்றுதலால் நமது இஷ்டஸித்தி தாமதித்தே போகின்றது; இனி இப்படி ஆகவொண்ணாது' என ஒருவாறு மனத்தைத் திடப்படுத்திக்

கொண்டு, "பிரமரிஷியென்கிற பட்டம் பெறுமளவும் நான் ஐம்புலன்களையும் வென்று சரீரத்தை வாட்டிவிடக்கடவேன்; நூறுண்டு ஆனாலும் மூச்சுகூட விடாமலிருக்கக்கடவேன்" என்று சங்கற்பஞ் செய்துகொண்டார்.

அறுபத்துநான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## அறுபத்தைந்தாவது ஸர்க்கம்.

### விசுவாமித்திரர் வடதிசையைவிட்டுக் கீழ்த்திசையிற்சென்று கடுந்தவம் புரிந்து தம் இஷ்டம் நிறைவேறப் பெற்ற படியை இராமனுக்குச் சதானந்தர் கூறுதல்.

ராமா! இங்ஙனம் மிகக்கடினமான வுறுதியுடன் வடதிசையைவிட்டுக் கீழ்த்திசை சென்ற விசுவாமித்திரர் ஆயிரமாண்டளவும் மிக்கக்கொடிய தவம் புரிந்தனர். அப்போது அந்தத் தவநிலைக்குப் பலபல இடையூறுகள் உண்டாகியும் மனம் திடமாயிருந்ததனால் சீற்றங்கொள்ளப் பெறவில்லை. எவ்வகையினும் கோபங்கொள்ளலாகாதென்கிற உறுதியுடனே நீண்ட தவம் இயற்றினர். அங்ஙனம் ஆயிரமாண்டு தவமியற்றிமுடித்த விசுவாமித்திரர் அன்னபாரணை செய்யப் புகுங்கால் இந்திரன் அந்தண வேடத்துடன் வந்து அணுகி அவ்வன்னத்தைத் தனக்குத் தந்திடுமாறு இரந்தனன். அப்படியே அவ்வன்னம் முழுவதையும் அவனுக்குத் தந்திட்டு அப்போதும் கோபங்கொள்ளாமல் வாளாஇருந்திட்டார். மீண்டும் ஆயிரமாண்டு மூச்சுவிடாமல் தவஞ்செய்துகொண்டிருந்த அவ்விசுவாமித்திரரது சிரத்தில்நின்று புகைகிளரத் தொடங்கிற்று. அதனால் மூவுலகமும் நடுக்கமும் தாபமும் உற்றது. பிறகு கந்தருவர் தேவர் அசுரர் அரக்கர் முத

லாயினேர் அனைவரும் ஒளிகுறைந்து மதிமயங்கி மிக்க துயரத்துடனே நான்முகக் கடவுளிடம் வந்து, "ஸ்வாமின்! விசுவாமித்திரரது தவக்கனல் பொறுக்கமுடியாததா யிருக்கின்றது; எவ்வகையான இடையூறு செய்யப்பார்த்தும் அத்தவம் சிறிதும் முட்டுப்படாது மேன்மேலும் கோரமாகவே வளர்ந்து செல்கின்றது; அப்பெரியவர் கோரும் பலன் எதுவோ, அதனை உடனே அவர்க்கு அளித்திடுதல் நன்று; இல்லையேல் அவரது தவத்தினுல் மூவுலகும் விரைவில் நாசமடைந்திடும்போல் காண்கிறது; பிரமதேவனே! திசைகள் யாவும் இருள்மூடி ஒளிமழுங்கிவிட்டன; கடல்கள் யாவும் கலங்கிவிட்டன; மலைகள் வெடிக்கின்றன; நானிலம் நடுங்குகின்றது; மற்றுமுள்ள விபரீத நிலைமைகள் வாய் கொண்டு பேச வொண்ணுதவை, இவ்விஷயத்தில் பரிஹாரமொன்றும் அறிகின்றிலோம்; மேன்மேலும் விபரீதங்கள் முற்றுவதற்கு முன்னமே அம்முனிவர்க்கு நீர் அனுக்கிரஹம் செய்து முடிக்கவேண்டும்" என்று ஒருமிடருக முறையிட்டனர்.

பின்பு அக்கூட்டங்களுடன் விசுவாமித்திரரிடம் வந்து சேர்ந்த நான்முகக் கடவுள் அவரை நோக்கி, "பிரமரிஷியே! உமது கடுந்தவத்தினுல் மிகவும் களிப்புற்ருேம்; நீர் பிராமணத்தன்மையை அடைந்தவராய்விட்டீர்; உமக்கு நீண்ட ஆயுளையும் நல்கினேன்; இனி நீர் தவத்தை விட்டிடல் வேண்டும்" என்றுரைக்க; அதுகேட்டுப் பெருமகிழ்ச்சி கொண்ட விசுவாமித்திரர் தெண்டனிட்டு "பிராமணத்தன்மையும் நீண்டவாணுளும் எனக்குத்தந்தது உண்மையாயின், ஓங்காரமும் வஷட்காரமும் வேதங்களும் என்னை வரிக்க வேண்டும்; [அதாவது, வேதங்களை ஓதுவித்தல், வைதிகக்

கிரியைகளைச் செய்வித்தல் முதலிய அதிகாரங்கள் யாவும் எனக்கு வரவேண்டும்.] வானவர்காள்! வஸிஷ்ட முனிவரும் இங்கேவந்து தமதுவாக்கினால் என்னைப் பிரமரிஷி யென்று கூறவேண்டும்; இங்ஙனே எனது கோரிக்கைகள் நிறைவேறப் பெறுமாயின் நீங்கள் புறப்பட்டுப் போகலாம்'' என்றனர்.

பிறகு வஸிஷ்டமாமுனிவர் வானவர்களால் வேண்டிக் கொள்ளப்பட்டு விசுவாமித்திரரிடம் வந்து நேசம் செய்து கொண்டு "உம்மைத் தேவர்கள் யாவரும் ஒப்புக்கொண்டபடி நானும் பிரமரிஷியென்றே ஒப்புக்கொண்டேன்'' என்று இசைந்து இயம்பினர். பிறகு அவரவர்கள் தத்தம் இருப் பிடங்கள் சென்று சேர்ந்தனர். இராமபிரானே! இம்முனி வரால் இங்ஙனம் அரும்பெருந் தவத்தின் பயனாக அந் தணமை அடையப்பட்டது; இவருடைய பெருமை சொல்லி முடிக்கற்பாலதன்று—

என்று இவ்வண்ணமாக விசுவாமித்திரரது சரிதை களைச் சதானந்த முனிவர் இராமனுக்குக் கூறி முடித்தனர்.

இவ்வளவும் கேட்டுக்கொண்டிருந்த ஜனக சக்ரவர்த்தி இவ்வளவு பெருமைவாய்ந்த மாமுனிவர் தசரத புத்திரர் களோடுங்கூடத் தன்னில்லத்திற்கு எழுந்தருளி அனுக்கிர கஞ்செய்ததுபற்றித் தன்னுடைய ஆனந்தமிகுதியை அடிக் கடி விஞ்ஞாபனஞ் செய்துகொண்டு, அப்போது சூரியன் அஸ்தமிக்குங் காலம் ஆனதனால் மீண்டும் மறுநாள் காலையில் சந்திப்பதாகக் கூறி விசுவாமித்திரரிடம் விடைபெற்றுத் தன் இருப்பிடம் சார்ந்தவளவில், அம்முனிவரும் தாசரதி களுடன் தம்விடுதியிற் சென்று சேர்ந்தனர்.

**அறுபத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.**

---

## அறுபத்தாறவது ஸர்க்கம்.

### ஜனகமன்னவன் தன்னிடமுள்ள வில்லின் வரலாற்றைக் கூறித் தனது பிரதிஜ்ஞையையும் தெரிவித்தல்.

மறுநாட் காலையில் ஜனகமன்னவன் காலைக்கடன்களை முடித்துக்கொண்டு தாசரதிகளோடுகூட விசுவாமித்திரரை ஸபைக்கு வரவழைத்து உரிய பூசைகளைச்செய்து 'அடியேனுக்கு ஏதேனும் கட்டளையிடவேண்டும்' என்று கேட்டுக்கொள்ளுகையில், விசுவாமித்திரர் "மன்னவர் மணியே! உன்னிடமிருக்கின்ற மிக்க பெரும்புகழ்பெற்ற வில்லை இந்தத் தாசரதிகள் காணவிரும்புகின்றனர்; அதனை இவர்கட்குக் காட்டவேணும்" என்றனர். அதுகேட்ட ஜனகமன்னவன் அந்த வில் தன்னிடத்தில் வந்து சேர்ந்த வரலாற்றை எடுத்துரைக்கத் தொடங்கினன்;—

எங்கள் குலத்தில் நிமியென்பவர்க்கு ஆறுவது புருடர் தேவராதர் என்பவர் சிவபிரானிடமிருந்த இவ் வில்லை ஏற்றுக்கொண்டார்; அது எப்படியென்னில்— முற்காலத்தில் சிவபிரான் தக்ஷயாகத்தில் தேவர்களை நலியும்போது இவ் வில்லை அவலீலையாக நாணேற்றிக்கொண்டு சினந்து தேவர்களை நோக்கி, 'இவ் வேள்வியில் எனக்குரிய பகுதியை நீங்கள் கொடாததனால் உங்கள் தலைகளை இவ்வில்லினால் அறுத்துத் தள்ளிவிடுகிறேன்' என்று கூற, அப்போது தேவர்கள் அஞ்சி நடுங்கி வணங்கி வேண்டிக்கொள்ள, சிவபெருமான் திருவுள்ளமிரங்கி உவந்து அந்தவில்லைத் தேவர்கட்கு அளித்திட, அப்போது எமது குலத்தில் பெரியவராய் விளங்கின தேவராதரிடத்தில் அவ் வில் கொடுத்துவைக்கப் பட்டது; அதுவே இந்த வில். அன்றியும், நான் யாகஞ் செய்வதற்காக நிலத்தை உழும்போது உழுபடைச் சாலி

யிருந்து தோன்றிய பெண்மணி சீதை யென்னும் பெயருடனே விளங்கிவருகின்றாள். என்னுடைய பெண்ணாக வளர்க்கப்பட்டுவரும் இவள், மேற்கூறிய வில்லை நாணேற்றி வளைக்கும் வல்லமை யுடையவர்க்கே விவாஹம் செய்து கொடுக்கத் தக்கவளாக ஸங்கல்பிக்கப்பட்டிருக்கிறாள். இதனை யறிந்த பலபல அரசர்களும் இங்கு வந்து இவ்வில்லின் வலிமையைப் பரீக்ஷித்துப் பார்த்துக் கையொழிந்துபோய்விட்டார்கள். இவ்வில்லைத் தூக்கிப்பார்க்கவும் முடியாமற் போய் விட்டனர். அதனால் சீதையை ஒருவர்க்கும் விவாஹஞ்செய்து கொடுக்க அவகாசமேற்படாமல் போயிற்று. அதனால் மிக்க சினங்கொண்ட வேந்தர்கள் என்னோடு போர்புரிவதற்காக இந் நகரைச் சூழ்ந்துகொண்டார்கள். இந்த வில்லை வளைக்கவேண்டுமென்று நான் சுல்கம் வைத்திருந்ததை அவ்வரசர்கள் தங்களுக்குப் பெருத்த அவமானமாக எண்ணி அதனால் யுத்தஞ் செய்ய முன்வந்தார்கள்.

முனிவரே! அங்ஙனம் ஓராண்டு போர் நடந்ததனால் எனது படைகள் பெரும்பாலும் நாசமடைந்தன. பிறகு நான் தவம் புரிந்து தேவகணங்களை மகிழ்வித்து அத்தேவர்களின் அருளினால் சதுரங்க சேனைகளைப் பெற்றேன். பிறகு அம்மன்னவர்களையெல்லாம் பங்கமடைந்து தொலையும்படி செய்திட்டேன். அத்தகைய மேன்மை வாய்ந்த இப்பெரு வில்லைத் தாசரதிகளுக்குங் காட்டுகின்றேன். இராமபிரான் இவ்வில்லை நாணேற்றி வளைப்பானாகில் சீதையை அக் குமாரனுக்கு மணம் புரிவிப்பேன்— என்று ஜனக மன்னவன் சொல்லி முடித்தனன்.

அறுபத்தாறுவது ஸர்க்கம் முற்றிற்று.

அறுபத்தேழாவது ஸர்க்கம்.

## இராமன் வில்லை முறித்தலும் அயோத்தியிலிருந்து தசரத மன்னவனை வரவழைக்க முயலுதலும்.

இங்ஙனம் ஜனக மன்னவன் கூறியதைக் கேட்ட விசுவாமித்திரர் அந்த வில்லை இராமனுக்குக் காட்டுக வென்றார். ஜனகனும் தனது வேலைக்காரர்களை யழைத்து, அவ்வில்லை அங்குக்கொணர்ந்து சேர்க்குமாறு கட்டளையிட்டனன். அவர்கள் அவ்வில் இருக்கும் பெட்டியை எட்டுச் சக்கர வண்டியிலேற்றி ஐயாயிரம்வீரர்கள் மிகுந்த சிரமத்துடன் இழுத்துக்கொண்டு வருமாறு செய்தனர். அங்ஙனம் அதுவந்து சேர்ந்த பின்பு விசுவாமித்திர முனிவனை நோக்கி ஜனகமன்னவன் கைகூப்பிக்கொண்டு—

"முனிவரே! இப்பெருவில்லானது மிகவும் சிறப்புப் பெற்றது; தேவர் அசுரர் அரக்கர் யக்ஷர் கந்தருவர் முதலான அனைவரும் ஒன்றுகூடினும் இவ்வில்லை நாணேற்றகில்லார்; அப்படியிருக்க, மனிதர்களில் இதற்கு வல்லமையுள்ளார் யாவர்? இத்தகைய பெருவில் இதோ கொண்டுவரப்பட்டுளது; இதனை இவ்வரச குமாரர்கள் பார்க்கட்டும்" என்று கூற,

விசுவாமித்திரர் இராமனை யழைத்து, குழந்தாய்! இவ்வில்லைப்பார்' என்றார். அதுகேட்டு இராமன் ஒரு பெட்டியிலிருந்த அந்த வில்லை உற்று நோக்கி 'ஸ்வாமின்! இச்சிறந்த வில்லை எனது கையினால் தொட்டுப் பார்க்கிறேன்; பிறகு தூக்கிப்பார்க்கவும் முயற்சி செய்கிறேன்' என்று கூறி, பல்லாயிரவர் பார்த்துக்கொண்டிருக்கையில் அவலீலையாகவே அவ்வில்லை நடுவில் பிடித்தெடுத்து நிறுத்தி, உடனே நாணேற்றி யிழுக்கையில் அவ்வில் இடையில் இற்றுமுறிந்

தது. அப்போதுண்டான பேரொலி வருணிக்க முடியாத தாயிருந்தது. அவ்வொலி செவியில் விழப்பெற்ற பலரும் மூர்ச்சித்து நிலத்தில் விழுந்து அரிதில் தெளிந்தனர்.

அப்போது ஜனகமன்னவர் கைகூப்பிக்கொண்டு விசுவாமித்திரரை நோக்கி "ஸ்வாமின்! இராமனுடைய வலிமையை நான் கண்டுகொண்டேன்; மிகஆச்சரியமாக வுள்ளது; இஃது இங்ஙனே நடைபெறுமென்று நான் கனவிலும் கருதவில்லை. இனி எனது மகளான ஸீதை இராமனைக் கணவனாகப்பெற்று எமது குலத்திற்குப் பெரும் புகழ் விளைப்பாள்; இவளுடைய விவாஹத்திற்காக நான் கொண்டிருந்த சபதமும் நிறைவேறிற்று. இனி விவாஹம் நடைபெற வேண்டியதே. அயோத்தியில் வாழும் தசரத மன்னவர்க்கு இச்செய்தியை அறிவித்து விரைவில் அவரை இங்கு வரவழைக்கவேண்டும்" என்றுரைக்க, முனிவரும் அங்ஙனமே யாகுகவென்று இசைந்து நிற்க, மன்னவன் மந்திரிகளிடம் விவாஹமுகூர்த்தப்பத்திரிகை கொடுத்துத் தசரதரை அழைத்து வருமாறு ஏவினன்.

அறுபத்தேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## அறுபத்தெட்டாவது ஸர்க்கம்.

### ஜனகமன்னவனது தூதர்களால் செய்தியறிந்த தசரதர் வஸிஷ்டர் முதலானாரோடு ஆலோசித்து மிதிலைக்குப் புறப்பட நிச்சயித்தமை கூறல்.

ஜனகமன்னவனது கட்டளையின்படியே அயோத்தி நகர்க்குப்புறப்பட்டவர்கள் நான்காவது நாள் அங்குச்சென்று சேர்ந்தார்கள். தசரத மன்னவனையும் முறையில் காணப்பெற்றார்கள். பிறகு கைகூப்பிக்கொண்டு "மன்னவர்

மணியே! மிதிலை நகர்க்கு அரசரான ஜனக சக்கரவர்த்தி உமது யோகக்ஷேமங்களை வினவுகின்றார்; அன்றியும் தமது புதல்வியாகிய ஸீதைக்கு விவாஹசுல்கமாக வைக்கப்பட்டிருந்த வில் நெடுநாளாக ஒருவராலும் எடுக்கவும் முடியாதபடி யிருந்து, இப்போது உமது திருக்குமாரரான இராமபிரானால் எடுத்து வளைக்கப்பட்டு முறிபட்டதனால் ஏற்கனவேயுள்ள பிரதிஜ்ஞையின்படி ஸீதையை இராமனுக்குக் கொடுத்துத் திருக்கலியாணம் நடத்த நிச்சயித்திருப்பதை நீங்கள் இசைந்து ஸபரிவாரராய் மிதிலாபுரிக்கு விஜயஞ் செய்து சுபகாரியத்தைச் சடக்கென நிறைவேற்றவேணுமென்றும் வேண்டிக்கொள்ளுகிறார்" என்று விண்ணப்பஞ் செய்தார்கள்.

அதுகேட்டலும் மிக்க மகிழ்வெய்திய தசரத மன்னவன் வஸிஷ்டர் வாமதேவர் முதலிய முனிவர்களையும் மந்திரிகளையும் அழைப்பித்து அந்த ஆனந்தச் செய்தியை அறிவித்து, எல்லாருமாக நாளைக்குப் புறப்பட்டு மிதிலைக்குச் செல்லவேணுமென்று அறுதியிட்டனன்.

அறுபத்தெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## அறுபத்தோன்பதாவது ஸர்க்கம்.

## தசரதர் மிதிலாபுரி வந்துசேர்ந்து ஜனகரோடு ஸம்பாஷித்தமை கூறல்.

மறுநாட் காலையில் தசரத மன்னவன் கலியாணப்புறப்பாட்டிற்கு உரியகட்டளைகளை வெகு அழகாகச் செய்தனன். சேனைகளும் பல்லக்குகளும் தேர்களும் காலாட்களும் புரோஹிதர்களும் முன்னே புறப்பட்டுப் போகவேண்டுமென்று

துரிதப்படுத்தி அங்ஙனமே அனைவரையும் பலபல அலங்காரங்களுடனே புறப்படச் செய்து தானும் புறப்பட்டு நாலு நாள் கடந்து ஐந்தாநாளில் யாவரும் மிதிலாபுரி சென்று சேர்ந்தனர்.

இவர்களது வருகையை யறிந்து மகிழ்ந்த ஜனக மன்னவன் முறைப்படி எதிர்கொண்டனன். மிக்க பெரும்புகழ் படைத்த தசரதசக்ரவர்த்தியும் வஸிஷ்டர் முதலிய மாமுனிவர்களும் தன் இருப்பிடம் நோக்கி வந்தமைபற்றித் தனக்குண்டான அளவுகடந்த ஆனந்தத்தை அடிக்கடி விண்ணப்பஞ் செய்து கொண்டனன். தனக்கும் தனது குலத்திற்கும் பெருமேன்மையுண்டான மஹாபாக்கியத்தை வாயாரச் சொல்லிக்கொண்டனன். "இப்போது நடைபெற்று வருகின்ற எனது வேள்வியின் முடிவில் விவாஹசுப முகூர்த்தத்தை நிறைவேற்றிவைக்கவேணும்" என்றும் பிரார்த்தித்துக்கொண்டனன்.

அதற்குத் தசரதர் 'கன்னிகையைக் கொடுக்கக் கடமைப்பட்டிருக்கின்ற நீர் எந்த சுபமுகூர்த்தத்தில் கொடுக்கின்றீரோ அந்த சுப முகூர்த்தத்தில் நாங்கள் பெற்றுக் கொள்ளக் கடமைப்பட்டிருக்கிறோம்; இனி எங்களால் என்ன தடை? எதையும் உமது கட்டளையின்படியே நடத்தக் காத்திருக்கின்றோம்' என்றனர். இப்படி ஒருவர்க்கொருவர் அழகாக வார்த்தையாடிக் கொண்டு அவ்விரவைப் பெரு மகிழ்ச்சியோடு கழித்தனர்.

**அறுபத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.**

### எழுபதாவது ஸர்க்கம்.

## வஸிஷ்ட முனிவர் இக்ஷ்வாகு ஸந்தான பரம்பரையைப் பகர்தல்.

மறுநாட் காலையில் ஜனகமன்னவன் காலைக்கடன்களை முடித்துக்கொண்டு புரோஹிதரான சதானந்தரை விளித்து 'ஸ்வாமின்! என்னுடைய இளைய தம்பி குசத்வஜனென்பவன் இக்ஷுமதி யென்கிற நதியின் கரையில் ஸாங்காச்யை யென்னும் நகரில் வாழ்கின்றானல்லவா? அவனை நான் காண விரும்புகின்றேன்; அவனும் இங்கு வந்து ஸீதா விவாஹக் காட்சியைக் கண்டு களிக்கவேணும்' என்று பேசிக்கொண்டிருக்கையில் அங்கு வேலைக்காரர் சிலர் வந்துசேர, அவர்களுக்குக் கட்டளையிட்டனுப்ப, அவர்கள் குதிரைகளின் மீது ஏறிக்கொண்டு புறப்பட்டுப் போயினர்.

ஸாங்காச்யா நகரத்தில் அவர்கள் குசத்வஜரைக் கண்டு செய்தி சொல்ல, அவரும் கேட்டுக்களித்து உடனே புறப்பட்டு மிதிலைமா நகர் வந்து சேர்ந்து, தமையனான ஜனகரையும் சதானந்தரையும் கண்டு வணங்கி ஆஸனத்தில் அமர்ந்தனர்.

பிறகு தசரதமன்னவரும் புரோஹிதர் முதலானோரோடு கூட அவ்விடம் வரவழைக்கப்பட்டு வந்து சேர்ந்து, தமது வம்ச பரம்பரையைத் தம் குலகுருவான வஸிஷ்டர் எடுத்துரைப்பர் என்று கூறினவளவிலே வஸிஷ்டமா முனிவர் விசுவாமித்திரருடைய அனுமதியையும் பெற்றுக்கொண்டு வம்சாவளியை எடுத்துரைக்கத் தொடங்கினர்.

பிரமனிடத்தில் நின்று மரீசிதோன்றினார்.

மரீசியின் புதல்வர்-காசியபர்.

காசியபரிடமிருந்து—விவஸ்வான் தோன்றினன்.

விவஸ்வானது புத்திரர்—மனுப்ரஜாபதி.

மனுப்ரஜாபதியின் குமாரர்—இக்ஷ்வாகு.

இந்த இக்ஷ்வாகுவே அயோத்தியை முந்துற அரசாண்டவர்.

இக்ஷ்வாகுவின் புத்திரர்—குக்ஷி.

குக்ஷியின் புதல்வர்—விகுக்ஷி.

விகுக்ஷியின் புத்திரர்—பாணர்.

பாணருடைய புத்திரர்—அநரண்யர்.

அநரண்யருடைய புத்திரர்—ப்ருது.

ப்ருதுவின் புத்திரர்—திரிசங்கு.

திரிசங்குவின் மகன்—துந்துமாரன்.

துந்துமாரனுடைய மகன்—மாந்தாதா.

மாந்தாதாவின் மகன்—ஸுஸந்தி.

ஸுஸந்தியின் மக்கள்—துருவஸந்தி, ப்ரஸேனஜித்.

துருவஸந்தியின் புத்திரர்—பரதர்.

பரதருடைய புதல்வர்—அஸிதர்.

அந்த அஸிதர்க்குப் பலர் பகைவராக ஏற்பட்டனர்; அவர் அவர்களோடு எதிர்த்துப் போர்செய்து ராஜ்யமிழந்து மந்திரிகளோடுகூடி இமயமலைச் சாரலில் ப்ருகுப்ரஸ்ரவணமென்ற குன்றில் வாழ்ந்து வருகையில் அவருடைய மனைவியர் இருவரும் கருக்கொண்டனர். அவர்களுள் காளிந்தியென்பவள் தன் சக்களத்தியினால் விஷம் இடப்பெற்றனள். அவள், அங்கே வந்துசேர்ந்த ச்யவனரென்னும் முனிவரை வணங்கித் தனக்கு நல்ல புத்திரன் பிறக்கும்படி அனுக்கிரகம்வேண்டிப் பணிவிடைகள் செய்துவந்தாள். "விஷத்தோடு கூடியே உனக்கொரு நல்ல புதல்வன் பிறப்பன்" என்று அவரால் அநுக்கிரஹிக்கப்பெற்ற அவள் அவ்வண்ணமாகவே விஷத்தோடுகூடிய ஒரு குமாரனைப் பெற்றாள். [விஷத்திற்கு

வடமொழியில் கரம் என்று பெயர்; கரத்தோடுகூடிப் பிறந்த தனால்] ஸகரன் என்று அப்பிள்ளைக்குப் பெயர் வழங்கியது.

ஸகரனது புதல்வன்—அஸமஞ்சன்.
அஸமஞ்சனுடைய புத்திரன்—திலீபன்.
திலீபனுடையபுத்திரர்—பகீரதர்
பகீரதருடைய புத்திரர்—ககுத்ஸ்தர்.
ககுத்ஸ்தருடைய புத்திரர்—ரகு.
ரகுவின் புத்திரன்—ப்ரவ்ருத்தன்.
ப்ரவ்ருத்தனுடைய மகன்—சங்கணன்.
சங்கணனுடைய புத்திரர்—ஸுதர்சனர்.
ஸுதர்சனருடைய புத்திரர்—அக்நிவருணர்.
அக்நிவருணருடைய புத்திரர்—சீக்ரகர்.
சீக்ரகருடைய பிள்ளை—மரு.
மருவின் மகன்—ப்ரசுச்ருகன்.
ப்ரசுச்ருகனுடைய மகன்—அம்பரீஷன்.
அம்பரீஷனது புத்திரன்—நஹுஷன்.
நஹுஷனது புதல்வன்—யயாதி.
யயாதியின் புத்திரர்—நாபாகர்.
நாபாகருடைய புத்திரர்—(இந்த) தசரதர்.

இவருடைய புத்திரர்களே இந்த ராம லக்ஷ்மணர்கள்.

ஜனகமன்னவரே! இங்ஙனம் பரமபவித்திரமான பெரிய வம்சத்திற் பிறந்த இக்குமாரர்களுக்காக உமது புதல்விகளை வரிக்கின்றேன்; கன்னிகாதானம் செய்ய வேண்டும்—என்று கூறி முடித்தனர் வஸிஷ்டமுனிவர்.

எழுபதாவது ஸர்க்கம் முற்றிற்று.

## எழுபத்தோராவது ஸர்க்கம்.

### ஜனகர் தமது வமிசபரம்பரையைக் கூறுதலும் கன்னிகாதானவுறுதி கூறுதலும்.

இங்ஙனம் முனிவர் தசரத சக்கரவர்த்தியின் வமிசபரம்பரைகளை யெடுத்துரைத்து முடித்தபின் ஜனக சக்கரவர்த்தியும் தமது வமிசாவளியை யெடுத்துரைக்கத் தொடங்கினர்;

நிமிசக்கரவர்த்தி எமக்கு மூல புருஷர்.
நிமியின் புத்திரர்—மிதி.
மிதியென்பவராலேயே மிதிலாநகரம் ஏற்படுத்தப்பட்டது.
மிதியின் புதல்வர்—ஜனகர்.
ஜனகருடைய புதல்வர்—உதாவஸு.
உதாவஸுவின் புத்திரர்—நந்திவர்த்தனர்.
நந்திவர்த்தனருடைய புத்திரர்—ஸுகேது.
ஸுகேதுவின் புத்திரர்—தேவராதர்.
தேவராதருடைய புத்திரர்—ப்ருஹத்ரதர்.
ப்ருஹத்ரதருடைய புத்திரர்—மஹாவீரர்.
மஹாவீரருடைய புத்திரர்—ஸுத்ருதி.
ஸுத்ருதியின் புத்திரர்—த்ருஷ்டகேது.
த்ருஷ்டகேதுவின் புத்திரர்—ஹர்யச்வர்.
ஹர்யச்வருடைய மகன்—மரு.
மருவின் புதல்வர்—ப்ரதிந்தகர்.
ப்ரதிந்தகருடைய புத்திரர்—தேவமீடர்.
தேவமீடருடைய புத்திரர்—விபுதர்.
விபுதருடைய புத்திரர்—மஹீத்ரகர்.
மஹீத்ரகருடைய புத்திரர்—கீர்த்திராதர்.
கீர்த்திராதருடைய புத்திரர்—மஹாரோமர்.
மஹாரோமருடைய புத்திரர்—ஸ்வர்ணரோமர்.

ஸ்வர்ணரோமருடைய புத்திரர்—ஹ்ரஸ்வரோமர்.

ஹ்ரஸ்வரோமருக்கு இரண்டு புத்திரர்கள்; ஜனகனென்கிற நான்—மூத்தவன்; குசத்வஜனென்பவன் எனது இளையதம்பி.

எனது தந்தையாகிய ஹ்ரஸ்வரோமர் எனக்கு முடி சூட்டி, தம்பியான குசத்வஜனையும் என்னிடமே ஒப்பு வித்துத் தவம்புரியக் காடு சென்று சுவர்க்கமுஞ் சென்றனர். நானும் தம்பியும் ஒத்துவாழ்ந்து வருகையில் 'ஸுதந்வா' என்னும் ஓரரசன் மிதிலாநகரத்தை ஆக்கிரமிக்க விரும்பி ஸாங்காச்யா நகரத்தில் நின்றும் வந்தனன். வந்து, 'சிவ தனுசையும் சீதையையும் எனக்கே கொடுக்க வேண்டும்; இல்லையாகில் போர்புரிய நேரும்' என்று சொல்லித் தூதுவர் களை என்னிட மனுப்பினன்.

பிறகு அப்படியே கொடிய யுத்தமும் உண்டாயிற்று. யுத்தத்தில் அம்மன்னவனை வதை செய்து தம்பியை அந்த ஸாங்காச்யா நகரத்தில் முடி சூட்டி அரசாள வைத்தேன்.

ஸீதையை இராமனுக்கும், எனது புதல்வியாகிய ஊர்மிளையை லக்ஷ்மணனுக்கும் விவாஹம் செய்து கொடுக்கக் கடவேன். இன்று மகாநக்ஷத்திரம்; அடுத்துவரும் உத்தர பல்குனி நன்னாளில் சுப முகூர்த்தம் நடைபெற வேண்டும். அதற்கு முன் மற்றைய சடங்குகளெல்லாம் குறையற நடத்தப்பட வேண்டும்—என்று ஜனகமகாராஜன் சொல்லி முடித்தனன்.

எழுபத்தோராவது ஸர்க்கம் முற்றிற்று.

## எழுபத்திரண்டாவது ஸர்க்கம்.

### விசுவாமித்திரர் பரதசத்துருக்கனர்களுக்காகவும் கன்னிகை களை வரித்தலும், விவாஹச் சடங்குகளை நடத்தத் தொடங்குதலும்.

ஜனகசக்கரவர்த்தியை வஸிஷ்டரும் விசுவாமித்திரரும் புகழ்ந்துகூறி 'உனது தம்பியாகிய குசத்வஜனுக்கு இரண்டு பெண்கள் இருக்கின்றார்களே, அவர்களையும் தசரதாத்மஜர் களான பரதசத்துருக்கனர்கட்கு விவாஹம் செய்துகொடுக்கு மாறு கோருகிறோம்' என்ன, அது கேட்ட ஜனக மன்னவன் மிகமகிழ்ந்து அங்ஙனமேயாகுக வென்றிசைந்து ராஜகுமாரர் நால்வர்க்கும் ஒரு நாளிலேயே விவாஹமுகூர்த்தம் நடை பெறும்படி திட்டஞ் செய்தனன். அடுத்த நன்னாளாகிய உத்தரபல்குனீ நக்ஷத்திரம் விவாஹத்திற்கு மிகச்சிறந்திருப்ப தால் அன்றைக்கே சுபத்தை நடைபெறுத்தவேணுமென்றும் நிச்சயஞ் செய்தனன். இத்தகைய சிறந்த ஸம்பந்தம் தங்களுக்கு நேர்ந்ததைப் பற்றி ஜனகதசரதர்கள் ஒருவர்க் கொருவர் மிக்க குதூஹலம் பாராட்டிப் பரமானந்தம் பொலிய வார்த்தையாடிக் கொண்டனர். மேல் செய்ய வேண்டிய சடங்குகளை முறைவழுவாது நிறைவேற்றுதற் பொருட்டுத் தசரதர் வஸிஷ்ட விசுவாமித்திரர்களுடன் தமது விடுதிக்கு வந்து சேர்ந்தனர்.

விவாஹமஹோத்ஸவத்திற்காக நடைபெறவேண்டிய சடங்குகள்யாவும் அடைவுபட நடைபெற்று வருகின்றன. அந்தணர்கட்கு விசேஷமாகக் கோதானங்கள் செய்யப் பட்டன. மற்றும் பலவகைப் பொருள்களும் அந்தணர்கட்கு வழங்கப்பட்டன.

எழுபத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

## எழுபத்துமூன்றாவது ஸர்க்கம்.

## ஸ்ரீராம லக்ஷ்மண பரத சத்துருக்கனர்களுக்கு விவாஹ மகோத்ஸவம் நடந்தமை கூறல்.

இந்நிலைமையில் கேகய நாட்டிலிருந்து, தசரதாத்மஜனை பரதனுடைய அம்மானாகிய [கேகயராஜ புத்திரரான] யுதாஜித் தென்பவர் மிதிலாபுரியில் வந்து சேர்ந்து க்ஷேமசமாசாரங்கள் கூறினர். "பரதனைக் காணவிரும்பிய என் தந்தை அவனையழைத்துவரும்படி என்னை யனுப்பினர்; நான் அயோத்திமா நகரில் வந்து விசாரிக்கையில், விவாஹத்தின் பொருட்டு யாவரும் இவ்விடம் வந்திருக்கிற செய்தியை யறிந்து நானும் இவ்விடம் வந்து சேர்ந்தேன்" என்றும் கூறினர்.

தசரதர் அவர்க்கு முறைப்படி உபசாரங்கள் செய்தனர். மறுநாட் காலையில் யாவரும் கலியாண மண்டபத்திற்கு வந்து கூடினர். சிறந்த சுப முகூர்த்தத்தில் இராமபிரான் தம்பிமார்களுடன்கூட வஸிஷ்டர் முதலிய முனிவர்களை முன்னிட்டுக்கொண்டு அவ்விடம் வந்து சேர்ந்தபின் வஸிஷ்டர் ஜனகமன்னவனை நோக்கி, 'மன்னர் பெருமானே! கன்னிகாதானம் செய்யவேண்டிய கடமை உன்னுடையதாதலால் அதனை இனி நிறைவேற்றவேண்டும்' என்று கூற, அதற்கு ஜனகன் 'முனிவரேறே! இதில் என்ன ஆலோசனையிருக்கிறது? கன்னிகைகளும் மங்கள காரியங்களெல்லாம் செய்து முடித்து விவாஹ வேதியின்கண் சித்தர்களாக இருக்கின்றார்கள்; நானும் இதோ ஸஜ்ஜனாகவே யிருக்கின்றேன்; இனி விவாஹச் சடங்கு தாமதமின்றியே நடைபெறலாம்; முற்றும் தேவரீர் முனிவர்களோடு கூடி முறை தவறாது நடைபெறுத்த வேண்டும்' என்று விண்ணப்பஞ் செய்தனன்.

அதற்கு இசைந்த வஸிஷ்ட பகவான் வைதிக காரியங்களான ஹோமம் முதலியவற்றைக் குறையறச் செய்யத் தொடங்கினர். பிறகு ஜனக மன்னவன் ஸகல பூஷணங்களாலும் அலங்கரிக்கப்பட்டு மிக விளங்கும் ஸீதாபிராட்டியை அக்னிக்கு முன்பாக அழைத்துவந்து இராமனெதிரில் நிறுத்திக்கொண்டு,

"இயம் ஸீதா மம ஸுதா ஸஹதர்மசரீ தவ
ப்ரதீச்சசைநாம் பத்ரம் தே பாணிம் க்ருஹ்ணீஷ்வ பாணிநா."

[இதன் பொருள்:- இந்த ஸீதை எனது மகள்; நீர் அனுட்டிக்கவேண்டிய ஆச்ரிதரக்ஷணமாகிற தருமத்தை அனுட்டிப்பதில் இவள் உமக்குத் துணைவியாக இருக்கத் தகுந்தவள்; ஒரு குறையுமின்றி நீர் வாழ்க. உமது கையினால் இவளது கையைப் பிடித்துக்கொள்ளும்.] என்று சொல்லித் தாரை வார்த்துத் தத்தஞ் செய்தனன். அப்பொழுது தேவர்களும் முனிவர்களும் வாழ்த்துக் கூறிப் பூமழை பொழிய, மங்கள வாத்ய கோஷமும் உண்டாயிற்று.

அந்த முகூர்த்தந்தன்னிலேயே ஜனக மன்னவன் தனது புதல்வியான ஊர்மிளையை லக்ஷ்மணனுக்குக் கன்னிகாதானம் செய்தனன். குசத்வஜரின் பெண்களுள் மாண்டவியென்பவள் பரதனுக்கும், ச்ருதகீர்த்தியென்பவள் சத்துருக்கனனுக்கும் கன்னிகாதானம் செய்யப்பட்டனர். இங்ஙனம் தாசரதிகள் நால்வர்க்கும் திருமணம் குறையற நிறைவேறியது. அப்போழ்து பலவகையான சுபக்குறிகள் தோன்றின. இங்ஙனம் நிகழ்ந்தபின்பு அவரவர்கள் தம் தம் விடுதிகட்குச் சென்று சேர்ந்தனர்.

எழுபத்துமூன்றுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## எழுபத்துநான்காவது ஸர்க்கம்

### விவாஹம் முடிந்தபின் தசரதர் அயோத்தியை நோக்கிப் புறப்பட்டு வருகையில் பரசுராமர் எதிர்த்து வருதல்.

அன்றிரவு கழிந்த பின்னர் விசுவாமித்திர முனிவர் தசரதரிடத்தும் ஜனகரிடத்தும் விடை பெற்றுக்கொண்டு தம் இருப்பிடமான இமயமலைக்குப் போகலுற்றார். பிறகு தசரதரும் ஸகுடும்பராய் ஜனகரிடம் விடை பெற்றுத் தமது அயோத்திமா நகர்க்குப் புறப்படலாயினர். வழி விடுவதற்காக ஜனகரும் சிறிது தூரமளவும் பின் தொடர்ந்து வந்து விசேஷமாகச் சீதனமும் கொடுத்து விடை பெற்றுக்கொண்டு மிதிலைமா நகர்க்குத் திரும்பினார்.

குடும்பங்களுடனும் முனிவர்களுடனும் படை வீரர் களுடனும் தசரத மன்னவன் அயோத்தி நகர் நோக்கிச் சென்றுகொண்டிருக்கையில் அசுப நிமித்தங்கள் சிலவும் சுபநிமித்தங்கள் சிலவும் தோன்றின. அவற்றைக் கண்டு தசரதர் கலங்கித் தடுமாறி நின்று 'இவற்றிற்குப் பலன் யாது?' என்று வஸிஷ்ட முனிவரைக் கேட்க, அம்முனிவர் "மன்னவர் மணியே! ஆகாயத்திற் சில பறவைகளின் பயங்கர மான கூவுதலாகிற அசுபநிமித்தம் நேர்கின்றபடியால் அதற்குப் பலனாக ஒரு கெடுதல் ஏற்படும்போல் தோன்று கிறது. நிலத்தில் சில விலங்குகள் நம்மை வலஞ் செய்து செல்லுதலாகிற சுப நிமித்தம் நேர்கின்றபடியால் அதற்குப் பலனாக அந்தக் கெடுதல் உடனே தொலைந்திடும்போல் தோன்றுகிறது; மனம் துயருறவேண்டா" என்று இனிதாக மறுமொழி கூறினார்.

இந்தப் பிரஸ்தாவம் நடந்துகொண்டிருக்கும்போதே, அங்கு நிலம் முழுவதும் நடுங்கவும் மரங்கள் முறிந்துவிழவும்

ஒரு பெருங்காற்று உண்டாயிற்று. இரவியும் இருள் மூடப் பெற்றனன். திசைகளும் மறையலுற்றன. தசரத மன்னவனது சேனைகள் முழுவதும் புழுதி படிந்து மழுங்கிப் போயின. வஸிஷ்டரும் சில முனிவர்களும் தசரதரும் அவரது திருக் குமாரர்களும் தவிர மற்றையோர் யாவரும் மூர்ச்சையடைந்து கிடந்தனர்.

நிலைமை இத்தகைத்தாக, மிக்க பயங்கரமான உருவமுடைய ஜமதக்கினி புத்திரரான பரசுராமர் தோளின்மீது கோடாலிப் படையைச் சுமந்துகொண்டு வில்லையும் அம்புகளையும் கையிலேந்திக்கொண்டு தோற்றமாயினர். அன்னவரைக் கண்ட முனிவர்களிற் சிலர், "ஒரு க்ஷத்திரியனால் தம்முடைய தந்தை வதைக்கப்பட்டபோது அதற்காக க்ஷத்ரிய குலம் முழுவதிலுமே கறுக்கொண்டவரான இவர் இப்போது க்ஷத்ரிய வதம் செய்யாமலிருப்பரோ!" என்று பேசிக்கொண்டனர். மற்றுஞ் சிலர், "முன்னமே க்ஷத்திரியர்களை வதை செய்து கோபந்தணியப்பெற்றவிவர் மீண்டும் க்ஷத்திரிய வதம் செய்யக் கருதுவரோ!" என்று பேசிக்கொண்டனர். பிறகு முனிவர்கள் யாவரும் பரசுராமரை நோக்கி, "ராமரே! வாரும் வாரும்" என்று இனிமையாக விளித்துப் பூஜை செய்ய, அப்பூஜையைப் பெற்றுக்கொண்ட பரசுராமர் தசரதராமனைநோக்கி மேல் வருமாறு கூறலுற்றார்.

எழுபத்துநான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

## எழுபத்தைந்தாவது ஸர்க்கம்

### பரசுராமர் சைவ வைஷ்ணவ தனுசுகளின் வரலாறுகளைக் கூறுதலும் தமது கையிலுள்ள வைஷ்ணவ தனுசை நாணேற்றுமாறு ராமனை வேண்டுதலும்.

"தசரதாத்மஜனான ராமனே! உனது வீரத்தன்மை வீறு பெற்றதென்று கேள்விப்படுகிறேன்; நீ சிவதனுசை முறித்தது முதலிய கதைகள் முழுவதையும் கேட்டிருக்கின்றேன். நீ உண்மையில் மஹா வீரனாயிருப்பாயாயின், இப்போது நான் கொண்டு வருகின்ற இந்த வில்லை வளைத்து அம்பு தொடு, பார்ப்போம். இதை நீ செய்தாயாயின் பிறகு உன்னை நான் வீரனாகவேகருதிக் கைச்சண்டைக்கும் இடந் தருவேன்." என்று பரசுராமர் ஸ்ரீ ராமனை நோக்கிக் கூற, தசரத மன்னவன் அச்சொல்லைக் கேட்டதும் முகம் வாடி மனமிளகி ஒன்றுந் தோன்றாதவராய்க் கைகளைக் கூப்பிக் கொண்டு "ஸ்வாமின்! நீர் பிராமணராயிருக்கின்றீர்; க்ஷத்திரிய குலத்தில் நீர் வைத்துள்ள கோபத்தை விட்டிட்டு, சிறு குழந்தைகளான என் புதல்வர்கட்கு அபயமளித்தருளல் வேண்டும்: பரம வைதிகமான ப்ருகு வம்சத்தில் அவதரித்த நீர் 'இனி நான் ஆயுதத்தைக் கையிலெடுப்பதில்லை'யென்று இந்திரனிடத்துப் பிரதிஜ்ஞை செய்து ஆயுதத்தை விட்டொழித்து அறத்திற் பற்றுள்ளவராகிப் பூமி முழுவதையும் காசியபர்க்குத் தானஞ் செய்துவிட்டு வனத்திற் போந்து மகேந்திர மலையின்கண் வாழ்ந்து வந்தீர்; அப்படிப்பட்ட நீர் இப்போது எமது போராத காலத்தினால் இங்கு வந்து சேர்ந்தீர்; அந்தோ! ராமனை வதைக்க நினைக்கின்றீர்; ராமனொருவனுக்கு ஒரு கேடு விளைந்தால் நாங்கள் அனைவரும்

இறந்தொழிந்தோமாவோம்" என்று பரசுராமனை நோக்கிக் கனமான வருத்தந் தோன்றக் கதறினன்.

பரசுராமர் அக்கட்டுரையைக் கருத்திற் கொள்ளாமலே ஸ்ரீராம பிரானையே நோக்கி, "தேவலோகத்தில் விசுவ கருமாவினால் பெருமுயற்சி கொண்டு நிருமிக்கப்பட்ட இரண்டு விற்களே மிக்க சிறப்புப் பெற்றவை; அவற்றுள் ஒரு வில்லானது முன்பு முப்புரங்களையழிக்க வேண்டிப் போர் புரியக் கருதிய சிவபிரானுக்குத் தேவர்களால் தரப் பட்டது. அந்த வில்லே மிதிலை நகரில் உன்னால் முறிக்கப் பட்டது: மிக்க பெருமைபெற்ற மற்றொரு வில் இதுகாண்; இது விஷ்ணுவினுடையது. முன்பு சிவபெருமான் திரிபுர சங்காரஞ் செய்தபின் எல்லாத் தேவர்களும் சிவனுடையவும் விஷ்ணுவினுடையவும் பலாபலத்தைக் கண்டறியக் கருதி 'யாருடைய வலிமை வீறு பெற்றது?' என்று பிரமனைக் கேட்க, அப்பிரமன் சிவனுக்கும் விஷ்ணுவுக்கும் விரோ தத்தை மூட்டிவிட, அவ்விருவரும் கோரமான யுத்தம் செய் தனர்; அப்போது விஷ்ணுவின் 'ஹூம்' என்கிற ஒலியினால் சிவபிரானது வில் சிதைந்ததாயிற்று. உடனே மஹாதேவர் அடங்கி நின்றனர். இனிப் போர் நிகழ வேண்டாவென்று தேவர் முனிவர் முதலாயினோரும் கேட்டுக்கொண்டனர். விஷ்ணுவின் விக்கிரமத்தினால் சிவனது வில் முறிந்ததுகண்ட முனிவர்களும் தேவர்களும் அப்போது விஷ்ணுவை அதிக வைபவம் பொருந்தியவராக நிச்சயித்தனர். அத்தருணத் தில் மிக்க சீற்றமடைந்த சிவபெருமான் தனது கையில் இற்றுப்போன அந்த வில்லை விதேஹ தேசத்து மன்னவர் களுள் ஒருவரான தேவராதரிடத்திற் கொடுத்தனன். விஷ்ணு தன் கையிலிருந்த வில்லை எனது பாட்டனாகிய

ருசீகரிடத்திற் கொடுக்க, அவர் தமது புத்திரரான ஜமதக்நிக்குக் கொடுத்தார்; அதுவே இப்போது என் கையிலுள்ளது காண். எனது தந்தை ஆயுதத்தை விட்டிட்டுத் தவமியற்றிக் கொண்டிருக்கையில் தாமஸ புத்தி வாய்ந்த கார்த்தவீரியார்ஜுனன் அவர்க்கு மரணத்தை விளைவித்தனன். அச்செய்தியை நான் கேட்டுக் கோபங் கொண்டு, உலகத்திற் பிறக்கிற க்ஷத்திரியர்களையெல்லாம் உடனுக்குடனே வதஞ்செய்து நிலமுழுவதையுங் கைப்பற்றி, அதனையெல்லாம் ஒரு வேள்வியின் முடிவில் காசியபர்க்குத் தக்ஷிணையாகத் தந்துவிட்டு மகேந்திரமலை சென்று தவமியற்றிக்கொண்டிருந்தேன், நீ சிவதனுசை முறித்த செய்தியைக் கேட்டு விரைந்து வந்தேனிங்கு. ஏற்கனவே இற்றுப்போயிருந்த அந்த வில்லைப் போலன்றித் திண்ணிதாயிராநின்ற இந்த விஷ்ணு தனுசைக் கை நீட்டி வாங்கிக்கொள்; இது என்னாலாகாதென்று சொல்லிவிடாமல் க்ஷத்ரிய தருமத்தை முற்கொண்டு இதை நீ வாங்கிக்கொள்ளவே வேணும். இதில் நீ அம்பு தொடுக்கவும் வேணும். இதற்கு வல்லையாகில், அடுத்தபடியாக நீயும் நாமும் கைச் சண்டை கொள்வோம்" என்று கூறினர்.

**எழுபத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.**

---

## எழுபத்தாறாவது ஸர்க்கம்

## ஸ்ரீராமன் பரசுராமருடைய செருக்கையடக்கின செய்தி கூறல்.

இங்ஙனம் பரசுராமர் சொன்ன சொற்களைக் கேட்ட ஸ்ரீராமன், அவரைப்போல் தாமும் ஆரவாரம் செய்யாமல், தந்தை அருகிலிருப்பதுபற்றி அடக்கங்கொண்டு உரத்த

குரலின்றி "ஸ்வாமின்! உமது தந்தையை ஒரு க்ஷத்திரியன் கொன்றதற்காக க்ஷத்திரியப் பூண்டையெல்லாம் இருபத்தொருபடிகால் நீர் கருவழித்த கடுஞ்செயலை நானுமறிவேன்; அது நன்றே. நீர் என்னை வீரியமற்றவனாகவும் க்ஷத்ரிய தருமப்படி போர்புரிய வல்லமையற்றவனாகவும் நினைத்து அவமதிப்பாகப் பேசின பேச்சு நியாயமற்றது; என்னது தேஜஸ்ஸையும் வலிமையையும் இதோ காட்டுகின்றேன், பாரும்" என்று சொல்லி அப்பரசுராமரது கையிலிருந்த வில்லையும் அம்பையும் அவலீலையாகக் கைப்பற்றி உடனே நாணேற்றி அம்பு தொடுத்துச் சிறிது கோபக் குறிப்புடன்,

"பரசுராமரே! நீர் அந்தணராயிருத்தல் பற்றியும் விசுவாமித்திரர்க்கு உறவினராயிருத்தல் பற்றியும் எனக்குப் பூஜிக்கவுரியவராகின்றீர்; ஆதலால் உமது உயிரைக் கவரு மாறு உம்மீது அம்பு எய்யகில்லேன்; உமது பாதங்களிலுள்ள சக்தியையாவது, தவவலிமையினால் நீர் சேமித்து வைத்திருக்கின்ற உலகங்களையாவது நாசஞ் செய்திடப் போகின்றேன்; இரண்டில் எது உமக்கு விருப்பமானது? சொல்லும், இப்போது நான் தொடுத்த அம்பானது ஏதேனுமொன்றைச் செய்தன்றி நில்லாது" என்று கூறினன்.

அப்போது நிகழநிற்கும் மிகஅற்புதமான செய்கையைக் காணும்பொருட்டு முனிவர் தேவர் கந்தருவர் இயக்கர் அரக்கர் முதலிய பலரும் அங்குக் குழாங் கூடி நின்றனர். ஸ்ரீராமபிரான் விஷ்ணுதனுசை வாங்கிக் கையிலேந்திநிற்க, உலகமெல்லாம் திகைக்க, பரசுராமர் வீரியமிழந்தவராகித் திகைத்து ஸ்ரீராமனை நோக்கி "மஹாநுபாவனே! உன்னை ஸாக்ஷாத் நாராயணமூர்த்தியாக நான் அறுதியிடுகின்றேன்; முன்பொருகால் பூமி முழுவதையும் நான் காசியபர்க்குத்

தானம் செய்து விட்டபடியால் அவர்க்கு அதீனமான பூமியில் நான் இருக்கத் தகுதியற்றவனாயிருக்கின்றேன்; பகலில் எங்குத் திரிந்தாலும் இரவில் நான் பூமியில் வஸிப்பதில்லை; மகேந்திரமலையிற் போயிருப்பேன். ஆதலால் என் காலி லுள்ள சக்தியை அடிக்காமல் தவவலிமையை அடித்திடுதல் நலம். மூவுலகுக்கும் நாதனான உன்பால் நான் தோல்வி யடைந்ததனால் எனக்குச் சிறிதும் அவமானமில்லை; ராம! இவ்வம்பை எனது புண்ணிய கருமங்களின்மீது எய்ய வேண்டுகிறேன். எய்தால் அதை நான் பார்த்துவிட்டு மகேந்திரமலைக்குச் சென்று சேர்ந்திடுவேன்" என்று வினயம் படக் கூறினர்.

இராமபிரான் அவ்வண்ணமாகவே அம்பை எய்தவள வில், பரசுராமர் தாம் தமது வலிமையினுற் சேமித்துவைத் திருந்த புண்ணிய லோகங்கள் பாறவடிக்கப்பட்டனவாக வுணர்ந்து இராமனை வலம் வந்து விடைபெற்று மகேந்திர மலைக்கு விரைந்து சென்றார்.

பிறகு திசைகளெல்லாம் இருள் நீங்கி ஒளிமிக்கன. தேவர்முனிவர் முதலாயினோர் இராமனை மிகவும் புகழ்ந்து சென்றனர்.

**எழுபத்தாறுவது ஸர்க்கம் முற்றிற்று.**

---

## எழுபத்தேழாவது ஸர்க்கம்.

### தசரதன் முதலானோர் யாவரும் அயோத்தி நகர்வந்து சேர்ந்து இனிது வாழ்ந்தமை கூறல்.

பரசுராமர் சென்றபின் ஸ்ரீராமபிரான் ப்ரஸன்னராகி அந்த விஷ்ணு தனுசை வருணனுடைய கையில் கொடுத்

திட்டார். வஸிஷ்டர் முதலிய முனிவர்களையும் வணங்கினார். தந்தைக்கும் தேறுதல்கூறி இனி அயோத்தி நகர்க்குப் புறப்படுமாறு சேனைகட்குக் கட்டளையிட வேணுமென்றார்.

பிறகு தசரதன் பரசுராமன் பங்கமடைந்து போய் விட்ட செய்தியை யுணர்ந்து மகிழ்ந்து இரண்டுகைகளாலும் இராமனைக் கட்டியணைத்து உச்சிமோந்து மயிர்க்கூச்செறிந்து தானும் தனது புதல்வர்களும் அன்றுதான் பிறந்தார்களாக நினைத்தெழுந்து அயோத்திக்கு விரைந்து செல்லுமாறு சேனைகட்குக் கட்டளையிட்டுத் தானும் புறப்பட்டனன்.

ஆனந்தத்துடன் எதிர்பார்த்திருக்கின்ற ஜனங்கள் நிறைந்தும், பலவகை அலங்காரங்கள் செய்யப்பெற்றும், வாத்திய கோஷங்கள் மல்கப்பெற்றும் விளங்குகின்ற அயோத்திமா நகரில் சென்று சேர்ந்து தசரத மன்னவன் தனது அரண்மனையினுட் புகுந்தான்.

அப்போது உற்றுருறவினர்கட்கு உண்டாயிருந்த களிப்பு வருணிக்க முடியாதது. கௌசலை முதலிய ராஜ பத்தினிகள் மூவரும் மணமக்களுக்கு மிக்க உபசாரங்கள் செய்வதில் நோக்குடையராகி அந்த மணாட்டுப் பெண்கள் நால்வரையும் தங்கள் அந்தப்புரத்திற்கு அழைத்துக் கொண்டு போனார்கள்.

அந்த மணாட்டுப் பெண்களும் சிறந்த அலங்காரங்களைச் செய்துகொண்டு தேவாலயங்களிற் சென்று பூஜைகளைச் செய்தனர். வணங்கவேண்டிய பெரியார்களை யெல்லாம் வணங்கி விட்டு அவர்கள் தம் தம் கணவருடன் கூடிக் களித்திருந்தனர்.

ஸ்ரீராமன் முதலிய திருக்குமாரர்களும் நண்பர்கட்கு இனியவர்களாய்த் தந்தைக்கு உரிய பணிவிடைகளைச் செய்து கொண்டு களித்திருந்தனர்.

இங்ஙனம் சிலநாட்கள் சென்றபின் தசரத மன்னவன் பரதனை விளித்து, 'குழந்தாய்! உன்னைக் கேகயநாட்டிற்கு அழைத்துச் செல்வதற்காக உன் அம்மானாகிய யுதாஜித்து முன்னமே இங்கு வந்திருக்கிறாரல்லவா? மிதிலை மாநகரிலேயே வந்து சேர்ந்து உன்னையனுப்பும்படி கேட்டுக் கொண்டாரல்லவா? அவருடன் நீ செல்வது நன்று' என்று கூற, பரதன் தாய்மாரிடத்தும் இராமபிரானிடத்தும் நியமனம் பெற்றுக்கொண்டு சத்துருக்கனனோடுகூடிக் கேகயநாட்டிற்குப் புறப்பட்டனன்.

இங்ஙனம் பரதசத்துருக்கனர்களை யழைத்துக்கொண்டு சென்ற யுதாஜித் தென்பவர் நாளடைவில் கேகயநாட்டிற் சென்று சேர்ந்து தமது தந்தையை மகிழ்வித்தனர்.

அயோத்தியில் இராமனும் லக்ஷ்மணனும் தாய் தந்தையர்க்கும் வஸிஷ்டர் முதலான குரவர்களுக்கும் ஏற்ற பணிவிடைகளை உரியகாலங்களில் குறையறச் செய்துகொண்டு வாழ்ந்து வந்தனர். விசேஷித்து இராமன் தந்தையினது கட்டளையையே சிரமேற்கொண்டு நகரத்தார்க்குச் செய்ய வேண்டிய ஹிதங்களையும் ப்ரியங்களையும் ஒழுங்குபடச் செய்து வந்தனன்.

இத்தகைய இராமபிரானது திருக்குணங்கள் தசரத சக்கரவர்த்தியின் மனத்தை மிகவும் கவர்ந்தன. நகரிலுள்ள அனைவருமே அந்த ஸ்ரீராம குணங்களில் மிகமிக ஈடுபட்டிருந்தனர். இராமபிரானுடைய புகழும் பராக்கிரமமும் எங்கும் மிக்க விளக்கமுற்றன.

இராமனுக்கும் ஸீதைக்கும் இருந்த அன்பு அளவிட முடியாதது. இருவரும் ஒத்தமனத்தராய் ஸகலவித போகங்களையும் அழகாக அனுபவித்துக் கொண்டிருந்தனர். ஸீதை தன்னுடைய தேஹ குணங்களாலும் ஆத்ம குணங்களாலும் இராமனுடைய மிக்க அன்புக்கு இலக்காயிருந்தனள். அங்ஙனமே இராம பிரானும் பிராட்டியினது அளவு கடந்த அன்புக்கு இலக்காயிருந்தனன். அந்த திவ்விய தம்பதிகளின் திருவுள்ளமே ஒன்றுக் கொன்று பேசிக் கொண்டிருந்தது என்னும்படியாக அத்துணை ஒத்த மனத்தராயிருந்தனர்.

ஸ்ரீ மஹாவிஷ்ணுவும் ஸ்ரீ மஹாலக்ஷ்மியும் கூடியிருக்கின்றார்களென்னும்படியாகவே ஸ்ரீராம ஸீதைகள் கூடிக் களித்திருந்தனர்.

**எழுபத்தேழாவது ஸர்க்கம் முற்றிற்று.**

ஸ்ரீமத் வால்மீகி ராமாயண மொழிபெயர்ப்பில்

## பாலகாண்டம்

முற்றுப்பெற்றது.

ஸ்ரீ:

# அயோத்யா காண்டம்

## முதல் ஸர்க்கம்

### இராமனுக்கு இளவரசு முடிசூட்டக் கருதிய தசரதர் ஆலோசனைக்காக மஹாஸபை கூட்டுதல்.

சத்துருக்கனனென்னுந் தம்பியை உடனழைத்துக் கொண்டு மாமனது நகரத்தை நோக்கிச் சென்ற பரதன் அங்கே கேகய நாட்டில் மனத்திற்கு மிகவும் இனிதாக வாழ்ந்து கொண்டிருந்தனன். அங்கு எல்லா வகையான உபசாரங்களும் குறையற்றிருந்தபோதிலும் அவ்விருவருடைய மனமும் வயது சென்ற தந்தையினிடத்திலும் குணக்கடலான இராமபிரானிடத்திலுமே பதிந்திருந்தது. 'அந்தோ! தந்தையுடன் கூடவிருந்து பணிவிடைகள் செய்யப்பெறாமல் தூரதேசத்தில் இருக்கின்றோமே!' என்று விசாரமுற்றிருந்தனர். 'இப்போது இராமபிரானை இளவரசாக்கி யிருக்கக்கூடும்' என்றும் எண்ணியிருந்தனர்.

தசரத சக்கரவர்த்தியும் தேசாந்தரஞ் சென்ற இரு புதல்வர்களை அடிக்கடி நினைத்துக்கொண்டு அவர்களின் பிரிவினால் மிகவும் துயருற்றிருந்தனன். இராமனும் லக்ஷ்மணனும் கூடவேயிருந்த போதிலும் நான்கு புத்திரர்களிடத்திலும் ஒரு நிகரான அன்பைக் கொண்டிருந்த தசரத

னுக்குப் பரத சத்ருக்னர்களின் பிரிவு ஆற்ற வொண்ணாத தாகவேயிருந்தது.

அந்நான்கு புதல்வர்களுள்ளும் ஸ்ரீராமபிரான் தேசும் திறலும் குணமுமெல்லாம் மிக அற்புதமாக அமையப் பெற்றிருந்ததனால் தந்தையின் அன்புக்குச் சிறந்த கொள் கலமாகவே விளங்கினன். இராவணனைவதைக்க வேணு மென்று விரும்பிய தேவர்களின் வேண்டுகோளுக்கு இரங்கிய ஸ்ரீமஹாவிஷ்ணுவேயன்றோ இராமனாக வந்து தோன்றி யுள்ளான். ஆனதுபற்றியே அவன் யாவரினும் மேம்பட்டு விளங்கினன். அவ்விராமபிரானுக்கு அமைந்திருந்த தேஹ குணங்களும் ஆத்ம குணங்களும் அளவிட்டுச் சொல்ல முடியாதவை.

அங்ஙனம் ஸகல நற்குணங்களும் நன்கு அமையப் பெற்ற இராமபிரானைப் பூமிப்பிராட்டியும் நாதனாகக் கொள்ள விருப்பமுற்றனள். தசரத மஹாராஜனும் ஸ்ரீராமனுடைய திருக்குணங்களையும், அவனுக்கு ஜனங்களிடத்திலும் ஜனங் களுக்கு அவனிடத்திலும் அமைந்துள்ள அளவு கடந்த அன்பையும் நோக்கி அப்புதல்வனை இளவரசாக முடிசூட்டப் பாரித்தனன். அரசாட்சிச் செல்வத்தை இராமபிரானிடத் தில் ஒப்புவித்துத் தான் இளைப்பாற வேண்டுமென்று விருப் பங்கொண்ட அத்தயரதன் மந்திரிகளோடுங் கலந்து ஆலோ சித்துத் தனது கருத்தைத் திடப்படுத்திக் கொண்டனன்.

விரைவாகவே அதனைச் செய்து முடிக்கக் கருதி, அந்தக் கோஸல நாட்டிலடங்கிய பல நகரங்களிலும் மற்றும் பல விடங்களிலுமுள்ள சிற்றரசர்களையும் மஹாஜனங்களையும் விரைவில் வரவழைத்தனன். கேகயராஜனும் ஜனக மஹா ராஜனும் வெகு தூரமான விடங்களில் உள்ளவர்களானது

பற்றி, அவர்களை வரவழைக்கத் தக்க அவகாசம் இல்லாததனால் அவர்களை மாத்திரம் வரவழைத்திலன். 'அவர்களும் இச்செய்தியைப் பிறகு கேள்விப்பட்டு மனம் களிப்பார்கள்' என்று எண்ணின தயரதன் மற்றவர்கள் பலரையும் வரவழைத்தனன். வந்து சேர்ந்த அரசர்கள் யாவரும் தசரத ராஜனுடைய ஆஸ்தான மண்டபத்தில் வந்து புகுந்து யோக க்ஷேம விசாரணையோடு மரியாதை மொழிகளைப் பெற்று அரசனெதிரில் உட்கார்ந்தனர்.

முதல் ஸர்க்கம் முற்றிற்று.

..............

## இரண்டாவது ஸர்க்கம்.

### தசரதர் தமது மனோரதத்தை வெளியிடக் கேட்ட அனைவரும் மிகவுகந்து இராமனுக்கே விரைவில் முடிசூட்ட வேணுமென்று வற்புறுத்திக் கூறுதலும், அதற்குக் காரணமாக இராமனுடைய திருக்குணங்களின் அதிசயத்தைக் கூறுதலும்.

பின்பு தசரதமன்னவன் சபையில் வீற்றிருக்கின்ற அரசர்களனைவரையும் நோக்கி இங்ஙனம் உரைக்கத் தொடங்கினன்;—"சபையீர்களே! மிகப் பெரியதான இந்த ராஜ்யத்தை எனது முன்னோர்களான மன்னவர்கள் மிகுந்த மனவூக்கத்துடன் பாதுகாத்து வந்தனரென்பது நீங்களறிந்ததேயாகும்; அவர்களது வம்ச பரம்பரையிற் பிறந்த நானும், அவர்கள் நடந்த நெறியையே அடியொற்றி எனது ஆற்றலுக்கு ஏற்றவாறு இதுவரையில் குடிமக்களைக் குறிக்கொண்டே பாதுகாத்து வந்தனன்: காத்தல் தொழிலைச் செலுத்துதற்காக வெண்கொற்றக் குடையின் நிழலிலேயே

பல்லாயிரமாண்டுகள் வளர்ந்துவந்த எனது சரீரம் மிகவும் மூப்படைந்து விட்டது: அதனால் இனி அரசாங்கக் காரிய நிர்வாஹத்தில் எனது மூத்த குமாரனான ஸ்ரீராமசந்திரனை நியமித்து உங்களது அனுமதியைப்பெற்று நான் இளைப்பாற விரும்புகின்றனன்: மஹாதேஜஸ்வியான ஸ்ரீராமனே உங்களுக்குத் தகுந்த நாதனாயிருக்க வல்லவன் என்று எண்ணுகின்றேன்; வெகுகாலமாக நான் தாங்கியிருந்த இந்தப் பூமி பாரத்தை அவன் தலையில் இறக்கிவிட்டு வருத்தந்தீர்ந்து இனிதுவாழ விரும்புகின்றேன்: இது யுக்தமான செயலென்று உங்களுக்குத் தோற்றியிருப்பின், இதைச் செய்து முடிக்க நீங்கள் எனக்கு அனுமதி கொடுப்பீர்களாக: உங்கள் அனுமதியின்றி நான் சுதந்திரனாய்ச் செய்வது நியாயமன்றே: இதைப்பற்றி நீங்கள் நன்கு ஆலோசித்து உண்மையில் எனக்கு ஹிதமானது எதுவோ அதைத் தெரிவிக்கவேண்டுகின்றேன்" என்றனன்.

இவ்வாறாகத் தசரதமன்னவன் சொன்னதை அரசர் முதலானோர் அனைவருங் கேட்டு அளவற்ற ஆனந்தமடைந்தனர். அந்த ஸபையிலிருந்த ஜனக்கூட்ட மனைத்தும் அந்த வார்த்தைக்கு மிகவும் உகந்து ஆனந்தமுள்ளடங்காமல் மிகப் பெரிய கோஷத்தைச் செய்தது. அந்தப் பெரு முழக்கம் எதிரொலியைக் கிளப்பிக்கொண்டே அவ்வாஸ்தான மண்டபத்தின் விமானத்தைக் குலுங்கச் செய்வது போலாயிற்று. எல்லோரும் ஒரே மனமாகவிருந்து தசரதமன்னவனை நோக்கி "மகாராஜரே! நீர் ஆயிரமாண்டுகள் ஜீவித்து மிக முதிர்ந்தவராயினீர்: ஆதலால் காலதாமதமின்றியே ஸ்ரீராமனுக்கு முடி சூட்டுவீராக: ரகு குலதிலகனான ஸ்ரீராமன் பட்டத்து யானையின்மீது ஏறிக்கொண்டு வெண்கொற்றக் குடையின்

நீழலில் வீதியார எழுந்தருளும் வைபவத்தை எப்பொழுது காணப்போகிறோமென்று நெடுநாளாகவே நாங்கள் பாரிப்புக் கொண்டிருக்கின்றனம்" என்றனர்.

சபையிலுள்ளோர் யாவரும் அங்ஙனம் ஒருமிடறாகச் சொன்னதைக் கேட்ட தசரதமன்னவன் தன் விருப்பத்தை அனைவரும் ஆமோதித்ததுபற்றி உள்ளம் பூரித்தனன். இராமபிரானிடத்தில் ஸகல ஜனங்களுக்கும் இங்ஙனம் அன்பு நிறைந்திருக்கும் காரணத்தைத் தான் அறிந்திருந்தும் அவர்கள் வாயிலாகவே அதை இனிதாகத் தெரிந்துகொள்ள விரும்பி அவர்களை நோக்கி, "ஓ மன்னவர்களே! குடிமக்களே! என் மனத்தில் தோன்றிய விருப்பத்தை நானே சுதந்திரனாய்ச் செய்து முடித்துக்கொள்ள வல்லவனாயிருந்தும் உங்கள் கருத்தையும் அனுசரித்து நடந்துகொள்ளவேண்டுமென்றெண்ணி உங்களையும் வரவழைத்துக் கேட்டனன். கேட்டவுடனேயே நீங்கள் 'கிழவா! ஒழிந்துபோ, கிழவா! ஒழிந்துபோ; இராமனுக்கே முடிசூட்டவேணும்' என்று பேரிரைச்சல் செய்து கூறுவதை நோக்குங்கால், என்னால் நீங்கள் யாவரும் மிகவும் துன்பமுற்றிருந்தீர்கள் போலவும், அந்தத் துன்பத்தை எப்போது தவிர்த்துக் கொள்ளப்போகிறோமென்று சமயம் பார்த்திருந்தீர்கள் போலவும் நினைக்கவேண்டியதாகின்றதே; நான் சிறிதும் தருமம் தவறாமல் அரசாட்சி புரிந்திருக்கவும் நீங்கள் என்மீது இவ்வளவு வெறுப்புக்கொண்டதற்கு யாது காரணம்? கூறுமின்" என்றான்.

அதற்கு அனைவரும், "மன்னர்பிரானே! உன்மீது நாங்கள் யாதொரு குற்றமும் நினைத்திலோம்; நீ பெற்ற புதல்வன் எல்லையில்லாத நற்குணங்கள் அமையப் பெற்றவனாதலின் அவனது திருக்குணங்களில் ஈடுபட்ட நாங்கள் அவனை

அரசனாகப் பெற மிக விரும்பினோம்" என்று கூறி இராமனது தயை, பொறுமை, ஔதாரியம், தைரியம், எளிமை, சீலம் முதலிய ஸகல குணங்களையும் மிகவிரிவாக எடுத்துரைத்தனர்.

இங்ஙனம் திருக்குணங்கள் நிரம்பப் பெற்றுள்ள இராமபிரானை இனிச் சிறிதும் தாமதமின்றி முடி சூட்டுவதே தகுதியானது என்றுஞ் சொல்லி முடித்தனர்.

**இரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.**

---

## மூன்றாவது ஸர்க்கம்

### தசரதன், மகுடாபிஷேகத்திற்கு வேண்டிய ஸம்பாரங்களை ஸித்தப்படுத்துமாறு கட்டளையிடுதலும் இராமனை வரவழைத்து நியமித்தலும்.

சபையோர்கள் இராமபிரானைப் புகழ்ந்து கூறிய இனிய மொழிகளையும் அவர்கள் செய்த நமஸ்காரங்களையும் ஏற்றுக் கொண்ட தசரத மன்னவன் அவர்களை நோக்கி "நீங்கள் இராமனை அரசனாகப் பெறுவதில் மிகுந்த குதூகலங் கொண்டிருப்பதை நான் அறிந்து மிக மகிழ்கின்றேன்; அடுத்து வரும் புஷ்ய நக்ஷத்திரமாகிற நன்னாளில் இராமனுக்கு முடி சூட்டவேணும்" என்று சொல்லிவிட்டு, வஸிஷ்ட முனிவரையும் வாமதேவ முனிவரையும் நோக்கி முடிசூட்டுதற்குவேண்டிய பொருள்களை விரைவில் சேகரிக்குமாறு கூறினன்.

அதனைக் கேட்கவுற்ற குடிமக்கள் யாவரும் மிக்க குதூகலம் கொண்டனர். பிறகு வஸிஷ்டர் வாமதேவருடன் கலந்து ஆலோசித்து, முடிசூட்டுதற்கு முக்கியமாக வேண்டிய ஸம்பாரங்களை யெல்லாம் இன்னின்னவை யென்று ஸுமந்திரரிடம் குறிப்பிட்டுக் கூறி 'இவையெல்லாவற்றையும்

ஸூரியோதய காலத்திற்குள் தசரத மன்னவனது அக்னி ஹோத்ரக்ருஹத்தில் கொண்டுவந்து சேர்க்கவேண்டும்' என்றும், 'ஆங்காங்கு மிகமிக விசித்திரமான அலங்காரங்கள் குறைவின்றிச் செய்விக்கவேண்டும்' என்றும், 'அந்தணர் முதலானோரையும் அளவின்றி அழைப்பிக்கவேண்டும்' என்றும், 'வந்தவர்களெல்லாரும் பரமதிருப்தியுடனே புசித்துக் களிக்குமாறு போஜன வஸதிகளை மிக்க அதிசயம் பொலியச் செய்விக்கவேண்டும்' என்றும், மற்றும் பலவகையான கட்டளைகளையுமிட்டனர். அவ்வண்ணமாகவே ஸகல ஸந் நாஹங்களும் குறைவின்றி விரைவாக நடந்தேறின.

பிறகு மன்னவனால் கட்டளையிடப்பெற்ற ஸுமந்திரர் இராமபிரானைத் தேரின்மீது அழைத்துக்கொண்டு வந்தனர். வரும்பொழுது அவ்விராமபிரானது வடிவழகை எவ்வளவு உற்று நோக்கியும் மன்னவன் சிறிதும் திருப்திபெறவே யில்லை.

ஸுமந்திரர் இராமனைத் தேரினின்றும் கைகொடுத்துக் கீழிறக்கின பிறகு இராமன் தந்தை பாதங்களில் தொழுது கைகூப்பி நின்றனன். மன்னவன் அவ்விராமனை அருகிலழைத்துக் கட்டியணைத்து ஓர் சிறந்த ஆஸனத்தில் உட்காரச் செய்து அவனைப் பலவாறு புகழ்ந்து 'ராமா! நாளைப் புஷ்ய நக்ஷத்திரத்தன்று இளவரசு முடிசூடப் பெறுவை; உனக்கு நான் மிகுதியாக உரைக்கவேண்டியது ஒன்று மில்லை; இயற்கையாகவே நீ ஸகல நற்குணங்களும் நிரம்பப்பெற்றிருக்கின்றனை; ஆயினும் அன்பினால் உனக்குச் சில இதங்கள் சொல்லுகேன் கேளாய்; நீ மேன்மேலும் வினயத்தையே கைப்பற்றி யிருக்கவேண்டும்; காமக்குரோதங்கட்கு ஒருபோதும் ஆளாகாதிருக்கவேண்டும்; மதியிற்

சிறந்த மந்திரிகளுடன் கலந்தே காரியங்களை நடத்தவேண்டும்; குடிமக்கள் எப்போதும் மனக்களிப்புடனிருக்கும்படியே நடந்துகொள்ளவேண்டும்' என்றனன்.

இங்ஙனம் நிகழ்ந்துகொண்டிருக்கையில் 'இராமனது நண்பர்கள் பலர் இந்த மங்கலச் செய்தியை யறிந்து மகிழ்ந்து விரைந்தோடிச் சென்று கௌஸல்யைக்குத் தெரிவித்தனர். அவள் அதுகேட்டு அதனைக் கூறினவர்கட்கு முத்தும் மணியும் பொன்னும் பசுவும் பரிசாக வழங்கினள்.

இராமன் தந்தையிடம் விடைபெற்றுக்கொண்டு தன்னிருப்பிடம் வந்து சேர்ந்தனன். நகரவாஸிகள் யாவரும் நடைபெற விருக்கும் மங்கலகாரியத்தை நோக்கி உள்ளம் பூரித்து, இஃது இடையூறின்றி யீடேற வேணுமென்று தந்தம் இஷ்ட தெய்வங்களுக்கு வழிபாடு செய்தனர்.

மூன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

நான்காவது ஸர்க்கம்.

## தசரதன் மறுபடியும் இராமனை வரவழைத்து, தான் தீய கனுக்கள் கண்டமை கூறி மகுடாபிஷேகத்திற்கு விரைவுறுத்துதல்.

தசரதமன்னவன் மறுபடியும் மந்திரிகளுடன் கலந்து ஆலோசித்து இனிச் சிறிதும் தாமதமின்றி இராமனுக்கு முடிசூட்டவேணுமென்று நிச்சயித்தனன். மறுபடியும் இராமனைத் தன்னிடம் அழைத்துவரும்படி ஸுமந்திரர்க்கும் கட்டளையிட்டனன். அவரும் இராமனிடம் சென்று தந்தை கட்டளையைத் தெரிவிக்க, 'மறுபடியும் இவ்வளவு சீக்கிரமாக என்னையழைப்பதற்கு யாது காரணம்?' என்று இராமன் கேட்க; 'அது எனக்குத் தெரியுமோ? தந்தையிட்ட கட்டளை

இது' என்று சுமந்திரர் சொல்ல; உடனே இராமன் அரசனது மாளிகைக்குச் சென்றனன்.

அப்போது மன்னவன் இராமனை ஆஸனத்தில் அமர்த்தி, 'ராமா! நான் பெருங்கிழவனாய் விட்டேன்; விரும்பின போகங்களை யெல்லாம் இனிது அநுபவித்தேன்; பலபல வேள்விகளையும் பாங்காகச் செய்து முடித்தேன்; ஸகலவிதத்திலும் நான் க்ருதக்ருத்யனாய் இருக்கின்றேன்; உனக்கு மகுடாபிஷேகம் செய்விப்பதொன்றே இனி நான் செய்யத்தக்கதாகவுள்ளது. உனக்கு நான் யாது சொல்வேனோ அதை நீ தவறாது செய்து முடிக்கவே வேண்டும். நீயே அரசனாகவரவேண்டுமென்கிற விருப்பமோ குடிமக்களுக்குக் குறையறவுள்ளது. ஆகவே நீ முடிசூட வேண்டியது மிக அவசியம். ஏற்கனவே உன்னையழைத்து இவ்விஷயத்தைத் தெரிவித்திருக்கின்ற யான் இப்போது மறுபடியும் அழைத்துச்சொல்லுவானேன்? எனில்; இப்போது எனது கனவில் பயங்கரமான பல அமங்கலக்குறிகள் புலப்பட்டுக்கொண்டிருக்கின்றன. எனது ஜாதகரீதியிலும் சில கெடுதல்கள் இருப்பதாகச் சோதிடர் சொல்லுகின்றனர். இவற்றின் பலனாக எனக்கு மரணமோ அல்லது பெருத்த ஆபத்தோ நேருமென்று தெரிகின்றது. ஆகையால் உனக்கு முடிசூட்டவேணுமென்கிற கருத்து மிக விரைவில் நிறைவேறவேண்டும். மனிதர்களின் புத்தி நிலையற்றதாய் நிமிஷந்தோறும் மாறுகின்றதன்றோ? தாமதம் செய்வதனால் என்ன இடையூறு நேருமோவென்று அஞ்ச வேண்டியிருக்கிறது. இன்று புநர்வஸு நக்ஷத்திரம்; நாளை புஷ்யநக்ஷத்திரம். நாளை தவறாது நீ முடிசூடியாக வேண்டும். அதற்காக இன்று நீ மனைவியுடன் உபவாஸமிருக்க வேண்டும். நிலத்தில் தர்ப்பங்களைப் பரப்பி அதன்மீது

படுத்துக்கொள்ளவேண்டும். நல்ல காரியங்களுக்கு இடையூறு மிடைதருமாதலால் பலவகையிலும் இன்று நீ நண்பர்களின் பாதுகாவலிலேயே யிருக்கவேண்டும். அன்றியும், தேசாந்தரம் சென்றிருக்கின்ற பரதன் இங்கு மீண்டுவருவதற்கு முன்னமே * இம்முயற்சி முடிவுபெற வேண்டுமென்பதும் எனது கருத்து. பரதன் ஒப்புயர்வற்ற குணங்கள் படைத்தவனும் உன்னிடத்தில் அந்தரங்கமான அன்பு பூண்டவனுமாயிருப்பவன் என்பதில் ஐயமில்லை. ஆயினும் ஸாமான்யமாக மனிதர்களின் மனம் நிலையற்றிருக்குமென்றே எனது நினைவு. ஒரு காரியம் நடப்பதற்குமுன்பு அதைத் தடைசெய்யவேண்டிய அவசியமிருந்தாலும், அது நடந்து முடிந்துவிட்டதாயின் அதனை உகந்திருப்பதே ** ஸத்துக்களின் செயலாகும்; ஆகவே உனக்கு மகுடாபிஷேகம் முடிந்துவிடுமாயின் பிறகு பரதன் வந்தாலும் அதற்கு உகந்தேயிருப்பன். ஆதலால் விரைவில் முடிசூடுதல் நிறைவேறுமாறு பார்ப்பாயாக' என மொழிந்து விடைதந்தனுப்பினன்.

---

* தசரத மன்னவன் கைகேயியை மணம்புணரும்போது 'இவள் வயிற்றில் பிறக்கும் பிள்ளைக்கு இராச்சியங் கொடுக்கிறேன்' என்று கேகய ராஜனிடத்தில் உறுதி கூறியுள்ளானென்பது மேலே நூற்றேழாவது ஸர்க்கத்தில் உள்ளது. அதனால், பரதன் வந்தால் ராஜ்யத்தை அவனுக்குக் கொடுக்கவேண்டியிருக்குமோவென்று சங்கைகொண்டு மன்னவன் இங்ஙனம் மொழிகின்றானென்று பெரியோர் கூறுவர்.

** இவ்விடத்தில் வால்மீகி ராமாயண மூலச்லோகம் வருமாறு—ஸதாம் ஹி தர்ம நித்யாநாம் க்ருதசோபி ச ராகவ! என்பது. இதற்குப் பலர் பலவகையாகப் பொருள் கூறுவர்.

பிறகு தன்னிருப்பிடம் வந்து சேர்ந்த இராமன் இச் செய்தியைத் தனது தாய்க்குத் தெரிவித்தற் பொருட்டுக் கௌஸல்யை யிருக்குமிடம் சார்ந்தனன். ஏற்கனவே அவள் இச்செய்தியை அறிந்தவளாதலால் இம்மங்கலம் இடையூறின்றி நிறைவேறுதற் பொருட்டு இஷ்ட தேவதையை வழிபாடு செய்து கொண்டிருக்கக் கண்டனன். சுமித்திரையும் செய்தியறிந்து பெருமகிழ்ச்சியுடன் அவ்விடம் வந்திருந்தனள். லக்ஷ்மணனும் அங்கு வந்து சேர்ந்தனன். வேலைக்காரிகளால் அழைத்துவரப்பட்டு ஸீதையும் அங்குவந்து சேர்ந்தனள். அப்போது நியமத்தில் ஊன்றியிருந்த கௌஸல்யையை இராமபிரான் வணங்கித் தந்தையின் கட்டளையைத் தான் பெற்றமையை விஞ்ஞாபித்து, முடிபுனைதற்கு முன்னங்கமாக ஸீதைக்கும் தனக்கும் நடைபெற வேண்டிய மங்கலகாரியங்களை முறைப்படி நடப்பிக்குமாறு தாயை வேண்டிக் கொண்டனன்.

கௌஸல்யையும் அதுகேட்டுப் பரமானந்தம் பொங்கி இராமனைப் பலவாறு வாழ்த்தினள். பிறகு இராமன் தம்பியாகிய லக்ஷ்மணனையும் இனிய மொழிகளாலே மிகவுகப்பித்துத் தாய்மார்களிடம் விடைபெற்றுக் கொண்டு ஸீதையையழைத்துக் கொண்டு தன்மாளிகையிற் சென்று சார்ந்து விரதங்களில் ஊக்கங் கொண்டிருந்தனன்.

நான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## ஐந்தாவது ஸர்க்கம்

### தசரதனது கட்டளையின்படி வஸிஷ்டமுனிவர் இராமனிடம் வந்து உபவாஸமிருக்குமாறு நியமித்து மீளுதல்.

மறுநாட் காலையில் தசரதமன்னவனால் மிகுந்த ஊக்கமும் விரைவும் கொள்விக்கப் பெற்ற வஸிஷ்ட முனிவர்

இராமனிடம் நேரில் வந்து 'தந்தையிட்ட கட்டளையின்படி ஸீதையுடன் விரதத்தைக் குறைவின்றி அனுட்டிப்பாயாக' என்று சொல்லி மீண்டனர். நடக்கப்போகின்ற இம்மஹோத்ஸவத்தை யனுபவிக்கும் பொருட்டுப் பலபல விடங்களினின்றும் வந்து குழுமிக் கொண்டிருக்கின்ற மஹாஜனங்களின் கோலாஹலங்களை முனிவர் ராஜமார்க்கங்களிற் கண்டு பெருங் களிப்புக் கொண்டனர். அயோத்தி நகர் முழுவதும் ஸந்தோஷமே வடிவெடுத்த ஜனங்கள் நிரம்பப் பெற்றதும் பலவகை விசித்திர அலங்காரங்கள் செய்யப் பெற்றதுமாய் மிக அற்புதமாக விளங்கிற்று.

முனிவரும் மன்னவன்பாற் சென்று சேர்ந்து, தாம் இராமனிடம் போய்க் கட்டளையிட்டு வந்த செய்தியைத் தெரிவிக்க, மன்னர் பெருமான் அந்தப்புரத்திற் புகுந்தனன்.

ஐந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## ஆறவது ஸர்க்கம்

### இராமன் விரதங்களை யனுட்டித்தலும் எங்கும் அலங்காரங்கள் செய்து குதூகலம் கொண்டிருத்தலும்.

வஸிஷ்ட முனிவர் தன்னிடம் வந்து நியமித்து மீண்டபின் இராமன் நியமங்களில் தவறாது நின்று ஸீதையுடனே கூடி ஸ்ரீமந்நாராயணனை வழிபாடு செய்தனன். அக்னியில் ஹோமங்களைச் செய்தனன். உபவாஸத்துடனும் மௌன விரதத்துடனும் தேவாலயத்தில் தர்ப்ப சயனத்தின் மீது ஸீதையுந்தானுமாய்ப் படுத்திருந்து அன்றிரவைக் கழித்தனன். உதயகாலத்தில் எழுந்து காலைக் கடன்களை முடித்து அந்தணர்களை வரவழைத்துப் புண்யாஹ வாசனம் செய்வித்தையில். வேதவொலியும் விழாவொலியும் எங்கும் பரம்பி

நகரமடங்கலும் நன்மகிழ்ச்சி நனிமல்கப்பெற்றது. நகரவீதிகளும் ஒவ்வொருவருடைய வீடுகளும் விசித்திரமான அலங்காரங்கள் கொண்டன. எங்கும் மகுடாபிஷேகப் பேச்சாகவேயிருந்தது. வீட்டுவாசல்களில் திரள் திரளாக விளையாடிக்கொண்டிருக்கும் சிறுவர்களும் ஒருவர்க்கொருவர் ராமாபிஷேகத்தைப்பற்றிய வார்த்தைகளையே பேசிக்கொண்டிருந்தனர். ஒவ்வொருவரும் கொண்டிருந்த குதூகலமும் அதனால் செய்த காரியங்களும் வருணிக்க முடியாதவை. இராமபிரானது திருக்குணங்களையே வாய்வெருவிக் கொண்டும் தசரத மன்னவனை வாழ்த்திக் கொண்டும் யாவரும் மிக்க மனக்களிப்போடிருந்தனர்.

ஆருவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## ஏழாவது ஸர்க்கம்

### ராம மகுடாபிஷேக முயற்சியை யுணர்ந்த மந்தரை கைகேயியிடம் சென்று செய்தி கூறுதலும், அது கேட்ட கைகேயி மிக்க மகிழ்ச்சியுடன் மந்தரைக்குப் பரிசளித்தலும்.

அயோத்திமா நகரிற் பிறவாமல் எங்கேயோ பிறந்து வந்து சேர்ந்தவளும் கைகேயியின் பந்துக்களுக்குத் தாதியாயிருந்தவளுமான மந்தரை யென்பவள் உப்பரிகையின் மீது தற்செயலாக ஏறி அந்நகர் முழுவதையும் கண்ணுற்றாள். எங்கு பார்த்தாலும் அலங்கார மயமாகவும் வேதகோஷமயமாகவும் விழாவொலிமயமாகவும் இருக்கின்ற அதிசயத்தை அபூருவமாகக் கண்டாள். அளவுகடந்த ஆச்சரியமடைந்தாள். அப்பொழுது இராமனது செவிலித்தாயாகிய ஒரு பெண்மணியும் அவ்வுபரிகையின்மீது தன்னருகில் மிக்க அலங்காரங்கள் பொருந்தியிருப்பதைக் கண்ட அந்த மந்தரை

யானவள் அவளை நோக்கி "ஊரடங்கலும் இவ்வாறு விபவங்கள் விஞ்சியிருப்பதற்கு யாது காரணம்? அதிகமாகக் கொடை புரிந்தறியாத கௌஸல்யையும் இன்று விசேஷமாகத் தான தருமங்கள் செய்கின்றாளே, இதற்கு யாது காரணம்? தசரதமன்னவன் ஏதேனும் மகிழ்ச்சி விஞ்சிய காரியம் நடத்த உத்தேசித்திருக்கின்றனனோ? இதை எனக்குரைக்க வேணும்" என்றாள்.

அதற்கு அவள் உண்மையான செய்தியை இவளிடம் சொல்லலாகாதென்பதை யறியாது இராமனுக்கு மகுடாபிஷேகம் நடைபெறப் போகின்றதென்பதைப் பேருவகையுடன் பகர்ந்தாள். அது கேட்ட மந்தரை உடனே மனம் ததும்பி மிக்க பரபரப்புடன் கிழிறங்கிக் கைகேயியின் அந்தப்புரத்திற் சென்று அவளை நோக்கி "அடி மதி கெட்டவளே! உன் தலைமேல் இடிவிழுந்திருக்க இப்படியுமுறங்குவாயோ? உனக்குப் பலபல துன்பங்கள் நேரிடப் போகின்றன வென்பது தெரியவில்லையா? மன்னவன் உன்மீது காதல் கொண்டிருப்பவன்போல் நடிக்கின்றானேயல்லது உண்மையான காதலை உன்மீது வைத்திலன் காண்; அநியாயமாய் ஏமாந்து போகின்றாயே!" என்று கூக்குரலிட்டனள்.

செய்தி இன்னதென்றறியாத கைகேயி மந்தரையை நோக்கி 'யாது காரணம்பற்றி இங்ஙனம் நீ வருத்தமுற்றுப் பேசுகின்றனை? உனக்கோ எனக்கோ ஏதேனும் அனர்த்தம் நேர்ந்திருக்குமாயின் அதைச் சொல்' என்ன, அந்தக் கூனிக் கிழவி மிக்க கோபத்தையும் வருத்தத்தையும் காட்டிக் கொண்டு..."இராமனுக்கு முடிசூட்டப் பெரு முயற்சி நடந்து கொண்டிருக்கின்றதே! உன் மகனை பரதனுக்கு அரசுரிமையின்றி அஃது இராமனுக்கே ஆவதனால் விளையப்போகும்

பெருங்கேட்டை நீ அறிகின்றிலேயே!, இனி உன்னையும் உன் மகனையும் மதிப்பாரார்? கௌஸல்யைக்கேயன்றோ எல்லா வகையான மதிப்பும் மேன்மையும் இனி நிரம்பி நிற்கும்; மன்னவன் உன் மீது மிக்க அன்புள்ளவன்போலிருந்து அந்தோ! உன்னை வஞ்சித்துவிட்டதை ஐயோ! அறிவுகேடீ! அறியாமலிருக்கின்றாயே!; உன் மகனான பரதனைப் பகைவனாக நினைத்துத் தேசாந்தரத்திற்குத் துரத்திவிட்டுக் கௌஸல்யைமகனுக்கு நாளையுதயத்தில் முடிசூட்ட முடிவு செய்திருக்கின்றானே! உனக்கு நேர்ந்த இப்பெருந்துயரத்தை நீ அறியாவிடினும் நானறிந்து வருந்துவதற்கு அளவில்லையே! ஐயோ! கெட்டுப்போயினை! கைகேயீ! பெருந்துயரத்திற்கு உள்ளாயினை; இதைப் பொறுத்திருக்க என்றால் முடியவில்லையே! விரைவில் நன்மை தேடிக்கொள்ளமாட்டாயோ? உனது மதியின் மேன்மையையும் வடிவழகின் சிறப்பையும் உபயோகப்படுத்தியே நீ உன்னையும் உன் புதல்வனையும் என்னையும் பாதுகாக்கவேணும்" என்றனள்.

கூனி இத்தனை கூறியும் சிறிதும் மனவருத்த முறாத கைகேயி இராமனுக்கு மகுடாபிஷேகம் நடைபெறப் போகின்றதென்று நல்வார்த்தையைத் தெரிவித்த பேருதவிக்காக மிகமகிழ்ந்து உள்ளம் பூரித்து அவளுக்குப் பரிசாக உயர்ந்ததோர் ஆபரணத்தையெடுத்துக் கொடுத்து, "தாயே! மந்தரையே! என் செவியில் அமுதம் பாய்ச்சினாற் போன்ற நன்மொழியை வந்து நல்கினையே, உனக்கு நான் இன்னமும் என்ன பரிசளிப்பேன்!; இராமனுக்கு முடிசூட்டுதல் என்கிற இம்மங்கலமொழியை இப்போது கேட்கப் பெற்ற யான் அடையும் ஆனந்தத்திற்கு அளவில்லையே! இராமன் என்றும் பரதன் என்றும் யான் ஒரு வாசி வைத்

திருக்கவில்லையே! நான் மனமுகக்கும்படியான செய்திகளுள் ஸ்ரீராமாபிஷேகமென்கிற இதனிற் காட்டிலும் மேம்பட்டது வேறொன்றும் இருக்கமுடியாததுகாண்; இத்தகைய மகிழ்ச்சிச் செய்தியை என்னிடம் தெரிவித்த நீ ஏது வேண்டுவாயாயி னும் கொடுக்கக்கடவேன்" என்று கூறினள்.

ஏழாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ஏட்டாவது ஸர்க்கம்.

## கைகேயி கொடுத்த பரிசைத் திரஸ்கரித்து மந்தரை ராமாபி ஷேகத்தினால் விளையுங் கேட்டை விரிவாகக் கைகேயிக்கு எடுத்துரைத்தல்.

கைகேயி இங்ஙனம் ஆனந்தம் பொங்க நின்று கூறி யதைக் கேட்ட கூனி வருத்தமும் சீற்றமும் வளரப் பெற்று, அவள் கொடுத்த ஆபரணத்தையும் வீசி யெறிந்து "அந்தோ! அறிவு கெட்ட முழு மூடமே! மிக வருந்த வேண்டிய இச்சமயத்தில் மகிழ்ச்சி கொண்டிருக்கின்ற உன்றன் மூடத் தனத்தை என்ன சொல்லுவேன்!, இராமனுக்கு முடிசூட்டு வதிற் காட்டிலும் மேலான ஆபத்து உனக்கு வேறு என்ன இருக்கின்றது? இத்தகைய பெரியஆபத்து சமீபித்திருந்தும் அதைத் தொலைக்க வழி தேடாது இப்படி விபரீதமாக ஸந்தோஷங்கொண்டிருக்கின்ற உன்னைப் பற்றி எவ்வளவு தான் நான் வருந்துவேன்!; உனது சக்களத்தியின் மகன் என்றைக்கும் உனக்குப் பகைவனே; அவனுக்கு நன்மை நேருவது உனக்கு மிருத்யுவேயாகும்; அப்படிப்பட்ட மிருத்யு வரக்கண்டும் மகிழ்வுற்றிருக்கின்ற நீ விவேகமுடைய வளாவையோ? உன்மகனை பரதனுக்கு இனி விளையப்போ கும் கஷ்டங்களை நினைத்து நினைத்து நான் வருந்துகின்றேன்;

அன்றியும் உனது சக்களத்தியாகிய கௌஸல்யை தன் வயிற்றிற்பிறந்த ராமனுக்கு ராஜ்யாபிஷேகம் ஆய்விட்டால் உள்ளடங்காத சந்தோஷம் பெறுவள்; தனக்குமேற்பட்ட பாக்யவதி ஒருத்தியுமில்லை யென்று மிக்க செருக்குக்கொள்வள்; சக்களத்திகளைக் கீழ்ப்படுத்தித் தானே மேன்மையுற்று விளங்குவள்; நீயும் அவளுக்கு இழிதொழில் செய்தே காலங்கழிக்க வேண்டியதாகும். உன் மகனுக்குக் கெடுதல் விளையப்போகிறதென்னும் விஷயம் அப்படியிருக்கட்டும்; உனக்கேயன்றோ பெருங்கேடு விளையப்போகிறது; நீயும் உனது வேலைக்காரியாகிய நானும் மற்றும்பலரும் கௌஸல்யையிடம் கைகட்டிக் காத்திருந்து அடிமைசெய்து பிழைக்கும் பிழைப்பு ஒரு பிழைப்பாகுமோ? உன்மகனும் ராமனுக்கு ஏவலாளனாயிருந்து வாழவேண்டியவனாவான்." என்றும் மற்றும் பலவும் கூறினள்.

கூனி இவ்வளவு கூறியும் கைகேயி சிறிதும் மனவேறுபாடுறாமல் இராமனது திருக்குணங்களையே பாராட்டிக் கூறத்தொடங்கினள். "மந்தரையே! இராமனே ஸகலகுணங்களும் நிரம்பப்பெற்றவனாதலாலும் மூத்தகுமாரனாதலாலும் அவனே அரசாள்வதற்கு உரிமையுடையவன்; இளையோனாகிய பரதனுக்கு அவ்வுரிமை உரியதன்று; இராமனால் பரதனுக்கு ஏதேனும் கெடுதல்விளையுமென்று நீ சங்கித்தலும் தகுதியற்றது. இராமனது திருக்குணங்களைச் சிறிதுமறியாது கூறுகின்றாய் போலும். இராமன் தம்பிகளையும் வேலைக்காரர்களையும் தந்தையைப்போல் மிக்க அன்புடன் பாதுகாத்து வருவான்; அவ்விராமன் செல்வமனைத்தும் மல்கி நீடூழிவாழவேணும். அவனுக்கு நடைபெறவிருக்கும் யுவராஜ்யாபிஷேகத்திற்கு மனமகிழவேண்டியிருக்க நீ இங்ஙனம் பரிதவிப்பதேன்?

பிப்பது மிகவும் பிசகு; (இராமன் நூறாண்டு அரசாண்டபின் வமிச பரம்பரைப்படி பரதனும் அரசாள்வான்; இப்பொழுது இராமனுக்கு முடிசூட்டுவதே மிகவும்நியாயமானது. இராமன் என்னையும் கௌஸல்யைக்கு மேலாகவே பாராட்டு மியல் பினனுதலால் எனக்கும் ஒரு கெடுதல் விளையாது; இராமன் ஆள்வதோடு பரதன் ஆள்வதோடு ஒருவாசியில்லை" என்றனள்.

கைகேயி இங்ஙனம் கூறியவற்றைக்கேட்ட கூனி மிகுந் துயரமடைந்து பெருமூச்செறிந்து மீண்டும் கைகேயியை நோக்கி "அடி முழுமூடமே! நன்மை தீமைகளை நீயாகவே தெரிந்துகொள்ள வேண்டியிருக்க, நான் விளங்க எடுத் துரைத்தும் அந்தோ! இறையும் அறியாதிருக்கின்றனையே; உன்மகன் நாட்டைவிட்டுக் காட்டுக்குப் போகவேண்டும்படி யான கெட்டகாலமன்றோ குறுகுகின்றது; நீயும் மதிப் பிழந்து சக்களத்திக்கு ஊழியம் செய்யவேண்டும்படியன்றோ நேரிடப்போகிறது; ஒன்றுமறிகின்றிலையே! 'இராமனுக்குப் பின்பு பரதனுக்கு அரசுரிமை கிடைக்கவே போகின்றது' என்று கூறுகின்ற உன்னுடைய அறிவீனத்தை நான் என்ன வென்று சொல்லுவேன்? இராமன் வயிற்றிற் பிறக்கும் புதல் வனேயன்றோ இராமனுக்குப்பிறகு அரசுபெறுவான்; பரத னும் அவன்மகனும் அரசாள்வதற்கு எக்காலத்திலும் ஏது வில்லாமற் போகுமென்பதை யறிந்திலையே! ராஜவமிசத் தில் பரதனுடைய பெயரே இல்லையாய்விடப்போகின்றதே! 'இராமன் மூத்தவனுயிருக்க இளையோனுகிய பரதனுக்கு அர சாட்சிச்செல்வம் வருவதற்கு வழியில்லையே!' என்று நீ நினைக்கக்கூடும்; பரதனுக்கு ராஜ்யம் கைசோராதபடி உனக்கு உபாய முணர்த்தவே நான் இங்குவந்திருக்கின்றேன். இது

நிற்க, பெரிய ஆபத்துவந்துவிட்டதென்பதையு மறியாமல் எனக்கு நீ பரிசு அளிக்கவந்தாயே, இதை நினைக்க எனக்கு ஆறுதலில்லை. இதுவும் நிற்க: பரதனை இளமையிலேயே தேசாந்தரத்திற்கு அனுப்பிவிட்டாய்; இவ்விடத்திலேயே அவன் இருந்திருப்பானாயின் இராமனுக்கும் தசரதனுக்கும் அவன் மீது எவ்வளவோ அன்பு உண்டாகியே யிருக்கும். அங்ஙனம் அன்பு விளையக்கூடிய சேர்த்தியை நீயே கெடுத்துவிட்டாய்; அப்பரதனுக்கு உயிர்போன்றவனான சத்ருக்னனாவது இங்கு இருந்திருப்பானாயின் அவனிடத்திலுள்ள அன்பு காரணமாகப் பரதனிடத்திலும் அன்பு ஒருவாறு பெருகக்கூடும்; சத்ருக்னனும் பரதனோடுகூட அனுப்பப்பட்டு விட்டான். இராமனும் இலக்குமணனும் தம்முள்தாம் அளவுகடந்த அன்பு பூண்டிருக்கின்றனர். அவர்களுக்குள் ஒருபோதும் மாச்சரியம் ஏற்படாது. இராமன் பரதனுக்கு அவசியம் கெடுதி செய்தே தீருவன்; இதில் சிறிதும் ஐயமில்லை. இராமன் முடிசூடப்பெற்றபிறகு பரதன் கேகய நாட்டில் நின்றும் இங்குவந்து இராமனால் கொலையுண்டு முடிவதிற்காட்டிலும் அவன் இங்கு வராமலே எங்கேனும் காட்டிற்சென்று வாழலாம். அங்ஙனன்றி அவன் சீரும் சிறப்புமாக வாழ வேண்டில் அவனே முடிசூடப் பெறும்படி நீ முயலவே வேண்டும். இராமன் பூமிக்கு அரசனாயின் அப்பொழுதே பரதன் பாழாய்ப்போவது நிச்சயம். ஆகவே உன்மகன் மகுடஞ்சூடும்படிக்கும் இராமன் காட்டிலே துரத்தப்படுவதற்கும் தகுந்த உபாயத்தை இப்பொழுதே ஆலோசித்துக் கொள்வாயாக.'' என்றாள்.

எட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

## ஒன்பதாவது ஸர்க்கம்.

**மந்தரை தன் சொல்லுக்கு உடன்பட்ட கைகேயிக்கு, ஏற்கனவே தசரதன் வாக்களித்திருக்கின்ற இரண்டு வரங்களை இப்போது வேண்டிக்கொள்ளும்படி தெரிவித்தலும், கைகேயி அதற்கு உடன் பட்டுக் கோபக்ருஹத்தில் கிடத்தலும்.**

கூனி கூறியதை யெல்லாம் கேட்ட கைகேயி 'சக்களத்திக்கு அடிமைப்படவேண்டும்படியா எனக்கு நேரிடப் போகிறது!, நானு அடிமைப்படுவேன்!' என்று பெரு மூச்செறிந்து கூறிக்கொண்டு கோபமும் தாபமும் மிகப்பெற்று 'மந்தரையே! உடனே இராமன் நாடுதுறந்து காட்டுக்குச் செல்லவும் பரதன் முடிசூடப்பெறவும் என்ன வுபாயமென்பதைச் சிந்தித்துச் சொல்லக்கடவை' என்றாள்.

மந்தரை அதுகேட்டுப் பரம ஸந்தோஷத்தை வெளியிட்டு ''அம்மா கைகேயி! அந்த உபாயம் உனக்கே தெரிந்திருந்தும் என்வாயாற் கேட்க விரும்புகின்றனை போலும்; சொல்லுகிறேன் கேளாய்; முன்பு தேவாசுரயுத்தத்தில் தேவேந்திரனுக்குத் துணைபுரியச்சென்ற உனது பர்த்தா உன்னையுமழைத்துக்கொண்டு தென்திசையாகச்சென்று தண்டகாரணியம் சேர்ந்து அங்குத் திமித்வஜனென்பவன் வாழ்ந்த வைஜயந்தமென்னும் பட்டணத்திற்குச் சென்றனன்; சம்பரனென்னும் மறுபெயர்கொண்ட மஹாசூரனாகிய அந்தத் திமித்வஜன் நூறுவகையான மாயைகளில் மிக வல்லவனாதலால் தேவர்களிடம் தோல்வியடையாமலே இந்திரனோடு போர்புரிந்தனன். அவனுக்குத் துணையாகப் பல அரக்கர்களும்வந்து இரவில் தேவர்களுக்குப்பல துன்பங்களை விளைத்தனர். அப்போது இந்திரனுக்குச் சார்பாக மிகக்கொடிய

யுத்தம் நடத்தின உனது பர்த்தா மூர்ச்சையடைந்து நிலை கலங்கி நிற்கையில், கைகேயீ! நீ மிகநல்ல உபசாரங்களினால் மூர்ச்சை தெளியச்செய்த மஹோபகாரத்திற்காக மன்னவன் உன்னை இரண்டு வரங்கள் பெறும்படி கூறினன்; அவற்றை வேண்டும்போது பெற்றுக்கொள்வதாக நீ கூறி நின்றனை; இச்செய்தியை முன்பு நீ சொல்லியே நானறிவேன்: இதை நீ மறந்துபோனாலும் நான் உன்னிடத்து வைத்துள்ள அன்பு மிகுதியினால் மறவாது மனத்திற் கொண்டிருக்கின்றேன். அந்த இரண்டு வரங்களை இப்போது நீ வரிக்கத்தகும். ஒரு வரத்திற்குப்பயனாகப் பரதனுக்கு முடி சூட்டவேணுமென் றும், மற்றொரு வரத்திற்குப்பயனாக இராமனைப் பதினான்கு வருஷம் வனவாஸம் செய்யச் செலுத்தவேண்டு மென்றும் விரும்புவாயாக. 'பரதனுக்கு முடிசூட்டவேணுமென்பதை மாத்திரம் விரும்பினால் போதாதோ' என்று நீ நினைக்கவுங் கூடும்; பரதன் முடிசூடினாலும் இராமன் நகரத்திலேயே வாழ்ந்து வந்தானாயின் குடிமக்களுடைய மனமெல்லாம் இராமனிடத்திலேயே பதிந்திருக்கும். பரதனுக்கு ஒரு மதிப்பும் ஏற்படாது. இராமன் பதினான்கு வருஷம் வனவாஸம் செய் யச் செல்வானாயின் பிரஜைகளுக்கு இராமனிடத்துள்ள அன்பு அடியோடு மாறிப்போய்விடும். ஆகவே இராமனைக் காட்டுக்கு அனுப்பவேண்டுவதும் முக்கியமானதே. உடனே நீ கோபகிருஹத்திற் சென்று விகாரமான கோலம்பூண்டு கோபக்குறிகளுடன் வெறுந்தரையில் படுத்திரு. மன்னவன் வந்தாலும் முகங்கொடாமல் அழுதுகொண்டிரு. மன்னவன் இயற்கையாகவே உன்மீது மிக்க அன்புகொண்டவனாதலால் எவ்விதத்திலும் அவன் உன் கோபத்தையும் தாபத்தையும் தவிர்க்க முயன்றே தீருவன். உயிரைக்கொடுத்தும் உன்னை

உவப்பிக்கவல்லவன். பலவகையான ஆடையாபரணங்களைக் கொடுத்து அரசன் உன்னைச் சமாதானப்படுத்த நினைத்தாலும் அவற்றில் நீ மயங்கி மோசமடைய வேண்டா; நான் கூறிய படியே அவ்விரண்டு வரங்களையே கேட்டுப்பெறுவாயாக. பதினான்கு வருடங்கள் கழித்து இராமன் திரும்பி நாட்டுக்கு வந்தாலும் குடிமக்களின் மனம் அவனிடத்துப் பதியாது. பரதனுக்கே ராஜ்யலக்ஷ்மி ஸ்திரமாய்விடும்; இவ்வுபாயத்தைக் காலதாமதமின்றி நிறைவேற்றுவாயாக'' என்றனள்.

கூனி சொன்ன இம்மொழிகளைக் கைகேயி இதமாகவே கொண்டனள். இயற்கையாகவே கம்பீரமான மனம் படைத்திருந்த அவள் தெய்வ வசமாகக் கூனியின் கலஹ வார்த்தைகளுக்கு உடன்பட்டுவிட்டாள். மந்தரையைப் பலவாறு புகழவும் தொடங்கிவிட்டாள். இராமனுக்கு முடிசூட்டுவது தனக்குப் பெரிய ஆபத்தாகவே முடியுமென்றும், அம்முயற்சியைப் பங்கம் செய்தே விடவேண்டுமென்றும் திண்ணமாக உறுதி கொண்டாள். கூனியின் வடிவழகையும் புத்தியின் கூர்மையையும் மிகமிகப் பாராட்டிப் புகழ்ந்தனள். 'பரதன் முடிசூடப்பெற்று இராமன் காட்டுக்குச்செல்வானுபின், மந்தரே! உனது கூனின்மேல் கனகமாலையொன்று கட்டுவேன், மற்றும்பல ஆடையாபரணங்களையும் பரிசளிப்பேன்' என்றனள்.

அதுகேட்டு உவந்த கூனி, 'அம்மா! நல்லது; தண்ணீர் வெள்ளம் சென்றபின்பு அணைகட்டுவதில் பயனில்லையென்பது உனக்குத்தெரியுமே; ராமாபிஷேகம் நிறைவேறியபின்பு நீ வரங்கேட்டுப்பயனில்லை; இனிக் கணப்பொழுதும் தாமதம் செய்திடாமல் உடனே கோபகிருஹத்திற்சென்று படுத்து அரசன் வருகையை எதிர்பார்த்திருப்பாயாக' என்று உற்சாகப்படுத்தினள். அவளும் உடனே எழுந்து கூனியுடனும்

சென்று, மிக விலையுயர்ந்த முத்துமாலைகள் முதலிய ஆபரணங்களையெல்லாம் கழற்றி யெறிந்துவிட்டுக் கோபகிருஹத்தில் வெறுந்தரையிலேயே படுத்துக் கொண்டாள். 'மந்தரே! மன்னவன் நான் கேட்டபடி வரம் கொடானாயின் நான் இவ்விடத்திலேயே உயிரைமாய்த்துக்கொள்வது உறுதியே' என்றாள். அதைக் கூனி மிகவும் ஆமோதித்தாள். கைகேயியும் தன் உறுதியையே திருப்பித் திருப்பிச் சொல்லிக்கொண்டிருந்தாள். கூனியின் சொல்லுக்கு உடன்பட்டு அவள் கொண்டிருந்த மலினக்கோலம் வாய்கொண்டு சொல்லவொண்ணாததாயிருந்தது.

ஒன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## பத்தாவது ஸர்க்கம்.

### தசரதன் கைகேயியைக் காணுதலும், அவளுக்கு நல் வார்த்தைகள் கூறுதலும்.

கைகேயி ஒரே உறுதியாகக் கோபதாபங்களை மிகவும் வெளிக்காட்டிக்கொண்டும் மந்தரையை மென்மேலும் புகழ்ந்துகொண்டும் கட்டாந்தரையில் படுத்திருந்தனள். பூமாலைகளும் பல ஆபரணங்களும் தரையில் விழுந்து சிதறிக் கிடந்தன. தசரதன் ராமாபிஷேகத்திற்காகச் செய்யவேண்டிய காரியங்களையெல்லாம் செய்யுமாறு அவரவர்களுக்குக் கட்டளையிட்டுவிட்டு இந்தச் சுப சந்தோஷச்செய்தியைத்தன் உயிர்மனைவியான கைகேயிக்குத் தானே நேரில் அறிவித்தற்பொருட்டு அவளது அறைக்கு வந்தனன். அங்கு ஆச்சரியமான ஸந்நிவேசங்கள் எல்லாம் வெகு அழகாக அமைந்திருந்தும் கைகேயியை மாத்திரம் காணப்பெறாமல் திடுக்கிட்டு அங்கிருந்த வேலைக்காரியை வினவினன். "மன்னர்பெரு

மானே! தேவியார் மிக்க கோபங்கொண்டு விரைந்தெழுந்து சென்று வேறொரு அறையில் இருக்கின்றார்” என்று அவள் விடைகூறினள்.

அதுகேட்டு மிகக்கலங்கிய மன்னவன் உடனே கோப கிருஹத்திற் சென்று ஆங்கு அலங்கோலமாய்க் கட்டாந்தரையில் வீழ்ந்து கிடக்கின்ற கைகேயியின் மிக்கபரிதாப நிலைமையைக்கண்டு ஒன்றும் தோன்றாதவனாய், அவளது தீய நினைவைச் சிறிதும் அறியாதவனாய் அவளைக் கைகளால் இனிமையுறத் தடவிக்கொடுத்து, “என் கண்மணியே! என்னைக்கண்டபின்பும் நீ இங்ஙனே கோபங்கொண்டிருக்கத் தகுமோ? என் மீது நீ இங்ஙனம் கோபங்கொண்டிருத்தற்கு யாது காரணமோ தெரியவில்லையே!; என் காதற்களஞ்சியமே! நீ புழுதியில் படுத்திருப்பதுகண்டு பொறுத்திருக்க என்னாலாகுமோ? மிக்க மகிழ்ச்சியோடிருக்கவேண்டிய இச்சமயத்தில் நீ இங்ஙனம் அமங்கலமாகக் கிடந்திருப்பது தகுதியோ? உனக்கு நேர்ந்திருக்கும் அநிஷ்டம் எதுவானாலும் கூசாது எனக்குக் கூறுவாயாயின் அதனை உடனே தவிர்த்திடுவேன், உனக்கு நிறைவேற வேண்டிய இஷ்டம் எதுவாயிருந்தாலும் கூறினவுடனே அதனை நிறைவேற்றவுங்கடவேன்; இதில் சிறிதும் ஐயுறவேண்டா:” என்று பலவாறு பகர்ந்தனன்.

மன்னவன் இங்ஙனம் கூறுகையில் அந்தக்கைகேயி தேறுதலடைந்து அநிஷ்டவார்த்தைகளைச்சொல்லி நிர்ப்பந்திக்கத் தொடங்கினள்.

பத்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

## பதினோராவது ஸர்க்கம்.

### பரதனுக்கு முடிசூட்டி இராமனைக் காட்டுக்கனுப்ப வேணுமென்று கைகேயி தசரதனிடம் கூறுதல்.

கைகேயி தசரதனைநோக்கி "நாதா! எனக்கு யாதொரு வியாதியுமில்லை, யாதொரு சத்துரு பீடையுமில்லை; என்னுள்ளத்திலுள்ள விருப்பத்தைத் தவறாது நிறைவேற்றுவேனென்று நீ சபதஞ்செய்து தருவாயாயின் அதனை வெளியிட்டுக்கூறுவேன்" என்றாள்.

அதுகேட்ட மன்னவன் "என் உயிர்க்காதலியே! உன் மீது நான் கொண்டிருக்கின்ற அன்பை நீ அறியாயோ? எனது அன்பிற்கு இடமானவள் உன்னைக்காட்டிலும் வேறொருத்தியுண்டோ? பெண்களுள் உன்னிடத்திலும், ஆண்களுள் இராமனிடத்திலுமே யன்றோ எனது அன்பு பதிந்திருப்பது; என் உயிரே வடிவெடுத்தாற்போன்ற அவ்விராமன்மீது ஆணையிட்டுச்சொல்லுகின்றேன், கேள்: உன் விருப்பத்தை நீ தாராளமாகத் தெரிவிக்கவேணும்; தவறாது நிறைவேற்றுவேன்; எந்த ராமனைப்பிரிந்து நான் ஒரு நொடிப்பொழுதும் உயிர் வாழ்ந்திருக்கமாட்டேனோ, அந்த ராமன்மேல் ஆணையாகச்சொல்லுகிறேன்; உனது விருப்பம் எதுவாயினும் அதனைத் தலைக்கட்டியே தீருவேன்" என்றனன்.

இதுகேட்ட கைகேயி மந்தரையின் சூழ்ச்சியால் தன் மனத்திற்கொண்டிருந்த விருப்பம் நிறைவேறிவிடும் என்று துணிந்து மிகுந்த மகிழ்ச்சிகொண்டவளாகி "நாதா! இப்போது நீ இராமன்மீது ஆணையிட்டுக் கூறிய வாக்கு பழுதுபட வொண்ணாது; உனது உறுதிமொழியை ஸகல தேவதைகளும் ஸாக்ஷியாக அறிந்திருக்கவேணும்; நீ ஸத்திய ஸந்தன்

என்று பெற்றிருக்கும் புகழ்க்குச் சிறிதும் குன்றுதல் வாரா திருக்கவேணும்" என்று கூறிவிட்டு முன்பு தேவாஸுர யுத் தத்தில் நடந்த செய்தியையும் நினைப்பூட்டி "அப்போது சம் பராஸுரனுடைய மாயையில் நின்றும் உன்னை நான் தப்ப வைத்து உயிர்காத்ததற்காக நீ கொடுக்கவந்த இரண்டு வரங் களை நான் பெற்றுக்கொள்ளாமல் உன்னிடத்திலேயே இருப் பாக வைத்திருக்கிறேனல்லவா? அந்த இரண்டு வரங்களையே இப்போது நான் வேண்டுகின்றேனே யன்றி வேறில்லை; இந்த வரங்களைக் கொடுக்க நீ தவறுவாயாயின் உன் கண்முன் னிலையிலேயே உயிரை மாய்த்துக்கொள்வேன்" என்றனள்.

அதுகேட்ட மன்னவன் மிகவும் அஞ்சி நடுங்கி வருத்தமுற்றனன். இவள் பழைய கதைகளையெல்லாம் நினைப்பூட்டிக் கடுமையாகப் பேசுகின்றாளே, என்ன வரம் கேட்பளோ! என்னாகுமோ! என்று மிகவும் வியாகுலப்பட்ட னன். ஸத்தியம் தவறலாகாது என்று உறுதியுங் கொண் டிருந்தனன்.

அப்போது கைகேயி, "நாதா! இப்போது இராமனுக்கு முடிசூட்டுவதென்று செய்திருக்கிற ஸன்னாஹங்களைக் கொண்டே என் புதல்வனை பரதனுக்கு முடிசூட்டவேண் டும்; இது ஒரு வரம்: இராமன் பதினான்கு வருஷகாலம் நகரைத் துறந்து தண்டகாரணியத்தில் முனிவேடத்துடன் வஸிக்கவேண்டும்; இது மற்றொரு வரம். ஆக இவ்விரண்டு வரங்களையும் நீ கடுக நிறைவேற்றியாகவேண்டும். சிறிதும் காலதாமதம் செய்யத்தகாது. இவையிரண்டொழிய வேறொன்றும் நான் விரும்புகின்றிலேன். ஏற்கனவே நீ வாக்களித்திருந்த வரங்களை இப்போது நான் கோரியிருக்கின் றேனேயன்றி இப்போது புதிதாக நான் யாதொன்றும்

வேண்டிற்றிலேன்; இப்பொழுதே இராமன் காடு செல்ல நான் காணவேண்டும். எவ்விதத்திலும் நீ ஸத்தியம் தவறு திருக்கப் பார்ப்பதே நன்று'' என்றனள்.

பதினோராவது ஸர்க்கம் முற்றிற்று.

பன்னிரண்டாவது ஸர்க்கம்

## கைகேயியின் கொடிய இரண்டு வரங்களைக் கேட்ட தசரதன் வருந்தி யேங்கிப் புலம்புதல்.

தசரத மன்னவன் கைகேயியின் கொடிய பேச்சுக்களைக் கேட்டதும் மூர்ச்சித்தனன். வெகு நேரங் கழித்து மூர்ச்சை நீங்கித் தெளிவுபெற்று வருத்தத்தின் மிகுதியினால் ஆ! ஆ!! என்று அலறி மறுபடியும் மூர்ச்சித்தனன். வெகுநாழிகை கழிந்தபின் தெளிந்து 'அடீ! கொடியவளே! இந்த வம்சத்தைக் கெடுக்க வந்த பாவியே! இராமனாவது நானாவது உனக்குச் செய்த தீங்கு ஏதேனுமுண்டோ? இராமன் பெற்றதாய்க்குப் போலவே உனக்கும் பணிவிடை செய்துகொண்டிருக்கின்றானல்லவா? அன்னவன் மீது நீ கடிய மனம் கொண்டனையே! இந்த துர்ப்புத்தி உனக்கு எங்ஙனம் உண்டாயிற்று? உன் தன்மையறியாது உன்னை இவ்வீட்டினுள் கொண்டு வந்து சேர்த்துக்கொண்ட எனது புத்தியையன்றோ நிந்திக்க வேண்டும்; பறவைகள் விலங்குகள் முதற்கொண்டு ஸகல பிராணி ஸமூகங்களும் புகழும்படி நற்குண நற்செய்கைகள் வாய்ந்த இராமனை எங்ஙனம் நான் வனம் போகவிடுவேன்! என்னுயிரை விட்டாலும் விடுவேனேயன்றி என் அருமைப் புதல்வனையா நான் விடுவேன்? இராமனை விட்டு ஒரு நொடிப் பொழுதாயினும் என்னுடலில் உயிர் தங்கியிருக்குமோ? அடி

பாபிஷ்டையே! நீ கொண்ட கொள்கை என்னுயிரையே மாய்க்கவல்லதாகவன்றோ இருக்கிறது. இக் கொடிய கருத்தைக் கூசாது நீ என்னிடம் கூறினவளவே போதும்; இவ்வளவோடு இக்கருத்தை விட்டுத் தொலைப்பாயாக. உனக்கு நான் கணவனாக இருந்தாலும் உன்பாதங்களில் என் தலையை மடுத்து வணங்கி வேண்டிக்கொள்ளவும் கூச்சமற்றிருக்கின்றேன். கலக்கம் தீர்ந்து என்மேல் அருள்புரிவாயாக. அந்தோ! என்ன பேச்சுப் பேசினாய்! பரதன் மீது எனக்கு அன்பு உளதா இல்லையா என்று பரீட்சை பார்ப்பதற்காக இங்ஙனம் கூறுகின்றாயோ என்றும் நினைக்கிறேன். பரதனுக்கு முடிசூட்டவேணுமென்று இவ்வளவே விரும்பியிருந்தாலும் குற்றமில்லை; பதினான்கு வருடம் இராமனைக் காட்டுக்குச் செலுத்தவேண்டுமென்றும் விரும்புகின்றாயே! இந்தக் கடு நெஞ்சு உனக்கு எங்ஙனம் வந்தது? பண்டு பலகாலும் இராமனை நீ புகழ்ந்துரைத்துக் கொண்டிருந்ததெல்லாம் கபடமேயோ! உனக்கு மனமார்ந்த பணிவிடைகள் எத்தனையோ செய்து போந்த இராமனைக் காட்டுக்குத் துரத்த வேணுமென்று நீ கூறுவது யாருடைய துர்ப்போதனையினாலோ? பிசாசுகள் உன்னை ஆவேசித்தன போலும். ஆனது பற்றியே நீ தெளிவின்றி இங்ஙனம் விபரீதமாகப் பேசுகின்றனை: 'இராமனோடு பரதனோடு எனக்கு வாசியில்லை' யென்று நீ பல்காலும் சொல்லிக் கொண்டிருந்தவளன்றோ? இப்போது அன்பும் தருமமும் அனைத்தும் தடுமாறி நீ பேசுகின்ற இப் பேச்சு உன்மனத்திற்காவது ருசித்திருக்கின்றதா? கண்டவர் கண்களைக் கவருமழகு வாய்ந்த இராமனைக் காட்டுக்குப் போகவிடவேண்டு மென்கிற கொடிய பேச்சு உன்வாயில் நின்றும் எங்ஙனம் வெளிவந்ததோ? இராமனை நோக்கி 'நீ

காட்டுக்குச் செல்வாய்' என்று எப்படி நான் சொல்லுவேன்? ஸகலகுண ஸம்பன்னனான அந்த ராமன் தவிர எனக்கு வேறு கதியுமுளதோ? அவனையா நான் கைவிட்டிருப்பது! கைகேயீ! உனக்கு அஞ்சலி செய்கின்றேன்; பாதங்களிற் பணிகின்றேன்; இராமன்மீது மாத்திரம் தீய நெஞ்சு கொள்ளாதே; என்னையும் காத்து இராமனையும் நீ காக்க வேண்டும்—என்று பலவாறு புலம்பியும் கதறியும் கெஞ்சியும் கூறினன்.

அது கேட்ட கைகேயி தன் பிடிவாதத்தில் சிறிதும் குன்றாதவளாய் "அரசே! எனக்கு வரங்களைக் கொடுத்து விட்டு இப்போது வீணாகப் பரிதபித்து வாக்குத் தவறி நிற்பாயாயின் பொய்யனென்று பழிபெறுவாய், இவ்வுலகில் தரும நெறி குலையாதார் முன்னே நீ தலைகாட்டி நிற்க முடியாது; அஸத்திய ஸந்தன் என்று உன்னைப் பல பெரியார் பழிக்கும்படி நீ நடந்து கொள்ளத்தகாது. மன்னவர்மணியான நீயே இப்படி வாக்குத் தவறுவாயாயின், உலகத்தில் அதர்மத்திற்கு நீயே வழிகாட்டியாவாய். சைப்யன், அலர்க்கன் முதலான மேலோர்கள் தங்கள் தங்கள் வாக்கை எப்படிக் காப்பாற்றி யிருக்கின்றார்களென்பதை அறியாயோ? ஸத்யமென்னும் தருமத்தை விட்டு இராமனை ராஜ்ஜியத்தில் முடிசூட்டிக் கௌஸல்யையோடு கூடி ரமிக்கவிரும்பியிருக்கிற நீ சொன்ன சொல்லை எங்ஙனம் நிறைவேற்றுவாய்!; எப்படியாயினும் நான் கேட்ட இரண்டு வரங்களையும் நீ கொடுத்துத் தீரவேண்டியது தவறாது. இல்லையேல், உன் கண்முன்னே விஷத்தையுண்டு உயிரை மாய்த்துக்கொள்வது தவிரேன். இராமன் அரசாள, அதனால் கௌஸல்யை செருக்குக்கொண்டிருக்குமிருப்பை நான் என் கண்ணால் காண்பேனோ? இராமனைக் காட்டுக்கு அனுப்பாமல் நீ வேறு எது செய்யினும்

இசையேன் என்பதைப் பரதன் மேலும் என்மேலும் ஆணை யிட்டுச் சொல்லுகின்றேன்" என்று சொன்னாள்.

இவ்வளவும் கேட்ட தசரதன் பின்னும் எவ்வளவோ வேண்டிக்கொண்டும் கைகேயி சிறிதும் மனமிரங்காதது கண்டு துக்கசாகரத்தில் ஆழ்ந்தனன். அவள் ஒரே பிடிவாதமாயிருப்பதையும், தான் ஏற்கனவே வரம் கொடுத் திருப்பவனாதலால் சத்தியத்திற்குக் கட்டுப்பட்டிருப்பதை யும் சிந்தித்து இன்னது செய்வதென்று தோன்றாமல் ராமா! என்று அலறிக்கொண்டு தரையில் விழுந்தனன்.

மறுபடியும் எழுந்து கைகேயியை நோக்கி "அடி பாவி! என்ன கோரினாய்! என்ன கூறினாய்!!; இப்படியும் கேட்க உனக்கு வாய் வந்ததே!; எந்தப் பரதனுக்கு நீ ராஜ்யம் வேண்டுகின்றனையோ அந்தப்பரதன் தர்மிஷ்டனாகையாலே ராஜ்யத்தை ஒருகாலும் அங்கீகரிக்கமாட்டானே; இராமனைக் காட்டுக்கு அனுப்புவதையும் அவன் இசையமாட்டானே; பரதனுக்கும் விருப்பமில்லாதவற்றையன்றோ நீ விரும்பு கின்றாய்; ராமாபிஷேகத்திற்காகப் பல திசைகளினின்றும் அழைக்கப்பட்டு வந்திருக்கின்ற அரசர்களும் முனிவர்களும் அந்தணர்களும் என்னைப் பழிப்பார்களே, அவர்களுக்கு நான் என்ன விடை கூறுவேன்? இராமனுக்கு முடிசூட்டுவ தாக நான் நாடு நகரமும் நன்கறியக் கூறியிருக்கின்ற வார்த்தை பொய்யாகிவிடுமாயின் இதுவே எனக்குப் பெருத்த அவமானமல்லவா? இது நிற்க, கௌஸல்யைக்குத் தான் நான் என்ன கூறுவேன்? அவள் என்னிடத்தில் நடந்து கொள்ளும் விதங்களைப்பற்றி நான் என்ன சொல்லுவேன்; எவ்வளவோ அன்பு பாராட்டியிருந்த அவளுக்கு நான் தகுந்தபடி உபசாரங்கள் செய்யாதிருந்ததுமுண்டு; உன்னு

டைய முகம் கோணிவிடுமோ என்கிற அச்சத்தினாலேயே அவளுடைய அன்புக்குத் தகுந்த அன்பை நான் காட்டா திருந்தேன். அப்படியிருந்தவென்னிடத்தில் பாவி! நீ இப்போது உன்னுடைய துஷ்டத்தனத்தைக் காட்டினையே யன்றி வேறில்லையே! சுமித்திரையும் என்னை அற்பனாக் நினைக்கும்படியாயிற்றே; இனி, சீதைதான் உயிர்வாழ்ந்திருக்கப் போகிறாளோ? நானும் செத்துப்போக, நீயும் உன் மகனுமே ராஜ்யத்தை ஆண்டுகொண்டிருங்கள். இதுவரையில் உன்னை நான் நல்லவளென்று நம்பிக் கெட்டேனந்தோ! ஐயோ! என்ன துக்கம் வந்தது! என்ன கஷ்டம் நேர்ந்தது! இராமனைக் காட்டுக்குப் போகவிடவேணுமென்று நீ சொன்ன கடுஞ் சொல்லைக் கேட்டு நான் இன்னமும் உயிர்மாயாதிருக்கின்றேனே! இத்தகைய என் கொடுமையையன்றோ நிந்திக்க வேணும். பாபிஷ்டையான கைகேயி! உன்னால் நான் இந்த அரும்பெருந் துயரை யடைவதற்காகவே உன்னை நான் போஷித்துவந்தேன்போலும். உன்னை மிருத்யுவென்று இதுவரை தெரிந்துகொள்ளாமற் போனேனே! மகா பாபியான நான் இராமனுக்குத் தந்தையானேனே! 'துராத்மாவான தசரதன் ஒரு பெண்பிள்ளையின் பேச்சைக் கேட்டு, கட்டின காப்போடே இராமனைக் காட்டுக்குப் போகவிட்டானே! என்று அனைவரும் என்னைப் பழிக்கும்படியான துர்க்கதியன்றோ நேரிட்டது. இராமன் நல்ல சுகத்தை யனுபவிக்கவேண்டிய தருணத்தில் இப்படி மிகக் கொடிய கஷ்டத்தை அனுபவிக்க நேர்ந்ததை நினைக்குந் தோறும் என்னெஞ்சு வேகின்றதே. அவனை நான் காட்டுக்குப் போவென்றால், அப்படியேயென்று உடனே புறப்பட்டுப்

மன்று' என்று தெரிந்துகொண்டு காட்டுக்குப் போகாமலிருக்க மாட்டானே, அந்தோ! என் செய்வது! அவன் காடேறச் சென்றதும் உலகர் அனைவரும் என்னைத் திரஸ்காரம் செய்வர் களே! அது என்னால் தாங்க முடியுமோ? ஆனால் அப்போதே மிருத்யுவும் என்னைத் தன்னிடம் வரவழைத்துக்கொள்வா னாதலால் உலகத்தாருடைய வசை மொழிகள் என் செவியிற் படாதிருக்கவுங்கூடும். பல சொல்லி என்? எல்லாரையும் அபாரமான வருத்தக்கடலில் விழத்தள்ளி நீ யொருத்தியே சுகமாயிரு. இக்ஷ்வாகு வமிசம் இவ்வளவோடு தொலைந்து போகட்டும். இராமன் காட்டுக்குச் செல்வது பரதனுக்குச் சம்மதமாக இருக்குமாயின் அவன் எனக்கு ஈமக்கடன் ஒன்றும் செய்யத்தகாது. அடி பாவீ! இராமனும் காட்டுக் குச் சென்று நானும் மாண்டபின்பு நீ விதவையாகி உன் மகனோடு கூடி ராஜ்யபோகங்களை அனுபவித்திரு. நீண்ட அபகீர்த்தியையே எனக்கு நீ விளைவிக்கப்போகிறாய். எனது அருமைக் குழந்தையாகிய ராமன் வேண்டியபொழுதெல்லாம் தேர்கள் யானைகள் குதிரைகள் முதலியவற்றில் ஏறித் திரிந்துகொண்டிருந்து இப்பொழுது கொடிய காட்டிலே எங்ஙனம் காலை வைத்து நடப்பான்? சிறந்த அமுதுகளைப் புசித்துக்கொண்டிருக்கும் இராமன் கானகத்தில் கசப்பான காய் கிழங்குகளை எங்ஙனம் உண்பான்? அஞ்சிதப்பைம்பூம் பள்ளியில் இனிமையாகப் படுத்துக் கண் வளரும் என் அருமைப் புதல்வன் காட்டில் கல்லணைமேல் கண்டுயில்வது எங்ஙனே? பெண்டுகளின் இயற்கையே பொதுவாகக் கொடியது. ஆயினும் நலம் மிக்க பெண்டிரும் பலருண்டு; கைகேயீ! உன்னைப்போன்ற கொடிய பாவி எவ்வுலகத்திலும் இருக்கமாட்டாள். உலகிலுள்ள சராசரம் முற்றவும்

இகழும்படியான கொடுமையையன்றோ நீ செய்யத் துணிந் தனை: பாவி! என் நினைந்தாய்! என் சொன்னாய்! என் இராமனை நினைக்குந்தோறும் காணுந்தோறும் நான் மூ... நீங்கி இளம்பிராயம் பெற்றவன்போலவேயாகின்றேனே! இப்படிப்பட்ட ராமனையா காட்டுக்குப்போகவிடச் சொல்லு கிறாய் பாவி! என்று புலம்பிக்கொண்டே, அக்கொடியவள் நீட்டிக்கிடந்த பாதங்களிலே அநாதன்போல் தயிலென்று விழுந்து மூர்ச்சித்துத் தரையிலே புரண்டு துவண்டனன்.

பன்னிரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## பதின்மூன்றாவது ஸர்க்கம்

## தசரதன் கைகேயியை நல்வார்த்தை சொல்லி வேண்டிக்கோள்ளுதல்.

தசரத மன்னவன் இங்ஙனே பலவாறு புலம்பி வீழ்ந்து மூர்ச்சித்தமைகண்டும் சிறிதும் மனம் இளகாத கைகேயி தன் பிடிவாதத்தையே ஈடேற்ற முயன்று, தான் விரும்பிய வரங்களைக் கொடாமல் போகலாகாதென்றும் கொடுத்தே தீர வேண்டுமென்றும் சிக்கன வற்புறுத்தினள்.

அதுகண்ட மன்னவன் "ஐயோ! இப்படியும் ஒரு கொடியதன்மையுண்டோ? நானும் மரணமடைந்து ராமனும் காட்டுக்குச் சென்றபின்பு பாவி! நீ உன் கருத்தெல்லாம் ஈடேறப்பெற்றுச் சுகமாக வாழ்வாயாக. நான் செத்தாயினும் சுகப்படுவேனோ? அதுவும் இல்லையே; இங்கு இராமனது நன் மையில் கண்வைக்காமல் உபேக்ஷித்து நான் சுவர்க்கம் சென் றேனாயின் அங்கு அமரர்கள் 'அடா அதமனே! ஒருபெண் பெண்டாட்டியின் பேச்சைக்கேட்டு இராமனைத் துறந்து இப்படி வருவாயா!' என்று திரஸ்கார மொழிகள் பலவும் கூறு

வர்களே! அந்தோ! அம்மொழிகளை எப்படி நான் பொறுக்க வல்லேன்? அங்கும் எனக்குச் சுகமில்லையாகுமே! 'கைகேயி யிடம் ஏற்கனவே ஒப்புக்கொண்டிருந்தபடி வரங்களைக் கொடாது தவறுவேனுயின் பொய்யனுய் விடுவேனல்லவா. அங்ஙனம் பொய்யனுகாமைக்காகவே இராமனைக் காட்டுக்கு அனுப்பவேண்டியதாயிற்று' என்று அவரவர்களுக்குச் சமா தானம் சொல்லுவோமென்று பார்த்தாலும், 'இராமனுக்கு முடிசூட்டுவதாகமுன்னம் வாக்குறுதி கூறிவிட்டு அதை நிறை வேற்றுத உனக்கு ஸத்தியம் ஒருகேடோ?' என்று ஏசிப் பழிப்பார்களே! அருந்தவம்புரிந்து நெடுநாள் பொறுத்துப் பெற்ற புதல்வனை எங்ஙனம் கைவிடுவேன்? கொடுங்கூற்ற மன்ன கைகேயி! நற்குணங்களே வடிவெடுத்த நம்மிராமனைக் காட்டுக்குப் போகவிடவேணுமென்கிற கொடிய எண்ணத்தை ஏன் கொள்ளுகின்ருய்? இதனுல் எனக்கு அபகீர்த்தியும் அவமானமுந் தவிர வேறில்லையே! உனக்கும் இவை தவிர வேறில்லையே" என்றனன்.

இந்நிலைமையில் ஸூரியாஸ்தமனம் ஆய்விட்டது. இர வும் நெருங்கிவிட்டது. அன்றிரவு சந்திரமண்டலம் பரி பூர்ணமாக உதிக்கப்பெற்றும் சிறிதும் ஆனந்தத்திற்கு இட மின்றியே இராமுழுவதும் தசரதனுடைய புலம்பலே பெரு கிச்சென்றது. புலம்பிக்கொண்டே அரசன் கைகளைக் கூப்பிக்கொண்டு கைகேயியை நோக்கி எவ்வளவோ நல்ல வார்த்தைகள் சொல்லினன். 'தயைபுண்ணவேணும், அநுக்ரஹம் புரியவேணும்' என்றும் பலவாறு விநய வார்த்தைகளைச் சொல்லியும் கெஞ்சிக்கேட்டுக்கொண்டனன்.

அம்மா கைகேயி! உன் வரத்தின்படி உனக்கே ராஜ்யம் கொடுக்கின்றேன்; அதை நீ பெற்றுக்கொண்டு உடனே உன்

கையால் அதை இராமனுக்குக் கொடுத்துவிடுவது மிக நன்று. அதனால் நீயும் மிகுந்த கீர்த்தியைப் பெறுவாய். இது அனைவர்க்கும் ஆனந்தகரமாயுமிருக்கும்' என்றும் சொன்னனன் மன்னவன். ஒரு வகைக்கும் அவள் இசையவில்லையாக, வருந்தம் மேலிட்டு மூர்ச்சித்து நிலத்தில் வீழ்ந்தனன்.

அப்பொழுது அருணோதய காலமானவாறே வழக்கப்படி வந்திகள் வந்து தோத்திரங்கள் சொல்லிப் பள்ளியெழுச்சி பாடவிருக்கையில், அது ஒன்றும் வேண்டாவென்று மன்னவன் மறுத்திட்டனன்.

பதின்மூன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## பதினான்காவது ஸர்க்கம்.

### தசரதன் இராமனைக் காட்டுக்குப் போகவிட நிச்சயித்தலும், ஸுமந்திரர் தசரதரிடம் வருதலும், இராமனை வரவழைக்க நியமித்தலும்.

பெருந்துயரத்தினால் பீடிக்கப்பட்டுத் தரையில் விழுந்து நினைவின்றிப் புரண்டுகொண்டிருக்கின்ற தசரதனை நோக்கிக் கைகேயி பலவாறு பொடிந்துரைத்தாள். ஸத்தியத்திற்குக் கட்டுப்படுவதே நியாயமென்றும், பண்டு பலபல மன்னவர்களும் ஸத்தியம் தவறாதிருந்ததனாலேயே புகழ்படைத்தார்களென்றும், ஸத்தியத்தைப் பரிபாலனம் செய்வதிற்காட்டில் வேறு தருமமே கிடையாதென்றும் விரிவாகக்கூறித் தன் கோரிக்கைகள் இரண்டையும் நிறைவேற்றியே யாகவேணுமென்றும் இல்லையேல் இதோ உயிரைவிட்டிடுகிறேனென்றும் ஆரவாரம் செய்தனள். மன்னவன் ஸத்யபாசத்தை விடுவித்துக்கொள்ள முடியாமையைச் சிந்தித்துத் திகைத்திருந்தனன்.

"அடிபாபிஷ்டையான கைகேயி! முன்புநான் அக்னியின் முன்பு மந்திர பூர்வமாகப்பிடித்த உன்கையை இதோ விட்டு விடுகிறேன். இனி நீ எனக்கு மனைவியல்லை; நானும் உனக்குக் கணவனல்லேன். உன்புதல்வனையும் உன்னோடு கூடவே விட்டிடுகின்றேன். இரவு கழிந்து பொழுது விடிந்தபடியால், ராமாபிஷேகத்தில் குதூஹலம் கொண்டிருக்கிற வஸிஷ்டர் முதலான முனிவர்களும் மற்றெவரும் அபிஷேகத்திற்கென்று ஸித்தப்படுத்தின ஸம்பாரங்களுடன்வந்து ராமனுக்கு முடிசூட்ட வேணுமென்னப் போகிறார்கள். அந்த மங்கலகாரியம் தடைபட்டு என் உயிர் அப்போதே தொலையப் போகின்றதாதலால் அந்த ஸம்பாரங்களைக்கொண்டு ராமனது கையினாலேயே எனக்கு ஈமக்கடன் இறுக்க வேண்டியதாகும். உன் வயிற்றிற் பிறந்த பரதன் எனக்கு ஜலதர்ப்பணம்கூட விடலாகாது" என்று கூறினன்.

பொழுதும் விடிந்தது; கைகேயி மன்னவனை நோக்கி "எதுக்கு வீண்வம்பு வார்த்தைகளை விரித்துரைக்கின்றாய்? இனித்தாமதமின்றி இராமனை இவ்விடத்திற்கு வரவழைக்க வேண்டும்; என்புதல்வனுக்கு ராஜ்யம் அளிக்கவேண்டும்; இராமனைக் காட்டுக்குப்போகவிடவேண்டும்; இங்ஙனம்செய்து நீ பிரதிஜ்ஞையைப் பரிபாலனம் செய்யாயேல் நீ கடைத்தேற நேராது" என்று மிகக்கொடிதாகக் கூறி முடித்தாள்.

ராமாபிஷேக முகூர்த்தமாகக் குறிக்கப்பட்டிருந்த புஷ்ய நக்ஷத்திர யோக சுப முகூர்த்தம் அணுகிற்று. அப்போது வஸிஷ்டமாமுனிவர் நீராடி அபிஷேக ஸாமக்ரிகளுடனும் பரிவாரங்களுடனும் வருவாராயினர். ஜனங்களின் ஸந்தோஷமும் கோலாஹலமும் வகையிட்டு வருணிக்க முடியாததாயிருந்தது.

அந்தப்புரத்து வாசல் திண்ணையில் வந்துசேர்ந்த வஸிஷ்டமுனிவர், அபிஷேக மஹோத்ஸவத்திற்காகச் செய்து கொண்ட அழகிய அலங்காரங்களுடன் மிக்க மகிழ்ச்சியோடு அங்கு வந்துகொண்டிருந்த ஸுமந்திரரைக்கண்டு "நான் இவ்விடம் வந்திருப்பதை அரசனுக்கு அறிவிப்பாயாக; ஸகல ஸந்நாஹங்களும் குறைவற்றிருக்கிறபடியையும் சுப முகூர்த்தமும் நெருங்கி யிருக்கின்றமையையும் தெரிவித்து விரைவுறுத்துவாயாக" என்றனர்.

உடனே சுமந்திரர் அரசனிருப்பிடம் சென்று, அவனது துயர நிலைமையை அறியாதவராகையாலே வழக்கப்படி துதிமொழிகளைக் கூறித் துதித்துப் பள்ளியுணர்த்தி வஸிஷ்டமுனிவருடைய வார்த்தைகளையும் விண்ணப்பம் செய்தனர்.

புண்ணில் புளிப்பெய்தாற் போன்ற அம்மொழிகளைக் கேட்ட தசரதன் தன்னுடைய அளவுகடந்த துயரத்தை வெளியிட்டு "இந்நிலைமையில் என்னை ஏன் இம்மொழிகளாலே இன்னமும் வருத்துகின்றனை?" என்ன; சுமந்திரர் அச் சொல்லைக்கேட்டும், வருந்திவாடிய மன்னவன் முகத்தை நோக்கியும் அஞ்சி நடுங்கிக் கைகளைக் கூப்பிக்கொண்டு அவ் விடம் விட்டுச் சிறிது விலகிநின்றனர்.

பிறகு மன்னவன் ஒன்றும் பேசமுடியாமல் உள்ளொலா முருகிக் குரல் தழுத்தொழிந்து கிடக்க, கைகேயி ஸுமந்திரரைப்பார்த்து "அப்பா சுமந்திரா! மன்னவன் ராமாபிஷேக மகிழ்ச்சியினால் உத்ஸாஹம் அதிகரிக்கப்பெற்று இரவெல்லாம் கண்விழித்திருந்து பரிச்ரமப்பட்டதனால் இப்போது உறங்குமுகமாயிருக்கின்றான்; நீ விரைந்து சென்று இராமனை இங்கு அழைத்துவா" என்றாள்.

முன்னம் அரசனது வார்த்தையைக் கேட்டு ஏதோ பெருத்த தீங்கு விளைந்துவிட்டதென்று நிச்சயித்துத் துடித்துக்கொண்டிருந்த சுமந்திரர் கைகேயியின் இவ்வார்த்தையைக் கேட்டு மங்கலமேயென்று மகிழ்ந்துகொண்டு, 'அரசனது அனுமதிகொண்டே கைகேயி இங்ஙனம் கூறினள்' என்று மனக்களிப்புடன் புறப்பட்டுப்போயினர். பட்டாபிஷேகத்திற்காகவே இராமன் இப்போது வரவழைக்கப்படுகின்றானென்றும் எண்ணினர்.

பதினான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## பதினைந்தாவது ஸர்க்கம்.

### சுமந்திரர் மீண்டும் தசரதனிடம் வருதலும், தசரதன் இராமனை அழைத்துவரச் சொல்லுதலும், சுமந்திரர் இராமனிடம் செல்லுதலும்.

ராமாபிஷேகம் நடைபெறப்போகின்றதென்கிற குதூஹலத்துடன் வெளியூர்களிலிருந்து வந்திருந்தவர்களும் அயோத்தியிலுள்ளாரும் அனைவரும் வஸிஷ்டமாமுனிவரை முன்னிட்டுக்கொண்டு ஸபாமண்டபத்தில் வந்து சேர்ந்தார்கள். பொழுதும் விடிந்து புஷ்ய நக்ஷத்திரமும் வந்து சுபலக்கினமும் கூடிற்று. பட்டாபிஷேகத்திற்கு வேண்டிய பொருள்கள்யாவும் குறைவின்றிச் சேகரிக்கப்பட்டிருந்தன. பல திசைகளினின்றும் புண்ணிய தீர்த்தங்களும் கொண்டுவரப்பட்டிருந்தன. 'தசரதமன்னவனைக் காணோமே, இராமபிரானைக் காணோமே' என்று அவ்வரவர்கள் சொல்லிக்கொண்டு வெகுஸந்தோஷத்துடனும் உத்ஸாஹத்துடனும் எதிர்பார்த்திருந்தார்கள்.

அப்போது அவ்விடம் வந்த சுமந்திரர் 'இராமனை யழைத்துக்கொண்டு வருவதற்குத்தான் நான் போகிறேன்' என்று சொல்லிவிட்டு, மீண்டு 'பொழுது புலர்ந்த பின்பும் சக்கரவர்த்தி ஏன் ஸபாமண்டபத்திற்கு வந்து சேரவில்லை யென்று கேட்டுத் தெரிந்துகொண்டு வருகிறேன்' என்று சொல்லித் தசரதமன்னவனிடம் திரும்பிவந்து முறைப்படி புகழ்ந்து "மன்னவர் மணியே! நீ கட்டளையிட்டபடி காரியங்களெல்லாம் செய்துமுடிக்கப்பட்டன; அனைவரும் உன்னை எதிர்பார்த்துக்கொண்டிருக்கின்றனர்; எழுந்து வரவேணும்" என்றுசொல்ல; மன்னவன் எழுந்து "கைகேயி தான் இராமனை யழைத்துவரும்படி கட்டளையிட்டாளே; அதை நானும் இசைந்திருந்தேனாதலால் அது என் கட்டளை யல்லவோ? இராமனை விரைவில் அழைத்துவருக" என்று சொல்ல, சுமந்திரர் மிக்க மனக்களிப்போடு இராமபிரானது அந்தப்புரத்திற்குவந்து சேர்ந்தனர்.

அங்கே பலரும் மங்கலமாக இராமனது புகழ்களைப் பாடிக்கொண்டு மிக உல்லாஸமாக இருப்பதையும், பலர் பலவகையான காணிக்கைகளை இராமனுடைய பாதங்களிலே ஸமர்ப்பித்துக்கொண்டிருப்பதையும் கண்டு (சுமந்திரர்) உவந்தனர்.

பதினைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## பதினாறாவது ஸர்க்கம்.

### தந்தையின் கட்டளையைச் சுமந்திரரால் கேட்ட இராமன் தந்தையிடம் செல்லப் புறப்படுதல்.

இராமபிரான் சுமந்திரர் வந்திருப்பதையறிந்து மரியாதையாக அவரைத் தன்னிடத்திற்கு வரவழைத்துக்கொண்

டனன். இராமன் மஞ்சத்தின்மீது வீற்றிருக்க, ஸீதை பக்கத்திலிருந்து சாமரத்தை வீசிக்கொண்டிருக்க, இந்நிலையில் உட்புகுந்தவரான சுமந்திரர் வணங்கிக் கைகூப்பிநின்று க்ஷேமவிசாரணைகள் செய்துவிட்டு "தசரத மஹாராஜரும் கைகேயியும் உம்மைப் பார்க்க விரும்பி யிருக்கின்றார்களாதலால் உடனே விரைந்து அவர்களிடம் செல்லவேணும்" என்றனர்.

அதுகேட்ட இராமன் ஸீதையை நோக்கி "மைதிலீ! என்னிடத்தில் மிக்க அன்புகொண்ட கைகேயியானவள் இந்த மகுடாபிஷேகத்தைத் தாமதமின்றி நடைபெறுத்த வேணுமென்று கருதியே விரைவுறுத்துகின்றாளென்று நினைக்கிறேன்; அவர்களுடைய கட்டளைப்படி இதோ நான் போய்வருகின்றேன்; நீ கவலையற்று ஆனந்தமாக இருப்பாயாக" என்று சொல்லிவிட்டுப் புறப்பட்டனன். ஸீதையும் வாசற்படிக்கட்டு வரையில் மங்களாசாசனம் செய்துகொண்டே பின்தொடர்ந்து மீண்டனள்.

தனது மாளிகையில் நின்றும் வெளிப்புறப்பட்டு வருகின்ற இராமபிரான், வாசலில் வணக்கத்துடன் கைகளைக்கூப்பிக்கொண்டு நிற்கின்ற லக்ஷ்மணனையும், மற்றும் பரம குதூஹலத்தோடு எதிர்பார்த்து நிற்கின்ற பலபல அன்பர்களையும் குளிர நோக்கிக்கொண்டே தேரின்மீதேறிச் சென்றனன். அப்போது லக்ஷ்மணன் ஒருகையில் குடையையும் மற்றொரு கையில் சாமரத்தையும் தரித்துக்கொண்டு அந்தத்தேரின் பின்புறத்தில் நின்றுகொண்டு இராமனுக்கு வெய்யில் முதலியவை படாதபடி பாதுகாத்து வந்தனன். மற்றுமுள்ள அன்பர்களும் பெருந்திரளாக இராமனைப் பின்தொடர்ந்து சென்றனர். "இந்த ஸ்ரீராமன் இன்று நமக்கு அரசனாக வாய்க்கப்போகின்

னன்" என்று மனக்களிப்போடு ஆரவாரஞ்செய்த ஸகல ஜனங்களுடையவும் கோலாஹல வொலிகளைக் காதாரக் கேட்டுக் கொண்டே இராமன் தந்தையிடம் சென்றனன்.

பதினாறுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## பதினேழாவது ஸர்க்கம்

### இராமன் தசரதனது மாளிகையினுட் புகுதலைக் கூறுதல்.

தேரின் மீதேறித் தந்தையிடம் செல்லுகின்ற இராமபிரானை வீதிகளில் நின்றும் மாடமாளிகைகளில் நின்றும் கண்டும் புகழ்ந்தும் வருணித்தும் போந்த ஜனங்களுக்குச் சிறிதும் திருப்தி யுண்டாகவே யில்லை.

இராமன் நாற்சந்தி வீதிகளிலும் தேவாலயங்களிலும் பௌத்தாலய விருக்ஷங்களிலும் ஸபை முதலியவற்றிலும் பிரதக்ஷிணமாகச்சென்று அவற்றைக்கடந்து தந்தை தங்கியிருக்கு மிடத்திற்கு வந்து சேர்ந்தனன்.

தேரில் நின்றுமிறங்கிக் கட்டுக்களைக் கடந்து தசரதனிருக்குமிடம் நோக்கிச் சென்ற இராமன் ஆனந்தமாகத் திரும்பிவருவதை யெதிர்பார்த்துக்கொண்டுஸகல ஜனங்களும் வாசற்கட்டில் நின்று கொண்டிருந்தனர்.

பதினேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## பதினெட்டாவது ஸர்க்கம்

### தன்னைத் தந்தை அன்பாக விசாரியாமலிருப்பது கண்டு இராமன் வருந்திநிற்க, கைகேயி காட்டுக்குப் போவென்று விடை கொடுத்தல்.

உள்ளே வந்துசேர்ந்த இராமன் தந்தையையும் தாயான கைகேயியையும் தொழுதனன். அப்போது தசரதன் 'ராமா!'

என்று ஒரு விளி விளித்து உடனே கண்ணீர்ததும்பிப் பெரு கப்பெற்று இராமனைப் பார்க்கவாவது பேசவாவது வல்லமை யற்றவனாயினன். அப்போது தசரதனிருந்த இருப்பு இரா மனது மனத்தில் அபூர்வமான வருத்தத்தையும் அச்சத்தை யும் நடுக்கத்தையும் உண்டாக்கியது.

இராமனது மனத்தில் ஒன்றுமே தோன்றவில்லை. "இது வரையில் ஒருநாளும் தந்தை இங்ஙனம் இருந்ததில்லையே!; திடீரென்று இதுவென்னோ?" என்று மிகக் கலங்கிய ராமன் கைகேயியை வணங்கி, "தாயே! என்ன காரணத்தினால் தந்தை இத்தகைய பரிதாப நிலைமையில் இருக்கின்றார்? நான் ஏதேனும் பிழை செய்ததுண்டோ? பரதனுக்காவது சத் துருக்கனனுக்காவது ஆரோக்யக்குறைவான செய்தி ஏதே னும் கிடைத்திருக்கின்றதோ? அல்லது இவ்விடத்தில் யாருக் காவது க்ஷேமக்குறைவு நேர்ந்துளதோ? அல்லது, மனத்துக் கினிய மனைவியாகிய நீ ஏதேனும் கடுமையாகப் பேசின துண்டோ? நம்தந்தைக்கு இதுவரையில் ஒருநாளும் உண்டா காத இத்தகைய விகாரம் இப்போது எதனால் உண்டாயிற்றோ? இதை எனக்கு உள்ளபடி உரைக்கவேணும்" என்றனன்.

அது கேட்ட கைகேயி வெட்கமும் கூச்சமும் சிறிது மில்லாமல் "இராமா! நீ கேட்டபடி ஒருவர்க்கும் ஒருவித மான விபத்துமில்லை; மன்னவர்க்கு இப்போது ஒருவகையான மனக்கருத்து உண்டு; நீ என்ன நினைப்பாயோவென்று கலங்கி அதை வெளியிட்டுக் கூறமாட்டாதிருக்கின்றனர் போலும். இவர் எந்தக் காரியத்தைச் செய்வதாக எனக்குப் பிரதிக்ஞை செய்திருக்கின்றாரோ, அதை ராமா! நீ அவசியம் செய்து முடித்தல் வேண்டும். ஸத்தியத்தையே விரதமாகக் கொண்ட இம்மன்னவர் ஒரு சமயத்திலே எனக்கு வரங்களைக்

கொடுத்துவிட்டு இப்பொழுது அடாவழக்காடுகின்றார்; ஸத்தி யம் தவற நினைக்கின்றார்; அங்ஙனம் தவறாதபடிக்கு நீ நடந்து கொள்ளவேணும். அப்படியே நடந்து கொள்வதாக நீ வாக்கு அளித்தால் செய்தியை நானே சொல்லிவிடுகிறேன்" என்றாள்.

அதுகேட்ட இராமன் "தாயே! என்மீது இவ்வளவு ஸந்தேஹமுண்டானது என்னோ? தீயில் குதிக்கக் கட்டளை யிட்டாலும் விஷத்தைப் பருக நியமித்தாலும் கடலில் விழச் சொன்னாலும் மற்றும் எந்தவிதமாகக் கட்டளையிட்டாலும் உடனேசெய்ய என்னதடை? ஒருகாலும் வாக்குத்தவறேன்; தாயே! அரசர் விரும்பியது யாதோ, அதைச்சொல்லவேணும், தவறாது செய்து தலைக்கட்டுவேன்" என்றனன்.

உடனே கைகேயி தசரதரிடம் முன்புதான் வரம் பெற் றிருந்த வரலாற்றினை யெடுத்துரைத்து "ராமா! முன்புநான் பெற்றிருந்த அந்த இரண்டு வரங்களுக்குப் பலனாக இப்போது பரதனுக்குப் பட்டாபிஷேகம் நடைபெறவேணுமென்றும் நீ தண்டகாரணியம் நோக்கிச் செல்லவேணுமென்றும் மன்ன வரை வேண்டிக்கொண்டேன்; இன்னமும் நான் சொல்ல வேண்டியது என்ன இருக்கிறது? இந்தக் கட்டளையை அவர் தம் வாயினால் வெளியிடமாட்டாது தயங்கிக் கிடக்கிறார்; அவர்க்காக நான் வெளியிட்டுவிட்டேன்; இதைத் தந்தை யிட்ட கட்டளையாகக்கொண்டு நீ ஸத்தியத்தில் நிலை பெற்றி ருக்கவேணும். உன்னுடைய பட்டாபிஷேகத்திற்காக ஸித் தஞ்செய்து வைக்கப்பட்டிருக்கும் ஸம்பாரங்களைக்கொண்டே பரதனுக்கு முடிசூட்டியாகவேண்டும்; நீ முடிதவிர்ந்து சடை புனைந்து மரவுரியுடுத்து மான்தோலணிந்து பதினான்கு வருஷம் கானகத்தில் வஸிக்கவேண்டும்" என்றனள்.

இங்ஙனம் கைகேயி படபடத்துச் சொல்லும் கொடிய மொழிகளைக்கேட்டும் இராமனுடைய முகம் சிறிதும் வாடவுமில்லை, வதங்கவுமில்லை. மனத்தினுள்ளும் சிறிது விகாரமும் தோன்றவில்லை. தசரதனே சோகஸாகரத்தில் மூழ்கிக் கரை காணாது தவிக்கின்றனன்.

பதினெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## பத்தொன்பதாவது ஸர்க்கம்.

## கைகேயியின் சொற்படி காட்டுக்குச்செல்ல இசைந்த இராமன் லக்ஷ்மணனோடு கௌசல்யையிடம் வருதல்.

இராமன் கைகேயியை நோக்கி 'தாயே! உன் விருப்பத்தின்படியே பரதனுக்குப் பட்டாபிஷேகமாகுக; நானும் இதோ முனிவேடத்துடன் காடுறையப் போகின்றேன்; நமது தந்தை என்பால் முன்போல் அன்புபாராட்டாதிருக்கின்றாரே! இது ஏன்? என் இயல்பை அவர் நன்கு அறிவரே. எதற்காக இவர் வருத்தமுற்றிருக்கின்றார்? தாயே! நீயும் மனவருத்தம் கொள்ளவேண்டா; இதோ நான் உன் கண்முன்னே மரவுரியுடுத்துச் சடைபுனைந்து கானகம் நோக்கிச் செல்லுகின்றேன். நீ மகிழ்ந்திருப்பாயாக. இக்கட்டளையைத் தந்தைதானே எனக்கு நேரில் தெரிவிப்பாராயின் நான் எவ்வளவோ மகிழ்வேன்; நான் வருந்துவேனென்று நினைத்துப் போலும் அவர் தமது வாக்கினால் இக்கட்டளையைத் தெரிவியாது மூர்ச்சித்துக்கிடக்கின்றார். இக்கட்டளையினால் எனக்குச் சிறிதும் வருத்தமில்லை யென்பதையும் மேலும் பரம சந்தோஷமே யென்பதையும் தாயே! நீயே மன்னவர்க்கு உரைத்து அவரைத் தேற்றவேண்டும். தூதர்கள் கேகயநாட்டுக்குக் கனவேகமாகச் சென்று நம் பரதனை

அழைத்துக்கொண்டு வரட்டும். நான் உனது கட்டளையையே தந்தையிட்ட கட்டளையாகக்கொண்டு பதினன்கு வருடம் கானகத்திலுறைவதாகப் புறப்படுகின்றேன்' என்றனன்.

இதுகேட்ட கைகேயி மிகமகிழ்ச்சிகொண்டு 'ராமா! நீ காட்டுக்குப் புறப்பட்டுப்போவதைப்பார்; பரதனை இங்கு வரவழைக்கும் விஷயத்தில் உனக்குக் கவலை வேண்டா; எப்படியும் தூதர்கள் விரைந்து சென்று அழைத்தே வருவார்கள்' என்றனள். இராமனிடத்தில் பேரன்பு பூண்டிருக்கின்ற பரதன் அயோத்திக்கு வந்துவிடுவானுயின் இராமன் காட்டுக்குச் செல்வதை அவன் சிறிதும் இசையகில்லான் என்றும், தன்னுடைய மனோரதம் அடியோடு நிறைவேறுதென்றும் உறுதியாக அறிந்துகொண்ட கைகேயி இராமனை மிகவும் துரிதப்படுத்தினள். 'இராமா! உன் தந்தை வாய் திறந்து உனக்குக் கட்டளையிட்டால் அதை நீ நிறைவேற்றுவாயோ மாட்டாயோ என்கிற சந்தேகத்தினுலும், ஒருகால் நீ நிறைவேற்றுமற்போனல் தனக்குப் பெருத்த அவமானமாகுமே! என்கிற வருத்தத்தினுலும் தாம் பேசாது மயங்கிக் கிடக்கிறூர்; வேறொன்றுமில்லை: ஆதலால் அவரே நேரில் நமக்குக் கட்டளையிடவேணுமென்று நீ தாமதித்திராமல் விரைந்து கானகம் செல்வாயாயின் அதுவே அவர்க்குத் தேறுதலளித்ததாகும். நீ புறப்பட்டுப் போகுமளவும் உன் தந்தை எழுந்திருக்கமாட்டார், நீராடமாட்டார், உண்ணமாட்டார்' என்றுமுரைத்தாள்.

இக்கொடிய மொழிகள் தசரதனுடைய செவியிலும் புகுந்ததனுல் அவன் 'சீ! என்ன கஷ்டகாலம்!' என்று பெருமூச்சுவிட்டுக்கொண்டு எழுந்து அந்த மஞ்சத்தின் மேலேயே

தபீலென்று விழுந்து மூர்ச்சித்தான். அதுகண்டு இராமன் தந்தையைப் பிடித்துக்கொண்டு உபசாரம் செய்யப் புகுகை யில், கைகேயி சவுக்காலடிப்பதுபோல் மீண்டும் கொடிய கட்டுரைகளைக் கூறி விரைவுறுத்தலானாள். அப்போது இராமன் அவளை நோக்கி, 'தாயே! இந்த ராஜ்ய போகத்தில் எனக்குச் சிறிதும் விருப்பமில்லை யென்பதை நீ நன்கு தெரிந்துகொள்; தந்தையினிடம் நீ வரம்வேண்டாமல் முத லில் என்னையே நேரிலழைத்து இங்ஙனம் கட்டளையிட்டிருக்க லாமே. வீணாகத் தந்தைக்கு இவ்வளவு ஆயாஸம் கொடுத் தனையே! அது நிற்க; நான் இப்போதே காடு செல்வதில் அற்பமும் ஆக்ஷேபனையில்லை; தாயாகிய கௌஸல்யையிடம் விடைபெற்றுக்கொண்டு உடனே புறப்பட்டுப் போகின்றேன். அவ்வளவு அவகாசமே எனக்கு நீ அருள்புரிய வேண்டும்' என்றனன்.

இதைச் செவியேற்ற தசரதன் வருத்தம் தாங்கமாட்டா மல் பெருமிடறு செய்து கதறினான். இராமன் தசரதனை யும் கைகேயியையும் வணங்கி வலஞ்செய்துவிட்டு "அப் பொழுதலர்ந்த செந்தாமரையினை வென்றதம்மா" என்னும் படியான முகமலர்த்தியுடனே வெளிப்புறப்பட்டான். வெளியில் பலபல நண்பர்களைக் கண்டனன். உடனிருந்து இச்செய்திகளை யெல்லாம் முழுதுணர்ந்த லக்ஷ்மணன் அபார மான சோகத்தோடு கண்ணீர்பெருகப் பின்தொடர, கால் நடையாகவே கௌஸல்யையின் மாளிகைக்குச் சென்று சேர்ந்தனன். அப்போது இராமபிரானுடைய திருமுக மண்டலத்தின் திவ்யமான ஒளி வாசாமகோசரமாயிருந்தது. காட்டுக்குச் செல்வதைப்பற்றித் தனக்கு எள்ளளவும் துக்கமில்லையாயினும், தன்னைச் சார்ந்தவர்களனைவரும் அது

பற்றி மகத்தான துக்கங்கொண்டாடுவார்களே! என்பதனு லாகிய துக்கம் மாத்திரம் இராமனது உள்ளத்தில் ஒருபுற மிருந்தது.

பத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## இருபதாவது ஸர்க்கம்.

### இராமன் காட்டுக்குச் செல்வதைக் கேட்கலுற்ற கௌஸல்யை மூர்ச்சித்துப் புலம்புதல்.

கைகேயியின் வரத்தின் பயனாக ராமன் காட்டுக்குச் செல்ல நேர்ந்ததென்கிற இக்கொடிய செய்தி மெல்ல மெல்ல எங்கும் பரவத்தொடங்கிற்று. அந்தப்புரத்திலுள்ள மாதர்க ளனைவரும் வருத்தம் பொறுக்கமாட்டாமல் ஐயோவென்று கூக்குரலிடப் பேரொலி பரவியது. இதுவரை இராமனால் அவரவர்கள் அடைந்துவந்த அபாரமான உதவிகளை எடுத் துரைத்து அந்தோ! இனி நமக்குப் புகல் இல்லையே! என்று கூவிக்கூவி யழுதனர்.

ஒவ்வொருவரும் இராமபிரானது திருக்குணங்களை எடுத்துரைத்து 'இப்படிப்பட்ட குணவாளனுக்கா வன வாசம் விதிக்கப்பட்டது!' என்று நெஞ்சுடைந்து புலம்பினர். அவ்வழுகுரலைக் கேட்டுக்கொண்டே இராமன் லக்ஷ்மண னோடுகூடித் தனது தாயினிடம் சென்றனன். அந்தக் கௌஸல்யை அப்போது இராமனுடைய நன்மைமிகுதிக்காக விஷ்ணு பூஜைகளை நியமத்துடன் செய்துகொண்டிருந்தனள். அந்தணர்களைக் கொண்டு ஹோமமும் செய்வித்துக்கொண் டிருந்தனள். இராமபிரான் வருவதைக்கண்ட அவள் ஆனந்தம் பூரிக்க ஆசையோடு எதிர்கொண்டனள். நமஸ் கரித்துநின்ற இராமனைக் கைகளாலாரத் தழுவி உச்சிமோந்து

பலபல ஆசிர்வாதங்கள் செய்து, 'குழந்தாய்! போஜனம் செய்யவருவாயாக' என்று அழைத்து ஆஸனமிட்டனள்.

அத்தருணத்தில் இராமன் தனக்கு நேர்ந்த வனவாஸக் கட்டளையைத் தாயினிடம் எங்ஙனம் கூறுவது! என்று ஆலோசித்துத் தடுமாறி, கூறித்தானுகவேண்டு மென்று துணிந்து அதனைக் கூறத்தொடங்கினன். "தாயே! எனக்கு இந்த ரத்தினமயமான ஆஸனம் ஏதுக்கு? தர்ப்பைப்புல் ஆசனத்தில் உட்காரவேண்டிய கட்டளையன்றோ எனக்குக் கிடைத்திருக்கின்றது. நான் தண்டகாரணியத்தில் முனிவேடத்துடன் பதினன்கு வருடம் ஸஞ்சாரம் செய்யுமாறு தந்தையினல் கட்டளையிடப்பெற்றிருக்கிறேன்" என்றனன்.

அதுகேட்ட கௌஸல்யை வேரற்ற மரம்போலே தரையில் வீழ்ந்து வருந்தினள். இராமன் அவளைக்கைகொடுத்தெடுத்துத் தேற்றியபின் அவள் இராமனை நோக்கிக் கூறத்தொடங்கினள்; "குழந்தாய்! என்குடல் குமுறவே நீ எனக்கு மகனுகப் பிறந்தனை போலும்; நான்மலடியாகவே இருந்திருப்பேனுகில் இத்தகைய துக்கத்திற்கு ஆளாகியிருக்கமாட்டேனே! இனி, என் சக்களத்திகள் என்னை ஏசும்படியான துயரம் நேரிட்டது; இதனில் மிக்கதுயரமும் உலகிலுண்டோ? உன்னையிழந்து நான் உயிர் தரித்திருக்கப்போகிறதுண்டோ? கைகேயியின் வேலைக்காரிகளில் நானுமொருத்தியாக, அல்லது அவர்களினும் கடை கெட்டவளாக நான் சிறுமைப்படவேண்டிய கொடியகாலம் வந்திட்டது. ஏற்கனவே என்மீது கறுக்கொண்டிருந்த கைகேயிக்கே நல்லகாலம் பிறந்தது. இனி அவள்முகத்தில் விழிக்க எனக்கு இயலுமோ? இராமா! இந்த வருத்தத்தை நான் வெகுநாள் வரையில் பொறுத்திருக்ககில்லேன். அரும்பாடுகள்பட்டு

உன்னை நான் வளர்த்தது இங்ஙனம் காட்டுக்குப்போக விடுவதற்கா ஆயிற்று! இக்கடுஞ்சொல் செவிப்பட்டவுடனே என்னுடல் இருபிளவாய்ப் போயிருக்கவேண்டுமே! ஏதுக்கு இன்னமும் தரித்திருக்கிறேனோ தெரியவில்லையே! என்னை வைத்துக்கொள்வதற்கு யமலோகத்தில் இடமில்லைபோலும்! இராமா! உன்னை விட்டுப் பிரிந்துநான் இங்கிருக்கமாட்டேன்; என்னையும் உடனழைத்துச் செல்வாய்" என்று மற்றும் பலவுங் கூறிக் கூக்குரலிட்டழுதனள்

இருபதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

இருபத்தோராவது ஸர்க்கம்.

## லக்ஷ்மணன் கௌசல்யைக்குத் தேறுதல் கூறுதலும், இராமன் ஸத்யம் தவறலாகாதென்று நலமுரைத்தலும்.

இங்ஙனம் கௌஸல்யை புலம்புகையில் இலக்குமணன் அவளைத்தேற்றவேண்டி, "அம்மா! பெரியதாயே! இராமபிரான் காட்டுக்கெழுந்தருள நேர்ந்தவிஷயம் உமக்குமாத்திரமேயோ சோகந்தருவது? அரசனோ முதிர்ந்த கிழவனாயிருக்கின்றனன்; அவனது புத்தி தலை கீழாயிருக்கின்றது. கைகேயிபக்கல் காமவெறிகொண்டு அவன் கட்டளையிட்டதினில் வியப்புமுண்டோ! நாட்டைவிட்டுக் காட்டில் துரத்த வேண்டும்படி இராமபிரான் என்ன பாதகம் புரிந்தாரோ தெரியவில்லை. தருமநெறியில் நின்று தவறிய தந்தையை இப்போது கொலை செய்திடவும் என்மனம் துணிவுறுகின்றது. குற்றமென்பது லவலேசமும் அற்றவரான நம் இராமர்மீது குற்றஞ்சொல்பவன் ஒருவனுமில்லையே! இத்தகைய மஹாகுணசாலியான புத்ர ரத்னத்தை இழந்துவிட எவன் துணிவன்! இந்த வனவாசக்கட்டளை தருமம் பொருந்தியதாக எப்

படி ஆகும்! மிகவும் அநீதியான கட்டளை யென்பதில் ஐயமே யில்லை; இந்தக் கட்டளை பாராட்டத்தக்கதே யன்று” என்று சொல்லினன்.

பிறகு இராமனை நோக்கி, “அண்ணு! உம்மைக் காட்டுக்கு அனுப்பும் விஷயம் ப்ரஸித்தமாவதற்கு முன்னமே நீர் ராஜ்ய பாரங்களை யெல்லாம் ஸ்வாதீனப்படுத்திக் கொள்வீராக; நான் வில்லை ஏந்திக்கொண்டு அருகேநின்று பாதுகாத்திருக்கையில் பௌருஷம் காட்டவல்லவன் யாவன்? இவ்வயோத்தி மாநகரில் உம்மை எதிரிட வல்லவன் ஒருவனுமிலன்; எவர் எதிரிடுவாராயினும் என் கூரம்புகட்கு இரையாக்கியே விடுவேன். பரதனுடைய பக்ஷத்தைப்பற்றியவர்கள் எவர் இருப்பினும் முடித்தேவிடுவேன்: நாம் ஸாதுவா யிருக்கத்தக்க ஸமயம் இதுவன்று; வெகு தீக்ஷ்ணமாக நாம் காரியத்தைச் செய்யவேண்டும். நம் தந்தை கைகேயிக்கு உடன்பட்டு இன்னும் விரோதஞ்செய்ய முற்படுவானாயின் அவனையும் தொலைத்திடுவதே கருமம்; அதற்கு நீர் இசையீராயின், தந்தையைக் கட்டிப்போட்டாவது வைப்போம். இப்படிச் செய்வது அநீதியான செயலல்லவோ! என்று நீர் நினைக்கலாகாது; ‘ஆசாரியனாயினும் தந்தையாயினும் செருக்குற்றுக் காமனுக்கு வசப்பட்டு எல்லை கடந்து தப்புவழியில் ஒழுகுவானாகில் அவனைத் தண்டித்தல் தகுதியே’ என்று தரும சாஸ்திரங்களும் முறையிடுகின்றன. அண்ணு! உமக்கு ப்ராப்தமான இந்த ராஜ்யத்தை மறுக்க யாதுகாரண முள்ளது? இதைப் பரதனுக்குக் கொடுக்க என்ன நீதியுள்ளது?” என்று கோபபரவசனாய்ப் பலபல கூறினன்.

மீண்டும் கௌஸல்யையை நோக்கி, “தாயே! இராமபிரான் தீயில் குதிப்பாராயினும் நான் அவர்க்கு முன்னமே

அத்தீயில் குதிப்பவன். அவர் கானகஞ் செல்வாராயின் நானுங் கூடவே செல்வேனென்பதைப்பற்றிச் சொல்லவும் வேண்டுமோ? அன்றியும் என்னுடைய மிகுந்த பராக்கிரமத்தினா லும் உம்முடைய துக்கத்தைப் போக்கிவிடுவேன்! எனது பராக்கிரமத்தை அன்னையும் பார்க்கட்டும், இராமனும் பார்க் கட்டும்'' என்றனன்.

அது கேட்ட கௌஸல்யை அழுதுகொண்டே இராமனை நோக்கி, ''குழந்தாய்! உன் தம்பி சொன்ன தூய மொழி களைக் கேட்டனையன்றோ? அவை உனக்கு ஸம்மதமாயின் இனிச் செய்யவேண்டியவற்றை விரைந்து செய்வாயாக; சோகத்திலாழ்ந்து பரிதபித்துக் கிடக்கின்ற என்னை நீ கைவிட்டுக் கானகம் போகலாகாது, தருமமறிந்த நீ இங்குத் தானே இருந்து எனக்குப் பணிவிடை செய்துகொண்டு வாழ்வாயாக; அன்னையைப் பேணுதலினும் மேலான தரும மில்லை யென்பதை நான் உனக்கு விரியவுரைக்கவும் வேண்டுமோ? தந்தையின் சொல்போலவே தாயின் சொல்லும் பேணத்தக்க தாதலால் என் சொல்லையும் நீ அங்கீகரிக்க வேண்டுவது அவசியமேயாகும். நீ காட்டுக்குப்போக நான் இசையமாட்டேன். நான் உன்னைக் காட்டுக்கனுப்பி இங் கிருந்து போகங்களையனுபவிப்பதிற் காட்டிலும், நானும் உன்னோடு கூடவே வந்து புல்லைத் தின்றுகொண்டாயினும் இருப்பதே நன்று. துயரில் தடுமாறுகின்ற என்னை உபே க்ஷித்து விட்டு நீ காட்டுக்குச் செல்வாயாயின், நான் இங்கு *ப்ராயோபவேசஞ் செய்து அன்னபானங்களின்றி யிருந்து உயிரை விட்டு விடுவது உறுதியே.'' என்றுரைத்தனள்.

---

* ப்ராயோபவேசமாவது — மரணமடைந் திடுவதாகச் செய்து கொள்ளும் ஸங்கல்பம்.

அதுகேட்ட இராமன், "தாயே! உன் சொற்படி நடக்க வேண்டுவதும் அவசியமே; ஆயினும், இப்போது தந்தையின் வார்த்தை முந்தினதாகையால் அதைத்தவறுவது தரும மன்றே; என்மீது நீ கோபங்கொள்ளலாகா தென்று தலை தாழ்த்திக் கேட்டுக்கொள்ளுகின்றேன். தந்தையிட்ட கட்டளையின்படி காட்டுக்குச் செல்லவிருக்கின்ற எனக்குத் தாயே! அனுமதி தந்தருளவேண்டும். பெரியார் பலரும் பித்ருவாக்கிய பரிபாலனஞ் செய்தே புகழ்பெற்றிருக்குங் கதைகள் உனக்குத் தெரியாதவையன்றே; கண்டுவேனும் மஹரிஷியும் பரசுராமன் முதலானோரும் தந்தை சொற்பேணிச் செய்திருக்கும் செயல்கள் அவர்களுக்குப் பெரும் புகழை யன்றோ விளைவித்திருக்கின்றன! நான் மாத்திரம் இப்போது நூதனமாகவா அனுஷ்டிக்கின்றேன்? இல்லை; பெரியார் சென்ற வழியையே பின்பற்றுகின்றேன், இதற்காக நீ சிறிதும் கோபமும் வருத்தமும் கொள்ளாதிருக்கவேணும்" என்று கௌஸல்யையை வேண்டிக்கொண்டனன்.

பிறகு ராமன், தம்பி லக்ஷ்மணனையும் நோக்கி "அடா! நீ சொன்ன வார்த்தைகள் தருமத்திற்கு ஒத்தவையல்ல; நீ பராக்கிரமத்திற் சிறந்தவனென்பதை நானும் அறிவேன்; உலகத்தில் சகல புருஷார்த்தங்களினும் தருமமே சிறந்த தென்பதை நான் சொல்லவேணுமோ? தந்தை சொற்பேணு தலும் தருமத்தின் ஒரு பகுதியாயிருக்க, அதற்கு முரணாக நீ வீராவேசங்கொண்டு கடிந்து பேசின பேச்சுக்கள் தகுதியற்றனவேயாகும். எனக்குத் தந்தை கட்டளையிட்டபோது 'அப்படியே செய்கிறேன்' என்று தலைதாழ்த்திக் கைகூப்பிச் சொல்லிவந்த யான் அதற்கு மாறாகச் செய்ய இயலுமோ? 'கைகேயியின் கட்டளையே யன்றித் தசரதன் கட்டளை

யன்றே' என்பாய்; இது யுக்தமன்று; தந்தையிட்ட கட்டளையேகாண் அது. ஆதலால் அதை மீறி நான் நடப்பது நலமன்று. நீயும் தருமத்தையே கைப்பற்றுவாயாக; இனி இப்படிப்பட்ட கொடுந்தன்மையைக் கொள்ள நினையாதே; எனது உறுதியையே பின்பற்றி நடப்பாயாக'' என்றுரைத்தனன்.

மீண்டும், தாயாகிய கௌசலையை நோக்கி "அம்மா! நான் காட்டுக்குச்செல்ல அனுமதிப்பாயாக: என் உயிரின் மேல்ஆணை; என்விருப்பத்தை நீ மறுப்பாயாயின் என்உயிரை உபேக்ஷித்தவளாவாய்; ஆகவே இப்போது என் கருத்துக்கு எந்தவிதத்திலும் இடையூறு செய்யாதே; தந்தை சொற்படி கானகஞ் சென்று உரியகாலத்தில் மீண்டு வருவேன். என் பிரிவினாலுண்டாகும் சோகத்தை, தாயே! மனத்திலேயே அடக்கி வைத்துக்கொண்டிருப்பாயாக: தந்தையின் கட்டளையை நிறைவேற்றவேண்டிய கடமை என்னைமாத்திரம் சேர்ந்ததன்று; நீயும் நானும் ஸீதையும் லக்ஷ்மணனும் சுமித்திரையுமாகிய நாமெல்லாரும் சேர்ந்தே அதனை நிறைவேற்றக் கடமைப்பட்டிருக்கின்றோம்; ஆகவே, தாயே! எனக்கு விடைகொடுப்பாயாக'' என்றுரைத்தனன் இராமன்.

அது கேட்டுக் கௌசலையானவள், 'ராமா! தந்தை சொல்லைப் பேணுதல்போலவே அன்னைசொல்லைப் பேணுதலும் அவசியமென்பதை நீ அறியவேணும்; ஆகையால் காடு செல்ல உனக்கு நான் அநுமதி யளிக்கமாட்டேன்; துயரக் கடலில் ஆழ்ந்துகிடக்கின்ற என்னைக் கைவிட்டு நீ புறப்பட்டுப்போவது தகுதியன்று; உன்னைத் துறந்து இவ்வுலகில் நான் பிழைத்திருப்பது எதற்காக? இனி எந்த உலகமும்

எனக்கு ஏதுக்கு?' என்றிப்படிப் பலபல சொல்லிப் புலம்பி ஒரே பிடிவாதமாய்த் தடைசெய்தனள்.

இங்ஙனே கௌசலையும் இலக்குமணனும் ஒன்றுசேர்ந்து பலவாறு கடுஞ்சொற்கள் கூறித் தடைசெய்த போதிலும், இராமன் அறநெறியை அணுவளவும் கடந்து செல்லமாட்டாதவனாதலால் தான்கொண்ட கொள்கையிலேயே நிலைநின்றிருந்தனன். இலக்குமணனுக்குப் பலவாறு தருமோபதேசங்களும் செய்தனன். தாயினிடத்தும் தன்னுடைய தருமவூக்கத்தை வலிதாகத் தெரிவித்து, தன்னை ஆசிகூறிக் காட்டுக்கு விடைகொடுத் தனுப்புமாறு வேண்டிக்கொண்டனன். தாயைப் பிரதக்ஷிணஞ் செய்து காடேறப் புறப்படவும் உறுதிகொண்டனன்.

இருபத்தோராவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## இருபத்திரண்டாவது ஸர்க்கம்.

## லக்ஷ்மணன் கைகேயிதிறத்தில் கொண்ட கோபத்தை இராமன் நன்மொழிகளால் தணித்தல்.

இராமபிரான் தான் காடுசெல்ல உறுதிகொண்டதறிந்து முகவொளி மழுங்கி மிக வருந்தி நின்ற இலக்குமணனை நோக்கி 'தம்பியே! நீ தந்தைமுதலியவர்களிடத்தில் கொண்ட கோபத்தையும் எனக்கு நேர்ந்திருக்கும் கஷ்டங்களையும் அறவே மறந்துவிடவேண்டும்; எனக்காகக் கொண்டாடப்பட்ட பட்டாபிஷேக வைபவங்கள் நின்றுபோனதைப் பற்றிச் சிறிதும் வருந்தலாகாது; எனது மகுடாபிஷேக விஷயத்தில் நீ கொண்டிருந்த உத்ஸாகத்தை இனி நான் காட்டுக்குப்போகும் விஷயத்தில் உபயோகப் படுத்துவாயாக.

'இராமனுக்கு ஒருகால் பட்டாபிஷேகம் ஆகிவிடுமோ' என்று சந்தேகங் கொண்டிருக்கும் கைகேயிக்கு அந்த சந்தேகத்தைத் தவிர்த்துவிடு; 'பட்டாபிஷேகம் நின்று விட்டதே' என்று பரிதபித்துக்கொண்டிருக்கிற என் அன்னை யான கௌசல்யைக்கு 'நம் மகன் தந்தையின் கட்டளையின் படி பதினன்கு வருடங்களே காட்டில் தங்குவானகையால் மீண்டும் வந்து சேருவான்' என்கிற நம்பிக்கை உண்டாகும் படியும் நீ செய்தல்வேண்டும்.

நம் தாய்தந்தையர்களுக்கு ஒரெள்ளளவு அபகார மாயினும் தெரிந்தாவது தெரியாமலாவது நான் செய்ததாக எனக்குத் தோன்றவில்லை. நம் தந்தையோ சத்தியசீலர். வெகு பராக்கிரமசாலி. ஆதலால் இப்பூவுலகில் அவருக்கு எதிலும் பயமில்லை. ஆயினும், 'செய்த பிரதிக்கினையைத் தவறினல் பரலோகத்தில் கஷ்டம் நேரிடுமே' யென்கிற ஒரு பயத்தினல் மாத்திரம் அவர் வருந்துகிருர். அவருக்கு அத்தகைய பயமுமில்லாமலிருக்கும்படி நாம் செய்யவேண் டும். இப்பொழுது நடந்துகொண்டிருக்கிற எனது பட்டாபி ஷேக முயற்சி தணியாவிடில் தாம் கைகேயிக்குக் கொடுத்த வார்த்தை சத்தியமாகவில்லையென்கிற மனத்தாபம் அவர்க் குண்டாகும். அவருக்கு மனத்தாபம் உண்டானல் அது என்னையும் வருந்தச் செய்யும். ஆகையால் லக்ஷ்மணா! நான் இப்பொழுதே வனம்போகிறேன். நான் அப்படிச் செய்தால் தாயாகிய கைகேயி தான் நினைத்தகாரியம் ஈடேறப்பெற்று ஸந்தோஷமாய்த் தன் புத்திரனுக்குப் பட்டாபிஷேகத்தை நடத்திக்கொள்வாள். நான் நார்த்துணிகளையும் கிருஷ்ணு ஜினத்தையும் தரித்துக் காட்டுக்குப் போனபின் கைகேயிக்கு மிகுந்த ஸந்தோஷமுண்டாகும்; ஆகையால் நான் காட்டுக்குப் போக மனத்தைத் திடப்படுத்திக் கொண்டேன்.

எனது அபிஷேகத்தை நிறுத்துவதில் ஊக்கங்கொண்டிருக்கும் மந்தரை முதலிய ஜனங்களுக்கும் ஸந்தோஷம் உண்டாகட்டும். லக்ஷ்மணா! இன்னும் கேள். நான் இராஜ்ஜியத்தை யிழந்ததற்கும், காடுசெல்வதற்கும் கைகேயி காரணமன்று. தெய்வமே காரணமென்றறிவாயாக. ஏனெனில், என்னிடத்தில் அளவுகடந்த பிரீதியோடு வாத்ஸல்யம் கொண்டிருந்த அவளுக்கு என்னைப் பீடிக்கவேண்டுமென்கிற எண்ணம் உண்டாவதற்குக் காரணமில்லை. மேலும் இது வரையில் எப்பொழுதும் நான் தாய்மார்களிடத்தில் 'பெற்ற தாய் இவள், சக்களத்தித் தாய் இவள்' என்று பேதபுத்தியைப் பாராட்டினதில்லை. இது உனக்கும் தெரியுமல்லவா? அந்தக் கைகேயியும் தன் புத்திரனை பரதனிடத்திலும் என்னிடத்திலும் பேதம் பாராட்டாதிருப்பதை நீயுமறிவாயல்லவா? இப்படியிருக்க, தெய்வத்தின் தூண்டுதல் இல்லாதிருக்குமாயின் அப்படிப்பட்ட கைகேயிக்கு என்னிடத்தில் இப்படிப்பட்ட துர்ப்புத்தி எப்படி உண்டாகக்கூடும்? ஆகையால் தெய்வமே இவையெல்லாவற்றிற்கும் காரணம்.

தெய்வத்தின் மகிமை இப்படிப்பட்டதென்று சிந்திக்கவும் முடியாதது. 'நாம் ஒன்று நினைக்கத் தெய்வமொன்று நினைக்கும்' என்னும் பழமொழியும் நீயறியாததல்ல. இப்பொழுது பார். எனக்குக் கையில்வந்த இராஜ்ஜியம் தப்பிப் போயிற்று. அந்தக் கைகேயிக்கு நெடுநாளாக நிரம்பியிருந்த பிரீதியும் நிலைகுலைந்து போய்விட்டது. தெய்வத்தின் செயல் அவசியம் பலித்தே தீரும்.

லக்ஷ்மணா! 'தெய்வமென்று ஒன்று உளதோ? அதெப்படி? இருக்குமாயின் புருஷப் பிரயத்தனத்தினால் அதை

மாற்றிவிடலாகாதோ?' என்று கேட்பாயாயின் கூறுகிறேன் கேள். நாம் செய்யும் காரியங்களின் பலன்களைக்கொண்டு 'தெய்வம் என்று ஒன்றுளது' என்று அறியவேண்டியதாய் இருக்கிறது. நாம் மிகவும் கஷ்டப்பட்டு அன்புடன் செய்யும் காரியங்களில் சிலவற்றிற்குப் பலன் உண்டாவதில்லை. நாம் ஊக்கமில்லாமல் செய்யும் சில காரியங்களில் சிலவற்றிற்கு நாம் எதிர்பாராவண்ணம் திடீரென்று நல்லபலன் உண்டாகக் காண்கிறோம். இப்படிப்பட்ட பலன்களுக்குத் தெய்வத்தைத் தவிர மற்றெதையும் காரணமாகச் சொல்ல நேராது.

எனவே தெய்வம் என்று ஒன்றுளது என்பது அநுமானத்தினுல் ஸித்திக்கின்றது. காரியம் பலிப்பதுபற்றியே தெய்வமுளதென்று அறியலாமன்றி மற்றைப்படி தெய்வத்தை யறிவதற்கு வேறு சாதனமில்லை. பலனைக்கொண்டு அனுமானித்தே தெரிந்துகொள்ள வேண்டியதாயிருப்பது பற்றி மிகவும் பலிஷ்டமாயிருக்கின்ற தெய்வத்தைப் புருஷப் பிரயத்தனத்தைக்கொண்டு தடுப்பது அரிது. சுகமும் துக்கமும், பயமும் கோபமும் லாபமும் நஷ்டமும், ஜனனமும் மரணமும் ஆகிய சம்பவங்களெல்லாம் தெய்வத்தின் செயல்களே. கொடிய தவம் செய்யும் விசுவாமித்ர முனிவன் முதலானவர்களும் தெய்வத்தினுல் பிடிக்கப்பட்டவர்களாகிக் காமக்குரோதங்களுக்கு உட்பட்டுத் தங்கள் மகரிஷித்வத்தையும் இழக்கின்றனர். இவ்வுலகில் ஆரம்பித்த காரியம் தடைப்பட்டு அதற்கு முன்பு மனத்திலும்கூட நினையாத மற்றொரு காரியம் திடீரென்று சம்பவிப்பது இயற்கை; இது தெய்வ காரியமேயாகும். ஆகையால் என் பட்டாபிஷேகம் தடைப்பட்டபோதிலும் எனக்கு மனத்தாபம் உண்டாகாதிருக்கிறது.

லக்ஷ்மணா! அபிஷேகத்தின்பொருட்டு ஸித்தப்படுத்தி வைத்திருக்கிற மங்கலகும்பங்களிலுள்ள இந்த ஜலங்களே நான் வனவாசத்திற்குரிய விரதத்தைச் சங்கற்பித்துக்கொள்ளும்பொழுது செய்யவேண்டிய ஸ்னானத்திற்கு உபயோகப்படுமாக. இதைப்பற்றி நீ வருத்தமடையாதிருப்பாயாக. ராஜ்ஜியத்தை நன்றாகப் பரிபாலிப்பதால் மிகுந்த தருமம் உண்டாகிறது. வனவாசத்தினால் தவம் ஸித்திக்கிறது. ஆகவே இரண்டும் சமானங்களாகும். ஆராய்ந்து பார்க்குமளவில் இராஜ்ஜிய நிர்வாகத்தில் சிந்தையும் கஷ்டமும் அதிகமாகின்றன. வனவாசத்தில் அவ்வித கஷ்டங்கள் ஒன்றுமில்லை. மேலும் பிதிர்வாக்கிய பரிபாலனமென்னும் தருமமொன்று சித்திக்கின்றது. ஆகவே எனக்கு வனவாசத்திலேயே மிகுந்த ஊக்கம் உண்டாகின்றது. இவையனைத்தும் தெய்வ சங்கற்பத்தால் நேர்ந்தவையென்று நீ தெளிந்திருப்பாயாக” என்றனன்.

இருபத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## இருபத்துமூன்றுவது ஸர்க்கம்

### லக்ஷ்மணன் கூறும் சில வாதங்களை இராமன் மறுத்தல்.

இங்ஙனம் இராமன் கூறக்கேட்ட லக்ஷ்மணன் ‘ராமன் தருமத்தில் மிகுந்த நிலையுடையவன்’ என்று மனக்களிப்பும் ‘இராஜ்ஜியத்தைக் கைவிடுகிறானே’ என்கிற மன வருத்தமும் மேலெழப்பெற்று இவ்விரண்டினிடையில் ஆழ்ந்தவனாகி மன வருத்தத்தினால் கோபாவேசம் மிகப்பெற்று ராமனைக் கடைக்கண்ணால் குறுக்கே பார்த்துக்கொண்டே ‘ராமா! நீ எல்லாம் தெரிந்தவன்; அப்படிப்பட்ட நீ பிதிர்வாக்கிய பரி

பாலனமென்னும் தருமத்திற்குக் கெடுதி விளையலாகாதென்றும், தெய்வமுளதென்றும், அதைத் தடுக்க மனிதனாலாகாதென்றும் கூறுவது வியப்பினும் வியப்பே. நீ தெய்வத்தையும் நிராகரிக்கவல்ல மஹாசூரன். இப்படிப்பட்ட நீ துர்ப்பலமாகிய தெய்வத்தைப் பிரபலமாகக் கூறுவது உனது மதிமயக்கத்தினாலன்றி வேறல்ல. வலிமையற்றவர்களன்றோ தெய்வத்தைக் கைப்பற்றுவார்கள்? தானாக ஒன்றைச் செய்யவாவது மானிட முயற்சியை நிராகரித்து ஒரு காரியத்தை நடத்தவாவது தெய்வம் சக்தியற்றது. அப்படிப்பட்ட தெய்வத்தை நீ என்னவென்று புகழ்கின்றனை! இந்த கைகேயி தசரதர்களிருவரும் பாபிகளென்று நீ அறியாமலிருப்பதென்னே? இப்பாபிகளின் கட்டளையைச் செய்யாதிருப்பதினால் தருமத்தவறு உனக்குச் சிறிதும் நேராது. 'அவர்களைப் பாபிஷ்டர்களென்று எவ்விதம் கூறுவாய்?' என்னில், கேட்பாயாக.

உலகத்தில் தருமத்தை வியாஜமாகக் காட்டி அதனால் தனது கெட்ட காரியங்களைச் சாதித்துக்கொள்பவர்களும் தருமத்தை யனுஷ்டிப்பதாக வேஷம் பூண்டு அதனால் தமது கொடிய நடவடிக்கைகளை மறைத்துக்கொள்பவர்களும் பலர் உண்டு.

அப்படியே கைகேயியும் தசரதனும் உனக்குப் பட்டாபிஷேகம் செய்பவர்போல் மேலுக்கு தருமத்தை அபிநயித்துக்கொண்டிருந்தார்களேயன்றி, உண்மையில் உனக்குக் கெடுதியையே சிந்தை செய்திருந்தவர்களாகையால் உன் அபிஷேக வைபவத்தை நிறுத்தி இந்தத் துராலோசனையைத் தெரிவித்தார்கள்; இது ஏற்கனவே அவர்கள் செய்துகொண்ட முன் யோசனையாகும். வரங்கொடுப்பதாக

வெகு காலத்திற்கு முன்னமே வார்த்தை நடந்ததாகையால் அரசர் இதை இதற்கு முன்பே எப்பொழுதோ கொடுத்திருக்கலாம்; இப்பொழுது கொடுக்க வேண்டிய அவசியம் இல்லை. மூத்தோனாகிய உன்னைவிட்டு இளையோனாகிய மற்றொருவனுக்கு முடி சூட்டுவது இவ்வுலகிலெங்கும் கண்டதுமில்லை, கேட்டதுமில்லை. இதை நான் பொறுக்கவே மாட்டேன். இவ்விஷயத்தில் நீ என்னை மன்னிக்கவேண்டும். ரகுகுல திலகனே! 'பிதிர்வாக்கிய பரிபாலனம் அவசியமான தருமமாயிற்றே' என்று இதையே திருப்பித் திருப்பிச் சொல்லுகின்றனை; தந்தை காமுகனாய் ஓர் ஸ்திரீயின் வலையிலகப்பட்டு மிகவும் அதர்மமாக ஓர் உத்தரவைச் செய்தானாயின் அதைத் திரஸ்கரிக்காமல் எப்படிச் செய்ய முன் வருகின்றனை? காம பரவசர்களாகி உனக்கு எப்பொழுதும் கெடுதியையே செய்ய விரும்பித் தாய்தந்தையர்களென்று பேர் வைத்துக்கொண்டிருக்கும் உன் பகைவர்கள் நெஞ்சிலும் நினைக்கக்கூடாததொன்றை விரும்பிக் கட்டளையிட்டால் அதை நிறைவேற்ற வேண்டுமென்று மனதிலும் கூட நீ எப்படி நினைக்கக்கூடும்? இவையனைத்தும் தெய்வசங்கல்பமென்று கூறுவதும் பிசகு; மகா பராக்கிரமசாலியான நீ அதை உபேட்சிக்க வேண்டும். தெய்வம் பிரமாணமென்பது எள்ளளவும் யுக்தமாகத் தோன்றவில்லை. 'எது செய்தால் எப்படியாகுமோ' என்று அஞ்சினவனும் வீரியமற்றவனாயிருப்பவனும் தெய்வத்தையனுசரிப்பானேயன்றி உன்னைப்போன்ற தீரர்கள் அத்தெய்வத்தைக் கைப்பற்றார்கள். தம் காரியங்களைத் தாமே சாதித்துக்கொள்வார்கள். எவன் தன் பிரயத்தனத்தினால் தெய்வத்தையடக்கித் தடுப்பதற்குச் சமர்த்தனோ அவன் தெய்வத்தை நம்பினால் தன் பிரயோஜனத்தைப் பாழாக்கிக் கொண்டு மனவருத்தமடைவான். ஜனங்கள் இப்பொழுதே

மனுஷ்யசாமர்த்தியத்தையும் தெய்வ சாமர்த்தியத்தையும் காணப்போகிறார்கள். இதை இப்பொழுதே நான் காட்டிவிடுகிறேன். எந்தத் தெய்வம் உன் பட்டாபிஷேகத்தைக் கெடுத்ததாக நீ நினைக்கின்றனையோ அந்தத் தெய்வம் என் பராக்கிரமத்தினால் தோல்வியுறுவதை அனைவரும் காணப் போகிறார்கள்.

ராமா! திக்குப் பாலகர்களும், மூன்று லோகத்தவர்களும் ஒன்றுகூடித் தடை செய்வார்களாயினும் இப்பொழுது நான் உனக்கு நடத்த முயன்றிருக்கிற பட்டாபிஷேகத்தை நிறுத்த முடியாது. உனக்குத் தீங்கிழைக்கவே துராலோசனை செய்த பாபிகள் அனைவரும் உனக்குச் சொன்ன பதினான்கு வருஷங்களும் கானகம் புகப்போகின்றனர். இங்ஙனம் தெய்வத்தைப் புருஷன் தடுத்துவிடலாமாகையால் உன் பட்டாபிஷேகம் இப்பொழுதே நடப்பதை யறிவாயாக. 'தந்தை தெய்வ பல முடையவனாயின் என் செய்வாய்?' எனில், என் பராக்கிரமத்திற்கு முன் தெய்வம் நிற்க முடியாது. ஆகையால் எனக்கு விரோதமாகக் கிளம்புமவர்கள் எவராயினும் அவர்களுக்குக் கெடுதியே நேரும். இப்பொழுது மன்னவன் மனநிலைமையற்றிருக்கிறானாகையால் நாம் சாகசஞ் செய்து ராஜ்ஜியத்தை ஸ்வாதீனப் படுத்திக் கொண்டோமாயின் ராஜ்ஜியத்தில் பலவாறு கலக்கம் நேரிடுமென்று தளர வேண்டாம். நீயும் வீரனாய் இருக்கிறாய். நானும் உனக்குத்துணைவனாயிருந்து, சமுத்திரம் பொங்கி வராதிருக்கும்படி எப்படி கரை காத்துக்கொண்டிருக்கிறதோ அப்படியே உனது ராஜ்ஜியத்தைக் கலகமொன்றும் உண்டாகா வண்ணம் பாதுகாக்கிறேன். வஸிஷ்டாதிகள் உனக்கு இப்பொழுதே மகுடாபிஷேகம் செய்யட்டும். ராமா! இப்

பொழுதே உனக்கு விரோதிகளாய் வருபவர் அனைவரும் மாளப் போகின்றனர். பூமி முழுவதையும் உன்னதீனமாகச் செய்யும்படி எனக்குக் கட்டளையிடுவாயாக. உனக்கு நான் கிங்கரனல்லனோ! உன் இஷ்டப்படி செய்ய சித்தமாயிருக்கிறேன்." என்றனன்.

இவ்விதம் லக்ஷ்மணன் சொன்ன சொற்களால் ராமன் மன வருத்தமடைந்து தன் கண்களினின்றும் பெருகி வரும் கண்ணீரைத் துடைத்தவண்ணம் தம்பியைப் பலவாறு இனிய உரைகளால் சமாதானப்படுத்தி "அடா! லக்ஷ்மணா! மெதுவான சுபாவமுடையவனான உனக்கு எங்கிருந்து இப்படிப்பட்ட கோபம் வந்தது? நான் தந்தையின் வசனத்திலேயே நிலை நிற்பவனன்றி அதை எள்ளளவாயினும் தாண்டிப் போகமாட்டேன் என்று தெரிந்து கொள்வாயாக. தம்பி! இந்த பிதிர்வாக்ய பரிபாலனமே சிறந்த தருமமென்றுணர்வாயாக" என்று கூறினன்.

இருபத்துமூன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## இருபத்துநான்காவது ஸர்க்கம்

## இராமனுடைய துணிவைக் கண்ட கௌசல்யை வனவாசத்திற்கு வருந்தி விடை கொடுத்தல்.

பிதிர்வசன பரிபாலனஞ் செய்வதில் மிக்க மனவூக்கங் கொண்ட ராமனை அன்னையாகிய கௌசல்யை கண்டு, அழுவது அமங்கலமென்று கண்ணீரை யடக்கிக்கொண்டு "அப்பா! குழந்தாய்! நீ இதுவரையில் துக்கமென்பது சிறிதும் அறியாதவன். ஆயினும் தருமத்தைத் தவறாதிருப்பவன். உனது வேலையாட்களும் பிரதி தினம் அறுசுவையுள்ள உயர்ந்த அன்னத்தைப் புசிக்கின்றனர். பிரபுவாகிய நீ காடு சென்று காய் கனிகளைத் தின்று எப்படிப் பிழைக்கப்

போகிறாய்? பரமதர்மிஷ்டனான சக்கரவர்த்தி மனத்திற்கு மிகவும் இனியனான உன்னை எப்படிக் காட்டிற்கனுப்ப மன மொப்பினான்? இவ்விஷயத்தைக் கேட்கும்எவனும் இதை ஒரு பொழுதும் நம்பமாட்டான். ஸமஸ்த கல்யாணகுணங் களும் நிறைந்த கருணைக்கடலான உனக்கே இத்தகைய தீங்கு நேருமாயின் மற்றவர்களுடைய விதியைப்பற்றி என் சொல்வது? புதல்வனே! உன்னை விட்டுப் பிரிந்து இங்கே ஒரு நொடிப்பொழுதும் பிரிந்திருக்கமாட்டாத நான் உன்னைப் பின் தொடர்ந்து வர விரும்புகிறேன்." என்றனள்.

இங்ஙனம் கூறின அன்னையை நோக்கி ராமன் "தாயே! தந்தையோ ஏற்கனவே கைகேயியால் வஞ்சிக்கப் பட்டிருக்கிறார். நானோ காட்டிற்குப் போகிறேன். நீயும் என்னுடன் வந்துவிட்டால் அவர் நிச்சயமாய் ஜீவித்திருக்க மாட்டார். ஸ்திரீகள் எப்பொழுதும் தங்கள் கணவன்மார் களைவிட்டு நீங்கலாகாது. அவர்கள் எப்பொழுதும் பர்த்தாக் கள் மனம் வருந்தாவண்ணம் கூடவேயிருந்து அவர்களுக் குப் பணிவிடைகள் செய்யவேண்டும். இதுவே ஸ்திரீ களுக்கு நிலையான தருமமாகும். நான் இந்தப் பதினான்கு வருஷங்களும் காட்டில் சுகமாய்ச் சஞ்சரித்து விளையாடிப் பிறகு மீண்டும் உன் மனமுகக்கும்வண்ணம் நடந்துகொள் வேன்." என்றனன்.

கௌசல்யை, இவ்விதம் கூறின இராமனை நோக்கி "என தருமைப் புதல்வ! நீ சென்றபின் நான் என் சக்களத்திக ளிடையிலிருப்பது யுக்தமன்று. என்னையும் அழைத்துச் செல்" என்று வற்புறுத்தினள். அன்னவளை ராமபிரான் தேற்ற விரும்பி "அன்னாய்! பெண்ணாய்ப் பிறந்தவர்களுக்கு ஆயுட்காலம் முழுவதும் கணவனே தெய்வம். அவனே

பிரபு. ஆகையால் நீ எவ்விதத்திலும் எமது தந்தையை விட்டு நீங்கலாகாது. மேலும் ராஜாவாகப்போகிற பரதனும் சிறந்த தார்மிகன். அவனால் நீ நன்கு கௌரவிக்கப் படுவாய். அவன் தன் தாயின் வார்த்தையைக்கேட்டு உனக்கு ஒருபோதும் தீங்கு நினையான். ஆகையால் நான் வனம் சென்றபின் நீ தந்தையைத் தேற்றி அவர் என் பிரிவாற்றாமையால் வருந்தாதிருக்கும்படி செய்யவேண்டும். இன்னும் கேள். இவ்வுலகில் எப்பொழுதும் சிறந்த விரதங்களையே யநுசரித்து மிகவும் மேன்மை பெற்றவளென்று புகழப்படுகிற பெண்பிள்ளையும் தன் கணவனை யநுசரியாதிருப்பாளாயின் அவள் பாபத்தின் பலனையேயடைவாள். பெரியோர்களைப் பணியாமலும், தேவ பூஜைகளை நடத்தாமலுமிருக்கிற மடந்தையும் தன் கணவனுக்குப் பணிவிடை செய்துகொண்டிருப்பாளாயின் உத்தமமான சுவர்க்க லோகத்தையடைவாள். தாயே! நான் க்ஷேமமாகத் திரும்பி வரும்பொருட்டுச் சிறந்த விரதங்களை யநுஷ்டிக்கக் கடவை." என்றனன்.

கௌசல்யை ராமபிரானது தரும மொழிகளால் மனத்திருப்தியடைந்து "செல்வக்குழந்தாய்! நீ சுகமே வனம் சென்று வருவாயாக. எப்பொழுதும் உனக்கு மங்களமேயுண்டாகுக. மகா பாக்யசாலியான நீ சுகமாக வனத்தினின்றும் வந்து சேருவாயாக. பதினான்கு வருடங்கள் தீர்ந்து திரும்பிவரும் உன்னைக் காணும்படியான அக்காலம் இப்பொழுதே எனக்கு நேருமா" என்றுகூறி மங்கலகரமான சொற்களால் அவனை ஆசீர்வதிக்கத் தொடங்கினள்.

இருபத்துநான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

## இருபத்தைந்தாவது ஸர்க்கம்.

## இராமனுக்குக் கௌஸல்யை மங்களாசாசனம் செய்தலும் இராமன் தனது மாளிகைக்குப் புறப்படுதலும்.

"ரகுகுலதிலகனே! நீ பதினான்கு வருடங்களும் கழிந்தவுடனே திரும்பி வந்து ராஜ்யாபிஷேகத்தைச் செய்துகொள்வாயாக. ராமா! பரிபூரணமான சிரத்தையுடன் யாதொரு தருமத்தைத் தவறாமல் நீ அநுஷ்டிக்கிறாயோ, அந்தத் தருமமே உன்னை யெப்பொழுதும் காப்பாற்றக் கடவதாக. நீ வழிபடும் தேவதைகளும் காட்டிலுள்ள தவமுனிவர்களும் உன்னைக் காப்பாற்றுவார்களாக. உனக்கு விசுவாமித்ர முனிவரால் உபதேசிக்கப்பட்ட அஸ்த்ர சஸ்த்ரங்கள் உன்னை எப்பொழுதும் எல்லாவிடங்களிலும் காத்துக்கொண்டிருக்குமாக. நீ வெகுகாலம் ஜீவித்திருப்பாயாக. வனத்தில் கொடிய தேவதைகளாலும் விலங்குகளாலும் ஏற்படக்கூடிய தோஷங்களைத் தேவர்களும் மகரிஷிகளும் போக்கி உன்னைக் காப்பார்களாக. உனக்கு எப்பொழுதும் ஸமஸ்த தேவதைகளும் மங்கலத்தையேயுண்டாக்குக. சுகத்தையே செய்வார்களாக. கொடுந்தொழில் புரியும் அரக்கர்களாலும் பிசாசங்களாலும் உனக்குத் தீங்கு நேரிடாமலிருக்குமாக. குழந்தாய்! நீ போகும் வழிகளிலெல்லாம் வேண்டிய காய் கிழங்குகள் ஏராளமாய்க் கிடைக்கப்பெறுவாயாக. எல்லாவிடங்களிலும் நீ வெற்றிபெற்றுத் திரும்பிவருவாயாக. உனது சத்துருக்களுங்கூட உனக்கு மங்கலத்தையே விளைவிப்பார்களாக" என்றிங்ஙனே கௌசல்யை ராமனுக்கு மங்களாசாசனம் செய்து புஷ்ப மாலைகளாலும் தோத்திரங்களாலும் ஸமஸ்த தேவதைகளையும் பூஜித்தாள். ராமனுக்கு மங்களமுண்டாகும்பொருட்டு அக்னியை வளர்த்தி அந்தணர்களைக்கொண்டு

ஹோமம் செய்வித்து அவர்களுக்கு தக்ஷிணைகளைக் கொடுத்தாள். ராமனை ஆசீர்வதித்து அவனது சிரசில் அக்ஷதைகளையிட்டு, மேனியில் சந்தனத்தைப்பூசி, ஸமஸ்தகாரியங்களையும் நினைத்தபடி நிறைவேற்றவல்லதும், தனது ஸ்பர்சப்பட்டமாத்திரத்தில் கஷ்ட நிவர்த்தியைத் தரவல்லதுமான 'விசல்யகரணி' என்னும் மூலிகையை ரக்ஷையாக அவனது கையில்கட்டி மந்திரித்தனள்.

"குழந்தாய், நீ அரோகதிடகாத்திரனாய் ஸமஸ்த காரியங்களும் கைகூடப்பெற்று மீளவும் அயோத்திக்குத் திரும்பி வந்து ராஜ்யாபிஷேகம் செய்துகொண்டு சுகமாயிருக்கப் பார்ப்பேனாக. நீ சுகமே வனம்சென்று வருவாய்" என்று மங்களாசீர்வாதங்களைச் செய்து முடித்தாள்.

பிறகு ராமனும் கௌசல்யையின் பாதங்களில் நமஸ்காரம் செய்து மிகுந்த குதூகலத்துடன் சீதாதேவியின் கிருகத்திற்குச் சென்றனன்.

இருபத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## இருபத்தாறாவது ஸர்க்கம்.

### இராமன் தான் காட்டுக்குச் செல்லவேண்டியதாயிற்றென்று சீதையிடம் கூறி, அவளை நகரத்திலேயே வசிக்குமாறு திட்டம் செய்தல்.

ராமாபிஷேகத்திற்காக நியமத்துடன் விரதங்களை அனுஷ்டித்துக்கொண்டிருந்த சீதாதேவி ராமனுடைய அபிஷேகம் தடைப்பட்டுப்போன விஷயம் ஒன்றும் அறியாளாதலால் குதூகலமாக அவனுடைய வருகையை எதிர்பார்த்திருந்தாள். இராமனது முகம் வாடி வருந்தியிருப்பதைக்

கண்டதும் மிகுந்த மனவருத்தங்கொண்டு "நாதா! இந்த மங்கல சமயத்தில் நீ ஏன் இப்படி மனவருத்தமுற்றிருக்கின்றனை? உனக்குக் குடை சாமரம் முதலியன ஏன் ஒன்றுமில்லை? சிறந்தவைதிகோத்தமர்களும், ஸ்துதி பாடகர்களும் சந்தோஷத்துடன் மங்கல வசனங்களால் உன்னை ஏன் புகழ்ந்துபாடவில்லை? உத்ஸவத்தின் பொருட்டு ஏற்படுத்தப் பட்ட புஷ்யரதமென்னும் தேர் உன் முன்புறத்தில் ஏன் வந்து நிற்கவில்லை? பட்டத்து யானை ஏன் உன் முன்னே வரவில்லை? எந்நாளுமில்லாத ஒளி மழுக்கம் உனது முகத்தில் ஏன் உண்டாகியிருக்கிறது." என்றிவ்வாறு வினவினாள்.

ராமன் சீதையை நோக்கி "பிரியே! தந்தையார் என்னைக் காட்டிற்குப் போகக் கட்டளை யிட்டனர். தருமங்களை யெல்லாம் அறிந்து அதன்படி ஒழுகுபவளான நீ நான் செய்ய முயலும் தருமத்தைத் தடைசெய்யலாகாது;. தந்தையார் கைகேயிக்கு முன்பு எப்பொழுதோ கொடுத்திருந்த இரண்டு வரங்களின் பயனாக யான் இன்று கானகஞ் செல்லவும் பரதன் பட்டாபிஷேகம் செய்து கொள்ளவும் நேர்ந்தது. ஆகையால் நான் பிதிர்வாக்கிய பரிபாலனத்தை உத்தேசித்து வனஞ்செல்கிறேன். 'பரதன் நம் பர்த்தாவுக்கு நேரவேண்டிய ராஜ்ஜியத்தைக் கைப்பற்றினனே!' என்னும் பொறாமை கொண்டு நீ அவனிடம் பகை பாராட்டலாகாது. அவனுக்கு அனுகூலமாகவே நடந்து கொள்வாயாக. நீ மனம் திடமாய் இருக்கப் பெற்றவளாகையால் என் பிரிவைப் பற்றி வருத்தப்படாமல் இருக்கவேண்டும். நான் வனம் போனபின் நீ பிரதி தினமும் விடியற்காலத்தில் எழுந்திருந்து விதியின்படி தேவபூஜைகளைச்செய்து, விரதங்களை நடத்திக்கொண்டு, என் தந்தை தாய்மார்களை நமஸ்காரஞ்

செய்யவேண்டும். எனக்குப் பிராணன்களைக்காட்டிலும் மிகவும் அன்பர்களான பரதசத்ருக்னர்களை உன் உடன் பிறந்தவர்களைப் போலவும் உனக்குப் பிறந்த பிள்ளைகள் போலவும் பாவிக்கவேண்டும். பரதன் ராஜாவாகையால் அவனுக்கு அநுகூலமாக விருந்து அவனை யநுசரித்து நடப்பாயாக. நான் சென்று வருகிறேன்' என்றனன்.

இருபத்தாருவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## இருபத்தேழாவது ஸர்க்கம்

### சீதை தன்னையும் காட்டுக்கு அழைத்துச் செல்லுமாறு இராமனை நிர்ப்பந்தித்தலும், அதற்கு ராமன் சமாதானம் கூறுதலும்.

இங்ஙனம் இராமன் கூறக்கேட்ட சீதை மிகுந்த தாபத்துடன் "ராமா! நீயோ வெகுபராக்கிரமசாலி, ராஜபுத்திரன்; என்னைப் போன்ற பெண்பிள்ளையும்கூடப் பரிகாசம் செய்யும்படியான இப்படிப்பட்ட வார்த்தையைச் சொல்லுகின்றனையே. நான் என்றைக்கும் இப்படிப்பட்ட வார்த்தைகளை உன்னிடமிருந்து கேட்டதில்லை; தந்தையும் தாயும் உடன் பிறந்தவனும் பிள்ளையும் மருமகளும் ஆகிய இவர்களெல்லாரும் தம் தமது புண்யபாப பலன்களையே யநுபவிக்கிறார்கள். கணவனது பாதி சரீரமாகிய மனைவி ஒருத்தி மாத்திரமே கணவனுக்கு நேருகிற சுபாசுபபலன்களைத் தானும் அநுபவித்துக் கொண்டிருப்பவள். ஸ்திரீகளுக்கு எப்பொழுதும் கணவன் ஒருவன் மாத்திரமே இகத்திலும் பரத்திலும் கதியாவான். ஆகையால் உன்னைக் காடுசெல்லும்படி கட்டளையிட்ட மாத்திரத்திலேயே என்னையும் காட்டிலிருக்கும்படி

சொல்லியதாகவே ஆயிற்று. எனவே நானும் உன்னைப்பின் தொடர்ந்து வருவேன். நீ ஒப்பற்ற வீரனுகையால் என்னைப் போன்ற ஒரு பெண்பிள்ளையைக் காட்டில் எப்படிக் காப்பாற்றுவது என்று சிந்திக்கலாகாது. பர்த்தாவை விட்டுப் பிரிந்து உயிர்தரித்திருக்கும்படியான பாபம் என்னிடத்தில் இல்லை. அரண்மனையில் கிடைக்கும் சுகபோகங்களெல்லாவற்றையும் விட, கணவனையநுசரித்துப் பணிவிடை செய்துகொண்டு அவன் பாதநிழலில் ஒதுங்கி யிருப்பதே சிறந்ததாகும். மூவுலகமாளும் பிரபுத்துவம் எனக்குக் கிடைத்தாலும் நான் அதைக் கவனியாமல் உன்னையே பின்பற்றிக் காட்டில் சுகமாய்க் காலங்கழிப்பேன். வனவாசத்தில் உனக்கு யாதொரு ஆயாஸமும் நேரிடாவண்ணம் உன்னுடனிருந்து உனக்கு மனமகிழ்ச்சியை உண்டுபண்ணுவேன். உன்னுடன் சிறந்த விரதங்களை அனுட்டித்துக் காய் கிழங்குகளை அன்புடன் புசித்துச் சுகமாகவே காலங்கழிப்பேன். இங்ஙனம் வனத்தில் உன்னோடு கூடி நூறு ஆயிரம் வருஷங்கள் வசித்தாலும், எனக்குக் கஷ்டமென்பதே சிறிதும் தெரியாது. உன் பாதங்களைப் பற்றினவர்க்குப் பயம்யாது? யான் உன்னைத் தவிர மற்று எவரிடத்திலும் மனம் பற்றப் பெறுதவள். நீ என்னைவிட்டுப் போவாயாயின் நான் மரணமடைவது திண்ணம். ஆகையால் என்னையும் உன்னுடன் காட்டிற் கழைத்துச் செல்;' என்று கூறினள்.

இப்படிக் கூறின சீதையின் வசனங்கள் மிகுந்த நியாயமுடையவைகளாய் இருந்த போதிலும் ராமன் அவளிடம் அளவற்றபிரீதியுடையவனுகையால் அவளைக் காட்டிற்கழைத்துப் போய் கல்லிலும் முள்ளிலும் வெய்யிலிலும் குளிரிலும் மெலிவிக்க விருப்பங் கொள்ளவில்லை. எனவே வனவா

சத்தால் நேரிடக்கூடிய துன்பங்களைக் குறித்து அவளுக்குக் கூறத் தொடங்கினன்.

**இருபத்தேழாவது ஸர்க்கம் முற்றிற்று.**

---

## இருபத்தெட்டாவது ஸர்க்கம்.

### மீண்டும் இராமன் சீதைக்குக் காட்டின் கொடுமைகளைக் கூறி உடன் வரக் கூடாதென்றல்.

"சீதே! நீ பெரிய வம்சத்தில் பிறந்தவள். எப்பொழுதும் தருமத்தில் சிந்தையுள்ளவள். என்வார்த்தையைக் கேட்பது உனக்குத் தருமமாகையால் நான் சொல்லுகிறபடி நீ செய்யவேண்டுமேயன்றி உன் இஷ்டப்படி செய்ய நினைப்பது யுக்தமன்று. அரண்யத்தில் பலவிதமான கஷ்டங்களுண்டு. அவற்றைச் சொல்லுகிறேன் கேள். துஷ்ட மிருகங்களும், விஷப் பாம்புகளும், கொடிய அரக்கர்களும் காட்டில் மலிந்திருப்பது இயல்பு. இவர்களால் அடிக்கடி கஷ்டம் நேரிடும். வழிகளிலோ கொடிய முட்களும் கற்களும் நிறைந்திருக்கும். உன்னால் அவ்வித வழிகளில் நடக்க முடியாது. சிலவிடங்களில் அடியோடு ஜலமே கிடைக்காது. இரவும் பகலும் நியமத்துடனிருந்து ஸ்வல்பமாகக் கிடைக்கும் காய் கிழங்குகளைத் தின்று வசிப்பது கஷ்டம். மேலும் சக்திக்குத் தகுந்தபடி உபவாஸங்கள் இருக்கவேண்டும். மரவுரியுடுத்துச் சடைபுனையவேண்டும். தினந்தோறும் மூன்று தரம் ஸ்நானம் செய்யவேண்டும். காட்டில் காற்று அதிகமாக வீசிக்கொண்டிருக்கும். பசியோ அதிகோரமாக எடுக்கும். அங்குக் கோபத்தையும் லோபத்தையும் விட்டிருக்கவேண்டும். தவத்திலேயே புத்தியை நிலைநிறுத்தவேண்டும். ஆகையால் உனது மெல்லிய மேனி மேற்கூறின கஷ்டங்களால் வருந்த நேரிடும்.

எனவே உன்னைப் போன்றவர்களுக்கு வனவாசம் தகுந்த தன்று." என்றிங்ஙனே பலவிதமாக ராமன் சீதைக்குத் தேறுதல் கூறினான்.

இருபத்தெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## இருபத்தொன்பதாவது ஸர்க்கம்.

### சீதை தான் காட்டுக்குக் கூடவந்தே தீருவேனென்றலும் இராமன் அவளுக்கு நல்வார்த்தைகள் கூறுதலும்.

ராமபிரான் தன்னைக் காட்டிற்கழைத்துச்செல்ல விருப்பமில்லாதிருந்ததைக்கண்ட சீதை மிகவும் மனவருத்தமுற்று அவனைப் பார்த்து "தருமசீலனே! நீ வனவாசஞ் செய்யும் விஷயத்தில் நேரிடக்கூடிய கஷ்டங்களனைத்தும் உன்னுடன் கூடியிருக்கிற எனக்குக் கஷ்டங்களல்ல. சுகமேயாகும். காட்டிலுள்ள கொடிய விலங்குகள் உன்னைப் பார்த்தமாத்திரத்திலேயே அஞ்சி ஓடிப்போகுமென்பதில் ஐயமில்லை. ஏனெனில், நீ ஒப்பற்ற வீரன்; நான் உனது பக்கத்திலிருப்பேனுயின், தேவேந்திரனாலும் என்னைத் திரஸ்கரித்துக் கொண்டுபோக முடியாது. கணவனைப் பிரிந்து மனைவி பிழைத்திருத்தல் அரிது. தவிர முன்பு நான் என் தந்தையின் அகத்தில் இருக்கும்போது எனக்கு வனவாசஞ் செய்யும்படியான காலம் வருமென்று சோதிடர்கள் கூறியுள்ளார்கள். இன்னும் ஸாமுத்ரிக லக்ஷணம் தெரிந்த சில அந்தணர்களும் எனக்கு வனவாசம் நேருமென்று சொல்லியிருக்கிறார்கள். அவர்களின் வார்த்தைகளை ஸத்தியமாக்குவதற்காக நான் உன்னுடன் காட்டிற்கு வருகிறேன். வனவாசத்தில் பலவிதமான கஷ்டங்கள் நேரிடக்கூடுமென்பது எனக்

கும் தெரியும். ஆனால் அவை சிறிதும் பொருள்படுத்தக்கூடி யன அல்ல.

மேலும் நான் கன்னிகையாய் இருக்கும்பொழுது ஒரு தாபஸ ஸ்திரீயானவள் என்னைப்பார்த்து வனவாசம் நேரிடுமென்று சொல்லியிருக்கிறாள். நானும் இங்கு வந்த பின்பு உன்னுடன் கூட கங்கைக் கரையிலுள்ள தபோவனம் முதலியவற்றில் சிறிது காலம் வாசம் செய்ய வேண்டு மென்று ஆசைப்பட்டுக்கொண்டிருந்தேனல்லவா! நாதா! நீயும் அப்படியே ஆகட்டுமென்று வாக்குறுதி கொடுத்திருக்க வில்லையா? ஆகையால் எனக்கு வனவாசம் போவது மஹோத் ஸவமாக விருக்கிறது. இங்கேயே இருந்து குல தேவதையை ஆராதித்துக்கொண்டு காலங்கழிக்குமாறு கூறுவது முறை யன்று.

பர்த்தாவைக் காட்டிலும் எனக்கு வேறு தெய்வமில்லை. 'இவ்வுலகில் பதிவிரதா சிரோமணியான ஒரு மடந்தைக்குப் பரலோகத்திலும் அந்தப் புருஷனே பர்த்தாவாக நேரிடுவான். என்று முறையிடுகிற வேத வாக்கியங்களை) நீயும் ஓதியிருக் கிறாயல்லவா? ஆகையால் மனக்களிப்பு நேரிடினும், மன வருத்தம் நேரிடினும் நான் உன்னோடு கூடவே காட்டிற்கு வருவது திண்ணம். நீ என்னைத் திரஸ்கரித்தால் நான் உயிர் விடுவது சத்தியம்" என்று கூறி, தன்னை எவ்விதத்தி லும் காட்டிற்கு அழைத்துச் செல்லுமாறு ராமனை வேண்ட வற்புறுத்தினாள்.

இருபத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

## முப்பதாவது ஸர்க்கம்

### சீதை பிரணயரோஷம் தலையெடுத்துக் கூறின கடுஞ் சொற்களைக் கேட்ட ராமன் அவளையும் உடனழைத்துப் போக இசைதல்.

எவ்வளவு கூறினும் ராமன் சீதையைத் தன்னுடன் அழைத்துச்செல்ல விருப்பமில்லாமலேயிருந்தனன். அது கண்டு சீதை மனம் பொறாமல், "ராமா! உன்னிடத்தில் அழகு மாத்திரமே இருக்கிறது. அதைக்கண்டு அனைவரும் மயங்கிவிடுகிறார்கள்; உனக்கு ஆண்மை என்பது சிறிதுமில்லை. என் ஒருத்தியைக் காக்க முடியாமல் நிறுத்தி நீ காட்டுக்குப் போகிறாயென்று எனது தந்தையார் கேள்விப்படின் "ஹா! புருஷ வேஷத்துடன் வந்தவொரு பெண்பிள்ளைக்கா என் புதல்வியைக் கொடுத்தேன்!" என்று தம்மை நொந்துகொள்வர். இம்மடவுலகர் 'ராமனிடம் ஸூர்யனைப் போன்ற தேஜஸ்ஸு ஜ்வலிக்கின்றது' என்று கூறுகின்றனர். இது முழுப்பொய்யான வார்த்தை. காட்டில் என்னைக் காக்க முடியாத பயம் உனக்கு உண்டாயிற்றே! எவரையும் மனதில் நினையாமல் கணவனையே தியானம்செய்து போந்த சாவித்திரி தேவியைப்போன்ற மஹா பதிவிரதையான என்னை நீ எக் காரணங்கொண்டு திரஸ்கரிக்கின்றனை? மனைவியைப் பிறர்க்கு ஒப்படைத்துப் பிழைக்கும் தன்மையனான கூத்தாடியைப் போல் நீயாகவே என்னைப் பிறர்க்குக் கொடுக்க விரும்புகின்றனை. எவர்க்குப் பணிவிடை செய்ய என்னை இங்கு நிறுத்திவைக்கின்றாயோ, அந்தத் தாய்மார்களுக்கு நீயே அநுகூலனாய் இருந்து எப்பொழுதும் சொன்ன காரியத்தைச் செய்துகொண்டிருப்பாயாக. நானோ உன்னைப் பின் தொடர்வேனேயன்றி இங்கிருக்கமாட்டேன். நான் உன்னைப் பின்

பற்றி வந்தால் எனக்கு எவ்வித கஷ்டமும் நேரிடாது. சோலையில் விளையாடுவது போலவும், பூம் படுக்கையில் படுப்பது போலவும் சுகமாகவேயிருக்கும். வழியிலுள்ள முட்களும் புதர்களும் எனக்குப் பஞ்சுபோலவேயிருக்கும். கானகத்தில் உன் கையினால் தரப்படும் காயோ, கிழங்கோ, இலையோ தழையோ மற்றெதுவோ அவை எனக்கு அமிர்தம்போல் இருக்கும். பல சொல்லியென்? ராமா! உன்னோடு கூடியிருப்பதே எனக்கு ஸ்வர்க்கம். உன்னைப் பிரிந்திருப்பதே எனக்கு நரகம்.” என்றிங்ஙனம் சோகத்தினால் பரிதபிக்கப்பெற்று, கேட்போர் மனம் இளகும்படி கூறிப் பெருங்குரலிட்டு அழுதனள். கண்ணீரைத் தாரை தாரையாகப் பெருக்கினள். முகம் ஒளி மழுங்கி வாடிப் போயிற்று.

இங்ஙனம் மூர்ச்சையடையும் தன்மையிலிருக்கும் சீதையை ராமன் தன் கைகளால் வாரியணைத்துக்கொண்டு, “தேவி! நான் உன்னைக் காட்டில் காப்பாற்ற வல்லவனாயினும் உன் மனத்திலுள்ள கருத்தைத் தெரிந்து கொள்வதற்கே நான் உன்னையழைத்துச் செல்ல மறுத்தேன். ஸ்ரீமந்நாராயணனைப்போல் எனக்கு எக்காலத்திலும் எங்கும் பயம் என்பதே கிடையாது. உனக்கு மன வருத்தமுண்டாகுமாயின் எனக்கு ஸ்வர்க்கம் கிடைத்தாலும் நான் அதை விரும்பமாட்டேன். உன் இஷ்டப்படி நீ என்னைப் பின் தொடர்ந்து வருவாயாக. உன்னுடைய நீதியான வார்த்தைகளால் நான் மிகவும் சந்தோஷமடைந்திருக்கின்றேன். ஏழைகளுக்கும் அந்தணர்களுக்கும் ஏராளமான தான தருமங்களைச் செய்து என்னைப் பின் தொடர்வாயாக.” என்று தேற்றினன். சீதாதேவியும் மிகுந்த குதூகலட்

கொண்டு கணவன் சொன்ன வண்ணம் தானங்களைச் செய்யத் தொடங்கினாள்.

முப்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## முப்பத்தோராவது ஸர்க்கம்

## லக்ஷ்மணன் தன்னையும் காட்டுக்கு அழைத்துச்செல்ல வேண்டுதலும், இராமன் மறுத்தலும், பிறகு நிர்ப்பந்தத்தின்மேல் இசைதலும்.

இப்படி ராமனுக்கும் சிதைக்கும் நடந்த ஸம்வாதங்களனைத்தையும் லக்ஷ்மணன் கூடவிருந்து கேட்டவனாதலால், "ஆ! தன் மனத்துக்கு இனியவளான சிதையையே அழைத்துப்போக மனமில்லாத ராமன் என்னை எப்படி அழைத்துப் போகச் சம்மதிப்பான்?" என்று மனங்கசிந்து, தமையனது பாதங்களைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு புருஷகாரமாகப் பிராட்டியை முன்னிட்டு ராமனை நோக்கி "நீர் காட்டிற்குச் சென்றால் உமக்குப் பலவிதமான கஷ்டங்கள் நேரிடும்; அப்போது நான் உம்முடன் கூடவிருந்து வில்லைத் தரித்து உமக்கு ஸகலவிதமான பணிவிடைகளையும் செய்ய விரும்புகிறேன். மோக்ஷமும் கைவல்யமும் எனக்குக் கிடைக்கினும், நான் உம்மை விட்டுப் பிரியேன். சிதையைப் போல் நானும் உம்மைப் பின் தொடர அநுமதியளிக்க வேணும்." என்று பிரார்த்தித்தனன்.

இவற்றைச் செவியுற்ற ராமன் "லக்ஷ்மணா! எனக்குப் பிராணனைப்போன்ற நீ, நான் சொன்னபடியே நடந்து எனக்கு ஸ்வாதீனமாய் இருக்கத் தக்கவன். நான் சொல்வதைக் கேள். நீ என்னுடன் வந்துவிட்டாயாகில், ராஜ்ஜி

யம் முழுவதையும் கைக்கொண்ட கைகேயி தன் சக்களத்தி களான நம் தாய்மார்களுக்கு அடியோடு நன்மை செய்ய மாட்டாள். பரதன் கைகேயியின் வார்த்தையைக் கேட்பவ னாகையால் அவனும் நம் தாய்மார்களுக்கு அல்லல் விளைவிக்க நேரிடும். ஆகையால் நீ இங்குத்தானே யிருந்து அரச னுடைய அனுக்ரஹத்தை அடைந்து நம் தாய்மார்களைப் போஷித்துக்கொண்டிரு. இதனால் உனக்கு ஒப்பில்லாத புண்ணியமும் உண்டாகும்” என்றனன்.

இங்ஙனம் மொழிந்த ராமனை நோக்கி லக்ஷ்மணன் “அண்ணா! நீர் கூறியபடி ஒன்றும் நேராது. இது நிச்சயம். ஏனெனில், பரதன் மிகவும் நல்ல குணமுடையவன்; நீர் ஊகிக்கிறபடி அவன் தவறு செய்யமாட்டான். ஆகையால் நான் உம்முடனிருந்து உமது குற்றேவல்களைச் செய்து கொண்டு வாழும்படி அருள் புரியவேணும். உமக்குச் சகல விதமான பணிவிடைகளையும் செய்துகொண்டிருக்க வேணு மென்பதே என் விருப்பம்.” என்றனன்.

பிறகு இராமனும் அவனுக்கு அவ்விதமே உத்தர வளிக்க அவன் கூறியவண்ணம் வஸிஷ்டருடைய மாளிகை யில் அதுவரை அம்முனிவனால் பூஜிக்கப்பட்டு வந்த வருண தனுஸ்ஸையும் மற்றும் பல ஆயுதங்களையும் கொண்டு வந்து தரித்துக்கொண்டு எல்லோரிடத்திலும் விடைகொண்டு ராமனைப் பின் தொடர ஸித்தனாயிருந்தான். ராமனும் ஏராளமான திரவியங்களையும் இரத்தினங்களையும் பிராமணர் களுக்கும் முனிவர்களுககும் தானம் செய்ய விரும்பினான்.

முப்பத்தோராவது ஸர்க்கம் முற்றிற்று.

## முப்பத்திரண்டாவது ஸர்க்கம்

### காட்டுக்குப் புறப்படுதற்கு அங்கமாக விசேஷதானங்கள் செய்தமை கூறல்.

ராமனது கட்டளைப்படி லக்ஷ்மணன் பிராம்மணைத் தமரான ஸுயஜ்ஞர் என்பவரை யழைத்து வந்தனன். ராமன் அவர்க்கு அளவற்ற ஐசுவரியங்களைக் கொடுத்ததுடன் றியில், சீதையும் அவருடைய மனைவிக்குப் பல ஆடையாபரணங் களையும் நல்ல படுக்கைகளையும் தானம் செய்தாள். பிறகு வஸிஷ்ட புத்திரர்களுக்கும் அகஸ்திய புத்திரர்களுக்கும் ஏராளமான பசுக்களையும் தனங்களையும் தானம் செய்தான். இதைத் தவிர, ஏழைகளுக்கும் பிரமசாரிகளுக்கும் கணக்கில் லாத ஐசுவரியங்களை ஈந்தனன். தன்னுடைய சகல வேலைக் காரர்களுக்கும் தேறுதல் கூறி அவர்களுக்கும் அநேகம் பொருள்களைக் கொடுத்துத் தான் வருமளவும் தன்னுடைய மாளிகையையும் லக்ஷ்மணனுடைய மாளிகையையும் ஜாக்கிர தையாகப் பார்த்துக்கொள்ளும்படி கட்டளையிட்டனன்.

இச்சமயத்தில் மகாதபோ நிதியும் பரம தரித்திரரும் பெரிய குடும்பியுமான 'திரிஜடர்' என்னும் முனிவர் தம் மனைவியினால் தூண்டப் பெற்றுத் தம் வறுமை நீங்குதற் காக ராமனையடைந்தனர். ராமன் அவரைக்கண்டு புன்னகை செய்து பெரிய பசுமந்தையைச் சுட்டிக்காட்டி "முனிவரே! இப்பசுமந்தையில் நீர் ஒரு தடியை வீசிப்போடுவீராக. அது எவ்வளவு தூரம்போகுமோ அவ்வளவு தூரத்தில் அடங்கிய பசுக்களை நீர் பெறுவீர்." என்றனன். பரம சந்தோஷ மடைந்த அப்பிராமணரும் மிகுந்த வேகத்துடன் தம் கைத் தடியைக் கிருகிருவென்று சுழற்றி யெறிந்தனர். அந்தத்தடி ஸரயூ நதியின் அக்கரையைத் தாண்டிப் பலவாயிரம் பசுக்

களுள்ள பசுமந்தையைக்கடந்து சென்று விழுந்தது. ராம னும் தான் வாக்களித்தபடி அவ்வளவு தூரத்திலடங்கிய பல் லாயிரக் கணக்கான பசுக்களையும் அவர்க்கீந்தனன். இன்னும் அளவற்ற ஐசுவர்யாதிகளையும் அவருக்குக் கொடுத்தனன்.

பிறகு சகலபிராமணர்களும் முனிவர்களும் பரம திருப்தியடைந்து இராமனுக்குக் கீர்த்தியும் பலமும் சந்தோ ஷமும் வளர்ந்துவரும்படி ஆசீர்வாதங்களைச் செய்தனர்.

முப்பத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## முப்பத்துமூன்றவது ஸர்க்கம்

### இராமன் சீதையோடும் லக்ஷ்மணனோடும் வனம் செல்ல அநுமதி கேட்பதற்காகத் தந்தையிடம் வந்து சேரல்.

பிறகு ராமலக்ஷ்மணர்கள் சீதையோடுகூட தசரதரு டைய மாளிகையை நோக்கி நடந்தனர். ஆடையாபரணங்கள் ஒன்றுமின்றி ஆயுதமும் கையுமாகச் சென்று கொண்டிருந்த அவர்களை நகரத்து ஜனங்கள் மனக்களிப்பின்றிப் பெருந் துயரத்துடன் பார்த்துக் கொண்டிருந்தார்கள். ராமன் குடை யும் செருப்புமில்லாமல் கால் நடையாய்ச் செல்வதை ஜனங் கள் கண்டு சகிக்கமுடியாமல் தசரதனை வாய்வந்தபடி வைதனர். இன்னும் அவர்கள் தங்கள் தங்கள் வீடுவாசல் களையும் ஐசுவர்யாதிகளையும் விட்டு ராமனைப் பின்தொடர உறுதி கொண்டனர்.

மேலும் அவர்கள் "இந்த அயோத்யாபட்டணம் பாழாய்ப் போகட்டும்; தர்மாத்மாவான ராமன் வனம் செல்லுகையில் நமக்கு மாத்திரம் இங்கென்னவேலை? சகல தேவதைகளும் இந்நகரத்தைவிட்டு ராமனைப் பின்

தொடரப் போகிறபடியால் இப்பட்டணம் காடாகுக. ராமன் செல்லும் காட்டிலுள்ள துஷ்டமிருகங்களும் பிசாசங்களும் இங்குவருமாக; அந்தக்காடே இனி நமக்குப் பட்டணமாகுக. நாம் ராமனுடன் சென்று வனவாசம் செய்து கொண்டிருப் போமாக" என்று இவ்விதம் ஒருவர்க் கொருவர் பேசிக் கொண்டிருந்தனர்.

ராமன் அவர்கள் கூறும் வார்த்தைகளைக் கேட்டுக் கொண்டே, பரமகம்பீரமாகத் தன் தந்தையின் மாளிகையை நோக்கிச் சென்றனன். ராமன் அந்த ராஜ கிருகத்தில் வருத்த முற்றிருக்கும் சாரதியான சுமந்திரனைக் கண்ட னன். அவனை நோக்கி "என்வரவை அரசனுக்குச்சொல்" என்று கூறினன்.

முப்பத்துமூன்றுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## முப்பத்து நான்காவது ஸர்க்கம்

### இராமன் தசரதனிடத்தில் தான் காடு செல்லப் புறப்படுவதை விஞ்ஞாபனம் செய்தல்.

இராமன் தன்னைக் காணவந்திருக்கும் விஷயத்தைச் சுமந்திரனால் கேட்கப்பெற்ற தசரதன் தன் சகல மனைவிமார் களுடன் ராமனைக்காண விருப்பங்கொண்டு சுமந்திரனை விளித்துத் தன் அந்தப்புரத்திலுள்ள எல்லா மனைவிமார் களையும் அழைத்துவரும்படி கட்டளையிட, அவ்வண்ணமே அனைவரும் வந்து சேர்ந்தார்கள். பிறகு ராமனும் லக்ஷ் மணனும் சீதை பின்தொடர அரசனையணுகினர். அப் பொழுது தபீலென்று அரசன் தன் ஆசனத்திலிருந்து எழுந்து பரவசனாகி ராமனை எதிர்கொண்டுபோயினன். அச்

சமயம் அவன் மிகவும் துக்கத்தினால் பீடிக்கப்பட்டிருந்தமையால் ராமனைச்சென்று கிட்டமுடியாமல் நடுவிலேயே மூர்ச்சித்து நிலத்தில் விழுந்தனன். ராம லக்ஷ்மணர்கள் அவனை யெடுக்க சமீபத்தில் ஓடிவந்தார்கள். ராஜமாளிகையிலுள்ள எல்லா ஸ்திரீகளும் உடல் குலுங்க "ஹா! ஹா!! ராமா!!!" என்று அலறியழுதார்கள். பிறகு மன்னவனை மூர்ச்சை தெளிவித்து உட்காரவைத்தார்கள். ராமன் தனக்கும் லக்ஷ்மணனுக்கும் சீதைக்கும் வனம் செல்ல உத்தரவு தரவேண்டுமென்று கேட்டனன்.

தசரதன் "ராமா! நான் கைகேயிக்கு வரங்கொடுத்ததனால் வஞ்சிக்கப்பட்டவனானேன்; இப்பொழுது நீ என்னை நிக்ரஹித்து நீயே அரசனாகக்கடவை" என்று கூற, ராமன் "தந்தையே! நீர் எனக்காகப் பொய்யரென்று பெயர்பெறலாகாது. நான் உம்மை சத்தியம் தவறும்படி செய்வதும் யுக்தமன்று. நான் பதினான்கு வருடங்கள் வனவாசம் செய்து மீண்டும் இவ்விடம் வந்துவிடுவேன்" என்றனன் மன்னவன் சத்தியமென்னும் கயிற்றால் கட்டுண்டு விடுவித்துக்கொள்ள நேராமல் கண்ணீர் பெருக்கினான். அச்சமயத்திலும் கைகேயி ஏகாந்தமாக அவன் செவியில் "இப்பொழுதே ராமனைக் காட்டுக் கனுப்பவேண்டும்" என்று தூண்ட, மன்னவனும் ஆற்றமாட்டாமல் "ராமா! இக்கொடிய ஸ்திரீயால் நான் உன்னைவிட்டுப் பிரிய நேர்ந்தது. ஆனால் நீ இப்பொழுதே வனம் செல்லலாகாது. இன்றிரவு முழுதும் இங்குத்தானே இருந்து என்னையும் உன் தாயாரையும் பார்த்துக்கொண்டிருப்பாயாக. இந்த ஒருதினமாயினும் உன்னைக் கண்ணாரக்கண்டு சுகமாயிருப்பேன். நீ நாளைய தினம் காலை வனம் செல்லலாம்." என்றுகூறினன்.

இங்ஙனம் கூறக்கேட்ட ராமன் "தந்தையே! நீர் எப்பொழுதும் சத்தியசந்தராய் இருப்பீராக. நான் இன்றேவனம் செல்ல விடையருள வேண்டும்; பரதனுக்கே ராஜ்யத்தை யளிப்பீராக. நான் சுகமாக சீதையுடனும் லக்ஷ்மணனுடனும் வனவாசம் செல்வேன். என்னுடைய பிரிவுக்காக நீரே இங்ஙனம் சோகித்தால் குடிகள் எவ்விதம் வருந்துவார்கள்! நீர் சிறிதும் வருத்தப்படலாகாது. நீர் சத்தியசந்தராக விளங்குவதையே நான் விரும்புகிறேனாதலால் நான் இப்பொழுதே காடேக உத்தரவு தந்தருளவேண்டும். மிகவும் விசனமடைந்திருக்கிற இந்த நகரத்து ஜனங்களைக் கண்ணீர் துடைத்துத் தேறச் செய்யவேண்டியபாரம் உம்முடையது. நான் வனம் செல்வதைப்பற்றி நீர் எள்ளளவும் சிந்திக்க வேண்டியதில்லை. 'சத்தியம் தவறமாட்டேன்' என்கிற உமதுவிரதம் மேன்மைபெறுமாக. ஆகவே நீர் துக்கத்தை விட்டுச் சுகமாய் இருப்பீராக." என்றனன்.

இங்ஙனம் கூறின ராமனை அரசன் ஆரத்தழுவிக்கொண்டு தெளிவுதவறி, மூர்ச்சித்துச் செயல்மாண்டு கிடந்தனன். கைகேயி ஒருத்தி தவிர, மற்ற ராஜபத்தினிகளெல்லாரும் ஒன்றுகூடி மனந்தாளப்பெறாமல் "ஹா! ஹா!!" என்று கதறியழுதனர்.

முப்பத்துநான்காவது ஸர்க்கம் முற்றிற்று

---

## முப்பத்தைந்தாவது ஸர்க்கம்

### சுமந்திரன் கைகேயியைப் பலவாறு நிந்தித்தல்.

இவற்றைக் கண்ட சுமந்திரன் மனந்தாளாமல் கைகேயியை நோக்கி "அடிபாபி! இன்று உன்கொடிய செய்கையினால்

கமது அரசன் உயிர் துறப்பது திண்ணம். உன்னால் அரசன் இக்கதிக்கு ஆளாகப்போகிறான். ஸ்திரீகளுக்குப் புத்திரனைத் துறந்தாயினும் கணவனது மனத்தைக் களிக்கச் செய்வதே சிறந்த தருமமாகும். இக்ஷ்வாகு வம்சத்தில் மூத்தோனிருக்க இளையவன் மகுடம் புனைவது இன்றளவும் கேட்டதில்லை; உன்மகனே அரசாளட்டும். நாங்களனைவரும் ராமனையே பின் பற்றுகிறோம். உனது தேசத்தில் இனி ஒரு பிராமணனும் குடியிருக்கப் போகிறதில்லை. இந்தக் கொடியதான உன்செய்கையைக் கண்டு ஏன் பூமி இன்னும் இருபிளவாகப் பிளவுறவில்லை? வஸிஷ்டர் முதலிய முனிவர்கள் உன்னை ஏன் இன்னும் சபிக்கவில்லை? இது எனக்கு ஆச்சரியமாகவிருக்கிறதே! அந்தோ! உன் தாயைப் போலவேயா நீயும் இருக்க வேண்டும்? கொடிய மனம்படைத்த உன் தாயின் செய்கையை நான் நேரில் காணப்பெறாவிடினும், பிறர் சொல்லக்கேட்டிருக்கிறேன். அதை நீயும் கேள்;—

முன்பு ஒரு யோகியானவர் உன்தந்தையான கேகய மஹாராஜனுக்கு மேலான ஒரு வரம் கொடுத்திருந்தார். அதன் பயனாக அவர் ஸமஸ்த பிராணிகளின் பாஷைகளையும் அறியவல்ல சக்திவாய்ந்திருந்தார். ஈ எறும்பு முதலியவற்றின் ஒலிகளின் பொருளையும் அவர் உணர்ந்திருந்தார். இப்படியிருக்கையில் ஒரு காலத்தில் அவர் உன் அன்னையுடன் மஞ்சத்தில் படுத்திருக்கையில், கீழே சென்றுகொண்டிருந்த ஓர் எறும்பு ஓர் ஒலிசெய்ய, அதைக் கேட்டு அதன் கருத்தையறிந்து சிரித்தார். அப்போது உனது அன்னை அவர் தன்னைப் பார்த்தே பரிகசித்துச் சிரித்தாரென்று எண்ணி அவர் சிரித்த காரணத்தைக்கேட்டனள். அம்மன்னவர் தாம் அதன்காரணத்தைச் சொன்னால் அப்போதே தமக்கு

மரணம் நேரிடுவது நிச்சயமென்று எவ்வளவு தூரம் கூறியும் அவள் கேளாமல் 'நீர் பிழைத்தாலும் சரி; இறந்தாலும் சரி. அவசியம் நீர் அதைக் கூறியேயாகவேணும்; கூறினால் தான் என்னை நீர் பரிகாசம் செய்யவில்லை யென்று எனக்கு நம்பிக்கை உண்டாகும்' என்றனள். இந்த தரும சங்கடத்தில் தத்தளித்த உன் தந்தை முன் தனக்கு வரங்கொடுத்த யோகி கூறிய வண்ணம், அவளுக்கு அவள் கேட்டவிஷயத்தை உணர்த்தாமல் அவளை அடித்துத்துரத்திவிட்டுச் சந்தோஷமாகக் காலம் கழித்தார். நீ அவள்வயிற்றில் பிறந்தவளாகையாலே இன்று நம்மரசனைத் துர்விஷயத்தில் நடத்திக் கெடுக்கின்றனை. 'குணங்களில் பிள்ளைகள் தந்தையைப் போலவும், பெண்கள் தாயைப் போலவும் பிறப்பார்கள்' என்று உலகந்தவர் கூறுவது இன்றே எனக்கு உண்மையாகத் தோன்றுகிறது.

கைகேயி! நீ இவ்வித எண்ணத்தை விட்டொழித்து இப்பொழுதே அரசர் கூறும் புத்தியைப் பாராட்டி ஒழுகுவாயாக. உன் வரங்களை வேறுவிதமான வகையில் மாற்றிக் கொள்வாயாக. குணக்கடலான ராமனுக்குப் பட்டாபிஷேகத்தை நடத்திவைப்பாயாக. மேலும் ராமன் காடேகுவானாகில் உனக்கு என்றுமழியாத அபவாதம் உண்டாகும். ராஜ்யபட்டாபிஷேகம் ராமனுக்கு நடந்தபின் தசரத மஹாராஜன் இக்ஷ்வாகு வம்சத்தரசர்கள் முன்பு நடத்தின ஆசாரத்தின்படி காட்டிற்குப் போகக்கடவன். இதுவே சிறந்த தருமம்." என்றுகூறி முடித்தனன். இவ்வளவு கடினமான மொழிகளாலும் கைகேயிக்குச் சிறிதும் மன இரக்கமுண்டாகவேயில்லை.

முப்பத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

## முப்பத்தாறுவது ஸர்க்கம்

### தசரதன் இராமனைச் சதுரங்க பலங்களோடு காட்டுக்கனுப்ப நியமித்தலும், அதைக் கைகேயி ஆக்ஷேபித்தலும், சித்தார்த்தனென்பவன் கைகேயிக்கு நல்ல புத்தி நல்குதலும்.

அச்சமயம் சுமந்திரனை நோக்கித் தசரதன் "சாரதியே! ராமனைத் தனியே காட்டிற்கனுப்ப வேண்டா; ரதகஜ துரக பதாதிகளான சதுரங்க சேனைகளுடனும் சகலவிதமான ஐசுவரியங்களுடனும் அனுப்புவாயாக." என்று கூறினன். கைகேயி மனம் பதைத்து வாடின முகத்துடன் அரசனை நோக்கி "நீ ஸத்புருஷனாய் இருப்பாயாயின் இங்ஙனம் கட்டளையிடலாகாது, மேலுள்ள இன்சுவைகளெல்லாம் குடிக்கப்பட்டபின் அடியில்நின்ற மத்யம்போல், ஜனங்கள் நீங்கிப் பாழாகி ஐசுவரியங்களெல்லாம் தொலையப்பெற்றுச் சிறிதும் அநுபவிக்கத் தகாததான இந்த ராஜ்ஜியத்தைப் பரதன் ஒருநாளும் பெற்றுக்கொள்ள மாட்டான். மேலும் உன் வம்சத்திலேயே சகரனென்னும் அரசன் தன் மூத்த புதல்வனான அசமஞ்சனைக் காட்டிற்கனுப்பியிருக்கிறான். அவனை சைன்யாதிகளுடனும் சம்பத்துக்களுடனும் அனுப்பவில்லை. ஆகையால் காட்டிற்கனுப்புவதென்றால் தனம் முதலியவை யொன்றுமில்லாமல் துரத்துகையேயாகும். அப்படியே ராமனும் செல்ல வேண்டும்." என்றனள். அரசன் "சீ! பாபிஷ்டே!" என்று நிந்தித்து வாளாவிருந்தான்.

அச்சமயம் அரசனுடைய சிறந்த மந்திரிகளுள் ஒருவனான சித்தார்த்தனென்பவன் பேசத் தொடங்கி "கைகேயி! அசமஞ்சன் என்பவன் நகரத்திலுள்ள சிறு குழந்தைகளைத் தூக்கி சரயு நதியிலெறிந்து அவைகள் துன்பப்படுவதைக்

கண்டு நகைத்து விளையாடினமையால் அவனது தந்தையான சகரமஹாராஜன் அவனை வனத்திற்குத் துரத்தினன். அச்சமயம் அவனை அவன் மனைவியோடும் பரிவாரங்களோடும் வாகனத்தில் ஏற்றி, உயிருள்ளளவும் காட்டிலேயே வசிக்குமாறு கட்டளையிட்டனன். அவனைப்போல் காட்டிற்கு அனுப்பவேண்டும்படியான பாபம் ராமன் யாது செய்தனன்? ராமனிடம் எவ்விதமான துர்க்குணத்தையும் நாம் கண்டதில்லை. அப்படி உனக்கு அவனிடம் ஏதாவது தோஷம் புலப்படுமாயின் இப்பொழுது கூறு. உடனே அவனை அனுப்பிவிடலாம். தருமமே வடிவெடுத்த மகானுபாவனைக் காட்டிற்கனுப்புவது தருமத்திற்கு விரோதமாகும். உலகத்தில் உனக்கு இனி நேரப்போகிற கொடிய நிந்தனைக்காகிலும் பயந்து நீ உன் வரங்களை மாற்றிக்கொள்வதுநலம்." என்று கூறினன்.

இங்ஙனம் சித்தார்த்தனால் கூறப்பெற்ற கைகேயியை விளித்துத் தசரதன் "அடிபாவி! நான் இப்பொழுதே ராஜ்யத்தையும் சுகத்தையும் தனத்தையும் துறந்து ராமனைப் பின் தொடர்ந்து போகிறேன். நீயே ராஜாவாகிய பரதனோடு சுகபோகங்களை யநுபவித்துக்கொண்டிரு" என்றனன்.

முப்பத்தாறுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## முப்பத்தேழாவது ஸர்க்கம்

### ராமலக்ஷ்மணர்களும் சீதையும் கைகேயி தந்த மரவுரியை அணிதலும் வஸிஷ்ட முனிவர் கைகேயியை வசை கூறுதலும்.

இவற்றையெல்லாம் கேட்டுக்கொண்டிருந்த ராமன், தந்தையை நோக்கி "சக்கரவர்த்தியே! ராஜ்ய போகங்களை

யெல்லாம் துறந்த எனக்குச் சேனைகளினால் பிரயோஜனம் என்ன? நான் மரவுரிகளைத் தரித்துக் காய் கிழங்குகளையுண்டு காலங்கழிப்பேன்" என்று கூறிக்கொண்டிருக்கும்போதே கைகேயி சிறிதேனும் கூச்சமில்லாமல் மரவுரிகளைக்கொண்டு வந்து ராமனிடம் கொடுத்தனள். ராமலக்ஷ்மணர்கள் தாங்க ளணிந்திருந்த மெல்லிய பீதாம்பரங்களைக் களைந்து மரவுரி களை ரிஷிகள்போல் அணிந்துகொண்டார்கள். மகாபதிவிரதா சிரோமணியான ஜானகிக்கும் கூசாமல் மரவுரி கொடுக்கப் பட, அதை அவள் அணிந்துகொள்ள மனமில்லாமல் தவித் தாள். ராமன் தானே அவளுடைய பட்டு வஸ்திரத்தின் மேல் மரவுரியை அணிவித்தான்.

இங்ஙனம் அவன் செய்தபோது அங்கிருந்த ஸ்திரீக ளனைவரும் கண்ணீர்பெருக நின்று "ராமா! இது அடாத காரி யம். உன்னை மாத்திரமேயன்றோ உன் தந்தை வனம் போக உத்தரவிட்டது; ஆகையால் நீ திரும்பி வருமளவும் உன்னைப் பார்ப்பதுபோலவே இந்தச் சீதையை நாங்கள் பார்த்துக் கொண்டு மனந்தேறி யிருக்கும்படி நீ அருள்புரிய வேண்டும். நீ லக்ஷ்மணனை மாத்திரம் துணைவனாகக் கொண்டு வனம் செல்வாயாக. இவள் அதிக மங்கலஸ்வபாவமுடையவ ளாகையால் ரிஷிகளைப்போல் காட்டில் வசிக்கத் தகுந் தவளல்லள். நீ தருமத்தில் ஒழுகுபவனாகையால் உன்னை நிறுத்த முடியாது. சீதையை யாவது நிறுத்திவிட்டுப் போவாயாக" என்று கெஞ்சினர். கைகேயி இதை யநுமதிக் காமையால் ராமன் சீதைக்கு மரவுரியை யுடுத்தினன்.

இச்சமயம் குலகுருவான வஸிஷ்ட முனிவர் அங்குத் தோன்றிச் சீதையை மரவுரி தரிக்கவொட்டாமல் தடுத்து, கைகேயியை நோக்கிப் பலவிதமான இழிவுரைகளைப் பொழிந்

தனர். கடைசியில் அவளை நோக்கி சீதைக்கு மரவுரி கொடுக்கக் கூடாதென்றும் அவள் தினந்தோறும் அணிந்துகொண்டிருக்கும் ஆடையாபரணங்களுடனே ராமனைப் பின்பற்ற வேண்டுமென்றும் கூறினர். சீதைக்கோ மரவுரிகளை உடுத்துக் கொள்ளவேண்டுமென்கிற அபிப்பிராயமே மேலிட்டிருந்தது.

முப்பத்தேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## முப்பத்தெட்டாவது ஸர்க்கம்

## சீதை மரவுரியணிவதைத் தசரதன் மறுத்தலும், இராமன் கௌசல்யைக்குத் தேறுதல் செய்யுமாறு தந்தையை வேண்டுதலும்.

சீதாதேவி மரவுரியை உடுத்துக்கொண்டிருக்கையில் அங்குள்ள ஜனங்களெல்லாரும் அரசனை நிந்திக்கஆரம்பித்தார்கள். அரசனும் தாங்கமாட்டாத மன வருத்தத்துடன் "அடி கைகேயீ! மெல்லியற் செல்வியான சீதை மரவுரி தரிப்பது யுக்தமன்று; சீதையும் இங்ஙனம் மரவுரி உடுத்துக் கொண்டு காடு செல்லவேண்டுமென்று நான் உனக்குப் பிரதிக்கினை செய்யவில்லையே! ஆகையால் அவள் மரவுரி உடுப்பதை நீ எங்ஙனம் கண்கொண்டு பார்க்கிறாய்? நீ எப்படிப்பட்ட கல் நெஞ்சம் படைத்தவளோ? தருமந்தவறிச் சீதையை இப்பாடுபடுத்தி நரகம் புகவிரும்புகின்றனையே!" என்று கூறி, புத்திரனைப் பிரியப்போகிறோமே! என்கிற வருத்தத்தினால் அழுதுகொண்டு தரையில் வீழ்ந்தனன்.

இங்ஙனம் வீழ்ந்த தந்தையை நோக்கி ராமன் "தேவா! நான் வனம் போகிறேன். நீர் எனக்கொரு வரமருளல் வேண்டும்; முதிய வயது வாய்ந்த என தன்னை (கௌசல்யை)

என் பிரிவாற்றாமல் மிகவும் மனம் நொந்து ஒருகால் காலவச மடையக்கூடும் என்று எண்ணுகிறேன். அங்ஙனம் நோ வண்ணம் நீர் அவளைத் தேற்றி மிகுந்த ஆதரவுடன் பாது காத்தருள வேண்டும். இப்படிச் செய்தால் அவள் உம்மைப் பற்றியாவது பிழைத்திருப்பாள்" என்று வேண்டிக்கொண்டனன்.

முப்பத்தெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

முப்பத்தொன்பதாவது ஸர்க்கம்

## இராமன் காடு செல்ல ரதம் கொண்டு வரும்படி தசரதன் சுமந்திரனுக்கு நியமித்தலும், கௌசல்யை சீதைக்கு நீதிகள் கூறுதலும், ராமன் தாய்மார்கட்கு நல்வார்த்தை சொல்லுதலும்.

இராமன் முனிவேடம் பூண்டதைக் கண்ட மன்னவன் மனம் தாளாமல் மூர்ச்சித்தனன். இக்கொடிய நிலைமையிலும் அந்தோ! எனக்கு மரணம் நேரவில்லையே! என்றும், இப் பிறப்பிலும் முற்பிறப்பிலும் என்ன பாவங்கள் நான் பண்ணினேனோ! என்றும் பலவாறு கூறிப் புலம்பினன்.

பிறகு அவன் இட்ட கட்டளைப்படி சுமந்திரன் ஒரு ரதத்தைக்கொண்டு வந்து நிறுத்தினன். சீதையும் அரசனுடைய விருப்பத்திற்கிணங்க நல்ல ஆடையாபரணங்களுடன் விளங்கினள். அப்பொழுது மாமியாராகிய கௌசல்யை சீதையைக் கட்டியணைத்து அவள் தன் கணவனை ராமனிடம் இன்னவிதமாக ஒழுக வேண்டுமென்பதுபற்றிப் பல விதமான நீதிமொழிகளை உபதேசித்தாள். சீதை அங்ஙனமே நடந்துகொள்வதாகச் சொன்னதுமன்றி, இன்

னும் அதிகமான பதிவிரதா தருமங்களைக் கூறி, தான் எவ் விதத்திலும் கணவன் மனம் கோணாது நடந்துகொள்வதாகக் கூறினாள்.

பிறகு ராமன் கௌசல்யையைப் பலவிதமாகத் தேற்றி விட்டுத் தனது மற்றைத் தாய்மார்களிடத்திலும் சென்று வணங்கித் தான் அவர்கள் விஷயத்தில் ஏதாவது அபராதம் செய்திருந்தால் தன்னை மன்னித்துக்கொள்ளும்படி வேண்டிக் கொண்டான். ராஜபத்தினிகளனைவரும் மிகவும் வருத்த மடைந்து கூக்குரலிட்டுக் கதறியழுதனர். முன்பெல்லாம் வாத்திய கோஷங்கள் நிரம்பப்பெற்றிருந்த அந்த அரண்மனை யானது ஜனங்கள் மிக வருத்தத்தில் ஆழ்ந்து ராமகுணங் களைப் புகழ்ந்தும், கைகேயியை இகழ்ந்தும் சொல்லிக் கூக் குரலிட்டுக் கதறும் சப்தத்தினால் எங்கும் நிரம்பியிருந்தது.

முப்பத்தோன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நாற்பதாவது ஸர்க்கம்

### இராமன் வனம்போகப் புறப்படுதலும், அது கண்டு நகரவாசிகள் கதறுதலும்.

பிறகு ராமனும் சீதையும் லக்ஷ்மணனும் கைகளைக் குவித்துக்கொண்டு தசரதனைப் பிரதக்ஷிணம் செய்தனர். ராமன், சீதையும் லக்ஷ்மணனும் காட்டிற்குத் தன்னைப் பின் பற்றிவருதற்குத் தந்தையிடம் உத்தரவுபெற்றனன். பின் னும் கௌசல்யை முதலான ஸமஸ்தமான தாய்மார்களிட மும் விடை கொண்டனன்.

அச்சமயம் சுமித்திரா தேவி லக்ஷ்மணனை நோக்கி "குழந்தாய்! கௌசல்யை எப்படி உலகத்தைக் காப்பதற்காக

ராமனைப் பெற்றனளோ, அப்படியே நானும் உன்னை அவனுக்கு எப்பொழுதும் வழுவிலாவடிமை செய்வதற்காகவே பெற்றனன். ராமனே உனக்கும் மற்றுமுள்ளவர்களுக்கும் ரக்ஷகன். ஆகையால் தேகத்தை விடவேண்டியதாக நேர்ந்தாலும், தேகத்தையும் நீ உபேட்சித்து ராமனைவிட்டுப் பிரியாமல் அவனை நோக்கவேண்டும். மேலும் ராமனைத் தசரதனாகவும், சீதையை நானாகவும், வனத்தை அயோத்தியாகவும் பாவித்துச் சுகமாகப்போய் வருவாயாக." என்றனள்.

ஏற்கனவே சுமந்திரன் கொண்டுவந்து நிறுத்தியிருந்த தேரில் மூவரும் ஏறிக்கொண்டனர். அரசன் புத்திரர்களுக்கு அநேக ஆயுத கவசங்களையும், சீதைக்கு ஆடையாபரணங்களையும் கொடுத்தனன். நகரத்திலுள்ள ஸமஸ்தமான ஜனங்களும், அரசனும் அரண்மனை ஸ்திரீகளும் கண்ணீர் ஆறுகப்பெருக ராமனை விட்டுப் பிரிய மனமில்லாமல் பின்பற்றினர்.

பின் தொடர்ந்து செல்லும் பட்டணத்து ஜனங்கள் சுமந்திரனை விளித்துத் தேரை மெதுவாகவிடும்படி வேண்டினர். ராமனோ வேகமாகவிடும்படி உத்தரவிட்டனன். சுமந்திரனோ இரண்டையும் செய்யமுடியாதிருந்தான். சகல ஜனங்களும் அடக்கமுடியாத மனவருத்தத்துடன் கதறிக்கொண்டு "ஐயோ! இதென்ன கொடுமை!" என்று தவித்த வண்ணம் பிரக்ஞை தப்பிப்போயினர்.

இவற்றைக் கண்ட ராமன் "சுமந்திரா! இந்தக் கொடிய சம்பவத்தை இனி என்னால் காணமுடியாது; தேரை விரைவில் செலுத்துக." என்று கூறி அனைவர்க்கும் தேறுதல் கூறும்பொழுதே தேரும் வேகமாய்ச் சென்றது. ஜனங்கள் ராமனுக்குத் தெண்டனிட்டுத் திரும்பினர். ஆயினும் எவர்க்

கும் உடல்மாத்திரமே திரும்பினதேயன்றி அவர்களது மனம் திரும்பவில்லை.

மந்திரிகள் அரசனை நோக்கி 'ராமனைப் பின் தொடர்வது யுக்தமன்று' என்று தேற்ற, அவனும் அதன்படியே தன்மனைவிமார்களுடன் அவ்விடத்திலேயே தங்கி ராமனையே நோக்கிக்கொண்டிருந்தான்.

நாற்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நாற்பத்தோராவது ஸர்க்கம்.

## அந்தப்புரமாதர்களின் புலம்பலும் அவசகுனங்களும் பிரஜைகளின் துயரமும்.

நகரத்து மாந்தரனைவரும் கன்றைப் பிரிந்த பசுவைப் போல் ராமனைப்பிரிந்து, துக்கத்தினால் பீடிக்கப்பட்டவர்களாய்க் கூக்குரலிட்டனர். ஏற்கனவே புத்திர சோகத்தினால் பீடிக்கப்பட்ட மன்னவன் இப்பயங்கரமான அழுகுரலைக் கேட்டு மிகுந்த வருத்தக்கடலில் மூழ்கினன்.

ராமன் வனஞ்சென்ற வருத்தத்தினால் அனுதினமும் அழலோம்பும் அந்தணர்கள் அதனை விட்டொழிந்தனர். அனைவரும் தமது ஸமஸ்தமான காரியங்களையும் துறந்து ஒன்றும் தோன்றாமல் திகைத்திருந்தனர். சூரியன் உதிப்பதும் அஸ்தமிப்பதும் தெரியவில்லை. எவ்விதப்பிராணிகளும் ஆகாரம் கொள்ளவில்லை. நக்ஷத்திரங்களும் சந்திரனும் ஒளி மழுங்கப்பெற்றன. திசைகளெல்லாம் கலங்கி இருள் மூடப்பெற்றவைபோலாகிவிட்டன. காற்றும் குளிர்ந்து வீசவில்லை. உலகம் முழுதும் கலங்கி நலம் குலைந்திருந்தது. அனைவரும் ராமனையே சிந்தித்துக்கொண்டிருந்தனர்.

நாற்பத்தோராவது ஸர்க்கம் முற்றிற்று.

## நாற்பத்திரண்டாவது ஸர்க்கம்

### இராமன் காடு சென்றவாறே தசரதன் புலம்பல்.

தேகத்தில் வலிவுள்ளவர்கள் யாவரும் ஏற்கனவே ராமனைப் பின்பற்றிச் சென்றூர்களாகையால் பலஹீனர்களான ஜனங்கள்மாத்திரமே ராமனை விட்டகன்று பின் தங்கினர். அரசனே ராமனது தேர் ஓடுவதனுலுண்டாகும் தூளிகளையே மறையும்வரை பார்த்துக் கொண்டிருந்தான். பிறகு சரேலென்று கீழேவிழுந்து மூர்ச்சித்தனன். கௌசல்யை அவனது வலக்கையைப் பிடித்துக்கொண்டனள். சிறிதுநேரம் கழித்து புத்திஸ்வாதீனமடைந்த அரசன் அருகில் நின்றுகொண்டிருந்த கைகேயியை நோக்கி "அடிதூர்ப் புத்தியுடையவளே! நீ என்னைத் தொடவேண்டா; இனி உன்னை நான் கண்ணுல் காணவும் பொறேன். உனக்குமெனக்கும் இனி எவ்வித சம்பந்தமுமில்லை. பரதன் இந்த ராஜ்ஜியத்தைப் பெற்றுச் சந்தோஷிப்பானுகில், அவன், தந்தையான என்னை யுத்தேசித்துக்கொடுக்கிற ஜலதர்ப்பணுதிகள் என்னைச் சேராதிருக்குமாக." என்றனன்.

இன்னும் அவன் தர்மஸ்வபாவனுன ராமனை நினைத்து "ஐயோ! எனது செல்வக்குழந்தையின் தாமரை போன்ற மெல்லடிகள் கல்லும் முள்ளுமான காட்டுப் பாதைகளில் எப்படிப் பொருந்தும்? அந்தோ! ரத்தம் பீரிட்டு வருமே! மெத்தென்ற பஞ்சசயனத்தில் வீற்றிருந்த அவனது சரீரம், மரத்தின் கீழ்ப் பரப்பப்பெற்ற புல் படுக்கையில் எப்படிப் படுக்கும்? ஐயோ! சுகுமாரியான சீதை முட்கள் நிறைந்த பாதைகளில் எங்ஙனம் அடிவைப்பள்? அடி கைகேயி! உன் கருத்து முழுவதும் ஈடேறிற்று. இனி நான் கானகமே விரும்பிச் சென்ற ராமனுடைய பிரிவாற்ருமையால்

வானகமே மிக விரும்பிப் போகின்றேன். நீ விதவையாகி ராஜ்ஜிய பரிபாலனம் செய்வாயாக." என்று கூறிக்கொண்டே அயோத்தியையடைந்து தன் மாளிகையில் நுழைந்தனன்.

மன்னவன் மிகவும் மனவருத்தத்தினால் பீடிக்கப்பட்டிருந்தபடியால், தனக்குச் சிறிதாயினும் மனத்தேறுதல் உண்டாக்கத் தகுந்தவளான கௌசல்யையின் அந்தப்புரத்தில் நுழைந்து படுக்கையில் படுத்துக்கொண்டனன்.

அங்கு வந்த கௌசல்யையை நோக்கி "எனது பிரியே! எனது கண்கள் ராமனையே பின் தொடர்ந்து போயிருக்கின்றன; இன்னும் திரும்பிவரவில்லை. ஆகையால் இப்பொழுது உன்னைப் பார்க்க முடியவில்லை. நீ என்மேல் கோபம்வையாமல் உன் கையினால் என்னை நன்குதொட்டுத் தடவிக்கொடுப்பாயாக. அதனால் என் வருத்தம் சிறிது நீங்கும்." என்றனன்.

பிறகு கௌசல்யாதேவியும் அரசன் பக்கத்திலுட்கார்ந்து பெருமூச்செறிந்துகொண்டு மிக்க மனவருத்தத்துடன் தானும் புலம்ப வாரம்பித்தனள்.

நாற்பத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நாற்பத்துமூன்றவது ஸர்க்கம்.

## தசரதனருகில் கௌசலை புலம்புதல்.

கௌசல்யை தசரதனை நோக்கி—"பார்ப்பதற்குமாத்திரம் அழகாய் இருப்பவளும் மிகவும் கொடிய மனமுடையவளுமான கைகேயி, என் மனத்துக்கினிய ராமனைக் காட்டிற்குத் துரத்திவிட்டு இனிமேல் என்னைப் பயப்படுத்து

வாள். ராமனைக் காட்டிற்கு அனுப்புவதைவிட, அவனை அரசாளும் பரதனுக்கு அடிமையாகச் செய்து இங்கேயே இருந்திருக்கச் செய்தால் எவ்வளவோ மேன்மையாக இருக்குமே! அப்படிச் செய்யாமல் நீ அக்கொடிய துஷ்டையின் கடிய சொல்லைக்கேட்டு ராமனை வனத்திற்கனுப்பினை. சகல கல்யாணகுண பூர்ணனும் பராக்கிரமசாலியுமான ராமனைச் சீதையுடனும் தம்பிலக்ஷ்மணனுடனும் துரத்திவிடுவது உனக்கு நீதியோ? வனவாசகாலத்தில் அவர்கள் எவ்விதமான கஷ்டங்களையநுபவிக்க நேருமோ? ஹா! இதென்ன கொடுமை! பதினான்கு வருடங்கள் சென்று மறுபடி திரும்பி வரப்போகிற ராமனைக் காணும் பாக்கியம் எனக்குக் கிடைக்குமோ? இந்நகர ஜனங்கள் அவர்களைக் கண்டு மனமகிழும் காலம் நேருமோ? சக்கரவர்த்தியே! நான் பூர்வஜன்மத்தில் கொடிய பாபம் செய்தவளாவேன். குழந்தைகள் பாலுண்ண விரும்பும் சமயத்தில் அவற்றின் தாய்மார்களின் ஸ்தனங்களை நான் அறுத்துப் போட்டிருப்பேனென்பதில் சந்தேகமில்லை. ஐயோ! இப்பொழுது கைகேயி என்னைப் பிள்ளையில்லாதவளாகச் செய்துவிட்டனளே! புத்திரனின் பிரிவாற்றாமையென்னும் இப்பரிதாபாக்கினி என்னை எரிக்கின்றதே!" என்று பலபலகூறிப் புலம்பினாள்.

நாற்பத்துமூன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நாற்பத்துநான்காவது ஸர்க்கம்.

### கௌசலையைச் சுமித்திரை தேற்றுதல்.

அங்ஙனம் புலம்பிக்கொண்டிருந்த கௌசல்யையைச் சுமித்திரை தேற்றத்தொடங்கி "என்ன நோன்பு நோற்றாள் கொலோ! இவனைப் பெற்ற வயிறுடையாள்" என்று உலகத்

தவரால் புகழ்ப்பெற்ற பாக்கியமுடையவளே! தந்தையை உண்மையுரையாளனாகச் செய்வதற்கன்றோ ராமன் காடேகினன். ஆதலால் அவனைப்பற்றி நீ சிறிதும் வருந்தலாகாது. ராமனுக்கு வனவாசத்தினால் சிறந்த புகழன்றோ சித்திக்கப் போகிறது. அந்த ராமனுக்கு அடிமை செய்வதையே விரதமாகக்கொண்ட லக்ஷ்மணனும் உடன் சென்றனனாதலால், ராமனுக்கும் சீதைக்கும் யாதொரு கெடுதியும் நேராது. சீதை மகா பதிவிரதையாகையால் அவள் கணவனைவிட்டு நீங்காது பின் சென்றனள். ஆகையால் மூவரும் மூன்று விதமான தருமங்களை அனுட்டிக்கவே வனமேகினர். அவர்களுக்கு ஸமஸ்தமான மங்களங்களும் உண்டாகுமென்பதில் சிறிதும் சந்தேகமில்லை. சூரியன், சந்திரன், வாயு முதலானதேவர்கள் அவர்களுக்கு எப்பொழுதும் நன்மையே விளைவிப்பார்கள். இவ்விரு சகோதரர்களும் சாதுக்களுக்கு விரோதிகளான கொடிய அரக்கர்களை மாளச்செய்து சுகமே இவ்விடம் திரும்பிவரப் போகின்றனர். ஆகையால் நீ கவலையொழித்து அவர்களுடைய வருகையை ஆவலோடு எதிர்பார்த்திருப்பாயாக. நாமெல்லோரும் ராமனுடைய பட்டாபிஷேகத்தைப் பதினான்கு வருடங்கள் கழித்துக் கண்டு களிக்கப் போகின்றோம்" என்றனள்.

**நாற்பத்துநான்காவது ஸர்க்கம் முற்றிற்று.**

---

## நாற்பத்தைந்தாவது ஸர்க்கம்.

### விட்டு நீங்கமாட்டாத நகரத்து ஜனங்களுடன் ராமன் தமஸாநதிக்கரையில் தங்குதல்.

ராமனது நண்பர்களும், அந்தப்புர ஸ்திரீகளும் அரசனும் ராமனுடைய நிர்ப்பந்தத்தினால் அவனைவிட்டுத்

திரும்பினார்களையன்றி மற்ற நகரத்து ஜனங்கள்மாத்திரம் ராமன் எவ்வளவு சொல்லியும் திரும்பாமலே அவனைப் பின் தொடர்ந்தனர். அவர்கள் ராமனைப் பட்டணத்துக்குத் திரும்பிவரும்படி எவ்வளவு வேண்டிக்கொண்டபோதிலும் அவன் தன் விரதத்தினின்றும் சிறிதும் வழுவாமல் அவர்கள் சொல்லைச் செவிப்படுத்தவில்லை. அவர்களும் பின்சென்று கொண்டேயிருந்தார்கள்.

அச்சமயம் தமஸாநதியானது வழியில் குறுக்கிட, ராமன் தேரைவிட்டிழிந்து குதிரைகளுக்கு நீர்காட்டி அவற்றைச் சிறிதுநேரம் களைதீர்வதற்காக அந்நதிக்கரையில் மேயும்படி விட்டனன்.

நாற்பத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நாற்பத்தாறவது ஸர்க்கம்.

## உடன் தொடர்ந்து வந்த நகரத்து ஜனங்களை ராமன் வஞ்சனையினால் விட்டு நீங்குதல்.

அச்சமயம் சூரியன் மேல்திசையில் மறைந்தான். இருள் எங்கும் சூழ்ந்தது. அனைவரும் படுத்துறங்க ஆரம்பித்தனர். ராமன் அந்தப்புண்ணிய க்ஷேத்திரமான தமஸா நதிக்கரையில் உபவாசம் இருக்கக்கருதித் தண்ணீர் மாத்திரமே உட்கொண்டனன். பின்னும் அவன் சாரதியான சுமந்திரனாலும் லக்ஷ்மணனாலும் நிருமிக்கப்பட்ட இலைப் படுக்கையில் சீதையுடன் படுத்துக்கொண்டனன். நடுநிசியில் ராமன் விழித்தெழுந்து லக்ஷ்மணனை நோக்கி "தம்பி! நம்மிடம் மிகவும் அன்பு பூண்டிருக்கும் நமது பட்டணத்து ஜனங்கள் இப்பொழுது நிச்சப்தமான இப்பிரதேசத்தில் உறங்கிக்கொண்டிருக்கிறார்கள். இவர்கள் விழித்துக்கொண்

டால் நம்மைவிட்டு அகலாமல் பின் தொடர்வது திண்ணம். ஆகையால் இப்பொழுதே நாம் தேரேறி இவர்களறியாமல் வனத்திற்குச் சென்றுவிடுவோம்.'' என்றனன்.

லக்ஷ்மணனும் ராமனது வார்த்தைக்கிசைந்து சுமந்திரனைத் தேர் கொண்டுவரச்செய்து மூவரும் அதில் சீக்கிரம் ஏறிக்கொண்டதும் சாரதி தேரைச் செலுத்தினன். வெகு சீக்கிரத்தில் தமஸாநதியைத் தாண்டிச் சென்றனர். முள் கல்லில்லாத நல்ல பெரியவழியைப் பிடித்தபின் ராமன் சுமந்திரனை விளித்து "சாரதியே! நீ ஒருவன் மாத்திரம் தேரை ஓட்டிக்கொண்டு வடதிசைப் புறம்பற்றிச் செல்வாயாக. அப்பொழுது பட்டணத்து ஜனங்கள் நான் அயோத்திக்கே போனேனென்று நினைத்துக்கொள்வார்கள். சிறிது நேரம் அங்ஙனம் வேகமாகச் சென்று மீளவும் தேரைத் திருப்பி வேறு வழியாகக் கொண்டு வருவாயாக. நான் காடு செல்வது நகரமாந்தர்க்குத் தெரியாதிருக்கும்படி நீ இதை ஜாக்கிரதையாகச் செய்யவேண்டும்.'' என்றனன்.

சுமந்திரனும் அவ்விதமே செய்து வேறு வழியாகத் திரும்பிவந்து ராமனுக்குத் தேரை ஒப்புவித்தனன். பிறகு மூவரும் அதில் ஏறிக்கொள்ள, சாரதி தபோவனத்திற்குப் போகும் வழியைப்பிடித்துத் தேரைச் செலுத்தினன்.

**நாற்பத்தாறுவது ஸர்க்கம் முற்றிற்று.**

---

### நாற்பத்தேழாவது ஸர்க்கம்.

## இராமனால் வஞ்சிக்கப்பட்ட நகரத்து ஜனங்கள் அயோத்திக்குத் திரும்பி வருந்துதல்.

பிறகு சூரியன் உதயமானவுடன் பட்டணத்து ஜனங்கள் ராமனைக்காணாமல் திகைத்துப் பலவிதமாகப் புலம்பினர்.

தாங்கள் கொடிய நித்திரை செய்தபடியால் ராமனை இழக்க நேர்ந்ததென்று தங்களையே நொந்து கொண்டனர். ராமனைச் சிறிதுகாலமும் விட்டகலாது வாழ்ந்தவர்களான அவர்கள் அவனுடைய பிரிவாற்றுமையால் உயிர்விடவும் துணிந்தனர். கடைசியில் அவர்களனைவரும் புலம்பிக்கொண்டே ராமனது தேர் சென்ற வழியில் இருக்கவேண்டிய அடையாளங்களைக் காண முயன்றனர். அதுவும் அவர்களுக்குக் காணக்கிடைக்க வில்லை. கன்றுகளைவிட்டுப்பிரிந்த பசுக்களைப்போல் கைகளை உயர எழுப்பிக்கொண்டு துக்கத்தினுல் நெஞ்சடைத்துப் புலம்பிக்கொண்டே அயோத்திக்குத் திரும்பினர். அந்நக ரானது ராமன் இல்லாமையால் சூன்யமாகிச் சந்திரனில்லாத வானம்போலவும், ஜலமில்லாத ஸமுத்திரம் போலவும் பரிதாபகரமாகக் காணப்பட்டது.

நாற்பத்தேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நாற்பத்தெட்டாவது ஸர்க்கம்.

## அயோத்தியில் ஜனங்களின் மிக்க குழப்பம்.

நகரத்திற்குத் திரும்பின ஜனங்கள் அடக்கமுடியாத மன வருத்தத்தினுல் பீடிக்கப்பட்டு ஸந்தோஷமென்பதே சிறிதுமில்லாமலிருந்தனர். தொலைந்துபோன விலையுயர்ந்த ரத்தினங்கள் திரும்பக் கிடைத்தாலும், எப்பொழுதும் தாம் பெற்று அனுபவியாத சிறந்த பதார்த்தங்கள் கிடைக்கப் பெற்றாலும் அவர்கள் சந்தோஷப்படவே இல்லை. வீட்டிலிருக்கும் ஸ்திரீகள் திரும்பிவந்த தங்கள் தங்கள் கணவன்மார்களைநோக்கி "ராமனை விட்டுப்பிரிந்த உங்களுக்கு வீடுகளும் செல்வமும் மனைவி மக்களும் எதற்காக? ராமன் வசிக்குமிடத்திலுள்ள குளங்களும் மலைகளும் மரங்களும்

மிகவும் புண்ணியம் செய்தவைகளாகும். அந்தக் காட்டிற்கே புறப்படுங்கள். நாமனைவரும் ராமனைப் பின்பற்றிச் செல்வோம். தாமதித்தால் அவன் மேன்மேலும் வெகுதூரம் சென்றுவிடுவான். காட்டில் ராமன் நமது யோக க்ஷேமங்களை நிறைவேற்ற வல்லவன். சீதையும் இந்த ஸ்திரீ ஜனங்களுக்கு வேண்டிய யோக க்ஷேமங்களைக் குறையற நடத்துவாள். தசரதன் எப்படியும் ராமனுடைய பிரிவினால் உயிரிழக்கப் போகிறான். பிறகு எல்லாவற்றிற்கும் நாசம் விளையப் போகிறது. ஆகையால் நாம் இப்பொழுது ராமனைப் பின்பற்றி யாவது செல்லவேண்டும்; இல்லையாயின் விஷத்தையாவது உண்டு உயிர் நீத்தல் வேண்டும். அதுவுமில்லையேல் ஒருவர் பேரும் செவியில் படக்கூடாத தூரதேசத்திற்காவது போகவேண்டும். பசுக்களைக் கொலைசெய்பவனிடம் ஒப்பு விப்பதுபோல் அரசன் நம்மையும் பரதனிடம் ஒப்புவித் தான். ஆயினும் நாமனைவரும் புருஷ சிரேஷ்டனை ராமனைப் பின்பற்றிச் செல்வோமானால் சுகித்திருக்கலாம். அவனுடைய அடிகள் ஸ்பர்சிக்கப்பெற்ற காடுகளே நமக்குப் புகலிடம்; ஆகவே கானகமே சென்று சேர்வோம்" என்றனர்.

இங்ஙனம் ராமனை நினைத்து ஜனங்கள் கூக்குரலிட்டழும்போது சூரியனும் அஸ்தமித்தான். அந்நகரத்தில் நெருப்பு பிரகாசியாமலும் இருள் மூடியும் கடைகள் பரப்பப் படாமலும் திக்கே தெரியாமலும் இருந்தது. இன்னும் ஆட்டங்களும் பாட்டுக்களும் உத்ஸவங்களும் வாத்திய கோஷங்களும் நின்றுபோயின. பலசொல்லி என்? அந்நகரம் ஜலம் வற்றிய மகா சமுத்திரம்போல் பாழாயிருந்தது.

**நாற்பத்தெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.**

## நாற்பத்தோன்பதாவது ஸர்க்கம்.

## இராமன் கோசல நாட்டைவிட்டு அகலுதல்.

பொழுது விடிவதற்குள் ராமன் உறங்கும் ஜனங்களை விட்டு வெகுதூரம் சென்றனன். இடையில் அநேக கிராமங்களையும் பட்டணங்களையும் சேரிகளையும் அவற்றின் இயற்கை வனப்புகளுடன் கண்டுகளித்து அவைகளைத் தாண்டிச் சென்றனன். அந்த விடங்களிலிருந்த மாந்தர் ராமனைக்கண்டு செய்தியறிந்து துக்கித்துத் தசரதனையும் கைகேயியையும் பலவாறு நிந்தித்தனர். அவர்கள் சொல்லும் வார்த்தைகளைக் கேட்டுக்கொண்டே ராமன் கோசல நாட்டைக் கடந்துசென்று வேதச்ருதி யென்னும் நதியையும் கோமதி யென்னும் நதியையும் தாண்டிச் சென்றனன். பிறகு ஸ்யந்திகை யென்னும் நதியையும் கடந்தனன். பிறகு சாரதியான சுமந்திரனை நோக்கி "சாரதியே! இனி எப்பொழுது நான் திரும்பி வந்து என் தாய்தந்தையர்களோடு கூடிப் புஷ்பித்திருக்கின்ற மரங்கள் மலிந்த சரயூ நதிக் கரையிலுள்ள காடுகளில் வேட்டையாடி விளையாடப் போகிறேன்!" என்று பரிதாபந் தோற்றக் கூறினன். இங்ஙனம் சாரதியுடன் பல வார்த்தைகளைச் சொல்லிக் கொண்டே வெகுதூரம் வழியைக் கடந்து சென்றனன்.

நாற்பத்தோன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## ஐம்பதாவது ஸர்க்கம்.

## இராமன் குகனோடு சந்தித்தல்.

ராமன் இவ்விதம் கோசல தேசத்தை யெல்லாம் கடந்த பின் அயோத்திநகர் பக்கமாகத் திரும்பிக் கைகுவித்து அத

னிடம் விடைகொள்வதுபோல் சிலவார்த்தைகளை மொழிந்தனன். பிறகு அனேக பட்டணங்களையும் கிராமங்களையும் தாண்டி சிருங்கிபேர புரத்திற்குப்போய் அதற்குச் சமீபத்திலிருக்கிற கங்காநதியை அடைந்தனன். அந்நதிக்கரையில் புஷ்பங்களுடன் கூடி விளங்கின ஓர் இங்குணமரத்தின்கீழ்த் தேரை நிறுத்திக் கீழே இறங்கினன்.

அச்சமயம் அத்தேசத்திற்கதிபதியான குகனென்னும் வேடர்தலைவன் மிகுந்த பயபக்தியுடன் ராமனையணுகிக் கைகுவித்தவண்ணம் ராமனை வணங்கினன். அன்றியும், மேலான பலவித ஆகாரங்களையும் கைகால் கழுவத் தண்ணீரும் கொண்டு வந்து கொடுத்து உபசரிக்க விரும்பினன்.

ராமன் மிகுந்த பிரீதியுடன் அவனை நோக்கித் தான் தர்ப்பைகளையும் மரவுரிகளையும் தரித்துக் காய் கிழங்குகளையும் பழங்களையும் உண்பதாகக்கொண்ட விரதத்தை அவனுக்குக் கூறி, குதிரைகளுக்கு மாத்திரம் தேவையான பசும்புற்களையே கொண்டுவரும்படி சொல்லினன்.

சாயங்காலமானதால் ராமன் கங்கையிலிழிந்து சந்தியாவந்தனதிகளைச் செய்து கங்கா ஜலத்தையே ஆகாரமாக உட்கொண்டு, மனைவியுடன்கூடத் தரையில் படுத்துக்கொள்ள, லக்ஷ்மணன் அவ்விடம்விட்டகன்று கையில் வில்லைப்பிடித்தவண்ணம் இராமனைப் பாதுகாக்கும் பொருட்டு இரவு முழுதும் கண்விழித்துக்கொண்டே யிருந்தனன்.

ஐம்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

## ஐம்பத்தோராவது ஸர்க்கம்

### சீதையும் ராமனும் தரைக்கிடை கிடப்பதுபற்றி லக்ஷ்மணன் குகனோடு பரிதபித்துக் கூறல்.

இப்படி லக்ஷ்மணன் ராமனைக் காக்கும் பொருட்டு உறக்கமின்றி விழித்துக்கொண்டிருப்பதைக் கண்ட குகன் மன வருத்தத்துடன் லக்ஷ்மணனை நோக்கி "அப்பா! ராஜகுமார! சுகுமாரனும் சுகத்தையே யநுபவிக்கத் தகுந்தவனுமான நீ இங்ஙனம் கண்விழித்திருக்கலாகாது. இதோ இந்த இனிய படுக்கையில் துயில்கொள்வாயாக. இராமனையும் உன்னையும் என்னுடைய வேலையாட்களும் நானும் பாதுகாக்கிறோம். இங்குள்ள பயஸ்தானங்களெல்லாம் எனக்கு நன்கு தெரியுமாதலால் நான் வில்லைத் தரித்து எல்லாத் திசைகளிலும் கண்ணோட்டம் வைத்துப் பாதுகாத்து வருவேன்." என்றனன்.

இங்ஙனம் கூறின குகனைநோக்கி லக்ஷ்மணன் "வேடர் தலைவனே! நீயும் உன்பரிவாரங்களும் இருக்கும்போது ஒருவர்க்கும் இவ்விடத்தில் அச்சமில்லை யென்பது உண்மையே; ஆனால் நான் உறங்காமலிருப்பதற்குக் காரணமென்னெனில், இராமனும் சீதையும் இதுவரை எப்பொழுதும் படுத்தறியாத புற்படுக்கையில் சயனிக்கும்போது எனக்கெப்படித் தூக்கம் வரும்? இராமனை விட்டுத் தனித்திருக்கும் தசரதன் இனி உயிரோடிருக்கப் போகிறதில்லை. அங்ஙனமானபின்பு கௌசல்யையும் என் தாயான சுமித்திரையும் பிழைத்திருப்பார்களென்று எனக்குத் தோன்றவில்லை. இந்தப் பூமியும் விரைவில் கணவனை யிழந்த விதவையைப் போலாகப்போகிறது. இந்தத்துக்கமே என்னால் பொறுக்க முடியவில்லை. மரணமடையும் தந்தைக்கு உத்தரக்கிரியை

கள் செய்யும் ராஜகுமாரர்களே பாக்கியசாலிகள். நாங்கள் அப்படிப்பட்ட பாக்கியசாலிகளல்லோம். ஐயோ! நாங்கள் வனவாசம் கழித்து அயோத்திக்குத் திரும்புமளவும் அரசர் பிழைத்திருப்பாரா? நாங்கள் மிகுந்த சந்தோஷத்துடன் அவரைக்காணும் காலம் வருமா?" என்று பலவாறாகப் புலம்பி விழித்துக்கொண்டிருக்கையிலே இரவுகடந்து சென்றது. அப்போது குகனும் கண்ணீர்பெருக்கின வண்ணமாகவே யிருந்தனன்.

ஐம்பத்தோராவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## ஐம்பத்திரண்டாவது ஸர்க்கம்

## ராமலக்ஷ்மண சீதைகள் படகிலேறிக் கங்கையைக் கடந்து செல்லுதல்.

சூர்யோதயமானவுடன் ராமன் லக்ஷ்மணனை நோக்கிக் கங்கையைத் தாண்டுவதற்குரிய சாதனத்தைத் தேடும்படி கட்டளையிட்டனன். லக்ஷ்மணன் குகனை நோக்க, அவனும் தன் மந்திரிமார்களை விளித்து ஓர் கெட்டியான ஓடத்தையும் தள்ளுகோல் முதலிய கருவிகளையும் கொண்டு வரும்படி கட்டளையிட்டான். அவ்வண்ணமே அழகிய ஓடம் சித்தமாகி வந்து நின்றது. சீதையின் ஆபரணங்களும், மண்வெட்டி புட்டிற்கூடை முதலியவைகளும் முதலில் அதில் ஏற்றப்பட்டன. ராமலக்ஷ்மணர்கள் கவசங்களையும் அம்பறாத்தூணிகளையும் கத்திகளையும் விற்களையும் கையில் ஏந்திக்கொண்டு சீதையுடன்கூடி ஓடத்திலேற எழுந்தனர்.

ராமன் சுமந்திரனை நோக்கி "நண்பனே! இனி நீ அரசனிடம் செல்லலாம்; நான் கால்நடையாகவே காட்டிற்குச் செல்கிறேன். அரசன் வயதுசென்றவன். என்னுடைய

பிரிவாற்றாமையால் மிகவும் வருந்திக்கொண்டிருப்பான். நீ உடனே சென்று அவனையும் என் தாய்மார்களையும் தேற்று வாயாக. பதினான்கு வருடங்கள் சென்றதும் நாங்கள் சுக மாகத் திரும்பிவந்து சேருவோமென்று அரசனிடம் சொல் லுக. என் அன்னைக்கு என்னுடைய நமஸ்காரத்தை ஸமர்ப் பிப்பாயாக. அரசன் பரதனுக்கு மகுடம் சூட்டி மகிழ வேண்டியதென்றும் அப்படிச் செய்தால் நாங்கள் காடுசென்ற துக்கம் அவரைப் பாதிக்காதென்றும் கூறுவாயாக. பரதன் அரசனிடத்திற்போலவே தாய்மார்களெல்லாரிடத்திலும் நடந்து கொள்ளும்படிக்கும், என் தாயான கௌசல்யையை யும் கைகேயியோடொப்பவே ஆதரிக்கும்படிக்கும் நான் சொன்னதாகச் சொல்வாயாக" என்றனன்.

இங்ஙனம் கூறின ராமனை நோக்கிச் சுமந்திரன் "அஹோ! ராமா! நான் உன்னுடைய உயிர்த்தோழன். நான் உன்னைவிட்டு எப்படி அயோத்தி செல்வேன்? உன்னைப் பின்தொடர்ந்து வந்த நகர ஜனங்களை வஞ்சித்து வந்து விட்டனை. நாங்களனைவரும் பாபிஷ்டையான கைகேயியின் கையில் அகப்பட்டுக்கொண்டு கஷ்டமனுபவிக்கப்போகி றோம். தவிர, நகரத்திலுள்ள ஜனங்களும் பசு பக்ஷியாதி களும் அப்பொழுது உன்னோடுகூடிய இந்த ரதத்தைப்பார்த்த கண்களால் இப்பொழுது சூன்யமான தேரை எங்ஙனம் காணும்? ராமராமா! நான் உன்னைவிட்டு அயோத்திக்கு மீண்டு செல்ல விரும்பவில்லை. நானும் உன்னைத் தொடர்ந்து வரு மாறு உத்தரவு கொடுக்க வேண்டும். நான் உனக்குச் சகலவித மான பணிவிடைகளையும் செய்வேன். பாபிஷ்டனாயிருப்ப வன் தேவலோகத்துக்குப் போக முடியாததுபோல நான் உன்னைவிட்டுப் பிரிந்து அயோத்தி செல்ல முடியாதவன்.

வனவாசம் தீர்ந்தபின் இந்தத் தேரிலேயே உன்னைக்கொண்டு போக விரும்புகிறேன்." என்றனன்.

இவ்விதம் கூறின சுமந்திரனை நோக்கி ராமன் "நண்ப! நீ என்னிடத்தில் மிகுந்த பக்திபுடையவனென்பது எனக்குத் தெரியும். ஆயினும் உன்னை இப்பொழுது நகரத்திற்கு அனுப்பும் காரணம் கூறுகிறேன் கேள். நீ அயோத்திக்குச் சென்றவுடனே கைகேயிக்கு 'ராமன் காட்டிற்குச் சென்றான்' என்ற நம்பிக்கை உண்டாகும். நான் வனம் சென்ற விஷயத்தை உன் மூலமாக வறிந்தபின்பே அவள் களிப்படைந்து தசரதனுடைய சத்ய வாக்கில் சந்தேகப்படாதிருப்பாள். ஆகையால் மீண்டு நகரம் சென்று நான் கூறின விஷயங்களை ஏற்றக் குறைச்சலின்றி அவரவர்களுக்குச் சொல்வாயாக." என்றனன்.

பிறகு ராமன் குகனை நோக்கி "தோழனே! இனி நான் சடை புனைந்து ரிஷிவேடம் பூண்டு விரதங்களைச் செய்யும் வண்ணம் தனியான ஆச்சிரமங்களில் வசிக்க வேண்டும். இப்பொழுது சடை திரிக்கும் பொருட்டு ஆலம்பால் கொண்டுவா" என்றனன். குகனும் அங்ஙனமே கொண்டுவர ராம லக்ஷ்மணர் இருவரும் சடைகளைத் தரித்தனர். அப்பொழுது மரவுரி உடுத்துச் சடாபாரமும் தரித்த அந்த சகோதரர்கள் இருவரும் ரிஷிகளைப்போல் விளங்கினார்கள்.

ராமன் குகனிடம் விடைபெற்றுக்கொண்டு சீதையுட னும் லக்ஷ்மணனுடனும் படகில் ஏறினன். குகனுடைய கட்டளைப்படி அவனுடைய ஆட்கள் ஓடத்தை மறுகரைக்கு ஓட்டுகையில் ராமனும் சீதையும் லக்ஷ்மணனும் மகா பரிசுத்தமான கங்கா நதியை மனப்பூர்வமாக நமஸ்கரித்தார்கள்.

சுமந்திரனும் குகனும் இக்கரையிற்றனே ராமனைப் பார்த்துக் கொண்டு நிற்க, ராமாதிகள் வெகு சீக்கிரத்தில் கங்கையின் தென்கரைக்குப் போய்ச்சேர்ந்து ஓடத்தை விட்டிழிந்து கால் நடையாகவே நடந்து சென்றனர்.

அப்படி நடந்துசெல்லும்போது முன்னே லக்ஷ்மண னும் நடுவில் சீதையும் பின்னே ராமனுமாகச் சென்றனர். இவ்விதம் அவர்கள் வழி நடந்துபோய் வத்ஸதேசத்தை யடைந்தனர். அவ்விடம் அவர்கள் பசியடங்க ஆகாரங் களைத் திரட்டிக்கொண்டு ஓர் மரத்தினடியில் வந்து சேர்ந் தனர்.

ஐம்பத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று

---

## ஐம்பத்துமூன்றாவது ஸர்க்கம்.

### ராமன் லக்ஷ்மணனை அயோத்திக்குத் திரும்பிச் செல்லுமாறு கூறுதலும், அதற்கு அவன் உடன்படாமையும்.

அன்றிரவை அம்மரத்தின்கீழேயே கழித்தார்கள். புற்களாலும் தழைகளாலும் ஆக்கப்பட்ட ஓர் படுக்கையில் ராமன் சீதையுடன் படுத்துக்கொண்டு லக்ஷ்மணனைப் பார்த்து "தம்பி! இப்பொழுது நமது தந்தை மிகவும் மன வருத்தத்தினால் பிடிக்கப்பட்டுத் தம் பிராணன் தடுமாறும் நிலையிலிருப்பார். அவரோ கிழவர். காமத்திற்குப் பரவசப் பட்டவராகிக் கைகேயி வலையில் அகப்பட்டுக்கொண்டு இன் னும் எவ்வெவ்விதமாக என்னென்ன நடத்தப் போகிறாரோ? பரதன் ஒருவனே தேசம் முழுவதையும் மனைவியுடன் கூடிச் சந்தோஷமாக ஆளப்போகிறான். அவனும் தந்தையைப் போல் காமத்தைமாத்திரம் அனுசரித்தால் அவனுக்கும்

தந்தைக்குப் போலவே கஷ்டம் நேரிடும். ஐயோ! லக்ஷ்மணா! அரசன் முடிந்துபோவதற்கும், நான் காடு செல்வதற்கும், பரதனுக்கு ராஜ்ஜியம் வருவதற்குமே கைகேயி நம் வீட்டில் புகுந்தாளென்று தோன்றுகிறது. அந்தக் கைகேயி இப்பொழுது தனக்குக்கிடைத்த சௌபாக்கியத்தால் கௌசல்யையையும் சுமித்திரையையும் துன்புறுத்தப்போகிறாள். ஆகையால் நீ இப்பொழுதே அயோத்திக்குச் சென்று நம் தாய்மார்களை நலியாதிருக்குமாறு பரதனிடம் கூறுவாயாக. நான் ஒருவனே சீதையுடன் காடுசெல்கிறேன். கௌசல்யை பூர்வ ஜன்மத்தில் யாரோ சில ஸ்திரீகளைத் தமது பிள்ளைகளுடன் சேரவொட்டாமல் பிரித்துவிட்டிருப்பாள்; ஆனது பற்றியே இப்பொழுது அவள் என்னைப் பிரிய நேர்ந்தது. கௌசல்யை என்னைப் பத்துமாதம் சுமந்துபெற்று அருமையாகச் சீராட்டித் தாலாட்டிப் பாலூட்டி வளர்த்தாள். நானோ பணிவிடைகள் முதலிய பிரயோஜனத்தைப் பெறுவிக்க வேண்டிய சமயத்திலே அவளைவிட்டுப் பிரிந்துவந்தேன். லக்ஷ்மணா! என் பிழைப்பும் ஒரு பிழைப்போ? நான் என் அன்னையைப் பரிதபிக்கவிட்டு வந்தேனே! நான் கோபங்கொள்ளில் இந்த அயோத்தியையேயல்ல; இப்பூமண்டலமுழுவதையும் என் அம்புகளால் சுவாதீனப் படுத்திக்கொள்வேன். ஆயினும் காரணமில்லாமல் இக் காரியத்தைச் செய்வது தகுதியல்லவென்று தணிகின்றேன். மேலும் அதர்மத்தைக் கைப்பிடித்தால் லோகாபவாதமும் பரலோகத்தில் கெடுதியும் நேரிடுமென்ற அச்சத்தினால் நான் அபிஷேகஞ் செய்துகொள்ளா தொழிந்தேன்" என்று கூறினன்.

இங்ஙனம் கூறின ராமனை நோக்கி லக்ஷ்மணன் "ராமா, உன்னைப்போன்றவன் இப்படிப் பரிதபிப்பது யுக்தமன்று!

என்னை அயோத்தி நகர்க்குத் திரும்பிப்போகச் சொல்லுகி றாய்; இதனால் எனக்கும் சீதைக்கும் மிக்க மனவருத்தத்தை விளைவிக்கின்றனை. சீதையும் நானும் ஒரு நொடிப் பொழு தும் உன்னைப் பிரிந்து உயிர்த்திருக்க மாட்டோம்." என்ற னன்.

ராமன் லக்ஷ்மணனுடைய நீதி மிக்க வார்த்தைகளைக் கேட்டு மிகவும் சந்தோஷித்துப் பதினன்கு வருடங்கள் அவனும் தன்னோடுகூடவே வனவாசம் செய்யும்படி மனத் திடங்கொண்டனன். பிறகு அம்மூவரும் அச்சமின்றி மலைச் சாரல்களில் திரியும் சிங்கங்கள்போல் எங்கும் இனிது உலா விக்கொண்டிருந்தனர்.

ஐம்பத்துமூன்ருவது ஸர்க்கம் முற்றிற்று

---

## ஐம்பத்துநான்காவது ஸர்க்கம்

### பிரயாக க்ஷேத்திரத்தில் பரத்துவாசாச்ரமம் சேர்ந்து அம்முனிவரிடத்தில் சித்திரகூட மலையைப்பற்றி இராமன் தெரிந்து கொள்ளுதல்.

மூவரும் இரவு முழுவதும் அந்தப் பெரிய மரத்தின் கீழே இருந்து பொழுது புலர்ந்தவுடன் புறப்பட்டுப் பெரிய காட்டுப் பிரதேசங்களில் புகுந்து சென்று, யமுனையும் கங்கை யும் கூடுமிடமான பிரயாகையென்னும் புண்ணிய க்ஷேத் திரத்திலுள்ள பரத்துவாச முனிவருடைய பர்ணசாலையை அடைந்தனர். மகா தபஸ்வியான அம்முனிவர், அச்சமயம் சாயங்காலமானபடியால் ஹோமாதிகளைச் செய்துமுடித்துத் தன் சீடர்களுடன் வெளியே வந்தனர். ராமன் கைகளைக் குவித்தவண்ணம் சீதையோடும் லக்ஷ்மணனோடும் அவரை

வணங்கித் தான் வனவாசம் செய்ய நேர்ந்த காரணத்தைக் கூறினன்.

முனிவரும் அவனுக்குக் கைகால்களைச் சுத்தம் செய்ய தீர்த்தமும் அநேகவிதமான கனிகளும் கொடுத்து நன்கு உபசரித்து "ராமா! பிரயாகை யென்கிற இந்தப் புண்ணிய க்ஷேத்திரத்தில் நீ சுகமாக வசிப்பாயாக." என்றனர்.

ராமன் முனிவரை நோக்கி "தபோ நிதியே! இப்பிரதேசம் பட்டணத்து ஜனங்களுக்கும் கிராமத்து ஜனங்களுக்கும் சமீபமாய் இருக்கிறபடியால் அவர்கள் என்னைப் பார்க்க அடிக்கடி இங்கு வரக்கூடும்; ஒருவர்க்கும் தெரியக்கூடாத ஓர் தனிமையான இடத்தில் நான் வசிக்க விரும்புகிறேன். அத்தகைய பிரதேசத்தை ஆலோசித்து எனக்குச் சொல்ல வேண்டும்" என்றனன்.

பரத்துவாசர் "ராமா! சிறிது தூரத்தில் சித்திரகூட மென்னும் பருவதம் இருக்கிறது. அது மிகவும் ரமணியமாயிருக்கும். அவ்விடத்தில் சுகமாய் வசிக்கலாம்" என்றனர்.

இங்ஙனம் அவர்கூறி விருந்தினர்க்குச் செய்யவேண்டிய ஸத்காரங்களை அடைவுபட நடத்தி உபசரித்தனர். அவர்களும் அவ்வாச்சிரமத்தில் அன்றிரவைக் கழித்து மறுநாள் பொழுதுவிடிந்ததும் முனிவரிடம் விடைபெற்றுக்கொண்டு சித்திரகூட பருவதத்தை நோக்கி நடக்கலாயினர்.

**ஐம்பத்து நான்காவது ஸர்க்கம் முற்றிற்று.**

## ஐம்பத்தைந்தாவது ஸர்க்கம்

### ராமன் பரத்துவாச முனிவரது மங்களாசாஸனங்களைப் பெற்றுக்கொண்டு சித்திரகூடம் நோக்கிப் புறப்பட்டுப் போதல்.

அப்படிச் செல்லும் ராமாதிகளைப் பரத்துவாச முனிவரும் பின்தொடர்ந்து "சகோதரர்களே! நீங்கள் கங்கையிலிருந்து கொஞ்சம் மேற்கு முகமாகப் பாய்கின்ற யமுனையையநுசரித்துச் செல்வீர்களாக. அந்த யமுனையில் ஜனங்கள் எப்பொழுதும் தாண்டிப்போகும் துறைக்குப்போய் தெப்பம் கட்டிக்கொண்டு அந்நதியைக் கடக்கவேண்டும். பிறகு அந்நதியின் அக்கரையில் பசுமையான இலைகளையுடையதும், தன்னைச் சுற்றிப் பலமரங்களையுடையதும், சித்தர்கள் வந்திருக்கப்பெற்றதுமான 'சியாமம்' என்னும் ஓர்பெரிய ஆலமரம் இருக்கிறது. சீதை அதனை வணங்கித் தன் விருப்பங்கள் ஈடேறும்படி பிரார்த்திக்கவேண்டும். பிறகு அங்குச் சற்று இளைப்பாறி மேல் நடந்து சென்றால் அங்கிருந்து ஒரு கூப்பிடுதூரத்தில் கருமையான ஓர்காடு புலப்படும். அதுவே சித்திரகூடத்திற்குச் செல்லும் வழி. அதில் யாதொரு கஷ்டமுமில்லை" என்று கூறி வழிகாட்டினர். ராமனும் அவரை வணங்கி அவ்விடத்தே நிறுத்தித் திருப்பியனுப்பிவிட்டு மேல் நடந்து சென்றனன்.

முனிவர் கூறியவண்ணம் அவர்கள் யமுனையையடைந்து பற்பல விறகுகளைக் கொணர்ந்து அவற்றோடு உலர்ந்த மூங்கில்களைப்பரப்பிக் கயிற்றுக்குப் பதிலாக வெட்டிவேர்களைக்கொண்டு கட்டி அழகியதொரு தெப்பம் செய்தனர். பிறகு லக்ஷ்மணன் தெப்பத்தின்மேல் வஞ்சிக் கிளைகளாலும் நாவற் கிளைகளாலும் சீதைக்கு ஓர் ஆஸனம்

அமைத்தனன். மூவரும் அதில் ஏறிச் சுகமாக யமுனையைத் தாண்டி அதன் தென்கரையிலுள்ள ஆலமரத்தை யடைந்தனர். சீதை தனது நாதன் சுகமாக வனவாசஞ் செய்து முடித்து அயோத்திக்குத் திரும்பியதும் யமுனைக்காக ஆயிரம் பசுக்களையும் நூறு குடங்கள் தேனையும் நிவேதனம் செய்து பூஜிப்பதாக வாக்குறுதி செய்தனள். பிறகு அவள் சியாமமென்னும் ஆலமரத்தை வணங்கித் தன் விருப்பங்கள் ஈடேறும் வண்ணம் அதைப் பிரதக்ஷிணம் செய்தனள்.

பிறகு லக்ஷ்மணன் முன்னும், இடையில் சீதையும், பின்னால் ராமனுமாய், மனோகரமான இயற்கை வனப்புள்ள அக்காட்டுமார்க்கமாகச் சென்றனர். இடையில் காணப்படும் அபூர்வமான வாசனைப் புஷ்பங்களையும் கொடிகளையும் சீதையின் விருப்பத்தின்படி லக்ஷ்மணன் அவளுக்குப் பறித்துக் கொடுத்தனன். மூவரும் யமுனா நதிக்கரையிலுள்ள வனத்தின் வழியாகக் கூப்பிடுதூரம் சென்று அங்கே காட்டு உணவுகளை உட்கொண்டனர். அவர்கள் அனேக கஷ்டங்களை யநுபவித்தபோதிலும் சிறிதும் வருத்தமுறாமல் முகத்தில் விகாஸம் பொலிய அந்தக்காட்டில் ஸந்தோஷத்துடன் காலங் கழிக்க வேண்டிச் சீதைக்கு சௌகரியமான இடத்தில் ஓர் குடில் அமைத்துக்கொண்டனர்.

ஐம்பத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## ஐம்பத்தாறாவது ஸர்க்கம்

## ராமன் சித்திரகூட மலையருகில் வால்மீகி முனிவரை ஆச்சிரமத்தில் கண்டு சேவித்தலும், பிறகு ஒரு பர்ணசாலையில் தங்குதலும்.

பிறகு இரவு கடந்தவுடன் மூவரும் எழுந்திருந்து பரிசுத்தமான அந்நதியில் ஸ்நானம் முதலிய சடங்குகளைச்

செய்துகொண்டு பரத்துவாசர் கூறினவழியைப் பற்றிக் கொண்டு சித்திரகூடத்திற்குச் சென்றனர். அங்கு மயில்கள் ஆடவும் குயில்கள் கூவவும் யானைக்கூட்டங்கள் நாற்புறமும் திரிந்து களிக்கவும், இன்னும் பலபல பறவைக்கணங்கள் இனிமையாகப் பாடவும்பெற்ற வனம் மரங்கள் நிரம்பப்பெற்று அளவற்ற மதுரமான கனிகளோடுகூடி விளங்கியது. அங்குக் காய் கிழங்குகளும் ஏராளமாய் இருந்தன. இத்தகைய பிரதேசத்தில் தவம் செய்துகொண்டிருந்த வால்மீகி முனிவரின் ஆச்சிரமத்தை மூவரும் அடைந்து கைகளைக்குவித்து அம்முனிவருக்கு நமஸ்காரம் செய்தனர். முனிவரும் மிகவும் சந்தோஷித்து அவர்களை நன்கு உபசரித்தானபின் ராமன் தான் வனவாசம் செய்ய நேர்ந்த காரணத்தைக்கூறினன்.

பிறகு ராமனுடைய கட்டளைப்படி லக்ஷ்மணன் அவ்விடத்தில் தானே பலவித மரங்களாலும் இலைகளாலும் கிளைகளாலும் ஓர் அழகிய பர்ணசாலையைக் கட்டி முடித்தான். ராமன் அதைக்கண்டு மிகவும் மகிழ்ச்சியடைந்து தான் அதில் குடி புகுவதற்குறப்பான வாஸ்துசாந்தி முதலிய வைதிக கருமங்களைச் செய்யக்கருதி, அதற்குத் தேவையான ஸமஸ்தமான சம்பாரங்களையும் லக்ஷ்மணனைக் கொண்டு, வரவழைத்துப் பரிசுத்தனாக வாஸ்துசாந்திக்கு உரிய மந்திரங்களையெல்லாம் ஜெபித்து அந்தக்குடிலில் சீதையுடன் பிரவேசித்தான். பின்னும் அக்குடிலிலுள்ள பிடைகளெல்லாம் ஒழியும் பொருட்டும் மிகுந்த மங்களங்கள் உண்டாகும் பொருட்டும், வைச்வதேவ பலியும், ருத்திரபலியும், விஷ்ணு பலியும் நடத்தி அதற்குரிய புண்ணியாக வாசன சாந்தி ஜபாதிகளைச் செய்து சமஸ்த பாபங்களும் ஸாந்தமாகும்படி

மீளவும் நதியில் ஸ்நானம் செய்து எல்லா பூதங்களேயும் உத்தேசித்து மறுபடியும் உத்தமமான வைதிக கருமங்களை நடத்தினன்.

அழகும் விஸ்தாரமும் ஒளியும் நிரம்பப் பெற்ற அந்தப் பர்ணசாலையில் மூவரும் வசித்து வந்தார்கள். அச்சித்திர கூட பருவதத்தின் சுற்றுப்பக்கங்களிலுள்ள இயற்கை யழகையும் அம்மலையின் மேலுள்ள மால்யவதி என்னும் நதியையும் கண்டு ராமன் முதலியவர்கள் மிகுந்த சந்தோஷமடைந்து, நகரத்தைவிட்டு வந்ததனுலுண்டான மனவருத்தம் சிறிதும் தோன்றப்பெருமல் இருந்தார்கள்.

ஐம்பத்தாருவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## ஐம்பத்தேழாவது ஸர்க்கம்

## சுமந்திரன் அயோத்திநகர் மீளுதலும், அச்செய்தியறிந்த நகரத்தவர்கள் சோகித்தலும்.

இங்ஙனம் ராமன் கங்கையின் தென்கரைக்கு வந்தவுடனே குகன் சுமந்திரனுடன்கூட ராம குணங்களேப் பேசிக்கொண்டே அவனையழைத்துக்கொண்டு தன் வீட்டுக்குச்சென்றனன். அந்த சிருங்கிபேர புரத்திலுள்ள சாரர்கள், ராமாதிகள் பரத்துவாசரிடம் சென்றது முதலாகச் சித்திரகூடத்தையடைந்த விருத்தாந்தங்களனைத்தையும் சுமந்திரனுக்குத் தெரிவித்தனர்.

பிறகு குகனிடத்தில் அனுமதி பெற்றுக்கொண்ட சுமந்திரன் தேரை ஓட்டிக்கொண்டு அயோத்திக்குத் திரும்பினன். அச்சமயம் அந்நகரம் முழுதும் அழுகுரல் மயமாகவே யிருக்கக்கண்டனன். 'மன்னவன் கதி யாதாயிற்ரே!' என்

கிற ஏக்கத்துடன் அவன் விரைவாகத் தேரைச் செலுத்திப் பட்டணத்தினுள் பிரவேசித்தனன். நகரத்து ஜனங்கள் 'ராமன் கங்கையைக் கடந்து சென்றான்' என்று சுமந்திரனால் தெரிந்துகொண்டதும் "ஐயோ! ராமனை இழந்தோமே!" என்று கதறி ராமனுடைய திவ்விய குண சேஷ்டிதங்களையே சொல்லி வாய்வெருவிக்கொண்டிருந்தனர். ஸ்திரீகள் சாளரங்களினின்றும் சுமந்திரனைக்கண்டு கதறினார்கள். சுமந்திரன் அரசனுடைய அரண்மனையில் நுழைந்து எட்டுக் கட்டுகளையும் கடந்து அரசனிடம் சென்று வணங்கி ராமன் சொன்னவற்றில் சிறிதும் தப்பாமல் அங்ஙனமே சொன்னான்.

அரசன் மனம் முறிந்திருந்தபடியால் அவ்வுரைகளைக் கேட்டு பதிலொன்றும் சொல்லமுடியாமல் மூர்ச்சித்துப் பூமியில் வீழ்ந்தான். அந்தப்புரத்து ஸ்திரீகளனைவரும் கைகளையுயரத் தூக்கிக்கொண்டு "ஐயோ! ஐயோ!!" என்று கதறினர். அச்சமயம் கௌசல்யையும் சுமித்திரையும் அரசனை யெழுப்பி மூர்ச்சை தெளிவித்து அவனைத் தேற்றினர். ஆனால் புத்திர சோகத்தினால் பீடிக்கப்பட்டிருந்த அக்கௌசல்யையும் திடீரென்று மெய்மறந்து கீழேவிழுந்தனள்.

இவற்றையெல்லாம் கண்ட ராஜபத்தினிகள் எல்லாரும் பெருங்குரலிட்டழுதனர். இவ்வழுகுரலைக் கேட்ட பட்டணத்து ஜனங்களனைவரும் நாற்புறத்திலும் சூழ்ந்து புலம்பியழுதனர். இப்படி அப்பட்டணம் முழுவதும் ராமன் வனம் சென்ற சமயத்திற்போல் மறுபடியும் கலக்கமுண்டாகப் பெற்றிருந்தது. அந்தோ! பேச்சுக்கு நிலமல்லாத நிலைமை!.

**ஐம்பத்தேழாவது ஸர்க்கம் முற்றிற்று.**

---

## ஐம்பத்தேட்டாவது ஸர்க்கம்

## சுமந்திரன் தசரத மன்னனிடத்தில் ராம லக்ஷ்மண சீதைகளின் செய்தி கூறுதல்.

பிறகு மூர்ச்சை தெளிந்தெழுந்த அரசன் சுமந்திரனை நோக்கி "ஸூதனே! மேலான சுகங்களை யநுபவித்த ராமன் எந்த மரத்தின்கீழ் வசிக்கின்றனன்? எவ்வுணவை உட்கொள்ளுகின்றனன்? ஐயோ! காலாட்களும் தேர்களும் யானைகளும் பின்தொடரச் சென்ற ராமன் இப்பொழுது ஜன சஞ்சாரமில்லாத வனத்தில் எப்படி இருக்கின்றனன்? துஷ்ட மிருகங்களும் விஷ ஸர்ப்பங்களும் நிறைந்த வனத்தில் ராம லக்ஷ்மணர்கள் சீதையுடன் எப்படி வசிக்கின்றனர்? ஹா! அழகிய சீதையை நினைத்துக் கொண்டால் என்மனம் பதைக்கின்றதே! சுகத்தையே எப்பொழுதும் அநுபவிக்கத்தகுந்த அவள் எப்படி கால்நடையாக முட்களும் கற்களும் நிறைந்த காட்டுப் பாதைகளில் நடந்தாள்? ஆ! சுமந்திரா! ராமன் யாது கூறினன்? லக்ஷ்மணன் என்ன சொன்னான்? சீதை சொன்ன வார்த்தைகள் யாவை? ராமன் உட்கார்ந்திருந்த இடங்களையும் படுத்துக்கொண்டிருந்த இடங்களையும் எனக்கு விஸ்தாரமாக வருணித்துச் சொல்லவேண்டும். நான் ராமனுடைய செய்திகளைக்கேட்டாகிலும் சிறிது காலம் பிழைத்திருக்கிறேன்" என்றனன்.

சுமந்திரன் கைகுவித்தவண்ணம் "அரசர் பெருமானே! ராமன் என்னை நோக்கி" சாரதி! நான் என் தந்தையை வணங்கினதாகச் சொல்லி எனக்குப்பதிலாக அவருடைய பாதங்களைத் தொட்டு நமஸ்கரிப்பாய். அரண்மனையில் உள்ளவர்களனைவர்க்கும் என்னுடைய ஆரோக்கியத்தை அறிவிப்பதுமன்றியில் அவரவர் பருவத்துக்குத் தகுந்தபடி என்னுடைய

நமஸ்காரத்தையும் உபசார மொழிகளையும் சொல்ல வேண்டும். என் தாயாகிய கௌசல்யையிடத்தில் "தாயே! நீ எப்பொழுதும் தருமத்தைக் கைவிடாமல் அரசரைத் தெய்வமாகப் பாவித்துப் பூஜித்து வருவதன்றியில் சக்களத்திகளான கைகேயி முதலிய என் தாய்மார்கள் எல்லோரிடத்திலும் 'நான் அரசன் பட்ட மகிஷிகளில் மூத்தவள்' என்கிற பெருமை பாராட்டாமல் இருக்கவேண்டும். பரதன் அரசனாகையால் அவனை நீ பெரியவனென்றே மதிக்கவேண்டும்; ராஜதர்மத்தை மனத்தில் ஞாபகப்படுத்திக் கொள்ள வேணும்' என்று சொல்லுமாறு சொல்லினன். பரதனிடம் சொல்லும்படிக்குச் சொன்ன வார்த்தைகளாவன;—"தாய்மார்கள் எல்லாரிடத்திலும் பேதமில்லாமல் நடக்கவேண்டும். நீ இளவரசனாகவிருந்து தந்தையின் உத்தரவின்படியே அரசாளவேண்டுமேயன்றி அவரை உல்லங்கனம் செய்யலாகாது" என்பது முதலியன.

லக்ஷ்மணன் சொன்னதாவது, 'சுமந்திரா! அரசன் காம பரவசனாகி ஒரு பாவமுமறியாத ராமனைக் காட்டிற்கனுப்பினான்; இதைப்போன்ற கொடிய செய்கை வேறொன்றுண்டோ? அரசன் எனக்குத் தந்தையல்லன். எனக்குத் தாயும் தந்தையும் உடன் பிறந்தோனும் பந்துவும் என் ராமனேயாவன்; குணக்கடலான ராமனைக்காட்டிற்கனுப்பி அதனால் என்றுமழியாத அபக்கியாதியை சம்பாதித்துக் கொண்ட அந்த தசரதன் சொற்படி பரதன் அரசனாகத் தகுந்தவனல்லன்; இதைப் பரதனிடத்திலும் கூறுவாயாக.' என்றனன். அரசனே! சீதையோவென்றால், மனவருத்தத்துடன் அழுதுகொண்டிருந்தாளேயன்றி என்னிடம் ஒன்றும் சொல்லவில்லை." என்று கூறினன்.

ஐம்பத்தெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

## ஐம்பத்தோன்பதாவது ஸர்க்கம்

## ராமனது பிரிவினல் மரம் செடி கொடி முதலியனவும் வாடி வதங்குவதைச் சுமந்திரன் சொல்லக்கேட்ட தசரதன் மூர்ச்சித்தல்.

இங்ஙனம் கூறின சுமந்திரனை நோக்கி அரசன் "மற்றை விருத்தாந்தங்களையும் சொல்லுவாயாக" என்றனன். சுமந்திரன் "மஹாராஜனே! அவ்விரு ஸகோதரர்களும் சடை தரித்து மரவுரியுடுத்துக் கங்காநதியைக் கடந்து பிரயாகை க்ஷேத்திரத்தைக் குறித்துச் சென்றனர். லக்ஷ்மணன் ராமனைக் காத்துக்கொண்டு எல்லார்க்கும் முன்னே சென்றனன். நான் ராமனது கட்டளைப்படி திரும்பி வந்துவிட்டேன். குதிரைகளோ ராமனது பிரிவை நினைத்துப் பெருமூச்சுவிட்டுக்கொண்டு வழியில் சரியாய்ச் செல்லாமல் இடக்கு பண்ணிக்கொண்டே சென்றன. நான் குகனுடன் அந்த சிருங்கிபேர புரத்திலேயே நின்று, 'திரும்பியும் ராமன் என்னைச் சாரர்கள் மூலமாகக் கூப்பிடுவானே' என்னும் ஆசையினல் தாமதித்திருந்தேன். அரசனே! உன் தேசத்திலுள்ள மரங்கள்கூட ராமன் பிரிவைப்பொறுக்க முடியாமல் இளைத்துப் புஷ்பங்களோடும் தளிர்களோடும் மொக்குகளோடும் வாடியிருக்கின்றன. இனி மனிதர்களைப் பற்றிச் சொல்லவேணுமோ? குளங்குட்டைகளில் தண்ணீர் அடியிட முடியாதபடி கொதிக்கின்றது. காடுகளிலும் நந்தவனங்களிலும் மரங்களின் இலைகளெல்லாம் உலர்ந்திருக்கின்றன. ராமனது பிரிவால் காடுகள் முழுவதும் நிச்சப்தமாக விருக்கின்றன. நான் பட்டணத்தில் நுழைகையில் ஒருவன் கூட சந்தோஷத்துடன் காணப்படவில்லை. அரசனே! ராமனைப்பற்றி மனவருத்தப்படும் விஷயத்தில் சத்துரு

களுக்காகிலும், ஸ்நேஹிதர்களுக்காயினும் பேதமென்பது சிறிதுமில்லை" என்றனன்.

இவற்றைக் கேட்ட மன்னவன் கண்களில் நீர் ஆறுகப் பெருக சுமந்திரனைப் பார்த்து "கைகேயி பாபிஷ்ட வம்சத்தில் பிறந்தவளாகையால் பாபிஷ்ட ஸ்வபாவமுடையவளாயினள். அவள் ராமனைக் காட்டுக்கனுப்புமாறு என்னைத் தூண்டுகையில் அந்தோ! நான் காரியாலோசனையில் ஸமர்த்தர்களாகிய பெரியோர்களோடு கலந்து விசாரம் செய்யாமல் போயினேன். ஓர் பெண்பிள்ளையிடத்துள்ள மோஹத்தினுல் நான் முன்பின் பாராமல் இந்தத் தகாத காரியத்தைச் செய்துவிட்டேன்! என்னுல் இனி உயிரோடிருக்க முடியாது. ஆகையால் நீ தயவு செய்து இப்பொழுதே என்னை ராமனிடம் கொண்டுபோய்ச் சேர்ப்பிக்கவேண்டும். அந்த ராமனைச் சீதையுடன் நான் பார்க்கப் பெறுவேனுயின் பிழைத்திருப்பேன். இல்லையேல் இறப்பது திண்ணம்" என்று சொல்லிக்கொண்டே, "ஐயோ! ராமா! ஐயோ! லக்ஷ்மணு! ஆ! சீதே!" என்று புலம்பினன்.

பின்னும் அவ்வரசன் கௌசல்யை நோக்கி "தேவி! நான் ராமனது பிரிவால் சோக சாகரத்தில் மூழ்கியுள்ளேன். ராமனைக் கண்டாலல்லது இந்த சோகக்கடலைக் கடக்க வழியில்லை. ஐயோ! என் ராம லக்ஷ்மணர்களைக் காணப் பெற்றிலேனே!" என்று பலவாறு கூறிப் புலம்பிக்கொண்டே மூர்ச்சையடைந்து படுக்கையின்மேல் விழுந்தான். இதைக் கண்ட கௌசல்யை மிகவும் பரிதாபமுற்றனள்.

ஐம்பத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று

## அறுபதாவது ஸர்க்கம்

### சுமந்திரன் சொற்களைக்கேட்ட கௌசலை வருந்துதலும், அவளைச் சுமந்திரன் தேற்றுதலும்.

பிறகு கௌசல்யை பூதாவேசம்கொண்டவள் போல் பூமியில் அடிக்கடி விழுந்து புலம்பியபடியே சுமந்திரனை நோக்கி "ராமனும் சீதையும் லக்ஷ்மணனும் எங்கே இருக்கின்றனர்? அவர்களைப்பிரிந்து இனி ஒருக்ஷணகாலமும் நான் பிழைத்திருக்கமாட்டேன்; நீ சீக்கிரமாகத் தேரைத் திருப்பி என்னைத் தண்டகாரணியத்திற்குக் கொண்டுபோ" என்றனள்.

சுமந்திரன் அவளைச் சமாதானப்படுத்தி "தாயே! நீ உன்னுடைய சோகங்களை மறந்து மன நிலையை மாற்றிக்கொள்வாயாக. ராமாதிகள் வனத்தில் மிகவும் சந்தோஷத்துடன் தருமம் தவறுமல் வசித்துக்கொண்டிருக்கிறார்கள். அவர்கள் செல்லும்போதே நான் இதைக்கண்ணுற்றேன். இடைவழிகளிலுள்ள அபூர்வமான இயற்கைத் தோற்றங்களைப்பற்றியும் நகரங்களைப்பற்றியும் சீதை ராமலக்ஷ்மணர்களைச் சந்தோஷத்தோடு வினவுவாள்; அவர்களும் அவற்றின் பெயர்களைக் கூறுவார்கள்; அவர்களுக்கு வருத்தமென்பதே சிறிதுமில்லை. சீதை கைகேயியைப்பற்றி ஒரு வார்த்தை சொன்னுள். அது எனக்கு ஞாபகத்திற்கு வரவில்லை. அவள் எதைப்பற்றியும் கவலைகொள்ளாமல் மிகவும் சந்தோஷமாய் வனவாசம் செய்கிறுள். பிதிர்வாக்கிய பரிபாலனமென்கிற ராமனது சிறந்த விரதம் உலகத்திலெங்கும் நீடுபுகழாக விளங்கிவரப்போகின்றது. ராமனது கீர்த்தியும் பிரதாபமும் இவ்வுலகில் ஊழிதோறூழி மறையாது மலிந்து விளங்கப் போகின்றன. அவனைப்பற்றி நீ இனி வருத்தப்படவே

கூடாது" என்று பலகூறித் தேற்றினன். இப்படி சமாதானப் படுத்தப்பட்ட கௌசல்யை சற்று மனச்சாந்தியடைந்த போதிலும் ராமனை மறக்கமாட்டாதவளாய் "என்னப்பனே! ராமா!" என்று ஓயாமல் புலம்பிக்கொண்டே யிருந்தனள்.

**அறுபதாவது ஸர்க்கம் முற்றிற்று.**

---

## அறுபத்தோராவது ஸர்க்கம்.

### ராமனைக் காட்டுக்கனுப்பியதைப்பற்றிக் கௌசலை அரசனைக்கடிதலும் அது கேட்டு அரசன் மூர்ச்சித்தலும்.

பின்னும் அக்கௌசல்யை அரசனை நோக்கி "மூன்று லோகங்களிலும் சிறந்த கீர்த்திவாய்ந்தவனே! அந்த கீர்த்தி யெல்லாம் நொடிப்பொழுதில் பாழாகும்படி மிகுந்த அபகீர்த்தியை விளைவிக்கவல்லதாகிய இந்தக்கொடியகாரியத்தைச் செய்தனை, உலகுக்கு ஒருயிரான ராமனையன்றோ வனமனுப்பினாய். பிராணநாதனே! 'அருந்தவப்பேறாகப் பிறந்த ராமனுக்குப் பட்டாபிஷேகஞ்செய்து களிக்கவேண்டிய சமயத்தில் அவனைத் துரத்தியாயினும் பிரதிக்ஞையை நிறைவேற்றினான்' என்கிற கீர்த்தி உலகில் உனக்குக்கிடைப்பது உண்மையே. ராமனும் தர்மாத்மாவானபடியால் உன் வார்த்தைகளை நிறைவேற்றும் வண்ணம் காடேகியதால் அவனுக்கும் பெருங்கீர்த்தியே. ஆயினும் இளம்பிராயமே பிடித்து சுகங்களையே யநுபவித்துவந்த நம் புதல்வர்களிருவரும் வனவாசத்தை எப்படி சகிக்கப்போகிறார்கள்? மிகுந்த யௌவனப் பிராயமுள்ள சீதை இதுவரை மிகுந்த ருசியுள்ள ஆகாரத்தையுண்டு வளர்ந்து, இனிக் காட்டில் கிடைக்கும் காய் கிழங்கு முதலியவற்றை எங்ஙனம் புசிக்கப்போகின்றனள்? ஹா! எனது மனத்துக்கினிய ராகவனை நான் எப்பொழுது காணப்

போகிறேன். ராமனைக் காணப்பெறாத என்னெஞ்சம் இது வரை ஏன் வெடித்துப்போகாமலிருக்கிறது? ஐயோ! எனது ஆபத்பந்துக்களான சீதா ராமலக்ஷ்மணர்கள் உன்னாலல்லவோ இன்று வனத்தில் திரிகின்றனர்? ராமன் பதினைந்தாம் வருஷத்தில் திரும்பி இவ்விடத்திற்கு வருவானாயினும், பரதன் தன் கையிலுள்ள ராஜ்ஜியத்தையும் ஐசுவரியங்களையும் ராமனுக்கு விட்டுவிடுவானென்று எனக்குத் தோன்றவில்லை.

ஒரு பெரும்புலியானது மற்றொரு மிருகம் தின்று மிகுந்த வுணவை ஒருபோதும் தின்னாது. அதுபோல் ராமனும் புருஷர்களில் பெரும்புலிபோல் மேன்மையுற்றவனாகையால் பரதன் அனுபவித்த ராஜ்ஜியத்தை ஒருகால் பரதனே கொடுக்க இசைந்தாலும் அதைப் பெற்றுக்கொள்ள மாட்டானென்பது திண்ணம்.

ராமன் கோபங்கொண்டிருப்பானாயின் இப்படிப்பட்ட அவமானத்தை அவன் அடைந்தே யிருக்கமாட்டான். உலகமெல்லாம் ஒன்றுகூடி எதிர்த்துவரினும், அவனைவெல்ல ஒருவராலும் முடியாது. சந்திர சூரியர்களோடும் நக்ஷத்திரங்களோடும் கூடிய ஆகாயத்தையாயினும் சுவர்க்கலோகத்தையாயினும் நினைத்தமாத்திரத்தில் அறுத்துத் தள்ளிவிடக்கூடிய சக்தி அவனுக்குண்டு. ஆயினும் தந்தையென்கிற கௌரவத்தினாலும், உன் வாக்கை மெய்ப்படுத்த வேண்டுமென்கிற தரும நினைவாலும் உனக்கடங்கி அவன் காடுசென்றான். அந்த தர்மாத்மாவை நீ வனம் செல்ல அநுமதித்தது முற்றிலும் அநீதியாகும். உனக்கு ஸநாதன தருமநிஷ்டை என்பது அடியோடு இல்லை. அரசனே! மாதர்க்கு முக்கியமானகதி தன் கணவனே. இரண்டாவது புகலிடம் புதல்வனாவான். மூன்றாவது கதி பந்துக்கள். இனி நான்காவதான

புகல் உலகிலேயே இல்லை. இம்மூன்று கதிகளில் முதல்கதியாகிய நீ என் சக்களத்தி வலையினுட்பட்டவனுகையால் எனக்கு நீ இல்லாதவன்போலவே ஆய்விட்டனை. இரண்டாவது கதியான ராமனே காடேகினன். கணவனையுடையவளாகையால் உன்னைவிட்டு நான் ராமனைப் பின்செல்ல நினைக்கலாகாது. தவிர, என் உறவினர்கள் தூரதேசத்திலிருக்கிறர்களாகையால் அவர்களாலும் இப்பொழுது எனக்குப் பிரயோஜனமில்லை. எல்லாவிதத்திலும் நீ என்னைப் பாழாக்கிவிட்டனை. உன்னையும் உன் மந்திரிகளையும் பாழாக்கிக் கொண்டனை. பட்டணத்து ஜனங்களையும் நாசமாக்கிவிட்டனை. என் மகனை துரோகம் செய்தனை. எவர் எப்படியாளுல் உனக்கென்ன? உன் அருமைப்புதல்வனுன பரதனும் ஆசைநாயகியான கைகேயியும் சந்தோஷமாக விருக்கிறர்களல்லவா?" என்று படபடப்புடன் பயங்கரமான வார்த்தைகளைக்கூற மகாராஜன் கேட்டு மதிகலங்கி மூர்ச்சையடைந்தனன்.

பிறகு சிறிது நேரங்கழித்து மூர்ச்சை தெளியப்பெற்ற மன்னவன் கௌசல்யை சொன்ன ரோஷவார்த்தைகளை நினைத்து நினைத்து, 'அந்தோ! தப்புக்காரியம் செய்துவிட்டோம்' என்று கழிவிரக்கங் கொண்டிருந்தனன்.

அறுபத்தோராவது ஸர்க்கம் முற்றிற்று

---

## அறுபத்திரண்டாவது ஸர்க்கம்

### மூர்ச்சை தெளிந்த மன்னவன் கௌசலையை நல்வார்த்தை கூறித் தேற்றுதலும், கௌசலை கடிந்து கூறினதற்குப் பொறுமை வேண்டுதலும்.

அரசன் சிறிது மனந்தேறினும் சோக நெருப்பில் தகிக்கப்பட்டு கிடுகிடுவென்று நடுக்கமுற்றுத் தலைவணங்கப்

பெற்றுக் கைகளைக் குவித்தவண்ணம் கௌசலையை நோக்கி "என் காதலி! நீ என்னிடத்தில் அருள்புரியவேண்டும்; இதோ உனக்கு அஞ்சலி செய்கிறேன். தேவி! உன்னைப் போன்ற உத்தம ஸ்திரீகள் கணவனையே தெய்வமென்று கொண்டாடும் குணமுடையவர்களன்றோ? இப்படிப்பட்ட உனக்கு எப்படிப்பட்ட மனவருத்தம் உண்டாயிருப்பினும் மிகவும் துயருறும்படியாக இத்தகைய கடுஞ்சொற்களை யுரைப்பது யுக்தமன்று." என்று தீனஸ்வரத்தில் மன இரக்க முண்டாகும்படி கூறினன்.

இவ்வார்த்தையைக்கேட்ட கௌசலை கண்ணீரைப் பெருக்கினள். 'ஐயோ! கணவனை இங்ஙனம் மனமிடியும்படி கூறிவிட்டோமே' என்கிற வருத்தத்தினால் கதறிக்கொண்டே அரசனுடைய அஞ்சலியைத் தன் கைகளால் எடுத்துச் சிரத்திலிட்டுக்கொண்டு தழதழத்த குரலில் "தேவா! என் மீது அருள்புரியவேண்டும். உன்னை வணங்கி வேண்டிக் கொள்ளுகிறேன். உன் மனம் புண்படும்படியான வார்த்தைகளை நான் கூறியதால் பாபிஷ்டையானேன். இதற்காக என்னை உலகத்தவர் நிந்திக்கப்போகிறார்கள். தர்மாத்மாவே! நானும் தருமங்களையுணர்வேன். நீ ஸத்தியவாதி யென்பதும் எனக்குத் தெரியாததல்ல. ஆயினும் புத்திர சோகத்தினால் மதிகலங்கி முன்பின் பாராமல் உன்னைத் தகாத வார்த்தைகள் சொல்லிவிட்டேன். இதற்காக என்னை மன்னிக்கவேண்டும். சோகத்தினால் தைர்யத்தை யிழந்து மதிகெட்டுப்போன சிலமகரிஷிகளைப்பற்றியும் நாம் கேள்விப் பட்டிருக்கிறோம். அங்ஙனமே பேதையான நானும் சோகத்தினால் மதிகெட்டு ஏமாறித் தகாதவார்த்தைகளைச் சொல்லி விட்டேன். நீபொறுத்தருள வேண்டும். ராமன் வனவாஸம்

செய்யவாரம்பித்து இன்று ஐந்து தினங்களாயின. எனக்கோ இந்த சுவல்பகாலமும் ஐந்து வருடங்கள்போல் இருக்கின்றன. இதைநினைக்க, துயரம்பெருகி வருகிறது.'' என்று அரசனை நல்வார்த்தைகளால் சமாதானப்படுத்தினள். சூர்யனும் அஸ்தமித்து இரவும் வந்தது. அரசனும் மனக்கலக்கம் தீர்ந்து நித்திரைக்கு வசமாயினன்.

**அறுபத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.**

---

## அறுபத்துமூன்றவது ஸர்க்கம்.

### நெடுநாளைக்கு முன்பு தசரதன் வேட்டையாடுகையில் நேர்ந்த முனிசாபத்தைக் கௌசலையிடம் கூறுதல்.

நடுநிசியில் அரசன் விழித்தெழுந்து தான் பண்டொருகால் செய்த ஒரு பாப காரியத்தை நினைத்துக்கொண்டு கௌசலையைப் பார்த்து "அடீ கௌசலையே! ஒருவன் பிறர்க்கு நல்லதாகவோ கெட்டதாகவோ ஒரு காரியத்தைச் செய்தானாயின் அதனால் பிறர்க்குவிளையும் பலனையே தானும் அநுபவிப்பான். பிரியே! நான் இப்பொழுது ராமனை யிழக்கநேர்ந்ததற்குக் காரணம் கூறுகிறேன் கேள். நான் வாலிபனாயிருக்கையில் சிறந்தவில்லாளியாகி 'இந்தப் பயல் சப்தத்தையே குறியாகக்கொண்டு அம்புசெலுத்த வல்லவன்' என்று பிரசித்திபெற்றிருந்தேன். அப்பொழுது உனக்குக் கலியாணமாகவில்லை. என் தந்தையும் இருந்தனர். நான் இளவரசனாகவிருந்தேன். ஒரு சமயம் மழைக்காலத்தில் வேட்டையாடக்கருதி வில்லையும் பாணத்தையும் தரித்துத் தேரின்மீதேறிச் சரயூநதியைக் குறித்துச் சென்றேன். அச்சமயம் மாலைவேளை. திடீரென்று வானம் கறுத்து வெகு சீக்கிரத்தில் இருள்பரவ ஆரம்பித்தது. நான் அந்நதியில்

இழிந்து ராத்திரியில் ஜலங்குடிக்கும் துறையில் காத்திருந்து ஏதாயினும் கொடிய விலங்குகள் ஜலங்குடிக்க வருமாயின் அவைகளை யடிக்கலாமென்று எண்ணங்கொண்டேன். அந் நடுநிசியில் ஆற்றில் குடத்தில் ஜலம் மொள்ளுகிற ஓசை யொன்று யானை சப்திக்கிற சப்தத்தைப்போல் எனக்குக் கேட்டது. நான் உண்மையில் ஒரு யானைதான் நீர் அருந்து கிறதென்று பிரமித்து அதைக்கொல்லவிரும்பி அந்த சப்தம் வந்த வழியைப்பிடித்து இன்ன விடத்தில் யானை யிருக்குமென்று குறிவைத்துப் பாணத்தை விட்டேன். அந்த பாணம் ஓர் முனி குமாரனுடைய மர்மஸ்தானத்தில் பட்டு அவன் 'ஐயோ! ஐயோ!' என்று கத்தும் வார்த்தை எனக்குக்கேட்டது. நான் பெருத்த பீதியுடன் அவ்விடத் திற்கு ஓடோடியும் சென்றேன். அம்முனி குமாரன் பாணத்தின் நுனியால் அடியுண்டு கீழே விழுந்திருந்தனன். அவன் என்னை நோக்கி 'அரசனே! தாய்தந்தையர்க்கு ஜலங்கொண்டுபோவதற்காக வந்த என்னை நீ பாணத்தினுல் அடித்தனையே. நான் உனக்கு என்ன கெடுதி செய்தேன்? ஐயோ! நான் இறந்துபோவதோடு நில்லாமல் வயது சென்ற வர்களும் கண்தெரியாதவர்களுமான என் தாய் தந்தை களும் கூட செத்துப்போய் விடுவார்களே! அவர்கள் இப் பொழுது என்னை எதிர்பார்த்துக் கொண்டிருப்பார்கள்; ஆகையால் அரசனே! நீயே அங்குச்சென்று என் சங்கதி யைச் சொல்வாயாக. அவர் அதுகேட்டு உன்னைத் தகித்து விடுவாரென்று நினைக்கவேண்டாம். அவர் அப்படிச்செய் யார். நீ சொல்லாதபட்சத்தில் அவர் வெகுநேரம் எதிர் பார்த்தும் என்னை வரக்காணுமல் கோபித்துத் தமது தேஜஸ் ஸினுல் ஒருக்கால் தகிக்கவும் கூடும். ஆகையால் நீயே

சென்று அவரைக் கலக்கம் தீரச்செய்வாயாக. இல்லையேல் உன்னைத் தப்பாமல் சபித்துவிடுவார். மன்னவனே! நீ என்னுடைய சரீரத்தினின்றும் பாணத்தைப் பிடுங்கிவிடு. சீக்கிரம் நான் உயிரை விட்டுவிடுகிறேன். என்னால் பாதை பொறுக்க முடியவில்லை. அரசனே! நீ என்னைக்கொன்றதனால் பிரம்மஹத்யை சம்பவித்ததென்று கலங்க வேண்டாம். ஏனெனில் நான் பிராமணனல்லேன். வைசியனுக்கு சூத்திரஸ்திரீயிடத்தில் பிறந்தவன்' என்றனன். கௌசலையே நானும் அவனுடம்பிலிருந்து பாணத்தைப் பிடுங்க அவனும் உயிரிழந்தான்.

அறுபத்துமூன்றாவது ஸர்க்கம் முற்றிற்று

---

## அறுபத்துநான்காவது ஸர்க்கம்

### புத்திர சோகத்தினால் தனக்கு மரணம் நேரிடுமென்று ஏற்கனவே முனிவன் சாபமுண்டென்று மொழிந்த தசரதன் நடுநிசியில் மரணமடைதல்.

நானும் அம்முனிகுமாரன் சொல்லியபடியே ஜலம் நிரம்பிய அக்குடத்தை எடுத்துக்கொண்டு அவன் தாய் தந்தையரை அடைந்தேன். என் காலடியைக் கேட்டதும் அம்முனிவர் மிகவும் பரிதாபமான குரலில் என்னைத் தன் மகனென்று நினைத்து 'குழந்தாய்! ஏன் இவ்வளவு தாமதம்? சீக்கிரம் ஜலம் கொண்டு வருவாயாக' என்றனர். நான் மிகவும் பயந்து தழதழத்த குரலுடன் என்னை இன்னாரென்றும் நான் தெரியாமல் ஏதோ மிருகமென்று பிரமித்துச் செய்துவிட்ட காரியத்தைச் சொல்லி அவர்களருமைப் புதல்வன் இறந்தசெய்தியைக் கூறினேன். இன்னும் நான் தெரியாமல் செய்த அக்கொடிய செய்கைக்குத் தகுந்த சாபத்

தையோ மற்றெதையோ பெற்றுக்கொள்ள சித்தமாய் இருப்பதாகவும் பகர்ந்தேன். அம்முனிவர் அடக்கமுடியாத விசனமடைந்து 'அரசனே! இந்தக் கெட்ட காரியத்தை நீயே எனக்குச் சொல்லாமல் மற்றொரு விதமாக எனக்குத் தெரியுமாயின் உன் தலை இப்பொழுதே லட்சம் சுக்கலாகப் பிளந்து போயிருக்கும். மேலும் நீ தெரியாமையால் பிரமம் கொண்டு இக்காரியம் செய்தபடியால் பிழைத்திருக்கின்றனை. தெரிந்தே செய்திருப்பாயாயின் உனது குலம் முழுதும் இப்பொழுது இல்லாமல் போய்விடும். நீ எங்களை அவனுடைய பிணமிருக்குமிடத்தில் அழைத்துக் கொண்டுபோ' என்றனர்.

நானும் அவ்விதமே அம்முனி தம்பதிகளை அம்முனி குமாரனுடைய பிரேதமிருக்குமிடத்திற்கு அழைத்துச் சென்றேன். அவர்கள் அவனைத்தொட்டுப் பலவிதமாகப் பிரலாபித்து அவனை 'நல்லகதிக்குச் செல்வாயாக' என்று கூறி அவனுக்கு ஸம்ஸ்காரத்தைச் செய்து ஜலதர்ப்பணாதிகளையும் செய்தனர்.

அம்முனி குமாரன் திவ்விய ரூபம்பெற்றுச் சுவர்க்க லோகம்போய்ச் சேர்ந்தனன். பின்னும் அவன் இந்திரனோடு கூடவே தன் தாய் தந்தையர்களைச் சமாதானப்படுத்தி அவர்களைப் பார்த்து 'நான் உங்களுக்கு (சுச்ரூஷை) அடிமைக் காரியங்கள் செய்ததனால் நற்கதியடைந்தேன், நீங்களும் இனிச் சீக்கிரமாகவே இவ்விடத்திற்கு வரப்போகிறீர்கள்" என்றுகூறித் தேவராஜனோடு சுவர்க்கலோகஞ் சேர்ந்தனன்.

பிறகு இந்தக்கிழ முனிவன் என்னை நோக்கி 'அரசனே! நாங்கள் இனி இப்பூமியில் வாழ முடியாது. இப்பொழுதே

நாங்கள் புத்திரசோகத்தினால் உயிர்விடப் போகிறோம். நீ எங்கள் புதல்வனைத் தெரியாமல் கொலைபுரிந்ததால் உன்னை பஸ்மஞ்செய்யாமல் உனக்கு ஓர் கொடுஞ்சாபத்தை யிடப் போகிறோம். நாங்கள் புத்திர சோகத்தினால் உயிர் நீப்பது போல் நீயும் புத்திர சோகத்தினால் மரணம் அடைவாயாக! என்றுகூறிக் கேட்போர் மனங்கரையும்படி பலவாறாகப் புலம்பி, தங்கள் உயிரைவிட்டனர். அக்கடுஞ் சாபத்தினால் இப்பொழுது எனக்கு இவ்விதமான கதி நேர்ந்திருக்கிறது. என்று சொல்லி முடித்து "ஐயோ! என் கண்கள் பஞ்சடைகின்றனவே! நினைவு தப்புகிறதே! ஐயோ! ராமா! லக்ஷ்மணா! ஸீதே! நீங்கள் எங்கிருக்கின்றீர்கள்? கௌசல்யே! சுமித்திரையே! என்னைத் தொடுங்கள். அடி! கொடிய கைகேயீ! என் குலத்தைப் பாழாக்கவந்த சண்டீ!" என்று கௌசல்யையையும் சுமித்திரையையும் பார்த்துக்கொண்டே அத் தசரத மஹாராஜன் உயிர் நீத்தனன்.

அறுபத்துநான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## அறுபத்தைந்தாவது ஸர்க்கம்.

## தசரதன் மரணமடைந்ததையறிந்த கௌசலையும் சுமித்திரையும் புலம்புதல்.

அன்றிரவு கடந்த மறுநாள் பின் மாலையில் வந்தி ஜனங்களும் வம்சாவலி படிக்கும் பாடகர்களும் மன்னவனது மாளிகையையடைந்து தங்கள் தங்கள் காரியங்களைச் செய்யத் தொடங்கினர். அந்தோ! மன்னவன் மாண்டது அவர்களுக்கெப்படித் தெரியும்? அந்தப்புரத்து ஸ்திரீகள் அரசனைப் பள்ளியுணர்த்த வந்து சேர்ந்தனர். அரசனை நீராட்டுவிக்கும் வேலைக்காரர்கள் ஸ்நானத்திற்கு வேண்டிய தீர்த்தத்தைப்

பொற்குடங்களில் கொண்டுவந்தனர். இளங்கன்னியர்கள் எண்ணெய் நலங்கு, கண்ணாடி, வஸ்திரம், ஆபரணம் முதலிய அலங்காரமான சாமான்களைக் கொண்டுவந்தனர். அவர்கள் சூரியோதயம் வரை காத்திருந்தும் அரசன் வெளிப்படாமை யால் திகைப்படைந்தனர்.

அந்தப்புரத்து ஸ்திரீகள் அரசனையணுகி அவன் மரண மடைந்தானென்று தெரிந்துகொண்டு 'ஓ' என்றும் 'ஐயோ' வென்றும் ஓலமிட்டனர். இதைக் கேட்டவுடன் புத்திர சோகத்தினால் பீடிக்கப்பட்டு மெய்மறந்திருந்த கௌசல்யை யும் சுமித்திரையும் விரைவில் எழுந்திருந்து அரசனைத் தொட்டு அவன் இறந்தானென்று நிச்சயித்துக் கீழேவிழுந்து புரண்டு அழுதனர். பிறகு கைகேயி முதலியவர்களும் அங்குவந்து அரசனது மரணம் தெரிந்து புலம்பினர். அம் மாளிகை முழுவதும் அழுகுரல் மயமாக ஆயிற்று.

அறுபத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று,

---

அறுபத்தாறுவது ஸர்க்கம்.

## தசரதன் மேனியை எண்ணெய்க் கடாரத்தில் இடுதலும்; ராஜஸ்திரீகள் கைகேயியை நிந்தித்துக்கொண்டே புலம்புதலும்.

கௌசல்யை அரசனது தலையைத் தன் துடைமேல் வைத்துக்கொண்டு கைகேயியைப் பார்த்து "குரூர சுபாவ முடையவளே! உன் கருத்து நிறைவேறிவிட்டது. மன்ன னும் மாண்டனன். ராமனும் வனமேகினன். நீயே இந்த ராஜ்ஜியத்தைத் தலையில் கட்டிக்கொண்டு அநுபவிப்பாயாக. ஐயோ! நான் என் கணவனையும் மகனையும் இழந்து அநாதை யானேனே! ஒரு கூனியின் நிமித்தமாக ராஜ்ஜிய ஆசை

கொண்டு நீ ரகுகுலத்து அரசர்களின் சந்ததியைப் பாழாக்கி விட்டனையே! ஐயோ! இவ்விஷயத்தை ஜனகமகாராஜர் கேட்கில் புழுவாய்த் துடித்துப் பரிதபிப்பாரே! ராமன் பிழைத்திருந்தபோதிலும் இவ்விடத்திராமையால் நாசமடைந் தாற்போலவே ஆய்விட்டனன். ஐயோ! அவனும் சீதையும் திக்கற்றவர்களாய்க் காட்டில் திரியும்படியாயிற்றே! ஜனகர் இந்த விருத்தாந்தத்தைக் கேட்கில் துக்கமேலெழும்பெற்றுப் பிராணனை விட்டுவிடுவார். நான் பதிவிரதையாகையால் என் கணவனை ஆலிங்கனம் செய்துகொண்டு அக்னியில் குதித்து உயிர்விடப் போகிறேன். நீ சுகமாகக் கண்குளிரப் பார்ப் பாயாக!" என்று கதறலிட்டனள்.

பிறகு மந்திரிகள் வசிஷ்டாதிகளின் உத்தரவின்படி அரசனது சரீரம் கெடாவண்ணம் எண்ணெய்க் கடாரத்தில் இட்டு வைத்தனர். அச்சமயம் ராஜபத்தினிகளனைவரும் "ஐயோ! ஐயோ! நாதனே! உன்னையும் உன் அருமை மகனை ராமனையும் விட்டுத் தவிக்கும் எங்களுக்கு இனி யாதுகதி? ராஜ்ஜியம் கைபுகுந்த செருக்கினால் கைகேயி எங்களைத் திரஸ் காரம் செய்வளே!" என்று புலம்பினர். இச்சமயம் சூரியனும் அஸ்தமித்தனன். இருளும் பயங்கரமாகச் சூழ்ந்தது. பட் டணத்து ஜனங்களனைவரும் அளவில்லாத மனவருத்தத் துடன் புலம்பிக் கைகேயியை வைதுகொண்டிருந்தார்கள்.

அறுபத்தாறுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## அறுபத்தேழாவது ஸர்க்கம்.

### மார்க்கண்டேயர் முதலிய முனிவர்கள் உடனே பரதனை வரவழைக்க வேணுமென்று வசிஷ்டரிடம் கூறுதல்.

பிறகு சூரியோதயமானதும் அரசனை அபிஷேகம் செய்யும் பிராமணர்களான மார்க்கண்டேயர், மௌத்கல்யர்,

வாமதேவர், காசியபர், காத்யாயனர், கௌதமர், ஜாபாலி முதலியவர்கள் சபைகூடி ராஜ புரோஹிதரான வசிஷ்டரை நோக்கி "இப்பொழுது இந்தப் பூமி நாதனற்றுப்போயிற்று; இதனால் நமக்குக் கடந்த ஓர் இரவு பலநூறு இரவுகள்போல் தோன்றி நம்மை வாட்டிற்று. இனி இக்ஷ்வாகு வம்சத்தில் பிறந்த ஒரு அரசகுமாரனை அரசனாக ஏற்படுத்தவேண்டும். அரசனில்லாத ராஜ்ஜியம் நாசமடையும். மழைபெய்யாது. துஷ்டர்கள் அதிகமாவார்கள். விரோதிகள் படையெடுப்பார்கள். ஜனங்களுக்கு க்ஷேமமுண்டாகாது. பிராமணர்கள் யஜ்ஞயாகங்களை விக்கினமின்றிச் செய்ய முடியாது. திருடர்கள் ஸ்திரீகளையும் ஐசுவரியங்களையும் கொள்ளைகொள்வார்கள். சத்தியம் மறைந்து அதர்மம் மேலெழும். ஜனங்கள் தெய்வமேயில்லையென்று நாஸ்திகர்களாய் விடுவார்கள். எப்படியானால் கண் சரீரத்திற்கு நன்மையையே செய்து கெடுதியைப் போக்குகின்றதோ அப்படியே அரசனும் ராஜ்ஜியத்திற்கு நன்மைகளைச் செய்து தீமைகளைப்போக்கி சத்தியத்தையும் தருமத்தையும் விளங்கச் செய்கிறான். அரசனே ஜனங்களுக்குத் தாய் தந்தையாய் இருப்பவன். யமன் தண்டனை மாத்திரமே செய்வான். குபேரன் செல்வத்தைமாத்திரம் கொடுப்பான். இந்திரன் ஆட்சிமாத்திரமே புரிவான். வருணன் நன்னடத்தைகளைமாத்திரமே ஏற்படுத்துவான். அரசனென்றால் கீழ்ச்சொன்ன எல்லாவற்றையும் தான் ஒருவனே செய்து அந்த யம குபேராதிகளை அதிசயித்திருப்பவன். ஆகையால் பிராமணோத்தமரே! ராஜ்ஜியம் க்ஷேமமடையும்பொருட்டு, தானதர்ம சுபாவனும் இக்ஷ்வாகு வம்சத்தில் உதித்தவனுமான ஒரு ராஜகுமாரனை ராஜாவாகப் பட்டாபிஷேகஞ் செய்வீராக" என்றுரைத்தனர்.

அறுபத்தேழாவது ஸர்க்கம் முற்றிற்று

## அறுபத்தெட்டாவது ஸர்க்கம்.

### பரதனை அழைத்து வருவதற்காக வசிஷ்ட முனிவரால் அனுப்பப்பட்ட தூதர்கள் கேகய நாட்டுக்குச் செல்லுதல்.

அவர்களது வார்த்தையைக் கேட்ட வசிஷ்டமுனிவன் "அரசன் பரதனுக்கு ராஜ்ஜியம் கொடுத்திருக்கும்போது நாம் ஆலோசிக்கவேண்டியது என்ன இருக்கிறது? ராஜகிருஹம் என்னும் பட்டணத்தில் தனது அம்மான் வீட்டில் சுகமாய் வசித்துவரும் பரதனையும் அவன் தம்பி சத்துருக்கனனையும் அழைத்துக்கொண்டுவர விரைவாகப் பிரயாணம் செய்யவல்ல தூதுவர்களை இப்பொழுதே அனுப்புவேன்" என்றுகூறி சித்தார்த்தன், விஜயன், ஜயந்தன், அசோகன், நந்தனன் முதலிய சிறந்த தூதுவர்களையழைத்து "நீங்கள் பரதனிடம் சென்று அவனுக்கு நம் எல்லாருடைய க்ஷேமங்களையும் தெரிவித்து 'ஒரு காரியம் காலம்விஞ்சிப் போகின்றது. நீயே அதைச் செய்யவேண்டியிருப்பதால் தாமதஞ் செய்யாமல் புறப்பட்டு வரவேண்டும்' என்று சொல்வீர்களாக. ஆனால் ராமன் வனம் சென்றதைப்பற்றியாவது அரசன் முடிந்ததைப்பற்றியாவது எள்ளளவும் சொல்லவேண்டாம். கேகய ராஜனுக்கும் பரதனுக்கும் காணிக்கையாகப் பலவித வஸ்திரங்களையும் ரத்னாபரணங்களையும் கொண்டு செல்வீர்களாக" என்று உத்தரவிட்டனன்.

தூதர்களும் பிரயாணமாகி அயோத்திக்கு மேற்றிசையிலுள்ள அவதானமென்னும் மலைக்கும் அதற்கு மேலண்டையிலிருக்கிற பிரலம்பமலைக்கும் இடையிலுள்ள மாலினி நதியின் கரையில் வடதிசையாகப் பிரயாணம் செய்தனர். பிறகு அஸ்தினாபுரத்தருகில் கங்கையைக்கடந்து, ஜாங்கல, பாஞ்

சால தேசங்களையும் கடந்து இக்ஷுமதி முதலிய நதிகளையும் தாண்டி ஆங்காங்குள்ள வாவிகளையும் குளம் குட்டைகளையும் ஓடைகளையும் சிங்கம் முதலிய விலங்குகளையும் பார்த்துக் கொண்டே பொழுதுபோயினும் பிரயாணத்தை நிறுத்தாமல் இரவிலும் வெகுவாய் நடந்து சென்று அன்றைத் தினம் இரவிலேயே ராஜகிருஹமடைந்தனர்.

அறுபத்தெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## அறுபத்தோன்பதாவது ஸர்க்கம்

### அன்றிரவு கேகய நாட்டில் பரதன் தான் கண்ட தீய கனவைத் தன் தோழன்மாரிடத்துக் கூறுதல்.

அத்தூதர்கள் போய்ச் சேர்ந்த அன்றிரவே பரதனுக்கு மனவருத்தத்தை விளைவிக்கும்படியான ஒரு கனு உண்டாயிற்று. அது விடியும்பொழுது நேர்ந்தபடியால் அது தவறாது பலிக்குமேயென்று பரதன் ஏங்கியிருந்தனன்.

பரதனது நண்பர்கள் அவனது வருத்தத்தைப் போக்கும் வண்ணம் வீணை வாசித்தனர். ஹாஸ்யம் செய்தனர். ஆடல் பாடல்கள் நிகழ்த்தினர். அந்தோ! எது செய்யினும் பரதனுக்குச் சந்தோஷமென்பதே சிறிதும் உண்டாகவில்லை. இதைக்கண்ட அவனுடைய உயிர் நண்பன் ஒருவன் அதன் காரணத்தை வினவ, பரதன் கூறுகின்றான்—"நண்ப! இன்று விடியற்காலையில் நான் ஒரு கெட்ட கனவு கண்டேன். அதில் என் தந்தை அழுக்கடைந்த சரீரத்துடன் தலைமயிரை விரித்துக்கொண்டு ஓர் மலையுச்சியிலிருந்து கலங்கின ஓர் சாணிமடுவில் விழுவதாகக் கண்டனன். அந்தோ! அவர் எண்ணெயை உடம்பெல்லாம் பூசி எள்ளோரையையுண்டதாகவுங்

கண்டேன்; மேலும் கடல் உலர்ந்ததாகவும், சந்திரன் பூமியில் விழுவதாகவும், உலகம் இருள் மூடப்பெற்றதாகவும், எரியும் நெருப்பு அணைந்துபோவதாகவும், பூமி வெடித்ததாகவும், மரங்கள் பட்டுப்போவனவாகவும், மலைகள் சிதறிப் புகைவனவாகவும் கண்டேன். இன்னும் என் தந்தை கறுப்பு வஸ்திரம் தரித்து இரும்பு மணையில் உட்கார்ந்திருக்கவும் கண்டனன். பின்னும் அம்மன்னவன் சிறந்த பூமாலையைச் சூடிச் செஞ்சந்தனம் பூசி, கழுதைகளால் இழுக்கப்பட்ட தேரில் ஏறிக்கொண்டு தென்திசை நோக்கிச் செல்வதாகவும் கண்டனன். கனவில் எந்த மனிதன் கழுதையினுல் இழுக்கப்பட்ட தேரின்மேல் ஏறிக்கொண்டு போகப் புலப்படுவனே அவன் மரணமடைவது நிச்சயமென்று நீ கேட்டதில்லையோ? ஆகையால் என் தந்தைக்கோ, ராமனுக்கோ, லக்ஷ்மணனுக்கோ அல்லது எனக்கோ கெடுதல் உண்டாகப்போவது நிச்சயம். இதனுல்தான் நான் மிகவும் திகிலடைந்து கிடக்கிறேன்" என்றனன்.

**அறுபத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.**

---

## எழுபதாவது ஸர்க்கம்

## பரதன் கேகய நாட்டிலிருந்து அயோத்திக்குப் புறப்படுதல்.

இச்சமயம் தூதர்கள் அரண்மனையில் நுழைந்து கேகயராஜனும் அவனது மகனும் எதிர்கொண்டு செய்யும் பூஜைகளைப் பெற்றுக்கொண்டு கேகயராஜனை நமஸ்காரம் செய்துவிட்டுப் பரதனையணுகி "ராஜகுமாரா! புரோகிதர் உன்னிடம் சகலருடையவும் க்ஷேமத்தை அறிவிக்கச் சொல்லி

னர். ஆனால் நீ வெகு சீக்கிரமாக அயோத்திக்குப் புறப்பட்டு வரவேண்டுமாம். ஒருகாரியம் காலம் தவறிப்போகிறது. அதை நீயே செய்யவேண்டுமாகையால் வேகமாகப் புறப்பட்டு வரும்படி சொல்லினர். இதோ உன் பாட்டனுக்காகவும் உன் மாமனுக்காகவும் விலையுயர்ந்த பொருள்கள் கொண்டு வரப்பட்டிருக்கின்றன. இவற்றை அவர்களுக்குக் கொடுத்து உத்தரவு பெற்றுக்கொண்டு சீக்கிரம் பிரயாணமாவாய்" என்றனர்.

பரதன் தூதர்களை நோக்கி "என் தந்தையும் அண்ணன்மார்களும் க்ஷேமமா? தாய்மாரான கௌசல்யையும் சுமித்திரையும் சுகமாய் இருக்கிறார்களா? தன் காரியத்தையே பாராட்டும் தன்மையுடையவளும், குரூரம், கோபம், கர்வம் இவற்றிற்கிருப்பிடமானவளுமான என் அன்னை கைகேயி ரோகங்களின்றி சௌக்கியமாகவிருக்கிறாளா? நீங்கள் வரும் போது தன் பந்துக்களுக்கு அவள் என்ன சமாசாரம் சொல்லினள்?" என்று வினவினன்.

அதற்கு அத்தூதுவர்கள் ஒரே வார்த்தையில் "அனைவரும் சௌக்கியமாய் இருக்கிறார்கள். நீ சீக்கிரம் புறப்படுவாயாக" என்றனர். பரதன் தன் பாட்டனிடமும் மாமனிடமும் உத்தரவு பெற்றுக்கொண்டு அவர்களால் தனக்குக் கொடுக்கப்பட்ட அளவற்ற சதுரங்க சேனைகளோடும் ஐசுவரியங்களோடும் வெகு சீக்கிரமாகத் தன் மாளிகையினின்றும் புறப்பட்டனன்.

எழுபதாவது ஸர்க்கம் முற்றிற்று.

## எழுபத்தோராவது ஸர்க்கம்.

## பரதன் ஏழு நாட்களில் அயோத்தி நகர் வந்து சேர்ந்து கொடிய நிலைமை கண்டு குழம்பினமை கூறல்.

பிறகு பரதன், ஸுதாமை, ஹ்லாதினி, சதத்ரு, சிலா வஹை, குலிங்கா, யமுனை முதலிய நதிகளையும், அபரபர்ப்படம், சல்யகர்த்தனம் முதலிய கிராமபட்டணங்களையும், சைத்ரரதம், பாருண்டம் என்கிற வனங்களையும் கடந்து சென்று அம்சுதானமென்னும் தேசத்தை யடைந்து கங்கையைத் தாண்டி தர்மவர்த்தனமென்னும் கிராமம் சேர்ந்தனன்.

அங்குள்ள ஓர் வனத்தில் அன்றிரவைக் கழித்து, விடிந்தவுடன் கிழக்கு முகமாகப் புறப்பட்டு உஜ்ஜிஹானை யென்னும் நகரத்தின் உத்தியான வனத்தை யடைந்தனன். பிறகு அங்கிருந்து புறப்பட்டு ஸர்வதீர்த்தமென்னும் கிராமத்தையடைந்து அவ்விடம் ஒரு இரவைக் கழித்து, பிறகு புறப்பட்டு, உத்தானிகை, கபீவதி, ஸ்தாணுமதி, கோமதி முதலிய நதிகளையும், ஹஸ்திப்ருஷ்டகம், லௌஹித்தியம் முதலிய பட்டணங்களையும் கிராமங்களையும் கடந்து கலிங்க நகரையடைந்து அதிலுள்ள ஸாலவனம் சேர்ந்து, சைன்யங்களுடன் சற்று இளைப்பாறினன். உடனே அந்த ஸால வனத்தை அந்த இரவிலேயே கடந்து சூர்யோதயமாகையில் அயோத்யா புரியைக் கண்டனன். கடைசியாக எட்டாவது நாள் அயோத்தியின் எல்லையில் நுழைந்தனன்.

அப்பொழுது பரதன், நகரம் மிகவும் பாழடைந்திருப்பதைக்கண்டு சாரதியை நோக்கி "அப்பா! சாரதீ! என் நகரத்தில் ஜனங்கள் சந்தோஷமாய் இருக்கவில்லை? எவரும்

நான் முன் பார்த்தபடி குதிரை முதலிய வாகனங்களில் ஏறிக்கொண்டு நகரத்தினின்றும் வெளியிலாவது, வெளியிலிருந்து உள்ளேயாவது ஏன் உல்லாசமாக உலாவவில்லை? செடி கொடிகளெல்லாம் ஏன் வாடி வதங்கித் துவண்டிருக்கின்றன. ஏன் பட்சிகள் பாடவில்லை? மலைகளெல்லாம் ஏன் பிளவுபட்டிருக்கின்றன? மரங்களெல்லாம் ஏன் இலைகளை உதிர்த்து விட்டன? காற்று ஏன் சுகமாய் வீசவில்லை? ஏன் முன்போல் வாத்திய ஒலிகளும் கீதங்களும் கேட்கவில்லை?" என்று கேட்டுக்கொண்டே அயோத்தியின் மேற்கு வாசற்படியான 'வைஜயந்தம்' என்னும் வாயிலில் நுழைந்தனன்.

பின்னும் அவன் அந்த சாரதியை நோக்கி "ஏன் எல்லாரும் சந்தோஷமின்றி வருத்தத்துடன் காணப்படுகின்றனர்? என்னை வசிஷ்டர் சீக்கிரமாக அழைத்துவரச் சொன்ன காரணந்தானென்ன? வீடுகளெல்லாம் லக்ஷ்மி தாண்டவமின்றி மூடப்பட்டு ஒளி மழுங்கப்பெற்றிருப்பதேன்? சமஸ்தமான ஜனங்களும் முகவொளி யிழந்து கண்ணீர் வடிய தீனமான குரலில் அழுது வருந்துவதேன்?" என்று கேட்டுக்கொண்டே அப்பரதன் முன்பு ஒருக்காலும் தன் பட்டணத்தில் உண்டாகாதவைகளும் மனத்திற்குப் பிரியமல்லாதவைகளுமாகிய நிலைமைகளையும் மற்றும் பல கெட்ட சகுனங்களையும் கண்டு மனக்கலக்கமடைந்து தந்தையின் மாளிகையினுள் நுழைந்தனன்.

எழுபத்தோராவது ஸர்க்கம் முற்றிற்று.

## எழுபத்திரண்டாவது ஸர்க்கம்

## தந்தை மரணமடைந்ததைப் பரதன் கைகேயியிடம் கேள்விப்பட்டு வருந்துதலும், ராஜ்யத்தைப் பெற்றுக்கொள்ளுமாறு கைகேயி வேண்டுதலும்.

*தந்தையை அங்குக் காணப்பெறாத பரதன் தன் தாயான கைகேயியின் மாளிகைக்குச் சென்று அவளைக்கண்டு பாதங்களில் வீழ்ந்து வணங்கினன். கைகேயி அவனை உச்சி மோந்து முத்தமிட்டு மடியிலிருத்தி அவனுடையவும் தன் தகப்பன் சகோதரன் இவர்களுடையவும் க்ஷேமங்களை வினவினள். பரதன் தான் புறப்பட்டு ஏழு ராத்திரிகள் சென்றன வென்றும் அனைவரும் ராஜகிருஹத்தில் சௌக்கிய மென்றும் கூறி "அம்மா! உன் அழகிய படுக்கையிலேயே எப்பொழுதும் காணப்படக் கூடிய தந்தையார் எங்கே? அவரை முன்னதாக நான் நமஸ்கரிக்க விரும்புகின்றனன். அவர் ஒருக்கால் மூத்த மனைவியான கௌசல்யையின் மாளிகையில் இருக்கிறாரா?" என்று அவளுடன் வினவினன்.*

*கைகேயி தான்சொல்லப்போகும் விஷயம் தனக்குப் போல் பரதனுக்கும் பிரியமாயிருக்குமென்றெண்ணி "குழந்தாய்! பரதா! உன் தந்தை பரகதியடைந்தனர்." என்று கூற அது கேட்ட பரதன் மனத்தளர்ச்சியடைந்து "ஐயோ! தந்தையார் மாண்டனரோ?" என்று கூவியவண்ணம் கீழே விழுந்து மூர்ச்சித்தான்.*

*பிறகு கைகேயியினால் தேற்றப்பட்டு பிரக்ஞை யடைந்த பரதன் கல்லும் கரையும் வண்ணம் தன் தந்தையை நினைத்துப் புலம்பினன். பின்னுமவன் கைகேயியை நோக்கி "அரசர் எந்த வியாதியினால் பீடிக்கப்பட்டு மாண்டார்?*

அவர் இறக்கும் தருவாயில் என்னென்ன விஷயங்கள் கூறினார்? என்னைப்பற்றி என்ன கூறினார்?" என்று கேட்டனன்.

கைகேயி அவனை நோக்கி "குழந்தாய்! உன் தந்தை கடைசியாகச்சொன்ன வார்த்தையாவது 'ஐயோ! ராமா! சீதே! லக்ஷ்மணா! உங்களை எவர் மறுபடியும் கண்களால் காணப்பெறுவர்களோ, அவர்களே பாக்கியசாலிகளாவர்' என்பதே" என்று கூறினள். இதைக்கேட்ட பரதன் ராமனும் சீதையும் லக்ஷ்மணனும் பட்டணத்தில் இல்லை யென்று இரண்டாவது துக்க சமாசாரத்தைத் தெரிந்து கொண்டவ னாய் மிகவும் துக்கித்து முகவொளியிழந்து "ஐயோ! அம்மா! எனதன்புள்ள அண்ணன் சீதையோடும் லக்ஷ்மணனோடும் எங்குச் சென்றனன்? சீக்கிரமாகக் கூறுவாய்" என்றனன்.

கைகேயி தான்செய்த காரியத்தால் பரதன் சந் தோஷிப்பானென்று நினைத்து ராமன் காடு சென்ற காரணத் தையும் அதனால் மன்னவன் இறந்த விதத்தையும் அவனுக் குத் தான் ராஜ்ஜியம் சம்பாதித்து வைத்திருப்பதையும் விவர மாகக் கூறினள்.

பின்னுமவள் அவனை நோக்கி "குழந்தாய்! நீ ராஜநீதி தெரிந்தவன். மன்னவன் மரணத்தையும், ராமன் பிரிவை யும் நீ ஒரு பொருளாகக் கருதாமல் உனக்குக் கிடைத் திருக்கும் ராஜ்ஜிய லக்ஷ்மியை சந்தோஷமாகப் பெற்று அநுபவிக்கக்கடவாய். சீக்கிரம் தந்தைக்குச் செய்யவேண்டிய ஈமக்கடன்களை நிறைவேற்றி நான் சொல்லுகிறபடி நட, உனக்கு சகல மங்கலங்களும் உண்டாகுக." என்று கூறினள்.

எழுபத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

## எழுபத்து மூன்றாவது ஸர்க்கம்

### பரதன் கைகேயியை இடித்துக் கூறுதல்.

இங்ஙனம் கூறக்கேட்ட பரதன் "அடி! பாபிஷ்டே! அரசனை மரணம் அடையச்செய்து ராமனையும் அடித்துத் துரத்தி விட்டனையே! இந்த ராஜ்ஜியத்தினால் எனக்கென்ன பயன்? ஐயோ! நீ எங்கள் குலம் நசித்துப்போக வந்து தோன்றிய நமனை யொத்தவளா யிருக்கின்றனை. அரசன் நெருப்பைக் கட்டிக்கொள்வது போல் உன்னைக் கட்டிக்கொண்டனன். கணவனைக் கொன்ற பாதகி! ராமனை ஏன் வனம் போகச்சொல்லினை? அவன் என்ன கெட்டகாரியம் செய்தானென்று அவனை விரட்டியடித்தனை? அதனால் நீ யாது பயனையடைந்தனை? நீ மிகவும் கெட்ட குணமுடையவள். பேராசை பிடித்தவள். எனக்கு ராஜ்ஜியம் வரவேண்டுமென்ற ஆசையினாலன்றோ இப்படிப்பட்ட பெருத்த அனர்த்தத்தை விளைவித்தனை? நான் ராம லக்ஷ்மணர்களில்லாமல் எவ்விதம் தரித்திருக்க முடியும்? அவர்களிருவருமன்றோ என் சக்தி விசேஷம்? ராமனுக்குத் தன் தாயிடத்துப் போலவே உன்னிடத்தும் பக்தியும் அன்பும் இல்லாமலிருக்கும் பக்ஷத்தில் உன்னை இன்றே நான் தொலைத்திடுவேன். 'அவனது உள்ளம் கன்றுமே!' என்று உன்னை நான் ஒன்றும் செய்யமுடியவில்லை.

பாப புத்தி யுடையவளே! உனக்கு ஏன் இந்த துர்ப்புத்தி யுண்டாயிற்று? நமது குலத்தில் எப்பொழுதாவது மூத்தவனிருக்க இளையவன் மகுடம் புனைந்து கொள்ளும் வழக்கமுண்டா? அல்லது உன் தாய்வீட்டு ராஜாக்களுக்காகிலும் இத்தகைய வழக்க முண்டா? ஐயோ! மிகுந்த மேன்மையுற்ற கேகயராஜனின் வயிற்றில் பிறந்த உனக்கு எதனால் இப்படிப்

பட்ட மதிகேடு நேரிட்டது: இப்பொழுது உன் இஷ்டத்தை நான் நிறைவேற்றுமையோடு உனக்குப் பிரியமல்லாதவனும் எனக்குப் பிரியனுமான என் ராமனை இப்பொழுதே சென்று காட்டினின்று அழைத்து வந்து அவனுக்கு அடிமையாகப் போகிறேன்.'' என்று கூறி மீளவும் சோகம் மேலிட்டுப் பலவாறு கதறினன்.

எழுபத்து மூன்ருவது ஸர்க்கம் முற்றிற்று

---

## எழுபத்து நான்காவது ஸர்க்கம்

### பரதன் தனக்குள்ள ராம பக்தியைக் கைகேயியிடத்தில் விரிவாகக் கூறி மூர்ச்சையடைதல்.

பின்னும் அந்தப் பரதன் கைகேயியை நோக்கி "தருமத்தைத் துறந்த துர்நடத்தை யுடையவளே! உன் தாயைப் போலவே ராஜ்ஜியத்தினின்றும் தொலைந்து போவாயாக. அடி பாபிஷ்டே! நான் இனி உனக்கு இறந்தவனைப் போன்றவனே; நீ அழுதுகொண்டிருப்பாயாக. நீ நரகத்திற்கே போகப் போகிறாய். ஐயோ! உன் பொருட்டல்லவோ ராமன் காடு சென்றான். அரசன் உயிரிழந்தான். 'இந்தப் பரதன் தாய் மூலமாக அண்ணனைக் காட்டிற்கு அதட்டி ஓட்டித் தந்தையைக் கொன்றனன்' என்கிற அபகீர்த்தி எனக்கு உன்னாலல்லவோ நேரிட்டது. கணவனைக் கொன்ற காதகியே! நீ கேகயர் கோனுக்குப் பிறந்தவளல்லை. அவர் குலத்தைக் கெடுக்க வந்த ராக்ஷஸியே ஆவாய். உனக்குப் பாப காரியமே முக்கியம். ஸ்ருஷ்டிக்கப் பட்டிருக்கிற நரகம் உனக்குப் போதாதே! மகன் தாய்க்கு மற்றெல்லோரைக் காட்டிலும் மிகுந்த அன்பிற் கிடமானவன். எனவே

கௌசல்யைக்கு ராமன் எப்படிப் பட்டவனென்பது உனக்குத் தெரியவில்லையா?

முன்பொருகால் மேன்மையுடைய காமதேனுவானது பாரத்தைச் சுமந்து வருந்தி மூர்ச்சையடைந்தவைகளும், தன் வம்சத்தில் பிறந்தமையால் தனக்குப் பிள்ளைகளுமாகிய இரண்டு எருதுகளைக் கண்டது. கண்டதும் துயரமடைந்து கண்ணீர் வடித்தது. அச்சமயம் இந்திரன் அங்கு வந்து அது வருத்தமடைந்ததின் காரணத்தை யுணர்ந்து ஆச்சரியப்பட்டு 'ஹா! இந்தக்காமதேனு பலவாயிரம் பிள்ளைகளான காளைகளைப் பெற்றபோதிலும் இரண்டு பிள்ளைகளின் கஷ்டத்தைப் பார்த்துச் சோகிக்கின்றதே!' என்றனன். இதிலிருந்து ராமன் ஒருவனை மாத்திரமே பிள்ளையாகவுடைய கௌசல்யைக்கு அவனுடைய பிரிவாற்றாமையால் எவ்வித மான மனவருத்த முண்டாகுமென்பதை நீயே நினைத்துப் பார். அப்படிப்பட்ட 'பதிவிரதையான கௌசல்யை ராமனைத் துறக்கும்படி செய்த நீ பரலோகத்திலும் துக்கத்தையே யனுபவிப்பாயாக. நான் ராமனையும் தந்தையையும் பரிபூரணமாகப் பூஜித்து மிகுந்த கீர்த்தியை யடையப்போகிறேன். ராமனைக்காட்டிலிருந்து அழைத்துக்கொண்டுவந்து அவனுக்குப் பதிலாக நானே வனம் செல்லப்போகிறேன். பாபி! இக்கொடிய மகாபாதகத்தைச் செய்த நீ காடாவது செல். நெருப்பிலாவது விழு. நான் ராமனுக்கே ராஜ்ஜியத்தை யளித்து என் பாபத்தைப் போக்கிக்கொள்ளப்போகிறேன்." என்று கூறிக்கொண்டே கீழே விழுந்தனன்.

எழுபத்துநான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

## எழுபத்தைந்தாவது ஸர்க்கம்.

### பரதன் கௌசலையினிடத்தில் தனது ராமபக்தியை விரிவாகக்கூறிப் பலவாறு சபதங்கள் செய்தல்.

வெகுநேரஞ் சென்றபின்பு பிரக்ஞையடைந்த பரதன் மறுபடியும் கைகேயியை நிந்திக்கத்தொடங்கி அங்குள்ள சுமந்திரன் முதலிய மந்திரிகள் கேட்கும்வண்ணம் உரத்த குரலில் "நான் ஒருகாலும் ராஜ்ஜியத்தை விரும்பவில்லை. அதற்காகத் தாயுடன் கலந்து ஆலோசிக்கவுமில்லை. அதைப் பற்றி அரசன் ஆலோசித்த விஷயமும் எனக்குத் தெரியாது. சத்துருக்கனனுடன் நான் வெகு தூரதேசத்திலிருந்தது உங்களுக்குத் தெரியுமல்லவா? ராமனுக்கு வனவாசம் நேர்ந்த விஷயமும் எனக்குத்தெரியாது; எல்லாம் விபரீத சம்பவம்" என்று கூக்குரலிட்டு அழுதனன்.

பிறகு பரதன் சத்ருக்கனன் பின்தொடர, கௌசல்யை யின் மாளிகைக்குச்சென்று மனவருத்தத்துடன் அழுது கொண்டே அவளைக்கட்டிக்கொண்டனன். கௌசல்யை அவனை நோக்கி "உன் தாயின் கொடுஞ்செய்கையால் ராஜ்ஜியம் கிடைத்திருக்கிறது. ஐயோ! என் ராமனை மரவுரி தரித்து வனத்திற்கனுப்பினளே! இதனால் அவளுக்கு என்ன லாபம்? ராமனை வனத்திற்கனுப்பாமலே ராஜ்ஜியம் பெறக்கூடாதா? அந்தக் கைகேயி இப்பொழுதே என்னையும் சுமித்திரை யையும் காட்டிற்கு அனுப்பிவிடுவளாயின் யுக்தமாயிருக்கும். அல்லது நீயாவது எங்களை ராமனிடம்கொண்டு விட்டுவிடுவா யாக" என்றனள்.

இப்படிக் குரூரவாக்கியங்களால் தன்னை வைத கௌசல்யையை, ஒரு பாபத்தையுமறியாத பரதன் வணங்கி மிகவும் மூர்ச்சையடைந்து பலவாருகப் புலம்பிப் பிறகு

தெளிவு பெற்றனன். பிறகு அவன் கைகுவித்தவண்ணம் "அம்மா! ராமனிடத்தில் எப்பொழுதும் எனக்குத் திடமான பக்தி இருக்கிறதென்பது உனக்குத்தெரியாதா? தெரிந்தும், இவ்விடத்துச் செய்திகளை எள்ளளவும் அறியாமல் எந்தப் பாபத்தையும் செய்யாமலிருக்கிற என்னை எதுக்காக நிந்திக்கின்றனை? நான் ராமன் காடுபோக சம்மதித்திருந்தால் மகாபயங்கரமான பாபங்களைச் செய்தவனாகக்கடவேன். பசுவைக்கொன்றவனும், சிசு ஹத்தி செய்தவனும், பிரம்ம ஹத்தி செய்தவனும், குரு நிந்தை செய்தவனும், ஸ்நேகத் துரோகம் செய்தவனும், அரக்கு, மீன், மாம்ஸம், விஷம் இவைகளை விற்றுக் குடும்ப போஷணம் செய்கிறவனும், குருவின் மனைவியைக் காதலித்தவனும் எந்தெந்த பாபங்களையடைவார்களோ அந்த பாபங்களெல்லாம் நான் (ராமன் வனம்போக சம்மதித்திருக்கில்) அனுபவிக்கக்கடவேனாக. இன்னும் தரித்திரம், மக்கட்பேறின்மை, ரோகம் அற்ப ஆயுள் இவற்றினால் பிடிக்கப்பட்டுத் தவிப்பேனாக." என்று புலம்பி, தனக்கு ராமனிடமுள்ள அளவுகடந்த பக்தியைக் கௌசல்யை நன்குணருமாறு செய்தனன். இங்ஙனம் கூறிச் சபதங்கள் செய்த பரதன் மிகுந்த பரிதாபமாய்க் கீழே விழுந்து மூர்ச்சித்தனன்.

அந்தப் பரதனுடைய மனப்பான்மையை நன்குணர்ந்த கௌசல்யை "என்னப்பா! பாக்கியவசத்தினால் உன் மனம் தருமத்தினின்றும் தவறாதிருக்கிறது. என் விஷயத்தில் லக்ஷ்மணனைப்போல் நீயும் பிரதிக்கினை தவறாதவனாயிருக்கிறாய். ஆகையால் ஸத்புருஷர்கள் பெறும் லோகங்களைப் பெறுவாயாக" என்று ஆசீர்வதித்தவண்ணம் பரதனை யெடுத்துத் தன் துடையின்மீது உட்காரவைத்துக் கட்டியணைத்து

முத்தமிட்டு மனவருத்தத்துடன் கண்ணீர் பெருக்கினள். பரதனும் அடிக்கடி சோகத்தினால் புலம்பி அறிவிழந்து பெருமூச்செறிந்துகொண்டிருந்தான். இங்ஙனம் அன்றிரவு முழுதும் கடந்து சென்றது.

எழுபத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று,

---

## எழுபத்தாறவது ஸர்க்கம்

### தசரத மன்னவனுக்கு ஈமக்கடன்கள் நிறைவேறுதல்.

மறுநாள் பொழுது விடிந்ததும் வசிஷ்ட முனிவர் பரதனை நோக்கி "ராஜகுமாரா! நீ இதுவரை துக்கப்பட்டது போதும். இனிமேல் துக்கப்படத்தகாது. உனக்கு மங்களம் உண்டாகுக. அரசன் சுவர்க்கம் அடைவதற்குரிய சரமச் சடங்குகளை உடனே நடத்துவாயாக." என மொழிந்தனர்.

உடனே அரசனை எண்ணெய்க் கொப்பரையினின்றும் எடுத்துக் கழுவி அலங்காரங்கள் செய்து பல்லக்கிலேற்றினர். ருத்விக்குகளும் புரோகிதர்களும் கார்ஹபத்தியம் முதலிய நெருப்புக்களை விதியின்படி கொண்டு வந்தனர். பரிசாரகர்கள் மன்னனை வளர்த்திக் கிடந்த பல்லக்கைத் தூக்கிச் சென்றனர். ஜனங்கள் பொன்னாலும் வெள்ளியாலும் செய்யப்பட்ட புஷ்பங்களையும் பலவித வஸ்திரங்களையும் வழியில் இறைத்துக்கொண்டு அரசனுக்கு முன்னே சென்றனர். மற்றுஞ் சிலர் சந்தனப் பொடிகளையும் அகில் சூர்ணங்களையும் ஸரளமென்னும் தூப திரவியத்தையும் வாசனையுள்ள காஷ்ட சூர்ணத்தையும் மற்றும் பல வாசனைத் திரவியங்களையும் இரண்டு பக்கங்களிலும் பிடித்துக்கொண்டு

வருகிற பொன் வெள்ளி மயமான குமிட்டிகளில் இறைத்துக் கொண்டே சென்றனர்.

பிறகு ருத்விக்குகள் அரசனது சரீரத்தையெடுத்துச் சிதையின்மேல் படுக்கவிட்டனர். பரதனைக்கொண்டு அக்னிப் பிரதானம் செய்வித்து ஈமக்கடனுக்கு உரிய மந்திரங்களை ஜபித்தார்கள். சிலர் ஸாமகானஞ் செய்தனர். அந்தப்புரத்து ஸ்திரீகளும் அங்கு வந்து சேர்ந்து கதறவிட்டு அழுதனர். ருத்விக்குகள் (புரோகிதர்கள்) கௌஸல்யை முதலிய ஸ்திரீகளையும் பரதனையும் கொண்டு, அசுவமேதம் முதலான பல யாகங்கள் செய்த அரசனுக்கு அப்ரதக்ஷிணமும் பிரதக்ஷிணமும் செய்வித்து ஸம்ஸ்காரத்தை சாஸ்திர விதிப்படி செய்து முடித்தனர்.

அரசனது மனைவிகளும் மந்திரிகளும் புரோகிதர்களும் பரதனுடன் கூடி அரசனுக்கு ஜலதர்ப்பணம் செய்து பட்டணத்தில் பிரவேசித்துக் கண்ணீர் பெருகிய வண்ணம் தரையில் படுத்துக் கிடந்தனர்.

எழுபத்தாறுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## எழுபத்தேழாவது ஸர்க்கம்

### தசரத மன்னவனுக்கு அஸ்தி ஸஞ்சயனம் முதலிய சடங்குகளையும் செய்து முடித்தல்.

பிறகு பரதன் புண்யாஹவாசனம் முதலியவற்றை நடத்தித் தீட்டைக் கழித்துப் பதிமூன்றாம் நாள் செய்யவேண்டிய சடங்குகளை நிறைவேற்றினன். அவன் தன் தந்தையின் பரலோக ப்ராப்தியின் பொருட்டு அளவற்ற திரவியங்களை அந்தணர்களுக்கும் ஏழைகளுக்கும் கொடுத்தனன்.

பிறகு பதின்மூன்றாம்நாள் காலையில் பரதன் தந்தையைக் குறித்துப் பலவாறு புலம்பிய வண்ணம், அஸ்தி ஸஞ்சயன (எலும்பு பொறுக்கிப் பாலில் நனைத்தல்) த்தின் பொருட்டு அரசனை தகனம் செய்தவிடத்திற்கு வந்தனன். அங்கு வந்ததும் அரசனை நினைத்து மீண்டும் பிரலாபிக்கலாயினன். கீழே விழுந்து மூர்ச்சித்தனன். வசிஷ்டாதிகள் அவனை மூர்ச்சை தெளிவித்துத் தேற்றினார்கள். அவனும் கண்ணீர்களைத் துடைத்துக்கொண்டு, சிவந்த கண்களோடு கூடினவனாய் சத்துருக்கனனுடனும் கூடி மற்றை அஸ்தி ஸஞ்சயனாதி காரியங்களைச் செவ்வனே செய்தனன்.

ஏழுபத்தேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## ஏழுபத்தெட்டாவது ஸர்க்கம்

### சத்துருக்கனன் கூனியைக் கண்டவாறே கோபங்கொண்டு நலிந்து கைகேயியையும் இடித்துக் கூறுதலும், பரதன் சமாதானப் படுத்துதலும்.

சாவுச் சடங்குகள் நிறைவேறி வீட்டிற்குச் சென்ற பிறகு சத்துருக்கனன் பரதனை நோக்கி "அண்ணா! ராமன் மிகுந்த பலமும் ஸாமர்த்தியமு முடையவனாயிருந்தும் ஓர் ஸ்திரீயின் வார்த்தையால் வனம் சென்றானே! இதென்ன விசித்திரம்! 'அவன் தந்தைக்கு உட்பட்டவன்' எனினும், கூடவிருந்த லக்ஷ்மணனாவது தந்தையைத் தடுத்து ராமனை ஏன் நிறுத்தவில்லை? மனைவிக்குட்பட்டுத் தகாதவழியிற் சென்ற மன்னவனை, நியாய அநியாயங்களை ஆலோசித்து இப்படிப்பட்ட அனர்த்தம் உண்டாவதற்கு முன்பே தண்டித்திருக்கவேண்டாவா?" என்று கூறும்போது, கூனியாகிய மந்தரை பரதாபிஷேகத்தைப் பார்க்கக்கருதி ஸமஸ்த ஆபரணங்களைபுமணிந்தவண்ணம் அவ்விடம் வந்தனள்.

பெண் குரங்கைப்போன்ற அவளை வாசற்காப்போர் பிடித்துக்கொண்டு வந்து சத்துருக்கனனிடம் ஒப்புவித்து "எவளால் ராமன் வனஞ்சென்றுனோ, எவளால் அரசர் மரணமடைந்தாரோ அந்தப் பாபிஷ்டை இவளேகாண், இவளைத்தகுந்தபடி தண்டிப்பாயாக" என்றனர்.

பெருத்த கோபத்தியுடன் கூடின சத்துருக்கனன் கூனியைப் பலாத்காரமாகப் பிடித்துக் கிறு கிறு வென்று சுழற்றிக் கீழே தள்ளி இழுத்துக்கொண்டு போயினன். அவளது அழுகுரலின் ஒலியானது அவ்வரண்மனை யெங்கும் பிரதி யொலித்தது. அவளுடைய ஆபரணங்கள் சிதைந் தொழிந்தன. அவளை விடுவிக்க வந்த கைகேயியைச் சத்துருக் கனன் அதட்டிக் கடூரமாகப் பேசினன். அவளும் மிகவும் பீதியடைந்து பரதனைச் சரணமடைந்தனள்.

பரதன் தம்பியை நோக்கி "ஸ்திரீகளை இம்சிப்பது பெரிய தப்பான காரியம். ஆகையால் பொறுத்துக்கொள்வா யாக. ராமன் தருமந்தவறுதவனுகையால், நான் கைகேயியைக் கொல்வேனுயின் என்னை 'அன்னையைக் கொன்ற காதகன்' என்று நிந்திப்பான். அதற்காகவே நான் இவளைக் கொல்ல வில்லை. மேலும் இக்கூனியைக் கொன்றுலும் ராமன் நம்மை ஸ்திரீஹத்தி செய்தவர்களாகக் கருதி நம்முடன் பேசவும் மாட்டான்" என்றனன்.

சத்துருக்கனனும் கோபத்தை அடக்கிக்கொண்டு கூனியை விட்டனன். அவளும் கைகேயியின் காலில்விழுந்து புலம்பி யழுகையில், கைகேயி அவளை மெல்ல சமாதானப் படுத்தினள்.

எழுபத்தெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

## எழுபத்தொன்பதாவது ஸர்க்கம்.

### பரதனை மகுடம் சூடிக்கொள்ளுமாறு புரோகிதர்கள் நியமித்தலும், அதற்கு உடன்படாத பரதன் தனது மனவுறுதியைக் கூறுதலும்.

பிறகு பதினான்காவது நாள் விடியற்காலையில் அரசனுக்குப் பட்டாபிஷேகம் நடத்தும் அதிகாரிகள் அனைவரும் பரதனை நோக்கி "அரசிளங்குமர! சக்ரவர்த்தியோ விண்ணுலகடைந்தனர். ராமனோ லக்ஷ்மணனுடன் வனஞ் சென்றனன். இதனால் நாங்கள் நாதனற்றவர்களா யிருக்கின்றோம். ஆகையால் நீயே எங்களனைவர்க்கும் அரசனாய் இருக்கக்கடவை. இதோ பட்டாபிஷேகத்துக்கான பொருள்கள் சித்தமாயிருக்கின்றனகாண்" என்றனர்.

இதைக்கேட்ட பரதன் "எங்கள் குலத்தில் மூத்தவனிருக்க இளையவன் அரசாள்வதான வழக்கமுண்டோ? எல்லாம் தெரிந்த நீங்கள் என் முன்னிலையில் இவ்விதம் பேசலாமா? நான் இப்பொழுதே வனம் சென்று ராமனையழைத்து வருகிறேன். இங்கு சித்தமாயிருக்கும் பட்டாபிஷேகப் பொருள்களனைத்தையும் காட்டிற்குக் கொண்டு வாருங்கள். இதோ இப்பொழுதே பெரும்படையுடன் நான் ராமனையழைக்கச் செல்கிறேன். ராமனே இனி உங்களுக்கும் எனக்குமரசன். சிற்பிகள் மேடு பள்ளங்களைச் சமப்படுத்தி வனம் செல்லும் மார்க்கத்தைச் சீர்திருத்தக் கட்டளையிடுவீர்களாக" என்று கூறினன்.

அப்போது அனைவரும் அப்பரதனை நோக்கி ஒருமிடறாக "அப்பா! நீ ராமனுக்கே ராஜ்யம் கொடுக்க விரும்புகின்றனை; இப்படிப்பட்ட உன்னிடத்தில் ஸ்ரீ மகாலக்ஷ்மி நித்தியவாஸம் செய்வாளாக" என்றனர்.

உடனே மந்திரிகளும் ராஜாபிஷேகம் செய்யுமதிகாரிகளும் மகத்தான சந்தோஷமடைந்து ஆனந்தக்கண்ணீர் பெருக, பரதனை நோக்கி "புருஷ சிரேஷ்டனே! உனது கட்டளைப்படி இதோ ராஜ பக்தியுள்ளவர்களை மார்க்கத்தைக் காப்பதற்கும், சிற்பிகளை வழி ஏற்படுத்துவதற்கும் அனுப்பி விட்டோம்" என்றனர்.

எழுபத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## எண்பதாவது ஸர்க்கம்.

## பரதன் முதலானவர்கள் அயோத்தியிலிருந்து இராமபிரானிடம் செல்ல வழியைச் சீர்திருத்துதல்.

அனேக வகுப்பான வேலையாட்கள் நகரத்திலிருந்து வனம் செல்லும் மார்க்கத்திலுள்ள கற்களையும் முட்களையும் களைந்து மேடு பள்ளங்களையும் சீர்திருத்தினர். வழியிலுள்ள கால்வாய் முதலியவற்றைத் தாண்டுவதற்காகக் கொம்பு கொடிகளால் இயந்திரங்களைச்செய்ய வல்லவர்களும், ஓடம் முதலானவற்றைச் செய்யத் தெரிந்தவர்களும், தச்சர்களும், வழியில் தடைசெய்யும் மரங்களை வெட்டும் வேலையாட்களும், கிணறு வெட்டுபவர்களும், மாடமாளிகை கட்டத் தெரிந்த சுண்ணும்பு வேலையாட்களும், மற்றை இதர வேலைகளில் சாமர்த்திய முடையவர்களும் முன்னே புறப்பட்டுச் சென்றனர்.

அவர்களெல்லாம் தங்களுக்குத் தெரிந்த முறைகளில் காட்டிற்கு மிகவும் ஸௌகர்யமாகச் செல்லக்கூடிய ஓர் அழகிய விசாலமான பாதையைச் செய்துகொண்டேபோயினர். ராமனைப்பார்க்கப்போகும் சந்தோஷத்தினுல் அவர்களுக்கு அவ்வேலையைச் செய்வதில் கொஞ்சமேனும்

களைப்பே உண்டாகவில்லை. அந்தப்பாதையானது குளிர்ந்து தளிர்த்துப் பூத்த பல மரங்களமைந்தும், சந்தனத் தண்ணீர் தெளிக்கப்பெற்றும், குளிர்ந்து அழகான விடுதிகளையுடையதும், பலவகைப் புஷ்பங்கள் இறைக்கப் பெற்றதுமாகி தேவ மார்க்கம்போல் மிகவும் பிரகாசித்துக்கொண்டிருந்தது. அங்குச் சிற்சில அழகான இடங்களில் தங்கக் கலசங்களை யமைத்து மகர தோரணங்களையும் மேற்கட்டுகளையும் பரதன் மனமுகக்குமாறு கட்டித் துவஜங்களை நாட்டி மற்றும்பல அலங்காரங்களையும் செய்தனர். வாஸ்து சாஸ்திரங்களை யறிந்தவர் நல்ல முகூர்த்தத்தில் பரதன் தங்குவதற்காக இடையில் அநேக கூடாரங்களையமைத்தனர். இவ்விதம் பட்டணத்திலிருந்து கங்கை நதி வரையில் வழி ஏற்படுத்தப்பட்டது.

எண்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## எண்பத்தோராவது ஸர்க்கம்

## முனிவர்களும் மற்றும் பலரும் நிறைந்தவோர் மகாசபை கூடுதல்.

அன்றிரவெல்லாம் அனைவரும் ராமனைக் காணப் போகும் சந்தோஷத்தால் தூக்கமின்றி நல்ல காரியங்களைச் செய்தனர். விடியற்காலையில் ஸ்துதி பாடகர்கள் மங்கள சப்தங்களமைந்த கவிகளைப்பாடிப் பரதனைப் பள்ளியுணர்த்த வந்தனர். வாத்தியங்கள் முழங்கின. கீதங்கள் பாடப்பட்டன. பரதன் உடனே விழித்தெழுந்து "நான் அரசனல்லேன். ராஜனைப் புகழ்வது போல் என்னைப் புகழலாகாது" என்று கூறி அவற்றை யெல்லாம் நிறுத்தி சத்துருக்கனனை விளித்து "தம்பி! கைகேயி உலகிற்கு எவ்வளவு கெடுதி செய்தனள் பார். தந்தை துக்கங்கள் எல்லாவற்றை

யும் என்மேல் போட்டுப் போயினர். அவருடைய ராஜ்ஜிய லக்ஷ்மியும் அவருக்குப் பிறகு மூத்தகுமாரனுக்குச் சேரும் தருமத்திலேயே நிலை நின்றிருப்பது. அப்படிப்பட்டது இப்பொழுது ஜலத்தினிடையில் நடத்துகிறவனில்லாத ஓடம்போல் அலைகின்றது. ஐயோ! தர்ம தேவதையான ராமனை என் தாய் காட்டிற்குத் துரத்தினளே!" என்று பல வுஞ்சொல்லிப் புலம்பினன்.

அப்பரதன் அங்ஙனம் கூறி அழுதுகொண்டிருக்கையில் வசிஷ்ட முனிவர் சிஷ்யகணங்களோடு அங்கு வந்தனர். அவர் ஓர் இடத்தில் உட்கார்ந்துகொண்டு தூதர்களைப்பார்த்து "நீங்கள் விரைவிற் சென்று சகல பிராமணர்களையும் க்ஷத்திரியர்களையும் வைசியர்களையும் மந்திரிகளையும் அந்தந்த இனத்தவரின் தலைவர்களையும் யுதாசித்தையும் சுமந்திரனையும் அழைத்துக்கொண்டு வருவீர்களாக. நாமெல்லாரும் கலந்து ஆலோசித்துச் செய்யவேண்டிய ஓர் காரியம் உண்டு" என்று கட்டளையிட்டனர். அதன்படி சகலபேர்களும் அநேகவிதமான வாகனங்களின்மீது ஏறி வந்தனர். பிறகு பெரியசபை கூடிற்று. அது தேவசபை போன்று விளங்கியது.

எண்பத்தோராவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## எண்பத்திரண்டாவது ஸர்க்கம்.

## பரதன் ராஜ்ஜியத்தைத் திரஸ்கரித்து ராமனிடம் போகப் புறப்படுதல்.

பிறகு வசிஷ்ட முனிவர் பரதனை நோக்கி "அரசிளங்குமர! உன் தந்தை 'வாக்குத்தவறாமை' என்னும் தருமத்தைக் கைப்பிடித்து இப்பூமியை உனக்குக்கொடுத்துச் சுவர்க்க

யடைந்தனர். ராமனும் அவரது கட்டளைக்குக் கீழ்ப்படிந்து வனமேகினன். ஆகையால் உன் தந்தையும் அண்ணனும் உனக்கு ராஜ்ஜியத்தைக் கொடுத்தனராயினர். நீ இதை சந்தோஷத்துடன் அனுபவிப்பாயாக. சீக்கிரத்தில் அபிஷேகஞ் செய்துகொள்வாய். லட்சக்கணக்கான ஐசுவரியங்களை உனது சிற்றரசர்கள் உனக்குக் கொண்டுவந்து கொடுப்பார்கள்" என்றனர்.

இதைக்கேட்ட பரதன் தாங்கமுடியாத வருத்தத்தை யடைந்து ராமனை மனத்தில் தியானித்தவண்ணம் வசிஷ்டரை நோக்கி "ஸ்வாமி! ராமனது இந்த விசாலமான பூமியை எவன்தான் அபகரிப்பான்? இந்த ராஜ்ஜியம் ராமனுடையது. நானும் ராமனுடையவனே. ராமனே மூத்தோனுகையால் அவனே அரசாள உரியவன். என் தாய் செய்த இந்தக்கெட்ட செய்கையை நான் எள்ளளவும் ஒப்புக்கொள்ளமாட்டேன். நான் ராமனை இப்பொழுதே பின்தொடர்ந்து செல்லப்போகிறேன். அந்த ராமன் இந்த ராஜ்ஜியத்துக்கு மாத்திரமன்றி மூவுலகங்களுக்கும் தலைவன். ஆகையால் நான் அரசாளச் சிறிதும் தகுதியற்றவன்" என்று கூறும்போது அனைவரும் ஸந்தோஷித்து ஆனந்தக்கண்ணீர் பெருகப் பரதனைப் பெரிதும் உகந்தனர்.

மீளவும் பரதன் "ராமன் என் வார்த்தைக்கிணங்கி வராவிட்டால், லக்ஷ்மணனைப் போலவே நானும் காட்டிலேயே வசிக்கப்போகிறேன். சமஸ்தமான வகைகளாலும் ராமனை இங்கு அழைத்துவர முயல்வேன். ஆகையால் நீங்களனைவரும் என்னைப் பின்பற்றி வரவேண்டும். இதற்காக நான் முன்னமே ஆட்களையனுப்பிப் பாதையைச் செவ்வைப்படுத்திக் காத்திருக்கும்படி செய்திருக்கிறேன்" என்றனன்.

பரதனது கட்டளைப்படி அனைவரும் பிரயாணத்துக்கு ஸன்னத்தரானார்கள். சைன்யங்களெல்லாம் சித்தமாய் நின்றன. பிறகு வீடுகள்தோறும் பிராமண க்ஷத்ரிய வைசிய சூத்திரர்களனைவரும் ஒட்டைகள் கழுதைகள் தேர்கள் யானைகுதிரைகள் முதலியவற்றின்மேல் அவரவர்க்குரியபடி ஏறிக்கொண்டு பிரயாணத்திற்கு ஆயத்தராயினர்.

எண்பத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## எண்பத்துமூன்றாவது ஸர்க்கம்.

### பரதன் சைன்னியங்களோடு புறப்பட்டுக் கங்காநதி தீரத்தில் இளைப்பாறுதல்.

மறுநாள் விடியற்காலையில் பரதன் தேரேறிப் புறப்பட்டனன். மந்திரிமார்கள் ரதத்திலேறி அவனுக்கு முன் சென்றனர். ஒன்பதினாயிரம் யானைகளும் அறுபதினாயிரம் தேர்களும் அறுபதினாயிரம் காலாட்களும் சிறந்த வில்லாளிகளும் நூறாயிரம் குதிரை வீரர்களும் பரதனைப் பின் தொடர்ந்தனர்.

கௌசல்யை சுமித்திரை கைகேயி முதலியவர்களும் ராமனை யழைத்துக்கொண்டுவர நேரும் சந்தோஷத்தினால் மனங் குளிரப்பெற்றுச் சிறந்த வாகனங்களில் வேறுவேறாக ஏறிச்சென்றனர். கைகேயி தான்செய்த காரியத்திற்கு மிகவும் வருந்தி முகந்துற முன்னம் நடந்தாள். இடையில் ஸமஸ்தமான ஜனங்களும் ராமனைப்பற்றியே சிந்தித்துக்கொண்டு அவன் கதைகளையே பேசிப்போயினர்.

ஊரிலுள்ள கணக்கற்ற தொழிலாளிகளும், பிராமணர்களும் ஆயிரக்கணக்கான மாட்டுவண்டிகளிலேறிச் சென்றனர். இங்ஙனம் அவர்கள் வெகுதூரம் பிரயாணம் செய்து குக

னது ராஜ்ஜியமான சிருங்கிபேரபுரத்தை யடைய விரும்பி அதன் சமீபத்திலுள்ள கங்கையின் கரையை அடைந்தனர்.

பரதன் அவ்விடத்தில் தானே கீழே இறங்கி சைன்யத்தை நிறுத்தி இளைப்பாறும்படி கட்டளையிட்டு அக்கங்கையின் பரிசுத்தமான ஜலத்தில் தந்தையின் பொருட்டு ஜலதர்ப்பணம் செய்தனன். அனைவரும் இளைப்பாறினர்.

எண்பத்துமூன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## எண்பத்துநான்காவது ஸர்க்கம்

## பரதனுக்குக் குகன் அதிதி பூஜை செய்தல்.

அங்குவந்திறங்கியிருக்கும் பெரிய சைன்னியங்களைத் தன் இருப்பிடத்திலிருந்துகண்ட குகன் பரதன்மேல் சந்தேகப்பட்டு அவன் ராமனைப் பின்னும் நலியும்பொருட்டு வருவதாக எண்ணித் தன்ஜனங்களைப்பார்த்து "ஆ! பரதன் கொடியவன். ராமன் திரும்பிவருவானாயின் தனக்கு ராஜ்ஜியம் நிலைக்காது என்று எண்ணி ராமனையடியோடு ஒழிக்கவேண்டுமென்கிற எண்ணத்துடன் வருகின்றனன் போலும். ஆகையால் எனது நாதனான ராமனைக் காக்கும்பொருட்டு நீங்களெல்லாரும் சகலவிதமான ஆயுதங்களோடும் ஸன்னத்தராகவிருங்கள். ஐந்நூறு ஓடங்களை சித்தப்படுத்தி அதில் ஒவ்வொன்றிலும் நூறுபேர் வீதம் காத்துக்கொண் டிருப்பீர்களாக. பரதன் ராமனிடத்துக் கெட்டஎண்ண மில்லாதவனாகவிருப்பின் அவனும் அவனது சைன்னியங்களும் சுகமாக கங்கையைத் தாண்டலாம்; அப்படியில்லாத பக்ஷத்தில் இவனை இவ்விடத்திலேயே கொல்லவேண்டும்" என்றனன்.

அதன் பிறகு அக்குகன் தேன் பழம் முதலியவற்றைக் காணிக்கையாகக் கொண்டு பரதனை எதிர்கொண்டு

சென்றனன். அச்சமயம் சுமந்திரன் பரதனிடம் குகனைப் பற்றியும் அவனிடத்து ராமன் கொண்டிருந்த அளவுகடந்த அன்பைப்பற்றியும் கூறிக்கொண்டிருந்தனன். பரதன் பரம சந்தோஷமடைந்து குகன் தன்னைவந்துகாண அநுமதியளித்தனன். குகனும் பரதனுக்கு ராமனிடமிருக்கும் அளவு கடந்த பக்தியை யுணர்ந்து மகிழ்ந்தவனாகி, தான் கொண்டு வந்த காணிக்கைகளை அவனுக்களித்து அவனைப் பரிவாரங் களுடன் தன் வீட்டிற்கு வந்து தங்கித் தன்பூஜைகளை ஏற்க வேண்டுமென்று வேண்டிக்கொண்டனன்.

எண்பத்துநான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## எண்பத்தைந்தாவது ஸர்க்கம்.

## குகன் பரதனுக்கு நல்வார்த்தை சொல்லல்.

பரதன் குகனை நோக்கி "ராமனுடைய நண்பனே! கணக்கில்லாத என்னுடைய சைனியங்கள் எல்லாவற்றிற்கும் பூஜைசெய்ய விரும்புகிறாயே! இப்படி நீ விரும்பின மாத்திரத்திலேயே எனக்குப் பூஜைகளெல்லாம் செய்தாற்போலவே ஆயிற்று. குகனே! பரத்வாசருடைய தவச்சாலைக்குப் போகும்வழி எது? இத்தேசம் மிகவும் புக அரிதாயிருக்கிறது. மேலும் கங்கையைச் சேர்ந்த இவ்வோடைகளைத் தாண்டுவதும் கஷ்டம்போல் தோன்றுகிறதே!" என்றனன்.

குகன் பரதனை நோக்கி "ராஜகுமாரா! நானும் என்னுடைய ஆட்களும் வில்லைப்பிடித்து உன் பின்னே வருகிறோம். ஆகையால் வழியைப்பற்றி நீ சிந்திக்கவேண்டாம். ஆனால் நீ இப்பொழுது ராமனுக்குக் கெடுதியைச்செய்யும் வண்ணம் போகிறாப்போலிருக்கிறது. உன்னுடனிருக்கும் இவ்வளவு பெரிய சேனையைக் காண எனக்குக் கொஞ்சம் சந்தேகம்

உதிக்கின்றது. ராமனைப்பார்ப்பதற்கு மாத்திரமே போவா யாகில் இவ்வளவு சேனைகள் வேண்டியதில்லையே:" என்றனன்.

பரதன் சிறிதும் கோபமின்றி மெதுவான குரலில் "ஐயோ! என்னைக்குறித்து உனக்கு இத்தகைய எண்ணமா உதிக்கவேண்டும்? ராமன் எனக்குத்தமையன். தந்தையைப் போன்றவன். காட்டில் வசிக்கிற அவனைத்திருப்பி அழைத்து வரப்போகிறேன். இது சத்தியமான வார்த்தை." என்றனன்.

இதைக் கேட்ட குகன் மிகுந்த சந்தோஷமடைந்து மகத்தான ஆச்சரியத்துடன் பரதனைப்பார்த்து "ஒரு முயற்சியுமின்றித் தானாகவே வந்த ராஜ்ஜியத்தை நீ துறக்கவிரும்பு கின்றனையே! நீ எத்தகைய தருமஸ்வபாவ முடையவனோ! உன்னைப்போன்ற உத்தமனை நான் இதுவரையெங்கும் கண்டது மில்லை, கேட்டதுமில்லை. உன்னுடைய கீர்த்தி சாசுவதமாக ஸமஸ்த லோகங்களிலும் விளங்கப்போகிறது" என்றனன்.

அப்பொழுது சூரியன் மேற்றிசையில் மறைந்தனன். இருளும் சூழ்ந்தது. அனைவரும் படுத்துறங்கினர். ஆனால் பரதனுக்குமாத்திரம் கண்ணுறங்க வில்லை. அவன் அண்ண னைப் பிரிந்த சோகாக்கினியினால் தபிக்கப்பட்டு மனக்கலக்க முற்றுப் பெருமூச்செறிந்து நினைவும் தப்பி ராமனையே சிந்தித்திருந்தனன். அச்சமயம் அவனது பரிதாபகரமான நிலைமையைக் கண்ட குகன் மிகுந்த மனவருத்தமுற்று ராமனைக் குறித்த வார்த்தைகளைச் சொல்லி அப்பரதனைத் தேற்றினன்.

ஐம்பத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

## எண்பத்தாறுவது ஸர்க்கம்

## ராமனைக் குறித்து லக்ஷ்மணன் துன்புற்றுப் புலம்பியதைப் பரதனிடம் குகன் கூறுதல்.

பிறகு குகன் பரதனை நோக்கி "ரகுகுலதிலகனே! முன்பு ராமனும் லக்ஷ்மணனும் இவ்விடம் வந்த பொழுது இரவு வந்தது. ராமனும் சீதையும் மரத்தின்கீழ்த் துயின்றனர். லக்ஷ்மணனோ வில்லுங்கையுமாகக் கண்விழித்துக் கொண்டு காவல்புரிந்தனன். அவனுக்காக நான் பரிதாபமடைந்து, லக்ஷ்மணா! சுகத்தையே யனுபவிக்கைக்குரிய நீ இங்ஙனம் கண்விழிக்கலாகாது; இதோ இந்தப் படுக்கையில் படுத்துக்கொள்; நானும் என்னுடைய ஆட்களும் இரவு முழுதும் கண் விழித்து அம்பும் வில்லும் கையிலேந்தி உங்களுக்குக் காவல் புரிகிறோம்' என்றேன். அது கேட்ட லக்ஷ்மணன் என்னைச் சமாதானப்படுத்தி 'தேவாசுரர்களாலும் வெல்ல முடியாத மகாராஜரது வயிற்றிற் பிறந்த ராமன் சீதையுடன் நிலத்தில் படுத்திருக்கையில் என் பிராணனைத் தரித்திருப்பதே எனக்குக் கஷ்டமாய் இருக்கிறது. அப்படியிருக்க எனக்குத் தூக்கம் எப்படிவரும்? ஐயோ! ராமன் காடு சென்றபின் தந்தை நிச்சயமாக உயிரை விடப் போகிறார். அந்தப்புர ஸ்திரீகளெல்லாம் விதவைகளாகிப் பலவாறு புலம்பப் போகிறார்கள். கணவனையிழந்த கௌசல்யையும் சுமித்திரையும் தங்கள்பிராணன்களை விடப் போகிறார்கள். ராஜ்ஜியம் பாழாய்விட்டதே! தந்தை மரணமடையும்போது அக்காலத்தில் அவருக்குப் பிரேதச் சடங்குகளை நடத்தும் பரத சத்துருக்கனர்களன்றோ பாக்கியசாலிகள்! ஐயோ! நாங்கள் இப்பதினான்கு வருடங்கள் கடந்து மீண்டும் அயோத்தி போய்ச் சேரும் காலமும் நேருமா?'

என்று கூறிப் புலம்பினன். இப்படியவன் புலம்பிக்கொண் டிருக்கையிலேயே அந்த இரவு கழிந்து சென்றது. பிறகு விடிந்தவுடன் அவர்கள் இக்கங்காநதிக்கரையிலேயே சடை களைத்தரித்து மரவுரிகளை யுடுத்துச் சிறந்த பாணங்களையும் வில்லையும் கத்தியையும் பிடித்துச் சீதையுடன் கூடிப் போயினர்!'' என்றனன்.

எண்பத்தாறுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

எண்பத்தேழாவது ஸர்க்கம்

## குகன் பரதனிடத்தில் ராமலக்ஷ்மண விருத்தாந்தங்கள் கூறுதல்

குகன் இங்ஙனம் கூறினவுடன் பரதன் தாங்கமாட் டாத மனவருத்தமடைந்து மதியிழந்து ராமனை நினைத்து உருகி மூர்ச்சையடைந்தனன். சத்துருக்கனனும் அவனை யன் புடன் எடுத்துப் புலம்பி யழத்தொடங்கினன். அச்சமயம் பரதனது தாய்மார்களனைவரும் அங்கு வந்தனர். கௌசல்யை அவனை வாரியெடுத்து "எங்கள் குலவிளக்கே! ராமவிரக மென்னும் வியாதியால் நீ பாதிக்கப்படுகிறாயோ? இப்பொழுது அரசனோ மாண்டான். ராமனோ லக்ஷ்மண னுடன் வனம்சென்றான். ஆகையால் நீ யொருவனே இப் பொழுது எங்களனைவர்க்கும் கதி. உன் முகத்தின் கவலையைப் பார்த்தாயினும் 'ராமன் திரும்பி வரமாட்டானோ?' என்கிற ஆசையுடன் உன்னைப்பார்த்துப் பிழைத்திருக்கின்றனம். ராமனைக் குறித்து எவராயினும் உன்னிடத்துக் கெட்ட வார்த்தைகளைச் சொன்னார்களோ?'' என்று வினவினள்.

பரதன் ஒரு முகூர்த்த காலங்கழித்து மூர்ச்சை தெளிந் தெழுந்து "தாயே! நீ சொன்னபடி ஒன்றுமில்லை'' என்று

அவனைச் சமாதானப்படுத்தி மீண்டும் குகனை நோக்கி "ராமன் ராத்திரி எங்கிருந்தனன்? சீதை எங்கிருந்தாள்? லக்ஷ்மணன் என்ன செய்தான்?" என்று வினவ, குகன் சொல்லத் தொடங்கி "நான் ராமனுக்குப் பலவகை அன்னங்களையும் பக்ஷணங்களையும் பழங்களையும் லேஹியங்களையும் சித்தம் செய்தேன். ஆனால் அவனே என்னை நோக்கி 'நண்பனே க்ஷத்திரியர்களான எங்களுக்கு எப்பொழுதும் தானம் வாங்குதல் கூடாது; தானம் கொடுத்தல் மாத்திரமே தகும்' என்றுரைத்துச் சமாதானப்படுத்தி, அந்த வஸ்துக்களை யெல்லாம் என்னையே கொண்டுபோகும்படி சொல்லினன். பிறகு ராமன் அன்றிரவு உபவாசமிருந்து சந்தியாவந்தனாதிகளைச் செய்தனன். லக்ஷ்மணன் ராமன் பருகி மிகுந்த ஜலத்தைப் பானம் செய்தனன். பிறகு அவனே சென்று தர்ப்பங்களால் பரப்பப் பட்ட ஒரு படுக்கையை இவ்விங்குணமரத்தின்கீழ் ஏற்படுத்தினன். ராமனும் சீதையும் அதில் படுத்துக்கொண்டனர். லக்ஷ்மணன் தூரத்தில் வில்லை நாணேற்றிக் கையில் பிடித்த வண்ணம் கண்ணிமைகொட்டாமல் ராமனைச்சுற்றிக் காப்பாகத் திரிந்து கொண்டிருந்தான்.

அச்சமயம் நான் ராமன் நித்திரை செய்கையில் லக்ஷ்மணன் என்ன செய்துவிடுவானோ வென்று சங்கித்து, லக்ஷ்மணன் போனவிடங்களி லெல்லாம் பின்சென்று, என் பந்துக்களும் வில்லைப்பிடித்துச் சோம்பலின்றி என்னைச் சூழ்ந்திருக்க ராமனைக் காத்துக் கொண்டிருந்தேன் என்றனன்.

எண்பத்தேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

## எண்பத்தெட்டாவது ஸர்க்கம்

## பரதன் இங்குண மரத்தினடியில் சீதையினுடைய சிதறிப்போன சில ஆபரணங்களைக் கண்டு சோகித்தலும் ராமனை நினைத்துப் புலம்புதலும்.

பரதன் இப்படி குகன் சொன்ன வார்த்தைகளைக் கேட்டு அவ்விங்குண மரத்தினடியிற் சென்று ராமன் படுத்திருந்த தர்ப்பைப் படுக்கையையும் கண்டு தாய்மார்கள் அனைவரோடும் பேசத் தொடங்கி 'ஐயோ! இதென்ன அநியாயம்! பலவகைப்பட்ட சௌகர்யாதிகளுடனும் பரிமளவாசனைத் திரவியங்களுடனும் கூடின மெத்தென்ற பஞ்சசயனத்தில் வீற்றிருந்த எனதண்ணான் எப்படி இந்நாளாற் புல் படுக்கையில் படுத்துக் கொண்டனன்? இது எனக்கு உண்மையாகத் தோன்ற வில்லையே! என்மனம் மயக்கமுறுகிறதோ? அல்லது கனவு காண்கிறேனோ? ஐயோ! சுகுமாரியான சீதையுமா இதில் படுத்தனள்? இதென்ன கொடுமை! ஆ! இது அண்ணன் துயின்ற படுக்கை. இவ்விடம் கடினமாயிருக்கையால் சரீரத்தை இப்படியுமப்படியும் திருப்பும்போது இதிலுள்ள தர்ப்பங்கள் கலைந்திருக்கின்றன. அஹோ! சீதை வழிநடந்த களைப்பினால் ஆபரணங்களைக் கழற்றாமல் படுத்திருக்க வேண்டும். ஆனது பற்றியே ஆங்காங்கு அவளது பொன்னாபரணங்களினின்றும் இறைந்த தங்கத்தூள்கள் காணப்படுகின்றன. சீதையின் மேல் பட்டாடை இங்கு வைக்கப்பட்டிருக்க வேண்டும். ஆகையால்தான் ஆங்காங்குப் பட்டு நூல் இழைகள் ஒட்டிக் கொண்டு விளங்குகின்றன. அந்த சீதை பதிவிரதையானது பற்றி இத்தகைய கஷ்டங்களை யனுபவிக்கான்

போதும்! ஐயோ! என் நிமித்தமாக அவர்கள் இப்புல் படுக்கையில் படுத்தார்களல்லவா! நான் என்ன பாபிஷ்டனே? லக்ஷ்மணன் ராமனை எப்பொழுதும் பின் செல்லுகின்றனன். அவனன்றே தன்யன்! இச்சமயம் நமது ராஜ்ஜியம் அரசனில்லாமல் இருப்பினும் ராமனுடைய புஜபலத்தாலேயே காக்கப்படுவதால் எந்தப் பகைவனும் இதை விரும்ப மாட்டானென்பது நிச்சயம்.

நான் இது முதல் தினந்தோறும் காய் கிழங்குகளையுண்டு சடைகள் தரித்து மரவுரியுடுத்து வெறுந்தரையிலோ அல்லது புற்களைப் பரப்பியோ படுக்கப்போகின்றனன். வனவாசமே செய்யப் போகின்றனன். என்னை சத்ருக்கனனும் அநுசரிப்பானாக. ராமன் லக்ஷ்மணனோடு கூடி அயோத்தியைப் பரிபாலித்து வருவானாக. பிராமணர்கள் ராமனுக்கு அயோத்தியில் மகுடாபிஷேகம் செய்வார்களாக. இந்த எனது எண்ணத்தை என் இஷ்டதேவதைகள் நிறைவேற்றுவார்களாக." என்று கூறிப் புலம்பி வருந்தினன்.

எண்பத்தெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று

---

### எண்பத்தோன்பதாவது ஸர்க்கம்.

### பரதன் பரத்துவாசாச்சிரமம் நோக்கிப் பிரயாணப்படுதல்.

பரதன் அன்றிரவெல்லாம் இவ்வாறு புலம்பி விடியற்காலத்திலெழுந்து சத்ருக்கனனை யெழுப்பினன். அச்சமயம் குகனும் அங்குவந்தனன். பரதன் குகனைநோக்கி "வேடர் தலைவ! இரவு சுகமாகக்கழிந்தது. வேண்டிய பூஜைகளெல்லாம் உன்னால் நன்கு நடந்தேறின. உன்னுடைய ஓடங்கள்

பலவற்றைக் கொண்டுவந்து இந்தக் கங்காநதியை மாத்திரம் தாண்டுவிக்க வேண்டும்." என்றனன்.

குகனும் அவ்வண்ணமே தன் ஆட்களுக்குச் சொல்லி ஐந்நூறு ஓடங்களைக் கொண்டு வரச்செய்தனன். அவ்வோடங்கள் ஒவ்வொன்றும் நான்கு மூலைகளிலும் பெருமணிகள் கட்டப் பெற்று விளங்கின. அவற்றில் பலகைகளால் சுவர்களும் சாளரங்களும் ஏற்பட்டிருந்தபடியால் காற்று வீசியது. பிறகு ஸ்வஸ்திக மென்று சொல்லப்பட்ட ஓர் அழகிய ஓடத்தைக் குகன் கொண்டுவந்தான். அதில் கீழெல்லாம் வெள்ளைக் கம்பளிகள் பரப்பப்பட்டிருந்தன. அதில் பரதனும் சத்துருக்கனனும் ஏறிக்கொண்டனர். பிறகு வசிஷ்டரும் பெரியோர்களான பிராமணர்களும் அதில் ஏறினர். பிறகு வண்டிகளும் படைச்சரக்குகளும் ஏற்றப்பட்டன. ஓடங்களுக்குக் காற்றில் வேகத்துடன் போவதற்காகக் கொடிகள் கட்டப்பட்டிருந்தமையால் ஏறின மாத்திரத்தில் யாதொரு பிரயத்தனமும் இல்லாமலே அதிக வேகத்துடன் ஏறின எல்லா ஜனங்களையும் அவை இழுத்துக் கொண்டு போயின. அவ்வோடங்களில் சிலவற்றில் குதிரைகளும், கோவேறு கழுதைகளும், சிலவற்றில் தேர்களும், மற்றும் சிலவற்றில் யானைகளும், எருதுகளும் நிறைக்கப்பட்டன.

பிறகு அவ்வோடங்கள் அக்கரை சேர்ந்து, ஏறின ஜனங்களை இறக்கித் திரும்பிவிட்டன. யானைகள் மாவெட்டியால் தூண்டப்பட்டு ஜலத்தில் இழிந்து நதியைக் கடந்து செல்லுகையில், அவை நடந்து செல்லும் பெருமலைகள்போல் விளங்கின. சிலர் ஓடங்கள் ஏறித்தாண்டினர். சிலர் குடங்களால் நீந்திக் கடந்தனர். மற்றும் சிலர் கைகளால் நீந்திச் சென்றனர். பிறகு அனைவரும் 'மைத்திரம்' என்னும் முகூர்த்தக்

தில் பிரயாகவனம் அடைந்து அவரவர்க்கு வேண்டிய ஸ்தானங்களில் கூடாரங்கள் அமைத்துக்கொண்டு இளைப் பாறினர். பரதன் பரத்துவாச ரிஷியின் தவச்சாலைக்குச் சென்று அவரை வணங்க விரும்பி வசிஷ்டர் முதலிய வர்களால் சூழப்பட்டுக் கால் நடையாகவே சென்றனன்.

எண்பத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

தொண்ணூறாவது ஸர்க்கம்.

பரதன் பரத்துவாசரைக்கண்டு க்ஷேமம் விசாரித்தல்.

பரதன் பரத்துவாச முனிவருடைய ஆச்சிரமத்தை சமீ பித்தவுடன் மந்திரிகளை நிறுத்திப் புரோகிதர்களை முன்னிட் டுக்கொண்டு முனிவரைச் சென்று வணங்கினன். அம் முனிவரும் வசிஷ்டாதிகளுக்கும் பரதனுக்கும் செய்ய வேண்டிய அதிதி பூஜைகளைச் செவ்வனே செய்தனர். பிறகு ஒருவர்க்கொருவர் க்ஷேம சமாசாரங்களைப்பற்றி வினவினர்.

பிறகு அம்முனிவர் பரதனை நோக்கி "நீ உன்ராஜ்ஜியத் தினின்றும் இவ்வளவு பெரிய சேனைகளைக் கூட்டிக்கொண்டு இவ்வளவு தூரம் வந்தகாரண மென்ன? எனக்கு உன்னிடத்து ஒரு சந்தேகம் தோன்றுகிறது. உனது அண்ணரான ராம லக்ஷ்மணர்களுக்கு இன்னமும் தீங்கிழைக்க வந்திருக்கிறாய் போலும்! என்று கூறும்போது பரதன் கண்ணுங் கண்ணீ ருமாய் வார்த்தை தழதழக்கப் பெற்று அம்முனிவரை நோக்கி "மூன்று காலங்களிலும் நடக்கிற விஷயங்களை அறிந்த வரான நீர் என்னைப்பற்றி இங்ஙனம் நினைக்கலாமோ? நான் இல்லாதபோது என் தாய் எனக்காகச் சம்பாதித்த ராஜ்ஜி யத்தை நான் விரும்பவில்லை. நான் ராமனைக் காட்டினின்றும்

அயோத்திக்கு அழைத்துக் கொண்டுபோய் அவன் பாதங்களில் வணங்கி வீழ்ந்து வழுவிலாவடிமை செய்யவிரும்பி இங்கு வந்துளேன். என்மீது அருள் கூர்ந்து ராமன் இப்பொழுது இருக்கும் இடத்தைச் சொல்ல வேண்டும்." என்று வேண்டிக்கொண்டனன்.

பரத்துவாசர் பரதனை நோக்கி "அரசகுமாரனே? நான் யோக மகிமையால் உன்மனதிலுள்ள இவ்விஷயங்களைத் தெரிந்துகொண்டே யிருக்கிறேன். ஆயினும் அன்புமாறுமல் நிலைநிற்கவேண்டு மெனவும், உனக்கு மூத்தவனை யநுசரிப்பதாலுண்டான கீர்த்தி நாற்றிசையிலும் வளரவேண்டு மெனவும் இவ்வாறு வினவினன். இப்பொழுது ராம லக்ஷ்மணர்கள் சீதையுடன் சித்திரகூட மென்னும் மலைச்சாரலில் இருக்கின்றனர். நாளைக்கு நீ அங்குச் செல்லலாம். இன்று இவ்விடம் தங்கி இளைப்பாறக் கடவாய்." என்றனர். அங்ஙனமே பரதன் அன்றிரவை அவ்விடத்திலேயே கழிக்க விரும்பினன்.

**தொண்ணூறுவது ஸர்க்கம் முற்றிற்று.**

---

## தொண்ணூற்றோராவது ஸர்க்கம்.

## பரத்துவாசர் பரதன் முதலியோருக்கு விருந்து செய்தல்.

அன்றிரவு பரத்துவாசர் பரதனுக்கும் அவனது சைன்னியங்களுக்கும் மற்றுமுள்ள மந்திரி புரோகிதர்களுக்கும் சிறந்த விருந்துசெய்ய விரும்பினர். அவர் தமது தவ மகிமையால் தேவதச்சனான விசுவகர்மாவைக்கொண்டு விசாலமான ஓர் அழகிய ராஜமாளிகை நிருமித்தார். அதில் பலவகைப்படுக்கைகளும் ஆசனங்களும் வாகனங்களும் நிரப்பி

யிருந்தன. சந்தன ஜலங்கள் தெளிக்கப்பெற்று வாசனை வீசியது. அம்மாளிகையைச் சுற்றி நாற்புறத்திலும் ஐந்துயோசனை தூரம் பூமி மேடுபள்ளமில்லாமல் சமமாகி இளம்புற்கள் நிறைந்து விளங்கியது. அவ்விடத்தில் வில்வம், விளா, பலா; மாதுளை, நெல்லி, மா முதலிய மரங்கள் காய்த்துப் பழுத்து மிக்வும் அழகாய் விளங்கின. நாற்புறமும் தாழ்வாரம் கட்டிய வெளுத்த நிலமுள்ள பெரிய மாளிகைகளும், யானைகள் கட்டத்தகுந்த பெரிய கொட்டாரங்களும், குதிரை லாயங்களும், மேடைகளும், உப்பரிகைகளும் அழகிய புஷ்ப தோரணங்களும் அங்குத் தோன்றின. காற்று வாசனையுடன் கூடி வீசியது. ஆகாயத்தில் மலர் மழைகள் பொழிந்தன.

அம்முனிவருடைய தபோ மகிமையால் அவர் வேண்டிக்கொண்டபடி சமஸ்தமான தேவதைகளும் தங்கள் தங்களால் செய்யக்கூடிய காரியங்களை நிறைவேற்ற வந்தனர். நாற்றிசையிலும் தேவதுந்துபி வாத்திய கோஷம் செவிப்பட்டது. அப்ஸர ஸ்திரீகள் ஆடினர். தேவகந்தர்வர்கள் பாடினர். வீணை முதலிய வாத்தியங்கள் ஒலித்தன.

நடுவில் நிருமாணிக்கப்பட்ட பெரிய ராஜமாளிகையில் பரதனும், மந்திரி புரோகிதர்களும் நுழைந்து கிரமப்படி உட்கார்ந்தனர். பிறகு சேனாதிபதியும் படைத்தலைவரும் உட்கார்ந்தனர். பாயசங்களைச் சேறாகவுடைய பாலாறுகள் பரதனது முன்னிலையில் பெருகின. அந்நதிகளின் இரண்டு கரைகளிலும் வெள்ளை பூசப்பெற்று மிகவும் அழகிய மாளிகைகள் பல தோன்றின. உடனே இந்திரனால் அனுப்பப்பட்ட இருபதினாயிரம் அப்ஸர ஸ்திரீகள் வந்தனர். பிறகு ஸ்வர்ணம் ரத்தினம் முத்து பவழம் இவற்றால்

செய்யப்பட்ட ஆபரணங்களை யணிந்த இருபதினாயிரம் பெண்கள் குபேரனால் அனுப்பப்பட்டு வந்து சேர்ந்தனர்.

நாரதர் தும்புரு கோபர் முதலிய முனிவர்கள் வீணை பாடினர். அலம்புஸை மிச்சிரகேசி புண்டரீகை வாமனை என்னும் மடந்தையர்கள் நாட்டியம் செய்தனர். தேவலோகத்து உத்தியான வனங்களிலும் குபேரனது உத்தியானத்திலும் எங்கெந்த புஷ்பமாலைகள் உண்டோ அவையெல்லாம் அம்முனிவரது பிரபாவத்தினால் அங்குள்ள மரங்களில் புலப்பட்டன.

சைன்னியங்களுக்காக வில்வமரங்கள் மத்தளம் வாசித்தன. தாளி மரங்கள் தாளம்போட்டன. அரச மரங்கள் நாட்டியமாடின. தேவதாரு, பனை, மஞ்சாடி, புன்னை முதலிய மரங்கள் மகிழ்ச்சிகொண்ட குள்ளர்களைப்போல் தாழ்ந்து திரிந்தன. சமஸ்தமான பேர்களும் அறுசுவையோடு கூடிய திவ்வியான்னங்களையும், மது, பாயசம், பக்ஷணம், மாமிசம் முதலியவற்றையும் திருப்தியடையும் வரைக்கும் நன்கு உண்டனர். ஒவ்வொரு மனிதனுக்கும் ஏழெட்டுப் பெண்கள் வீதம் வந்து சூழ்ந்துகொண்டு அழகான நதிக்கரைகளில் எண்ணெய் தடவி உடம்பைப் பிடித்து ஸ்நானஞ் செய்வித்தனர்.

முனிவரின் கட்டளைப்படி சில வேலைக்காரர்கள் யானை குதிரை முதலிய வாகனங்களுக்குக் கரும்புகளையும் தேன் கலந்த பொரிகளையும் ஆகாரமாக அளித்தனர். குதிரைக்காரர்களும் யானைப்பாகர்களும் தங்கள் தங்கள் வாகனங்கள் இன்னின்னவென்று தோன்றாமல் மதுபான மயக்கத்தினால் மெய்மறந்து 'நாம் அயோத்திக்குப் போகோம். தண்ட

காரணியத்துக்கும் செல்லோம். பரதனும் ராமனும் எங்கே யாவது சுகமாய் இருப்பார்களாக.' என்றனர்.

அங்குள்ளவர்களனைவரும் புதிய வஸ்திரங்களை யுடுத்து மனக்களிப்புடன் உலாவிக்கொண்டிருந்தனர். பசுக்கள் அள வற்ற பாலைச் சுரந்தன. மரங்கள் இனியதான தேனைப் பெருக் கிக்கொண்டிருந்தன. அங்குள்ள நடைவாவிகளெல்லாம் 'மைரேயம்' என்னும் ஒருவகை மதுவினால் நிறைந்திருந்தன. அதைச்சுற்றி நாற்புறங்களிலும் நன்கு வதக்கப்பட்ட மான் மயில் கோழி முதலியவற்றின் மாமிசங்கள் விளங்கின. அனேகமாயிரம் தடாக்களில் பரிசுத்தமான மோர்களும் பாயசமும் நிறைந்திருந்தன.

இன்னும் பல பாத்திரங்களில் பரிமளம் மிக்க சந்தனக் குழம்புகளும் வைக்கப்பட்டிருந்தன, சிறந்த வஸ்திரங் களும், அனேகமாயிரம் பாதுகை, பாதரக்ஷை ஜதைகளும், அலங்காரத்தின் பொருட்டு மைச்சிமிழ்களும் சீப்புகளும், கத்தி முதலான ஆயுதங்களும் விற்களும் கவசங்களும், விசித் திரமான படுக்கைகளும் ஆசனங்களும் ஆயிரக்கணக்காக விளங்கின. அனைவரும் இதுவரை எங்கும் காணாததும், கேளாததும் அற்புதமுமான அவ்விருந்தைக்கண்டு வியந் தனர். பிறகு சமஸ்தமான தேவகந்தர்வர்களும் அந்நதிகளும் அவ்வுத்தம ஸ்திரீகளும் இரவு கழிந்ததும் முனிவரிடம் விடைபெற்றுச் சென்றனர்.

தொண்ணூற்றோராவது ஸர்க்கம் முற்றிற்று.

தொண்ணூற்றிரண்டாவது ஸர்க்கம்.

## பரதன் பரத்துவாசருக்குக் கௌசல்யாதிகளை யறிவித்தலும், சித்திரகூடம் செல்லலும், இடையிலுள்ள வனத்தில் பிரவேசித்தலும்.

முனிவரது விருந்துகளால் மிகவும் திருப்தியடைந்த பரதன் மறுநாள் சூரியோதயமானதும் அவரையணுகி "முனிவர் பெருமானே! என் ராமனிடம் செல்ல எனக்கு அனுமதியளிக்கவேண்டும். அவன் எங்கு வசிக்கின்றனன்? அதற்குப் போகும் வழி எது? அது இவ்விடத்திலிருந்து எவ்வளவு தூரம்?" என்று வினவினன்.

பரத்துவாசர் அவனைநோக்கி "பரதா! இங்கிருந்து இரண்டரை யோசனை தூரத்திலுள்ள பெரியதான ஓர் வனத்தில் சித்திரகூடமென்கிற ஓர் மலையிருக்கின்றது. அதன் வடபாகத்தில் மந்தாகினி நதி பெருகிவருகிறது. அதன் கரையில் மரங்கள் புஷ்பித்து அடர்ந்து விளங்குகின்றன. அந்நதியின் பக்கத்திலுள்ள சித்திரகூடமென்கிற மலையில் ஓர் பர்ணசாலையில் ராமாதிகள் வாசஞ்செய்கின்றனர்". என்று கூறி, போகும் வழியையும் நன்கு தெரிவித்தனர்.

அச்சமயம் தசரதனது மனைவிமார்களான கௌசல்யை முதலியோர் அம்முனிவர்க்கு வந்தனமளித்து அவரது பாதங்களைத் தமது கைகளினால் பிடித்துக்கொண்டு நமஸ்காரம் செய்தனர். கைகேயி மாத்திரம் அவமானத்தினால் அவரைப்பணிந்து மற்றவர்களைப்போல் எதிரில் நிற்கமுடியாமல் பரதனருகில் சென்று நின்றனள்.

பிறகு பரதன் முனிவரின் வேண்டுகோளின்படி தன் தாய்மார்களின் பெயர்களையும் அவரவர்கள் பெற்ற பிள்ளைகளின் பெயர்களையும் எடுத்துக் கூறினன். முடிவில் தன்

அன்னையைப்பற்றிக் கூறும்போது "அரசனைக் கொன்றவளும் அண்ணனைக் காட்டிற்குத் துரத்தியவளும் என்னை இவ் விசனத்திற்காளாக்கியவளும் மகா பாபிஷ்டையுமான கைகேயி என்பவள் இவளே. நானே இவள் வயிற்றில் பிறந் தவன்." என்றுகூறி அழுதனன்.

பரத்துவாசர் அவனைநோக்கி "பரதா! நீ கைகேயியிடத் தில் தோஷம் உளதென்று நினைக்கலாகாது. ராமனைக் காட் டிற்கனுப்பினதால் தேவதைகளுக்கும் தானவர்களுக்கும் ரிஷிகளுக்கும் நன்மை யுண்டாகப்போகிறது" என்று கூறி அவனைத் தேற்றினர்.

பிறகு அனைவரும் அம்முனிவரிடம் விடை பெற்றுக் கொண்டு அவரால் நன்கு ஆசீர்வதிக்கப்பட்டுப் பிரயாணஞ் செய்யத் தொடங்கினர். ராமனைப் பார்க்கவேண்டு மென்ற ஆவலினால் அவர்கள் சிறந்த வாகனங்களின் மேல் ஏறி மிகவிரைவாகச் சென்றனர். பரதன் அழகிய பல்லக்கில் பிரயாணம் செய்தனன்.

அப்பெரிய சேனைகளுடன் செல்லும் பரதன் இடையி லுள்ள அநேக வனங்களைத் தாண்டி ஆங்காங்குள்ள மலை களிலும் நதிகளிலும் இளைப்பாறி முடிவில் அப்பெரிய வனத் தில் பிரவேசித்தனன்.

தொண்ணூற்றிரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## தொண்ணூற்று மூன்றவது ஸர்க்கம்.

## பரதன் சித்திரகூடவனத்தில் நுழைவதும் ராமனது விடுதியைத் தேடுதலும்.

பரதனது பெரிய சைன்னியக் கூட்டங்கள் அவ்வனத் தில் செல்லும்போது அதிலுள்ள யானைக் கூட்டங்களும்

புள்ளிமான், கலைமான், புலி, கரடி முதலிய மிருகங்களும் திகைத்து ஆங்காங்கு நின்றன. சமுத்திரம் போன்றதான அந்த சேனுசமூகமானது பூமி முழுவதையும் மறைத்துச் சென்றது. வெகுதூரம் சென்றதால் அவைகளனைத்தும் களைத்திருக்கக்கண்ட பரதன் வசிஷ்டரை நோக்கி "இதோ சித்திரகூடம் தெரிகிறது. இந்நதியே மந்தாகினி; அதோ கறுத்த வனம் விளங்குகிறது. மேகங்கள் மழை பெய்வது போல் மரங்கள் புஷ்பங்களைப் பொழிவதைக் காண்பீர்." என்றனன்.

பின்னும் பரதன் தன் தம்பியை நோக்கி "சத்துருக்னு இவ்வழகிய வனத்தைப் பார்ப்பாயாக. அழகிய மான் கூட்டங்கள் துள்ளி ஓடுகின்றன. ஜனநடமாட்ட மில்லாமல் நிச்சப்தமாய் இருந்த இவ்வனம் இப்பொழுது நம்முடைய சைன்னியங்கள் நிரம்பப்பெற்று ஜனங்கள்நிறைந்த அயோத்தியைப் போலவே எனக்குத் தோன்றுகிறது. குதிரை முதலியவற்றின் குளம்புகளினுல் கிளப்பப்பட்ட தூள் காடு முழுவதும் பரவி ஆகாயம் முழுதும் மறைத்து நிற்கின்றது. இதனுல் எனக்கு ராமனுடைய விடுதி தெரியவில்லை. தம்பி! அதோ அழகிய தோகைகளை விரித்தாடும் மயில் கூட்டங்களைப் பார். இப்பிரதேசம் சுவர்க்கத்தைப்போல் தோன்றுகிறது. ராமனைத் தேடும்பொருட்டு சைன்னியத்திலுள்ளவர் ஆங்காங்குச் சென்று காடு முழுவதும் தேடுவார்களாக." என்றனன்.

உடனே, சூரர்களான அநேக மனிதர்கள் ஆயுதம் தரித்த வண்ணம் காட்டில் பிரவேசித்து அதில் கொஞ்ச தூரத்தில் புகையெழும்பக் கண்டனர். உடனே இதைப் பரதனுக்கு அறிவித்தனர். ஜனசஞ்சாரமற்ற அப்பிரதேசத்தில்

புகை காணப்பட்டமையால், அவ்விடத்தில் திண்ணமாக ராமன் இருப்பானென்று நிச்சயித்த பரதன் சமஸ்தமான சைன்னியங்களையும் அங்குத்தானே சப்தம் போடாதபடி நிறுத்தித் தானும் சுமந்திரனும் வசிஷ்டரும் ஆகிய மூவர் மாத்திரம் புகையின் நுனி புலப்பட்ட இடத்தில் கண்ணை நிலை நிறுத்திக் கொண்டு சென்றனர்.

தொண்ணூற்று மூன்றுவது ஸர்க்கம் முற்றிற்று

---

## தொண்ணூற்று நான்காவது ஸர்க்கம்

### சித்திரகூடத்தில் அப்பிரதேசம் அயோத்தியைவிட அழகானதென்று ராமன் சீதையோடு சொல்லிக் கொண்டிருத்தல்.

சித்திரகூட மென்னும் அம்மலையில் ராமன் ஒரு மாத காலம் வசித்திருந்து பரதன் வருமன்று சீதைக்குச் சந்தோஷகரமாக அம்மலைச்சாரல்களிலுள்ள பல பல இயற்கை விநோதங்களை யவளுக்குக்காட்டி "தேவி! ரமணீயமான இப் பிரதேசத்தைப் பார்த்துக்கொண்டிருப்பதால் ராஜ்ஜியம் இழந்ததைப்பற்றியாவது நண்பர்களைப் பிரிந்திருத்தலாலாவது நேரக்கூடிய வருத்தம் எனக்குண்டாகவில்லை. மயில்களும் குயில்களும் பேடையன்னங்களும் வெகு மனோஹரமாய் இங்கு விளையாடுவதைக் காண்பாயாக.

இன்னுமிங்கு மான்களும் பெரும்புலிகளும் யானைகளும் சிறுத்தை கரடிகளும் மிக மிக நிறைந்திருக்கின்றன. பலவகைப் புஷ்பங்களையுடைய மரங்களின் நறுமணம் வீசுகின்றது. அதோ கின்னரர்கள் தம்பதிகளாய்க் கூடி ஒருவர்க்கொருவர் மனம்பொருந்தி விளையாடுவதைப் பார். விக்

வித்யாதரர்கள் மரக்கிளைகளில் வாள் முதலிய ஆயுதங்களைத் தொங்கவிட்டிருப்பதைப் பார். அப்ஸரஸ்திரீகள் கிரீடை செய்யும் அழகான குளங்களைப் பார். அழகிய அருவிகளையும் ஓடைகளையும் கண்டு களிப்பாயாக. இங்கு உன்னோடும் லக்ஷ்மணனோடும் கூடிப் பல்லாண்டுகள் இருப்பேனாயினும் அயோத்தியைவிட்டுப் பிரிந்த வருத்தம் எள்ளளவும் என்னைப் பாதிக்காது.

இந்த வனவாசத்தினால் தருமத்தில் தந்தையின் கடனைத் தீர்த்தலும் பரதனுக்குப் பிரியஞ் செய்கையுமாகிய இரண்டு பலன்கள் எனக்கு நேரிட்டன. சீதே! இவ்வனவாசம் இம்மையில் இன்பம் தருவதன்றி மறுமையிலும் வானுலகத்தைக் கொடுக்குமென்று உணர்வாய். அதோ தெரிகிற உயர்ந்த சிகரத்தைப் பார்! இம்மலையில் காமுகர்களுக்கான மெல்லிய புஷ்பங்களாலாக்கப்பட்ட வாசனை வீசும் படுக்கைகளைக் கவனி. இது அளகாபுரியையும் வடக்கிலுள்ள குரு தேசங்களையும்விடச் சிறந்து விளங்குகின்றது. பிரியே! இதில் பதினான்கு வருடங்கள் சுகமாக உன்னுடன் விளையாடிக் களித்தபின் ராஜ்ஜியத்தையடைந்து சுகத்தையநுபவிக்கப் போகிறேன்.” என்று சொல்லிக்கொண்டிருந்தனன்.

தொண்ணூற்றுநான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## தொண்ணூற்றைந்தாவது ஸர்க்கம்.

## ராமன் மந்தாகினி நதியின் அழகைக் காட்டிச் சீதையை மகிழ்வித்தல்.

பின்னும் ராமன் சீதைக்குச் சந்தோஷத்தை யுண்டு பண்ணக் கருதி மந்தாகினியென்னு மழகிய நதியைக்காட்டி

ஸீதே! இந்நதி இரண்டு கரைகளிலும் பலவகைப் புஷ்பங்களை யும் பழங்களையுமுடைய மரங்கள் முளைக்கப்பெற்றுக் குபேர னது மானஸமென்னும் தாமரையோடைபோல் விளங்கு கிறது. குங்குமக் குழம்புபோன்ற அழகிய ஜலத்தையுடைய தாய் இருக்கிறது. சிறந்த தவ ஒழுக்கமுடைய முனிவர்கள் இதில் தகுந்த காலத்தில் நீராடுகின்றனர். அதோ சித்த ஜனங்கள் நீராடுவதைப் பார். சக்கரவாகப் பறவைகள் கலவிக் காக ஒன்றுக்கொன்று அழைத்து இனிய ஒலிகளைச் செய் கின்றன பார். இப்பிரதேசம் போகஸ்தானமாய் இருக்கையால் இதில் வசிப்பது அயோத்தியில் வசிப்பதைக்காட்டிலும் சுக மாய் இருக்கிறது. புண்ணியசாலிகளான சித்தர்கள் இதில் ஸ்நானம் செய்வதால் இதன் ஜலம் பரிசுத்தமானது. இதில் நான் நீராடவிரும்புகிறேன். ஸீதே! நீயும் இதில் இறங்கி உன் தோழிகளுடன் விளையாடுவதுபோல் என்னுடன் ஜலக் கிரீடை செய்வாயாக.

மேலும் இவ்வனத்திலுள்ள ஜந்துக்களைப் பட்டணத்து ஜனங்களைப் போலவும், இம்மலையை அயோத்தியைப் போல வும் பிரீதியுடன் பாவித்திருப்பாயாக. லக்ஷ்மணன் என் மனம் கோணாமல் ஏவல்புரிகின்றனன். நீயும் எனக்கு அனு கூலையாகி நடக்கின்றனை. இதைவிட எனக்கு வேறு சுகந் தருவது யாது? இனி நான் அயோத்தியையே நினைக்கமாட் டேன்" என்று கூறியவண்ணம் அச்சித்திரகூடத்தில் உலா விக் கொண்டிருந்தனன்.

தொண்ணூற்றைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

## தொண்ணூற்றாறாவது ஸர்க்கம்

## பரதன் சைன்னியத்துடன் வருவதைக்கண்டு லக்ஷ்மணன் சந்தேகித்தல்.

அங்ஙனம் ராமன் மொழிந்து கொண்டே ஓரிடத்தில் சீதையுடன் உட்கார்ந்து அவளுக்கு இனியதான ஆகார வஸ்துக்களை யூட்டிக் கொண்டிருந்தனன். அச்சமயம் பரதனுடைய சேனைக் கூட்டங்களாலுண்டான கூச்சல்கள் கேட்டன. தூளிகள் ஆகாசமெங்கும் வெகுதூரம் பரவின. காட்டிலுள்ள மிருகங்கள் மிகவும் பயந்து கூட்டம் கூட்டமாக மூலைக்கு மூலை ஓட ஆரம்பித்தன.

இதைக்கண்ட ராமன் லக்ஷ்மணனைக் கூவியழைத்து அதற்கென்ன காரணமென்று அவனைத் தெரிந்து வரும்படி அனுப்பினன். லக்ஷ்மணன் வெகு சீக்கிரம் சென்று ஓர் உயர்ந்த பெரிய மரத்தின் மீதேறி நான்கு திசைகளிலும் கண் செலுத்தும்போது வடதிசையில் பெரிய சமுத்திரத்தைப் போன்ற பரதனது நான்கு விதமான சைன்னியங்களைக் கண்ணுற்றனன்.

உடனே அவன் கீழேயிறங்கி ராமனை நோக்கி "ராமா! பரதன் ராஜ்ஜியாபிஷேகம் பெற்றதோடு திருப்தியடையாமல், நாம் தாயாதிகளாதலால் நம்மால் ஒருக்கால் பிறகு தனக்குக் கஷ்டம் விளையுமென்று நினைத்து ராஜ்ஜியத்தைச் சாசுவதமாக அனுபவிக்கவிரும்பி நம்மைக் கொல்ல வந்துகொண்டிருக்கின்றனன். இதில் சிறிதும் சந்தேகமில்லை. மலையத்திமரத்தின் கொடி அதோ தேரின்மேல் பறந்துகொண்டிருக்கிறது. ராகவா! சீதையை நீ பார்த்துக்கொள். இப்பொழுதே இப்பரதனையும் அவனைச் சேர்ந்தவர்கள் அனைவரையும் ஒரு நொடிப் பொழுதில் கொன்று உனக்கு

ராஜ்ஜியாபிஷேகம் செய்கிறேன். இப்பொழுதே அவர்களின் தேகங்களை இக்கானகத்தில் திரியும் புலி முதலிய கொடிய மிருகங்கள் இழுத்துக்கொண்டு போகுமாக. இப் பிரதேசத்தி லுள்ள காடுகளை யெல்லாம் ரத்தத்தினால் நனைத்துவிடப் போகிறேன். இதில் சிறிதும் சந்தேகப்படவேண்டாம்" என்று மொழிந்து விரைந்தனன்.

தொண்ணூற்றாறுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## தொண்ணூற்றேழாவது ஸர்க்கம்

## ராமன் லக்ஷ்மணனை சாந்தப்படுத்தல்.

இங்ஙனம் கூறக்கேட்ட ராமன் லக்ஷ்மணனைச் சமா தானப்படுத்த முயன்று "லக்ஷ்மணா! பிதிர்வாக்கிய பரிபால னம் செய்கிறேனென்று பிரதிக்கினை செய்த நான் என்னி டம் வந்த பரதனைக் கொல்லுவேனாயின் "ராமன் தந்தையின் வாக்கை மீறிப் பரதனைக்கொன்று ராஜ்ஜியத்தை அப கரித்தான்" னென்று ஜனங்களால் நிந்திக்கப்படுவேனல்லவா? அப்படிப்பட்ட ராஜ்ஜியம் எனக்குத் தேவையில்லை. லக்ஷ்மணா! தருமத்தையும் செல்வங்களையும் பூமியையும் காமத்தையும் உங்களுக்காக நான் விரும்புகிறேனன்றி வேறில்லை. இப் பூவுலகம் முழுவதையும் வெல்வது எனக்கரிதன்று. ஆனால் அதர்மத்தினால் வருமாயின் விரும்பேன்.

எனக்குப் பிராணனைப் போன்ற பரதன் அயோத்தியில் நடந்த விஷயங்களைக் கேள்வியுற்று மனம் வருந்தி என் னிடத்திலுள்ள அன்பினால் மனம் பொறுமல் நம்மைப் பார்க்கவந்தானன்றி வேறில்லை யென்று எனக்குத் தோன்று கிறது. இவன் மனத்தினாலும் கூட நமக்கு அபகாரம் நினைக்க

மாட்டான். எனக்கு ராஜ்ஜியம் கொடுப்பதற்காகவே வரு கின்றனன். உனக்கு எப்பொழுதாயினும் பரதன் அபகாரஞ் செய்ததுண்டா? உனக்கேன் அவனிடத்தில் இப்படிப்பட்ட சந்தேகம் தோன்றுகிறது? இனி இவ்விதம் கூறுதே. அவனை இங்ஙனம் தகாத வார்த்தைகளைக்கொண்டு பேசினல் அது என்னைச் சொன்னதேயாகும். நீ ராஜ்ஜியம் வேண்டுமென் னும் விருப்பத்தினல் பரதனை இங்ஙனம் சொல்வாயாயின் அவன் வந்தவுடன் உனக்கு ராஜ்ஜியத்தைத் தரும்படி சொல்லுகிறேன். அவன் சிறிதும் தயங்காமல் அவ்விதமே கொடுத்திடுவானென்பதில் உனக்குச் சந்தேகம் வேண்டிய தில்லை என்றனன்.

இவற்றைச் செவியுற்ற லக்ஷ்மணன் வெட்கமடைந்து "நமது தந்தையார் உன்னைப் பார்க்க வருவதுபோல் எனக்குத் தோன்றுகிறது" என்று வேறுவிதமாக மொழிந்தனன். இதை ராமனும் ஆமோதித்தனன். அச்சமயம் பரதனது சேனைகள் அப்பர்வதத்தின் தாழ்வரையைச் சுற்றி ஒன்றரை யோசனைதூரம் பரவியிருந்தது. பரதன் சைன்னியங்களை ஆச்சிரமத்திற்கு வெளியே நிறுத்தி விட்டனன்.

தொண்ணூற்றேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## தொண்ணூற்றெட்டாவது ஸர்க்கம்

## பரதன் குக சத்துருக்கனரோடு பாதசாரியாய் ராமனது ஆச்சிரமத்தைத் தேடல்.

பரதன் சத்துருக்கனனை நோக்கி "நீ காலாட்களோடும் வேடர்களோடும் கூடி இவ்வனம் முழுதும் ராமனைத் தேடுவா யாக. குகன் ஆயுதங்களைத் தரித்துத் தன் ஆட்களுடன் தேடட்டுமாக. நான் மந்திரி புரோகிதர்களுடன் பாத

சாரியாய் வருகின்றேன். நான், ராம லக்ஷ்மணர்களையும் ஸீதையையும் காணுத வரையில் எனக்கு துக்க சாந்தி உண்டாகாது. ராமனது பாதங்களை என் தலையில் தரிக்காத வரையில் எனக்குத் துயரம் நீங்காது. ஆ! ராமனை நொடிப் பொழுதும் விட்டுப் பிரியாமலிருக்கிற ஸீதையும் லக்ஷ்மணனு மன்றே பாக்கியசாலிகள்! குபேரன் நந்தனவனத்தில் வசிப் பதுபோல் ராமன் இம்மலைப் பிரதேசத்தில் வாசம் செய்கின்ற னன். இச்சித்திரகூடம் சிறந்த பாக்கியத்தைப் பெற்றது." என்றனன்.

இங்ஙனம் கூறிக்கொண்டே பரதன் பாதசாரியாய் அவ் வனத்தில் பிரவேசித்தனன். சற்றுதூரம் சென்று, புஷ்பித் திருக்கும் ஓர் மரத்தின் கீழே தங்கினன். அங்கிருந்து ராம னது விடுதியினின்றும் புகைகிளம்பிச் செல்வதைக்கண்ட னன். உடனே சந்தோஷத்தினுல் மெய்மறந்து தன்னுடன் வந்த சேனு ஜனங்களை நிறுத்தித் தான் மட்டும் குகனுடன் வேகமாகப் போயினன்.

தொண்ணூற்றெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## தொண்ணூற்றென்பதாவது ஸர்க்கம்

### பரதன் குகனுடனும் மந்திரிகளுடனும் ராமனது விடுதியை அடைதல்.

பரதன் வஸிஷ்டரை நோக்கி 'நீர் எனது தாய்மார்களை வேகமாக அழைத்துக்கொண்டு வருக' என்று கூறிவிட்டுத் தான் முன்னதாகச் சென்றனன். சுமந்திரனும் சத்துருக்க னனும் பின்சென்றனர். சிறிது தூரம் சென்ற பரதன் ஓர் அழகிய பர்ணசாலையையும் அதைச் சுற்றி அழகிய சோலை

களையும் அதற்கு முன்னிலையில் நெருப்பு எரிப்பதற்கான கட்டைகளையும் பூஜைக்குத் தேவையான புஷ்பங்களையும் கண்டனன்.

பரதன் சந்தோஷமடைந்து சத்துருக்கனனையும் மற்றுமுள்ள மந்திரிகளையும் நோக்கி "பரத்துவாசர் சொன்ன இடத்திற்கு இதோ வந்து விட்டோம். இதோ மந்தாகினி தெரிகின்றது. இங்குள்ள மரங்களின் நுனியில் மரவுரிகள் கட்டப் பட்டிருப்பதைப் பாருங்கள். இது லக்ஷ்மணன் சாயங்காலம் முதலிய அகாலங்களில் காய் கிழங்குகளைக் கொண்டு வரப்போய் மீளும்பொழுது வழி நன்கு தெரிவதற்காக அடையாளம் செய்யப்பட்டிருக்கின்றது போலும். ஆகையால் இவ்வழியே செல்வோம். ஆ! இவ்வனம் எவ்வளவு ரமணீயமாய் இருக்கின்றது! நான் ராமனை இங்கு சந்தோஷமாகப் பார்க்கப் போகிறேன்." என்று கூறி ஒரு முகூர்த்த காலம் நடந்து சென்றனன்.

பிறகு தன்னுடன் வந்த ஜனங்களை நோக்கிப் பரதன் "ஐயோ! ராஜாதிராஜனான ராமன் இக்கானகத்தில் வெறும் தரையில் வீராஸனத்தில் உட்கார்ந்திருக்க நேர்ந்ததே!; இனி என் ஜன்மம் எதற்கு? அவன் சகலமான சுகங்களையும் துறந்து காட்டில் வசிக்கின்றனனே! இவ்வித கஷ்டங்களை யநுபவிக்கின்ற ராமனுடையவும் சீதையினுடையவும் பாதங்களில் வீழ்ந்து எனக்கருள் புரியுமாறு நமஸ்கரிக்கப் போகிறேன். அவர்கள் அருள் புரியாவிடில் லக்ஷ்மணனுடைய பாதங்களிலும் விழப்போகிறேன்." என்றிங்ஙனம் புலம்பிக்கொண்டே சென்று ராமனது பர்ணசாலையைக் கண்டனன்.

பரதன் அப்பர்ணசாலையில் நெருப்பு எரியப்பெற்றதும் பரிசுத்தமுமான அக்கினி வேதிகையைக் கண்டனன்.

அங்கு ரிஷியைப் போல் வீற்றிருக்கும் ராமனைக் கண்டு அவன் சடைகள் தரித்திருப்பதால் அடையாளம் தெரியாமல் ராமனே அல்லனோ வென்று சிறிது காலம் யோசித்துப் பிறகு தெளிவுற்று அண்ணனென்று தெரிந்து கொண்டனன் துக்கமும் சோகமும் மேலிழப் பெற்று அவனருகில் சென்று கண்ணீர் பெருகத் தழதழத்த குரலில் அவனது வன வாசத்தை நினைத்துப் பலவகையாகப் புலம்பினன்.

பிறகு அவ்விராமனது பாதங்களில் விழச்சென்று கண்ணீர் மறைக்கையால் ஒன்றும் தோன்றப் பெறாமல் கதறிக் கொண்டே தரையில் விழுந்தனன். அங்ஙனம் விழுந்தவன் 'ஐயனே!' என்று ஒருமுறை கூவிப் பிறகு ஒன்றும் சொல்ல முடியாமல் திகைத்தனன். சத்துருக்கனனும் அழுது கொண்டே ராமனது பாதங்களில் விழுந்து வணங்கினன். அந்த அரசகுமாரர்கள் அங்கு ஒருவர்க்கொருவர் கலந்திருப்பதைக்கண்டு அங்குள்ள சமஸ்த ரிஷிகளும்கூட மனக்களிப்பின்றிக் கண்ணீர் பெருக்கினர்.

தொண்ணூற் றொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நூறாவது ஸர்க்கம்.

### ராமன் பரதனை க்ஷேமம் விசாரித்தலும், அவனுக்கு ராஜ நீதிகளை உபதேசித்தலும்.

தன்முன் கை கூப்பிய வண்ணம் நின்ற பரதனை ராமன் கண்டனன். பரதன் முகவொளி மழுங்கி இளைத்திருந்ததால் தெரிந்து கொள்ளமுடியாமல் சிறிதுநேரம் திகைத்துப் பிறகு தெளிந்து அவனை வாரியெடுத்துக்கொண்டு கட்டியணைத்து உச்சிமோந்து மடியில் உட்காரவைத்து அவனை

நோக்கி "என்னப்பனே! நீ வனத்திற்கு ஏன் வந்தனை? எப்படி வந்தனை? தந்தை பிழைத்திருப்பாராயின் உன்னை இவ்விடம் அனுப்பமாட்டாரே. நீ இங்கு வந்ததனால் எனக்குச் சந்தேகமாய் இருக்கிறது. இப்பொழுது தந்தை பிழைத்திருக்கிறாரா? அல்லது துக்கத்தினால் இறந்தனரா? அவர் க்ஷேமமா? அவர் சொல்படி நீ நடக்கின்றனையா? நீ அவரையும் வசிஷ்ட முனிவரையும் மற்றுமுள்ள தாய்மார்களையும் கிரமப்படி பூஜித்து வருகின்றாயா? மற்றுமுள்ள ராஜ்ஜியகாரியங்கள் நன்கு நடைபெறுகின்றனவா?

சிறந்த மந்திரிமார்களையுடையவனாய் இருக்கின்றனையா? ரகுகுல திலகனே! நீ நித்திரைக்கு உட்படாமலிருக்கின்றனையா? தகுந்த காலத்தில் விழித்துக்கொள்கிறாயா? பொருள் சம்பாதிக்கும் உபாயங்களை ஆலோசிக்கின்றனையா? உன் பகையரசர்கள் உனக்கடங்கி நடக்கின்றார்களா?

சிறந்த புத்திமானான ஒரு மந்திரி இருந்தால் அரசனுக்கு ஒரு கெடுதியும் நேராது. அளவற்ற ஐசுவர்யங்கள் வந்தடையும். சிறந்த வேலைக்காரர்களை உடையவனாய் இருக்கின்றனையா? உன்னை ஜனங்கள் அவமதிக்காமல் விரும்புகின்றனரா? உன்னுடைய சேனாதிபதி உன்னிடத்தில் விசுவாசமுடையவனாக இருக்கின்றானா? சேனா ஜனங்களுக்கும் மற்றுமுள்ள உத்தியோகஸ்தர்களுக்கும் காலங்களில் தரவேண்டிய சம்பளங்களைச் சரிவரக் கொடுத்து வருகின்றனையா?

உன்னிடத்தில் நம்பிக்கையுள்ள தூதுவனை நீ வைத்துக் கொண்டிருக்கின்றனையா? நீ உனது பகைவர்களின் சமாசாரங்களைத் தனித்தனியாக அனுப்பப்பட்ட மாறுவேடங்களணிந்த சாரணர்களால் தெரிந்து கொள்கின்றனையா? நீ நாஸ்திகர்களான பிராமணர்களை அருகில் சேரவொட்டாம

யிருக்கின்றனையா? அவர்கள் கபடவேடம் பூண்டு உன்னிடம் அன்பாய் இருப்பதுபோல் காட்டி உனக்கு துர்ப்போதனை செய்து கெடுதிகளை விளைவித்து விடாதபடி ஜாக்கிரதையாக இருக்கின்றனையா? பெரியோர்களால் பரம்பரையாக ஆளப் பட்டு வந்த அயோத்தியைப் பத்திரமாகப் பரிபாலித்து வருகின்றாயா? நமது தேசம் சுபிக்ஷமாக விருக்கின்றதா?

வியாபாரத்தை நடத்துகிற வைசியர்கள் உன்னிஷ்டப் படி நடக்கிறார்களா? வியாபாரம் நன்கு விருத்தியடையு மாயின் ஜனங்களுக்குச் சுகம் மேன்மேலும் பெருகிவரும். அரசன் எப்பொழுதும் தருமத்தில் நிலை நின்று ஜனங்க ளுடைய கஷ்டங்களை நீக்கி அவர்களுக்கு இதத்தையே செய்தல்வேண்டும். உன் மனைவிகள் உனக்கு அனுகூலமாய் இருக்கிறார்களா? அவர்களிடம் நம்பிக்கையில்லாமல் ரகஸ்யங் களைச் சொல்லாதபடி இருக்கின்றனையா?

வேலைக்காரர்களால் நன்கு மதிக்கப்படுகின்றனையா? உனக்கு வரவு அதிகமாகவும் செலவு குறைவாகவும் இருக் கின்றதா? ஏழைகளுக்கும் பிராமணர்களுக்கும் அன்ன தானம் முதலிய தருமங்களைக் குறைவின்றிச் செய்து வருகின் றனையா? உன் பொக்கிஷத்தில் குறையாமல் ஐசுவரியம் பெருகி வருகின்றதா? நம் தேசத்தில் பக்ஷபாதமில்லாத நியா யங்கள் வழங்கிவருகின்றனவா? பொருளாசையால் ஒருவன் மேல் அபாண்டமான குற்றம்சாற்றி அவனைத் தண்டனைக்குட் படுத்தினால் அவனழுத கண்ணீரானது அவனைத் தண்டித்த வனுடைய புத்திரன் பசு முதலிய எல்லாவற்றையும் அழித்துவிடுமென்பதை அறிந்திருக்கின்றனையா?

கிழவர்களையும் சிறுவர்களையும் பண்டித சிகாமணிகளை யும் பணத்தைக் கொடுத்தும், நட்பைக்காட்டியும், நல்ல

வார்த்தைகளைச் சொல்லியும் உன் வசப்படுத்துகின்றனையா? ஆசாரியர்களையும், தேவதைகளையும், அதிதிகளையும், தவம் செய்பவர்களையும், மேலான பிராமணர்களையும் நீ வணங்கி வருகின்றனையா? பொருளாசைகொண்டு தருமத்தை யிழந்து சுகத்திலும் காமத்திலும் ஆசை கொள்ளாமலிருக்கின்றனையா? இருபத்துநான்கு விதங்களான ராஜதோஷங்களையும் நீ கைவிட்டிருக்கின்றனையா?

மிகுந்த மதியுடையவனே! தசவர்க்கம், பஞ்சவர்க்கம் சதுர்வர்க்கம் சப்தவர்க்கம் முதலியவைகளையும் இந்திரிய வசீகரணம், பிரகிருதி மண்டலம், தண்ட யாத்திரை, தண்ட விதானம் ஆகிய இவைகளையும் விதிப்படி நன்கு ஆராய்ந்து விடவேண்டியதை விட்டும் செய்யவேண்டியதைச் செய்து கொண்டும் வருகின்றனையா?

சாஸ்திரங்களில் சொன்ன லக்ஷணங்கள் பொருந்திய மந்திரிகள் மூவரையாவது நால்வரையாவது வைத்துக் கொண்டு ரகஸ்யமாக அவர்களெல்லாரையும் உட்காரவைத்துக் கொண்டாவது அல்லது தனித்தனியேயாவது கலந்து ஆலோசனை செய்கின்றனையா? நீ அறிந்த வித்தைகளில் சொல்லியபடி நடந்துகொண்டு வருகின்றனையா? பரதா! சிறந்த நீதிமார்க்கங்களை உனக்குச் சொல்லினேன். அவை எனக்கு எப்படியோ அப்படியே உனக்கும் இருக்கின்றனவா? நமது முன்னோர்கள் ராஜ்ஜியத்தை எவ்விதம் பரிபாலித்து வந்தனரோ அவ்வண்ணமே நீயும் பரிபாலித்து வருகின்றனையா? அரசனாயிருப்பவன் இவ்வாறு தருமம் தவறாமல் ஜனங்களை ஆட்சிபுரிவானாயின் அவன் இம்மையிலும் மறுமையிலும் மேன்மையான கதியை யடைவான்" என்றனன்.

நூறாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நூற்றோராவது ஸர்க்கம்

### பரதன் அரசனுடைய மரணத்தைக் கூறல்.

இங்ஙனம் கூறக்கேட்ட பரதன் ராமனைப்பார்த்து "உனக்குப் பணிசெய்திருக்கும் தவமுடையேனான எனக்கு ராஜ்ஜியம் எதற்காக? மகாராஜனே! மூத்தவனிருக்க இளையவன் அரசனாயிருப்பது எங்குமில்லை. ஆகையால் நீ இப்பொழுதே அயோத்திக்கு வந்து ராஜ்ஜியாபிஷேகம் செய்து கொள்வாயாக. ராஜனாயிருப்பது சாமானியமன்று. ராஜாவை மனுஷ்யனாக மூடர்கள் நினைப்பார்கள். அரசன் தெய்வாம்சம் என்பதை நான் அறிவேன். என்னப்பனே! நான் கேகயநாட்டிற்குப் போயிருக்கையில் உன்னுடைய பிரிவாற்றாமையால் சோகமடைந்த நமது தந்தை சுவர்க்கமடைந்தனர். ஆண்சிங்கமே! எழுந்திரு. சீக்கிரமாகத் தந்தைக்கு ஜலதர்ப்பணம் முதலிய செயல்களை லக்ஷ்மணனுடன் செய்வாயாக. நானும் சத்ருக்கனனும் முன்பே செய்துவிட்டோம்.

ரகுகுல ராமா! நீயே தந்தைக்குப் பிரிய குமாரன். மூத்தவனுமாய் இருக்கின்றனை. ஆகையால் நீ அவசியம் ஜலதர்ப்பணம் முதலிய மரணச்சடங்குகளைச் செய்யவேண்டும்." என்றனன்.

நூற்றோராவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நூற்றிரண்டாவது ஸர்க்கம்.

### ராமன் தந்தையை நினைத்துப் புலம்புதலும் ஜலதர்ப்பணம் செய்தலும் அயோத்தியா ஜனங்கள் ராமனிடம் வந்து சேருதலும்

தசரதன் இறந்த செய்தியைக் கேட்ட ராமன் தாங்க முடியாத மனவருத்தத்தினால் மெய்மறந்து கீழேவிழுந்து

மூர்ச்சித்தனன். பரத சத்துருக்கனர்களும் லக்ஷ்மணனும் சீதையும் கதறிக்கொண்டே ராமனை மூர்ச்சை தெளிவிப்ப தற்காக அவன் உடல் முழுதும் தண்ணீர் தெளித்தனர். சிறிதுநேரம் சென்று கண்விழித்த ராமன் "ஐயோ! தந்தை மாண்டனரே! இனி அயோத்தியில் எனக்கென்ன காரியம்? அரசன் என்னைப் பிரிந்ததனால் உயிர் விட்டனன். நான் அவருக்கு உடனிருந்து உத்தரகிரியைகள் செய்யப்பெற்றிலனே! இப்படிப்பட்ட என்னால் அவருக்கென்ன பிரயோஜனம்?

பரதா! இனிநான் வனவாசம் தீர்ந்த பின்பும் அயோத்திக்குப் போக விரும்புகின்றிலேன். அப்படிப் போனாலும் எனக்கு 'இது நன்று இது தீது' என்று எடுத்துக் கூறுவார் யாரிருக்கிறார்கள்? என் தந்தை யொருவரே நல்லது கெடுதல் களை எனக்குப் பிரியமாக எடுத்துக் கூறவல்லவர். அப்படிப் பட்டவரை இழந்தபின் எனக்கு அவ்விடத்திலென்ன காரியம்?

ஐயோ! லக்ஷ்மணா! நீ தந்தை யில்லாதவனாயினையே! ஐயோ! சீதே! உன் மாமனாரான மகாராஜர் மாண்டாரே." என்று கூறி வெகுவாகப் புலம்பினன். பிறகு ராமலக்ஷ்மணர்கள் மந்தாகினி நதியில் நீராடித் தந்தைக்குச் செய்ய வேண்டிய ஜல தர்ப்பணாதிகளைச் செய்தனர். பிறகு கரை யேறி இங்குணப் பிண்ணாக்கை இலந்தம் பழங்களுடன் கலந்து உருண்டைகள் செய்து தர்ப்பங்களைப் பரப்பி அவற்றின் மேலிட்டுத் தந்தைக்குப் பிண்டப்பிரதானஞ் செய்தனர்.

பிறகு ராமன் பர்ணசாலையை யடைந்து பரத லக்ஷ்மணர்கள் இருவரையும் அழுந்தக் கட்டிக்கொண்டு அழுதனன். இதைக்கண்ட பரதனுடைய சேனைசமூகங்கள் அங்கு வந்து ஓ! வென்று ஓலமிட்டுக் கதறினர். அவர்களுடைய

அழுகுரலாலேற்பட்ட சப்தத்தினால் அப்பர்வதத்தில் எதிரொலி உண்டாயிற்று. காட்டிலுள்ள சகலவிதமான மிருகங்களும் பயந்தோடின. பறவைக் கூட்டங்கள் திகிலடைந்து பறந்தோடின. பிறகு சேனைக் கூட்டங்கள் பர்ணசாலையைச் சமீபித்து ராமனைக் கண்டன.

ராமன் அந்த ஜனங்களைக் கண்டு பிள்ளைகளைத் தகப்பன் போலவும் பெண்களைத் தாய் போலவும் பெருமையுடன் அணைத்துக்கட்டிக் கொண்டனன். சிலர் ராமனை வணங்கினர். ராமன் சிநேகிதர்களையும் உறவினர்களையும் மற்றுமுள்ளவர்களையும் அவரவர்க்குத் தகுந்தபடி சம்மானித்தனன். அவ்விடத்தில் ராமன் முதலியோருடைய அழுகுரலானது பூமியிலும் ஆகாயத்திலும், மலைக்குகைகளிலும் திசைகளிலும் எதிரொலி உண்டாக்கி மிருதங்க சப்தம்போல் ஒலித்தது.

நூற்றிரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நூற்றுமூன்றாவது ஸர்க்கம்.

### ராமன் தாய்மார்களையும் வசிஷ்டர் மந்திரிகள் முதலானோர்களையும் கண்டு பேசுதல்.

வசிஷ்டர் தசரதரது மனைவிமார்களை முன்னிட்டுக் கொண்டு ராமனைப் பார்க்க விருப்பமுற்று அவ்விடத்திற்கு வந்து சேர்ந்தனர். வரும் வழியில் கௌசல்யை முதலியோர் மந்தாகினியில் ராம லக்ஷ்மணர்கள் ஸ்நானம் செய்யும் தண்ணீர்த் துறையையும், அவர்களால் தர்ப்பைகளின்மேல் பரப்பி வைக்கப்பட்ட பிண்டங்களான இங்குணப் பிண்ணாக்கு உருண்டைகளையும் கண்டு அடக்கமுடியாத

துக்கமடைந்து புலம்பியழுதனர். கடைசியில் ரிஷிகள்போல் விளங்கும் ராம லக்ஷ்மணர்களைக் கண்டனர்.

ராமனும் லக்ஷ்மணனும் தாய்மார்களுடைய பாதங்களைப் பிடித்துக்கொண்டு நமஸ்காரம் செய்தனர். அங்ஙனம் வணங்கின மைந்தர்களின் முதுகிலுள்ள தூளிகளை அவர்கள் தங்கள் கைகளால் துடைத்தனர். சீதையும் கண்ணீர்விட்டுக்கொண்டே மாமியார்களின் பாதங்களைப் பிடித்து வணங்கினள். கௌசல்யை சீதையைக் கண்டு பரிதபித்துத் தன் சொந்த மகளைப்போல் கட்டிக்கொண்டு "சீதே! நீயோ ஜனக ராஜன் திருமகள். நீ எப்படி ஜனசஞ்சாரமில்லாத இவ்வனத்தில் வசிக்கின்றாய்? வெயிலில் வதங்கின தாமரைபோலவும், வாடி வதங்கின கருநெய்தல் போலவும், மேகங்களால் மறைக்கப்பட்ட சந்திரகலைபோலவும் உன்முகம் காணப்படுகிறதே!" என்று துக்கமேலீட்டால் புலம்பினள்.

பின்னர் ராமன் வசிஷ்டரை வணங்கி அவருடன் கூடவே உட்கார்ந்தனன். பரதனும் மந்திரிகளோடும் பட்டணத்திலுள்ள முக்கியமான உத்தியோகஸ்தரோடும் மற்றுமுள்ளவர்களோடும் ராமனது சமீபத்தில் உட்கார்ந்தனன். ராமனும் லக்ஷ்மணனும் பரதனும் அப்போது கார்ஹபத்தியம் முதலிய மூன்று நெருப்புகளைப்போல் விளங்கினர்.

நூற்றுமூன்ருவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நூற்றுநான்காவது ஸர்க்கம்.

### பரதன் ராமனை ராஜ்ஜியபாரம் பெற்றுக்கொள்ளும்படி வேண்டுதலும் ராமனது சமாதானமும்.

ராமன் பரதனைநோக்கி "நீ சடைகளைத் தரித்து மரவுரியுடுத்து மான்தோலைப் போட்டுக்கொண்டு இவ்வனத்திற்கு

வந்த காரணம் என்ன?" என்று வினவ, பரதன் "நம் தந்தை கேவலம் ஓர் பெண்பிள்ளையின் பேச்சைக்கேட்டுத் தன்கீர்த்தியெல்லாம் பாழாகும்படி மூத்தவனான உனக்குச் சேரவேண்டிய ராஜ்ஜியத்தை எனக்குக்கொடுக்க இசைந்ததுடன் தர்மாத்மாவான உன்னையும் இக்கதிக்குள்ளாக்கி அதனால் சோகமுற்றுச் சுவர்க்கமடைந்தனர். கைகேயியோ விதவையாகி சோகத்தினால் இளைத்து நரகத்தில் விழப்போகின்றனள். அவள் வயிற்றில் பிறந்து வீணான அபவாதத்திற்கு ஆளாயிருக்கும் உன் அடிமையான என்மீது அருள் கூர்ந்து ராஜ்ஜியத்தைப்பெற்று அபிஷேகம் கொண்டருள்வாயாக. தருமத்தின்படி உனக்கே உரிய அரசை நீ கைப்பற்ற வேண்டும்" என்று கூறிக் கண்களில் நீர் பெருக மிகுந்தவருத்தத்துடன் ராமனது பாதங்களைப் பிடித்துக்கொண்டு நமஸ்கரித்தனன்.

அந்தப் பரதனை ராமன் அணைத்துக்கொண்டு "பரதா! உன்னிடம் சிறிதும் தோஷம் இருப்பதாக எனக்குத் தோன்றவில்லை. நீ சிறியவனாதலால் பூஜிக்கத் தகுந்தவளான உன் தாயை நிந்திக்கின்றனை. இது உனக்கு யுக்தமன்று. பெரியோர்கள் எப்பொழுதும் தம்மைச்சேர்ந்த சிடர்களிடத்திலும் அடியவர்களிடத்திலும், மனைவிகளிடத்திலும் மனம் தோன்றியபடி செய்யலாமென்று சாஸ்திரங்களில் கூறப்பட்டிருக்கின்றது. உலகத்தில் சாதுக்கள் மனைவிகளையும், பிள்ளைகளையும், சிடர்களையும் கட்டளைப்படி நடக்கவேண்டியவர்களெனக் கூறுகின்றனர். நாமும் அப்படியே தசரதனது கட்டளைக்கு உட்பட்டவர்களென்று நீ அறிவாயாக. ஆகையால் நம் தாய் தந்தையர் கட்டளைப்படி நான் காட்டில் வசிக்கவேண்டியவன். நீ அரசைக் கைப்பற்றி ஆளவேண்

டியவன். சுவர்க்கலோகம் கிடைப்பினும் நான் தந்தையின் வாக்கை நிறைவேற்றாமலிருக்கமாட்டேன்" என்றனன்.

நூற்றுநான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நூற்றைந்தாவது ஸர்க்கம்.

### மீளவும் பரதன் ராமனை வேண்டுதலும் ராமன் தத்துவங்களைக்கூறிச் சமாதானம் சொல்லுதலும்.

இங்ஙனம் ராமாதிகள் பேசிக்கொண்டிருக்கும்போதே அன்றிரவு கழிந்தது. மறுநாள் காலை அனைவரும் எழுந்து காலைக்கடன்களை முடித்து மந்தாகினியில் நீராடி ஜபதபங்களைச் செய்து ராமனிடம் வந்து சேர்ந்தனர். அப்பொழுது பரதன் ராமனை நோக்கி "ராமா! நீ ஒருவனது ராஜ்ஜியத்தை மற்றொருவன் எப்படிக் கைப்பற்றலாம் என்று நினைக்க வேண்டா. நீயே எனக்கு இந்த அரசையளித்தனை. அதனை மீண்டும் நான் உனக்கே கொடுக்கிறேன். தயவு செய்து பெற்றுக்கொள்ளவேண்டும்;

ராஜ்ஜியத்தை ஆள்வது மிகுந்த கஷ்டம். அதற்கு நீ தவிர மற்றெவனும் வல்லனல்லன். சக்கரவர்த்தியே! குதிரையைப் போல் கழுதையால் நடக்கமுடியாது. கருடனைப்போல் கேவலமான ஒரு குருவி ஆகாயத்தில் பறக்க முடியாது. அதைப்போல், உன்னைப்போல் என்னால் ராஜ்ஜியத்தைப் பரிபாலிக்க முடியாது. என் வேண்டுகோளை ஏற்றுக்கொண்டு அந்தப்புரத்து ஸ்திரீகளையும் மற்றுமுள்ள மகாஜன சமூகங்களையும் சந்தோஷிக்கச் செய்வாயாக." என்றனன்.

இவற்றையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த பட்டணத்து ஜனங்களும் அங்குள்ள மற்றைய பேர்களும் "தகும். தகும். நல்லது. நல்லது" என்று ஒரே மிடறாகக் கூறினார்கள்.

ராமன் பரதனைச் சமாதானப்படுத்த விரும்பி "பரதா! புருஷன் சுதந்திரமுடையவனல்லனாதலால் தன்னிஷ்டப்படி நடக்க முடியாது. எல்லாம் தெய்வச் செயல். ஆகையால் கைகேயியினால் நான் வனம்வந்துளேனென்று நீ நினைப்பது முற்றிலும் தவறு. தந்தை மரணமடைந்ததைப் பற்றி வருத்த முறுவதும் யுக்தமன்று. உலகில் சகலவிதமான ஐசுவரியங்களும் அழியக்கூடியவை. எவ்வளவுதான் உயர்வாக வாழ்ந்த போதிலும் எவனுக்கும் மரணம் என்பது உண்டு. 'ஆறிலும் சாவு, நூறிலும் சாவு' என்பது உனக்குத் தெரியாததன்றே. ஆகையால் மனிதர்கள் மூப்பு (கிழத்தனம்) இறப்புகளுட்பட்டு நாசமடைகின்றனர். கடந்த இரவு மறுபடியும் திரும்பிவாராது. ஆற்றில் செல்லும் வெள்ளநீர் சமுத்திரத்தையடையுமே யன்றித் திரும்புவதில்லை. வெயிற் காலத்தில் சூரியகிரணங்கள் ஜலத்தை இழுப்பதுபோல் இரவும் பகலும் பிராணிகளின் வாழ்நாட்களை நசிக்கச்செய்கின்றன. நீ நிற்கிலும் நடக்கிலும் உன்னுடைய வாழ்நாள் குறைந்து கொண்டே வருகிறது. ஆகையால் உன்னைப் பற்றி நீயே சோகிப்பாயாக. உன்கதியே இங்ஙனம் இருக்க மற்றவருக்காக ஏன் சோகிக்கின்றாய்? பிறந்த பொழுதே எவர்க்கும் மரணம் சித்தம். அதைத்தவிர்க்க எவராலும் முடியாது. ஆகையால் நன்றாகப் பிழைத்திருக்கும் காலத்திலேயே ஆத்மவிசாரம் செய்து இம்மையில் நேரும் அனர்த்தங்களைப் போக்கிக்கொள்ள வேண்டும். மனிதர் காலஞ் செல்லச்செல்ல தம் ஆயுள் குறைகிறதென்பதை நினைப்பதில்லை. முடிவில் சாவைத் தவிர்க்க எவராலுமாகாது. ஆகையால் மாண்டொழிந்தவரை நினைந்து அழுவதால் யாதும் பயனில்லை. நம் தந்தை இப்பொழுது மானிட

தேகத்தை விட்டுப் பிரமலோகத்தில் விளையாடிக்கொண்டிருக்கின்றார். அவரைப் பற்றிக் கவலையுறாதே. அவர் கட்டளைப்படி ராஜ்ஜியத்தைப் பரிபாலித்துக் கொண்டிருப்பாயாக." என்றனன்.

நூற்றைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நூற்றாறாவது ஸர்க்கம்

## பரதன் ராமனை மீளவும் வேண்டிக் கோள்ளல்.

பிறகு மீண்டும் பரதன் ராமனை நோக்கி "ராமா! உன்னைப் போன்றவன் உலகில் ஒருவனுமிருக்கமாட்டான். சங்கடமும் சந்தோஷமும் உனக்கு ஒன்றே. கற்றறிந்த பெரியோர்களும் கூட உன்னைப் பூஜிக்கின்றனர். ஆயினும் நீ அவர்களைக் கௌரவிக்கும் பொருட்டு அவர்களைவினவி சந்தேகங்களைத் தீர்த்துக்கொள்கின்றனை. நீ ஆத்மஞான முடையவனாகையால் விசனத்திற்கு மனவருத்தமுறமாட்டாய். நீ வருத்தமடையாதிருந்த போதிலும் நான் எப்படிப் பொறுத்திருக்க முடியும்? ராமா! நீ கழிகாலம் நிகழ்காலம் வருங்காலம் என்கிற மூன்று காலங்களையும் அறிந்தவன். தயாநிதி. பிராணிகளின் பிறப்பையும் இறப்பையுமறிந்தவன். குணக்கடலான உன்னை நான் ஊரிலில்லாத சமயத்தில் தந்தை கைகேயியினிடத்துள்ள மோகத்தினால் இக்கதிக்காளாக்கினார். என் தாய் என் நிமித்தமாக நடத்தின பாப காரியம் எனக்குச் சம்மதமன்று. நமது தந்தை தர்மவானாயிருந்தும் ஒரு பெண்பிள்ளைக்குப் பிரியம் செய்வதற்காக இப்படிப்பட்ட பாபகாரியத்தைச் செய்தனர். அவர்செய்த காரியம் தருமத்தை மீறி யிருப்பதால் நீ நற்பொருளை நெஞ்சில் கொண்டு அதைத் திருப்புவாயாக.

எந்தப் புதல்வன் தந்தை செய்த தர்மமல்லாத காரியத்தைச் சரிப்படுத்த விரும்புவானோ அவனே உத்தமனான புதல்வனென்று உலகத்தவர் கூறுகின்றனர். அப்படியல்லாதவன் புதல்வனேயல்லன். நீ அப்படிப்பட்ட புதல்வனாய் இருப்பாயாக. ஆகையால் தந்தை உலகத்தில் விவேகிகள் நிந்திக்கும்படி செய்த பாபகாரியத்தை நீ அனுசரிக்கலாகாது. என்மீது அருள்கூர்ந்து ராஜ்ஜியத்தை ஏற்றுக்கொள்ள வேண்டும்.

இன்னும் ஆச்சிரமங்கள் நான்கிலும் கிருகஸ்தாச்சிரமமே சிறந்தது. அதை எப்படி நீ விட்டுத் துறக்கலாகும்? நானோ கல்வியிலும் வயதிலும் உன்னைவிட சிறியவன். நற்குணங்களும் புத்தியுமில்லாதவன். ஆகையால் எல்லாவிதங்களிலும் மேலோனாகிய நீ இருக்கையில் நான் அரசாளுவது சிறிதும் தகாது.

ஆகையால் ஜனங்கள் எல்லோரும் வசிஷ்டர் முதலிய மந்திரவித்துக்களான ருத்விக்குகளும் இங்கேயே உனக்குப் பட்டாபிஷேகம் நடத்துவார்களாக. இந்திரனைப்போல் அயோத்தியைப் பரிபாலிப்பாயாக. நீ இவ்விதம் செய்தால் என் தாயின் உலக நிந்தையைத் துடைப்பதுடன் தந்தையைப் பாபத்தில் விழாதபடியும் பாதுகாத்தவனாவாய். உன்னைத் தலைசாய்த்து வணங்குகிறேன், என்மீது கிருபை செய்ய வேண்டும், நீ என் வார்த்தையைத் தள்ளி வனத்திற்கே போவாயாயின் நானும் உன்னோடுகூடவே வனத்திற்கு வருகின்றேன்.” என்றனன்.

இங்ஙனம் பரதன் எவ்வளவு வேண்டிக்கொண்டபோதிலும், ராமன் தந்தையிட்ட கட்டளையில்தானே நிலை நின்று அயோத்திக்குத் திரும்ப விருப்பமில்லாதிருந்தனன். இதைக்

கண்ட ஜனங்கள் ஒரே காலத்தில் சந்தோஷத்தையும் துக்கத்தையுமடைந்தனர். ராமன் அயோத்திக்கு வரமாட்டானென்று துக்கத்தையும் சொன்னசொல் தவறாதவன் என்று சந்தோஷத்தையும் பெற்றனர்.

நூற்றுருவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நூற்றேழாவது ஸர்க்கம்.

### பரதன் தந்தையின் காமமோகத்தை நிந்திக்கையில் ராமன் அதை மறுத்து அவர் தருமத்தையே ஆசரித்தாரேன்று புகழ்ந்து சொல்லுதல்.

அப்போது ராமன் மீண்டும் பரதனைநோக்கி "பரதா! நீ நம் தந்தையை நிந்திக்கலாகாது. முன்பு அவர் ஒரு சமயத்தில் கைகேயியிடம் பிறந்தவனுக்கே ராஜ்ஜியம் கொடுப்பதாகப் பிரதிக்ஞை செய்திருக்கின்றனர். இன்னும் அவர் தேவாசுர யுத்தத்தில் உன் தாய் செய்த பணிவிடைக்கு மிகவும் சந்தோஷித்து அவளுக்கு இரண்டு வரங்களைக் கொடுத்தனர். அதன் பயனாகவும் நான் வனமேகவும் நீ அரசாளவும் நேர்ந்திருக்கிறது. ஆகையால் தந்தையின் வாக்கை சத்தியமாக்குவதில் நாம் நிலை நின்று அவர் கட்டளைப்படி நடக்கவேண்டும். பரதா! நீ என்னைப்பற்றித் தந்தையைக் கைகேயியிடம் பட்ட கடனில் நின்றும் விடுவித்து அதனால் அவரையும் உன் அன்னையையும் சந்தோஷப்படுத்துவாயாக.

இன்னும் கேள். தந்தையின் இஷ்டபூர்த்திகளைத் தவறாமல் செய்து பரலோகத்தில் அவருக்கு சுகத்தை உண்டாக்குதலே புத்திரனின் கடமை. ஆகையால் நம் தந்தைக்கு நரகமுண்டாகாதிருக்குமாறு நீ நடந்துகொள்வாயாக. இனி

நீ அனைவரையும் அழைத்துக்கொண்டு அயோத்திக்குச் சென்று அரசாளுவாயாக. நான் மனக்களிப்புடன் இப்பொழுதே தண்டகாரணியம் செல்கின்றனன். நீ மனிதர்களுக்கெல்லாம் ராஜனாய் இருப்பாயாக. நான் வனத்திலுள்ள மிருகங்களுக்கெல்லாம் அரசனாய் இருக்கின்றனன். பரதா! வெண்குடை உன் தலைமேல் சூரிய கிரணங்கள் படாமல் தடுத்து நிழலைச் செய்யுமாக. நானும் இக்காட்டிலுள்ள மரங்களின் நிழலைப்பற்றிச் சுகமாய் இருக்கின்றனன். உனக்கு சத்துருக்கனனும் எனக்கு லக்ஷ்மணனும் சகாயர்களாக இருக்கிறார்கள். நாம் நால்வரும் பரஸ்பர சகாயத்தால் நம் தந்தையின் வார்த்தையை உண்மையாக்கவேண்டும். நீ மனவருத்தப்படாதிருப்பாயாக.” என்றனன்.

நூற்றேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

நூற்றெட்டாவது ஸர்க்கம்

## ஜாபாலிமுனிவர் சார்வாகமதத்தைக் கூறி ராமனை ராஜ்ஜியத்தை ஒப்புக்கொள்ளும்படி வற்புறுத்தல்.

அச்சமயம் அங்கு முனிக்கணங்களுடன் வீற்றிருந்த ஜாபாலிமுனிவர் அதர்மமதமான நாஸ்திக மதத்தின் உரைகளைக் கூறி அதனால் ராமனை வாக்கில் வெல்லவேண்டுமென்கிற எண்ணத்தோடு அவனை நோக்கி “ராமா! நீ என்ன சாமான்னிய மனிதனைப்போல் பேசுகின்றனையே! எவனுக்கு எவன் பந்து? எவனுக்கு எதனால் எது உண்டாகக்கூடியது? எவனும் பிறக்கும்போது ஒருவனாகவே பிறக்கின்றனன். சாகும்பொழுதும் அப்படியே. ஆகையால் எவனும் கூடப்பிறப்பதில்லை. கூடச்சாவதுமில்லை. விஷயம் இப்படியிருக்கும்போது எவன் தந்தையென்றும் தாயென்றும் மிகவும் பக்தி

அடைவானோ அவன் பைத்தியக்காரனே யாவான். ஒருவ னுக்கு மற்றொருவன் ஒன்றுமேயல்லன், ஒருவரோடொரு வருக்கு எவ்வளவும் சம்பந்தமில்லை.

ஒருவன் ஒரு கிராமத்திற்குச் செல்கையில் நடுவில் இளைப்பாறும் பொருட்டு ஓரிடத்தில் வசித்திருந்து மறுநாள் அவ்விடத்தை விட்டுப் பிரயாணப்படுவதுபோலவே, மனிதர் களும் சம்சாரயாத்திரை செய்துகொண்டு நடுவில் வாசஸ் தானத்தைப்போல் தாயையும் தந்தையையும் வீட்டையும் பொருளையும் பெறுகின்றனர். ஆகையால் தாய்தந்தை முதலானோர் கேவலம் வாசஸ்தானம் போன்றவரேயன்றி வேறல்ல. நல்லபுருஷர்கள் அவர்களிடத்தில் மனப்பற்று வையார்கள்.

ஓ! ராமா! நீ முறைமையான அரசாட்சியைவிட்டு துக்கத்தை விளைப்பதும், இளவயதிற்குத் தகாததாய் பல கஷ்டங்களைத் தருவதுமாகிய இந்தக் கோணல்வழியை (வன வாசம் செய்தலை) அநுசரிப்பது அடியோடு தகாது. உனக் குத் தசரதனோடு ஒருவித சம்பந்தமுமில்லை. அவனுக்கும் உன்னோடு எவ்வித சம்பந்தமுமில்லை. அவன் வேறு; நீ வேறு.

ஜந்துக்களுக்குத் தந்தை முக்கிய காரணமன்று. ருது காலத்தில் தாய் தரித்த சுக்கில சோணிதங்களே முக்கிய காரணம். அதனாலேயே உலகில் புருஷன் பிறக்கின்றனன். உன் தந்தை எங்குப்போக வேண்டுமோ அவ்விடத்திற்கே போயினன். (பூதங்களில் ஐக்கியமாயினன்). இது, இறப்ப வர் அனைவர்க்கும் சுபாவம். நீயோ இல்லாத சம்பந்த மொன்றை இழுத்து வைத்துக்கொண்டு பிரத்தியக்ஷ சௌக்கியத்தைவிட்டு கேவலம் தருமத்திலே மனம் ஊன்றி யிருக்கின்றனை. பணத்திலும் தருமத்திலும் முயன்றவர்

இங்கு வருத்தமுற்றுக் கெடுவதேயன்றி, செத்த பின்பும் துக்கத்தையே அடைந்து கெடுவார்கள். கருமங்கள் பிரயோஜனமற்றவை. ராமா! பிதிர் வசனபரிபாலனம் செய்ய வேண்டுமென்று நினைக்கின்ற நீ பரலோகமேயில்லையென்று தெரிந்து கொள்வாயாக. பரலோகசுகங்களைக் கொடுக்கும் என்னப்படுகிற பிதிர்வசன பரிபாலனம் முதலிய தருமங்களை அப்புறந்தள்ளி பிரத்தியக்ஷ சித்தமான ராஜ்ஜிய போகாதிகளை அங்கீகரித்து பரதனுடைய வேண்டுகோளை மறுக்காமலிருப்பாயாக" என்றனர்.

நூற்றெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

நூற்றென்பதாவது ஸர்க்கம்

## ராமன் ஜாபாலியின் நாஸ்திக வாதத்தைக்கண்டித்து வைதிக மதத்தை ஸ்தாபித்தல்.

ராமன் இங்ஙனம் கூறின ஜாபாலியை நோக்கி "முனிவரே! நீர் எனக்கு இப்பொழுது கூறின வார்த்தைகள் ஆதரிக்கத்தக்கனபோல் தோற்றுமேயன்றி உண்மையில் அவை முற்றிலும் அபத்தம். அங்ஙனம் செய்தால் பிறகு துக்கமே விளையும். என்னை எவரும் வெகுமானிக்கமாட்டார்கள். நீதிநெறி தவறின என்வார்த்தையை எவரும் கேட்கமாட்டார்கள். எவரும் அவரவர் இஷ்டப்படி நடக்கத்தொடங்கிவிடுவார்கள். ஏனெனில் அரசன் எப்படி நடப்பானோ அப்படியேயன்றோ குடிகளும் நடப்பார்கள். ஆகையால் எனக்கு மாத்திரமேயன்றி உலகத்தவரனைவர்க்கும் பரலோகத்தில் கேடுவிளையும்.

அரசர்களது நடத்தையானது சத்தியமே வடிவாயிருக்கப் பெற்றது. எனவே சமஸ்தமான ஜனங்களுக்கும் உலகுக்கும் சத்தியமே முக்கியமானது. சத்தியத்தினுலேயே சுவர்க்கம் பரமபதம் முதலியவற்றைப் பெறலாகும். சத்தியமே உலகத்தில் அரசனும் தெய்வமுமாகும். செல்வமும் சத்தியத்தையே எப்பொழுதும் பற்றியிருக்கிறது. சத்தியத்தைக் காட்டிலும் பரமகதி வேறொன்றுமில்லை. ஆதலால் சத்தியத்தை விடலாகாது. சத்தியம் தவருதவனுக்கு இந்த லோகத்திலும் பரலோகத்திலும் சுகமுண்டாகும். சத்தியம் தவறுகிறவனுக்கு நரகமே சித்திக்கும்.

நான் எனக்குள் சத்தியசந்தன். நீ சொன்னபடி செய்கிறேனென்று கைகேயியிடம் சபதம் செய்திருக்கின்றனன். இப்படிப்பட்ட நான் சத்தியமாகிய தந்தையின் கட்டளையை எப்படி மீறுவேன்? உம்முடைய மோசவார்த்தைகளால் நான் மயக்கமுற்று சத்தியம்தவறி நடக்கமாட்டேன். சத்தியம் தவறி நடப்பவன் கொடுக்கும் ஹவ்யகவ்யங்களைத் தேவதைகளும் பிதிர்களும் ஏற்றுக்கொள்ள மாட்டார்களென்று சாஸ்திரம் கூறுகின்றது.

இந்த சத்தியம் என்னும் தருமம் ஆத்துமாவைக் குறித்து இடைவிடாமல் நடப்பதென்று நான் நினைக்கின்றேன். சத் புருஷர்கள் அணிகிற இந்த சடை மரவுரி முதலியவை சத்தியத்திற்காகவே ஏற்பட்டதன்றி வேறில்லை. நான் மனம் வாக்கு காயம் என்கிற மூன்றுவிதத்தாலும் சத்தியம்தவறி நடக்க மாட்டேன். ஆகையால் நான் தந்தையிடத்தும் கைகேயியிடத்தும் செய்த பிரதிக்ஞையின்படி வனவாசம் செய்துகொண்டு பிதிர் வாக்கியபரிபாலனமென்னும் தருமத்தை நடத்தியே காலத்தைக்கழிப்பேன்.

கருமங்கள் பிரயோஜனமற்றவை என்று சொன்னீர். தேவேந்திரன் நூறு யாகங்கள் செய்து தேவராஜனுனன். மகரிஷிகளும் கொடுமையான தவங்களைச்செய்து சுவர்க்க மடைந்திருக்கிறார்கள். சத்தியம், தருமம், வீரம், ஜீவகாருணியம், இன்சொல், கடவுளைப் பூஜித்தல், விருந்தோம்பல் ஆகிய இவையெல்லாம் சுவர்க்கத்திற்கு மார்க்கமென்று வேதம் கூறுகின்றது. அவ்வித வேதமார்க்கத்திற்கு விரோதமாய் நாஸ்திக வாதம்புரியும் உம்மை என்தந்தை தமது அருகில் வைத்துக்கொண்டிருந்ததைப்பற்றி நான் மிகவும் வருந்துகிறேன். நாஸ்திகனுடைய முகத்தில் விழித்தாலும் பாபமேயாகுமென்று நான் கேள்விப் பட்டிருக்கிறேன்" என்று கூறினன்.

இங்ஙனம் ரோஷத்துடன் கூறின ராமனது வார்த்தைகளைக்கேட்ட ஜாபாலி "ராமா! நான் நாஸ்திகனல்லேன். தருமசங்கடகாலம் வரும்பொழுதுமாத்திரம் காரியசித்தியின் பொருட்டு நான் நாஸ்திகவாதம் செய்வது வழக்கம். அப்படிப்பட்ட சங்கடகாலம் இப்பொழுது வந்தமையால் நாஸ்திக வாதம் செய்தேன். உன்னை அயோத்திக்குத் திருப்பவேண்டியும் பரதனுக்கு அருள்புரியச் செய்ய விரும்பியும் இங்ஙனம் உரைத்தேனன்றிவேறில்லை" என்று நல்வார்த்தைகளால் ராமனுக்குச் சமாதானம் சொல்லினர்.

நூற்றொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நூற்றுப்பத்தாவது ஸர்க்கம்.

## வசிஷ்டர் ராமனது கோபத்தைத் தீர்த்து ராமனைத் திருப்ப முயலுதல்.

ஜாபாலியின் வார்த்தைகளால் மிகவும் கோபமடைந்திருந்த ராமனை நோக்கி வசிஷ்டர், அவர் (ஜாபாலி) கூறின

தற்குக் காரணத்தை விளக்கிப் பிறகு "ராமா! நான் உலகத்தினுடைய உற்பத்திக் கிரமங்களையெல்லாம் இதோ கூறுகிறேன் கேள். முன்பு எல்லாம் ஜலம் நிரம்பி இருந்தது. அதில் பூமி உண்டாக்கப்பட்டது. அதில் பிரம்மாவும் தேவதைகளும் உண்டானார்கள். பிறகு நாராயணன் பன்றியுருக்கொண்டு ஜலங்களினின்றும் பூமியை எடுத்தனன். அந்த பிரம்மாவும் தன் புத்திரர்களாகிய மரீசி முதலானவர்களோடு கூடி இந்த ஜகத்தையெல்லாம் படைத்தனன்.

பரப்ரஹ்மமான நாராயணனிடமிருந்து பிரமன் உண்டாயினன். அப்பிரமனிடமிருந்து மரீசி உண்டாயினர். மரீசிக்குக் காசியபரும், காசியபருக்கு சூர்யனும், சூர்யனுக்கு வைவஸ்வதமனுவும் பிறந்தனர். வைவஸ்வதருக்கு இக்ஷ்வாகு பிறந்தனன். அவனே அயோத்திக்கு முதன்மையான மன்னவன். அவனுக்கு 'குக்ஷி' என்பவனும் குக்ஷிக்கு விகுக்ஷி என்பவனும் விகுக்ஷிக்கு பாணனும், பாணனுக்கு அனரண்யனும், அனரண்யனுக்கு பிருகு என்பவனும் பிறந்தனர்.

பிருகுவின் மகன் திரிசங்கு, திரிசங்குவுக்கு யுவனாசுவனும், அவனுக்கு மாந்தாதாவும், மாந்தாதாவுக்கு சுசந்தியென்பவனும், அவனுக்கு துருவசந்தியென்றும், பிரசேனஜித் என்றும் இரண்டு பிள்ளைகளும் பிறந்தனர். அவர்களில் துருவசந்திக்குப் பரதன் பிறந்தான்.

பிறகு பரதனுக்கு அஸிதன் என்பவன் பிறந்தான். அவன் சத்துரு அரசர் பலர்களால் தோற்கடிக்கப்பட்டுக் காட்டிற்குத் துரத்தப்பட்டான். அவன் இமயமலையில் தவவேடத்தை மேற்கொண்டனன். அச்சமயம் அவனுடைய இரண்டு மனைவிமார்களும் கருவுற்றிருந்தனர். அவர்களில்

ஒருத்தி தன் சக்களத்தியின் கர்ப்பத்தை யழிக்கும்பொருட்டு அவளுக்கு விஷமிட்ட பக்ஷணத்தைக் கொடுத்தனள்.

இங்ஙனம் விஷந்தின்ற காலிந்தியென்னும் அசிதனது மனைவி தவச்சிரேஷ்டரான சியவனர் என்கிற முனிவரின் அருளால் கருச்சேதமடையாமல் தேஜோமயமான ஒரு பிள்ளையைப் பெற்றனள். மற்றவளோ விஷத்தோடு பிறந்த சகர மகாராஜனைப் பெற்றாள்.

சகரனுக்கு அசமஞ்சனும், அசமஞ்சனுக்கு அம்சுமானும், அம்சுமானுக்கு திலீபனும், திலீபனுக்கு பகிரதனும், பகிரதனுக்கு ககுஸ்தனும், ககுஸ்தனுக்கு ரகுவும், ரகுவுக்குக் கல்மாஷபாதனும், அவனுக்கு சங்கணனும், சங்கணனுக்கு சுதர்சனனும், சுதர்சனனுக்கு அக்னிவர்ணனும், அவனுக்கு சீக்ரகனும் பிறந்தனர்.

சீக்ரகன் பிள்ளை மரு. அவன் பிள்ளை பிரசுச்சுருகன், அவன் பிள்ளை அம்பரீஷன், அவன் பிள்ளை நகுஷன், அவன் பிள்ளை நாபாகன். அவனுக்கு அஜனென்றும் சுவ்ரதனென்றும் இரண்டு பிள்ளைகள் பிறந்தனர். அஜனுக்குத் தசரதன் பிறந்தான். அவனுக்கு ராமனாகிய நீ மூத்த குமாரனாகப் பிறந்தனை. இக்ஷ்வாகுவமிசத்தில் நான் இப்பொழுது கூறினபடி மூத்தபிள்ளையே அரசனாவது வழக்கமாய் இருக்கின்றது. அந்த வழக்கத்தைக் கெடுப்பது உனக்குத் தகாது. ஆகையால் நீயே ராஜ்ஜியாபிஷேகம் கொண்டருளி இப்பூமண்டலத்தைப் பரிபாலனம் செய்வாயாக." என்றனர்.

நூற்றுப்பத்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

## நூற்றுப்பதினோராவது ஸர்க்கம்.

### வசிஷ்டரின் வசனம் தந்தை சொல்லைவிட மேலானதென் றறிந்த ராமன் அவருக்குச் சமாதானம் கூறல்.

வசிஷ்டர் மீண்டும் ராமனைநோக்கி "காகுத்தனே! ஒவ்வொருவனுக்கும் தாய் தந்தையர் ஆசாரியன் ஆகிய இம் மூவரும் குருக்களாகின்றனர். தந்தையும் தாயும் இவனது தேகமாத்திரத்தைப் பிறப்பிக்கின்றனர். ஆசாரியனோ ஞானத்தைக் கொடுப்பவனாகையால் அந்தத் தாய் தந்தையர்களைவிட மேலானவன். நான் உன் தந்தைக்கும் உனக்கும் ஆசாரியனாகையால் நீ என்வார்த்தையின்படி நடக்கவேண்டும். ராமா! உலகினர்களைக் காப்பது உனக்குத் தருமமாகும்; நீ சத்தியத்தையும் தருமத்தையும் அனுஷ்டிப்பது உண்மையாயின் பரதனுடைய வேண்டுகோளுக்கு இசைந்தே தீரவேண்டும்" என்றனர்.

ராமன் வசிஷ்டரைப்பார்த்து "தாய்தந்தையர்கள் தங்களுக்குப் பிள்ளை பிறக்கவேண்டுமென்று செய்யும் விரதோபவாசங்களுக்கும், அதுபிறந்தவுடன் முலைப்பால் கொடுத்து அன்ன வஸ்திராதிகளை யளித்து நீராட்டித் தாலாட்டி நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்க்கும் உபகாரங்களுக்கும் நாம் செய்யும் கைம்மாறு யாதொன்று மில்லையன்றோ! ஆகையால் அவர்களை ஆசாரியனைக்காட்டிலும் மேலானவர்கள். ஆகையால் என் தந்தைக்கு நான் செய்த பிரதிக்ஞையைத் தவறலாகாது." என்று கூறும்போது பரதன் மிகவும் பரிதபித்து, கடன்காரனை பிராமணன் கடன் வாங்கிக்கொண்டவன் வாசலில் குறுக்காக ஆகாரமின்றி முகத்தை மூடிக்கொண்டு படுப்பதுபோல் ராமன் அயோத்திக்குத் திரும்பிவாராதிருக்குமளவும் பர்ணசாலையின் வாச

வில் படுத்துக்கொள்வதாகக் கூறி அங்ஙனமே தர்ப்பைகளைப் பரப்பி அதன்மேல் படுத்துக்கொண்டனன்.

ராமன் இதற்கு மிகவும் வருந்தினபோதிலும் தன் எண்ணத்தை மாற்றாமலிருக்கவே, பரதன் பட்டணத்துஜனங்களைப் பார்த்து "நீங்களாயினும் எனதண்ணனைத் திருத்த மாட்டீர்களா?" என்றனன். அஜ்ஜனங்கள் அவனைநோக்கி "ராமன் சொன்னசொல் தவறாதவனன்றோ; அவனைத் திருத்த எமக்கு இயலுமோ?" என்றனர்.

ராமன் பரதனை நோக்கி "ஜனங்கள் சொன்னதைக் கேட்டனையா? உடனே நீ செய்யத் தகாத (உயிர்விடுவதாகச் செய்யும்) இக்காரியத்தை நிறுத்தி பட்டணம் சென்று அரசாட்சியைக் கைப்பற்றுவாயாக. நீ செய்யத்தகாத இக்காரியத்தைச் செய்ததற்குப் பிராயச்சித்தமாக ஜலத்தையும் என்னையும் தொடுவாயாக" என்றனன்.

பரதன் அவ்விதமே ராமனையும் ஜலத்தையும் தொட்ட பின் ராமனையும் அங்குள்ளவர்களையும் நோக்கி "எனக்கு ராஜ்ஜியம் வேண்டுமென்று நான் தந்தையை யாசிக்கவில்லை. என் தாயையும் இதற்காகச் சூழ்ச்சி செய்யும்படி சொன்னவனல்லேன். ராமனை வனம் செல்வதற்கு நான் எள்ளளவும் அனுமதிக்கவில்லை. ஆகையால் தந்தையின் வார்த்தையை நான் செய்யவேண்டிய அவசியமில்லை. அப்படிச் செய்ய வேண்டுமாயின் ராமனுக்குப் பதிலாக நானே வனவாசம் செய்வேன். ராமன் எனக்குப் பதிலாக அரசாட்சி செய்வானாக. அப்பொழுது இருவரும் தந்தையினது வார்த்தையின்படி நடந்தவர்களாவோம்" என்றனன்.

இதைக் கேட்ட ராமன் "பரதன் கூறியது யதார்த்தமாய் இருந்தபோதிலும் தந்தை பிழைத்திருக்கும்போது

யார் யாரை என்ன காரியம்செய்யக் கட்டளையிட்டனரோ அதைமாற்ற ஒருவர்க்கும் தகாது. ஆகவே நான் பதினான்கு வருஷம் சென்றவுடன் அயோத்திக்கு வந்து ராஜ்ஜியத்தை ஏற்றுப் பரதனை மகிழ்விப்பேன்" என்றுகூறிப் பரதனை நோக்கி "குணசீலனே! கைகேயி மன்னனை வரம் வேண்டினள். நானும் அதன்படி நடந்துகொண்டேன்; ஆகையால் நீயும் என்வார்த்தையின்படி நடந்து மகுடம் சூட்டிக்கொண்டு தந்தையின் வார்த்தையை உண்மையாகச் செய்வாயாக" என்றனன்.

நூற்றுப்பதினோராவது ஸர்க்கம் முற்றிற்று.

---

நூற்றுப்பன்னிரண்டாவது ஸர்க்கம்

## ராமன் பரதனைச் சமாதானப்படுத்தி அயோத்திக் கனுப்புதல்.

இங்ஙனம் ஒருவர்க்கொருவர் பின் வாங்காமல் நியாயமான வார்த்தைகளையே பேசின பரத ராமர்களைக் கண்டு அங்குக் கண்ணுக்குப் புலப்படாமல் குழுமியிருந்த ராஜரிஷிக் கூட்டங்களும் சித்தர்களும் தேவரிஷிகளும் "இப்படிப்பட்ட தர்மஜ்ஞர்களும், தர்மானுஷ்டானத்தில் சூரர்களுமாகிய இவ்விரண்டு பிள்ளைகளைப் பெற்றவனே தன்யனாவான்" என்று கொண்டாடினர். அவர்கள் ராவணவதத்தை விரும்பி ஒருமிடறாகப் பரதனை நோக்கி "பரதா! உன் தந்தை சுகமாயிருக்க விரும்புவாயாயின் ராமன் சொன்னபடி நீ நடக்க வேண்டும். தசரதன் கைகேயியின் கடனைத் தீர்த்துக் கொண்டதனால் சுவர்க்கமடைந்தனன். நீங்கள் அவன் கைகேயிக்குக் கொடுத்த வரத்தைத் தவறச்செய்வீர்களாயின் அவன் ஒருபோதும் நற்கதியில் நிலைக்கமாட்டான்" என்று

கூறி உடனே எல்லோரும் தம் தம் இருப்பிடங்களுக்குப் போயினர்.

பிறகு பரதன் மறுபடியும் அனேகவிதமான வார்த்தைகளைச்சொல்லி ராமனை அயோத்திக்கு அழைத்தனன். அதற்குராமன் "ஒளியின் பெருக்கு சந்திரனை விட்டொழிந்தாலும் ஒழியும், இமயமலை பனியை இழந்தாலும் இழக்கும்; சமுத்திரம் தன்கரையை மீறினாலும் மீறும்; நான் மாத்திரம் தந்தைக்குச் செய்த பிரதிக்கினையைத் தவறவே மாட்டேன். உன் அன்னை உனக்காக ராஜ்ஜியம் வேண்டினளென்று நீ அவளைக் கோபியாமலிருக்க வேண்டும்" என்று கூறினன்.

இங்ஙனம் சொன்ன ராமனை நோக்கிப் பரதன் "ஐயனே! சுவர்ணமயமாய் விளங்கும் இப்பாதுகைகளின் மேல் உனது பாதங்களையிட்டு ஏறுவாயாக. இவையே ஸமஸ்த லோகங்களுக்கும் யோக க்ஷேமங்களை நடத்தக்கடவன" என்று வேண்டிக் கொள்ள, ராமனும் அங்ஙனமே அப்பாதுகைகளின் மேலேறி மீளவும் இறங்கி அவற்றைப் பரதனுக்கீந்தனன்.

பிறகு பரதன் அப்பாதுகைகளை நமஸ்கரித்து ராமனைப் பார்த்து "ரகுகுலதிலகனே! நான் பதினன்கு வருடங்கள் உன்னைப்போலவே சடைகளைத் தரித்து மரவுரியுடுத்துக் காய் கிழங்குகளை உண்டு பட்டணத்திற்கு வெளியில் வாசம் செய்து உன்னை எதிர் பார்த்துக்கொண்டிருப்பேன். பதினைந்தாம் வருடத்தின் முதல்நாள் உன்னைப் பாரேனாயின் தப்பாமல் நெருப்பில் குதித்து உயிர்துறப்பேன்" என்றனன்.

ராமன் அப்படியேயாகட்டும் என்று ஒப்புக்கொண்டு பரதனை அன்புடன் கட்டியணைத்துக் கொண்டு "மேன்மையுற்றவனே! தாயாகிய கைகேயியைக் கோபியாமல் காப்பாற்று

வாயாக. இப்படிக்கு என்மீதும் சீதைமீதும் ஒட்டு இடுகிறேன்." என்று கூறிக் கண்களில் நீர்பெருகப் பரதனை விடை கொடுத்தனுப்பினன்.

பிறகு பரதன் நன்கு அலங்கரிக்கப்பட்ட அப் பாதுகைகளை விசேஷமாகப் பூஜித்து ராமனைப் பிரதக்ஷிணம் செய்து அவைகளைப் பட்டத்து யானையின் தலையில் வைத்தனன். ராமன் அனைவரையும் அவரவர்க்குத் தகுந்தபடி பூஜித்து விடை கொடுத்தனுப்பினன். வருத்தத்தினால் கண்களில் நீர் பெருகப்பெற்று நின்று கொண்டிருந்த தாய்மார்களை ராமன் நமஸ்காரம் செய்து தானும் கண்ணீரைப் பெருக்கிக் கொண்டே தன் பர்ணசாலையுள் பிரவேசித்தனன்.

நூற்றுப்பன்னிரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நூற்றுப்பதின்மூன்றாவது ஸர்க்கம்

## பரதன் அயோத்தியுள் பிரவேசித்தல்

பிறகு பரதன் பட்டத்து யானையின் தலைமீதிருந்த ராமனது பாதுகைகளைத் தன் தலையிலிட்டுக்கொண்டு சத்துருக்கனனுடன் தேர் ஏறினன். வசிஷ்டர் வாமதேவர் ஜாபாலி மந்திரிகள் முதலியோர் முன்னே போயினர். அனைவரும் ராமனது வாசஸ்தானமான சித்திரகூட மலையைப் பிரதக்ஷிணம் செய்து மந்தாகினிநதியை அடைந்தனர். இங்ஙனம் அவர்கள் சிறிது தூரம் கடந்து பரத்துவாச முனிவரின் ஆச்சிரமத்தை யடைந்தனர். அங்கு அம் முனிவரிடம் பரதன் தனக்கும் ராமனுக்கும் நடந்த வார்த்தைகளையும் முடிவில் தான் ராமனது பாதுகைகளைப் பெற்றுவந்த விதத்தையும் விஸ்தாரமாகக் கூறினன்.

பரத்துவாசர் மிகவும் சந்தோஷமடைந்து பரதனது குணத்திற்கு மெச்சி "அப்பா! பரதா! உன் தந்தை தசரதனுக்கு உன்னைப் போன்ற நல்லபிள்ளை இருக்கிறபடியால் அவர் மரணமடையவில்லை. இன்னும் பிழைத்தே யிருக்கிறார்" என்று கூற அவரிடம் விடைபெற்றுக்கொண்டு பரதன் அயோத்திக்குப் புறப்பட்டனன். பிறகு அனைவரும் இடையிலுள்ள யமுனையையும் கங்கையையும் கடந்து சிருங்கிபேரபுரத்தை யடைந்து மீண்டும் புறப்பட்டு அயோத்தியை அடைந்தனர். பரதன் சாரதியை நோக்கி "சாரதி! அயோத்திமாநகர் ராமனது பிரிவாற்றாமையால் ஒளிமழுங்கி நலம் குலைந்து உருமாறி ஆனந்த மின்றிப் பரிதாபநிலைமையில் இருப்பதைப்பார்" என்றனன்.

நூற்றுப்பதின்மூன்றாவது ஸர்க்கம் முற்றிற்று

---

## நூற்றுப்பதினான்காவது ஸர்க்கம்.

### பரதன் அழகழிந்திருந்த அயோத்தியைக்கண்டு சோகித்தல்.

பரதன் அயோத்தியில் நுழைந்தபொழுது அந்தப் பட்டணம் பூனைகளும் கோட்டான்களும் திரியப்பெற்று ஒளியின்றி இருள் மூடப்பெற்ற கிருஷ்ணபக்ஷத்து இரவு போலவும், அங்காரகனால் பிடிக்கப்பட்டுத் தனியாகிப் பரிதபிக்கும் ரோகிணியைப் போலவும், யுத்தத்தில் வீரர்கள் மடியக் கவசங்கள் முறிய, யானைகளும் குதிரைகளும் நோவுபட, தேர்களும் கொடிமரங்களும் ஒடிந்துவீழ ஆபத்தை யடைந்த சேனைகளைப்போலவும்; தமக்கு நாயகனாயிருந்த காளையெருது தம்மைவிட்டுப்போகையில் தொழுவத்தினிடையில் அதையே நினைத்துக்கொண்டு முன்னேவைத்த பசும்

புல்லையும் தின்னாமல் வருந்திய பசுக்களைப்போலவும், சிறந்த ரத்தினங்களில்லாத முத்துமாலை போலவும், ஒளியிழந்த நட்சத்திரம்போலவும் விளங்கியது.

இன்னும் அப்பட்டணமானது காட்டுத்தீயால் கொளுப்தப்பட்டு வாடிவதங்கின காட்டுக் கொடிபோலவும் காணப்பட்டது. அப்பட்டணம் மார்க்கத்தில் ஜனசஞ்சாரமின்றிக் கடைகள் மூடப்பட்டு மேகங்களால் மறைக்கப்பட்ட ஆகாயம் போலவும், உலர்ந்துபோன குளங் குட்டைகளையுடையதாகவும் இருந்தது. சந்தனம் முதலிய வாசனைகளின்றி சோகத்தினால் பரிதபித்துக் களிப்பற்று இளைத்திருக்கும் துக்கிதனுடைய தேகம்போலவும் மேகத்தினால் மறைக்கப்பட்ட சூரியனுடைய ஒளிபோலவும் காணப்பட்டது.

அந்நிலைமைகண்ட பரதன் சாரதியைநோக்கி "முன்பு கீதவாத்தியங்களின் ஒலி கம்பீரமாக இவ்வயோத்தியில் செவிப்பட்டுக் கொண்டிருந்தது. சிறந்த வாசனைகளுள்ள புஷ்பமாலைகளினுடைய கந்தமும் புகைக்கப்பட்ட அகில், மட்டிப்பால் முதலியவற்றின் மணமும் வீசிக்கொண்டிருந்தது. குதிரைகளின் இனிய கனைப்புகளும், யானைகளின் பிளிறொலிகளும் ரதங்களின் பேரொலிகளும் சதாகேட்டுக் கொண்டேயிருக்கும். ஐயோ! அவையொன்றும் இப்பொழுது காணப்படவில்லையே! பட்டணம் முழுதும் ராமசோகத்தினால் பீடிக்கப்பட்டிருக்கின்றதே! உத்ஸவங்களும் ஊர்கோலங்களும் நடக்கவில்லையே! அயோத்தியின் அழகும் ராமனுடன் போனாற்போலிருக்கிறதே! ஐயோ! இதென்ன கொடுமை! ராமன் எப்பொழுது சந்தோஷமாயும், கம்பீரமாயும் வந்து அனைவரையும் சந்தோஷிக்கச் செய்யப் போகிறான்!" என்றனன்

இங்ஙனம் கூறிக்கொண்டே பரதன் அரசனில்லாமை யால் சிங்கமில்லாத குகைபோல் புலப்படும் தந்தையின் மாளிகையுள் பிரவேசித்தனன். ஒளியற்று ஜனசஞ்சாரமில் லாத அந்தப்புரத்தைக்கண்டு மிகவும் வருந்தினன்.

நூற்றுப்பதினான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நூற்றுப்பதினைந்தாவது ஸர்க்கம்.

### பரதன் நந்திக்கிராமமடைந்து ராமபாதுகைகளை முன்னிட்டு அரசாட்சி செய்தல்.

பிறகு பரதன் ராமனைப் பிரிந்ததனாலுண்டான மன வருத்தத்தினால் அயோத்தியில் வசிக்க விருப்பமில்லாதவ னாகி வசிஷ்டர் தாய்மார்கள் முதலியோரிடத்தில் விடை பெற்றுக்கொண்டு பட்டணத்திற்கு வெளியிலுள்ள நந்திக் கிராமத்தை யடைந்து ராமனைப்போல் சடைதரித்து மரவுரி உடுத்துக் காலம் கழிக்கலாயினன். சத்ருக்கனனும் அவனைப் பின்பற்றினன். வசிஷ்டர் முதலியவர்களும் பிராமணர்களும் மந்திரிகளும் அவனைப் பின்சென்றனர்.

பரதன் ராமபாதுகைகளைத் தலைமேல் வைத்துக்கொண்டு நந்திக்கிராமத்தில் பிரவேசித்து ஜனங்களைப்பார்த்து "ராமன் இந்த ராஜ்ஜியத்தை என்னிடத்தில் நியாஸமாக (பாதுகாத்து வைக்கும்படி ஒருவன் மற்றொருவனிடம் கொடுக்கும் வஸ்து) வைத்திருக்கின்றனன். ஆகையால் இதை நான் அவன் வந்த வுடன் திருப்பிக் கொடுத்துவிட வேண்டியதன்றி ரக்ஷிக்கை முதலிய சுதந்திரம் எனக்கில்லை. சுவர்ணமயமான இப்பாதுகை களே நமது ராஜ்ய யோக க்ஷேமங்களை நிறைவேற்ற வல்லவை; ஆகவே இப்பாதுகைகளுக்கு வெண்கொற்றக் குடையையும் சாமரங்களையும் பிடிப்பீர்களாக. இதனாலேயே தருமம் நிலை

நிற்கும். ராமன் வந்தவுடன் இவற்றை அவன்பாதங்களுக்கு நானே இட்டு அவனது பாதங்களைக் கண்ணாரக் காண்பேனாக. 'ராஜ்ஜிய பாரத்தை அவனிடம் ஒப்புவித்து அவனுக்கு அத்தாணிச் சேவகம் செய்துகொண்டிருப்பேன். இதனால் என் தாயினாலுண்டான அபகீர்த்தியைப் போக்கிக் கொள்கின்றனன்.'' என்றனன்.

பிறகு பரதன் ராம பாதுகைகளுக்கு அபிஷேகஞ் செய்து மனக்களிப்பின்றி வருந்தி மந்திரிகளுடன் நந்திக்கிராமத்தில் வசித்து ராஜசாசனங்களை யெல்லாம் அப்பாதுகைகளுக்கு விண்ணப்பம் செய்து ராஜநீதி செலுத்தி வந்தனன். அரசனுக்காக வரும் வஸ்திரம் புஷ்பம் முதலிய காணிக்கைகளையும் முதலில் பாதுகைகளுக்கு நிவேதனம் செய்து பிறகு தான் ஸ்வீகரித்துக் காரியங்களை நடத்திக்கொண்டு வந்தனன்.

**நூற்றுப்பதினைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.**

---

## நூற்றுப்பதினாறாவது ஸர்க்கம்.

## ராமன் சித்திரகூடத்தைவிட்டு வேறு ஆச்சிரமத்திற்குப் போதல்.

பரதன் சென்றபின் ராமன் அந்தத் தபோவனத்திலேயே வசித்திருந்தனன். பிறகு ஒருநாள் அவ்வனத்திலுள்ள எல்லா ரிஷிகளும் மற்றோர் ஆச்சிரமத்திற்குச் சென்று வசிக்க விருப்பமுற்றிருப்பதை ராமன் அறிந்து கொண்டு தன்னால் எவர்க்கேனும் ஏதாவது அபராதம் நேரிட்டதோவென்று சந்தேகித்துக் குலபதியெனும் ரிஷியைப் பார்த்து ''மகாநுபாவரே! உங்களுக்கு மனவருத்தமுண்டாக்கத்தக்கதான கெட்ட நடவடிக்கையை நானாகிலும் லக்ஷ்மணனாகிலும் செய்ததுண்டோ? அல்லது சீதை உங்களிடத்தில்

நடக்கவேண்டிய ரீதிப்படி நன்கு நடக்கவில்லையா? எதனால் நீங்களனைவரும் இவ்விடத்தைவிட்டு வேறு ஆச்சிரமத்திற்குச் செல்லுகிறீர்கள்” என்று கேட்டனன்.

வயதாலும் தவத்தாலும் முதிர்ந்த அக்குலபதி நடுக்கமுற்று “என்னப்பா! சீதை மங்கல ஸ்வபாவமும் பரிசுத்தியும் அனுஷ்டானத்தில் மனவூக்கமும் உடையவள். அவள் எப்படி தருமம் தவறி நடப்பாள்? உன்னைப்பற்றி ராக்ஷசர்களால் ரிஷிகளுக்கு உபத்திரவங்கள் உண்டாகின்றன. இங்கு ராவணனுடைய தம்பியும் துஷ்டசுபாவனும் கொடிய ராக்ஷசனுமான கரன் என்பவன் இருக்கின்றனன். அவன் அடிக்கடி ரிஷிகளுக்குக் கெடுதி செய்வது வழக்கம். இப்பொழுது நீ வந்த பிறகு பின்னுமதிகமாக முனிவர்களைப் பீடிக்கின்றனன். அவனுடன் கூடிய மற்றும் பல ராக்ஷசர்கள் தமது கோரமான ரூபங்களைக் காட்டியும், எங்களையடித்தும், ஹோமாக்கினிகளை அவித்தும், யாக சாமான்களை அப்பால் எறிந்தும் இன்னும் பலவாறாக இம்சிக்கின்றனர். ஆகையால் எல்லா ரிஷிகளும் வேறு இடத்திற்குப் போக விரும்புகின்றனர். இங்கிருந்து வெகு தூரத்தில் காய் கிழங்குகள் ஏராளமாகவுள்ள ஓர் அழகிய ஆச்சிரமம் இருக்கின்றது. முன்பு நாங்கள் அவ்விடம் வசித்திருக்கிறோம். அப்பனே! நாங்கள் அங்குச் செல்லுகிறோம். அக்கொடிய அரக்கன் உனக்கும் கெடுதியைச் செய்யக்கூடுமாதலால் நீயும் எங்களுடன் கூட வருவாயாக.” என்றனர்.

இவற்றைக் கேட்ட ராமன் பிரயாணத்திற்கு சித்தராகவிருக்கும் அக்குலபதியைப் பார்த்து “நானிருக்கும்போது உங்களுக்கென்ன பயம்? நானே உங்களைச் சுற்றிக் காத்துக்கொண்டிருந்து ரக்ஷிக்கின்றேன்” என்று எவ்வளவு கூறினும்

அம்முனிவர் கேட்காமல் ராமனிடம் விடைபெற்றுக்கொண்டு அனைவரையும் கூட்டிக்கொண்டு சென்றுவிட்டனர். ராமனும் அவர்களை வழியனுப்பச் சிறிதுதூரம் கூடச்சென்று தன் பர்ணசாலைக்குத் திரும்பினன். பிறகு ராமன் ரிஷிகள் வாசம் செய்த இடமாகையால் அதைவிட்டுச் செல்ல விருப்பமில்லாதவனாகி அங்கேயே வசிக்க எண்ணினன்.

நூற்றுப்பதினொருவது ஸர்க்கம் முற்றிற்று.

---

நூற்றுப்பதினேழாவது ஸர்க்கம்.

ராமன் அத்திரி முனிவரது ஆச்சிரமத்தில் பிரவேசித்தல்.

பிறகு ராமன் அந்த ஆச்சிரமத்தில் வசிக்க விரும்பாமலிருந்தனன். அவன் "ஆ! நான் இந்த ஆச்சிரமத்தில் பரதனையும் தாய்மார்களையும் பட்டணத்து ஜனங்களையும் கண்டு பிரிந்தேனல்லவா? இவ்விடத்தில் இருந்தால் அவர்களை நினைத்து அடிக்கடி வருந்தவேண்டியிருக்கிறது. மேலும் பரதனுடைய சைன்னியங்களினால் ஆச்சிரமமெல்லாம் பாழாகிவிட்டது. இதைவிட்டு வேறிடம் போகவேண்டும்" என்று ஆலோசித்து சீதா லக்ஷ்மணர்களுடன் அவ்விடத்தைவிட்டுப் புறப்பட்டு அத்திரி மகரிஷியின் ஆச்சிரமத்திற்குச் சென்று அவரை வணங்கினன்.

அம்முனிவர் ராமாதிகளை அன்புடன் வரவேற்று நன்கு உபசரித்தனர். பின்னும் அவர், வயது சென்றவளும் மிக்க தவசியும் பதிவிரதையுமான தமது மனைவி அருகிலிருக்க சீதைக்கு அவளை அறிமுகம் செய்துவைத்து அவளுடைய பிரபாவங்களைக் கூறத்தொடங்கி, "சீதே! அநசூயை மகா பதிவிரதை. தர்மானுஷ்டானத்தில் மிகவும் சிறந்தவள்.

முன்பு பத்து வருஷங்கள் மழைபெய்யாமல் பெரும் பஞ்சம் ஏற்பட்டபொழுது, ரிஷிகளுக்குக் காய் கிழங்குகளை சிருஷ்டித்து கங்காநதியையும் பிரவகிக்கும்படி செய்தனள். முன் பொருகால் தேவகாரியத்தின் பொருட்டு சீக்கிரமாகப் பத்து இரவுகளை ஒரே இரவாகச் செய்தனள். இவளைத்தாயைப் போல் கௌரவிப்பாயாக. ஸமஸ்தப் பிராணிகளாலும் வணங்கத்தகுந்தவள். இப்படிப்பட்ட அநசூயையை நீ நமஸ்கரிப்பாயாக” என்றனர். ராமனும் அவரது சொல்லை ஆமோதித்தனன்.

சீதையும் அப்படியே அநசூயையைப் பிரதக்ஷிணம் செய்து வணங்கி அவளுடைய யோக க்ஷேமங்களைப் பற்றி வினவினள். அநசூயையும் பரமசந்தோஷமடைந்து சீதையை நோக்கி “சீதே! நீ சமஸ்தமான ராஜபோகங்களையும் விட்டு ராமனைப் பின்பற்றி வனவாசம் செய்வதால் நீயே பாக்கியசாலியாவாய். எந்த ஸ்திரீகள் தமது கணவன் நகரத்திலிருப்பினும் காட்டிலிருப்பினும் தரித்திரனாயினும் பாபிஷ்டனாயினும் கைவிடாமல் அவனிடத்தில் பிரீதியுடையவர்களாய் இருப்பார்களோ அவர்களுக்குச் சிறந்த லோகங்கள் கிடைக்கும். கெட்டநடத்தை யுடையவனாயினும் இஷ்டப்படி நடப்பவனாயினும் நல்ல குணமுடைய மாதர்களுக்குக் கணவனே பரம தெய்வம். ஆகையால் நீ இப்பொழுது போலவே எப்பொழுதும் கணவனை யனுசரித்துப் பதிவிரதைகளின் தருமத்தினின்றும் ஒரு நாளும் தவறாமல் ஒழுகுவாயாக” என்றனள்.

நூற்றுப்பதினேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

## நூற்றுப்பதினெட்டாவது ஸர்க்கம்

## சீதை அநசூயையின் வார்த்தைகளால் ஆனந்தித்துத் தன் சுயம்வரத்தை அவளுக்குக் கூறுதல்.

இங்ஙனம் அநசூயை கூறக்கேட்ட சீதை "அம்மா! நான் வனத்திற்குப் புறப்படும்போது கௌசல்யையும் எனக்குப் பதிவிரதாதருமத்தைக் குறித்து உபதேசித்தனள். முன்பு என் விவாக காலத்தில் அக்கினியின் முன்னிலையில் என் தாயும் அத்தருமத்தை யுபதேசித்து என்னைத் திருத்தி யிருக்கின்றனள். அவற்றை மறக்காமல் மனதில் வைத்துக் கொண்டு அதன்படி நடக்கிறேன். இப்பொழுது நீர் சொன்ன வார்த்தைகளால் அவையெல்லாம் என்நினைவில் மெருகிட்டாற் போலாயின. கணவன் மனமுகக்கும்படி செய்யும் பணிவிடையைக்காட்டிலும் ஸ்திரீகளுக்கு வேறொரு தவமில்லை. சாவித்திரி தேவி கணவனுக்குப் பணிவிடை செய்து சுவர்க்க லோகம் சென்று மேன்மை யுற்றிருக்கிறாள். நீரும் அவ்வித காரணத்தினாலேயே சுவர்க்கமடையப் போகிறீர்" என்றனள்.

அநசூயை சீதையினுடைய வார்த்தைகளால் மிகவும் சந்தோஷமடைந்தவளாய் அவளை நோக்கி "சீதே! உனக்கு நான் ஏதாவதொருவரம் கொடுக்க விரும்புகின்றனன், உனக்கு வேண்டுவதென்ன? கேட்பாயாக" என்றனள். சீதை புன்னகையோடு கூடின முகமுடையவளாய் "உங்களுடைய அன்பான இந்த வார்த்தைகளே எனக்குப் போதுமானவை. நான் விரும்பிய தெல்லாம் செய்தாற்போலவே ஆயிற்று" என்றனள்.

அநசூயை "சீதே! இதோ இந்த திவ்வியமான பூமாலைகளையும் ஆடையாபரணங்களையும் குங்குமம் சந்தனம் முதலிய அலங்காரங்களையும் கஸ்தூரி முதலிய பரிமளத் திரவியங்களையும் நீ ஏற்றுக்கொண்டு அவற்றால் உன்னை அலங்கரித்துக் கொள்வாயாக. லக்ஷ்மீதேவி மகாவிஷ்ணுவை ஆனந்தப்படுத்துவதுபோல் உன்பர்த்தாவுக்கு மிகவும் மனக் களிப்பை விளைவிப்பாயாக" என்றனள். சீதையும் அவ்விதமே தன்னை நன்கு அலங்கரித்துக் கொண்டு கைகளைக் குவித்த வண்ணம் அவளுக்கு நமஸ்காரம் செய்தனள்.

அச்சமயம் அநசூயை சீதையை நோக்கி "சீதே! ராமன் உன்னையடைந்த விதத்தை நான் கேட்க விரும்புகிறேனாதலால் நீ விஸ்தாரமாக எனக்குச் சொல்ல வேண்டும்." என்றனள்.

பிறகு ஸீதை தான் ஜனகருக்குக் கிடைத்த விதத்தையும் தனக்கு மணப்பருவம் வந்ததும் தன் தந்தை தனக்குக் கன்னியா சுல்கமாக ஏற்படுத்தின ஏற்பாட்டையும் ராமன் அனுயாஸமாய் வில்லிறுத்துத் தன்னை மணம்செய்துகொண்ட விதத்தையும் விஸ்தாரமாகக் கூறினள்.

**நூற்றுப்பதினெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.**

---

## நூற்றுப்பத்தோன்பதாவது ஸர்க்கம்.

## ராமன் தண்டகாரணியம் செல்லல்.

அநசூயை ஸீதையின் கலியாண வைபவத்தைக் கேட்டு மிகவும் சந்தோஷமடைந்தவளாய் அவளை உச்சிமோந்து கைகளால் அணைத்து "மதுரமான பேச்சையுடையவளே! உன் கதையைக் கேட்டு நான் மிகவும் சந்தோஷித்தனன். இரவு வந்துவிட்டபடியால் இனி நீ ராமனிடம் செல்வாயாக. நான் அனுமதி கொடுக்கிறேன்." என்றதும் ஸீதை அவளை வணங்கி விடைபெற்றுக்கொண்டு ராமனை அடைந்தனள்.

ராமன் நன்கு அலங்கரிக்கப்பட்ட ஸீதையைக் கண்டு அநசூயையின் பிரீதி விசேஷத்திற்கு மிகவும் உகந்தனன். பிறகு ராமன் ரிஷிகளால் பூஜிக்கப்பட்டுப் பிரீதியுடன் அன்றிரவை அவ்விடத்தில் கழித்து மறுநாள் பொழுது விடிந்ததும் அந்த ரிஷிகளை வணங்கி, தான் தண்டகாரணியம் செல்ல அனுமதியளிக்கும்படி வேண்டினன்.

அம்முனிவர்கள் ராமனை நோக்கி "ராகவா! இப்பெருங் காட்டில் மனிதர்களைத் தின்னும் தன்மையர்களும் பயங்கரமான பலவித உருவங்கொள்ள வல்லவர்களுமான ராக்ஷசர்கள் இருக்கின்றனர். அவர்கள் எங்களை அசுத்தமாய் இருக்கும்போதும் பராக்கடித்திருக்கும்போதும் பிடித்துத் தின்கின்றனர். அப்படிப்பட்ட பயங்கரமான வனத்தில் நீ பிரவேசிப்பது யுக்தமன்று." என்று கூறிக்கொண்டிருக்கும் பொழுதே ராமன் அவர்களுடைய மங்களாசாஸனங்களைக் கைப்பற்றிச் ஸீதையோடும் லக்ஷ்மணனோடும் தண்டகாரணியம் நோக்கிப் புறப்பட்டுச் சென்றனன்.

**நூற்றுப்பத்தோன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.**

ஸ்ரீமத் வால்மீகி ராமாயண மொழிபெயர்ப்பில்

# அயோத்யா காண்டம்

முற்றுப்பெற்றது.

ஸ்ரீ

ஸ்ரீமத் வால்மீகி ராமாயண மொழிபெயர்ப்பில்

# ஆரணிய காண்டம்

## முதல் ஸர்க்கம்.

### தண்டகாரணிய வாசிகளான முனிவர்கள் இராமனை வணங்கிப் பிரார்த்தித்தல்

ராமன் மகாதீரனுகையால் மிகக்கொடிய தண்டகாரணியத்தில் அஞ்சாதே புகுந்து அங்குள்ள முனிவர்களின் ஆச்சிரமங்களைக் கண்ணுற்றனன். அங்கு யாகத்தின்பொருட்டுக் கொண்டு வரப்பட்ட தர்ப்பங்களும், மரவுரிகளும் புலப்பட்டதுடன் தவம் வேதமோதல் முதலியவற்ருல் மிக விளங்கியது. அங்கு எப்படிப்பட்ட துஷ்ட ஜந்துக்களுக்கும் பரஸ்பரத்வேஷம் உண்டாகாதிருந்தமையால் சகல பிராணிகளுக்கும் அது அணுகத்தகுந்ததாய் இருந்தது. அழகிய பக்ஷிகளும் மிருகங்களும் விளையாடிக்கொண்டிருந்தன. அவ்விடம் மிகவும் ரமணீயமாய் இருந்தமையால் அப்சரஸ்திரீகள் கூட்டமாக வந்து எப்பொழுதும் நர்த்தனம் செய்து வந்தார்கள். இன்னும் அங்கு யாகத்திற்கும் தவ ஒழுக்கத்திற்கும் தேவையான சமஸ்தமான சாமான்களும் காய் கிழங்குகளும் மதுரமான பழங்களைக்கொடுக்கக் கூடிய மரங்களுமிருந்தன.

அங்கு ஜிதேந்திரியர்களாயும் வயது சென்றவர்களாயுமுள்ள தபோதனர்கள் பலபேர் வசித்து வந்தனர். அம்முனிவர்கள் ராமனது அவதார ரகஸ்யத்தை அறிந்தவர்களாகையால் ராமலக்ஷ்மணர்களையும் சீதையையும் எதிர்கொண்டு சென்று அவர்களுடைய வடிவழகில் மிகவும் ஈடுபட்டவர்களாகி அவர்களுக்குப் பல்லாண்டு பாடிப் பர்ண

சாலைக்கு அழைத்துக்கொண்டுபோய் நன்கு உபசரித்தனர் பிறகு அவர்களனைவரும் அவனை நோக்கி "ராமா! வருந்தியிருக்கின்ற எங்களனைவரையும் நீ காப்பாற்றவேண்டும் அரசன் தேவதை யென்னும் புத்தியால் பூஜிக்கத்தகுந்தவனும், பிரபு வென்னும் புத்தியினால் மதிக்கத்தக்கவனும், துஷ்டர்களை ஒழிக்கும் குணமுடையவனும் குருவுமாவான். நாங்கள் காட்டில் வசித்தபோதிலும் ஜனங்களுக்கு அதிபதியாகிய நீயே எங்களுக்கு அரசன். 'நீங்கள் உங்கள் தபோபலமையால் உங்களை ரக்ஷித்துக் கொள்ளலாகாதோ' என்பாயாயின் நாங்கள் இந்திரியங்களை அடக்கிக் கடுந்தவம் புரியும் தபோதனர்கள். தவக்கேடு நேரிடுமென்கிற பயத்தினால் கோபத்தையடக்கிக் கொண்டிருப்பவர்கள். ஆகையால் விரோதிகளைக் கோபித்துச் சாபமிட்டுத் தண்டனை செய்வதைக் கைவிட்டிருக்கின்றனம். ஆகையால் நீயே எங்களை ரக்ஷிக்கவேண்டும்" என்றனர்.

முதல் ஸர்க்கம் முற்றிற்று.

---

இரண்டாவது ஸர்க்கம்

## விராதனைக் காணுதலும் அவனுடன் சம்பாஷித்தலும்.

ராமன் முனிவர்களால் உபசரிக்கப்பட்டு விடைபெற்றுக் கொண்டு சென்றனன். அவ்வனத்தினிடையில் பலவகை மிருகங்கள் நிறைந்திருந்தன. பெரும்புலிகளும் செந்நாய்களும் ஆங்காங்குப் புலப்பட்டுக் கொண்டிருந்தன. அங்குள்ள மரங்களும் கொடிகளும் புதர்களும் பாழாகிக் குளங்களும் கலங்கி நலம் குலைந்து காணக்கூடாதிருந்தன.

லக்ஷ்மணன் பின்தொடர்ந்து வரப்பெற்ற ராமன் நடந்து கொண்டே சீதையோடு கூடப் போய்க்கொண்டிருக்கையில் பயங்கரமான பேரொலி செய்கின்ற ஓர் அரக்கனைக் கண்டனன். அவன் மிகவும் ஆழ்ந்தகண்களும் பெரியவாயும்

அகன்ற சரீரமும் மேடுபள்ளமான வயிறும் உடையவனாய் காலவும் வெறுப்புக்கிடமாய் இருந்தனன். அவன் குடலும் ரத்தமும் தோய்ந்து நனைந்த புலித்தோலை யுடுத்து சமஸ்த பூதங்களுக்கும் பயங்கரனாகி வாயைத் திறந்துகொண்டு யமனைப்போல் தோன்றினன். மூன்று சிம்மங்களையும் நான்கு பெரும்புலிகளையும், இரண்டு செந்நாய்களையும் பத்து மான்களையும் பெரிதான யானைத்தலை ஒன்றையும் சூலத்தில் குத்தி எடுத்துக்கொண்டு பெருங்கோஷத்துடன் கூச்சலிட்டுக் கொண்டிருந்தனன்.

அவன் ராம லக்ஷ்மண சீதைகளைப் பார்த்து மிகுந்த கோபாவேசத்துடன் எமன்போல எதிர்த்து ஓடிவந்தனன். அவன் பூமி முழுவதையும் நடுங்கச் செய்பவன்போல் பயங்கரமான ஒரு கர்ஜனை செய்து சீதையை இடுப்பில் எடுத்துக் கொண்டு அப்புறம் சென்று ராம லக்ஷ்மணர்களைப் பார்த்து மொழிந்தனன். "நீங்கள் உங்கள் வாழ்நாள் தீர்ந்ததுபற்றி இத் தண்டகாரணியத்திற்குள் நுழைந்தீர்கள். என் கையில் அகப்பட்ட பின்பு உங்கள் உயிர் தப்பாது. நீங்கள் தாபஸர் களாகத் தோற்றுகிறீர்கள். ஆனால் ஸ்திரீயோடுகூட எப்படி வாசம் செய்கிறீர்கள்? முனிவேடம் பூண்டு அதற்கிணங்காமல் வில் முதலியவற்றைத் தரித்து அதர்மத்தை ஆசரிக்கின்ற பாபிகளாகிய நீங்கள் யாவர்? நான் விராதனென்னும் பெயருடைய ராக்ஷசன். நான் ரிஷிகளைக் கொன்று தின்பவனாகி, இக்காட்டில் திரிந்து கொண்டிருக்கின்றனன். அழகிய இப் பெண்மணி எனக்கு மனைவியாகப் போகின்றனள். அன்றியும் பாபிஷ்டர்களாகிய உங்களது ரத்தத்தை நான் பருகப் போகிறேன்." என்றனன்.

இக்கொடிய சொற்களைக் கேட்டுச் சீதை மிகவும் தழ தழத்துப் பெருங்காற்றில் அகப்பட்ட வாழைமரம்போல் நடுக்குமுற்றனள். ராமன் விராதனது மடியில் அகப்பட்டுக் கொண்ட சீதையைப்பார்த்து முகம்வாடிநின்று, லக்ஷ்மணனை

நோக்கி "இந்தச் சீதை விராதனது மடியில் அகப்பட்டிருக்கின்ற பரிதாபத்தை என்ன சொல்லுவேன்? லக்ஷ்மணு! கைகேயி நம் விஷயத்தில் கொண்டிருந்த கருத்து இப்பொழுதே ஈடேறப் பெற்றனள். தன் பிள்ளைக்கு ராஜ்ஜியம் வருவது மாத்திரத்திலால் திருப்தியடையாமல் என்னைக் காட்டிற்குத் துரத்தின கைகேயியின் கருத்தெல்லாம் இன்றே பலித்து விட்டது. லக்ஷ்மணு! சீதை பரபுருஷன் கையில் இங்ஙனம் சிக்கிக் கொண்டாளே யென்று எனக்குண்டான துக்கம் பொறுக்க முடியவில்லை." என்றனன்.

இங்ஙனம் ராமன் வருத்தத்துடன் கண்ணீர் ததும்பச் சொல்லுகையில், லக்ஷ்மணன் பெருமூச்செறிந்து கொண்டு ராமனைப் பார்த்து "நீ இப்படி அநாதன்போல் பரிதபிப்பதேனே! இப்பொழுது நான் இந்த விராதனை முடித்திடுகின்றேன். பரதன்மேல் எனக்குண்டான கோபமெல்லாம் இப்போது விராதன்மேல் முடிந்து நிற்கின்றது பாரும்; இதோ ஓர் அம்பினால் இவனைத் தொலைத்தே விடுகின்றேன்" என்றனன்.

இரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## மூன்றாவது ஸர்க்கம்.

### விராதனோடு யுத்தம் செய்தல்.

பிறகு விராதன் பெருங்கோஷத்துடன் "நீங்கள் யார்? எங்குப் போகிறீர்கள்?" என்ன, ராமன் அந்த ராட்சசன் தன்னை அங்ஙனம் வினவுவதைக் கேட்டு "நாங்கள் இக்ஷ்வாகு வம்சத்தில் பிறந்த க்ஷத்திரியர்கள்; தசரத குமாரர்கள்; தந்தையின் கட்டளைப்படி வனத்தில் திரிகிறோம். நீ யாவன்?" என்றனன்.

விராதன் ராமனைப்பார்த்து "ராஜனே! நான் ஜயன் என்பவனுடைய பிள்ளை; என் தாய் சதஹ்ரதையென்னும் பேருடையவள்; என்னை விராதனென்று சொல்லுவார்கள்.

மேலும் நான் தவம் செய்து பிரம்மாவினிடத்தில் பெற்ற அநுக்கிரகத்தினுல் என்னை ஆயுதங்களால்கொல்லவும் வெட்டவும் பிளக்கவும் முடியாது. நீங்கள் இந்தப் பெண்ணுசையைத் துறந்து இவளைக் கைவிட்டு, வந்த வழியே ஓடிச்செல்வீர்களாயின் உங்கள் பிராணன்களைக்கொள்ளாமல் விட்டுவிடுகிறேன்." என்றனன்.

அதுகேட்ட ராமன் கண்கள் சிவக்கப்பெற்று அந்த விராதனைப்பார்த்து "அடா! அற்பனே! சீ! நீ மிகவும் அற்பமான காரியத்திற்குத் தலைப்பட்டனையே. உன் மரணத்தைத் தேடுகின்றனை. இது நிச்சயம். என்னிடம் அகப்பட்ட பின்பு பிராணனேடு தப்பிப்போக நேராது." என்று கூறி வில்லில் நாணையேற்றி ஏழுபாணங்களைப் பிரயோகித்தனன். அப்பொழுது அந்த ராக்ஷசன் பாணங்களால் அடியுண்டு மிகவும் சினந்து சீதையைக் கீழே வைத்துவிட்டுச் சூலத்தை எடுத்துக்கொண்டு ராம லக்ஷ்மணர்கள்மேல் எதிர்த்தோடி வந்தனன்.

பிறகு ராம லக்ஷ்மணர்களிருவரும் சீதையைவிட்டிட்ட அவன்மேல் இஷ்டப்படி பாணங்களைப் பிரயோகிக்க மனங்கொண்டு சரமாரி பெய்தனர். அவ்வரக்கன் 'இவர்கள் எனக்கு எவ்வளவர்' என்று சிரித்துச் சோம்பல் முறித்துச் சரீரத்தை வணக்குகையில் அவனுடம்பில் தைத்துக்கொண்டிருந்த பாணங்கள் அவனுடம்பினின்றும் கீழே விழுந்தன. அவ்வரக்கன் தன் வரமகிமையால் பிராணவாயுக்களை இருதயத்தில் ஒன்றுகச் சேர்த்தடக்கிச் சூலத்தையெடுத்துக்கொண்டு ராம லக்ஷ்மணர்களை எதிர்த்தோடிவந்தனன்.

அந்தச் சூலத்தை ராமன் இரண்டு பாணங்களால் கண்டித்தனன். பிறகு விராதன் வேகமாக எதிர்த்தோடிவருவதைக்கண்டு அந்த ராம லக்ஷ்மணர்கள் தமது கத்திகளைத் தூக்கி அவனை வேகமாக அடித்தனர். அவன் அங்

னனம் மேன்மேலும் சாக அடிக்கப்பட்டும் விடாதவனுகி அந்த ராம லக்ஷ்மணர்களைப் பிடித்துக் கைகளால் அணைத்து எடுத்துக்கொண்டுபோக முயன்றனன். அவன் மற்றொரு வனத்திற்குத் தங்களைக் கொண்டுபோக நினைத்திருக்கின்ற அபிப்பிராயத்திற்கு ராமலக்ஷ்மணர்கள் இசைந்திருக்கவே, அவர்களைக் குழந்தைகளைப் போல் எடுத்துத் தன் தோள்மேல் வைத்துக்கொண்டு பயங்கரமான கூச்சலுடன் தான் உத்தேசித்த வேறொருகாட்டைக் குறித்துப் போயினன். அப்படியே மிகவும் கொடியதொரு வனத்தினுள் கொண்டு புகுந்தனன்.

மூன்ருவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நான்காவது ஸர்க்கம்

### விராத வதமும் சரபங்கராச்சிரமத்திற்கு அவன் வழி கூறலும்

மிகவும் வருந்திய சீதை விராதன் அங்ஙனம் ராமலக்ஷ்மணர்களைக் கொண்டு போகக்கண்டு தன் கைகளை உயரத் தூக்கிக்கொண்டு உரக்கக் கதறினள். “ஓ அரக்கனே! இனி என்னைச் செந்நாய்களும் பெரும்புலிகளும் சிறுத்தைகளும் பக்ஷித்து விடுமே!; இதோ உனக்கு நமஸ்காரம் செய்கிறேன். ராமலக்ஷ்மணர்களை விட்டு என்னைக்கொண்டு போவாயாக.” என்று புலம்பினள்.

சீதை அங்ஙனம் புலம்புவதைக்கேட்ட தாசரதிகள் மனம் பதைத்து, அவ்வரக்கனுடைய இடது கையை லக்ஷ்மணனும், வலது கையை ராமனும் துண்டித்தனர். உடனே திடீரென்று அவன் கீழே விழுந்தனன். பிறகு அவ்விருவரும் முஷ்டிகளையும் முழந்தாள்களையும், அடிக்கால்களையும் உயரத்தூக்கிக்கொண்டு அவனைப் பலவாறு குத்தியும் இடித்தும் உதைத்தும் துவைத்தும் பிண்டமாகச் செய்தனர். அந்த ராக்ஷசனோ மரணமடையவில்லை. ராமன் விராதனை

ஆயுதம் முதலியவற்றால் எவ்விதத்திலும் கொல்லமுடியா தென்று நன்றாகத் தெரிந்துகொண்டு, “இவனது தவ வலிமையினால் இவனை ஆயுதங்களால் கொல்லமுடியாது. ஆகையால் இவனைத்தரையில் பள்ளம் வெட்டிப் புதைத்து விடுவோம்” என்று லக்ஷ்மணனை நோக்கிக்கூறினன்.

விராதன் ராமன் சொன்னதைக்கேட்டுப் பூர்வஞானம் வரப்பெற்று ராமனை நோக்கி “புருஷோத்தமனே! கௌசல்யா தேவியின் வயிற்றிலவதரித்த ராமனே! நான் இப்பொழுது உன்னையும் மகாபாக்கியவதியான சீதையின் சொரூபத்தை யும் தெரிந்து கொண்டேன். நான் தும்புரு வென்னும் கந்தருவன்; நான் முன்பு அரம்பையைத் தழுவி, வேண்டிய சமயத்தில் குபேரனுக்குப் பணிவிடை செய்யாதிருக்கையில் அக்குபேரன் மிகவும்கோபித்து என்னை ராக்ஷசனாகச் சபித்த னன். பிறகு அருள் புரியும்படி நான் அவனை வேண்ட அக்குபேரன் என்னைப்பார்த்து ‘தசரதகுமாரனான ராமன் உன்னை எப்பொழுது யுத்தத்தில் வதைசெய்வானோ அப் பொழுது நீ ஞானம் பெற்று சுயஉருவடைந்து சுவர்க்கம் பெறுவாயாக’ என்றனன். பரந்தாமனே! அதன்படி நான் இப்பொழுது உன்னால் சாபவிமோசனமடைந்தேன். ராமா! என்னைப் பள்ளம்வெட்டிப் புதைத்துவிட்டு இவ்விடத்திற்கு ஒன்றரையோசனை தூரம் சென்றாயாகில் சரபங்கர் என்னும் முனிவரைக் காண்பாய். அவர் உனக்கு நன்மையைச் செய் வார். உனக்கு மங்களம் உண்டாகுக என்று கூறிஉடனே சுவர்க்கமடைந்தனன். ராம லக்ஷ்மணர்கள் அவன் சொன்ன படியே அவனைப்பெரியதொரு பள்ளம்தோண்டிப் புதைத்து விட்டுச் சீதையை அழைத்துக்கொண்டு மிகவும் சந்தோஷ மடைந்து அப்பெரிய வனத்தில் ஆகாயத்தில் விளங்கும் சந்திர சூரியர்களைப்போல் விளையாடிக்கொண்டிருந்தனர்.

**நான்காவது ஸர்க்கம் முற்றிற்று**

## ஐந்தாவது ஸர்க்கம்

## சரபங்கரால் ராமன் பூஜிக்கப்படுதலும் அவர் பிரமலோகம் போதலும்.

ராமன் விராதனைக் கொன்றபிறகு சீதையை ஆலிங்கனஞ் செய்து நல்ல வார்த்தைகளால் சமாதானப்படுத்தி லக்ஷ்மணனுடன் கூடியவனாய்ச் சரபங்க முனிவரின் ஆச்சிரமத்தை நோக்கிச் சென்றனன். அம்முனிவரின் சமீபத்தில் ராமன் தேவதைகளால் சூழப்பெற்ற தேவேந்திரனைக் கண்டனன். அவ்வாச்சிரமத்தின் சமீபத்தில் பச்சைக் குதிரைகள் பூட்டப்பெற்ற இந்திரனுடைய ரதத்தைக்கண்டனன். இந்திரனது வெண்கொற்றக் குடையையும் அவ்விந்திரனது சிரசின்மேல் சாமரங்களை வீசிக்கொண்டிருந்த உத்தம வனிதைகளையும் கண்டனன். கந்தர்வர்களும் தேவதைகளும், சித்தர்களும், பரமரிஷிகளும் வேதவாக்கியங்களால் தேவேந்திரனை ஸ்தோத்திரம் செய்து கொண்டிருந்தனர்.

இவற்றை யெல்லாம் கண்ணுற்ற ராமன் லக்ஷ்மணனை நோக்கி "லக்ஷ்மணா! பிடிப்பில்லாத ஆகாயத்தில் ஒளியுடன் பிரகாசிக்கிற தேரைப்பார். இந்திரனது குதிரைகளைப்போல் தோன்றும் அக்குதிரைகளைக்கவனி. அந்த ரதத்தைச்சுற்றி மிகுந்த அழகும் காந்தியும் யௌவனமும் நிறைந்த தேவதைகள் நூறு நூறாக நிற்கிறார்களே! லக்ஷ்மணா! நீ சீதையோடுகூட கொஞ்சநேரம் இருப்பாயாக. நான் சென்று அங்கு இருக்கும் மகாபுருஷனை யாரென்று தெரிந்து கொண்டு வருகிறேன்." என்று கூறிச் சரபங்கரது ஆச்சிரமத்தைக் குறித்துச் சென்றனன்.

அச்சமயம் இந்திரன் சரபங்கரிடம் ஏகாந்தமாய் "இதோ ராமன் வருகின்றனன். இவன் இப்பொழுது என்னைப் பார்க்கலாகாது. இவன் சத்துருக்களைத் தொலைத்து

தேவதைகளின் காரியத்தைச் சாதித்த பின்பு சீக்கிரத்தி லேயே பார்க்கப்போகிறேன். மேலும் அவன் பிரதிக்ஞையை நிறைவேற்றிய பின்பே என்னைப் பார்க்கவேண்டும். இவன் ஒருவராலும் எள்ளளவும் செய்யமுடியாததான ஒரு பெரிய காரியத்தைச் செய்யவேண்டி யிருக்கிறதல்லவா? அதையவன் நிறைவேற்றியபின் என்னைப்பார்ப்பது நலம்'' என்று கூறி அம்முனிவரிடம் விடைபெற்றுக்கொண்டு தேரேறிச் சுவர்க்க லோகம் சென்றனன்.

இந்திரன் சென்றதும் ராமன் சீதையுடனும் லக்ஷ்மண னுடனும் சரபங்கரிடம் சென்று அவருடைய பாதங்களைப் பிடித்துக்கொண்டு நமஸ்கரித்து அவரால் உபசரிக்கப்பட்டு ஓராசனத்தில் அமர்ந்தனன். பிறகு ராமன் அம்முனிவரைப் பார்த்து தேவேந்திரன் வந்துபோன விஷயத்தை வினவி னன். சரபங்கர் ‘‘ராமா! நான் செய்த கடுந்தவத்தினால் தேவேந்திரன் வெல்லப்பட்டுப் பிரமலோகத்திற்கு என்னை யழைத்துக் கொண்டுபோக விரும்புகின்றனன். நான் சமீ பத்தில் நீவந்திருப்பதை யறிந்து உன்னைப்பாராமல் போக லாகாதென்று பிரமலோகத்திற்குப் போகாமலிருக்கின்ற னன். புருஷதிலகனே! நான் இதுவரை சம்பாதித்திருக்கும் பிரமலோகத்தையும் சுவர்க்கலோகத்தையும் அழிவில்லாத மேலான போகப்பிரதேசங்களையும் உனக்கு அர்ப்பணம் செய்கிறேன். அங்கீகரிக்க வேண்டும்'' என்றனர்.

ராமன் அம்முனிவருடைய வார்த்தைகளால் சந்தோ ஷித்து ‘‘மாமுனியே! நீர் அர்ப்பணம் செய்த லோகங்களை யெல் லாம் அங்கீகரிக்கின்றனன். நான் இக்காட்டில் சுகமாக வசிக்கத் தக்க ஓர் இடம் காட்டிக்கொடுக்குமாறு வேண்டுகிறேன்.'' என்றனன். சரபங்கர் ‘‘ராமா! இவ்வனத்தின் சமீபத்தில் சுதீக்ஷ்ணர் என்னும் மாமுனிவர் இருக்கின்றனர். நீ அவ ரிடம் செல்வாயாக; அவர் உனக்குச் சௌகரியமான இடத்தை ஏற்பாடு செய்வார்.'' என்று கூறி அவரிடம் செல்லும் மார்க்

கத்தைக் காட்டினதுடன் "ராமா! கொஞ்சம் நின்று கொண்டு என்னைப் பார்த்துக்கொண்டிரு. ஸர்ப்பம் தோலை உரிப்பது போல் நான் இந்த மானிடசரீரத்தை விடுகின்றேன்." என்று சொல்லி அங்கு எரிந்து கொண்டிருந்த ஓமாக்கினியில் பிரம்ம மேத மந்திரங்களை ஜெபித்துக் கொண்டு பிரவேசித்தனர். பிறகு அச்சரபங்கர் முப்பது வயதுள்ள குமாரனாய் அவ்வக் கினியினின்றும் எழுந்திருந்து பிரமலோகத்திற்குப் போயினர். பிரம்மதேவரும் அவரை வரவேற்று சந்தோஷித்தனர். அவ்வதிசயத்தை ராமாதிகள் நோக்கி வியந்தனர்.

ஐந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## ஆறுவது ஸர்க்கம்

### முனிவர்கள் ராக்ஷசர்களால் தங்களுக்கு நேரிட்டகஷ்டங்களை ராமனிடம் சொல்லிச் சரணமடைதலும் ராமன் அவர்களுக்கு அபயப் பிரதானம் செய்தலும்.

சரபங்க முனிவர் சுவர்க்கமடைந்த பின் அங்குள்ள முனிவர்கள் எல்லோரும் கூட்டம் கூட்டமாய் ஒன்று கூடி ஸ்ரீ ராமனிடம் வந்து ராமனைச் சரணமடைந்தனர். அவர்கள் ராமனைப்பார்த்து "மஹாரதனே! நீ தேவேந்திரனைப் போல் இப்பூமண்டலத்திற்கெல்லாம் நாதனாய் இருக்கின்றனை. மேலும் நீ சரபங்கரை அநுக்கிரகித்த கீர்த்தியினாலும் விராதனைக் கொன்ற பராக்கிரமத்தினாலும் மூன்று லோகங்களிலும் பிரசித்தி பெற்றிருக்கின்றனை. பிதிர்வாக்கிய பரிபாலனத்தின் பொருட்டு அரசைத் துறந்தது மன்றி, பரதன் திரும்பும்படி வேண்டிக் கொண்டபோதிலும் பிரதிக்கினையைத் தவறாதிருக்கின்றனை. ஆகையால் உன்னிடம் தருமமும் சத்தியமும் பரிபூர்ணமாய் இருக்கின்றன. சரணாகத ரக்ஷகனான உன்னிடத்தில் ஒருவிண்ணப்பம் செய்கிறோம். அதுவும் வருத்தம் மிகுந்திருக்கையால் பொறுத்திருக்க முடியாமல் உன்னிடம் விண்ணப்பம் செய்கிறோம். அரசர்

களுடைய சகலவிதமான கடமைகளும் உனக்குத் தெரியுமன்றோ! ராமா! இந்த வானப் பிரஸ்தர்கள் பெருங்கூட்டம் கூடி இங்கு வந்திருக்கின்றனர் பார். இவர்களில் எல்லாரும் பிராமணர்களே. ஐயோ! இவர்களுக்கு நீ நாதனாக இருந்தும் அநாதர்போல் ராக்ஷசர்களால் மிகவும் இம்சிக்கப்படுகிறார்களே! இப்படி வருவாயாக. அவர்களுடைய தேகங்கள் அடிபட்டிருப்பதைக் காண்பாயாக. இங்ஙனம் வனத்தில் அரக்கர்கள் அதி பயங்கரமான காரியங்களைச் செய்து தாபஸர்களைக் கோரமாக இம்சித்துத் துரத்திக் கொண்டிருப்பது எங்களால் பொறுக்க முடியவில்லை. ராமா! இதற்காகவே நாங்கள் அனைவரும் எங்களை நீ காப்பாற்றும் பொருட்டு உன்னைச் சரணமடைகிறோம். உன்னைவிட வேறுகதி இவ்வுலகில் எங்களுக்கு எங்கும் கிடையாது. இந்த ராக்ஷசர்களிடமிருந்து எங்கள் எல்லோரையும் ரக்ஷிப்பாயாக" என்றனர்.

ராமன் மிகவும் மனமிரங்கி அவர்களெல்லோரையும் பார்த்து "நீங்கள் என் விஷயமாக இங்ஙனம் சொல்லலாகாது. என்னை நீங்கள் ஆஞ்ஞாபிக்கவேண்டுமேயன்றி இங்ஙனம் வேண்டலாகாது. உங்களை ராக்ஷசர்களிடமிருந்து காப்பாற்றுவது என் சொந்தப் பிரயோஜனமே. முனிவர்களே நான் பிதிர்வாக்கிய பரிபாலனம் என்கிற வியாஜத்தினால் உங்கள் காரியத்தை நிறைவேற்றும்பொருட்டே இங்கு வந்திருக்கிறேன். இவ் வனவாசம் எனக்குப் பெரும்பயனை விளைவிக்கப்போகிறது. உங்களுக்கு இம்சைசெய்கிற எல்லா ராக்ஷசர்களையும் நான் வதம் செய்யப்போகிறேன். ரிஷிகளெல்லாரும் என் வீர்யத்தையும் என் தம்பியின் பராக்கிரமத்தையும் காண்பார்களாக" என்று ரிஷிகளுக்கு அபயம் கொடுத்து லக்ஷ்மணனோடு கூட சுதீக்ஷ்ணரைப் பார்க்கப் புறப்பட்டனன்.

ஆறுவது ஸர்க்கம் முற்றிற்று.

### எழாவது ஸர்க்கம்

## சுதீக்ஷ்ணரைக் காணலும் அவராச்சிரமத்தில் ஓர் இரவு தங்கியிருத்தலும்.

ராமன் சீதையோடும் லக்ஷ்மணனோடும் கூடி அந்த வைகானஸாதி பிராம்மணர்கள் பின்தொடர வரப்பெற்று சுதீக்ஷ்ண மகரிஷியின் ஆச்சிரமத்திற்குப் போயினன். சுதீக்ஷ்ணர் என்றும் ஓயாமல் தவம் செய்துகொண்டு ஸ்நானம் முதலியவற்றையும் செய்யாமல் இருந்ததனால் அழுக்கும் தூசியும் சரீரத்தில் படியப்பெற்று சடைகள் தரித்திருந்தனர். இன்னும் அவர் வயதுசென்ற கிழவராதலால் கண் பார்வையும் இல்லாமலிருந்தனர்.

ராமன் அவரைச் சமீபித்து "மகானுபாவரே! நான் ராமனென்பவன், உம்மைப் பார்க்கவந்தேன். இதோ நமஸ்காரம் செய்கிறேன், அடியேனை ஆசீர்வதிக்கவேண்டும்" என்றனன். அம்முனிவர் ராமனைக் கைகளால் வாரியணைத்துக்கொண்டு "வீரர்களில் தலைவனே! உனக்கு நல்வரவாகுக. நீ வந்ததனால் இவ்வாச்சிரமம் நாதனையுடையதாகி விளங்குகிறது. பெரும்புகழையுடையவனே! மகாவீர! நீ வரப்போகிறாய், உன்னைப் பார்க்கவேண்டுமென்று உன் வரவையே எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேனாகையால் தேகத்தைவிட்டுச் சுவர்க்கம் போகாதிருக்கின்றனன். சரபங்க முனிவர்க்காக வந்த தேவேந்திரன் என்னைப் பார்க்க இவ்விடம் வந்து நான் எனது புண்ணிய கருமத்தினால் சமஸ்தலோகங்களையும் ஜெயித்ததாகச் சொல்லிப்போயினன். என்னால் சம்பாதிக்கப்பட்ட அந்த லோகங்களில் நீ என்னுடைய அநுக்கிரகத்தினால் சீதையோடும் லக்ஷ்மணனோடும் கூடி சுகமாக விளையாடிக்கொண்டிருப்பாயாக." என்றனர்.

ராமன் அம்முனிவரை நோக்கி "மாமுனியே! நான் சுயமாகவே லோகங்களைச் சம்பாதித்துக் கொள்கின்றனன்.

ஆனால் இவ்வரண்யத்தில் நாங்கள் வசிக்கும்படி ஓர் வாசஸ்தானத்தைமாத்திரம் தேவரீர் ஏற்படுத்திக் கொடுக்கவேண்டும்.'' என்றனன்.

இங்ஙனம் ராமன் கூறக்கேட்ட அம்முனிவர் மிகுந்த சந்தோஷத்துடன் "ராமா! இவ்வாச்சிரமத்தில் ரிஷிகள் பலரும் விளங்குவார்கள். இதில் காய் கிழங்குகள் எப்பொழுதும் ஏராளமாய்க் கிடைக்கும். இவ்விடத்திலேயே நீ சுகமாக வசிக்கலாம். ஆனால் இங்கு மான் முதலிய மிருகங்கள் அடிக்கடி வந்து எமது சமாதியைக் கெடுத்துவிடுகின்றன. இந்த மிருகங்களால் ஏற்படும் பாதையைத் தவிர, வேறொரு தோஷமும் இங்கில்லை'' என்றனர்.

ராமன் உடனே வில்லில் பாணத்தைத் தொடுத்து இழுத்துக்கொண்டே "தபோதனரே! நான் இங்கிருப்பேனாயின் உமக்குத் தொந்தரவு செய்யும் அம்மிருகங்களை என் பாணங்களால் கொன்றுவிடுவேன். ஆனால் அவ்விதம் செய்தால் உமக்கு மனவருத்தம் உண்டாகும். ஆகையால் இவ்வாச்சிரமத்தில் வெகுகாலம் இருப்பதில் எனக்கிஷ்டமில்லை.'' என்றனன்.

ராமன் இங்ஙனம் கூறி அம்முனிவரிடம் அநுமதி பெற்றுக்கொண்டு ஜலக்கரைக்குச் சென்று சந்தியாவந்தனாதிகளை முடித்துக்கொண்டு அன்றிரவெல்லாம் சீதையோடும் லக்ஷ்மணனோடும்கூட அங்கு வாசம் செய்தனன். சுதீக்ஷ்ண முனிவர் ராமாதிகளுக்கு வேண்டிய காய் கிழங்குகளையும் பழங்களையும் தானே கொடுத்து ஆதரித்தனர்.

ஏழாவது ஸர்க்கம் முற்றிற்று.

## எட்டாவது ஸர்க்கம்.

## இராமன் சுதீக்ஷ்ண முனிவரிடம் விடைபெற்றுப் புறப்படுதல்.

அன்றிரவு கடந்தபின் ராமன் விடியற்காலையில் எழுந்து ஸ்நானம் ஜபம் முதலியவற்றை முடித்தனன். பிறகு சீதை லக்ஷ்மணன் இவர்களுடன் கூடியவனாய் சுதீக்ஷ்ணரை வணங்கி அவரிடம் விடைபெற்றுக்கொண்டு உக்கிரமான கிரணங்களைப் பரப்பி உஷ்ணத்தையுண்டாக்குகிற சூரியன் மேன்மேலும் காய்ந்து தபிப்பதற்கு முன்னதாகவே அவ்வாச்சிரமத்தினின்றும் பிரயாணமாயினன். அச்சமயம் சுதீக்ஷ்ணமுனிவர் "ராமா! சென்று சுகமாகத் திரும்பி வருவாயாக. தண்டகாரணியத்தில் வசிக்கின்ற மகரிஷிகளினது ரமணீயமான ஆச்சிரமங்களைக் காண்பாயாக. அங்கு ஏராளமான காய் கிழங்குகளும் பழங்களும் எப்பொழுதும் கிடைக்கும். குளங்களும் வாவிகளும் நீரோடைகளும் சோலைகளும் நிறைந்து வெகு ரமணீயமாகவிருக்கும். சந்தோஷமாக அவ்விடங்களுக்கெல்லாம் சென்று சுகமாக விளையாடிக் காலம் கழிப்பீர்களாக. ராமா! மறுபடியும் ஒருதடவை என் ஆச்சிரமத்திற்குத் தப்பாமல் வரவேண்டும்" என்றனர்.

'அங்ஙனமேயாகுக' என்று கூறி ராமன் முதலியோர் அம்முனிவரைப் பிரதக்ஷிணம் செய்து பிரயாணத்தைத் தொடங்கினர். ராம லக்ஷ்மணர்கள் இருவரும் அம்பறாத் தூணிகளைத் தோளில்கட்டி, விற்களைக் கையில்பிடித்து ஆச்சிரமத்தினின்றும் பிரயாணமாய்ப் புறப்பட்டனர்.

எட்டாவது ஸர்க்கம் முற்றிற்று

ஒன்பதாவது ஸர்க்கம்.

## ராமன் முனிவர்களின் முன்னிலையில் ஸமஸ்த ராக்ஷசர்களையும் வதைக்கிறேனென்று பிரதிக்ஞை செய்த விஷயத்தில் சீதை தன்னுடைய வெறுப்பைத் தெரிவித்தல்.

சீதை ராமனை நோக்கி மனத்துக்கினியதான சிநேகம் பொழிகின்ற வார்த்தையில் "நீர் அனுஷ்டிக்கின்ற இம்முனி தருமமோ மிகவும் பெரியதாய் இருப்பது. காமத்தின் மிகுதியாலுண்டாகிற விசனங்கள் இவ்வுலகில் மூன்றே உள்ளன. அவை பொய் உரைத்தல், பிறர் மனைவியை இச்சித்தல், பகையின்றி இம்சைசெய்தல் என்பவாகும். இவற்றுள் முதல் இரண்டு காரியங்களையும் நீர் நெஞ்சாலும் நினைக்க மாட்டீரென்பதை நான் நன்கறிவேன். ஏனெனில், நீர் சத்திய சந்தர், ஏகபத்தினி விரதம் உடையவர் என்கிற காரணத்தால்தான். ஆனால் நீர் இப்பொழுது பகையில்லாமல் பிறரை இம்சிக்கை யென்கிற காரியத்தைச் செய்ய நேர்ந்திருக்கிறது; நீர் ரிஷிகளை ரக்ஷிக்கும் பொருட்டு இராக்கதர்கள் எல்லாரையும் கொன்று விடுவதாகப் பிரதிக்ஞை செய்திருக்கின்றீர். ரிஷிகளின் வேண்டுகோளைப் பற்றியேயன்றித் தனக்குத்தானுகவே இதன் பொருட்டுத் தம்பியுடன் வில்லையும் பாணங்களையும் தரித்துத் தண்டக மென்னும் இப்பெருங்காட்டிற்கு வந்தீர்போலும். மகாவீரரே! நீர் இதற்காக இவ்விடம் வந்ததைப்பற்றி எனக்குச் சிறிதும் இஷ்டமில்லை. அக்கினியினருகில் கட்டைகள் இருக்குமாயின் அதன் தேஜஸ்ஸின் வலிவு மென்மேலும் வளர்ந்துவரும். அதுபோல் க்ஷத்திரியர்களின் சமீபத்தில் வில் இருக்குமாயின், அவர்களுடைய தேஜோபலம் மிகவும் விருத்தியாகும்.

இதற்கு ஒரு கதை சொல்லுகிறேன் கேளும். முன்பு ஒரு வனத்தில் ஒரு முனிவர் மிகக்கொடியதான தவம் செய்துகொண்டிருந்தனர். தேவராஜன் அவரது தவத்தைக் கெடுக்கவிரும்பி ஓர் போர் வீரனைப்போல் வேடம் பூண்டு அவ

ரிடம் சென்று தான் கொண்டுவந்த மிகக்கூர்மையானதொரு கத்தியைக் காப்பாற்றிக் கொடுக்கும்படி அவரிடம் கொடுத்து விட்டுப் போயினன். அவர் அதை மிகவும் ஜாக்கிரதையாய்க் காப்பாற்ற விரும்பித் தாம் எங்குச் சென்றபோதிலும் அக் கத்தியையும் கூடவே கொண்டுபோவது வழக்கம்.

இங்ஙன மிருக்கையில் நாளுக்கு நாள் அவருக்குத் தவத்தில் ஊக்கம் குறைந்து ஆயுதத்தைப் பிடித்துத்திரியும் தன்மையர்க்குண்டாகக்கூடிய இம்சாரூபமான கோப புத்தியே வளரத்தொடங்கியது. பிறகு அவர் அவ்வாயுதத்தின் சம்பந்தத்தினால் இம்சாவியாபாரங்களில் ஆழங்கால் பட்டு மதிமயக்க முற்று அதர்மத்தால் பிடிக்கப்பெற்றுக் கடைசியில் நரகத்தை யடைந்தனர்.

நீர் தண்டகாரணியத்திலுள்ள ராக்ஷசர்களைப் பகையின்றி வில்லைப் பிடித்துக்கொல்லும் புத்தியை எவ்விதத்திலும் கொள்ளலாகாது. அபராதமின்றி வீணாகப் பிராணிகளை யழிப்பதை நான் விரும்ப மாட்டேன். ஆயினும் ரிஷிகளுக்குத் தீங்கியற்றும் அரக்கர்களைக் கொல்லலாகும் என்கிறீரோ? அது ராஜ்ஜியத்தை ஆளும் பொழுதன்றோ தகுந்தது. ஆயுதமெங்கே? அரண்யமெங்கே? க்ஷத்திரிய தருமமெங்கே? தவமெங்கே? இவையெல்லாம் ஒன்றுக்கொன்று பொருந்தாதிருப்பவை. ஆகையால் நாம் தேசத்திற்குத் தகுந்த தருமத்தையே பாராட்ட வேண்டும். இவ்வரண்யத்திற்குத் தவமே தகுந்தது. ஆகையால் அதைச் செய்ய வேண்டுமேயன்றி ஆயுதங்களைத் தரித்தலாவது க்ஷத்திரிய தருமமாவது இங்குத்தகாது. ஆயுதம் தரிப்பதால் கோப முண்டாகிப் பரஹிம்ஸை செய்ய நேரிட்டு அதனால் பாபம் சம்பவிக்கும். தருமத்திலேயே விருப்பமுடைய நீர் தவ ஒழுக்கத்தை மேற்கொள்வதே நலம். மூன்று லோகங்களிலும் உள்ளவையனைத்தும் உமக்கு உள்ளபடி நன்கு தெரிந்திருக்கின்றன. உமக்குத் தெரியாதது ஒன்றுமே இல்லை. பெண்

பிள்ளைக்குள்ள சாபல்யத்தினாலும் உம்மேலிருக்கும் பிரியத்தினாலும் நான் இவற்றையுமக்குச் சொல்லினேனன்றி எல்லாம்தெரிந்த உமக்குத் தருமம் உபதேசிக்கவல்லவன் எவன்? நீர் இதை லக்ஷ்மணனுடன் நன்கு ஆலோசித்து எது இஷ்டமோ அதைச் செய்வீராக." என்றனள்.

ஒன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று

---

## பத்தாவது ஸர்க்கம்.

### ராமன் சீதைக்கு ராக்ஷச வதம் அவசியமென்று உரைத்தல்.

சீதை கணவனிடமுள்ள பிரேமத்தினால் இங்ஙனம் சொன்ன வார்த்தையைக்கேட்ட ராமன் அவளைப்பார்த்து "தேவீ! நீ சொன்ன வார்த்தைகள் முற்றிலும் உண்மையே. ஆயினும் ஜனங்கள் வருந்தி ஐயோவென்று முறையிடலாகாதென்று க்ஷத்திரியர்கள் வில்லைத் தரிக்க வேண்டுமென்கிற ஒரு நியாயம் உண்டல்லவா? சீதே! மகரிஷிகள் ராக்ஷசர்களுக்குப் பயந்து தாமே என்னிடம் வந்து சரணமடைந்தனர். அவர்கள் வருத்தமுற்றனரல்லவோ? அவர்களை நான் ரக்ஷிக்கவேண்டுமல்லவா? அவர்கள் என்னைச் சரணமடைந்து தங்களை ராக்ஷசர்களிடமிருந்து காப்பாற்றவேண்டும் என்று வேண்டினபோது நான் அவர்களை வணங்கி 'நீங்கள் என்னைப் பொறுத்தருளவேணும். நானே உங்களிடம் வந்து பணி செய்யவேண்டியவன். அப்படியிருக்க மஹநீயர்களான நீங்களே என்னிடம்வந்து வேண்ட நேரிட்டதைப்பற்றி மிகவும் லஜ்ஜையை அடைகிறேன்! இனி நான் உங்கள் விருப்பத்தின்படி ராக்ஷசர்களைக்கொன்று உங்களை ரக்ஷிக்கிறேன்' என்று பிரதிக்ஞையும் செய்தபின்பு தவறமாட்டேன். அதிலும் முனிவர்களுக்குச் செய்த பிரதிக்ஞையைத் தவறுபவனல்லேன். சீதே! நான் பிராணனையாயினும் விட்டுவிடுவேன். உன்னையும் லக்ஷ்மணனையும் கூடத் துறந்துவிடுவேன். ஆனால்

எவர்க்காயினும் பிரதிக்கினை செய்வேனாயின் அதைமாத்திரம் தவறமாட்டேன். அதிலும் பிராமணர்களுக்குச் செய்த பிரதிக்கினையென்றால் எள்ளளவும் தவறமாட்டேன். குற்றமற்ற சுபாவமுடையவளே! என்னிடத்தில் உனக்குள்ள பிரேமாதிசயத்தினால் நீ இந்த வார்த்தை மொழிந்தனை. இதில் ஒரு குற்றமுமில்லை. ஆயினும் நான் எந்த தருமத்தைச் செய்ய மனதில் நினைப்பேனோ அதையே நீயும் சங்கல்பிக்கவேண்டும், மற்றது கூடாது." என்றிங்ஙனம் கூறி வில்லைப்பிடித்து நிற்கின்ற லக்ஷ்மணனோடுகூட அழகான தபோவனங்களுக்குப் போகத்தொடங்கினன்.

பத்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

பதினோராவது ஸர்க்கம்.

இராமன் அகஸ்திய முனிவரின் வைபவங்களைப் பேசிக் கொண்டே அவரது ஆச்சிரமமம் நோக்கிச் செல்லுதல்.

ராமன் முன்னே நடந்தனன், இடையில் சீதையும் பின்பு லக்ஷ்மணனும் சென்றனர். அவர்கள் பலவகை மலைச் சாரல்களையும் வனங்களையும் அழகிய நதிகளையும் குளங்களையும் பக்ஷிகளையும் புள்ளிமான்களையும் பார்த்துக்கொண்டே போயினர். சூரியன் அஸ்தமிக்கும் சமயத்தில் அவர்கள் ஒரு பெரிய தடாகத்தைக் கண்டனர். அது வெகு ரமணீயமாய் அழகிய அன்னப்பறவைகளாலும், தாமரை அல்லி முதலிய மலர்களாலும் விளங்கியது. நிர்மலமான ஜலத்தையுடைய அவ்வழகிய குளத்தினின்றும் கீதவாத்தியங்களின் ஒலி செவிப்பட்டது. ஆனால் அங்கு எவரும் காணப்படவில்லை.

ராமன் அருகிலிருந்த தர்மபிருத் என்னும் முனிவரை நோக்கி அத்தடாகத்தின் விசேஷத்தைக் கூறும்படி வேண்டினன். அம்முனிவர் "ராமா! இக்குளத்திற்குப் பஞ்சாப்சரமென்றுபெயர். இதை மாண்டகர்ணி யென்னும் முனிவர் தவமகிமையால் நிருமித்தனர். அவர் இக்குளத்தில்

வாயுபக்ஷணம் செய்துகொண்டிருந்து மிகவும் தீவிரமாகத் தவம் செய்தனர். பிறகு அக்கினி முதலிய சமஸ்த தேவதைகளும் அவருடைய தவத்தைக் கெடுப்பதற்காக அழகிய ஐந்து அப்ஸர ஸ்திரீகளை அவரிடம் அனுப்பினர். அந்த ஸ்திரீகள் தங்கள் அழகிய தேகங்களைக்காட்டி அம்முனிவரை மயக்கி அவரை மன்மதனுக்கு வசப்படும்படி செய்து விட்டனர். இக்குளத்தினுள்ளே அந்த ஸ்திரீகளுக்கு வீடுகள் மறைவாக நிருமிக்கப்பட்டிருக்கின்றன. அவர்கள் யௌவனப் பருவத்துடன் பிரகாசிக்கின்ற அம்முனிவருடன் சுகமாக விளையாடி அவர்க்கு மனக்களிப்பை விளைத்துக் கொண்டிருக்கின்றனர். அந்த ஸ்திரீகள் கிரீடித்துக்கொண்டிருக்கையில் அவர்களது ஆபரணங்களின் ஒலியோடு கலந்து கீதவாத்தியங்களின் தொனி செவிப்படுகின்றது." என்றனர்.

இவற்றைக்கேட்ட ராம லக்ஷ்மணர்கள் மிகவும் சந்தோஷப்பட்டவர்களாய் சீதையுடன் கூடி அவ்வனத்திலுள்ள ஆச்சிரமங்களைக்கண்டு அங்குள்ள சமஸ்த முனிவர்களாலும் பூஜிக்கப்பட்டுச் சுகமாய் இருந்தனர். ராமன் ஒவ்வொரு ஆச்சிரமத்திலும் தங்கி ராக்ஷசோபத்திரவங்களைப் போக்குவதற்காகப் பின்னும் வெவ்வேறு ஆச்சிரமங்களுக்கும் சென்றனன்.

ராமன் ஒரு ஆச்சிரமத்தில் பதின்மூன்று மாதங்களும், மற்றோராச்சிரமத்தில் ஒருவருஷமும், இன்னோராச்சிரமத்தில் நான்கு மாதங்களும், வேறொரு ஆச்சிரமத்தில் ஆறுமாதங்களும், இன்னமொரு ஆச்சிரமத்தில் ஒன்றேகால் வருஷமும் வசித்தனன். இப்படியாக ராமன் அம் முனிவர்களின் ஆச்சிரமங்களில் இரண்டு தடவை வாசம் செய்து மனக்களிப்புடன் கிரீடித்துக்கொண்டிருக்கையில் பத்து வருடங்கள் சென்றன. பிறகு ராமன் மீண்டும் சுதீக்ஷ்ண முனிவரின் ஆச்சிரமத்தை யடைந்தனன்.

ராமன் சுதீக்ஷ்ணரை வணங்கித் தான் அகஸ்திய முனிவரது ஆச்சிரமத்தையடைந்து அவரை வணங்கி ஆசீர்வாதம் பெற விரும்புவதாகச் சொல்லினன். சுதீக்ஷ்ணர் ராமனை நோக்கி "ராமா! இவ்வாச்சிரமத்திலிருந்து தென்திசையாக நான்கு யோசனைதூரம்போனபின்பு அங்கு அகஸ்தியருடைய சகோதரரான சுதர்சன முனியின் ஆச்சிரமம் இருக்கிறது. அங்கு ஓரிரவு வசித்திருந்து உதயமானவுடன் எழுந்து தென்திசையாகவே வனசமூகத்தின் பக்கத்துவழியாக ஒரு யோசனை தூரம் போகையில் அங்கு அகஸ்தியருடைய ஆச்சிரமம் இருக்கின்றது. அது வெகு ரமணியமாய் இருக்கும். அப்பனே! நீ இப்பொழுதே அவ்விடம் சென்று வருவாயாக" என்றனர்.

பிறகு ராமன் வெகு சந்தோஷத்துடன் புறப்பட்டுச் சீதையும் லக்ஷ்மணனும் பின் தொடர சுதீக்ஷ்ணர் கூறின வழியே சென்று சுதர்சன முனிவரின் ஆச்சிரமத்தையடைந்து அங்குள்ள தபோதனர்களையும் பிராமணர்களையும் லக்ஷ்மணனுக்குக் காட்டி "லக்ஷ்மணா! அகஸ்திய முனிவரின் தம்பியான சுதர்சனமுனிவரின் ஆச்சிரமம் இதுவே. இங்கு முன் ஒரு காலத்தில் இல்வலனென்றும் வாதாபியென்றும் அண்ணன் தம்பிகளான இரண்டு அசுரர்கள் பிராமணர்களை இம்சித்துக்கொண்டிருந்தனர். இல்வலன் பிராமணருருவம் தரித்து சம்ஸ்கிருதபாஷை பேசிக்கொண்டு சிராத்தமென்று சொல்லி பிராமணர்களை யழைப்பான். பிறகு அந்த இல்வலன் ஆட்டு உருவம் தரித்த தன் சகோதரனை வாதாபியைச் சமைத்து அந்த பிராமணர்களைப் போஜனம் செய்விப்பான். பிறகு அப்பிராம்மணர்கள் புசித்தபின் இல்வலன் 'வாதாபீ! வெளியில் புறப்பட்டுவா' என்று பெருங்குரலுடன் அழைப்பான். உடனே வாதாபி ஆடுபோல் கூச்சலிட்டுக்கொண்டு பிராமணர்களின் வயிற்றைக் கிழித்து வெளியே புறப்படுவான். இங்ஙனம் அவ்விருவரும்

ஒன்றுசேர்ந்து தினந்தோறும் ஆயிரக்கணக்கான பிராமணர் களை நாசஞ்செய்துவந்தனர்.

பிறகு தேவதைகளின் வேண்டுகோளினால் அகஸ்திய முனிவர் இல்வலனுடைய சிராத்தபோஜனத்திற்கு ஒப்புக் கொண்டு வாதாபியைப் புசித்துவிட்டனர். வழக்கப்படி இல்வலன் வாதாபியைப் பெயர் சொல்லி அழைத்தும் அவன் வெளியில் வரவில்லை. அகஸ்தியர் பெருஞ் சிரிப்புடன் இல்வலனை நோக்கி "வாதாபி என் வயிற்றில் ஜீர்ணித்து யமனது வீட்டிற்குப்போய்ச் சேர்ந்தனன். அவன் எப்படி வெளியில் புறப்படுவான்? என்றனர். தன் சகோதரன் இறந்தானென்பதைக் கேட்ட இல்வலன் அம்முனிவரை உபத்திரவிக்கத் தொடங்கினன். அப்போது அவனும் அம் முனிவரது நேத்திராக்கினியினால் நீறாகி மரணமடைந்தான். இவ்வாச்சிரமமானது அப்படிப்பட்ட மகிமையுள்ள அகஸ்திய முனிவரது சகோதரரான சுதர்சன முனிவரது ஆச்சிரம மாகும்." என்றனன்.

இச்சமயம் சூரியன் அஸ்தமிக்கவே, ராமலக்ஷ்மணர்கள் சாயங்கால சந்தியாவந்தனாதிகளை விதிப்படி செய்து அவ்வாச் சிரமத்தில் பிரவேசித்து அம்மகரிஷிக்கு நமஸ்காரம் செய் தனர். அன்றிரவு அவரால் நன்கு பூஜிக்கப்பட்டு அங்குத் தானே தங்கியிருந்து மறுநாள் பொழுது விடிந்ததும் ராமன் சுதர்சன முனிவரிடம் விடை பெற்றுக்கொண்டு சுதீக்ஷ் ணர் சொன்ன மார்க்கத்தின்படி அகஸ்திய முனிவரின் ஆச் சிரமத்தை நோக்கி நடந்தனன். பிறகு சிறிதுநேரம் நடந்து அவ்வாச்சிரமத்தையடைந்து லக்ஷ்மணனிடம் அகஸ்திய ருடைய பிரபாவங்களையெல்லாம் ஒவ்வொன்றாகச் சொல்லிக் கொண்டே உள்நுழைந்து லக்ஷ்மணனை நோக்கி "லக்ஷ்மணா! இவ்வாச்சிரமம் மிக மகிமை பொருந்தியது. தேவதைகளும் யக்ஷர்களும் நாகர்களும் ஆகார நியதியுடன் தருமத்தை ஆராதிப்பவர்களாகி இங்கு வாசம் செய்கின்றனர். ஆகையால்

அவ்வாச்சிரமத்திலேயே தங்கி அகஸ்தியரை ஆராதித்துக் கொண்டு வனவாசத்தின் மிகுந்த காலத்தைக் கழிக்கப்போகிறேன். நீ முன்பு போய் இங்குச் சீதையோடு நான் வந்திருக்கிறேனென்பதை அம்மகரிஷிக்குத் தெரிவிப்பாயாக." என்றனன்.

பதினோராவது ஸர்க்கம் முற்றிற்று.

---

பன்னிரண்டாவது ஸர்க்கம்.

## இராமன் அகஸ்தியரைக் காணுதலும் அம்முனிவர் கொடுத்த வைஷ்ணவ தனுசு முதலியவற்றைப் பெற்றுக்கொள்ளுதலும்.

லக்ஷ்மணன் ராமனது கட்டளைப்படி அகஸ்தியரது ஆச்சிரமத்தில் பிரவேசித்து அம்முனிவரது சீடரிடத்தில் ராமனைப்பற்றியும் அவர்கள் காட்டிற்கு வந்திருக்கும் காரணத்தைப்பற்றியும் விவரமாய்க் கூறி ராமன் அம்முனிவரைக் காண சீதையுடன் வந்திருப்பதை அவருக்குத் தெரிவிக்கும்படி சொல்லினன். அச்சீடரும் அங்ஙனமே உட்சென்று அகஸ்தியரிடம் லக்ஷ்மணன் கூறியபடி கூறி அவருடைய அநுமதி பெற்று ராமாதிகளை உள்ளே அழைத்துச் சென்றனர்.

ராமன் அவ்வாச்சிரமத்தில் விஷ்ணு, தேவேந்திரன், சூரியன், சந்திரன், குபேரன், தாதா, விதாதா, வாயு, நாகராஜன், அநந்தன், காயத்ரீ, வஸு தேவதைகள், வருணன், சுப்ரமணியன், தர்ம தேவதை ஆகிய இவர்களின் ஸ்தானங்கள் ஏற்படுத்தப்பட்டிருப்பதைப் பார்த்துக்கொண்டே சென்றனன். பிறகு அகஸ்திய மகரிஷியும் சீடர்களோடு கூட ராமனை எதிர்கொண்டு வந்தனர். ராமன் மகாதேஜஸ்விகளான முனிவர்களால் பின் தொடரப்பட்டு அகஸ்திய முனிவரைப் பார்த்து அவரது பாதங்களைப் பிடித்துக்கொண்டு நமஸ்காரம் செய்தனன். சீதையும் லக்ஷ்மணனும் அம்முனிவரை வணங்கிக் கைகூப்பியவண்ணம் நின்றிருந்தனர்.

அம்முனிவர் ராமாதிகளை நன்கு உபசரித்து ராமனை நோக்கி "புருஷசிங்கமே! சுவர்ணமயமாகி ரத்தினங்கள் இழைக்கப்பெற்ற திவ்வியமான இப் பெரிய வில்லைப் பார். இது விஷ்ணுதேவனுடையது. விசுவகர்மாவினால் நிருமிக்கப் பட்டது. இந்த பாணம் சூரியனைப் போல் மேலானதாய் விளங்குகிறது. பாணங்கள் எப்பொழுதும் குறையப் பெறாத இந்த அம்பறாத்தூணிகள் இரண்டும் எனக்குத் தேவேந்திர னால் கொடுக்கப்பட்டவை. சுவர்ணமயமான உரையுடன் கூடிய இப்பெரிய கத்தியை எனக்குத் தேவேந்திரன் கொடுத் தனன். ராமா! முன்பு விஷ்ணுதேவன் இந்த வில்லைக் கொண்டே மேலான அசுரர்களைக் கொன்று தேவர்களுடைய துயரங்களைப் போக்கினன். அப்படிப்பட்டதான வில்லையும் அம்பறாத்தூணிகளையும் சிறந்த கத்தியையும் அந்தப் பாணத் தையும் நீ சத்துருக்களை வெல்லும்பொருட்டு வாங்கிக்கொள் வாயாக." என்று சொல்லி ராமனுக்கு அந்த உத்தமமான திவ்வியாயுதங்களைக் கொடுத்து அவனைப்பார்த்துப் பின் வருமாறு கூறினர்.

பன்னிரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## பதின்மூன்றவது ஸர்க்கம்

### கரன் முதலியோரை வதைக்க ராமன் அகஸ்தியரிடம் உத்தரவு பெற்றுக்கொண்டு பஞ்சவடிக்குச் செல்லல்.

"ராமா! லக்ஷ்மணா! உங்களுக்கு மங்களமுண்டாகுக. உங்களது வரவால் எனக்கு மிகுந்த சந்தோஷம் உண்டாகி யிருக்கிறது. சுகுமாரையான சீதை மிகுந்த கஷ்டங்களை யநுபவிக்கத் தக்க இப்பெருங்காட்டில் உன்னைப் பின்பற்றி வந்தது மிகவும் அற்புதமேயாகும். ராமா! ஸ்திரீகள் கண வனை நல்லஸ்திதியிலிருக்கும்பொழுது சந்தோஷப்படுத்திக் கொண்டிருப்பார்கள். தரித்திரத்தினால் பீடிக்கப்படும் சமயத் தில் அவனைக்கை விடுவார்கள். இது ஸ்திரீகளுக்கு இயற்கை

யான சுபாவமாகும். இன்னும் அவர்களுடைய மனம் மின்னற்கொடிபோல் அதி சஞ்சலமாய் இருக்கும். நெடு நாள் சிநேகம் உண்டாயிருப்பினும் ஸ்திரீகள் அதை நொடிப் பொழுதில் அறுத்துவிடுவார்கள், ஆயுதங்கள்போல் மிகவும் தீக்ஷணமாய் இருப்பார்கள். முன்பின் பாராமல் எத்தகைய காரியத்திற்கும் துணிவார்கள்; கருடனையும் வாயுவையும் மீறி மிக்க வேகமுடையவராய் இருப்பார்கள். உன் மனைவியான சீதையோவென்றால் அப்படிப்பட்ட தோஷங்கள் எதுவும் உடையவளன்று. இவள் அருந்ததியைப்போல் பதிவிரதைகள் அனைவரினும் மேலாய் இருப்பவள். ராமா! நீ லக்ஷ்மணனோடும் சீதையோடும் வந்து வாசம் செய்கையால் எனது இவ்வாச்சிரமம் புனிதமாயிற்று." என்றனர் அகஸ்தியர்.

ராமன் கைகூப்பிய வண்ணம் "முனிவரே! நீர் என் தம்பியின் குணங்களையும், என் மனைவியின் குணங்களையும் என் குணங்களையும்பற்றிச் சந்தோஷித்திராகையால் நான் தன்யனானேன். நான் சுகமாக வசிக்கக்கூடிய ஓர் அழகிய ஆச்சிரமத்தை எனக்குக் காட்டுவீராக. அது ஜலஸம்ருத்தியோடும் வன சமூகங்களோடும் கூடி அழகாய் இருக்கவேண்டும்" என்று கேட்க, அம்முனிவர் "என் அப்பனே! இவ்விடத்திற்கு இரண்டு யோசனை தூரத்தில் மிகுந்த காய் கிழங்குகளும் ஜலங்களும் நிரம்பியிருக்கப்பெற்று பல மிருகங்களோடு கூடி அழகாய் இருக்கிற பஞ்சவடி என்கிற ஒரு பிரதேசமுண்டு. நீ சீதையோடும் லக்ஷ்மணனோடும் அவ்விடம் சென்று ஆச்சிரமம் ஏற்படுத்திக்கொண்டு சுகமாக வசிக்கலாம்.

ரகுகுல திலகனே! நீ செய்யும் இந்த வனவாசத்தினால் உன் தந்தையான தசரதன் தன் பிரதிக்ஞையைத் தீர்த்துக் கொண்டவனாகி தன்யாத்துமாவாயினன். அயோத்தியில் நடந்த சகலமான விருத்தாந்தங்களும் நான் என் தவமகிமையால் தெரிந்து கொண்டேன். இன்னும் உன் மனதிலுள்ள

அபிப்பிராயத்தையும் தெரிந்துகொண்டேனாதலால் உன்னைப் பஞ்சவடிக்குப் போகுமாறு சொல்லுகின்றனன். ராமா! அது மிகவும் ரமணீயமாய் இருக்கும். கோதாவரி நதிக்கு மிகவும் சமீபத்திலிருப்பதால் அது ஜனக்கூட்டமின்றி ஏகாந்தமாய் இருக்கும். நீ ஆபத்தில் ஆழ்ந்து வருந்துபவர்களைக் காப்பாற்றுவதில் சமர்த்தனாகையால் அங்கு வாசம் செய்வாயாயின் தபோதனர்களைக் காப்பாற்ற நேரும். வீரனே! அதோ தெரியும் இலுப்பைத் தோப்பின் வடபுறமாகப் போகையில் ஓர் ஆலமரத்தைக் காண்பாய். அதைத் தாண்டினதும் ஒரு பாதை காணப்படும்; அதன் வழியே செல்வாயாயின் ஒரு பர்வதம் புலப்படும். அதனருகில்தான் பஞ்சவடி என்கிற பிரசித்தி பெற்ற பிரதேசம் இருக்கிறது. அங்கு எப்பொழுதும் வனங்கள் புஷ்பித்திருக்கும்." என்றனர்.

ராமன் லக்ஷ்மணனோடுகூட அம்முனிவரைப் பூஜித்து, பாதங்களைத் தொட்டு நமஸ்கரித்து அவரிடம் விடைபெற்றுக் கொண்டு பஞ்சவடியை நோக்கிப் பிரயாணமாயினன்.

பதின்மூன்றாவது ஸர்க்கம் முற்றிற்று. 925/2

---

பதினான்காவது ஸர்க்கம்

## ராமாதிகள் பஞ்சவடியை நோக்கிப் போகும் வழியில் ஜடாயுவைக்காணல்.

ராமன் பஞ்சவடிக்குச் செல்லும் வழியில் ஒரு வயது சென்ற பெரிய கழுகைச் சந்தித்தனன். அது அகஸ்தியர் சொன்ன ஆலமரத்தின்மேல் இருந்தது. ராமலக்ஷ்மணர்களிருவரும் அக்கழுகை ஒரு ராக்ஷசனாக நினைத்து "நீ யார்?" என்று வினவினர். அக்கழுகு சந்தோஷமான முகத்துடன் 'என்னப்பனே! நான் உன் தந்தை தசரத மகாராஜனுக்கு நண்பன்' என்றது. ராமன் அதை வெகுவாகப் பூஜித்து அதன் குலத்தையும் பேரையும் வினவினன்.

அக்கழுகு "ராமா! முற்காலத்தில் பிரஜாபதிகளா யிருந்தவர்கள் பெயரெல்லாம் எனக்குத் தெரியும். பிரஜா பதிகளில் முதல்வர் கர்த்தமர். பிறகு விக்ரீதரும், சேஷ ரும், ஸம்ச்ரயரும், ஸ்தாணுவும், மரீசியும், அத்திரியும், க்ரதுவும், புலஸ்தியரும், அங்கிரஸ்ஸூம், பிரசேதஸ்ஸூம், புலஹரும், தக்ஷரும், விவஸ்வானும் வரிசையாகப் பிரஜாபதி களாய் இருந்தனர். பிறகு கச்சியபர் பிரஜாபதியாயினர். அவர் தக்ஷப் பிரஜாபதியின் அறுபது பெண்களில் எட்டு பேரை மணம் செய்து கொண்டனர். அவர்களின் பெயர் முறையே அதிதி, திதி, தனு, காலுகை, தாம்ரை, க்ரோத வசை, மனு, அனலே என்பதாகும்.

அவருக்கு அதிதியிடத்தில் பன்னிரண்டு ஆதித்யர் களும், எட்டு வஸூக்களும், பதினொரு ருத்திரர்களும் அச்வினி தேவதைகளுமாகிய முப்பத்துமூன்று வகையான தேவதைகள் பிறந்தனர். திதி கீர்த்தியில் மிகுந்த தைத்தி யர் (அஸூரர்)களைப் பெற்றனள். முன்பு இந்த ஸமஸ்த மான பூமண்டலங்களும் அந்த தைத்தியர்களுடையதாய் இருந்தன. சத்துருக்களை யடக்க வல்லவனே! தனு என்ப வள் ஹயக்ரீவன் என்னும் பிள்ளையைப் பெற்றனள். காலு கைக்கு நரகனும் காலகனும் பிறந்தனர். தாம்ரை என்னும் கச்சியபருடைய மனைவி, கிரௌஞ்சி, பாஸி, சியேநி, திருத ராஷ்ட்ரீ, சுகீ என்கிற ஐந்து கன்னிகைகளைப் பெற்றனள். அவ்வைவரில் கிரௌஞ்சி கோட்டான்களைப் பெற்றனள். பாஸி பாஸபக்ஷிகளைப் பெற்றனள். சியேனிக்குப் பருந்து களும் கழுகுகளும் பிறந்தன. திருதராஷ்ட்ரிக்கு ஹம்ஸங் கள் பிறந்தன. அவளுக்கே சக்கரவாகப் பக்ஷிகளும் பிறந் தன. ராமா! உனக்கு க்ஷேமமுண்டாகுக.

தாம்ரையின் பெண்ணாகிய சுகி நதையைப் பெற்றனள்; நதைக்கு விநதை பிறந்தனள். காச்யபரின் மற்றொரு

மனைவியான குரோத வசைக்கு மிருகி, மிருகமந்தை, ஹரி, பத்திரமதை முதலிய பத்து பெண்கள் பிறந்தனர். அவர்களில் மிருகிக்கு சமஸ்தமான மிருகங்களும் பிறந்தன. பத்திரமதைக்கு இராவதி யென்னும் பெண் பிறந்தது. அந்த இராவதிக்கு ஐராவத மென்கிற யானை பிறந்தது. பதின்மரில் ஒருத்தியான ஸுரபியென்பவளுக்கு ரோஹிணி யென்றும் கந்தர்வி யென்றும் இரண்டுபெண்கள் பிறந்தனர். ரோஹிணிக்குப் பசுக்கள் பிறந்தன. கந்தர்விக்குக் குதிரைகள் பிறந்தன. ஸுரபியின் தங்கையான ஸுரஸைக்குப் பல தலைகளையுடைய ஸர்ப்பங்கள் பிறந்தன. ஸுரஸையின் தங்கையான கத்ருவிற்கு ஒரு தலைப்பாம்புகள் பிறந்தன.

மனு என்னும் காச்யபரது மனைவி பிராம்மண, க்ஷத்திரிய, வைசிய, சூத்திரர் என்னும் புகழ் பெற்ற மானிடர்களைப் பெற்றனள். கச்சியபரின் மற்றொரு மனைவியான அனலை என்பவள் மரங்களைப் பெற்றனள். வினதை யென்பவள் சுகிக்குப் பெண் வயிற்றுப் பேத்தி. கத்ரு ஸுரஸைக்குத் தங்கை. அவர்களில் கத்ரு ஆயிரம் தலையுடைய ஆதிசேஷனைப் பெற்றனள். வினதைக்குக் கருடனென்றும் அருணன் என்றும் இரண்டு பிள்ளைகள் பிறந்தனர். நான் அந்த அருணனுக்கு சியேனி என்பவளிடத்தில் பிறந்தவன். ராமா! ஸம்பாதி என்னுடம் கழுகு எனக்குத் தமையன். என் பெயர் ஜடாயு என்று அறிவாயாக. நீ இஷ்டப்படுவாயாயின் வனவாசத்தில் நான் உனக்குச் சகாயனாக இருப்பேன். கொடிய மிருகங்களும் துஷ்ட ராட்சசர்களும் நிறைந்த இந்தக்காட்டில் நீயும் லக்ஷ்மணனும் எங்காயினும் போகும் பொழுது நான் சீதையைப் பார்த்துக்கொண்டிருப்பேன்." என்று கூறியது.

ராமன் அந்த ஜடாயுவைப் பூஜித்து, சந்தோஷத்துடன் கட்டிக்கொண்டு நமஸ்காரம் செய்தனன். பிறகு அப்பக்ஷியுடன்கூட சீதையையும் லக்ஷ்மணனையும் அழைத்துக்

கொண்டு ராக்ஷசர்களை முடிக்கவிரும்பிப் பஞ்சவடிக்குப் போய்ச்சேர்ந்தனன்.

பதிநான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## பதினைந்தாவது ஸர்க்கம்

### பஞ்சவடியில் லக்ஷ்மணனால் நிருமிக்கப்பட்ட ஆச்சிரமத்தில் ராமாதிகள் சிறிதுகாலம் வசித்தல்.

பிறகு ராமன் லக்ஷ்மணனை நோக்கி "நம் மூவருக்கும் இன்பத்தை விளைவிக்கக்கூடியதாய், மரங்களடர்ந்து ரமணீயமான காடுகளும் மேடுபள்ளமில்லாது மெத்தென்ற மணற்குன்றுகளும் அமைந்து ஜலாதாரத்துடன் கூடியதான ஓர் பிரதேசத்தைத் தேடி அதில் நாம் சுகமாக வசிக்கத்தக்க ஓர் பர்ணசாலையை அமைப்பாயாக" என்றனன்.

லக்ஷ்மணன் அப்படிப்பட்ட ஓர் இடத்தை ராமனை காட்டித் தரவேணுமென்று வணங்கி வேண்டியபின், அப்படியே ஓரிடத்தை ராமன் காட்ட, அதில் மிகுந்த சுருசுருப்புடன் மண்ணைத் தோண்டிச் சுவர்களைவைத்து நீண்ட மூங்கில்களைக் கொண்டு தூண்களை நாட்டி அவற்றின்மேல் குறுக்காகத் தூலங்களையேற்றி அவற்றின்மேல் வன்னிக் கிளைகளைப் பரப்பி தர்ப்பம், நாணல், விழல் இவைகளைக் கொண்டு மேற்கூரையிட்டு மேடுபள்ளமில்லாமல் தரையைச் செவ்வைப் படுத்தி ஓர் அழகிய பர்ணசாலையை நிருமித்தனன்.

பிறகு கோதாவரி நதியில் ஸ்னானம் செய்து தாமரைப் பூக்களையும் பழங்களையும் பறித்துக்கொண்டு வந்து வாஸ்து கல்பத்தின்படி வாஸ்துபூஜை சாந்திகருமம் முதலியவற்றைச் செய்து ராமனுக்குத் தான் நிருமித்த ஆச்சிரமத்தைக் காட்டினன். ராமன் அதன் அமைப்பையும் அழகையும் கண்டு மிகுந்த சந்தோஷமடைந்து லக்ஷ்மணனைக் கட்டியணைத்து லக்ஷ்மணா! எனது அபிப்பிராயங்களைத் தெரிந்துகொண்டு

அதற்குத் தக்கபடி காரியங்களைக் குறிப்புடன் அறிந்து தருமத்தையும் தெரிந்துகொண்டு நீ இருக்கின்றமையால் என் தந்தை மரணமடையவில்லை. எனக்குப் பிழைத்திருப்பது போலவே இருக்கிறது. நீ கட்டியிருக்கும் ஆச்சரியமான இப் பர்ணசாலையைக் கண்டு நான் மிகவும் திருப்தி அடைகின்றனன். அதற்குப் பரிசாக உன்னை ஆலிங்கனம் செய்தனன்" என்றனன்.

பிறகு அந்த ராமாதிகள் அப்பர்ணசாலையில் யாதொரு கஷ்டமுமின்றிச் சுகமாக வசித்து வந்தனர்.

**பதினைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று**

---

## பதினாறாவது ஸர்க்கம்

## ராமாதிகள் கோதாவரியில் ஸ்நானம் செய்தல்

அங்ஙனம் அவர்கள் அங்கு வசித்து வருகையில் மழைக் காலம் சென்று குளிர்காலம் வந்தது. ஒருநாள் விடியற்காலையில் ராமன் ஸ்நானம் செய்வதற்காகக் கோதாவரி நதிக்குச் சென்றனன். லக்ஷ்மணன் வணக்கத்துடன் கையில் ஜல கலசத்தை எடுத்துக்கொண்டு சீதையோடுகூட ராமனைப்பின் சென்று கொண்டே "ராமா! இப்பொழுது உனக்குப் பிரியமான ஹேமந்தருது (குளிர்காலம்) வந்திருக்கிறது. இக் காலத்தில் பூமிமேல் அதிகமான பனிபெய்யும். பூமிமுழுதும் பயிர்களால் பிரகாசித்துக்கொண்டிருக்கும். ஜலம் மிகவும் குளிர்ச்சியாயும் அக்கினி மிகவும் இனியதாயும் இருக்கும். இப்பொழுது நாட்டுப்புறத்திலுள்ளவர்கள் மிகுந்த காமோத் திரகம் உண்டாகப்பெற்றும், பசுவின் பால் ஏராளமாக உண்டாகப்பெற்றும் விளங்குவார்கள். அரசர்கள் சத்துருக்களை வெல்ல விரும்பித் திரிந்துகொண்டிருப்பார்கள்.

இக்காலத்தில் பகற்பொழுதுஇனிதாக வெயில்காயப் பெற்றிருக்கையால் மிகவும் சுகமாக இருக்கும். ஆனதுபற்றியே

வெயிலில் திரிவது மிகவும் சுகமாய் இருக்கும். சூரியனது கிரணங்கள் பகலில் தீக்ஷ்ணமாய் இராமல் மெதுவாய் இருக்கும். இரவுகாலம் மிகவும் நீண்டு குளிரும் பனியும் உடையதாய் இருக்கும். விடியற்காலையில் மிகவும் அதிகமான குளிரும் பனியும் ஏற்படும். பயிர்களெல்லாம் நன்கு முற்றி கனமான கதிர்களையுடையனவாய் இருக்கும். பகலில் சூரியன் சந்திரனைப்போல் குளிர்ந்தவனாகவே பிரகாசிப்பான். மிருகங்களும், பக்ஷிகளும் காலை வேளையில் குளிருக்கஞ்சித் தண்ணீரைத் தொடாமல் இருக்கின்றன. வனஸமூகங்கள் இரவு முழுதும் பனியினால் மூடப்பட்டு இருக்கும்.

இப்பொழுது நதிகளில் ஜலம் ஆவியால் மூடப்பட்டிருக்கிறது. கரைகளிலுள்ள குன்றுகள் பனியால் நனைந்திருக்கின்றன. இப்படிப்பட்ட காலத்தில் பரதன் உன்னைப் பிரிந்திருக்கையால் துக்கித்து உன்னிடத்திலுள்ள உண்மையான பக்தியால் தனக்குக் கிடைத்த ராஜ்ஜியத்தையும் மற்றுமுள்ள ஐசுவர்யங்களையும் திரஸ்கரித்து உன்னைப்போல் சடைகளையும் மரவுரிகளையும் தரித்து அயோத்தியில் தவம் செய்கின்றனன். அவன் இந்த வேளையில் ஸ்நானம் செய்யும்பொருட்டு ஸரயூ நதிக்குப் போய்க்கொண்டிருப்பான், இளவயதும் அழகும் சிறந்த குணங்களும் தர்மங்களும் பராக்கிரமும் தைரியமும் உடைய பரதன் உன்பொருட்டு வருந்தி உன்னைப் போலவே முனிவேடம் தரித்துக் காய்கிழங்குகளைத் தின்று வெறுந்தரையில் படுத்துக் கஷ்டத்தை யநுபவிக்கின்றனனே! இதென்ன ஆச்சரியம்!

"ஆடவர்கள் பெரும்பாலும் தாயின் சுபாவத்தை யநுஸரிப்பார்களேயன்றித் தந்தையின் சுபாவத்தை யநுஸரிக்கமாட்டார்கள்" என்கிற ஒரு பழமொழி உண்டல்லவா? ஆனால் பரதன் இதற்கு நேர்மாறாகத் தந்தையின் சுபாவத்தையே யநுசரித்து அப்பழமொழியைப் பொய்யாக்கிவிட்டனன். இப்படிப்பட்ட தர்மாத்மாவான பரதனின்

அன்னையான கைகேயிக்கு இப்படிப்பட்ட குரூரசுபாவம் எப்படி உண்டாயிற்று?" என்றனன்.

இங்ஙனம் லக்ஷ்மணன் கூறுகையில் ராமன் கைகேயியை நிந்தித்ததற்குப் பொறுக்க முடியாமல் லக்ஷ்மணனை நோக்கி "என்னப்பனே! நீ எவ்விதத்திலும் கைகேயியை நிந்திக்கலாகாது. இது வரையில் சொல்லிவந்த பரதனது சமாசாரத்தையே சொல்லுவாயாக. எனக்குப் பரதனை நினைக்கும்போதெல்லாம் மனம் மிகவும் வருத்தமடைகிறது. அவனது வார்த்தைகள் இனியவைகளும் மதுரங்களுமாகி என் மனதைவிட்டுப் பிரியாதிருக்கின்றன. அவற்றை நினைக்கும்போதே என் மனம் மிகவும் சந்தோஷமடைகின்றது. லக்ஷ்மணா! நான் பரதனோடும் சத்துருக்கனனோடும் உன்னோடும் சீதையோடும் கூடி ஒன்றாக எப்பொழுது வாழப்போகிறேனோ?" என்றனன். இங்ஙனம் கூறிக்கொண்டே ராமன் லக்ஷ்மணனோடும் சீதையோடும் கோதாவரியில் ஸ்நானம் செய்தனன். பிறகு அவ்விருவரும் பிதிர் தேவதைகளுக்கு ஜல தர்ப்பணம் செய்து சூரியனையும் ஸந்தியை முதலான தேவதைகளையும் மனவூக்கத்துடன் மந்திரங்களைச்சொல்லி உபஸ்தானம் செய்தனர்.

பதினாறுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## பதினேழாவது ஸர்க்கம்.

### சூர்ப்பணகை யென்னும் அரக்கி ராமாச்சிரமம் வந்து தன்னை மணக்கும்படி ராமனை வேண்டுதல்.

ஸ்நானம் செய்த பின் ராமன் லக்ஷ்மணனோடு கூட பிரம்மயக்ஞம் முதலிய காரியங்களை நிறைவேற்றிப் பர்ணசாலையுள் பிரவேசித்தனன். அங்கு ராமன் மகரிஷிகளால் பூஜிக்கப்பட்டுச் சீதையுடன் உட்கார்ந்து சித்திராநக்ஷத்திரத்துடன் கூடின சந்திரன்போல் பிரகாசித்துக் கொண்டிருந்தனன்.

அச்சமயம் சூர்ப்பணகை யென்கிற ஒரு ராக்ஷசி அவ்விடம் வந்து ராமனது அழகைக்கண்டு காமமோகம் கொண்டனள். ராவணன் என்கிற ராக்ஷசனுடைய தங்கையான அந்த சூர்ப்பணகை மிகவும் கோரமான அவயவங்களும் உருவமும் உடையவளாய் ராமனை நோக்கி "ஓய்! நீ தவசிகள்போல் சடை தரித்து இருக்கின்றனை. காமுகன்போல் மனைவியுடன் கூடி யிருக்கின்றனை. மேலும் க்ஷத்திரியனைப்போல் வில்லையும் பாணங்களையும் பிடித்திருக்கின்றனை. இப்படிப்பட்ட நீ என்னகாரியம் கொண்டு ராக்ஷசர்கள் திரிகிற இந்த வனத்திற்கு வந்தனை? இவற்றையெல்லாம் எனக்கு உள்ளபடி சொல்லவேண்டும்" என்றனள்.

ராமன் கபடபுத்தி யில்லாதவனுகையால் தன் ஊரையும் பேரையும் உண்மையாய்க்கூறி, தான் சீதையுடனும் லக்ஷ்மணனுடனும் வனவாசம் செய்ய நேர்ந்த காரணம் முதலியவற்றை யெல்லாம் உள்ளபடியே சொல்லி, அவ்வரக்கியை நோக்கி "நீ யார்? உன் உருவத்தை நோக்குங்கால் நீ ராக்ஷசியாகத் தோன்றுகின்றனை. நீ இங்கு எதற்காக வந்தனை? நீயும் உள்ளபடி யதார்த்தமாக உன் விருத்தாந்தங்களை யெல்லாம் சொல்லவேண்டும்." என்று வினவினன்.

அந்த ராக்ஷசி மிகவும் காமவெறி மிகப்பெற்று "ராமா! நான் உள்ளபடி என் விஷயத்தைச் சொல்லுகிறேன் கேள். நான் நினைத்தபடி வடிவங்கொள்ளவல்ல சூர்ப்பணகை யென்னும் பெயர் கொண்ட ராக்ஷசி; என் பெயர் செவிப்பட்ட மாத்திரத்தில் எவரும் பயப்படுவார்கள். நான் ஒருத்தியாகவே இக்காடு முழுவதும் திரிந்துகொண்டிருக்கிறேன். அரக்கர் தலைவனுன ராவணன் எனக்குத் தமையன். மிகவும் நித்திரையில் ஆழ்ந்திருக்கிறவனும் மிகுந்த பலமுடையவனுமான கும்பகர்ணன் என்பவனும் என் சகோதரனே. மிகுந்த தருமசுபாவமுடையவனும் ராக்ஷச சேஷ்டைகள் ஒன்றும் இல்லாதவனுமான விபீஷணனும் என் உடன் பிறந்தவனே.

யுத்தங்களில் பராக்கிரமமுடைய கரதூஷணர்கள் எனக்கு உடன் பிறந்தவர்களென்று பயப்பட வேண்டாம். நான் அவர்கள் எல்லாரையும் மீறி என்னிஷ்டப்படி நடந்து கொள் பவள்; நான் இப்பொழுது உன்னைக் கணவனாகப் பெற விரும்புகிறேன். 'சீதை எனக்கு இருக்கின்றாளே' என்ன வேண்டாம். நான் மகாபிரபாவ முடையவள். என்னிஷ்டப் படி பலத்தைப்பெற வல்லவள், நினைத்தபடி வரவும் போகவும் திறமையுடையவள். ஆகையால் எனக்கு நீ வெகு காலம் கணவனாய் இருப்பாயாக. இந்த சீதையைக்கொண்டு நீ என்ன இன்பமடையப் போகின்றனை? விகாரமான குரூபமுடைய இவள் உனக்குத் தகுந்தவளன்று. துஷ்டாசார முடைய வளும் பயங்கரமாய் இருப்பவளும் தாழ்ந்த வயிறுடையவளு மாகிய இந்த மானிட ஸ்திரீயை உன் தம்பியோடு கூடப் புசித்து விடுகின்றனன். நானே உனக்குத் தகுந்தவளாதலால் என்னை மனைவியாக ஏற்றுக்கொள். அழகனே! நீ என்னுடன் கூடி மலைச்சிகரங்களையும் நானாவித வனங்களையும் பார்த்துக் கொண்டு தண்டகாரணியத்தில் விளையாடிக் களித்திருப்பா யாக." என்றனள்.

பதினேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## பதினெட்டாவது ஸர்க்கம்

### லக்ஷ்மணன் சூர்ப்பணகையை அங்கபங்கம் செய்தல்

பிறகு ராமன், காமபாசத்தால் கட்டுண்டு மயங்குகின்ற கண்களையுடைய சூர்ப்பணகையைப் பார்த்து "அம்மே! நான் ஒருத்தியை ஏற்கனவே மணம் புரிந்திருக்கின்றனன்; 'அவளை விட்டுத் தொலைக்கலாகாதா?' என்பாயாயின் அவள் எனக்குமிகவும் பிரியமானவள். 'ஆயினும் பல மனைவிகள் இருக்கலாகாதோ?' என்பாயாயின் உன்னைப்போன்ற பெரும் பெண்டிர்களுக்குச் சக்களத்தி இருப்பது மிகவும் துக்கத்திற் கிடமாய் இருக்கும். இதோ சதாசாரமும் அழகுமுடைய

என் தம்பி லக்ஷ்மணன் இருக்கின்றான். அவனுக்கு இப்பொழுது இவ்விடம் மனைவி இல்லை. மிகவும் பராக்கிரமசாலியான இவன் வெகுநாளாய் மனைவியின் சுகத்தை அநுபவிக்கவில்லை. ஆகையால் மிகவும் அழகும் யௌவனமும் உடைய இவனே உன் உருவத்திற்குத்தகுந்த கணவனாவான். சூர்ப்பணகே! உன் இடையின் பின்புறம் மிகவும் அழகாய் இருக்கின்றது. உன் கண்களோ விசாலமாய் இருக்கின்றன. நீ என் தம்பியை யடைந்தால் சக்களத்தியில்லாமல் சுகமாய் இருக்கலாம்'' என்றனன்.

சூர்ப்பணகை மிகவும் காமமோகம் கொண்டிருந்ததால் ராமன் சொன்னதை உண்மையென்று நம்பி லக்ஷ்மணனைப் பார்த்து "எனது சரீரம் உஷ்ணகாலத்தில் குளிர்ந்தும் குளிர் காலத்தில் உஷ்ணமாகவும் இருக்கும். நான் கணவனுக்கு உண்மையாக நடந்து உத்தம மனைவியாய் இருப்பேன். நான் உன் அழகுக்குத் தகுந்த மனைவியாய் இருக்கின்றேன். நீ என்னுடன்கூடிச் சுகமாக இத்தண்டகாரணியம் முழுதும் விளையாடிக்கொண்டிருப்பாயாக'' என்றனள்.

லக்ஷ்மணன் புன்னகை தோற்ற அவ்வரக்கியை நோக்கி "தாமரைப்பூவைப்போன்ற தேக காந்தியுடையவளே! நானோ ராமனுக்கு வேலைக்காரன். நீ எனக்கு மனைவியானால் என்னைப் போல் நீயும் வேலைக்காரியாக நேரிடும். இங்ஙனம் வேலைக்காரி ஆவதற்கு ஏன் விரும்புகின்றனை? ஆகையால் நீ எனக்கு எஜமானனான ராமனைக் கைப்பற்றி அவனுக்கு இளைய மனைவியாய் இருந்து உன் கருத்தெல்லாம் ஈடேறப்பெறுவாயாக. விகாரமான ரூபமுடையவளும், தாழ்ந்த இடையுள்ளவளும், வயது சென்றவளுமான இந்தச் சீதையைவிட்டு இவன் உன்னையே மனைவியாகப்பெறுவான். சர்வாங்க சுந்தரியான உன்னைவிட்டு எவன் தான் மானிட ஸ்திரீயிடத்தில் மனஞ் செல்லப் பெறுவான்?'' என்றனன்.

சூர்ப்பணகை லக்ஷ்மணன் கூறியவை பரிகாச வார்த்தைகள் என்பதையறியாதவளாய் உண்மையென்வே நினைத்துக் காமவெறிகொண்டு, மெய்மறந்து ராமனைநோக்கி "நீ விகார ரூபமுடைய இந்தச் சீதையை மனைவியாகப் பெற்று அதனுல் என்னைப் பொருள்படுத்தவில்லை. இப்பொழுதே இவளைப் பிடித்துத் தின்றுவிடுகிறேன். பிறகு சக்களத்தியின் பற்றில்லாமல் உன்னுடன் சுகமாக விளையாடிக்கொண்டிருப்பேன்." என்று கூறிக்கொண்டே மிகுந்த கோபத்துடன் சீதையின் மேல் பாய்ந்துவந்தனள்.

ராமன் மிகுந்த கோபாவேசத்துடன் குறுக்கே நின்று தடுத்து லக்ஷ்மணனைப்பார்த்து "லக்ஷ்மணு! துஷ்டர்களோடு என்றும் பரிகாசம் வைத்துக்கொள்ளலாகாது. சீதை இவளால் பயப்பட்டுத் துடிப்பதைப் பார். இவ்வரக்கியை அங்கபங்கம் செய்வாயாக." என்றனன்.

உடனே லக்ஷ்மணன் கத்தியை எடுத்து மிகுந்தகோபத்துடன் அவ்வரக்கியின் மூக்கையும் காதுகளையும் அறுத்துவிட்டனன். அவள் விகாரமான குரலுடன் கூச்சலிட்டுக்கொண்டு வந்தவழியே காட்டிற்கு வேகமாக ஓடிச்சென்றனள். அவள் தன் உடன்பிறந்தவனை கரனைத் தேடிக்கொண்டு ஜனஸ்தானத்தில் நுழைந்து ஆகாசத்தினின்று இடிவிழுவது போல் கபீலென்று அவனெதிரில் தரையில் வீழ்ந்தனள். அவள் பயத்தினுல் நினைவுதப்பி ரத்தத்தினுல் சரீரம் முழுதும் நனைந்து கரனிடம் ராமன் சீதையோடுகூட வனத்திற்கு வந்திருப்பது, தன்னை விரூபமாக்கினது முதலான விருத்தாந்தங்களை யெல்லாம் சொல்லினள்.

பதினெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

## பத்தொன்பதாவது ஸர்க்கம்.

## சூர்ப்பணகை மூலமாகச் செய்தியறிந்த கரன் ராமனைத் தகர்க்க ராக்ஷசர்களை அனுப்புதல்.

கரன் சூர்ப்பணகையை நோக்கி "எவன் உன்னை இப்படி அங்கபங்கம் செய்தவன்? நீயோ மிகுந்த வலிமைவாய்ந்தவளும் நினைத்தபடி வடிவங்கொள்ளக் கூடியவளுமாய் இருக்கின்றனை. மிகுந்த பலமுள்ள யமனைப்போன்ற உனக்கு எவன் இத்தீங்கை இழைத்தனன். எவன் உன்னை இப்படிப் பட்ட பரிபவத்திற்கு ஆளாக்கினனோ அவனை இப்பொழுதே பாணங்களை யெய்து கொன்றுவிடுகின்றனன். தேவதைகளாவது கந்தருவர்களாவது பிசாசர்களாவது ராக்ஷசர்களாவது அவனை காப்பாற்றமுடியாது. ஆகையால் யாவன் உன்னை இங்ஙனம் பரிபவப்படுத்தினனோ அவனை நீ எனக்கு உடனே சொல்லவேண்டும்" என்றனன்.

சூர்ப்பணகை கண்ணீர்ப் பெருக்குடன் அவனைப் பார்த்து "மிகுந்த யௌவனமும் அழகும் பலமும் பொருந்தி மரவுரிகளையும் கிருஷ்ணாஜினத்தையும் தரித்துக் காய் கிழங்குகளை ஆகாரமாகக்கொண்டு ஜிதேந்திரியர்களாகித் தாபஸ வேஷத்துடன் கூடியவர்களிருவர்; அவர்களுக்கு ராமலக்ஷ்மணர்களென்று பெயர். கந்தர்வ ராஜனுக்கொப்பாகி ராஜ லக்ஷணங்களெல்லாம் அமைந்திருக்கின்றனர். அவர்களிடையில் மிகுந்த சர்வாலங்கார பூஷிதையாய்ச் சிறந்த அழகும் யௌவனப் பருவமுங்கூடின சீதையென்கிற ஒரு பெண்மணி இருக்கின்றனள். அவள் நிமித்தமாக அவ்விருவரும் ஒன்றுசேர்ந்து என்னை அநாதையைப்போல இப்படிப்பட்ட தீங்கை விளைவித்தனர். கெடுநடத்தையுடைய அந்த சீதையின் உதிரத்தையும் யுத்தத்தின் முடிவில் அடியுண்ட அந்த ராம லக்ஷ்மணர்களுடைய உதிரத்தையும் நுரையோடுகூடப் பானம் செய்ய விரும்புகின்றேன்." என்றனள்.

கரன் உடனே மிகுந்த கோபாவேசங்கொண்டு மகா பலசாலிகளான பதினான்கு ராக்ஷசர்களைப் பார்த்து "இரண்டு மனிதர்கள் ஆயுதங்களைப் பிடித்து ஒரு பெண் பிள்ளையைக் கூட அழைத்துக்கொண்டு தண்டகாரணியத்தில் வசிக்கின்றனராம். அவர்கள் மூவரையும் கொன்றுவிடவேண்டும். சூர்ப்பணகை அவர்களது ரத்தத்தைப் பானம் செய்வாள். சீக்கிரம் சென்று கொல்லுங்கள்" என்று உத்தரவிட்டனன்.

இங்ஙனம் கட்டளையிடப்பெற்ற அப்பதினான்கு ராக்ஷசர்களும் சூர்ப்பணகை வழிகாட்ட ராமனிருக்கும் இடத்திற்குப்போயினர். பிறகு அந்த ராக்ஷசர்கள் கூரான பாணங்களையுடையவராயினும் மிகுந்த ஒளியுடன் எதிர்ந்து வருகின்ற ராமனை நோக்கிப் பயப்பட்டு உடனே அவனை அடிக்கமுடியாமல் வெறுமனே இருந்தனர்.

பத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## இருபதாவது ஸர்க்கம்.

### ராக்ஷசர்கள் ராமனால் அடியுண்டலும் சூர்ப்பணகை பயந்து கரனிடம் திரும்பிப்போதலும்.

பிறகு சூர்ப்பணகை ராமனது ஆச்சிரமத்திற்கு வந்து சீதையையும் ராமலக்ஷ்மணர்களையும் அந்த ராக்ஷசர்களுக்குக் காட்டினள். ராமன் அவர்களைக்கண்டு லக்ஷ்மணனை நோக்கி "லக்ஷ்மணா! நீ கொஞ்சநேரம் சீதையின் அருகில் இருந்து இவளைப் பாதுகாத்துக்கொண்டிருப்பாயாக. நான் இப்பொழுது இச்சூர்ப்பணகையைக் காக்கும்பொருட்டு வந்திருக்கிற இந்த ராக்ஷசர்களைக் கொன்று வருகிறேன்" என்றனன்.

லக்ஷ்மணனும் ராமனது கட்டளைப்படி நடந்துகொண்டனன். ராமன் ஸ்வர்ணரேகைகளால் அலங்காரம் செய்யப்

பட்ட வில்லை நாணேற்றி அந்த ராக்ஷசர்களை நோக்கி "அரக்கர்களே! நாங்கள் ராஜகுமாரர்களாய் இருந்தும் தவவேடம் தரித்துக் காட்டில் தனிமையாய் இருக்கிறோம். இப்படிப் பட்ட எங்களை நீங்கள் ஏன் இம்சிக்கிறீர்கள்? நான் ரிஷிகளின் வேண்டுகோளின்படி அவர்களை இம்சிக்கும் பாபிஷ்டர்களான உங்களையெல்லாம் வதம் செய்வதற்காகவே பாணங்களையும் ஆயுதங்களையும் தரித்து இங்கு வந்துள்ளேன். உங்களுக்குப் பிராணன்களில் விருப்பமுளதாயின் திரும்பி ஓடிப்போவீர்களாக" என்றனன்.

இதைக்கேட்ட அப்பதினான்கு ராக்ஷசர்களும் குலுங்க நகைத்து "நீயோ ஒரு மானிடன். தனியாய் இருக்கின்றாய் எங்கள் தலைவனான கரனுடைய கோபத்திற்குப் பாத்திரமான உன்னை இப்பொழுதே நமனுலகிற்கு அனுப்பப்போகிறோம்" என்று கூறியவண்ணம் தங்கள் கையிலிருந்த சூலாயுதங்களை ராமன்மேல் எய்தனர். அப்பதினான்கு சூலங்களையும் ராமனது பதினான்குபாணங்கள் இடையிலேயே கண்டித்துவிட பிறகு பதினான்கு நாராச பாணங்களையெடுத்து அவர்கள் மேல் பிரயோகித்தனன். அப்பாணங்கள் வேகமாகச்சென்று அந்த ராக்ஷசர்களின் மார்பைப்பிளந்து அவர்களுடைய உயிரைக் கொள்ளை கொண்டன.

இங்ஙனம் ராக்ஷசர்கள் ராமபாணங்களினால் உயிரிழந்து தரையில் விழுந்ததைக்கண்ட சூர்ப்பணகை மிகுந்த பயத்தினால் பயங்கரமான கூச்சலிட்டுக்கொண்டு கண்ணீர் பெருக்கிய வண்ணம் மீண்டும் கரனிடம் சென்று ராக்ஷசர்களனைவரும் அடிபட்டு மாண்டது முதலான விருத்தாந்தங்களையெல்லாம் அவனிடம் கூறினாள்.

இருபதாவது ஸர்க்கம் முற்றிற்று.

## இருபத்தோராவது ஸர்க்கம்.

### சூர்ப்பணகை கரனை இடித்துக் கூறுதல்.

செய்தி கூறித் தரையில் விழுந்து புலம்பும் சூர்ப்பணகை பின்னும் கரனை நோக்கி "நீ அனுப்பின பதினான்கு ராக்ஷசர்களும் ராம பாணங்களினால் ஒருநொடிப் பொழுதில் உயிர் இழந்தனர். ராமனது பராக்கிரமத்தைப் பார்க்கையில் எனக்கு மிகுந்த பயம் உண்டாயிற்று. நான் மிகவும் பயமுற்று வருந்தியிருக்கின்றனன். எங்குப் பார்த்தபோதிலும் ராமனை இருக்கிறாப்போல் எனக்குத்தோன்றி மிகவும் பயமாக இருக்கின்றது. ஆகையால் மீளவும் உன்னையே சரணம் அடைகின்றேன். ராக்ஷச சிரேஷ்டனே! என்னிடத்தில் உனக்குத் தயை இருக்குமாயின், உனக்கு ராமனோடு சண்டை செய்யும் திறமை இருக்குமாயின், இராமனால் அடியுண்டு மாண்டொழிந்த அரக்கர்களிடம் மனவிரக்கம் உனக்கிருக்குமாயின், உடனே அந்த ராமனை நீயே சென்று கொல்வாயாக. அப்படி நீ ராமனைக்கொல்லாவிடில் நான் இங்ஙனம் காது மூக்குகள் அறுப்புண்டு மானமில்லாதவளாகி உன் எதிரிலேயே பிராணனை விடுகின்றேன்.

ராமனுடைய தீரத்தைக் காணும்போது உன்னால் அவனை வெல்லமுடியாதுபோல் எனக்குத் தோன்றுகிறது. அவர்களோ கேவலம் மானிடர்கள். அப்படிப்பட்டவர்களைக் கொல்லமுடியாத நீயும் ஒரு வீரனோ? பொய்யான பராக்கிரமத்தை ஏறிட்டுக்கொண்டு ராக்ஷசர் குடியில் பிறந்தும் அதற்கேற்ற வீரியங்களில்லாமையால் வமிசத்தைக் கெடுக்கவந்து பிறந்தவனாகிறாய். அற்பமான வீரியமும் பலமுமில்லாத முட்டாளாகிய நீ பயங்கரமான இஜ்ஜனஸ்தானத்தில் வாசம் செய்வது எப்படித்தகும்? நீ ஆண் பிள்ளையானால் உடனே சென்று எனக்கு விரோதியான ராமனைக் கொல்வாயாக. இல்லாவிடில் உன் பந்துக்களுடன் இவ்விடத்தை

விட்டுத் தொலைந்து போவாயாக" என்று கூறிப் புலம்பிக் கைகளால் வயிற்றில் புடைத்துக்கொண்டு ரோதனம் செய்தனள்.

இருபத்தோராவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## இருபத்திரண்டாவது ஸர்க்கம்.

### கரன் பதினாலாயிரம் ராக்ஷசர்களுடன் கூடி யுத்தத்திற்கு வருதல்.

இங்ஙனம் ராக்ஷசர்களுக்கிடையில் சூர்ப்பணகை தன்னை அவமானப் படுத்துகையில் கரன் மிகுந்த கோபத்துடன் சூர்ப்பணகையை நோக்கி "உனக்கு நேர்ந்த அவமானத்தால் எனக்குண்டான கோபம் இப்பொழுது அடக்க முடியாததாய் இருக்கின்றது. நீ உன் கண்ணீரைத் துடைத்துக்கொண்டு கவலையை ஒழிப்பாயாக. நான் இப்பொழுதே சென்று அந்த ராம லக்ஷ்மணர்களை மாய்த்து விட்டு மறுவேலை பார்க்கின்றனன். அவர்களது சிவந்த உஷ்ணமான ரத்தத்தை நீ பானம் செய்வாயாக" என்று கூறி அவளைத் தேற்றினன்.

இங்ஙனம் கரன் கூறினதும் சூர்ப்பணகை அவனைப் புகழ ஆரம்பித்தனள். உடனே கரன் தன் சேனாதிபதியான தூஷணனைப் பார்த்து "நீ உடனே சென்று பராக்கிரமமுடைய நமது வீரர்களான பதினாலாயிரம் ராக்ஷசர்களையும் யுத்தத்திற்குப் புறப்படுமாறு சித்தப் படுத்துவாயாக; எனது ரதத்தையும் வில்லையும் பலவகைப்பட்ட பாணங்களையும் கத்திகளையும் கூர்மையுள்ள நானாவித ஈட்டிகளையும் சித்தப்படுத்திக்கொண்டு வருவாயாக. நான் ராமனைக் கொல்லப் புறப்படப்போகிறேன்" என்றனன்.

உடனே தூஷணன் ரதத்தைக்கொண்டு நிறுத்த, கரன் அதில் ஏறிக்கொண்டவுடனே அவனைப் பதினாலாயிரம்

ராக்ஷசர்கள் கணக்கற்ற ஆயுதங்களைத் தரித்தவண்ணம் பின்பற்றினர். கரன் பெரிய வில்லைத்தரித்துப் பயங்கரமான கவசங்களைப் பூண்டு மிகக்கொடிய ஆயுதங்களை ஏந்தித் தன்னைச் சூழ்ந்து நிற்கும் ராக்ஷசர்களைப் பார்த்து "புறப்படு வீர்களாக" என்று கட்டளையிட்டனன். ராக்ஷச சைன்னியம் மிகுந்த கோலாகலத்துடன் ஜனஸ்தானத்தினின்றும் ராமனது ஆச்சிரமத்தை நோக்கிப் புறப்பட்டது. கரனுடைய ரதம் சாரதியால் சீக்கிரமாக நடத்தப்பட்டுப் பெருமுழக்கத் தினால் திசைகளையும் திசைகளின் மூலைகளையும் நிறைத்தது. கரன் தன் தேர்ப்பாகனை வெகு சீக்கிரமாக ரதத்தைச் செலுத் தும்படி ஆஞ்ஞாபித்தனன்.

இருபத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## இருபத்துமூன்றாவது ஸர்க்கம்.

## கரன் யுத்தத்திற்குப் புறப்படுகையில் அவசகுனங்கள் புலப்படுதல்.

ராக்ஷச சைன்னியம் ஜனஸ்தானத்தினின்றும் புறப் படும்போது ஆகாயத்தில் மேகம் இரத்தமழையைப் பெய் தது. கரனுடைய ரதத்தில் பூட்டியிருந்த குதிரைகள் வழி யில் தடுக்கிறாற்போல் விழுந்தன. ஒரு பெரிய கழுகு பயங் கரமான உருவத்துடன் துவஜத்தின்மேல் வந்து உட்கார்ந் தது. மிருகங்களும் பக்ஷிகளும் அங்கு வந்து விகாரமான சப்தங்களைச் செய்தன. செம்மேகங்கள் ஆகாயத்திலிருந்து ரத்தம்போன்ற ஜலத்தைப் பெய்தன. இருள் பயங்கரமாகி மயிர்க்கூச்சலை விளைத்துக்கொண்டு எங்கும் நிறைந்து நின்றது. திக்குகளும் விதிக்குகளும் பிரகாசமில்லாமலிருந் தன. நரிகள் சைன்னியத்திற்கு எதிரில் வந்து தீயைக் கக்குகின்ற முகங்களுடன் ஊளையிட்டன. இரும்புத் தடி போல் கறுத்துத் தலையற்ற உடலொன்று சூரியனுக்கருகில் புலப்பட்டது. பருவகாலமல்லாத காலத்தில் ராகு சூரியனை

விழுங்கினன். காற்று மிக்க வேகத்துடன் பிரதிகூலமாக வீசிற்று. சூரியன் ஒளியற்றவனாயினன். இரவல்லாத பகலிலும் நக்ஷத்திரங்கள் மின்மினிப் பூச்சிகள்போல் பிரகாசிக்கத் தொடங்கின. மரங்கள் பூவும் காயுமில்லாமல் தோன்றின. அந்த ராக்ஷச சேனையின்மேல் காற்றில்லாமலே மேகம் போல் புகைவர்ணமுள்ள தூள் கிளம்பிற்று. குறைக் கொள்ளிகள் பயங்கரமான காட்சியுடையனவாகிப் பெரிய சப்தத்துடன் வீழ்ந்தன.

கரனது இடது புஜம் துடித்தது. அவனது கண்டத் தொனியும் தழதழத்துத் தடைபட்டு நின்றது. அவன் நாற்புறமும் சுற்றிப் பார்க்கையில் காரணமின்றி அவன் கண்களில் நின்றும் நீர்கள் பெருகின. இத்தகைய அவசகுனங்களைக் கண்டும் அவன் சிறிதும் பயப்படாமல் யுத்தம் செய்ய வேண்டுமென்கிற ஒரே எண்ணமுடையவனாகித் தன் சேனையை நோக்கி "நான் இவ்வித அவசகுனங்களைச் சிறிதும் பொருள்படுத்தமாட்டேன். நான் கோபித்துக்கொள்வேனாயின் கூரான பாணங்களைவிட்டு நக்ஷத்திரங்களையும் கூட ஆகாயத்தினின்றும் கீழே விழச் செய்வேன். நான் இப்பொழுது அந்தப்பொல்லாத ராமலக்ஷ்மணர்களைக் கொல்லாமல் திரும்ப மாட்டேன். சூர்ப்பணகையும் அவர்களது ரத்தத்தைக் குடித்துத் தன் கருத்தை ஈடேற்றிக் கொள்வாளாக. இது வரை எனக்கு யுத்தத்தில் அபஜயம் உண்டானதில்லை. இது உங்களுக்கும் தெரியுமன்றோ? நான் கோபங்கொள்வேனாயின் இந்திரனையும் வதை செய்துவிடுவேன். அப்படிப்பட்ட சாமர்த்தியமுடைய எனக்கு இந்த அற்பர்களான ராமலக்ஷ்மணர்கள் எம்மாத்திரம்?" என்றனன். ராக்ஷசர்களெல்லாரும் அவன் சொன்ன வார்த்தைகளைக்கேட்டு யமபாசத்திற்கு வசப்பட்டவர்களாகையால் சந்தோஷம் அடைந்தனர்.

மகாநுபாவர்களான ரிஷிகளும், தேவதைகளும், கந்தருவர்களும், சித்தர்களும், சாரணர்களும் யுத்தத்தைப் பார்க்க

விரும்பி அவ்விடம் வந்து ஆகாயத்தில் ஒன்று கூடி "ராம னுக்கு வெற்றியுண்டாகுக" என்று ராமனை வாழ்த்தினர்.

பயங்கரமான சேனைகளால் சூழப்பட்ட கரனுடன் சியேனகாமி, பிருதுக்கிரீவன், யஜ்ஞசத்துரு, விஹங்கமன், துர்ஜயன், கரவீராக்ஷன், பருஷன், காலகார்முகன், மேக மாலி, மகாமாலி, சர்ப்பாஸ்யன், ருதிராசனன் ஆகிய மகா பராக்கிரமசாலிகளான பன்னிரண்டு ராக்ஷசர்களும் புறப் பட்டனர். மாகபாலன், ஸ்தூலாக்ஷன் பிரமாதி, திரிசிரன், என்னும் இந் நான்கு சேனாதிபதிகள் தூஷணனைச் சுற்றிப் புறப்பட்டனர். அப்பெருஞ் சேனைகள் ராம லக்ஷ்மணர் களைக் கிட்டிவந்தன.

இருபத்து மூன்ருவது ஸர்க்கம் முற்றிற்று

---

## இருபத்துநான்காவது ஸர்க்கம்.

### ராமன் யுத்தத்திற்குச் சித்தனுய் இருத்தலும், ராக்ஷச சேனைகள் ராமனைக் கிட்டுதலும்.

முன்னஞ்சொன்ன உத்பாதங்கள் உண்டாவதைக் கண்ட ராமன் லக்ஷ்மணனை நோக்கி "மஹாபாஹுவே! ராக்ஷசர் களின் முடிவு காலத்தைக் குறிக்கும்படியான பயங்கர நிகழ்ச்சிகளைக் கண்டாயல்லவா? இப்பொழுது வனசாரிகளான பக்ஷிகள் சப்தஞ் செய்வதைப் பார்க்கையில் முன்பு நமக்குப் பயமும் பிராண சந்தேகமும் உண்டாகுமென்று தோன்று கிறது. இப்பொழுது ராக்ஷசர்களுக்கும் நமக்கும் ஒரு பெரிய யுத்தம் உண்டாகப்போகிறது. லக்ஷ்மணு! என் வலது புஜம் அடிக்கடி துடிப்பதனுல் நமக்கு நிச்சயமாக ஜெயம் உண்டாகப்போகின்றது. உன் முகமும் காந்தி விளங்கப் பெற்றுப் பிரசன்னமாகப் புலப்படுகின்றது. நீ வில்லையும் பாணங்களையும் தரித்துச் சீதையை அழைத்துக்கொண்டு, மரங்களால் மறைக்கப்பட்டு நுழையக் கூடாதிருக்கின்ற குகைக்குள் பிரவேசித்துக் காத்துக்கொண்டிருப்பாயாக.

தாமதம் செய்யாமல் சீக்கிரம் செல்வாயாக. நீயும் இத்தனை ராக்ஷசர்களையும் வதைக்கக்கூடியவன். இருந்தாலும் இப்பொழுது நானே இந்த ராக்ஷசர்கள் எல்லாரையும் கொல்லும்படி நினைத்திருக்கிறேன்" என்றனன். லக்ஷ்மணன் அவ்விதமே சீதையுடன் குகையுள் நுழைந்தனன்.

ராமன் உடனே சரீரத்தில் கவசங்களைத் தரித்துத் தன் பெரிய வில்லையும் பாணங்களையும் எடுத்துக்கொண்டு அதன் நாண் சப்தத்தினால் திசைகளையெல்லாம் முழங்கச் செய்துகொண்டு அங்கே யுத்தத்திற்குச் சித்தனாக இருந்தனன். அச்சமயம் ஆகாயத்தில் குழுமியிருந்த தேவதைகளும் ரிஷிகளும் 'மகாவிஷ்ணு அசுரர்களை ஜெயிப்பதுபோல் ராமன் யுத்தத்தில் ராக்ஷசர்கள் எல்லாரையும் ஜெயிப்பானாக.' என்று சொல்லிக்கொண்டனர்.

ராமன் அளவில்லாத மிகுந்த தேஜோ விசேஷம் உண்டாகப்பெற்று இருந்தனன். அப்பொழுது ராமனது கோலம் பினாகமென்னும் வில்லைத் தரித்த ருத்திரனைப் போன்று இருந்தது. ராக்ஷச சேனைகள் கொஞ்சம் கொஞ்சமாக ராமனை நெருங்கி கர்ஜனைகளையும் நாண் சப்தங்களையும் குதித்தலையும் செய்துகொண்டு சூழ்ந்து வந்தன. அவற்றின் பயங்கரமான சப்தங்களைக் கேட்டு அவ்வனத்திலுள்ள மிருகங்கள் மிகவும் பயந்து திரும்பிப் பாராமல் வேறு இடத்திற்கு ஓடிப்போயின.

ராமன் தன்னைச் சூழ்ந்து வருகிற கரனுடைய சேனைகளைக்கண்டனன். உடனே தன் கோதண்டத்தை எடுத்துப் பிடித்து நாணேற்றி பாணங்களைப் பூட்டி சமஸ்த ராக்ஷசர்களையும் கொல்வதற்காகப் பெருங்கோபத்தை ஏறிட்டுக்கொண்டனன். அந்த ராமனைப் பார்த்து வனதேவதைகள் பயந்து ஓடிப்போயினர். சமஸ்த பூதங்களும் பயந்து வருந்தி ஓடிப்போயின.

இருபத்துநான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

## இருபத்தைந்தாவது ஸர்க்கம்

## ராமன் ராக்ஷசர்களை வதம் செய்தல்.

கரன் ராமனைக் கண்டு அவனுக்கெதிரில் ரதத்தை ஓட்டும்படி சாரதிக்கு ஆஞ்ஞாபித்தனன். சாரதியும் அவ்வண்ணமே தேரை ராமன் இருக்கும் இடத்திற்கு ஓட்டினன். கரன் அவனது மந்திரிகளான சியேநகாமி முதலிய ராக்ஷசர்களோடு பெருத்த சிம்மநாதம் செய்துகொண்டு ராமனைச் சூழ்ந்தனன். பிறகு கரன் யுத்தத்திற்குத் தொடங்கி ராமன்மேல் ஆயிரக்கணக்கான பாணங்களைப் பிரயோகித்து அவனை வருந்தச் செய்து பெருத்த கோஷத்துடன் கூச்சலிட்டனன். உடனே சமஸ்தமான ராக்ஷசர்களும் ராமன்மேல் பலவிதமான ஆயுதங்களைப் பெய்தனர். இன்னும் அந்த ராக்ஷசக் கூட்டங்கள் மழை பெய்ய முயன்ற மேகங்கள் பெரிய மலையின்மேல் ஜலதாரைகளை வர்ஷிப்பது போல் ராமன்மேல் பாணவர்ஷங்களைப் பெய்தனர்.

ராமன் சமுத்திரமானது நதிகளின் பிரவாகங்களைத் தன் பெருத்த அலைகளால் தடுப்பதுபோல் அந்த ராக்ஷசர்கள் பிரயோகித்த ஆயுதங்களையெல்லாம் தன் பாணங்களால் தடுத்தனன். இன்னும் ராமன் மிகுந்த பயங்கரமான அரக்கர்களது பாணங்களினால் தைக்கப்பட்ட சரீரமுடையவனாய் இருந்தபோதிலும், பலவாயிரம் இடிகள் ஜ்வலித்துக்கொண்டு விழுந்தபோதிலும் அசையாத பெரிய மலைபோல் சிறிதும் வருத்தமுறாதிருந்தனன். பின்னும் அந்த ராகவன் அவயவங்கள் முழுவதிலும் பாணங்கள் பொற்றிக்கொள்கையில் ரத்தத்தால் நனைந்து சாயங்காலத்து மேகங்களால் சூழப்பட்ட சூரியன்போல் பிரகாசித்துக்கொண்டிருந்தனன். வானத்தில் நின்றுகொண்டிருந்த தேவதைகளும் ரிஷிகளும் சித்தர்களும் ராமன் ஒருவன் பலவாயிரம் அரக்கர்களால் சூழப்பட்டிருப்பது கண்டு திடுக்கிட்டிருந்தனர்.

ராமன் மண்டலாகாரமாக வில்லை வளைத்து அர்த்தசந்திர பாணங்களை நூறு நூறாகவும் ஆயிரம் ஆயிரமாகவும் குறிதப்பாதபடி அவலீலையாகப் பிரயோகித்து ராக்ஷசர்களை வதைத்தனன். அவனது வில்லினின்றும் உக்கிரங்களும் எண்ண முடியாதவைகளுமான பாணங்கள் வெளிப்பட்டு அரக்கர்களைச் சின்ன பின்னப்படுத்தி அவர்களது விற்களையும் கொடிகளையும், கவசங்களையும், தலைகளையும், கைகளையும், கால்களையும், தொடைகளையும் நூறு நூறாகவும் ஆயிரம் ஆயிரமாகவும் துண்டித்தன. பிறகு ராக்ஷசர்கள் அங்ஙனம் கூரான நுனிகளையுடைய நாலீக பாணங்களாலும், இரும்புப்பாணங்களாலும், கர்ணி பாணங்களாலும் பிளக்கப்பட்டுப் பொறுக்க முடியாமல் பயங்கரமான கூச்சலிட்டுக்கொண்டு உயிரை விட்டனர்.

பின்னும் சில ராக்ஷசர்கள் ராமன்மீது சூலங்களையும் கத்திகளையும், கோடாலிகளையும் மற்றுமுள்ள பல ஆயுதங்களையும் எறிந்தனர். ராமன் அவற்றையெல்லாம் பாணங்களால் தடுத்து யுத்தத்தில் அவர்களைக்கழுத்தறுத்துப் பிராணன்களைத் தொலைத்தனன். மிகுந்த ராக்ஷசர்கள் ராமபாணங்களால் அடிபட்டு மிகவும் வருந்தி 'காக்கவேண்டும். காக்கவேண்டும்' என்று சொல்லிக்கொண்டே கரனிடம் சென்று சரணமடைந்தனர்.

தூஷணன் அவர்களெல்லாரையும் திருப்பி அழைத்துக் கொண்டுபோய் சமாதானப்படுத்தி மிகுந்த கோபத்துடன் ராமன்மேல்பாய்ந்து வந்தனன். அவ்வரக்கர்களின் ஆயுதங்கள் ஏற்கனவே ராமபாணங்களால் நாசமடைந்தபடியால் அவர்கள் பலவகைப்பட்ட மரங்களையும் கற்களையும் ஆயுதங்களாகக்கொண்டு ராமன்மேல் எதிர்த்து ஓடிவந்தனர். மகாபலிஷ்டர்களான ராக்ஷசர்கள் கைகளில் பலவித ஆயுதங்களையும் விற்களையும் ஏந்தி ராகவன்மேல் பாணவர்ஷங்களையும் ஆயுதவர்ஷங்களையும் பெய்தனர். அச்சமயம் ராமனுக்கும்

அவ்வரக்கர்களுக்கும் நடந்த யுத்தம் மிகவும் அற்புதமாகவும் மயிர்க்கூச்சலை விளைக்கும்படி அதிபயங்கரமாகவும் இருந்தது.

ராமன் அவ்வரக்கர்கள்மீது மிகுந்த கோபங்கொண்டு சிம்மநாதம் செய்து மிகவும் பிரகாசிக்கின்ற காந்தர்வாஸ்திரத்தைப் பிரயோகித்து மீண்டும் கூர்மையான பாணங்களை ஆயிரமாயிரமாக விடுத்து பத்துத் திசைகளையும் மூடிவிட்டனன். ராமபாணங்களால் பீடிக்கப்பட்ட ராக்ஷசர்கள் அவன் பயங்கரமான பாணங்களை எடுப்பதையாவது, பாணங்களைத் தொடுத்து விடுவதையாவது வில்லைவளைப்பதையாவது பார்க்க முடியாதிருந்தனர். தாங்கள் பாணங்களால் அடியுண்டு வருந்துவதை மாத்திரம் அறியாதிருக்கவில்லை. ராமபாணங்கள் ஆகாயத்தில் சூரியனோடு கூடி முழுமையும் மறைத்து விட்டன. ராமன் அந்த பாணங்களைக் கக்குவதுபோல் புலப்பட்டுக் கொண்டிருந்தனன்.

ராகவன் கணக்கில்லாத பாணங்களை அங்ஙனம் ஒரே தடவையில் பிரயோகம் செய்த வதிசயத்தினாலும் வேகத்தின் மிகுதியினாலும் ராக்ஷசர்கள் ஒரே காலத்தில் குவியல் குவியல்களாக அவயவங்களறப்புண்டு தரையில் வீழ்ந்தனர். ராமபாணங்களால் துண்டிக்கப்பட்ட தலைப்பாகைகளோடு கூடின தலைகளும், தோள்வளைகளால் அலங்கரிக்கப்பட்ட புஜங்களும், துண்டாக்கப்பட்ட கைகால்களும், பலவாறு பிளக்கப்பட்ட நானாவித குதிரைகளும், மேலான யானைகளும் தேர்களும், அறுபட்ட பலவகைச் சாமரங்களும் விசிறிகளும் குடைகளும், கொடிகளும், துண்டிக்கப்பட்ட விசித்திரமான சூலங்களும் பட்டசங்களும் கத்திகளும் ஈட்டிகளும் இங்குமங்கும் சிதறிக்கிடக்கின்ற கோடாலிகளும் அறுப்புண்ட பாணங்களும் அந்த யுத்த பூமியில் அநேகமாக வியாபித்திருந்தபடியால் பார்க்கப் பயங்கரமாக இருந்தது.

இருபத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

## இருபத்தாறுவது ஸர்க்கம்

## தூஷணாதி ராக்ஷஸ வதம்

இங்ஙனம் ராமன் ராக்ஷஸசேனைகளை அதம் செய்கையில் தூஷணன் ஐயாயிரம் ராக்ஷஸர்களை ராமன்மேல் எதிர்க்கும்படி ஆக்ஞாபித்தனன். அவர்கள் ராமனை நான்கு புறங்களிலும் சூழ்ந்து கொண்டு அவன்மேல் பலவிதமான ஆயுதங்களையும் பாணங்களையும் பொழிந்தனர். ராமன் அவற்றையெல்லாம் வெவ்வேறு பாணங்களால் தடுத்து அந்த ராக்ஷஸ சைன்யத்தின்மேல் முழுவதும் பாணங்களைப் பரப்பினான்.

பிறகு தூஷணன் மிகக் கடுமையான கோபங்கொண்டு இடிகள்போன்ற உக்கிரமான பாணங்களை ராமன்மேல் பரப்பினன். ராமன் தூஷணனது வில்லை ஒரு பாணத்தினால் கண்டித்து நான்கு பாணங்களால் அவனது நான்கு குதிரைகளையும் அறுத்து விழத்தள்ளினன். பிறகு மற்றொரு கூரான பாணத்தினால் சாரதியின் தலையை அறுத்து தூஷணனது மார்பில் மூன்று பாணங்களைப் பிரயோகித்து அவனை வருந்தச்செய்தனன். பிறகு தூஷணன் ஓர் பெரிய இரும்புத் தடியைக் கையிலேந்தி ராமனை எதிர்த்தோடி வந்தனன். ராமன் இரண்டு பாணங்களைப் பிரயோகித்து அவனது புஜங்களைத் துண்டித்தனன். பிறகு இரண்டுகைகளும் அறுப்புண்டு இரண்டு தந்தங்களும் ஒடியப்பெற்ற பெரிய யானைபோல் தரையில் வீழ்ந்தனன். தூஷணன் இங்ஙனம் தரையில் வீழ்ந்ததுகண்டு சமஸ்த பூதங்களும் 'நல்லது நல்லது' என்று ராமனைப் புகழ்ந்தனர்.

அப்பொழுது மஹாகபாலன் ஸ்தூலாக்ஷன் பிரமாதி என்கிற மூன்று ராக்ஷஸர்களும் மிகுந்த கோபாவேசத்துடன் ஒன்றுகூடி ராமன்மேல் எதிர்த்தோடி வந்தனர். அம்மூவரையும் தனித்தனியாகவே ராமன் பாணங்களால் மாய்த்

தனன். இன்னும் அவர்களைத் தொடர்ந்துவந்த ஐயாயிரம் ராக்ஷசர்களையும் ஐயாயிரம் பாணங்களால் ஒரு நொடிப்பொழுதில் யமபுரிக்கு அனுப்பினன்.

இவற்றையெல்லாம் கண்ட கரன் மிகவும் கோபித்துத் தனது இதர சேனாதிபதிகளுடன் கணக்கற்ற அரக்கர்களால் சூழப்பட்டு ராமனை எதிர்த்து வந்தனன். ராமன் யுத்தத்தின் தலையில் நூறு ராக்ஷசர்களை நூறு பாணங்களாலும், ஆயிரம் ராக்ஷசர்களை ஆயிரம் பாணங்களாலும் வதை செய்து கொன்றனன். மிகவும் பயங்கரமான அக்காட்டுப் பிரதேசம் ராக்ஷசர்களனைவரும் அடிபட்டிருக்கையில் ஒரு நொடிப்பொழுதில் மாமிசங்களும் ரத்தங்களும் படிந்து சேறாகப்பெற்று மிகவும் பயங்கரமான நரகம்போலிருந்தது. இப்படியே ராமன் ஒருவனாகவே மகாபலிஷ்டர்களான பதினாலாயிரம் ராக்ஷசர்களையும் கொன்றனன். அந்த யுத்தத்தில் கரன் திரிசிரன் என்ற இரண்டுபேர்களே மிகுந்தனர். இங்ஙனம் தன் சேனைகளெல்லாம் ராமனால் அதமானது கண்டு கரன் ஒருபெரிய தேரில் ஏறிக்கொண்டு பயங்கரமான உருவமுடையவனாகி ராமனை நோக்கி வந்தனன்.

இருபத்தாறுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## இருபத்தேழாவது ஸர்க்கம்

## திரிசிரவதம்.

கரன் ராமனை எதிர்த்துப் போகையில் சேனாதிபதியான திரிசிரன் அவனருகில் சென்று "ஜெயசீலனே! நான் இருக்கும்பொழுது நீ இங்ஙனம் தனியாகச் சண்டைக்குச் செல்லலாகாது. எனக்கு இப்பொழுதே உத்தரவுகொடுப்பாயாக. இந்த யுத்தத்தில் நானாவது ராமனைக் கொன்றுவிடுகிறேன். அல்லது ராமனாவது என்னைக்கொன்று விடட்டும்; ராமன் இறப்பானாயின் நீ சந்தோஷமாக ஜனஸ்தானம்

செல்வாயாக. நான் இறந்துவிட்டால் பிறகு நீயே சென்று ராமனோடு யுத்தம் செய்யலாம்" என்றனன்.

அந்த திரிசிரன் அங்ஙனமே கரனிடம் உத்தரவு பெற்றுக்கொண்டு ரதத்திலேறி மூன்று சிகரங்களோடுகூடின பர்வதம்போல் ராமனை எதிர்த்து வந்தனன். அவன் பெரிய மேகங்கள் ஜலங்களை வேகமாகப் பொழிவதுபோல் பாண மழைகளைப் பெய்வதைக்கண்ட ராமன் சினந்து கொடிய சர்ப்பங்கள் போன்ற பதினான்கு பாணங்களை திரிசிரனுடைய மார்பினில் நாட்டினன். பிறகு ராமன் நான்கு பாணங்களால் திரிசிரனுடைய நான்கு குதிரைகளையும் பின்னும் எட்டு பாணங்களால் அவனது சாரதியையும் அடித்துக் கொன்றனன்.

பிறகு திரிசிரன் உயரக்கிளம்பிச் செல்வதைக்கண்ட ராமன் அவனுடைய மார்பினில் பலபாணங்களைத் தொடுத்து நாட்டுகையில் அவன் மூர்ச்சித்தனன். பின்னும் ராமன் மிகுந்த கோபத்துடன் கூரான மூன்று பாணங்களால் திரிசிரனுடைய மூன்று தலைகளையும் விழத்தள்ளினன். பிறகு கரனது சேனைகளில் அடிபட்டவர்கள் போக மிகுந்த ராக்ஷசர்கள் பெரும்புலியைக்கண்ட மான் கூட்டங்கள்போல் நிற்காமல் ஓடிப்போயினர். அங்ஙனம் ஓடிப்போகும் அரக்கர்களைக் கரன் திருப்பிக்கொண்டுவந்து ராகு சந்திரனைப் பிடிக்கச்செல்வதுபோல் ராமன்மேல் எதிர்த்துச் சென்றனன்.

இருபத்தேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## இருபத்தெட்டாவது ஸர்க்கம்.

### ராமன் கரனுடைய தேர் முதலிய சகலத்தையும் பங்கப்படுத்துதல்.

மகாபராக்கிரமசாலிகளான பதினாலாயிரம் ராக்ஷசர்களும் ஒருவராலும் வெல்லமுடியாத தூஷணனும் திரிசிரனும்

ராமபாணங்களால் மாண்டதைக் கண்ட கரனுக்கு ராமனது பராக்கிரமத்தைப்பற்றிச் சிறிது பயம் உண்டாயிற்று. எனினும் அவன் சிறிதும் பின்வாங்காமல் ராமன்மேல் எதிர்த்துச் சென்று கொடிய பாணங்களைப் பிரயோகித்தனன்.

ராமனும் பொறிகளைக் கக்குகிற அக்கினிபோல் சகிக்க முடியாத பாணங்களைப் பிரயோகித்து ஆகாயம் முழுவதும் மேகம் வர்ஷதாரைகளால் நிறைப்பதுபோல் பாணவர்ஷங்களால் மறைத்து இடைவெளியில்லாதிருக்கச் செய்தனன். அவ்விருவரும் ஒருவரையொருவர் கொல்லவேண்டுமென்கிற பரபரப்பினால் ஓயாமல் கொடிய யுத்தம் செய்கையில் சூரியன் அவர்களது பாணங்களால் மறைக்கப்பட்டுப் பிரகாசியாதிருந்தனன்.

ராமன் எவ்வளவுதான் பராக்கிரமம் பொருந்தி யிருந்தபோதிலும், அவ்வளவு பெரிய சைன்னியங்களை யெல்லாம் கைகால்கள் ஓயாமல் பாணங்களை யெய்து கொன்றனன். ஆனதால் சிறிதாவது களைப்படைந்திருப்பானென்று எண்ணிய கரன் அவன்மேல் கூரான நுனிகளையுடைய நாலீக பாணங்களைப் பிரயோகித்து ராமனது வில்லை கைபிட்டுப் பிடிக்கும் இடத்திற்கருகில் துண்டித்தனன். பின்னும் அவன் கோபாவேசங்கொண்டு வேறு ஏழுபாணங்களை யெய்து ராமனது கவசங்களைப் பொடியாக்கினன். இன்னும் ஆயிரம் பாணங்களைப் பிரயோகித்து ராமனை வருந்தச் செய்தனன். ராமன் சரீர முழுதும் பாணங்கள் பாயப்பெற்றுக் கோபித்துப் புகையின்றி எரிகிற நெருப்புப்போல் பிரகாசித்தனன்.

பிறகு ராமன் சரீரத்தில் சிறிதும் ஆயாசமின்றியே, தனக்கு அகத்திய முனிவரால் கொடுக்கப்பட்ட மகாவிஷ்ணுவினுடையதான பெரியவில்லை யெடுத்து அதில் பாணங்களைத் தொடுத்து முதலில் அவனது கொடியை யறுத்துப்

பிறகு அவனது ஒரு தலையில் ஒரு பாணத்தையும் இரண்டு புஜங்களில் இரண்டு பாணங்களையும் மார்பில் ஒரு கூரான பாணத்தையும் பிரயோகித்து அவனை வருந்தச்செய்தனன். பிறகு கரன், சாரதி, தேர், குதிரைகள் முதலியவற்றை ராம பாணங்களுக்கு இரையாக்கியதுமன்றியில் தன்கைவில்லும் முறியடிக்கப்பட்டு சரீரம் மிகவருந்தி நோவுபட்டனன்.

இங்ஙனம் ஆயுதம் ஒன்றுமின்றி தேர், குதிரைகள், சாரதி இவற்றையெல்லாமிழந்த கரன் கையில் ஒரு கதா யுதத்தைப் பிடித்துக்கொண்டு தேரினின்றும் குதித்துத் தரையில் வந்து நின்றனன். ஆகாயத்தில் விமானங்களின் மேல் உட்கார்ந்திருக்கிற தேவதைகளும், மகரிஷிகளும் மிகுந்த சந்தோஷமுடையவர்களாகி அஞ்சலி செய்து ராமனைப் பூஜித்தனர்.

இருபத்தெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## இருபத்தோன்பதாவது ஸர்க்கம்

### கரனும் ராமனும் பரஸ்பரம் வீரவாதஞ் செய்துகொண்டு போர்புரிதல்.

ராமன் கரனை நோக்கி "நீ மிகவும் கொடிய சுபாவ முடையவனாய்ப் பல்லாயிரம் ராக்ஷசர்களுடன் கூடி சாது ஜனங்களான மகரிஷிகளை அடிக்கடி துன்புறுத்தி வதைக் கின்றனை. இதனால் நீ அடையக்கூடிய பயனை இன்றே நீ கண்டாயல்லவா? இன்னும் காணப்போகிறாய். பாப கர்மங் களைச் செய்பவர்கள் அவற்றின் பலனைச் சீக்கிரத்திலேயே அநுபவிப்பார்களென்பதை இனியாயினும் நீ அறிந்து கொள்வாயாக. ராக்ஷசனே! இதுவரை நீ தண்டகாரணிய வாசிகளான ரிஷிகள் எத்தனையோ பேர்களைக்கொன்று தின் றிருக்கிறாயல்லவா? நீயும் இப்பொழுது யுத்தத்தில் என்னால்

வதைக்கப்பட்டு உன் சைன்னியங்களுடன் அவர்களிடம் போய்ச் சேருவாயாக. உன்னால் இம்சிக்கப்பட்ட ரிஷிகள் இப்பொழுது விமானங்களில் ஏறி ஆகாயத்திலிருந்து நீ என் பாணங்களால் அடிபட்டு நரகவேதனை யனுபவிப்பதைக் காணப்போகிறார்கள். குலாதமனே! உன்னால் எவ்வளவு முடியுமோ அவ்வளவுதூரம் உன் இஷ்டப்படி இப்போது என்னை அடிப்பாயாக. பனம்பழம்போல் உன் தலையைத் தரையில் விழும்படி அறுத்துத் தள்ளுகிறேன்." என்றனன்.

கரன் மிகுந்த கோபத்துடன் ராமனை நோக்கி "தசரத குமாரனே! நீ ஒரு தற்புகழ்ச்சிக்காரன். ஒன்றுக்கும் பிரயோஜனப்படாத ஏதோ சில பலஹீனமான ராக்ஷசர்களைக் கொன்றுவிட்டோமென்று நீ கர்வங்கொண்டிருக்கின்றனை. பராக்கிரமமுடைய வீரபுருஷர்கள் ஒருபொழுதும் உன்னைப் போல் தம்மைத்தாமே புகழ்ந்து கொள்ளார். நீயே உன்னைப் புகழ்ந்துகொள்வதனால் நீ சுத்த அல்பன்; பாசங்களைக் கையில் பிடிக்கும் யமனைப்போன்ற நானே இப்பொழுது உன்னை டோளச்செய்கிறேன். இப்படி நான் கூறினது ஆத்மஸ்துதி செய்ததாகும் பட்சத்தில் சூரியன் அஸ்தமித்து விடுவான். பிறகு யுத்தத்திற்குத் தடைநேரிடும். நீ பதினாலாயிரம் ராக்ஷசர்களைக் கொன்றதால் நான் இப்பொழுது உன் பிராணன்களைப் போக்கி அவர்களது பந்துக்களின் கண்ணீரைத் துடைக்கப் போகிறேன்" என்றனன்.

கரன் இங்ஙனம் கூறிக் கொண்டே கையிலிருந்த கதாயுதத்தை ராமன்மேல் வீசி எறிந்தனன். ராமன் அவ்வாறு யமனது பாசம்போல் அம்மகா கதை ஜ்வலித்துக்கொண்டு வருவது கண்டு பல பாணங்களைப் பிரயோகித்து அதை ஆகாயத்திலேயே பல துண்டுகளாகக் கண்டித்தனன்.

இருபத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

### முப்பதாவது ஸர்க்கம்.

### கர வதமும் சீதை ராமனை அணைந்து ஆனந்தப்படுதலும்.

கரன் தன் கதை துண்டிக்கப்பட்டதால் நிராயுத பாணியாகி நின்றனன். அவனை நோக்கி ராமன் "ராக்ஷசாதமனே! இதுவரை நீ உன்பலத்தைப்பற்றியும் சாமர்த்தியங்களைப் பற்றியும் என்னென்னவோ கூறினை. இப்பொழுது உன் கதை என் பாணங்களால் துண்டிக்கப்பட்டுக் கீழேவீழ்ந்தது! இனி நீ என்ன செய்யப்போகின்றனை? என்னை நீ கொல்லப்போவதாகச் சொல்லி இப்படி இவ்வளவு சீக்கிரத்திலேயே பரிபவமடைந்தனையே! துஷ்ட சுபாவமுடையவனே! அற்பனும் கொடிய சுபாவமுள்ளவனுமான உன்வார்த்தை சுத்த அபத்தமாயிற்றல்லவா? இதோ நான் உன் பிராணனைப் பறிக்கப்போகிறேன். நீ இறந்த பின்பு ரிஷிகளுக்கு இத் தண்டகாரணியப் பிரதேசம் சுகமான வாசஸ்தானமாகப் போகிறது. ராக்ஷசப்பயலே! பிராமணர்களுக்குச் சத்துருவாய் இருப்பவனே! முனிவர்கள் நெருப்பில் அவிஸ்ஸை ஹோமஞ் செய்யும்போது உன்னால் என்ன விக்னம் வருமோவென்று சந்தேகப்பட்டுக்கொண்டே அவிஸ்ஸை அதில் விடுவார்கள். இப்படிப்பட்ட பாபிஷ்டனான உன்னைக் கைப்பிடித்ததற்கு உன் மனைவிகள் துக்கம் எப்படிப்பட்டதென்பதைத் தெரிந்துகொள்ளப் போகிறார்கள்" என்றனன்.

இங்ஙனம் இருவரும் ஒருவர்க்கொருவர் வாக்குவாதம் நடத்திக்கொண்டிருக்கும்போது கரன் திடீரென்று ஒரு பெரிய மரத்தை வேருடன் பிடுங்கி எடுத்து ராமன்மேல் வேகமாகவிட்டெறிந்து "நீ செத்தாய்" என்று கூறிச் சிம்மநாதம் செய்தனன்.

ராமன் அம்மரத்தைப் பல பாணங்களால் தகர்த்து மிகுந்த கோபாவேசத்துடன் கரனை ஆயிரம் பாணங்களால்

யுத்தத்தில் பேதித்தனன். அவயவங்களெல்லாம் சல்லடைக் கண்களாகத் துளைக்கப்பட்ட கரன் ரத்தம் உடம்பெல்லாம் வழிய வேகமாக ராமனை எதிர்த்து ஓடிவந்தனன்.

பிறகு தேவேந்திரனால் அகஸ்தியர் மூலம் தனக்குக் கிடைத்த பிரம்ம தண்டத்தைப் போன்ற ஒரு பாணத்தை ராமன் கரன் மேல் பிரயோகித்து அவனுயிரை வாட்டினன். அந்த ராம பாணத்தால் அடியுண்ட கரன் இந்திரனுடைய வஜ்ஜிராயுதத்தினால் கொல்லப்பட்ட விருத்திராசுரனைப் போலத் தரையில் வீழ்ந்தனன்.

மகரிஷிகளும் தேவதைகளும் ராமனை மிகவும் கொண் டாடி வாழ்த்தினர். தேவதைகளும் சாரணர்களும் பேரி வாத்தியங்களை முழக்கிக்கொண்டு ராமன்மேல் புஷ்ப மழை யைப் பெய்தனர். பின்னும் அவர்கள் "ஆ! இந்த ராமன் ஒருவன் தன்னந்தனியாகப் பதினாலாயிரம் ராக்ஷசர்களை ஒன் றரை முகூர்த்தத்தில் கொன்றனனே! இதென்ன ஆச்சரியம்! இவனது சாமர்த்தியம் விஷ்ணு தேவனுடையதைப் போல் விளங்குகிறதே!" என்று சொல்லித் தம் தம் இருப்பிடங் களுக்குச் சென்றனர்.

அச்சமயம் லக்ஷ்மணன் ராமனுடைய பராக்கிரமத்தைப் பார்த்து சீதையுடன் சந்தோஷமுற்று மலைக்குகையினின்றும் வெளியே வந்து ஆச்சிரமத்தில் நுழைந்து ரிஷிகளால் பூஜிக்கப்பட்டிருக்கும் ராமனைக் கண்டனன். சீதை இங்ஙனம் சமஸ்த சத்துருக்களையும் நாசம் செய்து மகரிஷிகளுக்குச் சுகத்தை விளைத்த அந்த ராமனைப் பார்த்து மிகவும் சந்தோஷமடைந்து கணவனை அழுந்தக் கட்டிக்கொண்டு மிகுந்த சந்தோஷமடைந்தனள்.

முப்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

## முப்பத்தோராவது ஸர்க்கம்

**அகம்பனன், கரன் முதலானோருடைய வதத்தை ராவணனுக்குத் தெரிவித்தலும், ராவணன் மாரீசனிடம்வந்து சகாயம் வேண்டலும், மாரீசன் ராமபிரபாவத்தை யறிவித்தலும்.**

*பிறகு ராவணனுடைய சாரனாகிய அகம்பனன் ஜனஸ்தானத்தினின்றும் லங்கைக்குச் சென்று ராவணனைப் பார்த்து "ராக்ஷசர் தலைவனே! ஜனஸ்தானத்திலுள்ள கரன் தூஷணன் முதலான பதினாலாயிரம் ராக்ஷசர்களும் ராமன் என்னும் ஓர் மானிடனால் ஒன்றரை முகூர்த்த காலத்தில் அடிப்பட்டு இறந்தனர். நான் மாத்திரம் தப்பி யோடிவந்தேன். அந்த ராமன் தசரதன் என்னும் சக்கரவர்த்தியின் மூத்த குமாரனாம். நல்ல யௌவனப் பருவமும், பலமும், வீரமும், அழகும் உடையவனாகக் காணப்படுகிறான். அவனால் அரக்கர் கூட்டம் ஜனஸ்தானத்தில் ஒருவர் கூட மீதியில்லாதபடி தொலைந்தது." என்றனன்.*

*அகம்பனனுடைய வார்த்தையைக் கேட்ட ராவணன் சர்ப்பராஜன்போல் பெருமூச்செறிந்து அவனைப் பார்த்து "அகம்பனா! அந்த ராமனுக்கு தேவேந்திரனும் தேவதைகளும்கூட சகாயமாக வந்தார்களோ? இல்லையாயின் ஒருவன் தனியாக இத்தகைய காரியத்தை எப்படிச் செய்யக்கூடும்?" என்றனன்.*

*அகம்பனன் ராவணனை நோக்கி "அரக்கர் கோமானே! ராமன் மிகுந்த தேஜஸ்வியாயும், சிறந்த வில்லாளியாயும், உயர்ந்த அஸ்திரங்களை ஏராளமாகவுடையவனாயும் விளங்குவதுடன் திவ்ய கல்யாணகுணங்களோடும் கூடினவன். அவனுக்குத் தகுந்தபடி சமானமான பராக்கிரமமுடைய லக்ஷ்மணன் என்று ஒரு தம்பி உளன். காற்று நெருப்புடன் கூடினாற்போல் அந்த ராமன் அந்த லக்ஷ்மணனோடு கூட*

யிருக்கின்றனன். தேவதைகள் ஒருவரும் அவனுக்கு சகா யம் செய்யவில்லை. சிறந்த வில்லில் ராமன் பாணங்களைப் பிரயோகிக்கையில் அவை விரிந்த தலைகளையுடைய சர்ப்பங் களாகி ராக்ஷசர்களைக் கொன்றன. ராக்ஷசர்கள் பயந்து எந் தெந்த வழிகளில் ஓடிப்போகிறார்களோ அந்தந்த வழிகள் எல்லாவற்றிலும் ராமனை அவர்கள் கண்ணெதிரில் தோன் றிக் கொண்டிருந்தனன். இங்ஙனம் ஜனஸ்தானம் முழுமை யும் ராமன் நாசம் செய்து விட்டனன்'' என்றனன்.

இவற்றைக்கேட்ட ராவணன் கோபம் மிகப்பெற்று "நான் அந்த ராம லக்ஷ்மணர்களைக் கொல்லப் போகிறேன்" என்று சொல்லும்போது அகம்பனன் அவனை நோக்கி ராம னது பராக்கிரமங்களை நேரில் கண்டவனாதலால் அவற்றை ஒன்றுகூட விடாமல் கூறி அந்த ராமனை அவனால் ஜெயிக்க முடியாதென்பதைத் திடமாகக் கூறி பின்னும் அவனை நோக்கி "ராமனை ஒழிக்க ஒரு சிறந்த உபாயம் கூறுகின்றேன் கேள். அவனுக்கு சமஸ்த சாமுத்திரிகா லக்ஷணங்களு மமைந்த சீதையென்கிற ஓர் அழகிய மனைவி இருக்கின்றனள். நல்ல யௌவனப்பருவம் வாய்ந்து சிறந்த ஆபரணங்களையும் அணிந்துள்ள அந்த சீதையிடத்தில் ராமன் மிகுந்த காம முடையவன்; ஆகையால் நீ சீதையை பலாத்காரமாகக் கைப் பற்றிக்கொண்டு வந்துவிடுவாயாயின் ராமன் அவளது பிரி வாற்றாமையால் இறந்துவிடுவன். இதுவே அவனையொழிக்கச் சிறந்த உபாயமாகும்.'' என்றனன். ராவணன் "அங்ஙனமே நான் நாளை விடியற்காலத்தில் சென்று அவ்வழகிய சீதையைக் கொண்டு வருகிறேன்'' என்று மொழிந்து ரதத்தின் மேலேறி வேகமாகச் சென்று தாடகையின் புத்திரனான மாரீசனுடைய இருப்பிடத்தையடைந்தனன்.

மாரீசன் இராவணனைக் கிரமப்படி பூஜித்து க்ஷேமம் வினவி வந்தகாரியத்தைப்பற்றி விசாரித்தனன். ராவணன்

ராமனுடைய பராக்கிரமங்களையும் அவன் ஒருவனாகவே ஜனஸ்தானத்திலுள்ள அத்தனை ராக்ஷசர்களையும் மாய்த்ததையும் தான் அகம்பனனிடத்தில் கேட்டபடி கூறி, தான் ஸீதையை அபகரித்துக்கொண்டு போகும்விஷயத்தில் தனக்குச் சகாயமாய் இருக்கவேண்டுமென்று வேண்டினன்.

இங்ஙனம் வேண்டின ராவணனை நோக்கி மாரீசன் "எவன் சிநேகிதன்போல் மேலுக்குத் தோன்றி உள்ளே உனக்குச் சத்துருவாகி உன்னைக் கெடுக்க நினைத்து உனக்குச் ஸீதையின் பெயரைச் சொல்லினன்? எவன் உன்னால் திரஸ்கரிக்கப்பட்டு உன்னுடைய ஐசுவரியத்தைப் பொறுக்கமுடியாதிருக்கின்றனன்? அவன் உன்னையும் ராக்ஷசகுலங்களையும் அடியோடு பாழாக்க எண்ணியே இப்படிப்பட்ட காரியத்தைச் செய்யும்படி உன்னைத் தூண்டியிருக்க வேண்டும், அவனை உனக்கு சத்துரு என்று நீ நினைப்பாயாக. ராவணா! சிறந்த பராக்கிரமமுடைய ராமனை யுத்தத்தில் கண்கொண்டு பார்க்கவும் முடியாது.

ராக்ஷசர்களாகிய மிருகங்களைக் கொல்லும் ராமனாகிற ஸிம்மத்தை இப்பொழுது நீ வலுவில் சென்று சண்டைக்கழைத்தாயாகில் நீயும் ராக்ஷசக் கூட்டங்களும் பூண்டற்றுப் போய் யமன் வாயில் வீழ்வீர்களென்பது திண்ணம். லங்கேச்வரனே! நீ மனத்தெளிவு பெற்று லங்கைக்குத் திரும்பிச் சென்று மீளவும் இத்தகைய கலக்கம் உண்டாகப் பெறாமல் உன் மனைவிகளுடன் கூடி சுகமாகக் கிரீடித்துக் கொண்டிருப்பாயாக. ராமன் தன் மனைவியோடு காட்டில் விளையாடிக் கொண்டிருப்பானாக." என்று சொல்லுகையில் ராவணன் கேட்டு லங்கைக்குத் திரும்பிச் சென்றனன்.

முப்பத்தோராவது ஸர்க்கம் முற்றிற்று.

## முப்பத்திரண்டாவது ஸர்க்கம்.

## சூர்ப்பணகை ராவணனிடம் போதல்.

பிறகு சூர்ப்பணகை ராமனது பராக்கிரமங்களைக்கண்டு மிகவும் பீதியடைந்தவளாய் லங்கைக்குச் சென்று அண்ணனை ராவணனிடம் தான் பட்ட பரிபவங்களைக்கூறத் தொடங்கினள். ராவணன் சூரியன்போல் பிரகாசிக்கின்ற சிறந்த சிம்மாசனத்தில் தேவேந்திரனைப்போல் வீற்றிருந்தனன். அவன் தேவர்களாலும், முனிவர்களாலும், கந்தர்வர்களாலும், மற்றெவராலும் ஜயிக்கமுடியாதவன். மிகுந்த பராக்கிரமமும், வீரமும், பலமும், தைரியமும் அவனிடம் குடிகொண்டிருந்தன. அவனது சரீரம் தேவாசுர யுத்தங்களில் இந்திரனது வஜ்ஜிராயுதத்தால் அடிபட்டுக் காய்காய்த்திருக்கும். அவனது மார்பு ஐராவதமென்னும் இந்திரனது யானையின் தந்தங்களால் குத்தப்பட்டு மேலான இரணங்களின் அடையாளங்களையுடையதாய் இருக்கும்.

பத்துத் தலைகளும், இருபது கைகளும் படைத்த அந்த ராவணன் நல்ல ராஜலக்ஷணங்களமைந்து பர்வதம் போன்ற சரீரத்தை யுடையவனாய் விளங்கினன். தேவதைகளோடு நேர்ந்த யுத்தங்களில் பலதடவைகள் விஷ்ணுவின் சக்ராயுதத்தினால் அடிபட்டவன். தேவதைகளுக்குள்ள சமஸ்த ஆயுதங்களாலும் அங்ஙனம் அடிக்கப்பட்டும் அவனது அங்கங்களில் எதுவும் பழுதாகாமல் அவ்வடிகளால் காய்காய்த்து உறுதியுற்றிருக்கும். அவன் சமுத்திரத்தைக் கலக்கவும், மலைகளைப் பெயர்க்கவும், நினைத்த காரியத்தை உடனே செய்துமுடிக்கவும் மிகுந்த ஆற்றல் உடையவன். தருமங்களையழிக்கும் தன்மையன்; பிறர் மனைவிகளைக்கவர்ந்து தொந்திரவுசெய்யும் தீக்குணமுடையவன். எப்பொழுதும் பிறரது யாகங்களுக்குத் கெடுதியைச் செய்பவன்.

அவன் போகவதியென்னும் பட்டணத்திற்குச் சென்று வாசுகியை வென்று தக்ஷணனையும் ஜெயித்து அவனது பிரிய மனைவியை அபகரித்தனன். குபேரனை வென்று அவனது புஷ்பக விமானத்தைப் பறித்துக்கொண்டு வந்தனன். சமஸ்த தேவதைகளுக்கும் அவனால் சதா கெடுதியே விளைந்து வந்தது. தைரியசாலியான அந்த ராவணன் முன்பு வனத்தில் பதினாயிரம் வருடங்கள் தவம் செய்து தன் தலைகளைத் தானே அறுத்துப் பூஜோபகரணமாகக்கொண்டு பிரம தேவனைப் பூஜித்தனன். மனுஷ்யன் ஒருவனைத் தவிர மற்றெவராலும் அவனுக்கு மரணபயம் கிடையாது. அநேக யாகங்களைக் கெடுத்தவன். ஜனங்களுக்கு எப்பொழுதும் கெடுதிசெய்வதே அவனுக்குத் தொழில்.

இப்படிப்பட்ட ராவணனிடத்தில் சூர்ப்பணகை வந்து மிகுந்த ஆரவாரத்துடன் கோஷம் செய்து லக்ஷ்மணனால் பங்கம் செய்யப்பட்ட அங்கங்களைக்காட்டி மிகவும் பயங்கரமான வாக்கியங்களைச் சொல்லத் தொடங்கினாள்.

முப்பத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## முப்பத்துமூன்றாவது ஸர்க்கம்.

### சூர்ப்பணகை ராவணனை நிந்தித்தல்.

சூர்ப்பணகை ராவணனை நோக்கி மிகவும் கோபித்து "நீ மதோன்மத்தனாய் மன்மத போகத்தில் மூழ்கி உனக்கு நேர்ந்திருக்கும் மகாபயத்தைத் தெரிந்துகொள்ளாதிருக்கின்றனை. தேவகந்தர்வ தானவர்கள் உன்னால் அவமதிக்கப்பட்டவர்களாகையால் உனக்கு அபகாரம் செய்வதிலேயே ஊக்கமுடையவராய் இருக்கின்றனர். நீயோ சாரர்களை அந்தந்தக் காரியங்களுக்கனுப்பிச் சங்கதிகளைத் தெரிந்துகொள்ளாமல் விஷயபோகத்தில் மண்டியிருக்கின்றனை. இப்படிப்பட்ட நீ துரைத்தனத்தை எப்படிக் காப்பாற்றப்

போகின்றனை? ராக்ஷசாதமா! நீ சிறிதும் விவேகமில்லாத சிறுபிள்ளையைப்போன்ற சுபாவமுடையவன். அரசர்கள், சாரணர்கள் மூலமாய் வெகுதூரத்தில் நடந்த விஷயங்களை யெல்லாம் கண்டுகொள்வார்களாகையால் அவர்கள் தீர்க்க திருஷ்டிகளெனப்படுவார்கள். ஜனஸ்தானத்திலுள்ள உன் ஜனங்களெல்லாம் அடிபட்டிறந்ததைக்கூடத் தெரிந்து கொள்ளாதிருக்கின்றனையே! ஆகையால் நீ சாரணர்களையே வைத்துக்கொள்ளவில்லையென்று தோன்றுகிறது. கொடுந் தொழிலர்களான பதினாலாயிரம் ராக்ஷசர்களும் கரதூஷணர் களும் ராமன் ஒருவனாலேயே கொல்லப்பட்டனர். இவ் வளவேயன்று. அந்த ராமன் ரிஷிகளுக்கெல்லாம் அபயங் கொடுத்து ஜனஸ்தானம் முழுவதையும் பாழாக்கித் தண்டகா ரணியமெல்லாம் க்ஷேமமாகச் செய்தான்.

ராவணா! நீ உன் தேசத்திலேயே உண்டான பயத்தை யுங்கூடத் தெரிந்துகொள்ளாதிருக்கின்றனையே! உன்னைப் போல், சாரர்களையனுப்பி விஷயங்களை அப்பொழுதைக்கப் பொழுது தெரிந்துகொள்ளாமல் அஜாக்கிரதையாய் இருப் பவன் சீக்கிரத்தில் ராஜ்ஜியம் கைசோரப்பெற்று மிடுக்கு தொலைந்து புல்லியனாயிருப்பான். ராவணா! துர்ப்புத்தியுடைய உனக்கு ராஜயோக்கியமான குணங்கள் ஒன்றுகூட இல்லை. நீ பகைவரை உபேக்ஷித்துப் பிறரை அவமானம் செய்பவன்; விஷயபோகங்களில் மனம் செல்லப்பெற்று அதனால் தேச பேதங்களையும் காலவிசேஷங்களையும் உள்ளபடி அறியாத வன். குணதோஷங்களை ஆராய்வதற்குப் போதுமான புத்தி யில்லாதவன். ஆகையால் நீ சீக்கிரத்தில் ராஜ்ஜியத்தைப் போக்கடித்துக்கொண்டு ஆபத்தில் விழப்போகின்றனை." என்றனள். ராவணன் இங்ஙனம் சூர்பணகை சொன்னதைக் கேட்டு வெகுநேரம் ஆலோசித்தனன்.

முப்பத்து மூன்றுவது ஸர்க்கம் முற்றிற்று

## முப்பத்து நான்காவது ஸர்க்கம்

### சூர்ப்பணகை ராவணனுக்கு ராமாதிகளின் ரூபசௌந்தரியங்களையும் பராக்கிரமங்களையும் கூறி, சீதையை அபகரிக்கும்படி அவனைத்தூண்டுதல்

ராவணன் கராதிகளின் வதத்தைக்கேட்டு மிகவும் கோபித்து சூர்ப்பணகையை நோக்கி "ராமன் யார்? அவனது உருவமும் பராக்கிரமமும் எப்படிப்பட்டவை? அவனது ஆயுதம் எது? அவன் ஏன் தண்டகாரணியத்திற்கு வந்தனன்? அவன் எப்படி கரதூஷணதிரிசிரர்களைக் கொன்றனன்? என்று வினவினன்.

சூர்ப்பணகை ராவணனைப் பார்த்து இராமாதிகளின் சௌந்தரியங்களையும் வில்லையும் விருத்தாந்தத்தையும் அவள் கண்டபடி கேட்டபடி கூறிப் பின்னும் அவனை நோக்கி "ராமன் இந்திரனுடைய வில்லைப்போன்ற தன் வில்லில் பாணப்பிரயோகம் செய்யும்போது பாணங்களை யெடுப்பதாவது தொடுப்பதாவது தொடுத்துவிடுவதாவது வில்லை இழுப்பதாவது ஒன்றும் எனக்குப் புலப்படவில்லை. இந்திரன் பெய்கின்ற கல்மழைகளால் முதிர்ந்த பயிர்கள் அடிபட்டுச் சாய்வதுபோல், ராமனது பாண வர்ஷங்களால் அந்த சைன்னியம் முழுவதும் வதைக்கப்பட்டுக் கீழ்விழுவது மாத்திரமே எனக்குப் புலப்பட்டது. ராமன் ஒருவனே ஒன்றரை முகூர்த்தத்தில் பயங்கரரான பதினாலாயிரம் ராக்ஷசர்களையும் தூஷணனையும் கரனையும்கூட சிறிதும் சிரமமில்லாமல் கொன்றுவிட்டனன்.

ராமன் ஆத்மஸ்வரூபமுணர்ந்தவனாகையால் ஸ்திரீ வதை கூடாதென்று சங்கித்து என்னொருத்தியை மாத்திரம் அவமானப்படுத்திவிடுகையில் நான் கஷ்டப்பட்டுத் தப்புவித்துக் கொண்டுவந்தேன். ராமனைப்போன்ற உருவமும் பராக்கிரமமுள்ள லக்ஷ்மணனென்பவன் அவனுக்குத் தம்பியும் வலக்கை

போன்றவனும் ஆவான். ராமனுக்கு அதிரூபஸௌந்தரிய முள்ள ஸீதையென்றொரு மனைவியுண்டு. பூர்ண சந்திரன் போன்ற முகமும், அகன்றழகிய கண்களும், கோல நீள்கொடி மூக்கும், வேயினன்னதோளும், அழகிய துடைகளும் உடைய அந்தச் சிறுக்கி எப்பொழுதும் கணவனுக்குப் பிரியத்தையும் இதத்தையுமே செய்துகொண்டிருக்கிறாள். அவளைக் காண் பவர் எவரும் 'இவள் தண்டகாரணியத்து வனதேவதையோ! இரண்டாவது லக்ஷ்மியோ?' என்று சொல்லாமல் போகார். அப்பெண்மணி உருக்கி வார்த்த தங்கப்பதுமைபோல் சிவந்த நகங்களும் அழகிய பின்புறமும் நுண்ணிடையும் பெற்று சுபலக்ஷணமெல்லாம் அமைந்தவள். அவளைப்போன்ற அழகுடைய தேவதா ஸ்திரீயையாவது கந்தர்வ ஸ்திரீயையாவது யக்ஷஸ்திரீயையாவது கின்னர ஸ்திரீயையாவது நான் பார்த்த தில்லை. அந்த ஸீதை ஆலிங்கனம் பண்ணிக்கொள்ளாமற் போயினும் எவனுக்கு வெறுமனே மனைவியாயிருப்பாளோ அவன் சமஸ்த போகங்களையும் மேலான சுகபோகங்களையும் பெறுவானென்பதில் சிறிதும் சந்தேகமில்லை. ராவணா! அந்த ஸீதையின் அழகை நான் என்னவென்று சொல்வேன்? அவளைப்போன்ற அழகி இப்பூவுலகில் எங்குமே இல்லை. அவளே உனக்குத் தகுந்த மனைவி. அப்படியே நீயும் அவளுக்குத் தகுந்த கணவன்.

நான், அகன்ற இடையின் முன்புறமும் பருத்த இடையின் பின்புறமும் பருத்தழகிய ஸ்தனங்களும் விளங்கப் பெற்ற அம்மதிமுக மடந்தையை உனக்கு மனைவியாகக் கொண்டு வரலாமென்று பிரயத்தனம் செய்கையில் கொடியனான லக்ஷ்மணன் என்னை இப்படி விரூபமாக்கினன். நீ அந்த ஸீதையை நேரில் காண்பாயாயின் உடனே மன்மத பாணங்களுக்கு வசப்பட்டவனாவாய். ஆகையால் உனக்கு ஸீதையை மனைவியாகக்கொள்ள இஷ்டமிருந்தால் இப்பொழுதே தண்ட

காரணியம் சென்று ராமலக்ஷ்மணர்களைக் கொன்று அவளை எவ்விதத்திலாவது கொண்டுவந்து மணம் செய்துகொள்வது நன்று'' என்றனள்.

**முப்பத்துநான்காவது ஸர்க்கம் முற்றிற்று.**

---

## முப்பத்தைந்தாவது ஸர்க்கம்.

### ராவணன் மீண்டும் மாரீசனிடம் போதல்

இங்ஙனம் சூர்ப்பணகை கூறக் கேட்ட ராவணன் சீதையை நேரில் பாராதபோதிலும் அவளை யபகரித்து மணம் செய்துகொள்ள நினைத்துத் தம் மனைவிமார்களான மந்தோதரி முதலானவர்களுக்குத் தெரியாமல் தன் தேரைச் சித்தப் படுத்தும்படி சாரதிக்கு உத்தரவிட்டனன்.

இஷ்டப்படி செல்ல வல்லதும் விசேஷமாக அலங்கரிக் கப்பட்டதுமான தேரில் ராவணன் ஏறிக்கொண்டு சமுத் திரத்தின் அருகில் சென்றனன். அந்தச் சமுத்திரத்தி லுள்ள விசேஷங்களையெல்லாம் பார்த்துக் கொண்டே வேகமாகப் பறந்து சென்றனன். சமுத்திரக்கரையில் கணக் கற்ற ரிஷிகளையும் அடர்ந்த காடுகளையும் சிறந்த பலவகை மரங்களையும் கண்டனன்.

நாகர்களும் கருடர்களும் கந்தர்வர்களும் கின்னரர் களும் வைகானசர்களும் அங்கு விளக்கமுற்றிருந்தனர். காமத்தை வென்ற சித்தர்களும், சாரணர்களும், அப்சர ஸ்திரீகளும், தேவபத்தினிகளும் அங்குப் பிரகாசித்துக் கொண்டு இருந்தனர். இன்னும் அங்கு ஹம்ஸங்களும், அன்றில் பறவைகளும் நீர்க்கோழிகளும் ஸாரஸபட்சிகளும் இனிமையாக விளையாடிக் கொண்டிருந்தன.

இவற்றை யெல்லாம் தாண்டிப் பறந்து சென்ற ராவணன் மேகம்போல் புலப்படுகின்ற ஓர் ஆலமரத்தைக் கண்டனன். அதன்கீழ் நாற்புறத்திலும் கணக்கற்ற ரிஷிகள் புலப்பட்

டனர். அதன் கிளைகள் நாற்புறமும் நூறுயோசனை தூரம் நீண்டிருந்தன.

முன்பொரு சமயம் மகாபலிஷ்டனான கருடன் ஒரு பெரிய யானையையும் ஆமையையும் எடுத்துக் கொண்டு அவை களைத் தின்பதற்காக அம்மரத்தின் கிளைக்கு வந்தனன். அவனது பாரத்தைத் தாங்கமாட்டாது அக்கிளை முறிந்தது. அது பூமியில் விழுமாயின் ரிஷிகள் மாண்டுபோவார்க ளென்று கருடன் நினைத்து அவர்களைக் காக்கும் பொருட்டு நூறு யோசனை நீண்ட அக்கிளையையும் தன் ஆகாரத்தையும் எடுத்துக்கொண்டு வேகமாகப் போயினன். பிறகு கருடன் இந்திரனது பவனத்தில் பத்திரமாகக் காக்கப்பட்ட அமிரு தத்தைக் கொண்டு வந்தனன். சுபத்திரமென்று பேர்கொண்டு விளங்குகிற அந்த ஆலமரத்தை ராவணன் கண்டனன். இங்ஙனம் சமுத்திரத்தின் அக்கரையைச் சேர்ந்த ராவணன் மான்தோலையும் மரவுரிகளையும் சடைகளையும் தரித்து ஆகாரநியதியுடன் வசிக்கின்ற மாரீச ராக்ஷசனிடம் மீண்டும் வந்து சேர்ந்தனன்.

மாரீசன் ராவணனை மனிதர்களுக்குக் கிடைக்காத சமஸ்த போக்கிய பதார்த்தங்களாலும் நன்கு பூஜித்துத் தன்னை நோக்கி மறுபடியும் அவ்விடம் வந்தகாரணத்தை வினவினன்.

முப்பத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று

---

முப்பத்தாறாவது ஸர்க்கம்.

## ராவணன் மாரீசனைத் தனக்குச் சீதையை அபகரிக்கும் விஷயத்தில் துணைபுரிந்தே யாகவேண்டுமென்றல்.

ராவணன் மாரீசனை நோக்கி "அப்பா! மாரீசனே! என் தம்பி கரனும் தூஷணனும் திரிசிரனும், ஜனஸ்தானத்தி லுள்ள பதினாலாயிரம் ராக்ஷசர்களும் கேவலம் மானிடனான ஒரு ராமனால் மாண்டனர். தண்டகாரணியம் இப்பொழுது

பயமற்றதாகச் செய்யப்பட்டது. தந்தை கோபித்துத் துரத்தியதனால் மனைவியை யழைத்துக்கொண்டு வனத்திற்கு வந்த அக்கொடியோனான ராமன் இங்ஙனம் பெருத்த தீமையை விளைத்தனன். கெடுநெஞ்சுடையனும் மூர்க்கனும் தருமத்தை விட்டவனுமான அவன் என் அன்புக்கிடமான தங்கையின் காதையும் மூக்கையும் அறுத்து அங்க பங்கம் செய்தனன். ஆகையால் அவனது மனைவியான சீதையை ஜனஸ்தானத்தினின்றும் பலாத்காரமாகக் கொண்டுவரப் போகிறேன். இது விஷயத்தில் நீ எனக்குச் சகாயமாய் இருக்கவேண்டும். உனக்கு எல்லா உபாயங்களும் தெரியும். உன்னைப்போன்ற சூரனும் தீரனும் பலவானும் இவ்வுலகில் யாருமில்லை.

நீ வெள்ளிப்புள்ளிகளோடு அற்புதமான வர்ணங்களமைந்த ஓர் பொன்மானுருவம் தரித்துச்சென்று சீதையின் முன்னிலையில் திரியக்கடவாய். சீதை உன்னைப்பார்த்த உடனே 'இதைப்பிடித்துக் கொடுக்கவேணும்!' என்று ராம லக்ஷ்மணர்களை வேண்டுவாள். இருவரும் உன்னைத்தொடர்ந்து போகையில் தனியாய் இருக்கும் சீதையை நான் பலாத்காரமாகத் தூக்கிக்கொண்டு வந்து விடுகிறேன்.

பிறகு ராமன் சீதையின் பிரிவால் வருந்தி இளைத்து யுத்தத்திற்கு வரமாட்டான். வந்தபோதிலும் நான் என் பிரயோசனம் கைகூடப்பெற்று மனங்களிப்புற்று வலிமைவாரப் பெற்றிருப்பேனாகையால் துர்ப்பலனான அவனைக்கொன்று விடுவேன்." என்றனன்.

ராவணன் இங்ஙனம் கூறக்கேட்ட மாரீசன் ராமபயத்தினால் உதடுகள் உலரப்பெற்றுக் குரல்தழதழத்துக் கண்ணிமை கொட்டாமல் செத்தவன்போல் வருந்தி ஒன்றும் சொல்லமுடியாமல் திகைத்தனன்.

முப்பத்தாறாவது ஸர்க்கம் முற்றிற்று.

## முப்பத்தேழாவது ஸர்க்கம்

## மாரீசன் ராவணனுக்கு இதோபதேசம் செய்தல்

சிறிதுநேரம் கழித்து மாரீசன் ராவணனைப் பார்த்து "அரக்கர் தலைவனே! நீ சாரர்களை யனுப்பிச் சத்துருக்களின் பலாபலங்களைத் தெரிந்துகொள்ளவில்லை. மேலும் நீ சபல புத்தியுடையவன். ராமன் மகா பராக்கிரமசாலி யென்றும் சமஸ்தகல்யாணகுண பரிபூர்ணனென்றும் இந்திரனை நிகர்த்த வனென்றும் நீ தெரிந்துகொள்ளவில்லை. ஐயோ! உனக்கேன் இவ்வித எண்ணம் உண்டாயிற்று? ராக்ஷசர்களுக்கு இனி க்ஷேமம் உண்டாகுமா? எவன் உன்னைப்போல் மனம் தோன்றியபடி நடந்துகொண்டு துராசாரனுகிக் கெட்ட காரியங்களைச் செய்கின்றானோ அப்படிப்பட்ட அரசன் தன்னையும் தன் உறவினர்களையும் ராஜ்ஜியத்தையும் பாழ் செய்து விடுவான்.

ராமன் நீ சொன்னபடி தந்தையால் துரத்தப்பட்டவனல்லன். தந்தை கைகேயியின் வசனத்திற்குட்பட்டு சத்திய பாசத்தால் கட்டுண்டிருக்கையில், தரும சுபாவனுகையால் கைகேயியின் விருப்பத்தைத்தீர்த்துத் தந்தையைச் சொன்ன சொல் தவருதவனுகச் செய்யும் பொருட்டுக் காட்டிற்கு வந்தனன். நீ சொன்ன கெட்டகுணங்களொன்றும் அவனிடத்தில் எள்ளளவுமில்லை. அவன் தருமமே வடிவு கொண்டவன். சத்புருஷன். சத்தியமான பராக்கிரமமுடையவன். இந்திரன்போல் சகல ஜனங்களுக்கும் பிரபுவாய் இருப்பவன். மகா பதிவிரதையான சீதையை நீ எங்ஙனம் அபகரிக்க விரும்பினை? சூரியகாந்தியை எவராயினும் தனியேபிடித்துப் பார்க்க வல்லரோ? ஐயோ! அரக்கர்களின் குலத்தை வேரோடு பிடுங்கி அழிக்கும் குணமுடைய ராமனுகிற யமனிடத்தில் உன் ராஜ்ஜியத்தையும் சுகத்தையும் இனிமையான ஜீவனத்தையும் விட்டுத்துறந்து இப்பொழுது போகவேண்டாம்.

ராமனுடைய பராக்கிரமமும் தேஜஸ்ஸும் அளவிடக்கூடாதவை. அந்த ஜனகராஜன்புதல்வியை நீ பறித்துக் கொண்டுவர வல்லனல்லை. அம்மகானுபாவன் ஸீதையைத் தன் பிராணனைக் காட்டிலும் மேலாகப் பார்த்துக்கொண்டு வருவான். எரிகிற நெருப்பின் ஜ்வாலையை அணுகுவது சாத்தியமல்லாதிருப்பதுபோல் அந்த ராமனது ஸீதையைப் பறித்துக்கொண்டு வருவது எவ்வளவும் சாத்தியமன்று. ராக்ஷசர் தலைவனே! உனக்கு உயிரின்மேல் பற்றிருக்குமாயின், ஜீவனத்தையும் சுகங்களையும் விரும்புவாயாயின், ராமனுக்குக் கெடுதியைச் செய்யாதிருப்பாயாக. நீ ராமனோடு யுத்தஞ் செய்யவிரும்புவது யுக்தமல்லவென்று எனக்குத் தோன்றுகிறது. உன் பலத்தையும் எதிரியின் பலத்தையும் நன்கு தெரிந்துகொண்டு நன்மை தீமைகளை உணர்ந்து எது யுக்தமோ அதைச் செய்வாயாக.”

முப்பத்தேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## முப்பத்தேட்டாவது ஸர்க்கம்

### மாரீசன் ராவணனுக்குத் தான் முன்பு பாலனாகிய ராமனால் பட்ட பாடுகளைக் கூறுதல்.

“முன்பு ஒருகால் நான் ஆயிரம் யானை பலமுடையவனாகிக் கிரீடந் தரித்துப் பெரிய உருவத்துடன் கையில் இரும்புத் தடியை ஏந்தி, பராக்கிரமத்தின் மிகுதியால் பூமியெங்கும் திரிந்து ரிஷிமாமிசம் தின்ன வேண்டுமென்ற எண்ணத்துடன் சிலகாலம் தண்டகாரணியத்தில் சுற்றிக்கொண்டிருந்தேன். அச்சமயம் அங்கு வேள்வி இயற்றிக்கொண்டிருந்த விசுவாமித்திர முனிவர் என்னைக்கண்டு பயந்து தசரத மகாராஜனிடம் சென்று தன்னை என்னிடமிருந்து காக்கும்படி ராமனைத் தன்னுடன் அனுப்பவேண்டி

னன். அப்பொழுது பன்னிரண்டு வயது பருவமாய் இருந்த ராமன் தந்தையின் கட்டளைப்படி அம்முனிவனைப் பின் தொடர்ந்து அவராச்சிரமத்திற்கு வந்தனன். அப்பொழுது அவன் பிரமசாரியாகையால் ஒரே வஸ்திரந் தரித்துச் சிறந்த வில்லைக் கையிற் பிடித்து பாலசந்திரனைப்போல் விளங்கி விசுவாமித்திரனது வேள்விக்குக் காவலாக நின்றனன். நானோ வரம் பெற்றிருக்கும் கர்வத்தினால் செருக்குற்று அங்குச் சென்று 'இவனொரு சிறுபயல்' என்று ராமனை அவமதித்து முனிவரின் யாகவேதிகையின்மேல் எதிர்த்தோடினேன். பிறகு ராமன் விநோதமாகவே ஒரு பாணத்தை என்மேல் பிரயோகிக்க நான் அதனால் அடியுண்டு நூறுயோசனை தூரத்திற்கப்பாலுள்ள சமுத்திரத்தில் வேகமாகத் தள்ளப்பட்டு மூர்ச்சையடைந்தேன். நான் ஆழமுள்ள சமுத்திரத்தில் வெகுநேரம் மூர்ச்சித்துக்கிடந்து பிறகு மூர்ச்சை தெளிந்து லங்கைக்குத் திரும்பி வந்தேன். ராவணா! அச்சமயம் ராமன் மிகச் சிறிய வயதுடையவன். யுத்தங்களில் தேர்ந்தவனல்லன். அப்படியிருந்தும் அனாயாசமாகவே என்னைப்போன்ற பலிஷ்டனை 'ஐயோ பாவமென்று' கொல்லாமல் அப்படிச் செய்து உயிரோடு விட்டனன். எனக்குச் சகாயமாக வந்தவர்களெல்லாரையும் கொன்றுவிட்டனன்.

ராவணா! நீ ராமனுடன் விரோதப்படுவாயாயின் நிச்சயமாக உன் பந்து மித்திரர்களுடன் மாண்டுபோவாய். ஐயோ! ராக்ஷச வீரர்கள் ராம பாணங்களால் அடியுண்டு தரையில் வீழ்வதை நீ காணப்போகின்றனை. லங்காபுரம் முழுதும் பாணங்களால் சூழப்பட்டு அக்கினிச் சுவாலைகள் நாற்புறமும் நிரம்பப்பெற்று வீடுகளெல்லாம் நீறாகப்போவதை நீ காணப் போகின்றனை.

அரக்கர் தலைவனே! பிறர் மனைவியைக் காதலிப்பதிற் காட்டிலும் பெரிய பாபம் மற்றொன்று கிடையாது. ஆகை

யால் அழகிய ஆயிரக்கணக்கான உன் மனைவிகளோடு சுகமாகக் காலம் கழிப்பாயாக. ராமனுக்கு எள்ளளவும் தீங்கு செய்ய நினைக்கவேண்டாம். அன்றி, என் வார்த்தைகளை மீறிப் போவாயாயின் நிச்சயமாக உனக்குக்கேடுவிளையும்."

முப்பத்தெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## முப்பத்தோன்பதாவது ஸர்க்கம்.

## மாரீசன் இன்னமும் ராமனது விருத்தாந்தத்தை ராவணனுக்குச் சோல்லுதல்.

"ராவணா! ராமன் பால்யத்தில் நடந்த யுத்தத்தில் என்னை மன்னித்து உயிரோடுவிட்டனன். அவனுக்கு யௌவனம் வந்தபின்பு இப்பொழுது நடந்த விருத்தாந்தத்தையும் சொல்லுகிறேன் கேள். நான் மீண்டும் ஒரு பெரிய மிருகரூபம் தரித்து இரண்டு ராக்ஷசர்களோடு கூடித் தண்டகாரணியத்திற்குச் சென்றேன். அங்கு நான் எதேச்சையாகத் திரிந்து முனிவர்களைக் கொன்று தின்றேன். அச்சமயம் ரிஷிவேஷத்தோடு விளங்கின ராம லக்ஷ்மணர்களைச் சீதையுடன் நான் கண்டேன். உடனே பழைய வைரத்தை மனதில் வைத்துப் புத்தியில்லாமல் 'இவன் தாபஸ வேஷத்துடனிருப்பதால் இப்பொழுது ஒன்றும் செய்யமாட்டான்' என்று நினைத்து அவனைத் தகர்க்க விரும்பி எதிர்த்தோடினேன். ஆ! என்னவென்பேன்? அவனால் வில்லினின்றும் பிரயோகிக்கப்பட்ட கூரான பாணங்கள் என்னுயிரை வாட்டுவதற்காக வேகமாக என்னை நோக்கி ஓடி வந்தன. நான் ஏற்கனவே ராமபாணங்கள் பட்டுப் பயந்திருப்பவனாகையால் ராமனது பராக்கிரமத்தை நினைத்து ஓடிப்போனேன். ராமபாணம் பயந்து ஓடிப்போகிறவனைத் தீண்டாததாகையால் நான் அதினின்றும் தப்புவித்துக்கொண்டேன். மற்ற இரு ராக்ஷசர்களும் அதன் மகிமையறியாமல் எதிரிட்டு அடிபட்டு

மாண்டனர். ஆகையால் நான் எப்படியோ கஷ்டப்பட்டு ராமபாணங்களினின்றும் தப்பிப்பிழைத்து இனிமேல் சன் மார்க்கத்தில் ஒழுகவேண்டுமென்று நிச்சயித்து மான் தோல் மரவுரி தரித்துத் தவக்கோலம் பூண்டு காலம் கழித்து வருகிறேன்.

ராவணா! அதுமுதல் எனக்கு எங்குப் பார்க்கிலும் ராம மயமாகவே காணப்படுகின்றது. பயமுற்ற எனக்குப் பலவாயிரம் ராமமூர்த்திகள் தென்படுகின்றனர். இது எனக்கு விழித்துக்கொண்டிருக்கும் போது மாத்திரமன்று. கனவிலும் கூட ராமனைப்பார்த்துப் பிரக்ஞை தப்பித் தடுமாறுகின்றேன். ராவணா! நான் எப்பொழுதும் ராமனை நினைத்துத் திகில்பட்டுக்கொண்டிருப்பதால் 'ர' என்னும் எழுத்தை முதலிற்கொண்ட ரத்னம், ரதம் முதலான பேர்களும் கூட முதலக்ஷரம் கேட்டவுடனே ராமனது பேர்தான் சொல்லப் படுமோவென்று எனக்குப் பயத்தை விளைவிக்கின்றன. ஆகையால் எனக்கு அந்த ராமனது பிரபாவம் நன்றாகத் தெரியும். நீ பிராணனோடு இருக்கவிரும்புவாயாயின் ராமனது பிரஸ்தாவத்தையும் கூட என்னிடம் சொல்லவேண்டாம். நான் உன் கருத்திற்குச் சிறிதும் இணங்கமாட்டேன்.

சூர்ப்பணகையை அவன் வேண்டுமென்று அங்க பங்கம் செய்யவில்லை. சூர்ப்பணகை சீதையைக்கொல்ல யத்தனித்த படியால் ராமன் அவளைப் பங்கம் செய்தனன். அதற்காகக் கரன் மீறி அவனையடிக்கப்போகையில் ராமன் தன்னை ரக்ஷித்துக்கொள்வதற்காக அவனையும் அரக்கர்களையும் கொன்றனன். இதில் ராமன்மேல் யாது தப்பு இருக்கிறது? நீ உண்மையாக யோசித்துப்பார். நான் உனக்கு பந்துவும் பிராண சிநேகிதனுமாகையால் உனக்கு இதத்தைச் சொல்லினேன். என் வார்த்தையை அங்கிகரியாமல் நீ ராமத்வே

ஷம் கொள்வாயாயின் நிச்சயமாக நீ உன் பந்துக்களுடன் ராமபாணங்களால் அடிபட்டு யமபுரம் செல்லப்போகிறாய்' என்று கூறிமுடித்தனன்.

முப்பத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நாற்பதாவது ஸர்க்கம்.

### ராவணன் மாரீசனது இதோபதேசங்களை நிராகரித்து பலாத்காரமாக அவனைத் தனக்குச் சகாயமாகும்படி நியமித்தல்.

மாரீசன் எவ்வளவுதான் இதமான வார்த்தைகளைக் கூறினபோதிலும் ராவணன் அவற்றைக்கேளாமல் மாரீசனை நோக்கி "அடா! உன்னால் என்னிஷ்டத்தைக் கடுகளவும் மாற்றமுடியாது. கேவலம் மானிடனான ராமனோடு நான் நேரில் நின்று யுத்தம் செய்வது எனக்கு யுக்தமன்று. அவனுடைய மனைவியைப் பறிப்பதே நான் அவனுக்குச் செய்யக்கூடிய அபகாரமாகும். கேவலம் ஒரு பெண்பிள்ளையின் உபயோகமற்ற வார்த்தையைக் கேட்டு அதற்காக நண்பர்களையும் ராஜ்ஜியத்தையும்விட்டுக் காடுவந்து சேரும்படியான கேவலனன்றோ அவன். கரனைக்கொன்ற கொடிய துஷ்டனை ராமனுக்கு உயிரைக்காட்டிலும் மிகுந்த அன்பிற்கிடமான சீதையை உன் எதிரிலேயே பறிக்கவேண்டுமென்று நிச்சயித்துவிட்டேன். இந்த என் விருப்பத்தைத் தேவாசுரர்கள் ஒன்றுகூடினும் மாற்ற முடியாது. நானுன்னிடம் நல்லது கெட்டது என்பவற்றைக் கேட்கவரவில்லை. என்னைப் போன்ற அரசர்கள் அக்கினி, இந்திரன், சந்திரன், வருணன், யமன் என்னும் இவ்வைவருடைய உருவங்களையும் தரித்திருப்பார்கள். ஆகையால் என்னை எப்பொழுதும் நீ கௌரவித்துப் பூஜித்து நானிட்ட வேலைகளைச் சந்தோஷத்துடன் செய்ய

வேண்டியிருக்க, கேவலம் அஞ்ஞானத்திலாழ்ந்து கண்மண் தெரியாமல் உன் வீட்டேறி வந்ததே காரணமாக அரக்கர் தலைவனை என்னை அவமதித்துப் பேசுகின்றனை. இனி என்கட்டளையை நீ மீறாமல் செய்யவேண்டியதொழிய வீண்பேச்சுகள் பேசவேண்டா.

நீ நான் சொல்லுகிறபடி சுவர்ணமயமான மானுருவத்துடன் சீதையின் முன்னிலையில் சென்று திரியவேண்டும். சீதை நிச்சயமாக உன்னைப்பிடித்துத் தரும்படி ராமனை வேண்டுவாள். ராமன் லக்ஷ்மணனைச் சீதைக்குக் காவலாக வைத்துவிட்டு உன்னைப் பின்தொடர்வான். நீ தூரமாகச் சென்று ராமன் சொன்னாற்போலவே 'ஐயோ சீதே! லக்ஷ்மணா!' என்று முறையிடுவாயாக. உடனே லக்ஷ்மணன் ராமனிடத்திலுள்ள ஸ்நேகத்தினால் ஒன்றும் தோன்றப் பெறாமல் சீதையாலும் தூண்டப்பட்டு ராமனைத் தேடிச் செல்வான். அச்சமயம் தனியாய்விடப்பட்ட சீதையை அபகரித்துக்கொண்டு போய்விடுகிறேன். இதுவே மிகச் சிறந்த உபாயம்.

இங்ஙனம் நான் சொன்னபடி நீ கேட்காவிடில் உன்னை நிச்சயமாக நானே கொன்றுவிடுவேன். நீ ராமனிடம் நான் சொல்லுகிறபடி செல்வாயாயின் ஒரு கால் உன் உயிர் பிழைத்தாலும் பிழைக்கும். அங்ஙனன்றி என் விரோதத்தை நீ சம்பாதித்துக்கொண்டால் உனக்கு மரணம் இப்பொழுதே நேரிட்டு வருது நிச்சயம். இவ்விரண்டிலொன்று உனக்கு எது சம்மதமோ அதை உடனே செய்வாயாக". என்றனன்.

நாற்பதாவது ஸர்க்கம் முற்றிற்று

## நாற்பத்தோராவது ஸர்க்கம்

### மாரீசன் ராவணனுக்கு மீளவும் இதங்களைப் போதித்தல்

இங்ஙனம் ராவணன் மாரீசனைப் பலவந்தமாகத் தன் கருத்துக்கிணங்கும்படி சொல்லிய போதிலும் மாரீசன் பின்னும் அவனை நோக்கி "ராவணா! எந்த பாபிஷ்டன் உன் ராஜ்ஜியத்தையும் ஐசுவரியங்களையும் கண்டு சகியாமல் உனக்கும் உன் பந்துமித்திரர்களுக்கும் விநாசத்தை விளைவிக்கும்படியான இந்த உபாயத்தை உனக்கு உபதேசித்தனன்? ஐயோ! உன்னைக்காட்டிலும் பலவானான ராமன்கையிலகப்பட்டு நீ நசித்துப்போக வேண்டுமென்று எவனோ உன் விரோதி யொருவன், மேலுக்கு உன்னிடம் சிநேகபாவம்பூண்டு இத்தகைய காரியத்தைச் செய்யும்படி உன்னைத் தூண்டியிருக்கவேண்டும். ஈதென்ன கெட்டகாலம்! உனது மந்திரிகள் உனக்கு இதைச் செய்யக்கூடாதென்று புத்தி புகட்டவில்லையோ? ஐயோ! உனது மந்திரிகளும் உன்னைப்போன்ற துர்ப்புத்தி யுடையவர்கள் போலும். ராவணா! நான் சொல்வதை மீண்டும் கேள். நீ இந்த துராலோசனைக்குட்பட்டு ராமனை விரோதித்துக் கொண்டால் நிச்சயமாக உனக்கும் அரக்கர் குலத்திற்கும் தப்பாத கேடுவிளையும்.

ஐயோ! எனக்கு எதிர்பாராத விதமாக இத்தகைய பயங்கரமான ஆபத்து நேர்ந்திருக்கிறதே! நான் என்னைப் பற்றிச் சிறிதும் வருந்தவில்லை. நீ உன் கூட்டங்களோடு நிச்சயமாக நாசமடையப் போவதைப்பற்றித்தான் வருந்துகின்றேன். என்றால் உனக்குச் சகாயம் ஏற்படுவதால் நீ உன் காரியத்தில் ஜெயமடைவாய் என்று எண்ணவேண்டாம். நான் உன் கையால் மரணமடைவதைவிட ராமன் கையினால் மரணமடைந்து கிருதார்த்தனாவேன். ராமனைப் பார்த்தமாத்திரத்திலேயே நான் இறந்துபடுவேனென்பதை நீ நிச்சயித்துக்

கொள்வாயாக. நீ சீதையைக் கொண்டுவந்தவுடனே நீயும் பந்துக்களோடுகூட நாசமடையப்போகிறாய் என்பதை உறுதியாகத் தெரிந்துகொள். ஐயோ! நான் எவ்வளவு சொல்லினும் நீ கேட்கவில்லையே! ஆயுள் முடியப்பெற்ற மனிதர்கள் பிணம் போன்றிருப்பவர்களாகையால் நண்பர்கள் சொல்லும் வார்த்தையைக் கேட்கமாட்டார்கள்" என்று மொழிந்தனன்.

நாற்பத்தோராவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நாற்பத்திரண்டாவது ஸர்க்கம்

## மாரீசன் மானுருக்கொண்டு சீதையின் முன்செல்லுதலும் சீதை அதைப்பார்த்து ஆச்சரியப்படுதலும்

பிறகு மாரீசன் எவ்வளவு சொன்னபோதிலும் ராவணன் மனம் திரும்பக்காணாமையால் வேறு கதியின்றி ராவணனுடன் அவன் தேரில் ஏறிக்கொண்டு பட்டணங்களையும், உத்யான வனங்களையும் பர்வதங்களையும் நதிகளையும் ராஜ்ஜியங்களையும் தாண்டித் தண்டகாரணியமடைந்து ராமனது ஆச்சிரமத்தைக் கண்டனன்.

உடனே மாரீசன் மனத்திற்கினிதாகவும், கண்ணுக்கு அழகாகவும் பலவகை வர்ணங்களால் விசித்திரமாகி விளங்குகிற மானுருவம் தரித்துச் சீதையை வஞ்சிப்பதற்காக அங்கு நாற்புறங்களிலும் பசும்புல் நிறைந்த விடங்களில் மேய்ந்து துள்ளி விளையாடியும் அற்புதமாய் மண்டலாகாரமாகச் சுழலமிட்டுக்கொண்டு மிருந்தனன்.

அந்த மானின் கொம்புகள் இந்திர நீலமணிமயமாய் இருந்தன. முகத்திலுள்ள ரேகைகளில் சில வெளுத்தும் சில கறுத்தும் இருந்தன. குளம்புகள் வைடூரிய மணிபோலிருந்தன. அதன் வால் இந்திரனது வில்லைப்போல் பலவித வர்ணங்களமைந்து பளபளவென்று பிரகாசித்துக்கொண்டிருந்தது. அது பார்த்தவுடனே மனத்தை இழுத்து வசப்

படுத்துவதாகிப் பலவித ரத்தினங்கள்போன்ற புள்ளிகள் அமையப்பெற்றுப் பொன்மயமாய் விளங்கியது.

காட்டிலுள்ள மற்றமிருகங்களெல்லாம் அதனருகில் சென்று மோந்து தம்மைத் தின்னும் ராக்ஷசனென்று தெரிந்து பயந்து பறந்தோடிக்கொண்டிருந்தன. அந்த மாயா மிருக ராக்ஷசன் தனது தன்மையை மறைக்கும்பொருட்டு அந்தக் காட்டிலுள்ள பிராணிகளைத் தொட்டுப்பார்ப்பதோடு நின்று தின்னாமலிருந்தனன்.

சீதை அந்த அற்புதமான மானைக்கண்டதும் அவ்வரக்கன் முன்னைவிட அற்புதமாய்க் காட்சிதந்து உலாவத்தொடங்கினன். சீதை அவ்வழகிய தோற்றத்தைக் கண்டு பெருவியப்புற்றனள்.

நாற்பத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

நாற்பத்துமூன்றுவது ஸர்க்கம்.

## சீதை மாயாமிருகத்தைக் கண்டு வேண்டுதலும் லக்ஷ்மணன் மறுத்தலும், ராமன் பிடிக்கப் புறப்படுதலும்.

அந்த விசித்திரமான மானைக்கண்ட லக்ஷ்மணன் ராமனை நோக்கி "அண்ணா! இந்த மிருகம் அந்த மாரீசனென்கிற ராக்ஷசனேயென்று எனக்குத் தோன்றுகிறது. ராமா! இவ்வேடத்துடன் இவன் வனமெங்கும் திரிந்து வேட்டையாடுகிற பல அரசர்களைக் கொன்றனன். இவன் பல மாயைகளை யறிந்தவன். ராகவா! ரத்தினம் போன்ற புள்ளிகள் மலிந்து விசித்திரமான இப்படிப்பட்ட மிருகம் பிரபஞ்சத்தில் எங்கும் கிடையாதல்லவா? ஆகையால் இது மாயையே. இதில் சந்தேகமில்லை" என்றனன்.

சீதை லக்ஷ்மணனைத் தடுத்து அம்மிருகத்தினது தோலின் மேன்மைக்குப் புத்திமயங்கி மிக்க வியப்புடன்

ராமனை நோக்கி "மஹாபாஹோ! இத்தகைய அழகிய மானை நான் இதுவரை எங்கும் கண்டதில்லை. இந்த மிருகம் என் மனத்தைத் எவ்வளவோ இழுத்து மயக்குகின்றது. இது உயிரோடு உனக்குப்பிடிபடுமாயின் இப்பொழுது நம்மெல்லார்க்கும் நல்ல போதுபோக்குக்கு உறுப்பாயிருப்பதுடன் வனவாசம் தீர்ந்து அயோத்தியில் அந்தப்புரத்திலிருக்கும் பொழுதும் இது என் மாமியார்களுக்கும் பரதாதிகளுக்கும் இன்பத்தை விளைத்துக்கொண்டிருக்கும். இம்மிருகம் உயிரோடு உனக்குப் பிடிபடாதாயின், செத்துப்போன இதன் தோலாயினும் எனக்கு இன்பத்தை விளைத்துக்கொண்டிருக்கும். இதைக் கொன்று கொண்டுவருவாயாயின் இதன் தோலைப் பரப்பிக்கொண்டு அதன்மேல் உன்னுடன்உட்கார விரும்புகின்றனன்" என்றனள்.

அத்தகைய விசித்திரமான மிருகத்தைக் கண்டவுடன் ராமனது மனமும் வியப்புற்றது. அவன் லக்ஷ்மணனை நோக்கி "லக்ஷ்மணா! சீதை இந்த அழகிய மிருகத்தின்மேல் எவ்வளவு ஆசைகொண்டிருக்கிறாள் பார். நீ கூறியபடி 'இது மாயாமிருகமா? அன்றோ'வென்பதை ஆராயாமல் நான் இதைப் பிடிக்க விரும்புவது தகுமா? என்று நீ கேட்பாயாயின், ஒரு வஸ்துவை விரும்புமவன், அதன்மேன்மையைப் பார்த்து முன்பின் விசாரியாமல் அதைச் சாதிக்கவேண்டுமென்று முயற்சிகொள்வானாயின் அதுவே ஆசைப்படத் தகுந்த பொருள் என்று நீதிசாஸ்திரம் அறிந்தவர்கள் கூறுவார்கள். இதுவும் அப்படிப்பட்ட விஷயமாதலால் இதைப் பற்றி விசாரிக்கவேண்டியதில்லை. லக்ஷ்மணா! ஒருகால் நீசொல்லியபடி இது மாரீசனுடைய மாயையே ஆகுமாயின் அப்பொழுது இதை அவசியம் கொன்றுவிடுவேன். இம்மாரீசன் முன்பு அநேக அரசர்களைக் கொன்றிருக்கிறானாகையால் இவனை அவசியம் கொல்லவேண்டும்.

முன்பு இத்தண்டகாரணியத்தில் வாதாபி என்னும் ஒரு ராக்ஷசன் ரிஷிகளை நிராகரித்துத் தான் ஆட்டுருவம் தரித்து அவர்கட்குத் தின்னும் ஆகாரமாகி அவரது வயிற்றில் சென்று அதைப்பிளந்துகொண்டு அவர்களைக் கொன்று வெளிவந்தனன். அப்படிப்பட்டவனை அகஸ்திய முனிவர் தம் உதரத்தில் ஜீர்ணமாகச்செய்தனர். லக்ஷ்மணா! இம்மாரீசனும் கபடமுடன் இத்தகைய மாயாமிருகரூபம் தரித்து வந்திருப்பானாகில் இவனும் வாதாபியைப்போல் உயிரிழக்கப் போகிறான்.

லக்ஷ்மணா! முடியுமானால் இம்மிருகத்தை உயிருடன் பிடித்துக்கொண்டுவருகிறேன். இல்லையேல் அடித்துக் கொன்றுவிடுகிறேன். இதன் தோலின்மேல் சீதைக்கு எவ்வளவு பிரியம் பார்த்தனையோ? ஆகையால் முக்கியமாக இதன் தோலைப் பற்றியே இது பிழைக்காது. நான் வரும் வரையில் நீ சீதையைப் பத்திரமாகக் காத்துக்கொண்டிருப்பாயாக. நான் இந்த மானைக்கொன்று இதன் தோலை எடுத்துக் கொண்டு இதோ வந்துவிடுகிறேன். ஜடாயுவென்னும் பறவையுடன் நீ சீதையை அருகில்வைத்துக்கொண்டு ஜாக்கிரதையாகப் பார்த்துக்கொண்டிரு" என்றனன்.

**நாற்பத்துமூன்றுவது ஸர்க்கம் முற்றிற்று.**

---

## நாற்பத்துநான்காவது ஸர்க்கம்.

## மாரீசன் மாண்டொழிதல்.

ராமன் உடனே வில்லைக் கையிற்பிடித்து மாரீசனைத் தொடர்ந்தனன். அந்த மாயாமிருகம் ராமனை வஞ்சிக்கத் தொடங்கி ராமனைப் பார்க்கும்பொழுதெல்லாம் பயந்தாற்போல் ஓடியும், தொடுத்துவிடும் பாணம் தன்மேல் படாதபடி தப்புவித்துக்கொண்டும், ஒருகால் கையில் அகப்படுவதுபோல்

ஆசையுறுவித்தும், ஒரு சமயம் வேகமாகக் குதித்தோடியும், சில இடங்களில் மரங்களினிடையில் மறைந்துகொண்டும் ஓடிக்கொண்டிருக்கையில் ராமன் அச்சேஷ்டைகளைப் பார்த்துக்கொண்டே வெகுதூரம் அதைப் பின்தொடர்ந்து போயினன்.

இங்ஙனம் அந்தமான் அதிகதூரம் ராமனைக் கொண்டுபோய் விட்டபடியால் ராமன் களைப்புற்று, லக்ஷ்மணன் சொன்னபடி அதனை மாயா மிருகமென்று அறுதியிட்டு ஒரு திவ்யாஸ்திரத்தை அதன்மேல் பிரயோகிக்க, அது அம்மிருகத்தின் மருமஸ்தானத்தின் மூலம் ஊடுருவிச் சென்றதால் மாரீசன் மிகவும் பயங்கரமான உருவத்துடன் கீழே விழுந்து பெரிய கூச்சலிட்டனன்.

இங்ஙனம் கீழே விழுந்த மாரீசன் மிகவும் உரத்த குரலில் ராமனது குரலைப்போல் 'ஐயோ! சீதே! லக்ஷ்மணா!' என்று கூச்சலிட்டனன். ராமபாணம் பட்டமாத்திரத்தில் மாரீசன் இங்ஙனம் கூச்சலிட்டுப் பூமியில் ஓர் பெரிய ராக்ஷச உருவத்துடன் விழுந்து உயிர் விட்டனன்.

இதைக் கண்ட ராமன் "லக்ஷ்மணன் கூறியபடி இது மாரீசன் என்னும் அரக்கனது மாயச்செயலே, ஆ! இவன் இறக்கும் தருவாயில் நான் கூப்பிட்டாற்போல் 'ஐயோ! சீதே! லக்ஷ்மணா!' என்று உரக்க முறையிட்டுக் கூப்பிட்டனனே! இதைக் கேட்ட சீதையும் லக்ஷ்மணனும் என்ன பாடு படுவார்களோ?" என்று பலவாறு எண்ணமிட்டு மிகவும் திகிலடைந்த மனத்தனாய் மற்றொரு மிருகத்தையும் கொன்று அதன் மாமிசத்தை எடுத்துக்கொண்டு ஜனஸ்தானத்திலிருக்கும் தன் ஆச்சிரமத்தை நோக்கி வந்துகொண்டிருந்தனன்.

நாற்பத்துநான்காவது ஸர்க்கம் முற்றிற்று

---

## நாற்பத்தைந்தாவது ஸர்க்கம்
## சீதை லக்ஷ்மணனை ராமனிடம் செல்லும்படி ஏவுதல்.

*சீதை தன் கணவனது குரல்போன்ற அந்த சப்தத்தைக் கேட்டு லக்ஷ்மணனைப் பார்த்து "லக்ஷ்மணா! உனக்குக் காது கேட்கவில்லையா? உனதண்ணனுக்கு ஏதோ அரக்கர்களால் அபாயம் நேர்ந்திருக்கிறது. நீ சீக்கிரம் அவரிடம் சென்று அவரைக் காப்பாற்றுவாயாக." என்றனள். இங்ஙனம் சீதை எவ்வளவு சொல்லினும் லக்ஷ்மணன் அண்ணனுடைய கட்டளையை நினைத்து அவ்விடம்விட்டுப் போகவில்லை.*

*பிறகு சீதை கோபத்துடன் அவனை நோக்கி "நீ உன் சகோதரனுடைய அபாயக் குரலைக்கேட்டும் நான் வேண்டிக் கொண்டும் இன்னும் அவரிடம் செல்லாதிருக்கின்றனை. ஆகையால் நீ மேலுக்கு நண்பன்போல் வேடம் பூண்டு என்னை யபகரித்துக் கொள்வதற்காகவே இங்ஙனம் வாளா விருக்கின்றனை. உனக்கு ராமனிடத்தில் கடுகளவும் ஸ்நேக மில்லை யென்பது இப்பொழுது நன்கு தெரிகின்றது. நீ அவனை ஆபத்துக் காலத்தில் காப்பாற்றுமல், அவன் இறப் பதற்குச் சம்மதித்து, பிறகு என்னை மனைவியாக அடைய விரும்புகின்றனை. 'உன்னைக் காப்பதற்காக இருக்கிறேனென் கிறுயோ? நீ முக்கியமாக ராமனைப்பற்றி இங்கு வந்தவனே யன்றி என்னைப்பற்றி யல்ல. அப்படிப்பட்ட ராமன் பிராண ஆபத்து அடைந்திருக்கும் சமயத்தில் நான் இங் கிருந்து செய்யவேண்டிய காரியம் என்ன விருக்கின்றது? ஆகையால் என்னை ரக்ஷிப்பதற்காக நீ இங்கிருக்க வேண்டிய தில்லை." என்றனள்.*

*இவற்றைக் கேட்ட லக்ஷ்மணன் "வைதேகி! தேவர் களாயினும் அசுரர்களாயினும் கந்தர்வராயினும் அரக்கர் களாயினும் மனுஷ்யர்களாயினும் இன்னும் மற்றெவராயினும் ராமனை வெல்லமுடியாது. இதில் சந்தேகமில்லை. ஆகையால்*

ராமன் இல்லாதபோது உன்னை இக்காட்டில் தனியாக விட்டுப் போகமாட்டேன். தேவேந்திரனாலும் ராமனை வெல்லமுடியாது. நீ மனதில் சமாதானம் பெறுவாயாக. மேலும் நாம் கேட்டகுரல் ராமனுடையதல்ல, எவனோ ஒருவன் மாயையினால் இப்படிச் செய்திருக்கவேண்டும். அந்த மாரீசனே ஒருகால் இங்ஙனம் கூறியிருக்கலாம். நீ, நான் காத்து ஒப்புவிக்கவேண்டிய வஸ்துவாய் இருக்கின்றனை. உன்னை இக்காட்டில் தனியாய் விட்டுப்போக எனக்கு மனமில்லை. அரக்கர் தலைவனான கரனை ராமன் கொன்றதால் நம்மேல் ராக்ஷசர்கள் அனைவரும் கறுக்கொண்டு பகைமை பாராட்டி இம்மாதிரியான மாயைகளைச் செய்கிறார்கள். நீ சிறிதும் கவலையின்றி இருப்பாயாக'' என்றனன்.

சீதை மிகுந்த சினங்கொண்டு லக்ஷ்மணனை நோக்கி "லக்ஷ்மணா! நீ நிச்சயமாக என்னையபகரிக்க எண்ணியே இம்மாதிரி கபடவேஷம் போட்டு நீயாகவோ அல்லது பரதனது தூண்டுதலினாலோ ராமனைப் பின் தொடர்ந்து காட்டிற்கு வந்திருக்கின்றனை. லக்ஷ்மணா! என்னைப் பெறவேண்டுமென்கிற எண்ணம் உனக்காயினும் பரதனுக்காயினும் பலிக்காது. நான் ராமனை ஒரு நிமிஷமேனும் விட்டுப் பிரிந்திருக்கமாட்டேன். கோதாவரியில் விழுந்தாயினும், உயிர்ச்சுருக்குப் போட்டுக் கொண்டாயினும் விஷத்தையுண்டாயினும், நெருப்பில் குதித்தாயினும் பிராணனை விடுவேனேயன்றி ராமனைத்தவிர வேறு எந்த புருஷனையும் கண்ணெடுத்தும் பாரேன்'' என்று கடூரமாகக் கூறினாள்.

இங்ஙனம் சீதை கூறக்கேட்ட லக்ஷ்மணன் கலக்கமின்றி அஞ்சலி செய்து "மைதிலி! நீயோ என்னால் பூஜிக்கத் தகுந்தவள். இப்படி அனுசிதமான வார்த்தைகளைச் சொல்வது ஸ்திரீகளுக்குச் சுபாவமேயாகும். ஸ்திரீகள்

விஷயம் முதலான தருமங்களை விட்டவர்கள். சஞ்சலமான மனமும், குரூரமான இருதயமும் உடையவர்கள். சீதே! நீ உயர்ந்த ஜனகராஜன் வயிற்றில் பிறந்தும் இப்படிப் பேசுவது உனக்குத் தகுதியன்று. நீ பேசின கொடுஞ்சொற்களை நான் பொறுக்க வல்லனல்லன். சீதே! நான் இதோ ராமனிடம் செல்கின்றேன். உன்னை வனதேவதைகள் காப்பாற்றட்டும். ஜானகி! எனக்கு இப்பொழுது தோன்றுகிற அவசகுனங்கள் பயங்கரமாக இருக்கின்றனவே! ஆ! ஐயோ! இனி நான் மறுபடியும் ராமனோடுகூட உன்னைப் பார்ப்பேனோ பார்க்க மாட்டேனோ" என்று கூறி அவளை நமஸ்கரித்துத் தனியே அவளை விட்டுப்போக மனமில்லாதவனாய் அடிக்கடி அவளைத் திரும்பிப் பார்த்துக்கொண்டே ராமனிடம் போயினன்.

நாற்பத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நாற்பத்தாறவது ஸர்க்கம்.

### ராவண சந்நியாசி சீதையைக் கண்டு வார்த்தையாடுதல்.

இச்சமயம் தனியாய் விடப்பட்ட சீதையினிடம் சீக்கிரமாக சந்நியாசி ரூபம் தரித்த ராவணன் வந்து சேர்ந்தனன். மிகப் பயங்கரமான அங்காரக கிரகம் சந்திரனைப் பிரிந்த ரோகிணியைப் பார்ப்பதுபோல் மகாபயங்கரனாகிய ராவணன் ராமனைப் பிரிந்த சீதையைக் கண்டனன். அவனைக் கண்ட ஜனஸ்தானத்திலுள்ள மரங்களெல்லாம் பயத்தினால் சிறிதும் அசையாதிருந்தன. காற்றும் நன்றாக வீசவில்லை. கோதாவரி நதியும் பயத்தினால் அசைவற்று மெல்ல மெல்ல நடக்கத் தொடங்கிற்று.

சீதையைக் கண்டவுடன் மன்மத பாணங்களால் மனம் கலங்கப்பெற்ற ராவணன் சீதையை நோக்கி "பொன்வர்ணமுடையவளே! தாமரைப்பூவைப்போன்ற முகமும் கைகளும்

பாதமும் உடையவளே! நீ அழகிற் சிறந்த ஸ்ரீதேவியா? பூதேவியா? அப்சரஸ்திரீயா? ஐசுவர்யத்தின் அதிஷ்டான தேவதையா? இஷ்டப்படி உலாவமுயன்ற ரதிதேவியா? இப்படி எவ்வுலகிலும் காணக்கிடையாத அற்புதமான திவ்விய அவயவசௌந்தரியம் பொருந்திய நீ யார்? நதி தன் பிரவாகத்தால் கரையைக் கரைப்பதுபோல், நீ உன் அழகினால் என் மனதைப் பறிக்கின்றனை. இத்தகைய மனமோகன உருவுடன் கூடிய சுந்தராங்கியான நீ இக்காட்டில் தன்னந்தனியாய் வசிப்பதேனோ? நீ எப்பொழுதும் அரண்மனையில் ராஜபோகங்களையே யநுபவிப்பதற்குரியவளேயன்றி கொடிய ராக்ஷசர்களும் விலங்குகளும் வசிக்கின்ற இக்காட்டில் வசிப்பது சிறிதும் தகுதியன்று. உன் சம்பந்தமுள்ள பூமாலையே சிறப்புடையது; நீ எதை உண்கின்றனையோ அதுவே ஆகார வஸ்துக்களனைத்திலும் சிறந்தது. நீ எவனைக் கணவனாக அங்கீகரிக்கின்றனையோ அவனே புருஷர்களில் சிறந்தவன். நீ இவ்வனத்திலுள்ள கொடிய மிருகங்களைக் கண்டு எப்படி பயப்படாமலிருக்கின்றனை? உன் பெயர் என்ன? நீ யாருடையவள்? எங்கிருந்து வந்தனை?'' என்று வினவினன்.

சீதை அவனை உண்மையான சன்னியாசியென்றே நினைத்து அவனைக் கிரமப்படி பூஜித்து அவனை ஆகாரம் உட்கொள்ளும்படி வேண்டினள். அவன் சீதையைக் கொண்டு போவதிலேயே எண்ணமிட்டவனாய் இருந்தபடியால் அவனைப் போஜனம் செய்யும்படி ஒப்புக்கொள்ளச் செய்வது சீதைக்கு சாத்தியமாகாதிருந்தது. பின்னுமவள் ராவணனைப் போஜனம் செய்யும்படி வேண்டிக்கொண்டபடியே வெளியில் சென்ற ராம லக்ஷ்மணர்களை எதிர் பார்த்துக்கொண்டு அவர்கள் போன திசையைப் பார்த்துக்கொண்டிருந்தனள்.

நாற்பத்தாறுவது ஸர்க்கம் முற்றிற்று.

நாற்பத்தேழாவது ஸர்க்கம்.

## சீதை தன் விருத்தாந்தங்களை ராவணனுக்குச் சொல்லுதலும், ராவணன் தன்னை மணக்கும்படி அவளை வேண்டுதலும் சீதை அவனை நிந்தித்து நிராகரித்தலும்.

*சீதை ராவணனை நோக்கித் தான் இன்னாளென்பதைக் கூறியதுடன் ராம லக்ஷ்மணர்களின் விருத்தாந்தங்களையும் அவர்கள் வனத்திற்கு வந்த காரணங்களையும் ஒன்றேனும் விடாமல் கூறினள். இன்னுமவள் ராமனுடைய பராக்கிரமத்தைப் பற்றியும், கல்யாண குணங்களைப் பற்றியும் சரீர சௌந்தர்யங்களைப் பற்றியும் கூறினள். இன்னமும் அவள் ராவணனை நோக்கி "ராம லக்ஷ்மணர்கள் சற்று முன்புதான் வெளியே சென்றார்கள். சீக்கிரம் திரும்பி வந்துவிடுவார்கள். சற்று நேரம் உட்கார்ந்து களைப்பைப் போக்குவாயாக. நீ யார்? உன்னுடைய விருத்தாந்தங்களையும் உண்மையாகச் சொல்வாயாக" என்றனள்.*

*ராவணன் "சீதே! தேவாசுரர்களும் இவ்வண்டங்களும் எவனால் பயப்படுத்தப் பட்டனவோ அப்படிப்பட்ட ராக்ஷசர் கூட்டங்களின் தலைவனான ராவணனென்பவன் நானே. சமுத்திரத்தின் நடுவிலுள்ள ஒரு பெரிய மலையுச்சியில் அமராவதியை நிகர்த்ததாய் எனது பட்டணம் நிருமிக்கப்பட்டிருக்கிறது. நான் உன்னைக் கண்டது முதல் என் மனைவிகளிடத்தில் எனக்குச் சிறிதும் பிரீதி உண்டாகவில்லை. நான் வெவ்வேறு இடங்களிலிருந்து பல்லாயிரக் கணக்கான அழகிய ஸ்திரீகளைக் கொண்டுவந்திருக்கின்றனன். அவர்கள் எல்லாரிலும் விஞ்சிய அழகையுடைய நீயே எனக்குப் பட்டமகிஷியாயிருக்கத் தகுந்தவள். எனது பட்டணத்திற்கு லங்கை என்று பெயர். நான்கு பக்கங்களிலும் சமுத்திரத்தினால் சூழப்பட்டு அளவற்ற ஐசுவர்யங்களையுடைய என் பட்டணத்தில் அழகிய உத்தியான வனங்களில் நீ என்னோடு*

விளையாடி என்னைக் களிக்கச் செய்வாயாக. சீதே! நீ எனக்கு மனைவியானால் ஐயாயிரம் தாசிகளும் லட்சக் கணக்கான எனது மனைவிமார்களும் உனக்கு அடிமை செய்வார்கள்.” என்றனன்.

இங்ஙனம் மிகக் கடூரமான வார்த்தைகளைக் கேட்ட சீதை மிகவும் கோபித்து அந்த ராவணனை எள்ளளவும் பொருள் படுத்தாமல் “அடா துஷ்டனே! நான் எப்பொழுதும் அழகிய ராமனையே அநுஸரிப்பவள். நீ நரிபோன்றவன். உனக்கு எள்ளளவும் பெறக்கூடாத பெண் சிங்கம் போன்ற என்னைப் பெற விரும்புகின்றனை. சூரியனைக் காந்தி பிரியாதிருப்பது போல், ராமனைப் பிரிந்திருக்கப் பொருத என்னை உனக்குத் தொட்டுப் பார்க்கவும் ஸாத்யமன்று. நீ என்னை விரும்புவதானது, காலகூட விஷத்தைப் பருக விரும்புவது போலவும், ஊசியால் கண்ணைத் துடைக்க விரும்புவது போலவும், நாக்கால் கத்தியை நக்குவது போலவும், கழுத்தில் கல்லைக்கட்டிக்கொண்டு சமுத்திரத்தில் இறங்குவது போலவும் இருக்கின்றது. இன்னும் நீ என்னை இச்சிப்பது நெருப்பைத் துணியில் வாரி எடுத்துக்கொண்டு போவது போலவும், கூரான நுனிகளையுடைய சூலங்களின் மேல் நடக்க விரும்புவது போலவும் இருக்கின்றது. சிம்மத்திற்கும் நரிக்கும் எவ்வளவு பேதமோ, சிறிய கால்வாய்க்கும் சமுத்திரத்திற்கும் எவ்வளவு பேதமோ, பொன்னுக்கும் பித்தளைக்கும் எவ்வளவு பேதமோ, யானைக்கும் பூனைக்கும் எவ்வளவு பேதமோ அவ்வளவு பேதம் ராமனுக்கும் உனக்கும் இருக்கின்றது.

ஒருக்கால் நீ என்னை ராமனுக்குத் தெரியாமல் அபகரித்தாயாயினும், ஈ வஜ்ஜிராயுதத்தை விழுங்குமாயினும் அது அதற்கு ஜீர்ணமாகாதது போல் நான் உனக்கு ஜீர்ணமாக மாட்டேன். மேலும் உனக்கு மரணத்தையே விளைவிப்

பேன்." என்றிங்ஙனம் வெகு தைரியத்துடன் கூறிப் பிறகு பயத்தினால் தைரியமிழந்து காற்றிலசைந்து அலமருகின்ற வாழைமரம்போல் நடுங்கி நின்றனள்.

நாற்பத்தேழாவது ஸர்க்கம் முற்றிற்று

---

## நாற்பத்தெட்டாவது ஸர்க்கம்

## ராவணன் தன் பராக்கிரமங்களை சீதைக்குக் கூறுதலும் சீதை தூறுதலும்

சீதை இங்ஙனம் சொல்லுகையில் ராவணன் கோபாவேசமுற்றுச் சீதையை நோக்கி "சீதே! என்னை யார் என்று நினைக்கின்றனை? குபேரனுக்குத் தம்பியும் பத்துத்தலைகளையுடையவனும் சிறந்த தவங்கள் செய்து அரிய பெரிய வரங்கள் படைத்த தீரனுமாகிய ராவணனென்று என்னை அறிவாயாக. தேவதானவர்களும் கின்னர கருடர்களும் பிசாச உரக (பாம்புகள்) பன்னகர்களும் என்னைக் கண்டவுடன் பயந்து ஓடுவார்கள். நான் குபேரனை வென்று அவனுடைய தான இஷ்டப்படி ஸஞ்சரிக்கக்கூடிய புஷ்பக விமானத்தை அபகரித்தனன். இந்திரனையும் நான் வென்றவன். நான் இருக்குமிடத்தில் காற்றும் பயத்தினால் மெதுவாக வீசும். சூரியன் பயந்து குளிர்ந்த கிரணங்களைப் பரப்புவான். மரங்கள் இலையுங்கூட அசையாமலிருக்கும். நதிகள் ஜலம் பாயாமல் நின்றிருக்கும். என் பட்டணத்தைச் சுற்றி வெள்ளிமயமான வெளுத்த மதில் சூழ்ந்திருக்கிறது. அதிலுள்ள மெத்தை மேடைகள் முற்றும் சுவர்ணமயமாக விருக்கும். வெளி வாசற் படிகள் வைடூர்ய மணிகளால் செய்யப் பட்டவை. ராஜகுமாரியே! அப்படிப்பட்ட பட்டணத்தில் என்னுடன் நீ உத்தியான வனத்தில் விளையாடிக்களித்து வசிப்பாயாயின் நீ மானிட போகங்களையும் தேவ போகங்களை

யும் அநுபவித்து கேவலனான ராமனை ஒரு பொழுதும் நினைக்க மாட்டாய்.

ஸீதே! ராமன் வீரியமற்றவனாகையால் மூத்தவனாய் இருந்தும் ராஜ்ஜியத்தைக் கைப்பற்றாமல் தந்தையால் வனத்திற்குத் துரத்தப்பட்டனன். அத்தகைய அஸமர்த்தனான ராமனைக் கட்டிக்கொண்டு நீ என்ன செய்யப் போகின்றனை? நானோ ராக்ஷசர்களுக்குப் பிரபுவாய் இருக்கின்றனன். யுத்தத்தில் அந்த ராமன் என் ஒரு விரலுக்கும் நிகராக மாட்டான். அப்படிப்பட்ட என்னை நீயே வேண்டி மணக்க வேண்டியிருக்க, நானே மன்மத பாணங்களால் பிடிக்கப்பட்டு உன்னை வந்து வேண்டிக்கொள்கையில் நீ நிராகரிப்பது யுக்தமன்று.'' என்றனன்.

இங்ஙனம் இராவணன் கூறக்கேட்ட சீதை கோபத்தால் கண்கள் சிவக்கப் பெற்று அவனை நோக்கி "கொடிய செயல்களையுடைய ராக்ஷசப் பதரே! நீ குணசாலியான குபேரனுக்குத் தம்பியென்று சொல்லிக்கொண்டு என் இப்படிப்பட்ட பாபத்திற்கு முயற்சி செய்கின்றனை? நிகரில்லாத ரூப சௌந்தரியங்களையுடைய சசிதேவியைத் திரஸ்கரித்து தேவேந்திரனது கையினின்றாயினும் தப்புவித்துக்கொண்டு வெகுகாலம் பிழைத்திருக்கக் கூடுமேயன்றி, என்னை நீ தூஷித்துக்கொண்டு போனாலோ மரணத்தினின்றும் நிச்சயமாகத் தப்பமாட்டாய். நானும் பிழைத்திருக்க முடியாது.'' என்றனள்.

நாற்பத்தெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று

## நாற்பத்தோன்பதாவது ஸர்க்கம்

## ராவணன் நிஜரூபம் தரித்துச் சீதையை யபகரித்துப் போதலும் சீதை கதறுதலும்

உடனே ராவணன் கோபத்தினால் கைமேல் கையைத் தட்டி மிகவும் பெரிய உருவம் தரித்துச் சீதையை நோக்கி "சீதே! நான் முன்பு சொன்ன எனது பராக்கிரமங்களை நீ அடியோடு கேட்கவில்லைபோலிருக்கிறது. நான் ஆகாயத்தில் நின்று இரண்டு கைகளால் இந்தப்பூமி முழுவதையும் எடுப்பேன். சமுத்திரத்தையெல்லாம் குடித்துவிடுவேன். யமனையும் சூரியனையும் யுத்தத்தில் வென்று விடுவேன். பைத்தியமுடையவளே! நான் நினைத்தபடி வடிவம் கொள்ள வல்லவன். விரும்பினவற்றை யெல்லாம் கொடுக்கும் திறமுடையவன். உனக்கேற்ற கணவனாக இருக்கின்ற என்னைப் பார்ப்பாயாக." என்றனன்.

திடீரென்று ராவணன் சன்னியாசி வேடம் நீங்கி நிஜ ரூபம் தரித்துக் கோபத்தினால் கண்கள் சிவக்கப்பெற்று, சீதையைப் பார்த்து "அழகான இடையின் பின்புறமுடையவளே! நீ என்னை மணந்துகொண்டு இனிய சுகபோகங்களை யனுபவிப்பாயாக. நான் ஒருக்காலும் உனக்குக் கெடுதி செய்யமாட்டேன். ராஜ்ஜியத்தைத் துறந்து தரித்திரனாய்த் திரியும் ராமனை விட்டு நீ என்னையடைவாயாக" என்று கூறிக் காம வெறி மீதூரப் பெற்றுச் சீதையின் அருகிற்சென்று, புதன் ஆகாயத்தில் சுகமாகத் திரிகின்ற ரோகிணியைப் பிடிப்பதுபோல் சீதையைப் பிடித்துக்கொள்ள எண்ணித் தனக்குள்ள சாபத்தைப்பற்றிய பயத்தினால் சீதையின் தேகம் தன்மேல் படாதிருக்கும்படி அவளை இடக்கையால், தலை மயிர்களினும் வலக்கையால் தொடைகளினும் பிடித்துக் கொண்டனன். இதைக்கண்ட வனதேவதைகள் பயந்து

ஓடிப்போயினர். ராவணன் சீதையை அங்ஙனமே பிடித்துத் தன் ரதத்திலேற்றி வேகமாகப் பறந்து செல்லும்போது சீதை "ஐயோ! ராமா! ராமா!! லக்ஷ்மணு! இக்கொடியோனுல் கொண்டுபோகப் படுகிற விஷயம் உங்களுக்கெப்படி தெரியப் போகிறது? ஜனஸ்தானத்தில் நன்கு பூத்து விளங்கும் கர்ணிகா மரங்களே! ப்ரஸ்ரவணமலையே! கோதாவரீநதியே! வனதேவதைகளே! மிருகங்களே! பட்சிக் கூட்டங்களே! நான் உங்களனைவரையும் வணங்கி வேண்டிக் கொள்கிறேன். என்னை ராவணன் எடுத்துக்கொண்டு போகிருனென்று என் கணவனுக்குச் சொல்லுங்கள். அவன் மிகுந்த பராக்கிரம சாலியாதலால் என் சங்கதியைத் தெரிந்து கொள்வாளுயின் நான் சுவர்க்கலோகத்திலிருப்பினும், எமன் என்னை எடுத்துக் கொண்டு போயிருப்பினும் என்னைத் திரும்பக்கொண்டு வரு வான்" என்று உரக்க முறையிட்டனள்.

இங்ஙனம் கேட்பவர்கள் மனமிரங்கும்படி பரிதபித்துப் புலம்புகிற சீதை அங்கோர் மரத்தில் உட்கார்ந்திருந்த கழுகா கிய ஜடாயுவைக்கண்டு "ஓ! ஐயனே! ஜடாயு, என்னைப் பார்ப்பாயாக. இக்கொடிய ராவணன் என்னை ஒரு அனுதை யைப்போல் தூக்கிக்கொண்டு போகின்றனன். இவன் ஜெய சீலனும் ஆயுதம் தரித்தவனுமாய் இருப்பதால் உன்னுல் இவனைத் தடுக்க முடியாது. ஆகையால் நீ என்னை ராவணன் எடுத்துக்கொண்டுபோகும் விருத்தாந்தத்தையெல்லாம் நீ கண்டபடி ஒன்றும் தவருமல் ராமலக்ஷ்மணர்களுக்குச் சொல்லவேண்டும்." என்றனள்.

நாற்பத்தோன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

ஐம்பதாவது ஸர்க்கம்.

## ஜடாயு ராவணனைத் தடுத்துச் சீதையை விட்டுவிடும்படி இதமான வார்த்தைகளைக் கூறுதல்.

இங்ஙனம் சீதை அலறிக் கூவியழைத்ததைக் கேட்ட ஜடாயு, ராவணனை நோக்கி "ஓ ராவண! நான் மிகவும் வயது சென்ற ஜடாயுவென்னும் பெயருடைய ஒரு கழுகு. ஆகையால் நான் சொல்வதைச் சிறிது கேட்பாயாக. இந்தச் சீதை மகாபதிவிரதை. கோதண்டபாணியான ராமனது மனைவி. நீயோ பௌலஸ்த்யனது வயிற்றில் பிறந்து சிறந்த வரங்கள் பெற்று அரக்கர்களுக்கெல்லாம் அதிபதியாய் விளங்குகின்றனை. அப்படிப்பட்ட உனக்குப் பரஸ்திரீகளைக்கொண்டு போய் அநுபவிப்பது யுக்தமன்று. வேலியே பயிரை மேய்வதுபோல் அரசனாய் இருக்கும் நீயே இவ்விதமான கெட்ட காரியத்தைச் செய்தால் உனது குடிகள் இதைக் காட்டினும் கொடிய செயல்களைச் செய்து அதனால் பாவத்திற்குள்ளாவர்களல்லவா? ஆகையால் நீ சீதையை விட்டுவிடுவாயாக.

'சத்துருவின் மனைவியைப் பறிப்பது என் சுபாவம்' என்கிறாயோ, ராமன் உனக்கு எவ்விதத்திலும் சத்துருவல்லன். உனக்கு அவன் என்ன அபகாரம் செய்தனன்? 'கரனைக்கொன்றதற்காகச் சீதையைக் கொண்டுபோகிறேன்' என்னில் கரன் சூர்ப்பணகையின் வார்த்தையைக் கேட்டுப் பதினாலாயிரம் ராக்ஷசர்களுடன் 'ராமன் ஒருவனாய் இருக்கின்றானே' என்பதையும் நினையாமல் வீணில் அவன்மேல் யுத்தம் செய்தமையால் ராமன் தன்னைக் காத்துக்கொள்ளும்பொருட்டு அந்தக் கரனைக் கொன்றனன். இவ்விஷயத்தில் ராமன்மேல் யாது குற்றமிருக்கிறது? ஆகையால் சீக்கிரமாக நீ சீதையை விட்டுவிடுவாயாக. ராமனால் நீ மரணமடையாதிருப்பாயாக. கொடிய விஷமுள்ள ஸர்ப்பத்தைத் துணியின் முனையில்

முடிந்துகொண்டு அதைச் சிறிதும் தெரிந்துகொள்ளா திருக்கின்றனை. மூடனே! என்னைக்கிழவனென்று அவமதி யாதே. நான் அறுபதினாயிரம் வயது சென்றவன். நீயோ! நல்ல யௌவனப் பருவத்தனாய் ஆயுதங்களையும் உடையனாய் இருப்பதுடன் தேரின்மேலும் ஏறிக்கொண்டிருக்கின்றனை. ஆயினும் நீ சீதையை எடுத்துக்கொண்டு க்ஷேமமாகப் போய்ச்சேரமாட்டாய், நான் உன்னைப் போகவிடமாட்டேன்.

நீ சூரனாயின் என்முன்னே நின்று யுத்தம் செய்வாயாக. இல்லையாயின் ராமன் வரும்வரையில் கொஞ்சநேரம் பொறுத் திருப்பாயாக. அற்பனே! நிச்சயமாக அந்த ராமன் உன்னை யுத்தத்தில் கொன்றுவிடுவான். அந்த ராஜகுமாரர்கள் இல் லாத சமயத்தில் நீ சென்று ஒரு திருடனைப்போல் சீதையை அபகரித்துப்போகின்றனை. நீ அங்ஙனம் என் கண் முன்பே சீதையைக்கொண்டு செல்வதை நான் சகிக்கமாட்டேன். என் பிராணன் இருக்குமளவும் உன்னோடு கொடிய யுத்தம் செய்து சீதையைக் காப்பாற்ற முயல்வேனன்றி உன்னை வெறுமனே போகவொட்டேன். காம்பினின்றும் பழத்தை விழுத்தள்ளுவதுபோல் உன்னை இம்மேலான தேரினின்றும் கீழே விழுத்தள்ளுகிறேன், பார்" என்றனன்.

ஐம்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ஐம்பத்தோராவது ஸர்க்கம்.

## ஜடாயு ராவணர்களின் யுத்தமும் ஜடாயு அடிபட்டு வீழ்தலும்

இங்ஙனம் ஜடாயு நியாயம் பொதியுமாறு கூறுகையில் ராவணன் கோபங்கொண்டு அந்தப் பட்சிராஜன்மேல் எதிர்த் தோடினன். இந்த ராவண ஜடாயுக்கள் இருவர்க்கொருவர் கலந்து மல்யுத்தம் செய்தனர். பிறகு ராவணன் ஜடாயு

வின்மேல் கூரான பாணவர்ஷங்களைப் பொழிந்தனன். ஜடாயு அவற்றைப் பொருள்படுத்தாமல் ராவணனது சரீரம் முழுவதையும் கூரிய நகமுள்ள பாதங்களால் கீறிப் பலவாறு இரணங்களை யுண்டுபண்ணினன்.

பின்னும் ராவணன் மேன் மேலும் அடுக்கடுக்கான பாணங்களை அக்கழுகரசன்மேல் பிரயோகித்து வருந்தச் செய்தனன். ஜடாயு சீதையின் நிமித்தம் அவற்றைப் பொருள்படுத்தாமல் மிகுந்த ரோஷத்துடன் ராவணனது வில்லைத் தன் கால்களால் முறித்தனன். ராவணனது பாணங்களைத் தன் இறகுகளால் தடுத்துக்கொண்டு ராவணனது கவசங்களையும் ஜடாயு தூள்செய்தனன். பிறகு ராவணனது தேரில் கட்டிய கழுதைகளைக் கொன்று அவனது ரதத்தையும் முறித்தெறிந்தனன். அவனது வெண்கொற்றக் குடையையும் சாமரங்களையும் அவைகளைப் பிடித்துக்கொண்டிருந்த ராக்ஷசர்களுடன் அதம்செய்து சாரதியையும் தன் மூக்கினால் அறுத்துத்தள்ளினன். இங்ஙனம் ராவணன் தேர், வில், குடை, சாமரம், கழுதைகள், சாரதி இவற்றையெல்லாம் இழந்து சீதையை மடியில் எடுத்துக்கொண்டு தரையில் வீழ்ந்தனன். சமஸ்த பூதங்களும் ராவணனது பரிபவத்தைக் கண்டு சந்தோஷித்து 'நல்லது, நல்லது' என்றன.

இச்சமயம் ஜடாயு சற்று களைத்திருக்கக்கண்டு ராவணன் மீண்டும் சீதையை மடியில் எடுத்துக்கொண்டு ஆகாயத்தில் கிளம்பினன். ஜடாயு உடனே அவனை வழிமறித்து "அடா ராவணா! சீதை உன் குடியை மாளச்செய்யும் விஷமென்பதை நீ அறியாய். நீ ஒரு திருடனைப்போல் ராமலக்ஷ்மணர்களில்லாத சமயத்தில் சீதையைக் கொண்டு போகின்றனை. ஆண்பிள்ளையானால் அவர்கள் திரும்பி வருமளவும் இங்குத்தானே இருந்து நேரில் அவர்களை வென்று சீதையைக் கொண்டு போ. அவர்களை நீ காண்பாயாயின் கரதூஷணாதிகளைப்போல் நீயும்

எமபுரம் சேர்வாய். இப்பொழுதுனக்கு மரணகாலம் சமீபித்திருக்கிறது." என்று கூறுகையில் ராவணன் லக்ஷியம் செய்யாமல் ஓடிப்போவது கண்டு ஜடாயு அவன்மேல் வீழ்ந்து கூரான நகங்களால் அவன் முதுகு முழுமையும் பீறி, தலைமயிர்களைப் பிடுங்கி அவனது இடக்கைகள் பத்தையும் அறுத்துப்பிடுங்கிப் போட்டனன். ஆ! என்ன ஆச்சரியம்! மீண்டும் ராவணனுக்கு முன்போல் புஜங்கள் முளைத்தன.

ராவணன் உதடுகள் துடிக்க அக்கழுகரசனைத் தன் முட்டிகளாலும், பாதங்களாலும் குத்திக் குமுக்கினன். பிறகு அவர்களிருவர்க்கும் ஒரு முகூர்த்தகாலம் யுத்தம் நடந்தது. திடீரென்று ராவணன் கத்தியை எடுத்து ஜடாயுவின் இறகுகளையும் பாதங்களையும் வெட்டினன். அந்த க்ஷணத்திலேயே அஞ்ஜடாயு அடிபட்டுக் குற்றுயிருடன் பூமியில் வீழ்ந்தனன். இதைக் கண்ட சீதை மிகுந்த துக்கங்கொண்டவளாய்த் தரையில் வீழ்ந்த அப்பட்சிராசனைத் தன் பந்துக்களில் ஒருவனைப் பாராட்டிக் கட்டியணைத்துக்கொண்டு ரோதனம் செய்தனள்.

ஐம்பத்தோராவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ஐம்பத்திரண்டாவது ஸர்க்கம்

## சீதையை ராவணன் மீண்டும் கொண்டுபோகும் வேகத்தில் அவளது ஆபரணங்கள் கீழேவீழ்தலும், உலகம் முழுதும் விசார முறுதலும்

சீதை "ஐயோ! ராமா! லக்ஷ்மணா! என்னைக் காப்பாற்ற வந்த இக்கழுகரசனும் எனது தௌர்பாக்கியத்தினால் ராவணனால் அடியுண்டு பூமியில் வீழ்ந்தனனே! நீங்கள் என்னைக் காப்பீர்களாக" என்றிங்ஙனம் கேட்பவர் மனம் பரிதபிக்கும்படி ஓலமிட்டு அழுதனள். ராவணன், "ராம ராம" என்று

வாய் வெருவிக்கொண்டிருக்கும் சீதையைத் தலைமயிர்களில் பிடித்து மடியில்வைத்துக் கொண்டு ஆகாய மார்க்கத்தில் போயினன்.

சீதைக்கு இத்தகைய தீங்கு நேரிட்டதைக்கண்டு பிரபஞ்சம் முழுதும் வரம்பழியப்பெற்றுப் பேரிருள் மூடப்பட்டவைபோல் ஒன்றும் தோன்றப்பெறுதிருந்தன. அப்பொழுது வாயுவும் வீசவில்லை. சூரியனும் ஒளியற்றவனாயினான். பிரம்மதேவன் முதலிய தேவதைகள் 'நமது காரியம் கைகூடிற்று. ராவணன் நாசமடையப் போகிறான்' என்று ஒருவர்க்கொருவர் பேசி சந்தோஷித்தனர். எனினும் சீதையை ராவணன் பலாத்காரமாகத் திருடிக்கொண்டுபோவதை மாத்திரம் கண்டு அவர்களால் வருத்தப்படாமலிருக்க முடியவில்லை.

ராவணனுடைய மடியிலகப்பட்டு ராமனைப் பிரிந்திருக்கையால் சீதையின் முகம் மலரப்பெறுமல் ஒளிமழுங்கிப் பகலிலுதித்த சந்திரனைப்போன்றிருந்தது. ராவணன் மடியைச் சேர்ந்த சீதை கறுத்த மேகத்தைப் பிளந்துகொண்டு புலப்படுகிற சந்திரனைப்போல் காணப்பட்டாள். ராவணன் வேகமாகச் செல்லும்போது சீதையினது பட்டு வஸ்திரமானது சூர்ய காந்தியால் சிவந்த மேகம்போல் விளங்கியது. அவளணிந்திருந்த சுகந்த வாசனைகளையுடைய மலர்கள் சிதறிக் கீழே விழுந்தன. சீதையை மடியில்கொண்ட ராவணன் அவளது ஆபரணங்களின் ஒளியுடன் கூடியிருக்கையால் மின்னலோடும் இடிகளோடும் கூடின நீலமேகம்போல் பிரகாசித்தனன். ராவணன் வேகமாய்ச் செல்லுகையில் சீதையின் மிகுந்த ஒளிபொருந்திய சிலம்பு ஒன்று பூமியில் வீழ்ந்தது. அச்சிலம்பைத்தவிர மற்றும் சில ஆபரணங்களும் பேரொலியுடன் ஆகாயத்திலிருந்து விழும் நக்ஷத்திரங்களைப்போல் தரையில் வீழ்ந்தன.

அச்சமயம் ராவணன்போகும் வேகத்தினால் வழியி லுள்ள மரங்கள் அடிக்கப்பட்டு நுனிகளையசைத்துக்கொண்டு இருந்தன. ஸமஸ்தமான காட்டுப்பிராணிகளும் சீதையைக் கண்டு மனவருத்தமடைந்து ராவணன்மேல் கோபங்கொண்டு நிழலை யநுசரித்துப் பின்தொடர்ந்தோடின. ஸமஸ்தமான பூதங்களும் குவியல்குவியல்களாகச் சேர்ந்து 'ராமனுடைய மனைவியான சீதையை ராவணன் எடுத்துச்செல்கின்றானே! ஆகையால் இனி தர்மமே இல்லை. சத்தியமே இல்லை' என்று புலம்பிக்கொண்டிருந்தன.

'ராம, ராம!' என்று வாய் வெருவிக்கொண்டு ஓலமிட்டலறும் சீதையைக் கண்ட வனதேவதைகள் சரீரம் நடுங்கப் பெற்றனர்.

ஐம்பத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## ஐம்பத்து மூன்றாவது ஸர்க்கம்

## சீதை ராவணனது வீரங்களைப் பலவாறு நிந்தித்தல்

சீதை ராவணனைப்பார்த்து "அடா கெடுபுத்தி யுடையவனே! நீ எவ்வளவு நீசத்தன்மை யுடையவனே! என் நாதன் இல்லாத சமயம் பார்த்து என்னைத் திருடிக்கொண்டு ஓடிப் போகின்றனை. இதனால் உனக்குச்சிறிதும் வெட்கமில்லையா? நீ ராமனிடம் நேரில் யுத்தம் செய்ய அஞ்சியல்லவா சூழ்ச்சிச்செய்து இக்காரியம் செய்தனை. நீ எவ்வளவு சூரனடா! அடா அற்பனே! என்னைக் காப்பாற்றவந்த ஜடாயுவையும் கொன்று விட்டனையே! நேர்மையான நெறியில் வாராமல் சன்னியாசி வேடம்பூண்டு வஞ்சனையாக வந்த உன்னுடைய பராக்கிரமம் மிகப் பெரியது. அடா துஷ்டனே! நீ என்னை எடுத்துக்கொள்ள வந்தபோது நீ சொல்லிக்கொண்ட உன் வீரியத்தையும் பலத்தையும், சீ, எரிப்பாயாக. நீ

சிறிதுநேரம் இங்குத்தங்கி அந்த ராஜகுமாரர்களின் கண்களில் படுவாயாயின் முகூர்த்த காலமாயினும் நீ ஜீவித்திருக்கப்பெறாய். ராவணா! நீ நன்கு ஆலோசித்து மனதில் கபடமின்றி என்னை விட்டுப் போவாயாக. அப்படிச் செய்யாவிடில் நிச்சயமாக நீ ராமபாணங்களால் உன் கூட்டங்களுடன் மாண்டுபோவாய். 'நான் மாண்டு போனாலும் அக்கரையில்லை. என் விருப்பம் நிறைவேறினால் போதும்' என்பாயாயின், நீசா! உனது அந்த எண்ணம் அடியோடு நிறைவேறாது. ராமனைப் பிரிந்து இருக்கும் நான் இப்பொழுது பிரிந்திருப்பினும் வெகுகாலம் உயிரோடிருக்கமாட்டேன். சாகப்போகிறவர்களுக்கு இதமான வார்த்தைகள் ருசிக்காததுபோல் இப்பொழுது உனக்கு எனது இதமான வார்த்தைகள் ருசிக்கவில்லை. மிகவும் பயப்படவேண்டிய கொடிய மரணகாலம் உனக்கு இப்பொழுது சமீபித்து விட்டது. நீ சீக்கிரமாக யமலோகம் சென்று நீ செய்த கொடுமைகளின் பலன்களான கொடிய நரக வேதனைகளை யனுபவிக்கப் போகின்றாய். 'காலாந்தரத்தில் எனக்குக் கேடு வந்தால் வரட்டும். இப்பொழுது சுகம் நேருமல்லவா' என்பாயாயின் உனக்கு நிச்சயமாகச் சுகம் உண்டாகாது. மரணமே சம்பவிக்கும். எவன் தம்பியுங்கூட அருகிலில்லாமல் தான் ஒருவனாகவே ஒரு நொடிப்பொழுதில் பதினாலாயிரம் ராக்ஷசர்களைக் கொன்றானோ, அப்படிப்பட்ட பராக்கிரமசாலியான ராமன் நீ என்னை எந்த லோகத்தில் கொண்டு மறைத்துவைத்த போதிலும் உன்னைத் தொடர்ந்து வந்து வதம் செய்யாமல் விடான்'' என்று எவ்வளவு ரோஷத்துடன் கூறினபோதிலும் அந்தப் பாபிஷ்ட ராவணன் லக்ஷியம் செய்யாமல் அவளை எடுத்துக்கொண்டே போயினன்.

ஐம்பத்துமூன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

## ஐம்பத்துநான்காவது ஸர்க்கம்

### ஸீதை சில ஆபரணங்களை மூட்டை கட்டி எறிதலும் ராவணன் ஸீதையை அசோகவனத்தில் சிறைவைத்து ராமனைக் கொல்லச் சில ராக்ஷசர்களை ஜனஸ்தானத்திற்கு அனுப்புதலும்.

ஸீதை போகும் வழியில் ஒரு மலைச்சிகரத்திலிருக்கின்ற ஐந்து வானரச் சிரேஷ்டர்களைக் கண்டு அவர்கள் ஒரு கால் ராமனைக் கண்டு தன் விருத்தாந்தங்களைச் சொல்லக்கூடுமென்றெண்ணி, தன் பட்டு உத்தரீயத்தில் ஆபரணங்களை மூட்டையாகக் கட்டி அவர்கள் நடுவில் விழும்படி விட்டெறிந்தனள். இதை ராவணன் போகும் வேகத்தில் அறியவில்லை. அவ் வானரர்கள் 'ராம, ராம' என்று கதறும் ஸீதையைக்கண்டு பரிதபித்தனர். ராவணன் ராமலக்ஷ்மணர்கள் வந்துவிடுவார்களோ என்கிற பயத்தினால் ராமனது ஆச்சிரமத்தைத் திரும்பித் திரும்பிப் பார்த்துக்கொண்டே லங்கையை நோக்கி வேகமாய்ச் சென்றனன். போகும்வழியில் சமுத்திரம் ராவணனது பயத்தினால் தழுதழுத்து அலைகள் அடங்கவும், மீன்களும் ஸர்ப்பங்களும் வெளிப்புறப்படாமல் உள்ளேயே மறையவும் பெற்றிருந்தது. அப்பொழுது ஆகாயத்திலிருந்த சாரணர்கள் 'சரி, ராவணன் இவ்வளவோடு முடிந்தான்' என்று பேசிக்கொண்டனர்.

ராவணன் லங்கைக்குள் பிரவேசித்து அழகிய தன் அந்தப்புரத்திற்குள் நுழைந்து ஸீதையை அவ்விடம் வைத்து அவளுக்குக் காவலாகப் பிசாசம்போன்ற பயங்கரமான ராக்ஷஸ ஸ்திரீகளை ஏற்படுத்தி அவளுக்கு வேண்டும் எவ்விதமான வஸ்துக்களையும் தாமதமின்றிக் கொடுக்கும்படிக்கும் தன் அனுமதியில்லாமல் எந்தப்புருஷனும் ஸ்திரீயும் அவளைக் காணக்கூடாதென்றும், அப்படி மீறி நடப்பவர்களின் பிராணனைப் போக்கிவிடுவதாகவும் கூறி வெளியில் சென்றனன்.

வெளியில் சென்ற ராவணன் பலிஷ்டர்களான எட்டு ராக்ஷசர்களைக் கண்டு "ஓ! ராக்ஷசர்களே! ஜனஸ்தானத்தில் என்னால் ஏற்படுத்திவைக்கப்பட்ட கரதூஷணாதிகளும் பதினான்காயிரம் ராக்ஷசர்களும் ராமனென்கிற ஒரு துஷ்ட மனிதனால் மாண்டொழிந்தனர். அதன் நிமித்தமாக எனக்கு அவன்மேல் வைரம் உண்டாகி யிருக்கிறது. ஆதலால் அந்த ராமனை நான் கொல்வேனாயின் ஏழையாயிருப்பவன் பெரும் பொருள்பெற்றுச் சந்தோஷிப்பதுபோல் சுகம்பெறுவேன். நீங்கள் ஜனஸ்தானத்தில் கணக்கற்ற ராக்ஷசர்களைத் துணை கூட்டிச்சென்று அங்கிருந்துகொண்டு 'ராமன் என்னசெய்கிறான்?' என்று அவனுடைய சமாசாரங்களையெல்லாம் ஒன்று விடாமல் உள்ளபடியே கவனித்து எனக்கு அடிக்கடி தெரிவிக்கவேண்டும். அந்த ராமனது வதத்தைப் பற்றி இடைவீடின்றிப் பிரயத்தனம் செய்துகொண்டே இருக்க வேண்டும். ஆகையால் இந்தக் காரியத்தில் உங்களை உபயோகிக்கின்றேன்" என்றனன்.

அந்த ராக்ஷசர்கள் ராவணனைப் புகழ்ந்து பாராட்டி ஜனஸ்தானத்திற்குச் சென்றனர். ராவணன் சீதையை நினைத்து மிகுந்த காமவிகாரம்கொண்டு தன்கேட்டை எண்ணாமல் மோகத்தினால் சந்தோஷம் பெற்றவனாயினன்.

ஐம்பத்துநான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## ஐம்பத்தைந்தாவது ஸர்க்கம்.

### ராவணன் சீதைக்குத் தன்போகசாதனங்களைக்காட்டித் தன்னை மணக்கும்படி வேண்டுதல்

ராமனைவிட்டு நீங்கிப் பரிதபித்துப் புலம்பும் சீதையிடம் ராவணன் சென்று, அவள் எவ்வளவு தடுத்தபோதிலும் கேளாமல் அவளைப் பலவந்தமாக எடுத்துக்கொண்டுபோய்,

தேவகிருகம்போன்ற தன் வீட்டையெல்லாம் காட்டினன். அதில் ஸீதை அழகிய விமானங்களும் ஸ்திரீகளும் பலவித பக்ஷிகளும், ரத்தினங்களும், பிரகாசிக்கக் கண்டனள். நவரத்தினங்களால் நிருமாணிக்கப்பெற்ற உப்பரிகைகளின் மேல் ராவணன் ஸீதையைக் கொண்டுபோயினன். அங்குள்ள விசித்திர விநோதங்களையும் ரமணீயமான நடைவாவி, நந்தவனம், குளம் முதலியவற்றையும் ராவணன் ஸீதைக்குக் காட்டி "ஸீதே! பயங்கரமான காரியங்களைச் செய்யவல்ல பலகோடி ராக்ஷசர்களுக்கு நான் தலைவன். பதினாயிரக் கணக்கான வேலையாட்களும் உண்டு. எனக்குள்ள ராஜ்ஜியாதிகாரமும் என் பிராணனும் உன்னதீனமே. அகன்ற கண்களையுடையவளே! நீ என் பிராணனைக்காட்டிலும் மேலானவள். நீ என்னை மணந்துகொள்வாயாக. இந்த அந்தப்புரத்திலுள்ள ஸமஸ்தமான உத்தம ஸ்திரீகளும், கணக்கற்ற என் மனைவிமார்களும், பட்டமகிஷிகளும் உன்னை எஜமானியாகக் கொள்வார்கள்காண்! ராமனை நினையாமல் என்னைக் கைப்பற்றி மன்மதாவேசத்தினால் வருந்துகின்ற என் மேல் கிருபைசெய்து என்னைக் களிக்கச்செய்வாய்.

ராமனால் இவ்விடம் வரமுடியாது. ஏனெனில் நூறு யோசனை அளவுடைய இந்த லங்கை பலவாயிரம் ராக்ஷசர்களாலும் சமுத்திரத்தினாலும் சூழப்பட்டது. தேவேந்திரனும் தேவாசுரர்களும் இதில் புகமுடியாது. வீர்யத்தில் எனக்கு நிகரானவன் எந்த லோகத்திலுமில்லை. ராஜ்ஜியத்தை இழந்து, தாபஸனாகி ஆயுள் முடியப்பெற்ற கேவல மனுஷ்யனான ராமனால் என்ன காரியம் செய்யமுடியும்? ஸீதே! நானே உனக்குத் தகுந்த கணவன். ஆகையால் என்னையே கைப்பற்றுவாயாக.

ஸீதே! யௌவனம் நிலையாய் இருப்பதன்று. ஆகையால் இங்கு இப்பொழுதே என்னோடுகூடி யௌவன சுகங்களை

அநுபவிப்பாயாக. ராமனுக்கு இனி உன்னைப் பெறுவது சிறிதும் சாத்தியமன்று. மூன்று லோகங்களிலும் என்னைப் போன்ற திறமை வாய்ந்தவன் எவனுமகப்படமாட்டான். ஆகையால் நீ என்னை மணந்து மனம் களிப்புறச் செய்வாயாக.

சீதே! நான் குபேரனிடமிருந்து அபகரித்த புஷ்பக விமானம் இதோ இருக்கிறது பார். இது எத்தனை பேர்களும் உட்காரப் போதுமான விஸ்தாரமுடையதாகி ரமணீயமாய் இருக்கிறது. இந்த விமானத்தில் நீ என்னோடு கூடிச் சுகமாக விளையாடிக் களிப்பாயாக. அழகிய இடையின் பின்புறமுடையவளே! நீ இனி உன் துக்கத்தைப் போக்கிச் சந்தோஷமாய் இருப்பாயாக" என்றனன்.

சீதை கண்ணை மூடிக்கொண்டு கண்ணீரைப் பெருக்கி மிகுந்த துக்கத்துடன் பரிதபிக்கும்போது ராவணன் 'சீதே! கணவனைக் கைவிட்டு வேறொருவனைக் கைப்பற்றினால் தர்ம லோபம் நேருமேயென்று லஜ்ஜைப்படவேண்டாம். தெய்வ கதியால் உனக்கு என்னோடு நேர்ந்த இந்த சம்பந்தம் அதர்மமன்று. அழகிய உன் பாதமலர்களை என் தலைகளைச்சாய்த்து நன்கு படியும்படி உன்னைப் பலவாறு வணங்குகின்றேன். என்மீது விரைவில் அருள்புரிந்து என்னை யாட்கொள்வாயாக. நான் மன்மத பாணங்களால் பரிதபித்து என் பெருமைக்குத் தகாத நீசமான இவ்வார்த்தைகளை மொழிந்தனன். நான் இதுவரை எப்படிப்பட்ட ஸ்திரீக்கும் தலை வணங்கி நமஸ்கரித்தறியேன்" என்று வேண்டிக் காலன்வசம் அகப்பட்டு சீதை தன்னுடையவள் என்று நினைத்துவிட்டனன்.

ஐம்பத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

## ஐம்பத்தாறாவது ஸர்க்கம்.

### சீதை ராவணனை நிந்தித்துப் பேசுதலும் சீதையை அசோகவனத்திற்குக் கொண்டுபோதலும்

சோகத்தினால் மனக் களிப்பற்றிருந்த சீதை ராவணன் அங்ஙனம் சொல்லக்கேட்டு மிகவும் தைரியமாக ராவணனை நோக்கி "சத்தியசந்தரான தசரத மகாராஜரது குமாரனான ராமனது மனைவியாகிய நான் வழிதப்பி நடக்கமாட்டேன். இக்ஷ்வாகு குலத்தை விளங்கச்செய்ய வந்து பிறந்த அந்த ராமன், தம்பியான லக்ஷ்மணனுடன் வந்து உன் பிராணனை வாங்கப்போகின்றனன். நீ அவனுக்கெதிரில் தைரியமாக என்னைக்கொண்டு வந்திருப்பாயாயின் கரனைப்போல் யுத்தத்தில் மாண்டுபோயிருப்பாய். எனினும் இனி நீ உயிருடன் அவனிடமிருந்து தப்பப்போகிறதில்லை.

ராவணா! ராமன் ஆகாயத்திலுள்ள சந்திரனைக் கீழே விழத் தள்ளவும் வல்லவன். சமுத்திரம் முழுவதையும் உலரச் செய்யவும்வல்லவன். அப்படிப்பட்ட ராமன் தன் சீதையை இங்கு விட்டுவைக்கமாட்டான். உனக்கு ஆயுள் முடிந்துவிட்டது. நீ அன்னிய ஸ்திரீயைத் தொட்ட பாபத்தினால் இந்த லங்காபுரியும் சீக்கிரத்தில் விதவையாகப் போகின்றது. ராமனைத் தீனன் என்றும் தாபஸன் என்றும் கூறி இகழ்ந்து பேசினை. அவனோ மகாதேஜஸ்ஸும் தெய்வ பலமும் உடையவன். ஆனதுபற்றியே அவன் பல்லாயிரக் கணக்கான ராக்ஷசர்கள் வாசம் செய்யும் கொடிய தண்டகாரணியத்தில் நிர்ப்பயனாய் வாசம் செய்கின்றனன். ராக்ஷஸாதமனே! நீ என்னை என் கணவன் இல்லாத சமயத்தில் ஒரு திருடனைப்போல் என் விருப்பத்திற்கு மாறாகக் கொண்டு வந்தபடியால் அந்த ரகுகுல ராமன் உன்னையும் உன்னைச் சேர்ந்தவர்களையும் ஒரு நொடிப்பொழுதில் வதைக்கப் போகின்றனன் காண்.

ராவணு! ராமனது தர்மபத்தினியும் பதிவிரதையுமான என்னைப் பாபிஷ்டனுன நீ தொடுவது எள்ளளவும் தகாது. அடா துஷ்டனே! இந்த தேகம் இயற்கையாகவே ஜடமாய் இருப்பது. மேலும் சேஷ்டைகளெல்லாம் அடங்கப்பெற்றிருப்பது. இப்படிப்பட்ட இந்த தேகத்தை நீ கட்டிலும் கட்டுவாயாக. கொன்று தின்னிலும் தின்பாயாக. எனக்கு இந்ததேகத்தையாவது பிராணனையாவது காக்கவேண்டிய அவசியம் எள்ளளவுமில்லை. நான் 'சீதை பதிவிரதா தர்மத்தினின்றும் தவறிவிட்டாள்' என்னும் அபவாதத்தை மாத்திரம் எள்ளளவும் பொறுக்கமாட்டேன்." என்றனள்.

இவற்றைக்கேட்ட ராவணன் மிகுந்த கோபங்கொண்டு "சீதே! இன்னும் பன்னிரண்டுமாதங்கள் உனக்குத் தவணை கொடுக்கிறேன். அதற்குள் நீ என் கருத்துக் கிசையாவிடின், பிறகு மறுநாள் காலையில் புசிக்கும் போஜனத்திற்காக உன்னை உபயோகிப்பேன்" என்று கூறிப் பிறகு ராக்ஷச ஸ்திரீகளைப் பார்த்து "இந்த சீதையை அசோக வனிகையின் மத்தியில் கொண்டுபோய் வைப்பீர்களாக. இவளை நயபயங்களால் எனக்கு வசப்படும்படி செய்வீர்களாக. காட்டிலுள்ள பெண் யானையைச் சுவாதீனப் படுத்துவதுபோல் இவள் உயிருக்கு ஹானி விளைவிக்காமல் இனிய உரைகளைச் சொல்லித் தேற்றி வசப்படுத்துவீர்களாக" என்று கட்டளையிட்டு அவ்விடம் விட்டகன்றனன். ராக்ஷச ஸ்திரீகளும் அங்ஙனமே சீதையை அசோகவனத்திற்குக் கொண்டுபோயினர். சீதை புலிகளின் இடையிலகப்பட்ட பெண்மான்போல் அந்த ராக்ஷசிகளின் கையிலகப்பட்டுத் தவித்தனள். ராக்ஷசிகள் அவளை யடிக்கடி விரட்டிப் பயப்படுத்தினமையால் அவள் ராமனையே சதா நினைத்துக்கொண்டு கண்ணீர் சோர பிரக்ஞைதப்பி மூர்ச்சித்திருந்தனள்.

ஐம்பத்தாறுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## ஐம்பத்தேழாவது ஸர்க்கம்.

### ராமன் மாரீசனைக் கொன்றபின் திரும்பி வரும்போது அவசகுனங்களைக் கண்டு சந்தேகமுறுதலும் வழியில் லக்ஷ்மணனைச் சந்தித்தலும்.

ராமன் மாரீசனைக் கொன்று தன் ஆச்சிரமத்திற்கு வேகமாகத் திரும்பி வருகையில் அவனுக்குப் பின்புறத்தில் ஒரு நரி பயங்கரமான குரலில் ஊளையிட்டது. இதைக் கேட்ட ராமன் தனக்குள் "ஐயோ! இந்நரியின் அவசகுனமான ஊளையிடுதலால் ஏதோ கெடுதி நேருமென்று எனக்குத் தோன்றுகிறதே! மாயா மிருகமான மாரீசன் மாண்டொழியும் சமயத்தில் என்னுடைய குரலைப்போல் 'ஹா! சீதே! லக்ஷ்மணா!' என்று உரக்கக் கத்தின சப்தத்தை லக்ஷ்மணனும் சீதையும் கேட்டிருப்பின் அவர்கள் வாளாவிருப்பார்களா? சீதை அவசியம் லக்ஷ்மணனை என்னைத் தேடிவரும்படி அனுப்புவாள். அவனும் அவளைத் தனியேவிட்டு என்னைத் தேடி வருவான். ஐயோ! தனியாக விடப்பட்ட சீதையை எவரேனும் கொண்டுபோகாமலிருப்பார்களா? இவ்வனத்திலுள்ள ராக்ஷசர்கள் ஏதோ இவ்விதமான சூழ்ச்சி செய்து சீதையை அபகரிக்க எண்ணம் கொண்டார்கள் போலும்! இப்பொழுது பயங்கரமான துர்நிமித்தங்களும் புலப்படுகின்றனவே!" என்று சிந்தித்துக்கொண்டே ஜனஸ்தானத்தை நோக்கி நடந்தனன்.

மிருகங்களும் பக்ஷிகளும் தீனங்களாகி ராமனிடம் வந்து அவனை இடம்செய்து (அப்பிரதக்ஷிணம் செய்து) பயங்கரமாகக் கூச்சலிட்டன. அச்சமயம் முகவொளி மழுங்கி விலவிலத்த மேனியுடன் வருகின்ற லக்ஷ்மணனை ராமன் கண்டனன். அவனைக் கண்ட ராமன் சீதையைத் தனியாக விட்டுவந்ததற்காகப் பலவாறு நிந்தித்துப் பேசி "லக்ஷ்மணா! சீதையை இப்படித் தனியாக விட்டுவரலாமா?

வனத்தில் திரியும் ராக்ஷசர்கள் அவளை எடுத்துக்கொண்டு போய்த் தின்றுவிட்டிருப்பார்களோ? ஐயோ! சீதை பிழைத்திருப்பதை நாம் காண்போமா? அந்த சீதைக்கு க்ஷேமம் உண்டாகுமா? விலங்குகளும் பக்ஷிகளும் பயங்கரமாகக் கூவுகின்றனவே! என் இடக்கண் துடிக்கின்றதே! லக்ஷ்மணா! ஆகையால் சீதை நிச்சயமாக ராக்ஷசர்களால் அபகரிக்கப்பட்டோ, கொல்லப்பட்டோ பரிதவிக்கிறாளென்று தோன்றுகிறது" என்றனன்.

ஐம்பத்தேழாவது ஸர்க்கம் முற்றிற்று

---

## ஐம்பத்தெட்டாவது ஸர்க்கம்.

### ராமன் சீதையைப் பெறுவது சந்தேகமென்று எண்ணிச் சோகத்தினால் புலம்புதல்

பின்னும் ராமன் லக்ஷ்மணனை நோக்கி "ஐயோ! லக்ஷ்மணா! நான் சீதையைவிட்டு ஒரு க்ஷணகாலமும் பொறுத்திருக்கமாட்டேன். என் பொருட்டுக் காட்டில் எய்படும் கஷ்டங்களையும் மதியாமல் என் பின்னே வந்த தேவகன்னிகையைப்போன்ற சீதையைத் தனியே விட்டு வந்துவிட்டாயே! அவள் இப்பொழுது எங்கிருக்கின்றனள்? சீதை உயிருடன் பிழைத்திருப்பாளோ? இல்லையாயின் என் பிராணன் உடலில் நிலைத்திரா. அதனால் என் வனவாச விரதம் பதினன்கு வருஷங்கள் என்னும் கெடுவு முடியும் வரையில் நடக்காமையால் நிறைவேறாமற் போய்விடும். இப்படிப்பட்ட விபத்து நேராமல் என் விரதம் பொய்யாகாதிருக்குமா? லக்ஷ்மணா! சீதை இறந்துவிட்டாளாயின் அதன் காரணமாக நானும் மரணமடைந்து, நீ அயோத்திக்குப் போனவுடனே தன் விருப்பம் ஈடேறப்பெற்ற அந்த கைகேயி எவ்வளவோ ஆனந்தமுற்றிருப்பாளல்லவா? அங்ஙனம் புதல்வனை நான் மரணம் அடைகையில் என் தாயான கௌசல்யை தார்த்தனை

காரணமாகக் கைகேயியை அடுத்துப் பிழைக்கவேண்டு மல்லவா? அப்படிப்பட்ட விபரீதம் நேராதிருக்குமா?

லக்ஷ்மணு! சீதை பிழைத்திருப்பாளாயின் நான் மீளவும் ஆச்சிரமத்திற்கு வருவேன். அவள் மரணமடைந்திருப்பா ளாயின் நான் என் பிராணனை விட்டுத்தொலைப்பேன். லக்ஷ மணு! சொல்லு, அவள் பிழைத்திருக்கிறுளா? அல்லது ராக்ஷ சர்களால் கொல்லப்பட்டனளா? அக்கொடிய மாரீசன் என் குரலில் அபாயசொற்களைச் சொன்னதால் அதுகேட்ட சீதை மனம் பொறுக்காமல் உன்னை அனுப்ப நீ வந்தனையென்று நினைக்கிறேன். எனினும் நீ இங்ஙனம் அவளைத்தனியே விட்டுவந்திருக்கக்கூடாது. நான் கரன் முதலானோரைக் கொன்றதால் ராக்ஷசர்கள் நம்மீது கொடிய பகைகொண்டிருக் கிருர்கள். அவர்கள் இத்தகைய சூழ்ச்சி செய்து சீதையை ஒருகால் அபகரித்துக்கொண்டுபோய்க் கொன்றுவிட்டனரோ? ஐயோ! லக்ஷ்மணு! நான் இனி என்ன செய்வேன்?'' என் றிங்ஙனம் தம்பியை நிந்தித்த வண்ணம் ஆச்சிரமத்தை யடைந்தனன். பசியினுலும் வெகுதூரம் போய்வந்த சிர மத்தினுலும் தாகத்தினுலும் பெருமூச்செறிந்துகொண்டு வாய் உலர முகம் விலவிலத்துப்போக ஆச்சிரமத்தில் நுழைந்த ராமன் சீதையைக் காணுமையால் அவள் விளையாடு கிற இடங்களுக்குச் சென்று தேடியும் அவளைக்காணுமல் மிகவும் வருத்தமுற்றனன்.

ஐம்பத்தெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## ஐம்பத்தோன்பதாவது ஸர்க்கம்.

## ராமன் லட்சுமணனைக் கடிந்து கொள்ளுதல்

பின்னும் ராமன் மனவருத்தத்துடன் தடுமாறுகின்ற லக்ஷ்மணனைப் பார்த்து "லக்ஷ்மணு நீ சீதையைக் காத்துக்

கொண்டிருக்கிருயென்கிற நம்பிக்கையோடு நான் சீதையை வனத்தில் விட்டு வந்திருக்கையில் நீ அவளை விட்டு ஏன் வந்தனை? நீ சீதையை விட்டு என்னை நோக்கி வரும்பொழுது நான் வழியில் உன்னைக் கண்டவுடனே எனது இடக்கண்ணும் இடது புஜமும் நடுமார்பும் துடித்தன." என்றனன்.

இதைக்கேட்ட லக்ஷ்மணன் "ராமா! நான் ஸ்வயமாகவே தோன்றியபடிசெய்யும் தன்மையினுல் சீதையைத் தனியே விட்டு வரவில்லை. மிகவும் குரூரமான வார்த்தைகளைச் சொல்லி அவளை என்னைப் போவென்று தொந்தரவு செய்கையில் உன்னைத் தேடிவந்தேனேயன்றி வேறில்லை" என்று சொன்னதுடன் தன்னை சீதை ராமனிடம் போகாமலிருந்தது பற்றிக் கூறிய கொடிய வார்த்தைகளையும் தான் கூறின சமாதானங்களையும் பிறகு அவள் பிடிவாதமான மூர்க்க குணத்துடன் கூறின கடுஞ்சொற்களையும் விரிவாக ராமனிடம் கூறினன்.

லக்ஷ்மணன் இங்ஙனம் சொல்லுகையில் ராமன் பரிதாபமுற்று மெய் மறந்து "நல்லியற்கையுடையவனே! சீதையை விட்டு நீ வந்தது மிகவும் தகாத காரியம். நான் ராக்ஷசர்களைத் தடுப்பதில் மிகவும் ஸமர்த்தன் என்பதை நீ அறிந்திருந்தும், நீ சீதையின் கொடுஞ் சொற்களுக்குப் பொருமல் அவளைத் தனியேவிட்டு வந்தனையே! இதனுல் உன்னைப் பார்த்தும் எனக்கு சந்தோஷமுண்டாகவில்லை. ஸ்திரீ விவேகமில்லாதவள். கோபமுற்றவள். அவள் ஏதோ கோபத்தினுல் சொன்னுல் அவளை விட்டு வந்தனையே! சீதை போவென்று தூண்டுகையில் பெண் பிள்ளை சொன்னுளென்று பொறுத்துக் கொள்ள வேண்டும். பொறுமை இல்லையாயின் மறைவிலாவது இருந்து காத்துக்கொண்டிருக்க வேண்டும். அன்றி அவள் பலவந்தம் செய்தவளாகிலேயே கோபத்திற்கு உட்பட்டு என் ஆஞ்ஞையைச் செய்யாது

போயினை. எவ்விதத்திலும் இது உன்னுடைய குற்றமே யாகும். நான் துரத்திச்சென்ற ராக்ஷசன் மாயச்சேஷ்டை களையுடைய மாரீசனேயாவன். அவன் என் பாணத்தால் அடிபட்டு நிஜமான ராக்ஷச சரீரத்துடன் இறந்து கிடக்கின் ருன். அவன் தீனமானஸ்வரத்துடன் என்னுடைய குரலைப் போல் கேட்கும்படி மிகவும் பயங்கரமாகக் கூச்சலிட அதைக் கேட்டு நீ சீதையை விட்டுவந்தனை போலும்.'' என்றனன்.

**ஐம்பத்தோன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.**

---

அறுபதாவது ஸர்க்கம்

## ராமன் சீதையை ஆச்சிரமத்தில் தேடிக்காணுமல் வருத்த முறல்.

ராமன் ஆச்சிரமத்திற்குள் நுழைந்து அங்கு இருப் பிடத்தில் சீதை இல்லாதிருப்பது கண்டு மிகவும் மனம் தத்தளிக்கப் பெற்றனன். அவன் வேகத்துடன் உயரக் கிளம்புவான்போல் அவயவங்களை இப்படியும் அப்படியும் உதறிக்கொண்டு பர்ணசாலையில் ஆங்காங்கு சீதை இருக்கக் கூடிய இடங்களெல்லாவற்றையும் நன்கு தேடிப்பார்த்து அவளில்லாமையால் மிகுந்த கலக்கமடைந்தனன்.

சீதை ராவணனுக்காகக் கொண்டுவந்து போடப்பட்ட கிருஷ்ணாஜினமும் (மான் தோலும்) தர்ப்பங்களும் இருக்க வேண்டியவிடத்தில் இல்லாமல் வேறுரிடத்தில் சிதறிக் கலந்திருந்தன. ராவணன் பிடித்திழுக்கும்போது சீதை முறுக்கிக்கொண்டு தர்ப்பாஸனத்தையும் பாயையும் பிடித்துக் கொண்டாளாகையால் அவை தாறுமாருகக் கிடந்தன.

இவற்றைக் கண்ட ராமன் "ஐயோ! சீதையை எவரே னும் அபகரித்துப் போயினரோ? அல்லது அவள் மரணம் அடைந்தனளோ? ராக்ஷசர்களால் பக்ஷிக்கப்பட்டனளோ?

அல்லது எங்காயினும் விளையாட்டுக்காக மறைந்திருக்கின்றாளோ? அல்லது எவரும் இல்லாமையால், பயந்து மறைந்து வனத்திற்கே போயிருக்கின்றாளோ? அல்லது புஷ்பம் பறிக்கவாவது, பழங்கொண்டு வரவாவது போயிருப்பாளோ? அல்லது ஸ்னானத்தின் பொருட்டுத் தாமரை யோடைகளுக்குப் போயினளோ? அல்லது ஜலம் கொண்டு வர நதிக்குப் போயினளோ?" என்று அடிக்கடி புலம்பிக் கொண்டிருந்தனன். சீதையை எங்குத் தேடியும் காணப் பெறாமல் ராமன் ஒவ்வொரு மரத்தினருகிலும் சென்று 'ஓ கடம்பமரமே! ஓ வில்வமரமே! ஓ அர்ஜுனமரமே! ஓ அசோகமரமே! நீங்கள் சீதையைப்பற்றி எனக்குச்சொல்ல வேண்டும். அவள் எங்குச் சென்றாளென்பதைச் சொல்ல வேண்டும்." என்று மரங்கள்தோறும் சென்று சீதையைப் பற்றி வினவினன்.

ராமன் இங்ஙனமே மல்லிகை, மாதவி, சண்பகம், தாழை முதலிய பூஞ்செடிகளையும் கிட்டிச் சென்று சீதையை வினவி வனத்தில் நாற்புறமும் திரிந்துகொண்டு சித்தப் பிரமம் பிடித்தவன் போல் புலப்பட்டனன்.

பிறகு ராமன் மான், யானை, புலி, முதலிய காட்டு மிருகங்களைத் தனித்தனி விளித்து சீதையைப்பற்றி வினவினன். பின்னுமவன் சீதை எதிரில் இருப்பதுபோல் நினைத்து "அடி என் அன்புநாயகியே! நீ ஏன் கண்ணுக்குத் தெரியவில்லை? தாமரை யிதழ் போன்ற கண்களையுடையவளே! தூரத்தில் உன்னை நான் பார்த்தனன். இனி நிற்பாயாக. மரங்களினிடையில் மறைந்து கொண்டு என்னுடன் பேசாமலிருக்கின்றனையே. இது ஏனோ? அழகிய நிதம்பமுடையவளே! நில் நில். ஓடாதே. இதுவரை விளையாடினது போதும். இனிமேல் என்னை வருத்தமுறச் செய்யாமல் ஓடிவா. ஐயோ! சீதை இங்கு இல்லவே இல்லை. எவரா

அவளைக் கொன்றுவிட்டிருக்கவேண்டும். இல்லையாயின் இப்படி நான் துக்கத்தில் மூழ்கிக்கிடக்கும்போது என்னை இங்ஙனம் பரிதபிக்க விடமாட்டாள். ஐயோ! கொடிய ராக்ஷசர்கள் அவளைக் கொன்று தின்று விட்டனர்போலும். இதுவே நிஜம்.

ஐயோ! லக்ஷ்மணா! நீ எங்காயினும் சீதையைக் கண்டனையா? ஐயோ! என் பிராண நாயகி! நீ எங்குச் சென்றனை?" என்று அடிக்கடி புலம்பினன்.

ராமன் இவ்வாறு புலம்பிக்கொண்டு ஒரு வனத்தினின்றும் மற்றொரு வனத்திற்குத் திரிந்துகொண்டு, சீதைக்குப் போலியான செடி கொடி முதலியவற்றைக் கண்டு ஒற்றுமையைக்கண்டு சீதையென்று பிரமித்து விவேகமின்றிப் பரிதபித்துப் புலம்பினன்.

அறுபதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## அறுபத்தோராவது ஸர்க்கம்

### சீதையை நினைத்து ராமன் புலம்புதலும் அவனை லக்ஷ்மணன் சமாதானப்படுத்துதலும்.

பின்னும் ராமன் சீதையை எங்குத் தேடியும் காணப்பெறுமையால் 'சீதே! சீதே!' என்று உரக்க முறையிட்டுத் துக்கத்தைப் பொறுக்க முடியாமல் தன் கைகளை உயரத் தூக்கி 'லக்ஷ்மணா! சீதை எங்கே? இங்கிருந்து எவ்விடத்திற்குப் போயினள்? அல்லது எவன் அவளைக்கொன்று தின்றுவிட்டனன்?' என்று வினவிப் பின்னும் "அடி சீதே! நீ செடியின் மறைவில் மறைந்துகொண்டு 'நான் மறைந்திருக்கையில் நீ தெரிந்து பிடித்துக்கொள்ளாமற் போயினையே?' என்று என்னைப் பரிகாசம் செய்ய விரும்புவாயாயின் பரிகாசம் செய்தது போதும். இனிப் புலப்படுவாயாக. அடி நல்லொழுக்கையுடையவளே! சீக்கிரம் ஓடி வருவாயாக.

லக்ஷ்மணா! நான் சீதையைப் பிரிந்து ஜீவித்திருக்கமாட்டேன். நான் சீதையின் பிரிவாற்றாமையால் மரணம் அடைகையில் என்னைச் சுவர்க்கத்தில் என் தந்தை தசரத மகாராஜர் பார்ப்பர். பரலோகத்தில் அவர் என்னைப் பார்த்து 'என் உத்தரவின்படி நீ பதினான்கு வருஷங்கள் வனவாசம் செய்வதாகப் பிரதிக்கினை செய்து அந்தக் கெடு முடிவதற்கு முன்னமே இங்கு என்னிடம் எப்படி வந்தனை? நீ இஷ்டப்படி நடக்கும் தன்மையன். துஷ்டசுபாவமுடையவன். அபத்தம் பேசுபவன். சீ! சீ! போ' என்று நிந்திப்பாரே! இதற்கென்ன செய்வேன்? அடி வைதேகி! என்னை இக்கதிக்குள்ளாக்கி விட்டு நீ எங்குச் சென்றனை? அழகிய இடையை உடையவளே! துக்கித்திருக்கின்ற என்னைவிட்டுப் போகாதே. உன்னை விட்டு நான் ஒரு நிமிஷ காலமும் ஜீவித்திருக்க முடியாது." என்று கூறிப் புலம்பினன்.

இங்ஙனம் புலம்பும் ராமனை லக்ஷ்மணன் நோக்கி "ராமா! சூரனான நீ இங்ஙனம் துக்கப்படுவது சரியன்று. நீயும் நானும் சேர்ந்து சீதையைத் தேடிக் கண்டு பிடிப்போமாக. சீதை அடவியில் திரிவதில் மிகவும் பிரியமுடையவள். ஜலக்கிரீடை செய்வதிலும் பெரும் பைத்தியமுடையவள். ஆகையால் அவள் வனத்திற்குள் சென்றிருப்பாள். அல்லது நன்கு புஷ்பித்த தாமரைக் குளத்திற்காவது போயிருப்பாள். அல்லது பரிகாசத்திற்காகக் காட்டில் ஓரிடத்தில் ஒளித்திருப்பாள். ராமா! சீதை நம்மைப் பயப்படுத்த விரும்பியோ, அல்லது சாமர்த்தியத்தை அறிய விரும்பியோ காட்டில் ஓர் இடத்தில் மறைந்திருப்பாள். அவளைத் தேடுவதற்கு சீக்கிரம் பிரயத்தனம் செய்வோம். வனத்திலுள்ள குகைகள், குன்றுகள், செடிகள் புதர்கள் முதலிய எல்லாவிடத்திலும் சென்று தேடிப் பார்ப்போம். நீ இங்ஙனம் வருந்த வேண்டாம்" என்று சொல்லித் தேற்றினன்.

ராமன் சற்று சமாதானமடைந்து லக்ஷ்மணனோடு ப்ரஸ்ரவண மலையின் தாழ்வரைகளிலும் குகைகளிலும் சிகரங்களிலும் மற்றுமுள்ள வனப்பிரதேசங்களிலும் சீதையைத் தேடிக் காணப்பெறாமையால் மன வருத்தம் அதிகரிக்கப் பெற்றனன்.

பிறகு ராமன் சீதையை எங்கும் காணாமல் அவளையே நினைத்துப் புலம்பி ஒரு முகூர்த்த காலம் மூர்ச்சித்தனன். லக்ஷ்மணன் ராமனை இனிய வசனங்களால் சமாதானம் செய்தும் அவன் சீதையை மறக்க முடியாமையால் அடிக்கடி நிலை தடுமாறி நின்றனன்.

அறுபத்தோராவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## அறுபத்திரண்டாவது ஸர்க்கம்

## சீதை நிமித்தமாக ராமன் புலம்புதல்

ராமன் சீதையை நினைத்து அபாரமான மனத்தாங்கலுடன் புலம்பத் தொடங்கினன். அவன் மன்மதன் கையிலகப்பட்டு ஸ்வாதீனம் தப்பிச் சீதையைக் கண்ணெதிரில் காண்பவன்போல் பிரமித்து "பிரீதிக்கிடமாயிருப்பவளே! தேவீ! நீ அந்த அசோக மரத்தின் பின்புறமாக ஒளிந்திருப்பதைக் கண்டு கொண்டேன். இனி நீ மறைந்து கொள்வதேனோ? நீ என்னைப் பரிகாசம் செய்வதற்காகக் கர்ணிகா வனத்தில் புகுந்தனை. என்னை இதுவரை பரிகாசம் செய்தது போதும். இப்பொழுது நான் மிகவும் களைத்து வருத்தமடைந்திருக்கிறபடியால் என் முன் ஓடி வந்து என்னைக் களிக்கச் செய்வாயாக. நீ இல்லாமையால் நம் பர்ணசாலை பாழாய் இருக்கின்றதே! லக்ஷ்மணா! ராக்ஷசர்கள் சீதையை எடுத்துக்கொண்டுபோய் பக்ஷித்திருப்பார்களா? ஐயோ! லக்ஷ்மணா! இந்த மிருகக்கூட்டங்கள் கண்ணீர் பெருக்கிக்கொண்டிருப்பதைக் கண்டால் சீதை ராக்ஷசர்களால்

புசிக்கப்பட்டிருப்பள் என்று தோன்றுகிறதே! ஐயோ! என் பிராண நாயகி! நீ எங்குப் போயினையோ? நீ இப்படி காணுது போனமையால் கைகேயியின் கருத்து ஈடேறிவிட்டதே! சீதையில்லாமல் நான் எப்படி அயோத்தி சென்று அந்தப் புரத்தில் அடி வைப்பேன்? ஐயோ! மிதிலாபதியான ஜனக மகாராஜர்முகத்தில் நான் எப்படி விழிப்பேன்? உலகத்தவர் இனி என்னை வீரியமில்லாதவனென்றும், தயையற்றவனென் றும் சொல்லுவார்களே! லக்ஷ்மணு! சீதை இல்லையாயின் சுவர்க்கமும்கூட எனக்குப் பாழாய் இருப்பதுபோலவேயாம். நீ என்னை இவ்விடத்திலேயே விட்டு அயோத்திக்குச் செல்வாயாக. பரதனிடம் சென்று, 'ராமன் அநுமதி கொடுத்தனன், நீ இஷ்டப்படி பூமியைப் பரிபாலனம் செய்வாயாக' என்று நான் சொன்னதாகச் சொல்லவேண்டும். நம் தாய்மார்களிடத்தில் சென்று நான் நமஸ்காரம் செய்த தாகச் சொல்லுவாயாக. என் தாயான கௌசல்யையைப் பாதுகாப்பாயாக. லக்ஷ்மணு! இங்ஙனம் சீதையை இழந்த காரணத்தால் நான் நசித்துப்போனதை விஸ்தாரமாகக் கௌசல்யைக்குச் சொல்வாயாக." என்று புலம்பினன்.

**அறுபத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.**

---

அறுபத்துமூன்றாவது ஸர்க்கம்

## ராமன் புலம்புதலும் லக்ஷ்மணன் தேற்றுதலும்.

பின்னும் ராமன் அடக்க முடியாத மனவருத்தமடைந்த வனய் லக்ஷ்மணனைப் பார்த்து "லக்ஷ்மணு! இவ்வுலகில் என்னைப்போன்ற கொடியபாவம் செய்தவன் எவனுமிருக்க மாட்டான். ஏனெனில் துக்கத்தின் மேல் துக்கம் வந்து என் இருதயத்தையும் மனத்தையும் பேதித்துக் கொண்டு என்னைக் கலக்கமுறுத்துகின்றதே. இப்படி எவர்க்கு நேரிடும்? லக்ஷ்மணு! ராஜ்ஜியத்தை இழப்பது, பந்துக்களைப் பிரிவது,

தந்தையை இழப்பது, தாயைப் பிரிந்து வருந்துவது ஆகிய எல்லாவற்றையும் ஒவ்வொன்றாக நினைத்துப் பார்க்கையில் என் துக்கராசிக்கு எல்லைகாண முடியுமோ! ஐயோ! லக்ஷ்மணா! நான் இதுவரை இவ்வித கஷ்டங்களைப் பாராட்டாமல் என் சீதையின் அழகிய முகாரவிந்தத்தைக்கண்டு மறந்திருந்தனன். இப்பொழுது அவளை இழந்து கொடிய சோகத்தில் மூழ்கி யிருக்கின்றனன்.

ஐயோ! எவனோ கொடிய ராக்ஷசன் சீதையைக் கொன்று தின்று விட்டிருக்க வேண்டும். அவள் எவ்வாறு கதறினளோ? லக்ஷ்மணா! சீதை இந்த ஜனசஞ்சாரமில்லாத பிரதேசத்தில் முன்பு இந்தப் பாறையின்மீது என்னுடன் கூட சமீபத்தில் உட்கார்ந்து சிரித்துக்கொண்டே உன்னைப் பார்த்துப் பல வார்த்தைகளைச் சொல்லிக்கொண்டிருந்தனள். சீதைக்கு கோதாவரியிடத்தில் எப்பொழுதும் பிரீதி அதிகம்; ஒருகால் அவ்விடம் சென்றிருப்பாளோ வென்று நினைக்கிறேன். ஆனால் இம்மாதிரி சீதை எப்பொழுதும் தனியாகப் போனதே யில்லையே!

ஓ சூரியனே! நீ உலகில் நடப்பவைகளெல்லாவற்றையும் காண்பவனல்லையோ? உலகத்தில் நடக்கும் புண்ணிய கருமங்களுக்கும் நீ சாக்ஷியாய் இருப்பவன். ஆகையால் உனக்குத் தெரிந்திருக்கலாம். என் பிராண நாயகியை எவன் எடுத்துக் கொண்டு போயினன்? அவள் எங்கு இருக்கின்றனள்? உயிருடன் இருக்கின்றாளா? ஓவாயுவே! உனக்குத்தெரியாதது ஒன்றுமில்லை. நீயாவது அவளைப்பற்றிய செய்தியை எனக்கு அவசியம் தெரிவிக்கவேண்டும்.” என்று வினவிக்கொண்டு புலம்பினன்.

இங்ஙனம் புலம்பிக்கொண்டு சோகத்தில் மூழ்கி சரீரம் பரவசமடைந்து பிரக்ஞையற்றிருக்கின்ற ராமனைப் பார்த்து லக்ஷ்மணன் “பெரியோனே! சோகத்தைத் துறப்பாயாக.

தைரியத்தைக் கைப்பற்றுவாயாக. ஸீதையைத் தேடும் பொருட்டு உற்சாகத்தை ஏற்றுக்கொள்வாயாக. உலகத்தில் உற்சாக முடையவர்கள் மிகவும் செய்யமுடியாத காரியங்களி லும் வருந்தமாட்டார்களல்லவா?" என்று கூறி எவ்வளவு தேற்றினபோதிலும் ராமன் உள்ளதைரியத்தையும் துறந்து மீளவும் பெருந்துக்கத்தில் ஆழ்ந்தவனாயினன்.

அறுபத்துமூன்றாவது ஸர்க்கம் முற்றிற்று

---

## அறுபத்துநான்காவது ஸர்க்கம்

### வழியில் புலப்படுகிற அடையாளங்களால் சீதை அபகரிக்கப் பட்டனளென்று நிச்சயித்துக் கொள்ளுதல்.

ராமன் லக்ஷ்மணனை நோக்கி தீனமான வசனத்துடன் 'லக்ஷ்மணா! ஸீதை தாமரைப்புஷ்பங்களைப் பறிப்பதற்காகக் கோதாவரி நதிக்குப் போயிருப்பாளா? நீ சீக்கிரம் சென்று தெரிந்துகொண்டு வருவாயாக' என்றனன். லக்ஷ்மணன் அங்ஙனமே சென்று ஸீதையைத் தேடி ராமனிடம் வந்து 'ஸீதை எங்கும் காணவில்லை' என்றனன்.

உடனே ராமன் தானாகவே கோதாவரி தீரத்திற்குச் சென்று 'ஸீதை எங்கே?' என்று வினவினன். 'ராவணன் ஸீதையைக் கொண்டுபோனான்' னென்று கோதாவரியாவது எந்த மிருகமாவது ராமனுக்குச் சொல்லவில்லை. சில மிருகங் கள் 'ஸீதை எங்கே' என்று வினவின ராமனை நோக்கி எழுந் திருந்து தென் திசை முகமாகி ஆகாயத்தைப் பார்த்துக் கொண்டு அவள் சென்ற மார்க்கத்தைப் பிடித்து ஓடி ராமனையே பார்த்துக் கொண்டிருந்தன.

இதைக்கண்ட லக்ஷ்மணன் ராமனை நோக்கி "தேவா! இம்மிருகங்கள் தென்திசையை நோக்கிக் காட்டுவதால் எவனோ ராக்ஷசன் ஸீதையைத் தென் திசைப்பக்கம் எடுத்துச்

சென்றிருக்க வேண்டும். ஆகையால் நாம் தென் மேற்காக ராக்ஷசர் வசிக்கிற நிருருதி திக்கைப்பிடித்தே நேராகச் செல்வோம். ஒருகால் ஸீதையை அங்குக் கண்டுபிடிக்கக்கூடும். அல்லது அவளைக் கண்டுபிடிக்கும் உபாயமாவது தெரியக் கூடும்" என்றனன்.

ராமன், லக்ஷ்மணன் பின் தொடர அவ்வண்ணமே தரையை நோக்கியபடி தென் திசையைப் பிடித்துப் போயினன். அங்ஙனம் இருவரும் செல்லுகையில் பூமியில் புஷ்பங்கள் இறைந்திருக்கப்பெற்ற வழியைக் கண்டனர். ராமன் லக்ஷ்மணனை நோக்கி "லக்ஷ்மணா! நான் இந்தப் புஷ்பங்களின் அடையாளத்தை அறிவேன். இவற்றை நானே காட்டில் கொண்டுவந்து ஸீதையின் கூந்தலில் சூட்டினேன். என் பொருட்டுச் சூரியனும் வாயுவும் இவற்றை வாட்டாமல் ரக்ஷித்துக்கொண்டிருக்கிறார்களென்று நினைக்கிறேன்" என்றனன். பின்னும் ராமன் ப்ரஸ்ரவண பர்வதத்தைப் பார்த்து "ஓ பர்வதச்ரேஷ்டனே! சுந்தராங்கியான ஸீதையை இவ்வனப்பிரதேசத்தில் எங்கேனும் கண்டதுண்டோ?" என்று வினவினன். உடனே பர்வதத்தினின்றும் உண்டான பிரதித் துவனியைக் கேட்டு ராமன் கோபங்கொண்டு "பர்வதமே! நான் உன் தாழ்வரைகளையெல்லாம் இடித்துப் பொடிசெய்து பாழாக்குவதற்கு முன்னமே ஸீதையை எனக்குக் காட்டுவாயாக" என்றனன்.

இங்ஙனம் பைத்தியம் கொண்டவனைப்போல் பேசிவந்த ராமன், ஒரு ராக்ஷசனுடைய பெரிய அடிவைப்பையும் அவனுக்குப் பயந்து ஆச்சிரமத்திற்குப் போக விரும்பி அந்த ராக்ஷசன் பின் தொடர்ந்து வருகையில் இப்படியும் அப்படியும் ஓடுகின்ற ஸீதையின் அடிகளையும் பூமியில் இருக்கக் கண்டனன். பின்னும் ராமன் ஆங்காங்கு அறுந்து வீழ்ந்திருக்கின்ற வில்லையும் அம்பறாத்தூணிகளையும், பலவா

ருக முறிந்து விழுந்திருக்கிற தேரையும் கண்டு லக்ஷ்மணனைப்பார்த்து "லக்ஷ்மணா! இவற்றையெல்லாம் காண்பாயாக; ஸீதையின் ஆபரணங்களினின்று பொன் துகள்கள் இறைந்திருக்கின்றன. மேலும் பலவகைப் புஷ்பமாலைகளும் இறைந்திருக்கின்றன. ஐயோ! லக்ஷ்மணா! உருக்கின பொன் துளிகள்போல் அழகிய ரக்தபிந்துக்கள் பூமி முழுவதும் நிறைந்திருக்கின்றனவே! காமரூபிகளான ராக்ஷசர்கள் ஸீதையைத் துண்டு துண்டாக வெட்டிப் பங்கிட்டுக் கொண்டாவதிருப்பார்கள். அந்தச் ஸீதையின் நிமித்தமாக இரண்டு ராக்ஷசர்கள் இங்குப் பயங்கரமான யுத்தம் நடத்தினதாகத் தோற்றுகிறது. முத்துக்களும் ரத்தினங்களும் சுவர்ணத்தில் அலங்கரிக்கப்பட்டவை முறிந்து தரையில் விழுந்திருக்கின்றன; இந்தப் பெரிய வில் எவனுடையது? இதோ வைடூர்ய மணிகளால் இழைக்கப்பெற்ற திவ்வியமான கவசங்கள் முறிந்து தரையில் விழுந்திருக்கின்றனவே. இவை எவனுடையதோ? நன்கு அலங்கரிக்கப்பட்ட வெண் கொற்றக்குடையொன்று இதோ விழுந்து முறிந்து கிடக்கின்றதே! இது எவனுடையது? மிகவும் பயங்கரமான தேரிழுக்கும் கோவேறுகழுதைகள் யுத்தத்தில் அடிபட்டு அதோ மாண்டு கிடப்பதைக் கவனி. லக்ஷ்மணா! ஒரு பெரிய தேரும், அதன் சாரதியும் அதில் சாமரம் வீசிக் கொண்டிருந்த இரண்டு ராக்ஷசர்களும் யுத்தத்தில் அடிமாகி அதோ கிடக்கின்றனரே! எவனோ ஒரு கொடிய ராக்ஷசன் தான் ஸீதையை அபகரித்துக் கொண்டுபோயிருக்கவேண்டும். ஆபத்துக் காலத்தில் ரக்ஷிக்கவேண்டிய தரும தேவதை ஸீதையை ஏன் காப்பாற்றவில்லை? ஸீதை ராக்ஷசர்களால் பக்ஷிக்கப்பட்டபிறகு தேவதைகளாலும் மற்று எவராலும் எனக்கு ஆக வேண்டியதென்னவிருக்கின்றது? அந்தத் தேவதைகள் நான் தர்மவானாயிருந்தும் ஸீதையைக் காப்

பாற்றாமல் இங்ஙனம் பரிதபிக்கவிட்டு வேடிக்கை பார்க்கிறார்க ளல்லவா? இதோ பார். பிரம்மாஸ்திரப் பிரயோகம் செய்து மூன்று லோகங்களையும் அழித்துவிடுகின்றேன். ஸமஸ்த பூதங்களும், சூரியன் சந்திரன் முதலிய ஒளியுள்ள பதார்த் தங்களும் தேவதைகளும் என்னுடைய பராக்கிரமத்தை இப்பொழுதே காணப்போகின்றார்கள்.

லக்ஷ்மணா! சீதையின் நிமித்தமாக இப்பொழுது நான் பிரயோகிக்கும் பாணங்கள் சகல தேவதைகளையும் ராக்ஷசர் களையும் பிசாசர்களையும் சகல மிருக பக்ஷிசமூகங்களையும் அதமாக்கி வதைக்கப் போகின்றன பார். தேவ தானவ, யக்ஷராக்ஷச லோகங்களும் என்பாணங்களால் பலவாறு பொடி செய்யப்பட்டு இனி இருக்கமாட்டா. லக்ஷ்மணா! தேவதைகள் சீதையை எடுத்துக்கொண்டு போயினும் அவள் மரணமடைந்திருப்பினும் எனக்குக் கொண்டுவந்து கொடார்களேயாயின், நான் இப்பொழுது எனது பாணங் களால் ஸமஸ்த லோகங்களையும் அழித்து விடுகிறேன்." என்றனன்.

பின்னும் ராமன் தன்வில்லை வளைத்து நாணேற்றிய வண்ணம் லக்ஷ்மணனை நோக்கி, "லக்ஷ்மணா! தேவதைகள் இப்பொழுது சீதையை எனக்குக் கொடார்களாயின் தேவ கந்தர்வ மானிட பன்னகர்களோடும் மலைகளோடும் கூடின பிரபஞ்சத்தை யெல்லாம் நாசம் செய்து விடுகிறேன்" என்று பராக்கிரமித்தனன்.

அறுபத்துநான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

---

அறுபத்தைந்தாவது ஸர்க்கம்

லக்ஷ்மணன் ராமனுக்குச் சமாதானம் கூறுதல்.

இங்ஙனம் சீதையின் பொருட்டுப் பரிதபிக்கின்ற ராமன் பிரளய காலாக்கினி போல் உலகங்களை நாசம் செய்ய விரும்பி,

நாணேறிட்ட வில்லின்மேல் கண்வைத்த பிரளயகால ருத்திரனைப் போல் தோன்றுகையில், லக்ஷ்மணன் லோகநாசம் நேருமோ என்கிறபயத்தினால் அவனை நோக்கி "நீ இதுவரையில் மிருது ஸ்வபாவனும் ஜிதேந்திரியனுமாய் இருந்து இப்பொழுது கோபத்திற்கு ஆளாகி அவற்றைக் கைவிடுவது யுக்தமன்று. நீயோ சகலவிதமான கல்யாண குணங்களுக்கும் இருப்பிடமானவன். உனக்குத் தெரியாதது ஒன்றுமில்லை; ஒருவன் செய்த அபராதத்திற்காக நிரபராதிகளான லோகங்களை யெல்லாம் வதைப்பது யுக்தமன்று. ஆயுதங்களோடும் யுத்தத்திற்கு வேண்டிய இதரமான உபகரணங்களோடும் கூடி முறிந்து வீழ்ந்திருக்கின்ற இந்த யுத்த ரதம் எவனுடையதோ? எந்தப் பகைவனால் முறிக்கப்பட்டதோ? முறிக்கப்பட்டது எதற்காகவோ? இவற்றைப் பற்றி எனக்கு ஒன்றும் தெரியவில்லை. ராமா! இவ்விடத்திலுள்ள அடையாளங்களால் இதில் இதற்கு முன்னம் ஒருபெரிய யுத்தம் நடந்ததென்று தெரிகின்றது. மேலும் அந்த யுத்தம் ஒரு தேராளியினுடையதாகவே தெரிகின்றது. போர் இருவருடையதாகவாவது பலருடையதாகவாவது தெரியவில்லை. ஏனெனில் பெரும் சேனைகள் இருந்ததாக அடிகளின் போக்கு பூமியில் புலப்படவில்லை. ஒருவனுக்காக உலகத்தையெல்லாம் நாசம் செய்வது உனக்குத் தருமமல்ல. ராஜாதிராஜனும் சமஸ்த பூதங்களுக்கும் ரக்ஷகனுமான உனக்கு மனைவி நசிப்பது நல்லதென்று எவனும் நினைக்க மாட்டான். அப்படியே நதிகளாவது, மலைகளாவது, சமுத்திரங்களாவது தேவ கந்தர்வ தானவர்களாவது தாமே கெடுவோமென்னும் பயத்தினால் உனக்குக் கெடுதி செய்திருக்கமாட்டார்கள். ஆகையால் சீதையை எடுத்துக்கொண்டுபோன பாபிஷ்டனைத் தேடி வதைப்பதே உசிதமானது. நாம் இவ்வுலகில் சகலவிதமான பிரதேசங்களிலும் சீதையைத் தேடிப் பார்ப்போம். தேவதை

கள் நல்ல வார்த்தைகளுக்குச் சீதையைக் கொடார்களாயின் பிறகு தண்டோபாயத்திலிறங்கி நீ நினைத்த காரியத்தை நிறைவேற்றிக் கொள்ளலாம்.'' என்றனன்.

**அறுபத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.**

---

## அறுபத்தாறவது ஸர்க்கம்.

### லக்ஷ்மணன் ராமனுக்கு, மேல் செய்யவேண்டிய காரியத்தைக் கூறுதல்.

பிறகு பலவாறு சோகத்தினால் புலம்பும் ராமனை லக்ஷ்மணன் சமாதானப்படுத்தவிரும்பி அவன் பாதங்களிரண்டையும் பிடித்துக்கொண்டு அவனைப் பார்த்து "ராமா! நீயோ தசரத சக்கரவர்த்தி அரும்பெரு வேள்வி செய்ய அதன் பயனாகப் பிறந்தவன். சத்துவகுண முடையவனாயும் சிறந்த பராக்கிரமசாலியாயும் இராநின்றாய். அப்படிப்பட்ட நீ இப்பொழுது நேரிட்டிருக்கிற இந்த வருத்தத்தைப் பொறுக்க வல்லையல்லையாயின் இனி எந்த க்ஷத்திரியன்தான் பொறுக்க வல்லவன்? இங்ஙனம் நீ கோபித்து உலகையெல்லாம் நாசம் செய்வாயாயின் அதனால் பீடிக்கப்பட்ட ஜனங்கள் எவ்விடம் சென்று சுகம்பெறுவார்கள். இங்ஙனம் கஷ்டங்கள் நேருவது மானிடர்க்குற்ற சுபாவமேயன்றி வேறில்லை.

யயாதி மன்னன் இந்திரலோகம் பெற்றும் அபநீதியால் ஸ்வர்க்கத்தினின்றும் நழுவித் துக்கமுற்றவனாயினன். நம் குலகுருவான வசிஷ்டரின் நூறு புதல்வர்களும் ஒரே நாளில் ஒரே குவியலாக விசுவாமித்திரனால் பாழாய் விட்டனர். விஷ்ணு பத்தினியான பூமி தேவிக்கும் கூட சலனம் புலப்படுகின்றது. இவையெல்லாம் உனக்குத் தெரியாததல்ல. சூரிய சந்திரர்களுக்கும் கிரகணமொன்று நேரிடுகின்றது.

மிகவும் பெரியோரான மாந்தாதா நளன் முதலியோர்களுக்கும் நேர்ந்த விபத்துக்கள் பலபல. தெய்வத்தின் கருத்தை மீறி நடக்க எவராலும் முடியாது.

ஆண்புலியே! பூர்வத்தில் அவரவர் செய்யும் கருமங்களுக் கேற்றபடி இம்மையில் பலன் கிடைப்பது அனைவர்க்கும் சகஜம். ஆகையால் உன்னைப்போன்றவன் எப்படிப் பட்ட கஷ்டத்திலும் வருந்தக்கூடாது. ராமா! உனக்குத் தெரியாதது ஒன்றுமில்லை. உன்புத்தி தேவதைகளுக்கும் கூட அமையாது. உனது உயிர் இப்பொழுது துக்கத்தில் மூழ்கியிருப்பதால் கோபத்திற்காளாயினை. பாபிஷ்டனை எவன் உனக்குத் தீங்கு செய்தானோ அவனைத் தேடிக் கண்டுபிடித்து அவனைக் கொல்வோம்; பகைவன் ஒருவனுக்காக உலகம் முழுவதையும் நாசம் செய்வது சிறிதும் நியாயமல்ல'' என்றனன்.

அறுபத்தாறுவது ஸர்க்கம் முற்றிற்று

---

## அறுபத்தேழாவது ஸர்க்கம்

## ராமன் ஜடாயுவைக்கண்டு துக்கித்தல்

இங்ஙனம் லக்ஷ்மணன் கூறக்கேட்ட ராமன் சற்று சாந்தமடைந்து லக்ஷ்மணன் கூறியவண்ணம் சீதையை அவ்வனம் முழுதும் தேடுவதன் பொருட்டுப் பிரயாணமாயினன். சீதை அகப்படாமைக்குக் கோபமடைந்து ராமன் பயங்கரமான க்ஷுரப்ரமென்னும் பாணத்தை வில்லில் தொடுத்து லக்ஷ்மணனோடு கூட அவ்வனம் முழுதும் சீதையைத் தேடித் திரியும்போது வழியில் ரத்தத்தில் நனைந்து தரையில் குற்றுயிராய் விழுந்திருந்த ஜடாயுவைக் கண்டனன்.

ராமன் பர்வதசிகரம் போன்ற அக்கழுகரசனைக் கண்டு லக்ஷ்மணனை நோக்கி "லக்ஷ்மணா! சீதையை அபகரித்து

பக்ஷித்த அரக்கன் இதோ இருக்கின்றனன். இவன் கழுகு வேஷம்பூண்டு இவ்வனத்தில் சஞ்சரிப்பவன்போலும். இவனை இப்பொழுதே கொன்று விடுகிறேன்.” என்று கூறி அக் கழுகை எதிர்த்துப் போயினன். ஜடாயுவோ ராமனைப் பார்த்து நுரையுடன் கூடிய ரத்தத்தைக் கக்கிக்கொண்டு தீனமான குரலில் “ராமா! சீதையையும் என் பிராணனையும் ராவணன் கொண்டுபோயினன். நீயும் லக்ஷ்மணனும் இல்லாத சமயத்தில் அரக்கர் தலைவனான ராவணன் சீதையை பலாத்காரமாகக் கொண்டுபோவதை நான் கண்டு சகிக்க முடியாமல் அவனைத் தடுத்து யுத்தம் செய்தேன். இதோ என்னால் முறிய டிக்கப்பட்ட அவனுடைய வில்லும் கவசங்களும் தேரும் சிதறுண்டு கிடப்பதைப்பார். அவனுடைய சாரதியும், சாமரை வீசுபவர்களும், தேரிழுக்கும் கழுதைகளும் என்னால் மாய்க்கப்பட்டு அதோ விழுந்து கிடப்பதைக்காண். அக் கொடிய ராவணன் யுத்தத்தில் நான் களைப்புற்றிருக்கும் சமயத்தில் என் இறகுகளையும் இரக்கைகளையும் கத்தியால் வெட்டி என்னைக் குற்றுயிருடன் வீழ்த்திப்போயினான். நான் உன்னிடத்தில் சீதையின் விருத்தாந்தத்தைச் சொல்வதற்கே இதுவரை சிறிது பிராணனோடு இருந்தனன். ஏற்கனவே அடியுண்டு நொந்து கிடக்கும் என்னை நீ அடிக்கவேண்டா.” என்றனன்.

இதைக்கேட்ட ராமன் கண்களில் நீர் பெருக மிகுந்த பரிதாபத்துடன் ஜடாயுவை ஆலிங்கனம் செய்துகொண்டு கையிலிருந்த பெருவில்லை நழுவவிட்டு மூர்ச்சித்துக் கீழே விழுந்து லக்ஷ்மணனும் தானுமாகப் புலம்பினன். பிறகு ராமன் லக்ஷ்மணனை நோக்கி “லக்ஷ்மணா! ராஜ்ஜியத்தை இழந்து வனவாசம் செய்யப்பெற்றேன்; சீதையையும் இழந்து தகப்பனாருக்குச் சமமான ஜடாயுவையும் பறி கொடுத்தேன். இவ்வுலகில் என்னைப்போன்ற கொடிய தௌர்ப்

பாக்கியமுடையவன் எவனுமிரான். ஐயோ! இப்படி ஒன்றின்மேலொன்றாக அடர்ந்து வருகின்ற பெருந்துக்கங்களாகிற வலையில் அகப்பட்டுக்கொண்டு தவிக்கின்றேனே! என் பொருட்டு இக்கிழக்கழுகு அடிபட்டுத் தரையில் வீழ்ந்திருக்கின்றதே." என்று புலம்பினன்.

ராமன் இங்ஙனம் கூறி லக்ஷ்மணனுடன்கூடி ஜடாயுவை உடம்புமுழுதும் தடவிக்கொடுத்து ஆலிங்கனம் செய்து 'என் உயிர்க்காதலியான ஸீதை எங்கே?' என்று வினவியவண்ணம் மனவருத்தம் பொறுக்கமுடியாமல் கீழே விழுந்து அழுதனன்.

அறுபத்தேழாவது ஸர்க்கம் முற்றிற்று

---

## அறுபத்தெட்டாவது ஸர்க்கம்

### ஜடாயு ராவணனது செய்திகளைக் கூறி உயிர் நீத்தலும், அக்கழுகரசனுக்கு ராமன் ஈமக்கடன் செலுத்தலும்.

பிறகு ராமன் எழுந்து ஜடாயுவை நோக்கி "கழுகரசனே! உனக்குப் பேச சக்தியுளதாயின் பதில் சொல்வாயாக. ஸீதையை ராவணன் ஏன் கொண்டுபோயினன்? நான் அவனுக்கு என்ன அபகாரம் செய்தேன்? ஸீதை அப்பொழுது என்ன சொல்லினள்? அவள் முகம் அப்பொழுது எப்படி இருந்தது? தந்தையே! அந்த ராக்ஷசனுடைய உருவமும் வீரியமும் எப்படிப்பட்டவை? அவன் இருப்பிடம் எங்கே? அவன் உன்னை எப்படிக்கொன்றனன்" என்று பலவும் வினவினன்.

ஜடாயு மிகவும் ஈனஸ்வரத்துடன் ராமனைப் பார்த்து "ராவணன் மகாமாயையால் பெருங்காற்றையும் மேகங்களையும் பிறப்பித்து இருள்மூடச் செய்து, ஆகாய மார்க்கத்தில் ஸீதையைக் கொண்டுபோயினன். நான் இளைப்புற்றிருக்கும்

சமயத்தில் என் இறகுகளை வெட்டி வீழ்த்திச் சீதையை எடுத்துக்கொண்டு விரைந்து தென்திசை நோக்கிச் சென்றனன். ஐயோ! ராமா! நான் மரண வேதனையால் தடுமாறி உயிரை விடப்போகிறேன். ராவணன் எந்த முகூர்த்தத்தில் சீதையை எடுத்துச் சென்றனனோ அம்முகூர்த்தமானது தொலைந்த சொத்து சீக்கிரத்தில் உடையவனைச் சேரும்படியானது. ஆகையால் நீ இழந்த சீதையை மீளவும் பெறுவாய். தூண்டுமுள்ளை விழுங்கின மீனைப்போல், சீதையைக் கொண்டுபோன ராவணன் தப்புவித்துக் கொண்டுபோயினும் சீக்கிரத்திலேயே நாசம் அடைவான். ராவணன் விச்சிரவசின் புதல்வன். குபேரனுக்குத் தம்பி." என்று இதுவரையில் கூறி மேலே பேச முடியாமல் குரல் தழுதழுத்து அப்போதே பிராணனை விட்டனன்.

ராமன் "ஐயோ! பலவாயிரம் வருஷங்கள் உயிரோடிருந்து க்ஷேமமாக வனத்தில் திரிந்து எனக்கு உபகாரம் செய்யவேண்டுமென்கிற எண்ணத்தினால் சீதையைக் காப்பாற்றமுயன்று யுத்தத்தில் இஜ்ஜடாயு ராவணனால் உயிரிழந்தனன். லக்ஷ்மணா! எனக்குச் சீதையை இழந்ததனாலுண்டான துக்கமும் எனக்காக ஜடாயு பிராணனை இழந்ததனாலுண்டான துக்கத்தைப்போல் அவ்வளவு பெரிதாகத் தோன்றவில்லை. என் தந்தையைப்போலவே இப்பக்ஷிராஜனும் எனக்குப் பூஜிக்கத் தகுந்தவனென்றறிவாய் நீ; ஆகையால் கட்டைகளைக் கொண்டுவந்து அடுக்குவாயாக; இப்பக்ஷிராஜனுக்கு தகனசடங்குகளை நானே செய்யப்போகிறேன். ஏ கழுகரசனே! நீ என்னால் தகனம் செய்யப்பெற்று என்னிடம் அனுமதிபெற்று மேலான விஷ்ணுலோகங்களைப் பெறுவாயாக." என்று கூறி ஜடாயுவைச் சிதையின்மேலிட்டு வருத்தத்துடன் தன் பந்துவைப்போல் மந்திர பூர்வகமாகத் தகனம் செய்தனன்.

பிறகு ராமன் சிலமிருகங்களைக் கொன்று ஜடாயுவுக்குப் பிண்டப்பிரதானம் செய்யும்பொருட்டு தர்ப்பங்களைப் பரப்பி, பசும்புல் தரையில் ஜடாயுவுக்குச் செய்யவேண்டிய மரணச் சடங்குகளை விதிப்படி ஒன்றும் தவறாமல் செய்து முடித்தனன். பிறகு கோதாவரி ஜலத்தில் ஸ்நானம்செய்து அக் கழுகரசனுக்குச் செய்யவேண்டிய ஜலதர்ப்பணாதிகளையும் செய்தனன்.

இங்ஙனம் ஸீதா நிமித்தமாக ராவணனுடன் யுத்தம் செய்து அடிபுண்டு முடிந்ததனால் சிறந்த சூரனென்னும் கீர்த்தியை யடைந்து ராமனால் தகனம் செய்யப்பெற்றமையால் ஜடாயு அடுத்த நிமிஷத்திலேயே மோக்ஷமடைந்தனன். ராமலக்ஷ்மணர்கள் ஸீதையைத் தேடிக்கொண்டே வனம் வனமாகப் போயினர்.

அறுபத்தெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

அறுபத்தொன்பதாவது ஸர்க்கம்.

## அயோமுகியை விரூபஞ்செய்தலும் கபந்தனைக்காணுதலும்

ராம லக்ஷ்மணர்கள் ஸீதையைத் தேடிக்கொண்டு தென் திசை நோக்கிச்சென்று ஒருவரும் நடந்தறியாத கொடிய வழிகளைத் தாண்டி, தண்டகாரணியத்தைக் கடந்து சென்றனர். பிறகு ஜனஸ்தானத்தைத் தாண்டி, மூன்று கூப்பிடுதூரமுள்ள வழியைச் சென்று கிரௌஞ்சாரண்ய மென்னும் ஒரு காட்டில் நுழைந்து அதில் வெகுதூரம் நடந்து சென்றனர். அவ்வனம் இருள்மூடிக் கொடிய பல காட்டுமிருகங்கள் நிறையப் பெற்று மிகவும் பயங்கரமாய்க் காணப்பட்டது. அதன் நடுவில் எப்பொழுதும் இருள் மூடப்பெற்றதான ஓர் குகையைக் கண்டனர்.

அக்குகையினருகில் பயங்கரமான காட்சியையுடைய ஓர் கொடிய ராக்ஷஸி காணப்பட்டனள். அவள் மிகவும் விகார

மான உருவத்துடன் தலைமயிர்களை விரித்துக்கொண்டு, ராம னுக்கு முன்னே நடந்து வருகின்ற லக்ஷ்மணனைப் பார்த்து அவனையழுந்தக் கட்டிக்கொண்டு "நான் அயோமுகி என்னும் பெயருடையவள். நான் உனக்கு அதிர்ஷ்ட வசமாகக் கிடைத்தேன். நீயும் எனக்கு இனியவனாய் இருக்கின்றனை. வீரனே! வா, நாம் இருவரும் பிழைத்திருக்கும் வரையில் சுகமாகக் கிரீடித்துக் கொண்டிருப்போம்." என்றனள்.

இதைக்கேட்ட லக்ஷ்மணன் மிகவும் கோபித்து அவ் வரக்கியின் காதுகள், மூக்கு, கொங்கைகள் ஆகிய இவற்றைக் கத்தியால் அறுத்தெறிந்தனன். அவள் மிகவும் பயங்கரமாகக் கூச்சலிட்டுக்கொண்டு வந்தவழியே ஓடிப்போயினள். அச் சமயம் பல அவசகுனங்கள் நேரப்பெற்ற லக்ஷ்மணன் ராமனைப்பார்த்துக் கைகளைக் கூப்பியவண்ணம் "அண்ணா! என் இடக்கை மிகவும் துடிக்கின்றது. என்மனம் தத்தளிக்கின்றது. எனக்குப் பலவகையான அவசகுனங்கள் புலப்படுகின்றன. மிகவும் பயங்கரமான இந்த வஞ்சுலக மென்னும் பக்ஷி கூவு தலைக் கேட்டால் நமக்கு யுத்தத்தில் ஜயம் உண்டாகுமென்று தெரிவிப்பது போலிருக்கின்றது. நீ ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்." என்றனன்.

அச்சமயம் அவ்வனத்தை யெல்லாம் முறிப்பது போல் பெரிதான ஓர் பயங்கர சப்தம் கேட்டது. ஓர் புதரின் நடு வில் மிகவும் பெரிய சரீரமும் விசாலமான மார்பையுமுடைய ஓர் ராக்ஷசனை ராம லக்ஷ்மணர்கள் கண்டனர். அவன் மிகவும் வளர்ந்து தலையும் கழுத்துமில்லாமல் வயிற்றில் வாய் உடையவனாகி ஓர் முண்டமாய் இருந்தனன். அவனுக்கு மார்பிலிருக்கின்ற முகத்தில் அக்கினிஜ் ஜ்வாலைபோல் எரிந்துகொண்டிருந்த ஓர் பெரிய கண்ணொன்று உண்டா யிருந்தது. அவன் பெரிய கோரப்பற்களுடையவனாகி

நாக்கினால் அடிக்கடி நக்கிக்கொண்டு பெரியவாயை யுடையவனாய் இருந்தனன்.

அவன் மிகவும் பயங்கரமான காடிகளையும் சிம்மங்களையும் யானைகளையும் பிடித்துத் தின்றுகொண்டிருந்தனன். மிகவும் பயங்கரமான உருவத்துடன் ஒவ்வொரு யோசனை தூரம் நீண்டகைகளை இப்படியும் அப்படியும் வீசிக்கொண்டு பலவகைக் கொடிய மிருகங்களை இழுத்துப் பிடித்துக்கொண்டு இருந்தனன்.

கபந்தனென்னும் பெயர் பூண்ட அவ்வரக்கன் ராமலக்ஷ்மணர்களிருவரையும் தனது புஜங்களை நீட்டிப் பலமுள்ளவனாய் கெட்டியாகப் பிடித்துக்கொண்டனன். ராம லக்ஷ்மணர்கள் ஆயுதம் தரித்தவர்களாய் இருப்பினும், அவன் பிடித்து இழுத்துக் கொண்டிருக்கையால், ஸ்வாதீன மற்றவராயினர். அப்படியிருந்தும் ராமன் தைரியத்தை இழக்கவில்லை. லக்ஷ்மணனோ வாலிபனாகையால் தைரிய மிழந்து வருத்தமுற்று "ராமா! நீ என்னை இப்பூதத்திற்குப் பலியாகக் கொடுத்துச் சுகமாக எழுந்தருள்வாயாக. சீதையை சீக்கிரத்திலேயே பெற்று அயோத்தியடைந்து வம்ச பரம்பரையாக வந்த பூமண்டலத்தை அரசாள்வாயாக. இவ்வசுகங்களையனுபவித்து எப்பொழுதும் என்மீது கருணைபுரிந்துகொண்டிருப்பாயாக" என்றனன்.

ராமன் லக்ஷ்மணனைத் தேற்றி "சூரனே! உன்னைப் போன்றவர் இப்படி பயப்படமாட்டார்கள்." என்றனன். அச்சமயம் கபந்தன் அவர்களை நோக்கி "நீங்கள் யார்? ஆயுதம் தரித்து நீங்கள் இங்குத் திரிவதன் காரணமென்ன? எனக்கு நல்ல பசியாதலால் தகுந்த சமயத்தில் வந்து ஆகாரமானீர்கள். இனி என் கையிலகப்பட்ட நீங்கள் உயிர் பிழைப்பதரிது" என்றனன்.

இங்ஙனம் கபந்தன் சொன்ன வார்த்தையைக் கேட்ட ராமன் லக்ஷ்மணனைப் பார்த்து "லக்ஷ்மணா! முதலில் ராஜ்ஜியத்தை இழத்தல், பிறகு வனவாசம், பிறகு சீதையைப் பறிகொடுத்தல் என்றிப்படி மேன்மேலும் தொடர்ந்து வருகின்ற கஷ்டத்தை அனுபவித்துக்கொண்டு வருகிறோம்; அந்தோ! நம் பிராணன்களையும் இழப்பதற்கு பயங்கரமான இவ் விசனம் நேரிட்டது. இது காலத்தின் கொடுமையே தவிர வேறில்லை. ஆகையால் நாம் தைரியத்தை இழக்கக்கூடாது" என்று கூற, லக்ஷ்மணனும் தைரியமடைந்து தன் புத்தியைத் தானே நிலைப்படுத்திக் கொண்டனன்.

அறுபத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## எழுபதாவது ஸர்க்கம்.

## கபந்தனது புஜங்களை ராம லக்ஷ்மணர்கள் வெட்டுதலும் அதனால் அவனுக்குப் பூர்வஜன்ம நினைவு உண்டாதலும்

லக்ஷ்மணன் மனவருத்தமுற்று ராமனைப் பார்த்து "அண்ணா! இந்த ராக்ஷசன் நம்மைச் சீக்கிரத்தில் விழுங்கிவிடுவான் போலும். ஆகையால் இவனது பெரியபுஜங்களிரண்டையும் கத்தியால் வெட்டிவிடுவோம். இந்த ராக்ஷசன் தன் புஜங்களாலேயே உலகத்தையெல்லாம் வென்று வந்து இப்போது நம்மையும் கொல்ல விரும்புகின்றனன்" என்று கூறும்போது கபந்தன் கோபித்து உடனே வாயைத் திறந்து அவர்களை விழுங்கத்தொடங்கிக் கைகளால் இழுத்தனன். பிறகு ராமன் சிறிதும் தாமதமின்றிக் கபந்தனது வலது புஜத்தையும், லக்ஷ்மணன் அவனது இடது புஜத்தையும் கத்தியால் துண்டித்தனர்.

கபந்தன் கைகளறுப்புண்டு நான்கு திசைகளிலும் எதிரொலி உண்டாகும்படி மேகம்போல் கர்ஜனை செய்து

கொண்டு தரையில் விழ்ந்தனன். ரத்தத்தில் மிதக்கும் அத்தானவன் தீனமான குரலில் அவ்விருவரையும் பார்த்து "நீங்களிருவரும் யாவர்?" எனவினவ, லக்ஷ்மணன் அவனுக்குத் தன்னைப்பற்றியும், ராமனைப்பற்றியும் விருத்தாந்தங்களை உள்ளபடிகூறிச் சீதையைப் பறிகொடுத்ததையும் கூறி அவனுடைய விருத்தாந்தங்களைப்பற்றி வினவினன்.

இங்ஙனம் வினவப்பெற்ற கபந்தன் முன்பு தனக்கு இந்திரன்சொன்ன வசனத்தை நினைத்துக்கொண்டு சாபம் நீருங்காலம் வந்ததென்று மிகவும் சந்தோஷமுற்று "புருஷரில் சிறந்தவர்களே! உங்களுக்கு நல்வரவாகுக. என் பாக்கிய வசத்தினால் உங்கள் தரிசனம் எனக்குக் கிடைத்தது. எனக்கு வணக்கமில்லாத தன்மையால் என் உருவம் இத்தகைய விஷமரூபத்தை யடைந்திருந்தது. அதன் விருத்தாந்தத்தை உள்ளபடி உங்களுக்குச் சொல்லுகிறேன், கேட்பீர்களாக" என்று சொல்லத் தொடங்கினன்.

எழுபதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## எழுபத்தோராவது ஸர்க்கம்

### கபந்தன் தனது வரலாறு கூறித் தன்னைக் கொளுத்தி விடுமாறு ராமனை வேண்டுதல்.

"ராமா! முன்பு எனக்கு ஒருவருக்குமில்லாத அழகிய திவ்விய சுந்தரரூபம் உண்டாயிருந்தது. அப்படிப்பட்ட நான், உலகத்திற்கு நடுக்கத்தை விளைவிக்கும்படியான இந்தப் பெரிய உருவத்தை ஏற்றுக்கொண்டு வனத்திலுள்ள ரிஷிகளைப் பயப்படுத்திக்கொண்டிருந்தனன். பின்பொருநாள் ஸ்தூலசிரஸ் என்னும் முனிவர், காய் கிழங்குகளைச் சேகரித்துக்கொண்டிருக்கையில் நான் இந்த உருவத்துடன் அணுகி அவர் கையிலிருந்த பதார்த்தங்களைப் பிடுங்கிக்கொண்டு

அவமானம் செய்யவே அவர் என்னைச்சீறி "கொடியதும் நிந்தைதக்கிடமுமாகிய இந்த உருவமே உனக்கு எப்பொழுதும் மாறாதிருக்குமாக" என்று சாபமிட்டனர்.

நான் உடனே அவரை அடிபணிந்து சாபத்திற்கு ஓர் முடிவைக் கூறியருள வேண்டுமென்று வேண்டிக் கொள்கையில் அவர் 'எப்பொழுது ராமன் வந்து உன் கைகளைவெட்டி உன்னை எரிப்பானோ அப்பொழுதே நீ பழைய ரூபமடையக் கடவாய்' என்று சாபவிடை கூறினர்.

லக்ஷ்மணா! நான் தனுவமிசத்தில் பிறந்த ஸ்ரீ என்பவனுடைய பிள்ளை. நான் ரிஷிசாபத்தினால் இக்கோர ரூபம் பெற்ற பின்பு இந்திரனை வெல்லக்கருதிப் பிரமதேவனைக் குறித்துக் கொடியதவம் செய்து நீண்ட ஆயுளைப் பெற்றனன். அதனால் நான் கர்வம்கொண்டு யுத்தத்தில் தேவேந்திரனை எதிர்த்தனன். அவ்விந்திரன் மிகச்சினந்து தனது வஜ்ஜிராயுதத்தினால் என்னையடிக்க, என் தொடைகள் வயிற்றுக்குள்ளும், தலை மார்புக்குள்ளும் தள்ளப்பட்டன. வெறும் முண்டம் போலான நான் இதற்குப் பொறாமல் இந்திரனை நோக்கி 'என்னை இவ்வித கோரமான ரூபத்திற்காளாக்கி வருத்துவதைவிட யமன் வீட்டிற்கே அனுப்பிவிடுவாயாக என்று வேண்டினன்.

இந்திரன் அவ்விதம் தான் செய்தால் பிரமனுடைய வரம் பழுதாகுமென்று கூறி எனக்கு ஒரு யோசனைதூரம் நீண்ட இரண்டுகைகளையும் என் வயிற்றில் கூரானகோரப் பற்களையுடைய ஓர் முகத்தையும் கற்பித்தனன். பின்னுமவன் என்னை நோக்கி, 'எப்பொழுது ராமன் லக்ஷ்மணனோடு கூடி வந்து உன் புஜங்களை வெட்டி வீழ்த்துவானோ, அப்பொழுது நீ சுவர்க்கம் பெறுவாய்' என்றும் கூறிச்சென்றனன்.

ராமா! அவ்விதமாகவே எனக்கு நல்லகாலம் இப்போது உங்களால் பிறந்தது. என்னைச் சீக்கிரம் நெருப்பிலிட்டுக் கொளுத்திவிடுவீர்களாக" என்றனன்.

ராமன் கபந்தனை நோக்கி 'அரக்கனே! நாங்கள் ஜனஸ்தானத்தில் வாழ்ந்த சமயத்தில், ராவணன் என்னும் ராக்ஷசன் என் மனைவியைக் களவு முறையில் எடுத்துக்கொண்டு சென்றனன். அவன் எங்குளன்? அவனுருவம் எப்படி? பராக்கிரமம் எப்படி? அவன் சீதையை எங்குக்கொண்டு வைத்திருக்கிறான்? உனக்கு நிஜமாகத் தெரியுமாயின் இவற்றை எனக்கு உள்ளபடி கூறுவாயாக. பிறகு உன்னிஷ்டப்படி உன்னைக் கட்டைகளையிட்டுக் கொளுத்தி விடுகிறேன்' என்று கூறினன்.

கபந்தன் ராமனை நோக்கி "நீண்ட புஜங்களையுடையவனே! சாபதோஷத்தினால் என்னுடைய திவ்விய ஞானம் நசித்துவிட்டது. ஆகையால் இவ்வுருவத்துடன் நான் இருக்கும் வரையில் நீ கேட்ட கேள்விகளில் ஒன்றுக்குக்கூட உண்மையான விடை எனக்குத் தெரியாது. ஆகையால் சூரியன் அஸ்தமிப்பதற்கு முன் என்னைக் கொளுத்திவிடுவாயாகில் நான் எரிந்த பின்பு சீதையை எடுத்துக்கொண்டு போன ராக்ஷசனை எவன் அறிவானோ அவனை உனக்குச் சொல்லுகிறேன். அவன் உனக்குப் பிரீதியுடன் சகாயம் செய்வான். மூன்று லோகங்களிலும் அவனுக்குத் தெரியாத இடம் இல்லை" என்றனன்.

எழுபத்தோராவது ஸர்க்கம் முற்றிற்று.

## எழுபத்திரண்டாவது ஸர்க்கம்.

## கபந்தன் நிஜவடிவம் பெற்றுத் தகுந்த நண்பனை ராமனுக்குத் தெரிவித்தல்.

கபந்தன் இங்ஙனம் சொல்லக்கேட்ட ராம லக்ஷ்மணர்கள் ஓர் பெரிய பள்ளம் வெட்டி, அதில் அவனது உடலைத் தள்ளிச் சுற்றிலும் கட்டைகளையடுக்கி நெருப்பு மூட்டினர். அவனுடல் நன்கு எரிந்தபின் அந்த நெருப்பிலிருந்து தேஜோமயமான சரீரத்துடன் அழகிய ஆடையாபரணங்களையணிந்து அக்கபந்தன் எழுந்து ஆகாயத்திற் சேர்ந்து ராமனைப் பார்த்து "ராகவா! துரவஸ்தையடைந்த ஒருவன் அப்படிப்பட்ட மற்றொருவனோடுகூடிக் காரியத்தை சாதித்துக் கொள்வது இவ்வுலக வழக்கத்திலிருக்கிறது. ஆகையால் சீதையை இழந்து வருத்தமுறும் நீ உன்னைப்போன்ற துரவஸ்தையடைந்த ஒருவனைச் சிநேகஞ் செய்துகொள்ளில் உனக்கு நிச்சயமாகக் காரியசித்தி உண்டாகும். அப்படிப்பட்டவனைச் சொல்லுகிறேன். சுக்கிரீவன் என்று பெயர் பூண்ட ஓர் வானர வீரன் பம்பா சரஸ்ஸின் கரையில் விளங்குகின்ற ருச்சியமூகமென்னும் மலையில் நான்கு வானரர்களோடுகூட வாசம் செய்கின்றனன். அவனை அவன் அண்ணனான வாலியென்பவன் கோபித்து ராஜ்ஜியத்தினின்றும் துரத்திவிட்டனன்.

அந்த சுக்ரீவன் மகாவீரமும், தேஜஸ்ஸும், சத்தியமும், விநயமும், பெருந்தன்மையும் ஒருங்கே அமையப்பெற்று, உன்னைப்போன்ற குணமுடையவனாகையால் அவனே உனக்குத் தகுந்த நண்பன். அவனுதவியால் நீ சீதை இருக்குமிடத்தைத் தெரிந்து கொள்ளலாம். நீ அவனிடம் சென்று அக்கினி சாக்ஷியாக அவனோடு சிநேகம் செய்து கொள்வாயாக. அவனைக் கேவலமான ஓர் வானரனாக நீ எண்ணாதே.

அவன் நன்றியறிதலுடையவன். அவன் சூரியனுக்கு ஔரஸ புத்திரன். வாலியோடு பகை ஏற்பட்டு அவனிடம் பயந்து பம்பாதீரத்தில் திரிந்துகொண்டு ருச்சியமூகமலையில் வாசம் செய்கின்றனன். சூரியனது கிரணங்கள் எங்கெங்குப் பிரகாசிக்கின்றதோ அங்கங்கெல்லாம் இவ்வுலகத்தில் அவனுக்குத் தெரியாத பிரதேசம் கிடையாது. அவனே தன்னிடமுள்ள திண்மைமிக்க வானரவீரர்களை நான்கு திக்குகளினுமனுப்பிச் சீதையினிருப்பிடத்தைக் கண்டுபிடிக்க வல்லவன். சீதை மேருமலையின் சிகரத்திலிருப்பினும் பாதாளலோகத்திலிருப்பினும் அவ்விடம் சென்று ராக்ஷசர்களெல்லோரையும் கொன்று சீதையை மீளவும் உன்னிடம் கொண்டு வந்து சேர்ப்பான்" என்றனன்.

எழுபத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## எழுபத்துமூன்றவது ஸர்க்கம்

### கபந்தன் ராமனுக்கு சுக்ரீவன் இருக்கும் இடத்தின் மார்க்கத்தைச்சொல்லி மறைதல்.

மீளவும் கபந்தன் ராமனை நோக்கி "ராமா! இதோ மேற்குத்திசையைச் சார்ந்து மரங்கள் புஷ்பித்து மனத்திற்கு இனியவைகளாகி விளங்குகின்றனவே, இச்சோலை தான் ருச்சியமூக மலைக்குச் செல்லும் அழகானவழி. அவ்வழியில் சமஸ்தவிதமான மரங்களும் அழகாக விளங்குகின்றன. அவற்றைத் தாண்டின உடனே மற்றோர் அழகியவனம் காணப்படும். சைத்திரரதமென்கிற குபேர வனத்திற்போல் அங்கு எப்பொழுதும் சமஸ்த ருதுக்களும் மாறாதிருக்கும். இத்தகைய பல வனங்களையும் ஆறு மலைகளையும் தாண்டிச் சென்றதும் பம்பை என்கிற ஓர் அழகிய பொய்கையை நீங்கள் அடைவீர்கள். அது தன் கரைகள் சரியாமலும்,

துறைகள் மேடு பள்ள மில்லாமலும் சமமாய் இருந்து தாமரை, நெய்தல் முதலியவற்றால் நிறைந்து இனிய தீர்த் தத்தையுடையதாய் இருக்கும்.

அதில் அன்னங்களும், கிரௌஞ்சங்களும் இன்னும் பல அழகிய நீர்ப்பறவைகளும் இனிமையாகப் பாடிக்கொண் டிருக்கும். கயல், கெண்டை, வாளை, வரால் முதலிய அழகிய சிறு மீன்களும் துள்ளி விளையாடும். அப்பொய்கையின் வளத் தையும் வனப்பையும் வருணிக்க என்னாலாகாது; மற்றெவ ராலு மாகாது. குளிர்ந்து வெள்ளிபோலும் ஸ்படிகம்போலும் தளதளவென்று விளக்கமுற்றிருப்பதுமாகிய அப்பொய்கை யின் நீர்த்தத்தை நீ பானம் செய்யலாம். ரமணீயமான பம்பாஸரஸ்ஸில் நீ நீராடினால் உனக்குத் தாபசாந்தி உண்டாகி மனக்கவலையும் தீரப்பெறும்.

ராமா! அங்குள்ள புஷ்பங்கள் எப்பொழுதும் வாடிப் போவதில்லை· அலர்ந்து உதிர்ந்தும் போவதில்லை. புதிய புஷ்பங்கள் போலவே எப்பொழுதும் புலப்பட்டுக்கொண் டிருக்கும். அங்கு மதங்கமாமுனியின் சீடர்களாகிய ரிஷி கள் வசித்துவந்தனர். அவர்களது மகிமையால் அப்புஷ்பங் கள் நாசமடையாதிருக்கின்றன. ஒரு சமயம் அவர்கள் குருவான மதங்கருக்காக வன்ய பதார்த்தங்களைக் கொண்டு போகும்போது அவைகளின் பாரத்தால் அவர்கள் பீடிக்கப் பட, அவர்களது தேகத்தினின்று தரையில் வீழ்ந்த புழுக்க ஜலங்களின் துளிகளே புஷ்பங்களாக மாறின.

ராமா! அம்மதங்க முனிவரின் சீடர்களனைவரும் சுவர்க் கஞ் சேர்ந்தனர். அவர்களுக்குச் சிடையானவளும், வயது சென்றவளும், சன்னியாசினியுமான சபரி என்பவளொருத்தி மாத்திரம் இப்பொழுது இருக்கின்றனள். அவள் குருவுக் குப் பணிவிடை செய்யும் தருமத்தினின்றும் தவறுதலாத

லால் சிறந்த ஒழுக்கத்துடன் உனது வடிவழகைக் கண்டு மகிழ்ந்து வணங்கித் தேவலோகம் செல்வாள்.

ராகவா! நீ அந்தப் பம்பாஸரஸ்ஸின் மேல்கரைக்குப் போவாயாயின் அங்கு ஏகாந்தமான அச்சபரியின் ஆச்சிரமத்தைக் காண்பாய். அதைச் சேர்ந்த வனம் மதங்கமுனிவரின் ஸங்கல்பத்தால் உண்டானது. அவரது மகிமையால் அவ்வனத்திலுள்ள யானை முதலியவை அவ்வாச்சிரமத்தில் நுழைய முடியாது. தேவலோகத்து நந்தவனத்தைப் போன்ற அந்த வனத்தில் நீ மனவருத்தம் தொலையப் பெற்று விளையாடிக்கொண்டிருப்பாயாக.

ரகுகுலதிலகனே! பம்பாஸரஸ்ஸுக்குக் கிழக்கில் மரங்கள் நிறைந்த ருச்சியமூக மலை இருக்கின்றது. அதைச் சுற்றி யானைக் குட்டிகள் காவலாக இருப்பதால் ஏறுவதற்கு மிகவும் கஷ்டமாக இருக்கும். பிரமதேவனின் அருளினால் அம்மலையின் சிகரத்தில் சயனிக்கும் புருஷன் எந்த ஐசுவர்யத்தைக் கண்டதாகக் கனவு காண்பானோ, விழித்துக் கொண்ட பின்பும் தப்பாமல் அப்படியே பெறுவான். பாபிஷ்டர்களாய்க் கெட்ட நடத்தையுள்ளவர்களால் அம்மலையின் மேல் ஏற முடியாது. அம்மலையில் யானைகள் கூட்டங் கூட்டமாக வசித்துச் சண்டை செய்தும் விளையாடிக் கொண்டிருக்கும். அங்குள்ள கரடிகளையும் புலிகளையும் அழகிய கறுப்புப் புள்ளிமான்களையும் கண்டு நீ விநோதமாக வாழ்வாயாக.

அம்மலையில் கல்லால் மூடப்பட்டுப் புகுவதற்கரிய ஓர் பெரிய குகையுண்டு. அதன்கீழ் துவாரத்தில் ஏராளமாகக் காய் கிழங்குகள் நிரம்பப் பெற்றுப் பலவித மிருகங்களோடு கூடிக் குளிர்ந்த ஜலத்துடன் விளங்குகிற ஓர் பெரிய மடு இருக்கின்றது. அக்குகையில் சுக்கிரீவன் நான்கு வானரர்

கனோடு இருக்கின்றனன்" என்றுகூறி ராம லக்ஷ்மணர்களிடம் அனுமதி பெற்றுத் தேவலோகம் சென்றனன்.

ஏழுபத்துமூன்ருவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## ஏழுபத்துநான்காவது ஸர்க்கம்.

### ராம லக்ஷ்மணர்கள் சபரியைக் காணுதலும் சபரி அவர்களைப் பூஜித்து மோக்ஷமடைதலும்.

அந்தத் தாசரதிகளிருவரும் கபந்தன் கூறியபடியே சென்று மறுநாள் பம்பாஸரஸ்ஸின் மேல்கரையை அடைந்தனர். அங்கிருந்து மேற்குப் பக்கத்திலுள்ள சபரியின் அழகிய ஆச்சிரமத்தைக் கண்டு அவளிடம் சென்றனர். யோகசித்திபெற்ற அச்சபரி அவர்களைக் கண்டவுடனே எழுந்திருந்து அஞ்சலி (கைகூப்புதல்) செய்து அவர்களுடைய பாதங்களைத் தொட்டு நமஸ்காரம் செய்தனள். விதிப்படி அவர்களைப் பூஜித்து அவர்களுக்குச் செய்யவேண்டிய உபசாரங்களையெல்லாம் குறைவறச் செய்தனள்.

பிறகு ராமன் சபரியை க்ஷேமம் விசாரிக்கையில், சபரி ராமனைநோக்கி "இப்பொழுது உன்னைக் கண்டதால் எனக்குத் தவசித்தி உண்டாயிற்று. நான் அனுஷ்டித்த தவமெல்லாம் சபலமாயிற்று. நான் என் குருக்களுக்குச் செய்த பணிவிடைகளும் பயன் பெற்றன. ராமா! விஷ்ணுதேவனை உன்னைப் பூஜித்ததனால் இப்பொழுது என் ஜன்மம் சபலமாயிற்று. ரகுகுலதிலகனே! உன் குளிர்ந்த பார்வையால் பாபங்களெல்லாம் தொலையப்பெற்றுப் பரிசுத்தையாகி உனது அருளினால் நான் மோக்ஷலோகத்தை யடையப்போகிறேன். 'ஆனால் உனது ஆசாரியர்களுடன் கூடவே நீ ஏன் மோக்ஷம் செல்லவில்லை?' என்று என்னைக் கேட்பாயாயின், நான் பணிவிடை செய்துகொண்டிருந்த மதங்க முனிவரின் சீடர்

களான என் ஆசாரியர்கள் நீ சித்திர கூடம் வந்து சேர்ந்த பொழுதே மேலான விமானங்களில் ஏறிக்கொண்டு திவ்விய லோகங்களுக்குச் சென்றனர். அவர்கள் போகும்போது என்னைப் பார்த்து 'ராமன் உன் ஆச்சிரமத்திற்கு லக்ஷ்மண னுடன் வருவான். நீ அவர்களைப் பூஜித்து அதன்பயனாக மேலான புண்ணிய லோகங்களைப் பெறுவாய்' என்று சொல்லிப் போயினர்.

புருஷர்களிற் சிறந்தோனே! நான் உனக்காகப் பம்பா ஸரஸ்ஸின் கரையில் விளைகின்ற பலவிதமான காய் கனிகளைச் சேகரித்து அவற்றின் ருசியைப் பரீக்ஷித்துப் பார்த்து மிக வும் மதுரமாய் இருப்பவைகளைப் பத்திரமாக வைத்துக்கொண் டிருக்கிறேன். அவற்றை நீ அமுதுசெய்தருளவேண்டும்." என்றனள்.

ராமன் அவ்வினிய மொழிகளைக் கேட்டு, ஆசாரிய அனுக் கிரகத்தினால் பிரம ஞானத்திற்கு இலக்கான அவளைப் பார்த்து "கபந்தன் மூலமாய் உனது குருவான மதங்கருடைய பிரபாவத்தை உள்ளபடி கேட்டனன். அந்தப் பிரபாவத் தைக் காட்ட உனக்கு இஷ்டமுண்டாயின் பிரத்தியக்ஷ மாகக் காணவிரும்புகின்றேன்" என்றனன்.

அதுகேட்ட உடனே அவர்களிருவர்க்கும் அந்த மதங்கவனம் முழுவதையும் காட்டி, அங்குள்ள ஒவ்வொரு விசேஷத்தை யும் விவரமாகக் கூறினள். பிறகு ராமன் சபரியை நோக்கி "நீ என்னைப் பக்தியுடன் பூஜித்தனை. இனி நீ விரும்பிய லோகங்களுக்கு இஷ்டப்படி செல்வாய்" என்று கூறினன்.

அதுகேட்ட சபரி அப்பொழுதே தன் வயது சென்ற சரீரத்தை நெருப்பிலிட்டு ஒளி மிக்க அக்கினியைப்போல் பளபளவென்று விளங்குகிற திவ்விய தேகம் பெற்று யோக மகிமையினால் புண்ணியாத்மாக்களும் மதங்கசிஷ்யர்களும்

அம்மகரிஷிகள் விளையாடிக் கொண்டிருக்கின்ற புண்ணியஸ்தானத்திற்குப் போய்ச் சேர்ந்தனள்.

**எழுபத்துநான்காவது ஸர்க்கம் முற்றிற்று.**

---

## எழுபத்தைந்தாவது ஸர்க்கம்

## தாசரதிகள் மதங்காச்சிரமத்தினின்று வெளிக் கிளம்பிச் செல்லுதல்.

பிறகு ராமன் மகாத்மாக்களான அம்முனிவர்களின் பிரபாவத்தை நினைத்து லக்ஷ்மணனைப் பார்த்து "நல்லியற்கையுடையவனே! மகாத்மாக்களான மதங்க முனிவரின் சீடர்களின் ஆச்சிரமத்தைக் கண்டு கவலை தீரப்பெற்றோம். அம்முனிவர்களின் மகிமையால் இங்குப் பிரவகிக்கின்ற ஏழு சமுத்திரங்களின் தீர்த்தங்களிலும் ஸ்நானம்செய்து பிதிர் தர்ப்பணங்களையும் குறைவின்றிச் செய்தோம். லக்ஷ்மணா! இதனால் அந்தந்த அவசகுனங்களெல்லாம் தொலைந்தன. என் மனம் இப்பொழுது உண்மையில் நிர்மலமாகிச் சந்தோஷமுற்றது. சிநேகிதலாபம் முதலிய சுபங்கள் மனத்தில் தோன்றுகின்றன. ஆகையால் சீக்கிரம் புறப்பட்டுப் பம்பாஸரசின் சமீபத்திலுள்ள ருச்யமூகமலையிலுள்ள சுக்கிரீவனைக் காண்போம்" என்றனன்.

பிறகு இருவரும் பம்பாஸரஸ்ஸை நோக்கி புறப்பட்டனர். வழியிடையிலுள்ள மதங்கஸரஸ் என்று பிரசித்தி பெற்ற ஓர் தீர்த்தத்தில் ராமன் ஸ்நானம்செய்தனன். பிறகு ராம லக்ஷ்மணர்கள் பம்பாஸரஸ்ஸைச் சேர்ந்த பெரிய காட்டையும் அழகிய சோலைகளையும் கடந்து சென்று அந்தப் பொய்கையையும் அடைந்தனர்.

ராமன் அங்குள்ள இனிமையான இயற்கை வனப்புக்களைக் கண்டு லக்ஷ்மணனை நோக்கி "லக்ஷ்மணா! இந்த ஸரஸ்

லின் அருகிலேயே பரிசுத்தமான ருச்சியமூகமென்னும் மலை இருப்பதாகக் கபந்தன் சொல்லினன். மகாபலவானுன சுக்ரீவன் அம்மலையில் இருக்கின்றனன். நீ அவனிடம் சென்று வருகிருயா?" என்று கூறி மீளவும் அவனைப் பார்த்து "ஐயோ! ராஜ்ஜியத்தை இழந்தும் சீதையிடத்தில் மனம் பற்றி ஒருவாறு மகிழ்ந்திருந்தேன். அந்த சீதையையும் இழந்து எப்படி உயிர் தரித்திருப்பேன்?" என்று சீதையை நினைத்து வருந்திப் புலம்பிக்கொண்டே இளையோனுடன் அப்பொய்கையில் இழிந்தனன்.

எழுபத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று

ஸ்ரீமத் வால்மீகி ராமாயண மொழிபெயர்ப்பில்

## ஆரணிய காண்டம்

முற்றுப்பெற்றது.

---

ஸ்ரீ

ஸ்ரீமத் வால்மீகி ராமாயண மொழிபெயர்ப்பில்

# கிஷ்கிந்தா காண்டம்

முதல் ஸர்க்கம்

## பம்பைப் பொய்கையின் கரையில் ராமன் சீதையின் பிரிவாற்றாது இரங்குதலும், இளையோன் தேற்றத்தேறி இருவருமாய்ப் புறப்பட்டு ருச்சியமூகமலையினருகிற் செல்லுதலும், சுக்கிரீவன் முதலானோர் கண்டு அஞ்சுதலும்.

ராமன், கீழ்ச்சொன்ன பம்பை என்னும் பொய்கையையடைந்து, அதில் சீதையின் முகத்தைப்போல் விளங்கும் தாமரை மலர்களையும், அவளது கண்களைப்போல் தோன்றும் கருநெய்தற் பூக்களையும், அவளது கடைக்கண் புரட்சியைப் போல் சஞ்சரிக்கும் சிறு மீன்களையும் பார்த்து அவளுடைய முகம் முதலிய அவயவங்களை நினைத்து, மனம் முதலிய இந்திரியங்கள் கலங்கப்பெற்றனன்.

பின்பு லக்ஷ்மணனைப் பார்த்து "லக்ஷ்மணா! இந்த பம்பா தீரத்திலுள்ள இனிய காட்சியை என்னவென்று சொல்லுவேன்! ஐயோ! சீதையை இழந்து பரிதவிக்கும் என்னை வசந்தருது (சித்திரை, வைகாசி காலம்) மேன்மேலும் பீடிக்கின்றதே! மிக ரமணீயமான இந்தப் பம்பாதீரம் மிகவும் நொந்து கிடக்குமென்னை சீதையை நினைக்கும்படி செய்து காம பரவசனாக்குகின்றதே! லக்ஷ்மணா! இந்த வசந்த காலத்தில் குளிர்ந்த வாடைக்காற்று மலயசந்தனம்போல் குளிர்ந்து திவ்விய வாசனையை அளைந்து களையெல்லாம் தீரும்படி நம்மேல் வீசுகின்றது. வண்டுகள் மதுவுண்டு இனிமையாகப் பாடுகின்றன. அழகிய புஷ்பங்கள் மரங்கள்தோறும் விளங்கி நட்சத்திரங்களைப்போல் பிரகாசிக்கின்றன. இந்த பக்ஷிகள்

இனிமையாக கலகலவென்று கூவிக்கொண்டிருக்கையால் சீதையைப் பிரிந்திருக்கிற எனக்குச் சோகத்தை விளைவிக்கின்றன.

ஐயோ! லக்ஷ்மணா! இதுதான் சமயமென்று மன்மதனும் தன்மலர்க்கணைகளை என்மீது எய்கின்றனனே! குயில்கள் நான் துக்கித்திருப்பதைக் கண்டு மிகவும் சந்தோஷம் அடைந்து ஜயகோஷமிட்டுக்கொண்டு என்னைப்போர்க்கு அழைப்பன போல் இருக்கின்றன. ஐயோ! முன்பு ஆச்சிரமத்திலிருக்கும் போது சீதை இந்த நீர்க்கோழியின் குரலைக்கேட்டுக் காதல் மிகுதியினால் சந்தோஷமுற்று என்னிடம் பலவித லீலா ரசங்களை அனுபவித்தனளே! இந்த வசந்தருதுவே இப்போது நெருப்பாகி என்னைக் கொளுத்தப் போகின்றது. சிவந்த அசோகமரத்தில் பூங்கொத்துக்களே இந்த நெருப்புக்குக் கொள்ளிக்கட்டைகள். வண்டுகளின் சப்தமே எரியும் போதுண்டான படபட சப்தம். தளிர்களே இதற்குச் சிவந்த ஜுவாலைகள். இந்தத் துக்காக்கினியானது மன்மத பீடையால் உண்டானது. மேலும் இந்த ருதுவின் அழகின் மிகுதியால் அது மேன் மேலும் பெருகி வளர்கின்றது.

லக்ஷ்மணா! இந்த மலைச்சரிவுகளில் தனக்குத் தானே லீலா ரசத்தினால் கூத்தாடுகின்ற தன் கணவனாகிய ஆண் மயிலைப் பார்த்து அந்தப் பெண்மயில் மனமயக்கங்கொண்டு புணர்ச்சியின் பொருட்டு அதை யழைத்துக்கொள்ள விரும்பி அதனருகிற் சென்று கூத்தாடுகின்றது பார். ஆண் மயிலும் கலவியின்பொருட்டுச் சிரித்த முகத்துடன் மனைவியைப் பிரிந்திருக்கின்ற என்னைப் பரிகசிப்பதுபோல் தன் பேடையினருகே செல்கின்றதைப் பார்.

ஐயோ! இத்தகைய வசந்த காலத்தில் சீதையைப் பிரிந்து வனத்தில் வாசஞ்செய்வது எனக்கு எவ்வளவும்

பொறுக்க முடியவில்லை. சீதை இப்பொழுது இருக்குமிடத்தி லும் வசந்தருது இருக்குமாயின் அவளும் என்னையே நினைத் துப் பரவசமாகி என்னைப்போலவே வருத்தமுறுவாளே! அந்தோ! வசந்தருது அவளிருக்குமிடத்தி லிருக்குமாயின் என்னைப் பிரிந்து பரிதவிக்கும் சீதை உயிரையே விட்டு விடுவாளே! சீதை பதிவிரதையாகையால் இதில் சிறிதும் சந்தேகமில்லை.

ஐயோ! லக்ஷ்மணா! இந்த ரமணீயமான பம்பா தீரத்தில் இந்த வசந்த ருதுவில் சீதையை இழந்த என்னை, ஐங்கணை வில்லி படுத்திவைக்கும் பாடு சொல்லத்தரமல்லவே! அந்த சீதை என்னோடிருக்கும்பொழுது எந்தெந்த வஸ்துக்கள் எனக்கு ரமணீயங்களாக இருந்தனவோ அவையெல்லாம் சீதையைப் பிரிந்திருக்கும் எனக்கு இப்பொழுது மிகவும் துயரத்தை விளைவிக்கின்றனவே! ஐயோ! தாமரை மொக்கு களின் மேலிதழ்களைக் கண்டவுடனே எனக்கு சீதையின் கண்கள் தோன்றுகின்றனவே! தாமரைத் தாதுகளோடுகூட மரங்களின் இடைவெளிகளினின்று வரும் காற்றானது சீதை மூச்சுக் காற்றுபோல் நல்ல வாசனையுடன் மனோகரமாக வீசுகின்றதே!

லக்ஷ்மணா! வசந்தருதுவில் இம்மலைச் சாரல்களிலுள்ள பலவித மரங்களில் அழகிற் சிறந்த இனிய வாசனையுள்ள புஷ்பங்கள் எப்படி விளங்குகின்றன பார். வண்டினங்கள் முரலவும், மயிலினங்கள் ஆலவும், குயிலினங்கள் கூவவும் புள்ளிமான்கள் துள்ளி ஓடவும், அன்றிப்பறவைகள் இரங் கும்படி சத்தம் செய்யவும் பெற்ற இவ்வழகிய பம்பா தீரத் தில் இளந்தென்றல் வீச நான் சீதையைப் பிரிந்து மனம் வருந்தி உயிரைவிடவே நேரும்போலும்.

லக்ஷ்மணா! புண்ணியம் செய்தவர்களே தம் காதலிமார் களுடன் இத்தகைய ரமணீயமானவிடத்தில் களித்து விளை

யாடி இன்பமனுபவிப்பார்கள். என்னைப்போன்ற பாக்கிய மற்றவனுக்கு இது நேரிடுவது அரிது. ஐயோ! நான் அழகிய சீதையை புன்முறுவலுடன் கூடி எப்பொழுது காணப் போகிறேன்? நான் வனத்தில் வருத்தமுற்று இருப்பினும் நான் மன்மத விகாரம் கொண்டிருக்கும்போது துக்கம் சிறிது மில்லாதவள் போலவும் சந்தோஷ முற்றிருப்பவள் போலவும் நடித்து எனக்கு மனக்களிப்பை விளைவித்து வந்த என் காதலி சீதையை நான் எப்பொழுது கண்டுகளிக்கப் போகிறேன்?

ஐயோ! லக்ஷ்மணா! நான் அயோத்திக்குப் போனதும் கௌசல்யை என்னைப் பார்த்து 'சமஸ்த சுகங்களையும் துறந்து உன்னைப் பின்தொடர்ந்த என் மருகி எங்கே?' என்று கேட்பாளாயின் நான் என்ன மறுமொழி கூறுவேன்? ஆகையால் நீ உடனே பரதனிடம் செல்வாயாக. சீதையைப் பிரிந்த நான் எவ்விதத்திலும் பிழைத்திருக்கப் பொறேன்" என்று ராமன் புலம்பினன்.

இங்ஙனம் திக்கற்றவன்போல் புலம்பாநின்ற ராமனை நோக்கி லக்ஷ்மணன் "புருஷோத்தமா! தைரியத்தைக் கைக்கொள்வாயாக. தருமம் தெரிந்த உன்னைப் போன்றவனுக்கு புத்தி எவ்வளவும் கலக்கமுறத் தகாதல்லவோ? ராவணன் சீதையைஇம்மூன்றுஉலகினுள் எங்குக்கொண்டு வைத்திருந்த போதிலும் இனி உயிர் பிழைத்திருக்கப் போகிறதில்லை. அவனிருப்பிடம் தெரியவேண்டியதொன்று தவிர நமக்கு மற்றெதுவும் தேவை இல்லை. ராவணன் சீதையை எடுத்துக் கொண்டு ஓடிப்போய் இந்திரன் தாயான அதிதியின் கர்ப்பத்தில் புகுவானாயினும் அவ்விடத்திலும் சீதையைக் கொண்டானாயின் அவனைக் கொன்று விடுவேன். மகானுபாவனே! தைரியம் நன்மையை விளைவிக்க வல்லதாகையால் அதைக் கைப்பற்றின் நிச்சயமாகக் காரியசித்தி உண்டாகும். பூஜிக்கத் தகுந்த ராமா! உற்சாகத்தைக் காட்டிலும் மேலான பலம்

ஒன்றுமே இல்லை. அதையுடையவனுக்கு உலகத்தில் பெறக் கூடாதது எதுவுமில்லை. ஆகையால் நீ உற்சாகத்தைக் கைப் பற்றி துக்கத்தைப் புறக்கணித்து இந்த மன்மத வியா பாரத்தை வெல்லுவாயாக. மகாபிரபாவம் உடையவனும் பேரறிஞனுமான நீ உன்னையே மறந்திருக்கின்றனை, இது தகுதியன்று'' என்று கூறிச் சமாதானப் படுத்தினன்.

உடனே தைரியமடைந்த ராமன் மிகுந்த உற்சாகங் கொண்டு பம்பாஸரஸ்ஸைக்கடந்து சென்று, லக்ஷ்மணனுடன் கூடி அவ்வனம் முழுமையும் திரிந்து சீதையைத் தேடிக் காணாமையால் வருத்தம் மேலெழப் பெற்று வேகமாகச் சென்றனன். லக்ஷ்மணன் சீதாவியோகத்தினால் பீடிக்கப்பட் டிருக்கும் ராமனுக்கு ராஜநீதி முதலிய தருமங்களை எடுத் துரைத்தும், தன் பலத்தை வெளியிட்டும் அவனுடைய துக்கத்தை யடக்கிப் பாதுகாத்துக் கொண்டிருந்தனன்.

இப்படியிருக்க, சுக்கிரீவனென்கிற குரங்கரசனொருவன் மிகவும் பலவானான தன் மூத்தோனான வாலியிடம் அச்ச முடையவனாகி ருச்சியமூகமலையினருகில் உள்ள பம்பா தீரத் தில் உலாவிக் கொண்டிருக்கையில், அந்த ராம லக்ஷ்மணர்கள் கையில் அழகிய வில்லைப்பிடித்து வருவதுகண்டு மிகவும் பயப் பட்டு ஒன்றும் செய்யத் தோன்றாமல் சிந்தையிலாழ்ந்தனன். அவனும் அவனது மந்திரிகளான வானரர்களும் வெகுநாழிகை யாகப் பம்பா தீரத்தில் திரிந்துகொண்டிருந்த ராம லக்ஷ்மணர் களைக்கண்டு, வாலியால் அனுப்பப்பட்டு முனிவேடம் பூண்டு தங்களை வதைக்க வந்தவர்களென்று நினைத்து மிகவும் திகி லடைந்து அம் மதங்காரது ஆச்சிரமத்திற்குள் பிரவேசித் தனர்.

முதல் ஸர்க்கம் முற்றிற்று.

## இரண்டாவது ஸர்க்கம்

### சுக்கிரீவன் அனுமானை ராமலக்ஷ்மணர்களிடம் அனுப்புதல்.

சுக்கிரீவன் மிகவும் பயந்து தன் மந்திரிகளான வானர வீரர்களுடன் பற்பல மரங்களையும் மலைகளையும் தாவிக் குதித்துத் தாண்டி ருச்சியமூகமலையின் மற்றொரு பக்கத்திலுள்ள தாழ்வரையில் இறங்கினன். அச்சமயம் அவனது மந்திரிகளில் பேசுவதில் நிபுணனான அனுமான் சுக்கிரீவனை நோக்கி "வானரக்கோனே! நீங்கள் எல்லாரும் வாலி நிமித்தமாக இங்ஙனம் மனம் தத்தளிப்பது சரியல்ல; இந்த ருச்சியமூக மலையில் வாலியால் எள்ளளவும் நமக்குப் பயமில்லை. உனதண்ணனான வாலியோ குரூரமான நடத்தையும் காட்சியுமுடையவன். அத்தகைய குறி இவர்களிடத்தில் எனக்குப் புலப்படவில்லை. நல்லியற்கையுடையவனே! உன் மனைவியை அபகரித்த பாபாத்துமாவான வாலியின் குணக்குறிகள் இவர்களிடத்தில் காணப்படவில்லை. ஆஜானுபாஹுக்களாயும், அழகிய விசாலமான செந்தாமரைக் கண்களையுடையவர்களாயும், வில் வாள் அம்புகள் முதலியவற்றைத் தரித்துத் தேவகுமாரர்கள்போல் விளங்கும் இவர்களைப் பார்த்து நீ இத்தகைய சந்தேகம் கொள்ளலாமா? ஆ! ஆ! உன் குரங்குத் தன்மை நன்கு வெளியாயிற்றே! நீ விஷய விசாரம் செய்து மனத்தை நிலைப்படுத்திக்கொள்ளாமல் தடுமாறுகின்றனையே! இதுவென்!" என்றனன்.

சுக்கிரீவன் அனுமானுடைய சுபமான வார்த்தைகளைக் கேட்டு அனுமானைப் பார்த்து "வாலி மாறுவேடம் பூண்டு எதிரில் வருகிறானென்று நான் பயப்படவில்லை. அவன் இந்தப் புருஷ திலகர்களை ஒருக்கால் என்னை நோக்கி அனுப்பியிருக்கலாமென்று சந்தேகிக்கிறேன். 'இப்படிப்பட்ட புருஷர்கள் வாலிக்கு வாய்க்கவழியில்லை' என்னில் அரசர்களுக்கு சிநேகிதர்கள் பலர் இருப்பார்கள். ஆகையால் அவர்கள் விஷ

யத்தில் நம்பிக்கை வைக்கலாகாது. அவர்கள் பல உபாயங்களைச்செய்து சத்துருக்களைக் கொல்லப்பார்ப்பார்கள். வாலி இவ்விஷயத்தில் மிகவும் வல்லவனாகையால் இவ்வித உபாயத்தைக்கொண்டு என்னை முடிக்க எண்ணினும் ஒக்கும். ஆகையால் அனுமானே! நீ ஒரு சாதாரணமானவனைப்போல் வேடம் தரித்து அவர்களிடம் சென்று அவர்கள் பேசும் பேச்சுக்களாலும், செய்யும் செய்கைகளாலும் அவர்களது உட்கருத்தை நன்கு உணர்ந்துகொண்டு வருவாயாக. அவர்களது மனதில் கெட்ட நினைவு இருக்குமாயின் அதைப் போக்கத் தக்க நல்ல வார்த்தைகளாலும், புகழ்ச்சியுரைகளாலும் அவர்களுக்கு நல்ல அபிப்பிராயத்தை உண்டு பண்ணி அவர்களை எனக்கு அனுகூலமாய் இருக்கும்படி நீ செய்ய வேண்டும். அவர்களுக்கு நல்ல எண்ணம் இருக்குமாயின் அப்பொழுது அவர்களது வரவிற்கு யாதுகாரணமென்பதைக் கேட்டுத் தெரிந்துகொள்வாயாக" என்றனன். வாயு குமாரனை அனுமானும் 'அப்படியே செய்கிறேன்' என்று கூறி ராம லக்ஷ்மணர்களிருக்குமிடத்திற்குப் போயினன்.

இரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று

---

## மூன்றாவது ஸர்க்கம்

### அனுமான் ராம லக்ஷ்மணர்களோடு சம்பாஷித்தல்

அனுமான் வானர உருவத்தை விட்டு சந்நியாசி வேடம் பூண்டு மிகுந்த விநயத்துடன் ராமலக்ஷ்மணர்களை வணங்கி இனிதான உரைகளைச்சொல்லி அவர்களைப் புகழ்ந்தனன். அவன் அவர்களை நோக்கி "ராஜரிஷிகளைப் போலவும் தேவதைகளைப் போலவும் விளங்குகிற நீங்கள் மிகவும் பயங்கரமான இவ்வனத்திற்கு எப்படி வந்தீர்கள்? சூரிய சந்திரர்களைப்போல் விளங்கும் நீங்கள் இந்திரனது தனுசைப்

போன்ற வில்லைக் கையில் பிடித்து இங்குவந்த காரண மென்ன? சமஸ்த ராஜ லக்ஷணங்களும் அமையப்பெற்ற நீங்கள் அரசாள்வதற் குரியவராய் இருந்தும் அதை விட்டு சடை, மரவுரி இவற்றைத் தரித்து இப்பெருங்காட்டிற்கு ஏன் வந்தீர்கள்? நீங்களிருவரும் இப்பூமண்டலம் அனைத்தை யும் பாதுகாப்பதற்குரியவரென்று நினைக்கிறேன். நான் கேட்கும் வினாக்களுக்கு ஏன் பதிலளிக்காமலிருக்கிறீர்கள்?

சுக்கிரீவன் என்னும் ஓர் வானரர்தலைவன் தன் அண்ண ஞன வாலியினால் துரத்தப்பட்டு துக்கத்தினால் பூமியில் திரிந்துகொண்டிருக்கின்றனன். நான் அவனால் அனுப்பப் பட்டு இங்கு வந்துளேன். அனுமான் என்னும் பெயர் பூண்ட யான் வாயுதேவனது மைந்தனும் சுக்கிரீவனுடைய மந்திரியுமாவேன். சுக்கிரீவன் உங்களோடு சிநேகம் செய்ய விரும்பி என்னை உங்களிடம் அனுப்பினன். நான் சுக்கிரீவ னுக்குப் பிரியம் செய்யவிரும்பி சந்நியாசி வேடம் தரித்து ருச்சியமூக மலையிலிருந்து இவ்விடம் வந்தனன். நான் நினைத்தவிடம் போகவல்லவன். நினைத்த உருவம் கொள்ள வல்லவன்” என்றனன்.

ராமன் அனுமானது மதுரமான பேச்சுக்களில் ஈடுபட்டு லக்ஷ்மணனை நோக்கி “சுமித்திரையின் புதல்வனே! இவ் வானரன் பேசுவதில் நிகரற்றவனாக விளங்குகிறான். இவ னது வார்த்தைகளால் இவன் நான்கு வேதங்களையும் உணர்ந் தவனென்று தெரிகின்றது. பின்னும் இலக்கண வழுவில்லா மல் ஸ்பஷ்டமாகவும், நிதானமாகவும், மரியாதையாகவும், இனிமையாகவும் இவன் பேசுவதால் இவன் நவவியாகரண பண்டிதனென்று தெரிகிறது. இவனது வார்த்தைகளைக் கேட்கையில் வெட்டுவதற்காக வாளையேந்தின பகைவனும் இருப்பினும் அவனது மனமும் கொடுமை நீங்கிச் சந்தோஷம் அடையாதிராது. லக்ஷ்மணா! இத்தகைய குணங்களமைந்த

தூதர்கள் அல்லது மந்திரிகள் எந்த அரசனுக்கு இருப்பார்களோ அந்த அரசனது காரியங்களெல்லாம் நிச்சயமாகக் கைகூடும். ஆகையால் இவனோடு நீ இனிய வசனங்களைப் பேசுவாயாக" என்றனன்.

லக்ஷ்மணன் அனுமானை நோக்கி "அறிஞனே! சுக்கிரீவனது குணங்கள் எங்களுக்குத் தெரிந்திருக்கின்றன. அந்த சுக்கிரீவனையே இப்பொழுது நாங்கள் தேடிச் செல்கின்றோம். மகானுபாவனே! நீ இப்பொழுது சுக்கிரீவனது கட்டளையினால் யாது சொல்லினையோ அதை அப்படியே நடத்துகின்றோம்" என்றனன்.

மூன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

நான்காவது ஸர்க்கம்

## லக்ஷ்மணன் அனுமானுக்குத் தமது வரலாற்றைத் தெரிவித்தலும் அவர்கள் சுக்கிரீவனிடம் போதலும்

ராமனுக்கு சுக்கிரீவனால் காரியம் ஆகவேண்டியிருப்பதையறிந்த அனுமான் மிகவும் சந்தோஷமடைந்து 'சுக்கிரீவன் இனி வாலி தொலையப் பெற்று ராஜ்ஜியத்தைப் பெறுவான்' என்று நினைத்து, ராமனைப் பார்த்து "நீங்களிருவரும் மிகவும் பயங்கரமான இக்கொடிய வனத்திற்கு ஏன் வந்தீர்கள்?" என்று வினவினன்.

உடனே ராமனது அனுமதி பெற்ற லக்ஷ்மணன் அனுமானிடத்தில் தங்களது வரலாறுகளை ஆதி முதல் விஸ்தாரமாகக் கூறி சீதையை இழந்ததையும், கபந்தனை மாய்த்ததையும், அவனால் சுக்கிரீவனது குணம் வீரியம் முதலியவற்றைக் கேட்டு சீதையை அடையும் விஷயத்தில் அவன் துணையை நாடித் தாங்கள் சுக்கிரீவனைத் தேடிவந்ததையும் கூறினன்.

பின்னும் லக்ஷ்மணன் அனுமானைப் பார்த்து "அனுமானே! அனைவரும் வந்து அடைக்கலம் புகத்தக்க புஜபல

பராக்கிரமமுடைய ராமன் இப்போழுது வனத்தில் திரியும் குரக்கரசனுன சுக்கிரீவனைச் சரணம் அடைகின்றனன். இவன் விஷயத்தில் சுக்கிரீவன் அருள்புரிய வேண்டும்" என்றனன்.

அனுமான் லக்ஷ்மணனது வார்த்தைகளைக் கேட்டு மிகவும் வியந்து "ஆ! இப்படிப்பட்ட மகானுபாவர்களான உங்களை சுக்கிரீவனே நேரில் தேடிக்கொண்டு வந்து பார்க்க வேண்டும். நீங்கள் அவனது பாக்கிய வசத்தினுல் அவனுக்குத் தரிசனம் கொடுக்க வந்தீர்கள். அந்த சுக்கிரீவன் தனதண்ணனுன வாலி தன் மனைவியை அபகரித்துத் தன்னை மிகவும் வஞ்சித்துத் துரத்துகையில் ராஜ்ஜியம் கைசோரப் பெற்று அவனுக்குப்பயந்து வனத்தில் திரிகின்றனன். அவன் நிச்சயமாக எம்முடன் கூடிச் சீதையைத் தேடுவதில் உங்களிருவருக்கும் உதவிசெய்வான். ஆகையால் சுக்கிரீவனிடம் செல்வோம் வாருங்கள்" என்றுகூறி சந்நியாசி வேடத்தைவிட்டுத் தன் சுயரூபத்தையடைந்து அவர்களை முதுகின்மீதேற்றிக் கொண்டு மிகவும் சந்தோஷமாக சுக்கிரீவனது இருப்பிடமான ருச்சியமூக மலைக்குச் சென்றனன்.

நான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## ஐந்தாவது ஸர்க்கம்.

### ராமனும் சுக்கிரீவனும் அக்கினி சாக்ஷியாக சிநேகம் செய்து கோள்ளல்

அனுமான் சுக்கிரீவனையடைந்து தான் லக்ஷ்மணனிடம் கேட்டபடி ராமனது வரலாறுகளையும் பராக்கிரமங்களையும் அவர்கள் அவனை நாடி வந்த காரணத்தையும் விஸ்தாரமாகக் கூறி, அவர்களை எதிர்கொண்டு பூஜிக்கும்படி சொல்லினன்.

சுக்கிரீவன் சந்தோஷ முற்றவனுகி ராமலக்ஷ்மணரிடம் தனக்குண்டாயிருந்த பயம் நீங்கப்பெற்று அவர்களைப் பூஜித்த

பின் ராமனை நோக்கி "பிரபூ! கேவலம் குரங்கான என்னோடு உம்மைப் போன்றவர் சிநேகம் செய்ய விரும்புவது எனக்கே ஆச்சரியமாயிருப்பதோடு உயர்ந்த லாபமுமாயிருக்கின்றது. உமக்கு சிநேகம் செய்துகொள்ள இஷ்டமாயின் இதோ கையை நீட்டுகிறேன். உமது கையால் என் கையைப் பிடித்து இந்த சிநேகத்தைக் கடவாதிருக்கும்படி திடமான ஏற்பாடு செய்வீராக" என்றனன்.

ராமன் மனதில் சந்தோஷம் மிகப்பெற்று அவன் கையைப் பிடித்துக் கொண்டதல்லாமல் அவனையே அழுந்தக் கட்டிக் கொண்டனன். பிறகு அனுமானால் கொண்டு வரப் பட்ட நெருப்பை இடையில் வைத்து அதன் சாக்ஷியாக இரு வரும் சிநேகம் செய்து கொண்டனர்.

பிறகு சுக்கிரீவன் ராமனைப் பார்த்து "என் அருமை யான தோழரே! இனி உமது சுகதுக்கங்களும் எனது சுகதுக் கங்களும் ஒன்றே. ராமா! எனதண்ணன் என்னை வஞ்சித்து என் மனைவியை அபகரித்துக்கொள்கையில், நான் அவனிடம் பயப்பட்டு வருந்தி புகக்கூடாத இவ்வனத்தில் புகுந்து திரிந்து உன்னைச் சரணமடைகிறேன். எனக்கு 'அஞ்சேல்' என்று அபயம் கொடுப்பாயாக" என்று கூறுகையில், ராமன் சுக்கிரீவனைப் பார்த்து "வானரர் தலைவா! உன் மனைவியை அபகரித்த வாலியை நான் எனது பாணங்களால் கொன்று விடுகிறேன். இனி நீ அவனைப்பற்றிப் பயப்படவேண்டிய தில்லை" என்று கூறினன்.

இங்ஙனம் சுக்கிரீவனும் ராமனும் சிநேகம் செய்து கொள்ளும் சமயத்தில் சீதையின் இடக்கண்ணும், வாலி ராவணன் இவர்களது இடக்கண்களும் ஒரே காலத்தில் துடித்தன.

ஐந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

## ஆறவது ஸர்க்கம்

### சுக்கிரீவன் ராமகாரியத்தைச்செய்வதாகப் பிரதிக்கினைசெய்தல்

சுக்கிரீவன் ராமனைப் பார்த்து "ராமா! என் மந்திரிகள் அனைவரிலும் மேன்மையுற்ற இந்த அனுமான் உன்வரலாறுகளை எனக்குச் சொல்லினன். நீ உயிர்க்குயிரான சீதையை இழந்து பரிதபிக்கின்றனை. இனி நீ கூடிய சீக்கிரத்தில் அவளை அடையப் போகிறாய். உன் மனைவி பாதாளத்திலிருப்பினும் ஆகாயத்திலிருப்பினும் மற்றும் எவ்விடத்திலிருப்பினும் நான் கண்டுபிடித்துக் கொண்டுவந்து கொடுக்கிறேன். விஷம் கலந்த தின்பண்டத்தைத் தின்றால் எப்படியோ அப்படியே உன் மனைவியைத் திருடிக்கொண்டு போனவன் எவனாயினும் அவளைத் தன்வசத்தில் நிலைநிறுத்திக்கொள்ள முடியாது. இனி நீ கவலையை ஒழிப்பாயாக.

ராவணன் சீதையைக்கொண்டு போகும்போது "ராமா! லக்ஷ்மணா!" என்று கூக்குரலிட்ட ஓர் அழகிய பெண்மணியை நான் அவ்வரக்கனது மடியில் துடித்துக்கொண்டிருக்கக்கண்டேன். ஊகித்துப்பார்க்கையில் அவளே சீதையென்று இப்போது தோன்றுகிறது. அப்பொழுது அவள் நான்கு வானரர்களுடன் கூடியிருக்கும் என்னைப் பார்த்துத் தன் ஆபரணங்களை ஓர் துணியில் மூட்டையாகக்கட்டி என்னிடம் விழும்படி எறிந்தனள். அவைகளை இதோ கொண்டு வருகிறேன். நீ பார்த்து அடையாளம் கண்டுகொள்வாயாக" என்று கூறி வேகமாக ஓடித் தன் குகையினின்றும் தான் பத்திரமாக வைத்திருந்த சீதையின் அழகிய ஆபரண மூட்டையைக் கொண்டுவந்து காட்டினன்.

ராமன் அதைப் பார்த்தவுடனே சீதையை நினைத்து மனமுருகி மெய் மறந்து வாய்விட்டலறித் தரையில் வீழ்ந்தனன். பிறகு அவன் லக்ஷ்மணனை நோக்கி "லக்ஷ்மணா! சீதையின் இந்த ஆபரணங்களைக் காண்பாயாக. அவள்

இவற்றைப் புல்லுள்ள பசுந்தரையில் எறிந்திருப்பதால் இவை ஒன்றும் நசுங்கவில்லை போலும்" என்றனன்.

ராமன் இங்ஙனம் சொல்லுகையில் லக்ஷ்மணன் "ராமா! நான் சீதையின் தோள்வளைகளையும் குண்டலங்களையு மறியேன். தினந்தோறும் பாதங்களில் பணிந்து வந்தனம் செய்து கொண்டிருந்தேனாகையால் அவள் கால்களில் அணியும் சிலம்பு தண்டைகளைமாத்திரமே அறிவேன்" என்றனன்.

பிறகு ராமன் தைரியமுற்றுச் சுக்கிரீவனை நோக்கி "வானரர் கோமானே! சீதையைத் திருடிச்சென்ற ராக்ஷசன் எங்கிருக்கின்றான்? அவன் சீதையை எவ்விடம் கொண்டு சென்றனன்? அவன் நிமித்தமாக நான் சமஸ்த ராக்ஷசர்களையும் நாசம் செய்கிறேன். இது நிச்சயம். சீக்கிரம் அவ்வரக்கன் இருக்குமிடத்தை எனக்குச் சொல்லுவாயாக. அவனை இப்பொழுதே யமபுரத்திற்கு அனுப்பிவிடுகிறேன்" என்றனன்.

ஆருவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ஏழாவது ஸர்க்கம்

## ராம சுக்கிரீவர்கள் ஒருவருக்கொருவர் பிரதிக்கினை செய்துகொள்ளுதல்.

சுக்கிரீவன் ராமனைப் பார்த்து "பாபிஷ்டனான ராவணனது சாமர்த்தியமாவது பராக்கிரமமாவது எனக்கு ஒன்றும் தெரியாது. எனினும் நீ உன் சோகத்தை விடுவாயாக. நான் சத்தியமாகச் சொல்லுகிறேன் கேள். சீதையை நீ அடையும்படி தகுந்த முயற்சிகளைச் செய்கிறேன். வானர சேனைகளைக் கொண்டுபோய் ராவணனை அவன் பரிவாரங்களோடுகூடக் கொன்று விரைவில் உன்னைச் சந்தோஷப் படுத்துகிறேன். நானும் உன்னைப்போலவே மனைவியைத் துறந்து வருந்தித்

தவிக்கிறேன். ஆனால் உன்னைப்போல் இப்படி துக்கிக்கவில்லை. தைரியத்தைக் கைவிடவும் இல்லை. நான் கேவலம் ஓர் குரங்கே யாயினும் என் மனைவியைப்பற்றி உன்னைப்போல் இப்படி துக்கிக்கவில்லை. மகா தீரனான நீ இங்ஙனம் வருந்தலாகாது. சோகத்தைவிட்டுத் தைரியத்தைக் கைப்பற்றுவாயாக" என்று பலவாறு கூறித் தேற்றினன்.

ராமன் சுக்கிரீவனுடைய தேறுதல் மொழிகளினால் உற்சாகமடைந்து எப்பொழுதுமுள்ள தைரியத்தையடைந்து அவனை நோக்கி "நண்ப! நீ ராவணன் எங்கிருக்கிறானென்பதையும் சீதை எங்கே இருக்கிறாளென்பதையும் தெரிந்து தேடும்பொருட்டு முயற்சிகளைச் செய்வாயாக. நான் வாலியைக் கொன்று உனக்கரசளிப்பதாக இப்பொழுதே பிரதிக்கினை செய்து சத்தியத்தின்மேல் ஆணையிடுகிறேன்" என்று அருள்கூர்ந்து மொழிந்தனன்.

இங்ஙனம் ராம சுக்கிரீவர்கள் ஒருவருக்கொருவர் சிநேகஞ் செய்துகொண்டு சமமான தம் தமது துக்கங்களைச் சொல்லிக் கொண்டனர். சுக்கிரீவன் ராமனது வார்த்தைகளைக் கேட்டு அப்பொழுதே தன் காரியம் நிறைவேறினாற்போல் மன மகிழ்ச்சியடைந்தான்.

**ஏழாவது ஸர்க்கம் முற்றிற்று.**

---

## எட்டாவது ஸர்க்கம்.

### சுக்கிரீவன் தன் சோகத்தின் காரணத்தை ராமனுக்குத் தெரிவித்தல்

சுக்கிரீவன் ராமனைப் பார்த்து "ராமா! உன்னைப்போன்றவர் உதவியாய் இருக்கையில் தேவராஜ்ஜியமேயாயினும் பெற சாத்தியமேயல்லவா? பிரபுவே! இனி என் குரங்கு ராஜ்ஜியத்தைப் பெறுவது பற்றிச் சொல்லவேண்டுமோ? இனி என் வருத்தத்திற்குக் காரணம் கூறுகிறேன் கேள்.

எனதண்ணன் என் மனைவியை அபகரித்துக்கொண்டு என்னையும் அடித்துத் துரத்திவிட்டபடியால் நான் இந்த ருச்சியமூகமலையில் மிகுந்த பீதியுடன் அலைந்து திரிந்துகொண்டிருக்கிறேன். ராமா! நீ எல்லா உலகங்களுக்கும் அபயம் அளிப்பவன். ஆகையால் உன்னிடம் அடைக்கலம் புகுந்த என்னை அஞ்சலென்ன வேண்டும்" என்று வேண்டினன்.

ராமன் 'ஏற்கனவே நாம் பிரதிக்ஞை செய்திருந்தும் இப்படிக் கேட்கிறனே' என்று நினைத்துப் புன்னகைகொண்டு "அந்த வாலியை நிச்சயமாக என் கூரிய பாணங்களைப் பிரயோகித்து வதைத்துவிடுகிறேன்" என்று மீண்டும் பிரதிக்ஞை செய்தனன்.

சுக்கிரீவன் தைரியமடைந்து "ராமா! முன்பு வாலி என்னை இளவரசுப்பட்டத்தினின்றும் நீக்கி மிகக்கொடிய வார்த்தைகளைப் பேசி ராஜ்ஜியத்தினின்றும் துரத்திவிட்டனன். மேலும் என் உயிர்க்குயிரான மனைவியையும் அபகரித்துக் கொண்டு என் நண்பர்களையும் சிறையிலடைத்தனன். இத்துடன் நில்லாமல் என்னைக்கொல்வதற்காகவும் முயற்சிசெய்து கொண்டு இருக்கிறன். ஆகையால் ராமா! நான் பரம காருணிகனை உன்னைப் பார்த்ததும் நீ வாலியினல் ஏவப்பட்டு என்னைக் கொல்ல வந்தவனென்று சந்தேகித்து மிகவும் பயந்துவிட்டேன். எனக்கு இந்த அனுமான் முதலியவர்களைத்தவிர வேறு எவரும் துணைவரல்லர். இவர்களது உதவியினல் தான் நான் இதுவரை இவ்வளவு கஷ்டத்தையடைந்தும் சரீரத்தில் பிராணனை வைத்துக்கொண்டிருக்கிறேன்.

ராமா! வாலி மிகுந்த பலமுள்ளவன். எனக்குக் கொடிய பகையாளி. அவன் முடிந்த பின்பே என் துக்கம் தீர்ந்து எனக்குச் சுகம் உண்டாகும். ஆகையால் இவ்விஷயத்தில் நீயே எனக்குக் கதி" என்றனன்.

ராமன் சுக்கிரீவனை நோக்கி "உனக்கும் வாலிக்கும் எந்தக் காரணத்தினால் விரோதம் உண்டாயிற்று! அதை உள்ளபடி எனக்குச் சொல்லுவாயாக. பிறகு ஒரே பாணத்தால் அவனை அழித்துவிடுகிறேன்" என்று கூற; சுக்கிரீவன் பரமசந்தோஷமடைந்து ராமனிடம் தனக்கும் வாலிக்கும் ஏற்பட்ட விரோதத்தின் காரணத்தை உள்ளபடி சொல்லத் தொடங்கினன்.

எட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ஒன்பதாவது ஸர்க்கம்.

## வாலி தனக்குச் செய்த அபராதங்களை சுக்கிரீவன் ராமனிடம் விண்ணப்பம் செய்தல்.

ராமா! முன்பு என் தந்தையும் நானும் வாலியை மிகவும் கௌரவித்துக் கொண்டிருந்தோம். அவர் மரணமடைந்த பின் மந்திரிகள் மூத்தவனை வாலிக்குப் பட்டாபிஷேகம் செய்து என்னை இளவரசனுக்கி வைத்தனர்.

அச்சமயம் ஒரு நாள் துந்துபி என்னும் அரக்கனுடைய மூத்த குமாரனை மாயாவி என்பவன் எல்லாரும் தூங்கிக் கொண்டிருக்கும்பொழுது நடு இரவில் கிஷ்கிந்தைக்கு வந்து கர்ஜித்துக்கொண்டு வாலியைச் சண்டைக்கு அழைத்தனன். வாலி மிகுந்த கோபமடைந்து அந்நள்ளிரவில் அவனோடு யுத்தத்திற்குப் போயினன். அவன் அங்ஙனம் தனித்துச் செல்வதைப் பொறுக்கமாட்டாமல் நான் அவனைப் பின் தொடர்ந்து சென்றேன். எங்களிருவரையும் கண்ட மாயாவி பயப்பட்டு அதிவேகமாக ஓட நாங்களும் அவனைவிட வேகமாக அவனைப் பின் தொடர்ந்து ஓடினோம்.

ஓடுகையில் அந்த ராக்ஷசன் கற்களால் மூடப்பட்டு புகமுடியாததான ஓர் பெரிய குகையில் புகுந்துவிட்டனன்.

நாங்களிருவரும் அப்பிலத்துவாரத்தின் சமீபத்தில் வந்து சேர்ந்ததும் வாலி என்னை நோக்கி "நான் பகைவனைக் கொன்றுவரும் வரையில் நீ இக்குகையின் வாயிலில் காத்திருப்பாயாக" என்று கூறி அக்குகையில் பிரவேசித்தனன்.

பிறகு ஒருவருஷகாலம் நான் அக்குகையின் வாயிலில் காத்திருந்தும் வாலி திரும்பி வாராததாலும், அக்குகையினின்றும் நுரையுடன் கூடின சிவந்த ரத்தம் வெளிவந்தமையாலும், அசுரர்கள் கர்ஜிக்கும் சத்தத்தையும் கேட்டபடியாலும் வாலி அவர்களால் அடிபுண்டு மாண்டான் என்று நிச்சயித்து மலைபோன்ற ஓர் பாறையால் அக்குகையின் வாயிலை மூடிவிட்டு மிகுந்த வருத்தத்துடன் அண்ணனுக்கு ஜலதர்ப்பணம் செய்துவிட்டுக் கிஷ்கிந்தைக்கு வந்து சேர்ந்தேன்.

பிறகு மந்திரிகள் வாலி இறந்தானென்பதாக என்னிடமிருந்து தெரிந்துகொண்டு எல்லோருங்கூடி சம்மதியுடன் எனக்குப் பட்டாபிஷேகம் செய்தனர். ராமா! நான் இங்ஙனம் நியாயத்தின்படி அரசாண்டுவருகையில் வாலியும் தன்பகைவனை மாயாவியைக்கொன்று வெளிப்போந்து நான் அரசனாகி ஆட்சி செய்வதைக்கண்டு கண்கள் சிவக்கப்பெற்று என்னைப் பலவிதமாகத் திட்டினன்.

அச்சமயம் சகலவிதமான சைன்னியங்களுடனும் மந்திரிகளுடனும் கூடியிருந்த நான் அவனை எளிதில் அடித்துத் துரத்த வல்லமையுடையவனாயிருந்தும் அங்ஙனம் செய்யாமல் மூத்தவன் என்கிற மரியாதையால் அவனை வணங்கிவேண்டிக்கொண்டும் அவன் என்னை ஆசீர்வதியாமல் கோபத்தினால் கண்சிவக்கப்பெற்று கடுஞ்சொற்களால் வைதனன்.

ஒன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

### பத்தாவது ஸர்க்கம்.

### சுக்கிரீவன் தான் வாலியை வேண்டிக்கொண்டும், வாலி தயை இல்லாமல் தன்னை விரட்டி அடித்ததைக்கூறுதல்.

ராமா! நான் வாலியை வணங்கி "அண்ணா! நான் பிலத்துவாரத்தில் ஒருவருஷம் காத்திருந்து, நீ வராமற்போனதுடன் அதினின்றும் ரத்தப்பிரவாகம் வந்தமையால் மிகவும் பயந்து ஓர்பாறையால் அதன்வாயை மூடிக் கிஷ்கிந்தைக்கு ஓடிவந்தேன். ராஜ்ஜியம் அரசனின்றி இருப்பதால் கெடுதி நேரிடுமென்று மந்திரிகள் என்னை அரசனாக்கினார்களேயன்றி நான் வேண்டவில்லை. ஒருக்கால் என்மேல் தப்பிதம் இருப்பினும் நீ அதைப்பொறுத்துக் கொள்ளவேண்டும். நீயே அரசனும் பூஜிக்கத் தகுந்தவனுமாவாய், நீ இல்லாமையால் நான் அரசனாய் இருந்து ராஜ்ஜியத்தைப் பாதுகாத்தேன். இனி நீயே அரசன். நான் பழையபடி உனக்குக் கீழ்ப்பணிந்து நடக்கிறேன். என்னை மன்னித்துப் பழையபடி சினேகமாய் இருப்பாயாக. இதோ உன்னைக் கைகூப்பி வணங்குகிறேன். நான் ராஜ்ஜிய ஆசையால் உன்னை வஞ்சித்து அரசைக் கைப்பற்றவில்லை" என்று விநயமுடன் மொழிந்தனன்.

நான் இவ்வளவு தூரம் சினேகபாவம் விளங்கச்சொன்னபோதிலும் வாலி திருப்தியடையாமல் என்னை அதட்டிச் 'சீ' என்று வைது சொல்லக்கூடாத கெட்ட வார்த்தைகளைச் சொல்லிப் பட்டணத்து ஜனங்களையும் மந்திரிகளையும் வரவழைத்து "இந்த சுக்கிரீவன் ராஜ்ஜிய ஆசையால் என்னை வஞ்சித்து நான் இறந்துவிட்டதாக உங்களிடம் கூறி அரசைக் கைப்பற்றினன். ஆகையால் இவன் சகோதரத்துரோகி; பாபிஷ்டனான இவனை இப்பொழுதே தண்டிக்கப்போகிறேன்" என்று கூறிக் கொஞ்சமேனும் தயையில்லாமல் என்னை ஒரே வஸ்திரத்துடன் அடித்துத் துரத்தி விட்டனன். பிறகு

என் மனைவியையும் அபகரித்துக்கொண்டு என்னை எவ்விதத்திலும் கொல்ல வழிதேடினன்.

"ராமா! வாலி புகக்கூடாததான இந்த ருச்யமூக மலையில் அதுமுதல் நான்வாசம் செய்கிறேன். நான் ஒருகுற்றமும் செய்யாதிருப்பினும் எனக்கிந்த கஷ்டம் நேர்ந்தது. வாலியிடம் பயந்து பரிதபிக்கும் எனக்கு நீ இரங்கி அருள்புரிய வேண்டும்" என்றனன்.

ராமன் இங்ஙனம் சுக்கிரீவன் சொன்ன வார்த்தைகளைக் கேட்டு "தோழனே! இனி நீ பயப்பட வேண்டியதில்லை. துக்க சமுத்திரத்தில் மூழ்கியிருக்குமுன்னை அதினின்றும் கரையேற்றுகிறேன். நிச்சயமாக உனது கோரிக்கை ஈடேறப் போகிறது. வாலி இனி ஒழிந்ததாகவே நீ நினைப்பாயாக" என்று கூறினன்.

**பத்தாவது ஸர்க்கம் முற்றிற்று.**

---

## பதினோராவது ஸர்க்கம்.

### ராமனுக்கு சுக்கிரீவன், வாலிக்கு மதங்கசாபம் நேர்ந்த விதத்தைக் கூறி அவனது பராக்கிரமங்களைக் கூறுதல்.

பிறகு சுக்கிரீவன் ராமனைப் பார்த்து "நண்பனே! நீ கோபமுறுவாயாயின் உன் கூரிய பாணங்களால் உலகங்களையெல்லாம் கொளுத்திவிடுவாயென்பது நிச்சயம். எனினும் வாலியின் பலத்தையும் பராக்கிரமத்தையும் தைரியத்தையும் மனவூக்கத்துடன் கேட்டு அதன் பிறகு செய்யவேண்டியவற்றைச் செய்வாயாக. வாலி சூரியன் உதயமாவதற்கு முன்பே எழுந்து சந்தியாவந்தனத்திற்காக நான்கு சமுத்திரங்களுக்கும் ஆயாசமின்றிச் சென்று சுகமாகவே போய்க்கொண்டிருப்பான். மிகப் பெரிய மலைச்சிகரங்களை வேகத்துடன் மேலெழும்பபடி விட்டுப் பிடித்துக்கொள்வான்.

ஆயிரம் யானை பலம் கொண்டவனான துந்துபி என்னும் மிகக்கொடிய ஓர் ராக்ஷசன் கர்வம் கொண்டு வரம் பெற்ற மகிமையால் மெய்மறந்து சமுத்திர ராஜனைப் போருக் கழைத்தனன். கடலரசன் அவனைப் பார்த்து "நீ சண்டையில் வல்லவனாகையால் உன்னை எதிர்த்துப் போர்செய்ய எனக்கு வல்லமை இல்லை. ஆனால் சிவனுக்கு மாமனான 'இமவான்' என்னும் மலையரசன் உன்னோடு சண்டைசெய்ய வல்லவன். அவனிடம் சென்று உன் பராக்கிரமத்தைக் காட்டுவாயாக" என்று சொல்லி அனுப்பிவிட்டனன்.

உடனே துந்துபி பர்வதராஜனான இமவானிடம் சென்று கர்ஜனை செய்து யுத்தத்திற்கழைத்தனன். அம் மலையரசன் அவனைப்பார்த்து "துந்துபீ! நான் சண்டையில் சாமர்த்தியமுடையவனன்று. தவிர, என்னிடத்தில் ரிஷிகள் வாசம்செய்கிறார்களாகையால் எனக்கு யுத்தம் செய்ய சாத்தியமில்லை. உனக்கு யுத்தம்செய்ய விருப்பமுளதாயின் கிஷ்கிந்தைக்குச்சென்று மிகுந்த புஜபல பராக்கிரமமுடைய வானர ராஜனான வாலியுடன் சண்டை செய்வாயாக. அவன் எப்பொழுதும் எப்படிப்பட்டவருக்கும் எதிரிடக்கூடாத சூரன்" என்றனன்.

உடனே துந்துபி கோபாவேசமுற்று ஓர் எருமையின் உருவம் தரித்துக் கிஷ்கிந்தாபுரிக்குப் போயினன். அவன் அங்குச்சென்று பூமி அதிரும்படி பேரிவாத்தியம்போல் பெருஞ் சப்தத்துடன் கர்ஜித்தனன். அச்சமயம் அந்தப் புரத்தினின்றும் தன் காதலிமார்களுடன் வெளிவந்த வாலி அவனை நோக்கி "அடேய்! துந்துபீ! நீ மிக ப் ப ல ம் கொண்டவனென்பது எனக்குத் தெரியும். நீ என் பட்டணம் நடுங்கும்படி இங்ஙனம் கர்ஜிப்பதேன்? நீ உயிர் பிழைக்க விரும்புவாயாயின் சீக்கிரம் ஓடிவிடுவாயாக" என்று ஆரவாரித்து உரைத்தனன்.

இதைக்கேட்ட துந்துபி கண்கள் சிவக்க "வானரனே! நீ இங்ஙனம் ஸ்திரீகளின் முன்பு அவர்கள் மயங்கும்படியான வார்த்தைகளைச் சொல்வது யுக்தமன்று. ஐயோ பாவம்! நீ இப்பொழுது மதன கேளீவிலாசத்தில் ஈடுபட்டுக்கொண் டிருந்தாய்போலும்! நீ சென்று இன்றிரவெல்லாம் உன் உயிர்க் காதலிமார்களுடன் மன்மத சுகத்தை யநுபவித்துவிட்டு உடனே என்னுடன் சண்டைக்கு வருவாயாக. நீ எப்படி யும் முடிந்துபோகப்போகிறாயாகையால் நீ உன் ஆயுட்காலத் தில் செய்யவிரும்பி யிருக்கும் எல்லாவற்றையும் உடனே செய்து யுத்தத்திற்குத் தயாராகவிருப்பாயாக. அதுவரை உனக்குக் கெடு கொடுக்கிறேன்" என்று ஏளனமாக உரைத் தனன்.

இதைக்கேட்ட வாலி மனம் பொறுக்கமாட்டாமல் தன் காதலிகளை அந்தப்புரத்திற் கனுப்பிவிட்டு மிகுந்தகோபத் துடன் முன் தனக்கு தேவேந்திரன் கொடுத்த காஞ்சன மாலையை யணிந்து துந்துபியை எதிர்த்துச்சென்றனன். பின்பு வாலிக்கும் துந்துபிக்கும் பயங்கரமான மல்லயுத்தம் நடந்தது. முடிவில் வாலியினால் துந்துபி சரீரம் முழுவதும் முறியும்படி பிசையப்பட்டு மரணமடைந்து தரையில் வீழ்ந் தனன். வாலி அத் துந்துபியின் பூதாகாரமான சரீரத்தைக் கைகளால் எடுத்து இப்படியும் அப்படியும் ஆட்டி ஒரே வேகத் தில் ஒரு யோசனைதூரம் போய்விழும்படி வீசி எறிந்தனன்.

அங்ஙனம் எறியப்பட்ட துந்துபியின் வாயிலிருந்து ரத்தத்துளிகள் காற்றினால் தள்ளுண்டு மதங்கமாமுனிவரின் ஆச்சிரமத்தில் போய்விழுந்தன. இதைக்கண்ட அம்முனிவர் மிகுந்த சீற்றங்கொண்டு தன் ஞான திருஷ்டியினால் வாலி இங்ஙனம் செய்தானென்பதை யுணர்ந்து "எவனால் இவ்விதம் ரத்தபிந்துக்கள் பரிசுத்தமான என் ஆச்சிரமத்தில் தெளிக்கப் பட்டதோ அவன் இனி என் ஆச்சிரமத்திலும் அதைச்சுற்

றிலும் யோசனை தூரத்திற்குள்ளும் வருவானாயின் அவன் உடனே மரணமடையக்கடவன். அவனைச்சேர்ந்த வானரர் களும் இப்பொழுதே இவ்வனத்தைவிட்டுப் போவார்களாக. மீறினால் அவர்களையும் சபித்துவிடுவேன். இச்சாபம் நடத் தைக்கு வர ஒருநாள் கெடு கொடுத்தேன்" என்று கொடிய சாபமிட்டனர். உடனே அவ்வனத்திலுள்ள வானரர்களெல் லாம் வாலியினிடம் ஓடி இச்சாபத்தைக் கூறினார்கள். அவன் மதங்கரிடம் அப்பொழுதே ஓடிச்சென்று கைகூப்பிய வண் ணம் "சுவாமி! சாபவிமோசனத்தை அருளவேண்டும்" என்று வேண்டியும் அவர் அவனைக் கவனிக்காமல் தனது ஆச் சிரமத்துக்குச் சென்றனர்.

பிறகு வாலி சாபபயத்தினால் இவ்விடத்திற்கு வருவ தில்லை. அதற்காகவே நான் என் மந்திரிகளுடன் இங்கு வசிக்கிறேன். வாலியால் முடிந்த துந்துபியின் பெருத்த சரீரம் உலர்ந்த எலும்புகளுடன்கூடி ஓர் மலைச்சிகரம்போல் அதோ இருக்கிறது பார். அதை அவன் அனாயாசமாக வீசி எறிவான்.

இதோ பெருத்த ஏழு மராமரங்கள் (ஆச்சாமரங்கள்) இருக்கின்றன பார். இவைகள் கிளைத்துத்தழைத்து விளங்கு வதைக் கவனி. வாலி இவைகளில் ஒரு மரத்தை வெறும் கை பலத்தால் பிளந்து அந்த மரத்தில் பாணமும் அதன் இறகுகளும் வெளிப்பட்டுத் தோன்றும்படி அப்புறம்சென்று மற்றொரு மரத்தில் பொத்துக்கொள்ளுமாறு பாணப் பிரயோ கம் செய்யவல்லவன். இம்மரங்களில் ஒன்றை அசைப்பானா யின் அது இலைகள் யாவும் உதிர்ந்து மொட்டையாகிவிடும். இதுவே வாலியின் பராக்கிரமமாகும். அப்படிப்பட்ட நிக ரற்ற பராக்கிரமமுடைய வாலியை நீ எப்படி யுத்தத்தில் வெல்லப்போகிறாய்?" என்று வினவினன்.

லக்ஷ்மணன் புன் சிரிப்புடன் சுக்கிரீவனை நோக்கி "என்ன காரியம் செய்தால் 'இவன் வாலியைக் கொல்ல வல்லவன்' என்று உனக்கு நம்பிக்கை உண்டாகும்?" என்றுகேட்க; சுக்கிரீவன் "லக்ஷ்மணா! இவ்வாச்சா மரங்களில் ஒன்றை ஒரு பாணத்தால் ராமன் பிளப்பானாயின் அதுபோதும். அடிபட்ட துந்துபியின் எலும்புக்குவியலை ஒரு காலால் எடுத்து இருநூறு வில்லளவு தூரம் போய்விழும்படி வேகத்துடன் வீசி எறிந்தாலும் போதும். அப்பொழுதே ராமன் வாலியைக் கொல்ல வல்லவன் என்கிற நம்பிக்கை எனக்குண்டாய் விடும்" என்றனன்.

பின்னும் சுக்கிரீவன் "ராமா! மிகுந்த பலமுடைய வாலி இதுவரை எவரிடத்திலும் தோல்வியடைந்ததில்லை. தேவதைகளாலும் செய்யமுடியாத அரியபெரிய காரியங்களை அவன் அனாயாசமாகச் செய்து முடிக்க வல்லவன். அவனுடைய வல்லமைகள் எனக்குத் தெரியும். உன் பராக்கிரமத்தை மாத்திரம் நான் இதுவரையில் பார்த்ததில்லை. வாலியின் பயங்கரமான கொடிய செயல்களை நினைத்து நான் பயந்து இந்த வார்த்தைகளைச் சொல்லுகிறேனே தவிர, உன்னை அவமதிப்பதற்காகவாவது, உன்மேல் நம்பிக்கையில்லாமைபற்றியாவது நான் சொல்லவில்லை. உன் கம்பீரமான தோற்றமே நீ நீறு பூத்த நெருப்பைப்போன்ற தேஜஸ்ஸை உடையவன் என்பதைத் தெரிவிக்கின்றது" என்றனன்.

உடனே ராமன் சுக்கிரீவனுக்கு நம்பிக்கை உண்டாகும் வண்ணம் அத் துந்துபியின் சரீரத்தைக் கால் கட்டை விரலால் அவலீலையாக எடுத்து ஆட்டுவித்துப் பத்து யோசனை தூரத்திற்கப்புறம் போய் விழும்படி வீசி எறிந்தனன்.

இதுகண்ட சுக்கிரீவன் ராமனைப்பார்த்து "நண்பனே! முன்பு இந்த சரீரம் ரத்தத்தால் நனைந்து மாம்சமும் நிறைந்

திருந்ததுபற்றி அதிக பருவாய் இருந்து இப்பொழுது உலர்ந்துபோய் இருப்பதால் இலேசாகி இருத்தலால் உன்னால் சுலபமாக வீசி எறியப்பட்டது; இதனால் உன் பலம் அதிகமா? வாலியின் பலம் அதிகமா? என்கிற சந்தேகம் தீராததாகவே யிருக்கிறது. ஆகையால் ஒரு ஆச்சா மரத்தை பாணத்தால் பிளப்பாயாக. அப்பொழுது பலாபலம் நன்கு வெளியாகும். நிச்சயமாக உன்னால் இந்தக்காரியத்தைச் செய்யமுடியும். எனினும் நான் இங்ஙனம் உன்னைக் கேட்பது எனக்குச் சந்தோஷம் உண்டாவதற்கன்றி உன்னைப் பரீக்ஷிப்பதற்காகவன்று. நீ பராக்கிரமத்தில் நிகரற்றவனென்பதை நான் அறிவேன்" என்றனன்.

**பதினோராவது ஸர்க்கம் முற்றிற்று.**

---

## பன்னிரண்டாவது ஸர்க்கம்

### ராமன் ஏழு மராமரங்களைத் துளைத்தலும் வாலி சுக்கிரீவர்களின் முதல் யுத்தமும்.

உடனே ராமன் ஒரு பாணப் பிரயோகம் செய்ய அது ஏழு ஆச்சா மரங்களையும் பிளந்து அந்த மலைச்சாரலையும் பிளந்துகொண்டு பூமியுள் புகுந்து மீண்டும் வெளிப்பட்டு ராமனது அம்பறாத் தூணியில் புகுந்தது. உடனே சுக்கிரீவன் அளவற்ற மகிழ்ச்சியடைந்து ராமனுக்கு அஞ்சலி செய்து சாஷ்டாங்கமாக அவனை நமஸ்கரித்தனன். மீண்டும் அவன் ராமனைப்பார்த்து "ஒப்பற்ற வீரனே! ஒரே பாணத்தால் ஏழு பெரிய ஆச்சா மரங்களையும் மலையையும் பூமியையும் பிளந்து விட்டனையே. இப்படிப்பட்ட உன்னை முன்னின்று எதிர்க்கக்கூடியவன் எவன்? தேவேந்திரனோடுகூட தேவதைகளனைவரும் சேர்ந்து வரினும் யுத்தத்தில் நீ எல்லாரையும் வதைக்கக்கூடியவன். உன்னை நண்பனாகப் பெற்றமையால்

இப்பொழுதே என் துக்கம் தீர்ந்துவிட்டது. இதோ இப்பொழுதே நீ வாலியைக் கொன்றுவிடுவாயாக" என்றனன்.

உடனே ராம லக்ஷ்மணர்கள் பின்தொடர சுக்கிரீவன் கிஷ்கிந்தைக்குச் சென்றனன். அங்கோர் காட்டில் மரங்களின் மறைவில் ராமன் ஒளிந்திருந்தனன். சுக்கிரீவன் பெருத்த கர்ஜனைசெய்து வாலியைச் சண்டைக்கழைத்தனன். பிறகு வாலிக்கும் சுக்கிரீவனுக்கும் பயங்கரமான மல்லயுத்தம் நடந்தது. இருவரும் உள்ளங்கைகளாலும் முஷ்டிகளாலும் ஒருவரை யொருவர் அடித்துக்கொண்டனர். அச்சமயம் அந்த வாலிசுக்கிரீவர்களிருவரும் அசுவினி தேவதைகளைப் போல் ஒருவரை யொருவர் நிகர்த்திருக்கக்கண்டு வாலி இன்னவன் என்கிற அடையாளம் தெரியாமையால் ராமன் பாணத்தை விடுவதற்கு மனமில்லாமல் இருந்தனன்.

இதற்குள் வாலியால் மிகவும் அடிக்கப்பட்ட சுக்கிரீவன் தோல்வியடைந்து இளைப்புற்றுச் சரீரமெங்கும் ரத்தம் பெருகப்பெற்றுப் பயந்து மதங்காச்சிரமத்தை நோக்கி வேகமாக ஓடினன். வாலி சாப பயத்தினால் அங்குச் செல்ல முடியாமல் திரும்பிப் போயினன்.

ராம லக்ஷ்மணர்கள் தன்னை நோக்கி வருவதைக்கண்ட சுக்கிரீவன் வெட்கித் தரையைப் பார்த்த வண்ணம் "ஐயோ! ராமா! என்னை இப்படியும் பரிபவப்படும்படி செய்யலாமா? அப்பொழுதே 'என்னால் வாலியைக் கொல்லமுடியா' தென்று சொல்லிவிடக்கூடாதா" என்றனன்.

ராமன் அவனை நோக்கி "சுக்கிரீவா! அலங்காரத்திலும் வேஷத்திலும் உருவத்திலும் நடையிலும் குரலிலும் நீயும் வாலியும் ஒருவரை யொருவர் ஒத்திருக்கிறீர்களாகையால் உங்கள் 'இருவருள் இன்னவன் வாலி, இன்னவன் சுக்கிரீவன்' என்பதை என்னால் தெரிந்து கொள்ள முடியவில்லை. இந்த

சந்தேகத்தில் நான் பாணப்பிரயோகம் செய்தால் அது ஒருக்கால் உன்மேல்பட்டு எங்கு அனர்த்தம் நேருமோ எனப் பயந்து நான் வாளா விருந்து விட்டேன்.

ஆகையால் இப்பொழுதே மீண்டும் வாலியுடன் யுத்தம் செய்யச் செல்வாயாக. இச்சமயம் உன்னை நான் அடையாளம் தெரிந்துகொள்ள இந்த கஜபுஷ்பி யென்னும் ஓஷதியைக் கழுத்தில் கட்டிக்கொள்வாயாக. இனி நிச்சயமாக வாலியை ஒரே பாணத்தினால் கொன்று பூமியில்விழுந்து புரளச்செய்கின்றேன்" என்றனன். சுக்கிரீவன் சமாதானமடைந்து அடையாளமும் பூண்டு வாலியுடன் சண்டை செய்ய மீண்டும் கிஷ்கிந்தைக்குச் சென்றனன்.

பன்னிரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று

---

## பதின்மூன்றவது ஸர்க்கம்

### ராம சுக்கிரீவர்கள் மீண்டும் கிஷ்கிந்தைக்குப் போதல்.

அவர்கள் மூவரும் அநேக ஆறுகுளங்களையும், குன்றுகளையும் கடந்து பல காட்டுமிருகங்களையும் அழகிய பறவைகளையும் பார்த்துக்கொண்டே கிஷ்கிந்தையை அடைந்தனர். வழியில் ஓர் அழகிய ஆச்சிரமத்தைக்கண்ட ராமன் சுக்கிரீவனை நோக்கி "இந்த அழகிய மரங்களடர்ந்த ஆச்சிரமம் யாருடையது?" என்று கேட்க; சுக்கிரீவன் "ராமா! இந்த இடத்தில் ஸப்தஜனங்களென்னும் முனிவர்கள் எழுவர் வாசம் செய்துகொண்டிருந்தனர். அவர்கள் மிகுந்த கொடிய விரதங்களை யனுஷ்டித்துத் தலைகீழாக ஜலத்தில் இருந்து தவம் செய்து வந்தனர். இங்ஙனம் எழுநூறு வருஷங்கள் அவர்கள் தவம் செய்து சரீரத்துடனே சுவர்க்கம் சென்றனர். தேவாசுரர்களாலும் இதில் நுழைய முடியாது. இதில் அப்ஸரஸ்திரீகள் நர்த்தனம் செய்யும் ஓசையும், கீத ஒலியும், சுகந்த பரிமளத்துடன் எப்பொழுதும் கேட்டுக்கொண்டிருந்த

லால் இது மிகவும் பரிசுத்தமானது. ஆகையால் நீங்களிருவரும் உங்கள் காரிய சித்தியின் பொருட்டு அந்த ரிஷிகளைக் குறித்து நமஸ்காரம் செய்வீர்களாக" என்றனன்.

ராம லக்ஷ்மணர்கள் அங்ஙனமே அம்முனிவர்களை நமஸ்கரித்துச் சீக்கிரமாக சுக்கிரீவனுடன் கிஷ்கிந்தையை அடைந்தனர்.

பதின்மூன்ருவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## பதினுன்காவது ஸர்க்கம்

### சுக்கிரீவன் வாலியைச் சண்டைக்கழைக்க பயப்படுகையில் ராமன் அவன் பயத்தைப் போக்குதல்.

இச்சமயம் சுக்கிரீவன் ராமனைப் பார்த்து "ராமா! முன்பு நான் உன்வார்த்தையில் நம்பிக்கை வைத்து வாலியுடன் தைரியமாகச் சண்டைக்குப் போய் மிகவும் பரிபவமடைந்து திரும்பினேனுதலால் இப்பொழுது சிறிது அச்சமாகவே இருக்கின்றது" என்றனன்.

ராமன் அவனை நோக்கி "நண்ப! இந்த கஜபுஷ்பமாலை உன் கழுத்தில் இருப்பதால் நான் சுலபமாக உன்னை அடையாளம் தெரிந்துகொண்டு உன் பகைவனை வாலியைத் தவருமல் முடித்து விடுகிறேன். நீ தைரியமாக வாலியைச் சண்டைக்கு அழைப்பாயாக" என்று கூறித் தான் முன்பு மறைந்திருந்த மரங்களினிடையில் ஒளிந்து கொண்டனன்.

உடனே சுக்கிரீவன் பெருத்த சிம்மநாதம் செய்து வாலியை யுத்தத்திற்கு அழைத்தனன்.

பதினுன்காவது ஸர்க்கம் முற்றிற்று.

பதினைந்தாவது ஸர்க்கம்

## வாலி சண்டைக்குப் புறப்படுகையில் தாரை வேண்டாமென்று தடுத்தல்.

சுக்கிரீவனது கர்ஜ்ஜனையைக் கேட்ட வாலி மிகுந்த கோபாவேசம் கொண்டு மிகவும் வேகமாகச் சண்டைக்குப் புறப்பட்டனன். அச்சமயம் அவன் மனைவியான தாரை மிகவும் பயந்து அவனை நோக்கி "தீ ரோ த் த ம ா! உன் கோபத்தைவிட்டுத் தொலைப்பாயாக. உனக்குச் சுக்கிரீவனோடு சண்டைசெய்ய விருப்பமுளதாயின் நாளை விடியற்காலம் செய்வாயாக, இப்பொழுது நீ செல்வது எனக்கு யுக்தமாகத் தோன்றவில்லை. ஏனெனில் சற்று முன்பு உன்னால் நன்கு முறியடிக்கப்பட்டுப் பரிபவமடைந்து விரைந்தோடிப்போன சுக்கிரீவன் மீளவும் உடனே சண்டைக்கு வருவதை யோசித்தால் இவனுக்கு ஏதோ ஒரு பெரிய சகாயம் இருக்குமோ வென்று சந்தேகம் உண்டாகின்றது. அவன் உன்னைக் காட்டிலும் பலமுள்ள வேறொரு துணைவனுடைய சகாயம் கொண்டே உன்னைச் சண்டைக்கழைக்கின்றானென்று நன்கு தெரிகிறது.

நான் சொல்வது பொய்யல்ல. இவ்விஷயத்தைப்பற்றி நமது குமாரனான அங்கதன் எனக்குச் சொல்லி யிருக்கின்றனன். அவன் விளையாடுவதற்காகக் காட்டிற்குச்சென்றபோது அவனது சிநேகிதர்களால் இவ்விஷயத்தை யறிந்து வந்து சொல்லினன். மகா பராக்கிரமசாலிகளான ராம லக்ஷ்மணர்கள் அயோத்தியிலிருந்து வந்து சுக்கிரீவனுடன் சிநேகம் செய்து கொண்டார்களாம். அவர்கள் அவனுக்கு உதவி செய்யப்போகிறார்களாம், அந்த ராமன் எவராலும் யுத்தத்தில் ஜெயிக்க முடியாதவனாம். ஆகையால் நீ அந்த ராமனை விரோதித்துக் கொள்ளவேண்டாம். உடனே சுக்கிரீவனை

மன்னித்து அவனுக்குப் பழையபடி இளவரசுப்பட்டம் கட்டி நீயும் ராமனோடு சிநேகம் செய்துகொள்வாயாக.

எப்படியிருந்தாலும் சுக்கிரீவன் உனக்குத் தம்பி. உனக்குப் பூமியில் அவனைப்போன்ற உறவினன் எவனுமகப்படான். அவனை உடனே நீ வரவழைத்து சிநேகம் செய்து கொண்டு சந்தோஷமாக அரசாள்வாயாக. நான் சொன்ன வார்த்தைகளை நீ கேட்டு அதன்படி நடந்தால் உனக்குச் சுகமுண்டாகும். கோபத்தையே பின் தொடர்ந்து செல்வது சரியல்ல. நீ இந்திரனை யொத்த பராக்கிரமமுடையவனாயினும் தசரத குமாரனான ராமனோடு போராடுவது சரியல்ல. அவனை உன்னால் வெல்ல முடியாது" என்று இதமான வார்த்தைகளை எவ்வளவு கூறினும் வாலிக்கு முடிவுகாலம் சமீபித்துவிட்டபடியால் அவனுக்குத் தாரையின் பேச்சுகள் ஊமையரோடு செவிடர் வார்த்தை போலாயின.

பதினைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று

---

## பதினாறவது ஸர்க்கம்

## வாலி சுக்கிரீவர்கள் மீளவும் யுத்தம் செய்யும்பொழுது ராமன் வாலியின்மேல் பாணப்பிரயோகம் செய்தல்.

இங்ஙனம் கூறக்கேட்ட வாலி தாரையை அதட்டி "அழகிய முகமுடையவளே! அற்பனான என் தம்பி சிம்மநாதம் செய்து என்னைச் சண்டைக்கழைக்கும்போது நான் எப்படிப் பொறுத்திருக்கமுடியும்? இதைவிட எனக்கு மரணமே மேலானது. நீ பயந்த சுபாவமுடையவளாதலால் உனக்கு இது தெரியாது. ராமனால் எனக்குக் கெடுதி உண்டாகுமென்று நீ சிறிதும் வருந்தவேண்டாம். தருமங்களை யுணர்ந்த ராமன் நிரபராதியான (ஒரு குற்றமும் செய்யாத) என்னை ஒருபோதும் கொல்லமாட்டான். நான் சுக்கிரீவனைக்

கொல்லாமல் அவனது ஆணவத்தை மாத்திரம் அடக்கப் போகிறேன். நீ உன்னுடனிருக்கும் ஸ்திரீகளுடன் அந்தப் புரம் போவாயாக” என்றனன்.

தாரை அதற்குமேலொன்றும் சொல்ல முடியாதவளாய் வாலியை அணைத்து அவனுக்கு க்ஷேமமுண்டாகவேண்டு மென்று வாழ்த்தித் தன் இருப்பிடத்திற்கேகினள். வாலி யும் சுக்கிரீவனை எதிர்த்துச் சென்றனன்.

பிறகு அந்த வாலிசுக்கிரீவர்கள் பௌர்ணமியினது சந்திரனும் சூரியனும்போல் மேன்மேலும் வளர்ந்து மிகவும் பயங்கரமாகக் கொடிய யுத்தம் செய்தனர். சிறிது நேரத் தில் வாலி பலம் பெருகப்பெற்றனன். சுக்கிரீவன் வாலி யிடம் சண்டை செய்யமுடியாமல் தவித்து வீரியம் குறையப் பெற்றனன்.

பிறகு இருவரும் நகங்களாலும் குத்துவரிசைகளாலும் முழந்தாள்களாலும் கால்களாலும் கைகளாலும் ஒருவருக் கொருவர் அடித்துக்கொண்டு பயங்கரமான சண்டை செய் தனர். பிறகு மரங்களைப் பிடுங்கி யுத்தம் செய்தனர். அச் சமயம் சுக்கிரீவன் பலம் குன்றி வாலியின் முன்நிற்க முடியா மல் தவித்து நாற்றிசைகளையும் அடிக்கடி நோக்கினன். அப் பொழுது ராமன் தனதிருப்பிடத்தினின்றும் கொடிய விஷ முள்ள சர்ப்பம்போன்ற ஓர் பாணத்தை வாலியின்மீது பிரயோகிக்க அது வாலியின் மார்பில் பாய்ந்தது. உடனே மிகுந்த பலவானான வாலி ஒளிமழுங்கி நினைவு தவறிக் கீழே விழுந்தனன். அவன் ரத்தவெள்ளத்தில் மூழ்கிக்கிடந்த கிடை மிகவும் கோரமாயிருந்தது.

**பதினாறுவது ஸர்க்கம் முற்றிற்று.**

## பதினேழாவது ஸர்க்கம்

### வாலி ராமனை நிந்தித்தல்

வாலி அங்ஙனம் ராமபாணத்தால் அடிபட்டுத் தரையில் வீழ்ந்திருப்பினும் சீக்கிரம் உயிரை விடாமல் ராமனைப் பார்த்து "ராமா! நீ நற்குலத்தில் பிறந்து நல்விரதங்களை ஆசரித்துச் சிறந்த அரசனாய் விளங்குகின்றனை. அப்படிப் பட்ட நீ, நான் உன்னை எதிரிடாமல் மற்றொருவனோடு சண்டை செய்கையில் என்னை அம்பினால் அடித்தனையே! இதனால் உனக்கென்ன பெருமை உண்டாயிற்று! ராமா! உன்னுடைய மேலான குணங்களையும் நல்லொழுக்கங்களையும், சத்தியம் தருமம் முதலிய சிறந்த யோக்கியதைகளையும் தாரை மிகவும் கொண்டாடி என்னைப் போகவேண்டாமென்று தடுத்த போதினும் நான் கேளாமல் எனக்கு நீ ஏதும் கெடுதி செய்ய மாட்டாயென்று நம்பி சுக்கிரீவனோடு யுத்தம் செய்தேன். நான் வேறொருவனுடன் யுத்தம் செய்து பராக்காயிருக்கையில் நீ என்னை ஒன்றும் செய்யமாட்டாயென்று நினைத்திருந்தேன். இப்பொழுது உன்னுடைய அதர்மமான செய்கையினின்றும் நீ புத்திகெட்டவனென்றும், நல்ல மனிதரைப்போல் வேடம் தரித்து தர்மவானென்று நடித்து நீறுபூத்த நெருப்புப் போன்ற பாபிஷ்டனென்றும் தெரிந்து கொண்டேன்.

நான் உன் தேசத்திலாவது பட்டணத்திலாவது ஒரு அபகாரமும் செய்யவில்லை. உன்னை நான் எவ்விதத்திலும் அவமானிக்கவில்லை. இப்படி ஒன்றும் செய்யாமல் காய்களையும் வேர்களையும் தின்றுகொண்டு காட்டில் திரியும் தன்மையுள்ள ஓர் கேவலமான குரங்கானவனும் உன்னோடு எதிர்த்துச் சண்டை செய்யாதவனும் மற்றொருவனோடு சண்டை செய்து கொண்டிருந்தவனும், ஒருபாபத்தையுமறியாதவனுமான என்னை நீ அடித்த காரணம் என்ன?

பூமி, பொன், வெள்ளி இம்மூன்றும் சண்டைக்குக் காரணமாய் இருப்பவை. அவைகளிலாவது அல்லது இக் காட்டிலுள்ள எனது இதர வஸ்துக்களிலாவது உனக்கு ஏதேனும் விருப்பம் உண்டா? உனக்கு எவ்விதத் தீங்கும் செய்யாத என்னை நீ அடித்து நிந்தைக் கிடமாயினை.

'அரசர்களான எங்களுக்கு வேட்டையாடுவது வழக்கம் தானே' என்று சொல்வாயாயின் உன்னைப் போன்றவர்களுக்கு என்தோல் மான்தோலைப்போல் உடுக்கத் தக்கதன்று. எனது ரோமங்களும் சிறிதும் பிரயோஜனப் படாதது. எனது எலும்புகள் யானை யெலும்புகளைப்போல் உபயோகப்படுபவையல்ல. என் மாம்சமும் உண்ணத் தகுந்ததன்று. இப்படி ஒன்றுக்குமுதவாத என்னை வீணுகக் கொன்றனை. எல்லாம் அறிந்த தாரை இதமும் சத்தியமுமான வார்த்தைகளையே எனக்குச் சொல்லினள். நான் அவற்றைக் கேளாமல் என்கால வித்தியாசத்தால் யமனிடம் வந்துநின்றேன்.

ஏ ராமா! நீ தெரியாமல் பிறர்க்குக் கெடுதி செய்பவன். அன்னியர்க்கு அபகாரம் செய்கையே உன் பிழைப்பு. மேலுக்குச் சாதுவாய் இருப்பவன் போல் நடிக்கும் குடிலன். இப்படிப்பட்ட கொடிய பாபிஷ்டனை நீ மகானுபாவனை தசரத மகாராஜன் வயிற்றில் எப்படிப் பிறந்தாய்? ராமா! நீ உண்மையான பராக்கிரமமுடையவனாயின் என்முன் நின்று எதிர்த்துச் சண்டை செய்திருப்பாய். நீ அப்படிச் செய்திருப் பின் வெகுவிரைவில் யமபுரம் சென்றிருப்பாய். மதுபானம் செய்து மெய்மறந்து நித்திரை செய்பவனை சர்ப்பம் கடித்துக் கொல்வது போல் நீ என் கண்ணுக்குப் புலப்படாமல் என்னை வஞ்சனையால் கொன்றனை.

நீ முதலில் சீதையைத் தேடிக்கொடுக்க வேண்டுமென்று என்னிடம் ஒரு வார்த்தை சொல்லி யிருப்பாயாகில்,

அந்த ராவணன் ஸீதையை ஸமுத்திர ஜலத்திலாவது இன்னும் மற்ற எவ்விடத்திலாவது ஒளித்து வைத்திருப்பானுயினும் நான் ஒரே நாளில் அவளைக் கொண்டுவந்து கொடுத்திருப்பேன். ராவணன் இந்நேரம் உயிரை இழந்திருப்பானே. நீ அங்ஙனஞ் செய்யாமல் ராவணனை வெல்ல துர்ப்பலனான சுக்கிரீவனைத் துணைவேண்டி என்னை இவ்விதம் மாய்த்தனை. நான் கேட்ட வினுக்களுக்குத் தகுந்த சமாதானம் உன்னால் சொல்லக்கூடுமாயின் நான் உயிரை விடுவதற்கு முன் சீக்கிரம் சொல்வாயாக" என்றனன்.

பதினேழாவது ஸர்க்கம் முற்றிற்று

---

## பதினெட்டாவது ஸர்க்கம்

## ராமன் வாலிக்கு மறுமொழி கூறுதல்.

இங்ஙனம் தன்னைக் கண்டபடி தூஷித்த வாலியை நோக்கி ராமன் "வானரசிரேஷ்டனே! நீ உண்மைதெரியாமல் என்னை இங்ஙனம் நிந்தித்துப் பேசுதல் சரியல்ல. நீ குரங்குத்தன்மையால் இப்படிச் சொன்னு யல்லது வேறில்லை. இப்பூமண்டலமெல்லாம் இக்ஷ்வாகு வம்சத் தரசர்களுக்குச் சொந்தமானதாய் இருக்கிறது. இதை இப்பொழுது பரதன் தருமத்துடன் பரிபாலித்து வருகிறுன். அவனது கட்டளையை ஏற்றுக்கொண்டு நாங்களும் (துஷ்ட நிக்ரஹ சிஷ்ட பரிபாலனம்) துஷ்டர்களைக் கொன்று சாதுக்களை காப்பதாகிற தருமத்தை நடத்தி வருகிறேம்.

நீயோ அதர்மமும் கெடு நடத்தையும் உடையவன். காம வியாபாரமே உனக்கு முக்கியம். உனக்கு சுக்கிரீவன் தம்பியாகையால் மகனைப்போன்றவன். அவனது மனைவி உனக்கு மருமகளாக வேண்டும். நீ அப்படிப்பட்ட சுக்கிரீவனது மனைவியான ருமையை அபகரித்து அவளிடத்தில்

காமத்தினால் ரமித்துக்கொண்டிருக்கின்றனை. நீ இங்ஙனம் தம்பியின் மனைவியோடு கூடி விபசாரம் செய்தாயாகையால் நான் உன்னைத் தண்டித்தேன். எவனொருவன் தன் மகளையும், சகோதரியையும், தம்பியின் மனைவியையும் காமத்தினால் புணர்வானே அவனுக்கு மரணமளிப்பதே தகுந்த தண்டனை யென்று சொல்லப்பட்டிருக்கிறது.

மேலும் சுக்கிரீவன் எனக்கு லக்ஷ்மணனைப்போன்று ஒழிக்கமுடியாத உயிர் நண்பன். அப்படிப்பட்டவனுடைய மனைவியை அபகரித்த உன்னை நான் கொன்றுவிடுவதாகப் பண்டே பிரதிக்கினை செய்திருக்கிறேனாகையாலும், தம்பியின் மனைவியைப் புணரும் பாபிஷ்டனுக்கு வதமே தண்டனை என்று தரும சாஸ்திரத்தில் விதிக்கப்பட்டிருத்தலாலும் நான் உன்னைக்கொன்றது எவ்விதத்திலும் சிறந்த தருமமேயன்றி வேறல்ல. மேலும் நீ என் நண்பனது விரோதியாதலால் உன்னைக் கொல்வதால் உனது பாவம் நசித்துப்போவதன்றி நீ சுவர்க்கமும் அடையப்போகிறாய். இங்ஙனம் நான் உன்னைத் தண்டியாமல் விடும்பக்ஷத்தில் நான் உன்னுடைய பாவத்தை அடையவேண்டி வரும். ஆகவே நான் செய்த சிறந்த தரும காரியமானது மனுதரும சாஸ்திரத்தை யனுசரித்தது.

மேலும் இன்னொரு விஷயமும் கூறுகிறேன் கேள். நான் மறைந்து உன்னை அடித்தேனென்றும் எதிரில் நின்று யுத்தம் செய்தால் நான் நிச்சயமாக இறந்துபோயிருப்பேனென்றும் கூறினையல்லவா? மனிதர்கள் மறைந்திருந்தாவது புலப்பட்டுக்கொண்டாவது வலைகளாலும், கயிறுகளாலும், பலவகைப் பட்ட கபடவியாபாரங்களாலும் காட்டிலிருக்கும் அநேக மிருகங்களைப் பிடிக்கின்றனர். மேலும் மாம்சம் விரும்புவோர் வனத்தில் மிருகங்களை ஓடிக்கொண்டிருக்கும்போதும், பயந்திருக்கும்பொழுதும், ஏமாறியிருக்கும்பொழுதும், மன

ஊக்கத்துடனிருக்கும்பொழுதும் யதேஷ்டமாகக் கொல்கின்றனர். இவ்விஷயத்தில் தோஷமொன்றும் கிடையாது.

நீயும் ஒரு மிருகமாகையால், நீ என்னோடு சண்டை செய்துகொண்டிருப்பினும், சண்டை செய்யாதிருப்பினும், ஆலோசிக்கவேண்டியதில்லை. ஆகையால் நீ சுக்கிரீவனோடு சண்டை செய்துகொண்டிருக்கும்பொழுது உன்னை நான் அம்பினால் அடித்ததில் யாதும் தவறில்லை. நீ என்னை இங்ஙனம் தூஷிப்பது சிறிதும் தருமமல்ல" என்றனன்.

இங்ஙனம் ராமன் கூறினதும் வாலி மனம் தெளியப் பெற்று ராமன் தன்னைக்கொன்றதில் சிறிதும் தோஷமில்லையென்று தெளிந்துகொண்டு தான் அவனை அவமதித்துப் பேசினதற்கு மிகவும் வருத்தமடைந்தனன்.

பிறகு வாலி ராமனைப்பார்த்து "புருஷோத்தமா! நான் அறியாமையால் உன்னைப் பலவாறு நிந்தித்துவிட்டேன். என் பிழை பொறுத்து என்னைக்காத்து ரக்ஷிப்பாயாக. இப்பொழுது நான் இறப்பதைப்பற்றி எனக்குச் சிறிதும் வருத்தமில்லை. எனது அருமைக் குமாரனை அங்கதனைக் குறித்தே கவலைப்படுகிறேன். ஒன்றும் தெரியாத இளம் பிள்ளையான எனது குமாரனை நீ பாதுகாக்க வேண்டும். நீ சுக்கிரீவனைப்போல் அங்கதனையும் பாவித்து பரத லக்ஷ்மணர்களிடத்தில் உனக்கு எவ்வளவு பிரீதி உள்ளதோ அவ்வளவு பிரீதியை அவர்களிடத்தில் வைக்க வேண்டும். சுக்கிரீவன் என்மேல் உள்ள கோபத்தினால் தாரையைக் கேவலமாக நடத்தா வண்ணம் நீ பார்த்துக்கொள்ள வேண்டும்.

நான் உன்னால் மரணமடைய வேண்டுமென்று எனக்கு விருப்பமிருந்தபடியால் என்னைத் தாரை எவ்வளவு தூரம் வேண்டாமென்று தடுத்த போதிலும் சண்டைக்கு வந்து உன்னால் அடிபட்டு உயிரைவிடுவதற்கு ப்ராப்தியுடையவனாயினேன்" என்றனன்.

ராமன் வாலியை நோக்கி "நீ கூறியபடியே அங்கதனை நான் பாதுகாக்கிறேன். தாரை சுக்கிரீவனால் கௌரவிக்கப் படப் போகிறாள். வானரத்தலைவனே! தண்டிக்கப்பட்டவன் தன் அபராதத்திற்குத் தகுந்த தண்டனையைப் பெறுகையால் பாபம் தொலையப்பெற்றுச் சுவர்க்கமடைவானென்று சாஸ்திரம் கூறுகிறபடியால் நீ இப்பொழுது நற்கதி அடையப் போகிறாய். இனி உன் மனக்கவலையை ஒழிப்பாயாக. இதெல்லாம் பூர்வ ஜன்ம கர்மங்களின் பயனே ஆகும்" என்றனன்.

ராமன் இங்ஙனம் சொல்லக்கேட்ட வாலி மிகவும் திருப்தி அடைந்து "பிரபு! தேவேந்திரனை யொத்த பராக்கிரமமுடைய உனது பாணத்தினால் அடிபட்டு நினைவு தெரியாமல் உன்னை நான் மிகவும் தூஷித்துப் பேசினதுபற்றி நீ என்னை மன்னிக்கும்படி மீண்டும் வேண்டிக் கொள்ளுகிறேன்" என்றனன்.

பதினெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## பத்தொன்பதாவது ஸர்க்கம்

### மரணமடைந்த வாலியிடம் தாரை வருதல்.

வாலி ராமனாலடியுண்டு மாண்டானென்பதை வானரர்களால் கேள்விப்பட்ட தாரை மிகுந்த விசனத்துடன் அலறி ஓடி வந்தனள். அதைக்கண்ட வானரர்கள் "தாரையே! சீக்கிரம் உன் பிள்ளையான அங்கதனை அழைத்துக்கொண்டு ஓடிப்போவாயாக. யமன் ராமனென்னும் உருவத்துடன் வந்து வாலியைக் கொன்றதைக் கண்ட வாலியின் சைன்னியங்களான வானர வீரர்கள் பீதியுடன் மூலைக்கொருவராகச் சிதறி ஓடுகின்றனர். நீ அங்கதனை அதி ஜாக்கிரதையாகக் காப்பாற்றுவாயாக. ஐயோ! சுக்கிரீவனும் அவனைச் சேர்ந்தவர்களும் இங்கு வந்து நம்மை நலியப் போகிறார்களே!" என்று கூறினர்.

அது கேட்ட தாரை "மகா பலிஷ்டனான வாலியே இறந்த பின் ராஜ்ஜியம் எதற்கு? இனி என் பிள்ளையால் எனக்கென்ன பயன்? இந்த சரீரமே எனக்கெதற்கு? நானும் அந்த ராம பாணத்திற்கே இலக்காகி என் கணவனது பாத மூலத்திற்கே போய்ச் சேருவேன்" என்று கூறி, வாயிலும் வயிற்றிலும் தலையிலும் மாறிமாறி அடித்துப் புலம்பிக் கொண்டு துக்கம் பொறுக்க முடியாமல் 'ஓ' என்று ஓலமிட்ட வண்ணம் ஓடி வந்து, தரையில் வீழ்ந்து மூர்ச்சித்துக் கிடக்கும் வாலியைக் கண்டனள்.

பின்னுமவள் ராமலக்ஷ்மணர்களையும் மைத்துனனாகிய சுக்கிரீவனையும் கண்டு தன் கணவனிடத்திருந்த தோஷத்தை நினைத்து அவன் தண்டிக்கப்பட்டது நியாயமென்று உணர்ந்து ராமனிடம் தப்பிதமில்லையென்று நினைத்து அவனிடம் சிறிதும் துவேஷம் பாராட்டவில்லை.

பிறகு தாரை தன் கணவனைக் கிட்டி அவனை உற்றுப் பார்த்துத் தான் வந்திருப்பது அவனுக்குத் தெரியாமையால் இறந்துவிட்டனனென்று மிகுந்த வருத்தத்துடன் மூர்ச்சித்துத் தரையில் வீழ்ந்தனள். பிறகு தெளிந்து கணவனது பேரைச் சொல்லிப் புலம்பிக் கண்ணீர் பெருக்கினள்.

இங்ஙனம் புலம்புகின்ற தாரையையும் அருகில் முகம் வாடி நிற்கும் அங்கதனையும் கண்ட சுக்கிரீவனுக்கு மிகுந்த துக்கம் உண்டாயிற்று.

பத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## இருபதாவது ஸர்க்கம்

## தாரை புலம்புதல்.

பிறகு தாரை வாலியை அழுந்தக் கட்டிக்கொண்டு மிகவும் வருந்தி "ஓ வீரர்களின் தலைவனே! ஐயோ! என்

இங்ஙனம் தரையில் வீழ்த்தப்பட்டிருக்கின்றனே? என்னைத் தனியேவிட்டு நீ மாத்திரம் சுவர்க்கத்திற்குச் செல்வது தருமமோ? ஐயோ! நீ இல்லாமல் நான் எப்படி இனி சந்தோஷமாய் இருப்பேன்? ஒருவராலும் இதுவரை வெல்ல முடியாமலிருந்த உனக்கு இத்தகைய கதியா நேரவேண்டும்? என் துக்கத்தை யான் எப்படிப் பொறுப்பேன்? நீ சுக்கிரீவனது மனைவியை அபகரித்துக்கொண்டதுமல்லாமல் அவனையும் ஊரைவிட்டு ஓட்டினை. அதன் பலனே உனக்கு இப்பொழுது கிடைத்தது. நீ இப்பொழுது சுவர்க்கம் சென்று பலவகைப் போகங்களையனுபவித்து அப்ஸர ஸ்திரீகளைக் கூடிக் களிக்கப் போகின்றனே.

ஐயோ! நான் இதுவரை எப்பொழுதும் துக்கமென்பது இன்னதென்று தெரியாமலிருந்து இப்பொழுது திடீரென்று துக்க சமுத்திரத்தில் மூழ்கும்படி நேர்ந்துவிட்டதே! வீரனை அங்கதன் இதுவரை உன்னால் செல்வமாக வளர்க்கப்பட்டவனாகையால் சுகத்திற்கே தகுந்தவனன்றி கஷ்டத்தைச் சிறிதும் அனுபவிக்கப் பொறுக்கமாட்டான். இனி அவன் சுக்கிரீவனால் அடிக்கப்பட்டு என்னபாடு படப்போகிறானே!" என்று புலம்பி அங்கதனைப் பார்த்து "குழந்தாய்! தந்தையை யடிபணிந்துகொள்வாயாக" என்றுகூறி, மீண்டும் வாலியை விளித்து "நீ வெகுதூர தேசத்திற்குப் பிரயாணமாகப் போகிறாயாகையால் உன் குமாரனை உச்சி மோந்து ஆசி கூறி சமாதானப்படுத்துவாயாக" என்றனள்.

மீண்டும் தாரை சுக்கிரீவனை நோக்கி "சுக்கிரீவா! உன் விரோதி வாலி மாண்டொழிந்தனன். இனி நீ உன் மனோரதம் ஈடேறப் பெற்று ராஜ்ஜியாபிஷேகம் செய்துகொண்டு சுகங்களை யனுபவிப்பாயாக" என்றுகூறி, மறுபடியும் வாலியை நோக்கி "அன்பிற்கிடமானவனே! என்னிடத்திலும், அங்கதனிடத்திலும் அளவுகடந்த பிரீதியுடைய நீ இங்ஙனம்

எங்களைவிட்டு எங்கே போயினை? நாங்கள் உனக்கென்ன தீங் கிழைத்தோம்? அப்படி ஏதாயினும் நான் தெரியாமல் உனக்கு அபராதம் செய்திருப்பேனாயின் இதோ உன்னை வணங்கி வேண்டிக் கொள்கிறேன். என்னை மன்னித்துக் கொள்வாயாக" என்று மிகவும் பரிதாபமாகப் புலம்பிக் கொண்டு வாலியின் பக்கத்திலிருந்துகொண்டு தானும் உயிரை விட்டுவிட நிச்சயித்துக் கொண்டனள்.

இருபதாவது ஸர்க்கம் முற்றிற்று

---

## இருபத்தோராவது ஸர்க்கம்

### அனுமான் தாரைக்கு நல்ல வார்த்தைகளைச் சொல்லுதல்.

பிறகு அநுமான் தாரையை மெல்ல மெல்ல இனிய உரைகளால் சமாதானப்படுத்த முயன்று "தாரே! இவ்வுலகில் ஒவ்வொருவனும் தன் கருமபலனை யநுபவிக்கிறானன்றி ஒருவனால் மற்றொருவனுக்கு நன்மையாவது தீமையாவது உண்டாகின்றதென்று நினைக்கக்கூடாது. ஆகவே, வாலியும் தன் கரும பலத்தினால் மாண்டானே யன்றி சுக்கிரீவனாலன்று. நீ 'நான் எந்த கருமத்தினால் எந்த லோகத்திற்குப் போவேனோ?' என்று உன்னைப்பார்த்து நீ துக்கித்துக் கொள்ளவேண்டியிருக்க உன்னைப்போன்ற மற்றொருவனைப் பார்த்து ஏன் துக்கப்படுகின்றனை? மேலும் காயம் அநித்திய மானது. என்றைக்காயினும் மரணம் அடைவது ஒவ்வொருவனுக்கும் இயற்கையாக ஏற்பட்டிருக்கின்றது. ஆகையால் ஒருவன் மரணம் அடைவதைப்பற்றி வருந்தவே கூடாது.

உனக்குப் பிள்ளை இருக்கிறானாகையால் நீ உடன்கட்டை ஏறுதல் கூடாது. அங்கதனைப்பற்றி நீ உயிர்விடலாகாது. வாலியோ இப்பொழுது ராம பாணத்தால் அடியுண்டு உத்தம

மான லோகங்களைப் பெற்றனன். ஆகையால் அவனைப்பற்றி வருந்துவது சரியல்ல. அங்கதனைக்கொண்டு வாலிக்கு தகன சடங்குகளைச் செய்வித்து அவனுக்கு ராஜ்ஜிய பட்டாபிஷேகம் செய்து அவனனுபவிக்கும் ராஜ்ஜிய சுகங்களைக் கண்டு நீ களித்துக்கொண்டிருப்பாயாக" என்று கூறிச் சமாதானப் படுத்தினன்.

இங்ஙனம் அனுமான் கூறக்கேட்ட தாரை அவனை நோக்கி "அனுமானே! இந்த அங்கதனைப்போல் நூறு அங்கதன் இருந்தாலும் அவர்கள் வாலி ஒருவனுக்குச் சமானமாக மாட்டார்களென்பது நிச்சயம். எனக்கு அங்கதனைவிட வாலியை ஆலிங்கனம் செய்வதே மேலானதாய் இருக்கிறது.

நீ கூறியபடி வாலிக்கு தகனம் செய்யவாவது அங்கதனுக்குப் பட்டங்கட்டவாவது நான் வல்லவளல்லேன். வாலிக்குப் பிறகு ஸமஸ்த காரியங்களையும் கவனிக்கவேண்டியவன் சுக்கிரீவனேயாவன். பிள்ளையைக் காக்கவேண்டிய கடமை தந்தையினதேயாகும். ஆகையால் வாலி இறந்த பின் அங்கதனுக்குத் தந்தை சுக்கிரீவனேயாதலால் அவனே அங்கதனைக் கவனிக்கக் கடமைப்பட்டவன். எனக்கோ வாலியைப் பின்தொடருவதைக் காட்டிலும் மேலாக உரியது இவ்வுலகத்திலாவது பரலோகத்திலாவது மற்றொன்றுமில்லை" என்று கூறினள்.

இருபத்தோராவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## இருபத்திரண்டாவது ஸர்க்கம்.

### வாலி மூர்ச்சை தெளிந்து மேல் செய்யவேண்டும் காரியத்தைக் கூறுதல்.

குற்றுயிரோடிருந்த வாலி மெதுவாக மூச்சுவிட்டுக் கொண்டு எதிரில் நின்றுகொண்டிருந்த சுக்கிரீவனைப் பார்த்து

சிநேகமான வார்த்தையில் "சுக்கிரீவா! நான் உன்னை துரோகம் செய்ததன் பயனை இதோ அனுபவிக்கிறேன். இதெல்லாம் தெய்வச்செயலேயன்றி வேறல்ல. நான் இதோ இன்னும் சற்றுநேரத்தில் பிராணனை விடப்போகிறேன். நீ வானர ராஜ்ஜியத்தையெல்லாம் கைப்பற்றிச் சுகமாக அரசாள்வாயாக. இப்பொழுது நான் உன்னை ஒரு விஷயமாக வேண்டிக்கொள் கிறேன். எனக்கு உயிரைக் காட்டிலும் மேலான என் பிரிய குமாரனை அங்கதனை ஒரு குறைவும் வாராதபடி நீ காப்பாற்ற வேண்டும். இனி அவனுக்கு உன்னைத் தவிர வேறு ரக்ஷகர் எவருமில்லை. அங்கதன் பராக்கிரமத்தில் உனக்கொப்பானவ னைகையால் உன்னுடன் கூட இருந்து வேண்டிய உதவியை உனக்கு அவசியம் செய்துகொண்டிருப்பான்.

இந்தத் தாரை அதிநுட்பமான புத்தியுடையவள். வரப் போகிற காரியங்களை முன்னதாகவே நிச்சயித்துக் கூறும் குணமுடையவள். ஆகையால் இவள் எதை நல்லதென்று சொல்கிறாளோ அதைச் சந்தேகமின்றிச் செய்யவேண்டும். ராமனது காரியத்தையும் நீ அவசியம் செய்து முடிக்க வேண்டும். அப்படிச் செய்யாவிடில் அவன் கோபங்கொண்டு உன்னையும் கொன்றுவிடுவான்.

சுக்கிரீவா! எனக்கு தேவேந்திரனால் கொடுக்கப்பட்ட இந்த காஞ்சனமாலையை நீ இப்பொழுதே வாங்கிக்கொள்வா யாக. ஏனெனில் நான் மரணமடைந்த பிறகு இதிலுள்ள சிறந்த காந்தி மழுங்கிப் போய்விடும்." என்றனன். சுக்கிரீ வன் அங்ஙனமே அம்மாலையை வாங்கிக்கொண்டான்.

பிறகு வாலி அங்கதனை நோக்கி "நான் போனபின் நீ துக்கத்தை மறந்து சுக்கிரீவனுக்கு உட்பட்டு நடப்பாயாக. நீ என்னிடத்திற்போலவே சுக்கிரீவனிடத்தில் பயபக்தி யுடன் மரியாதையாக அவன் மனம் மகிழும்படி நடந்துகொ

வாயாக. அவனது கட்டளைக்குக் கீழ்ப்படிந்து ஒழுகுவாயாக" என்று கூறி, கண்கள் சுழலப்பெற்றுப் பற்கள் வெளிப்பட்டு பயங்கரமான தோற்றத்துடன் உயிரை விட்டனன்.

உடனே சமஸ்த வானரர்களும் வாலியின் பராக்கிரமங் களைப்பற்றிப் புகழ்ந்து பேசி அவனை இழந்ததற்காக மிகவும் வருத்தமுற்றனர். அவன் (வாலி) கோலபனென்னும் பலிஷ்டனை கந்தர்வனோடு பதினைந்து வருடங்கள் இரவும் பகலும் ஓயாமல் யுத்தம் செய்து அவனை மாய்த்த வீரப்பிரதா பத்தை வாய்விட்டுக்கூறி அத்தகைய வாலி மரணமடைந்த தைப்பற்றி மிகவும் வருந்தினர்.

பிறகு தாரை உயிரிழந்த வாலியைக் கட்டியணைத்துக் கொண்டு பூமியில் வீழ்ந்தனள்.

இருபத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## இருபத்து மூன்றாவது ஸர்க்கம்.

### வாலி மரணமடைந்தபின் தாரை புலம்புதல்

பிறகு தாரை வாலியைப்பார்த்து "ஐயோ! வீரர்களின் தலைவனே! நீ என் வார்த்தையைக் கேளாமல் சென்று உயிரிழந்தனையே! நீ என்னோடு ஒரு வார்த்தையாகிலும் பேச லாகாதா? எனது அன்பிற்கிடமானவனே! உன்னிடம் பல தடவைகள் பயந்தோடின சுக்ரீவன் கையில் அகப்பட்டு மாண்டனையே! ஐயோ! அங்கதனின் புலம்பலுக்காகவாயினும் மனமிரங்கி ஒரு வார்த்தை சொல்லக்கூடாதா? நீ சண்டையில் எப்பொழுதும் விருப்பமுடையவனாகையால் உனக்குச் சண்டையிலேயே மரணம் சம்பவித்தது. என்னை அநாதை யாக்கித் தனியாய் விட்டுச்சென்றனையே! இனி எனக்குத் துணை யார்? ஐயோ! நான் விதவையானேனே! நீ மரண

மடைந்த பின்பும் என் மனம் நூறு சுக்கலாய் வெடித்துப் போகாதிருக்கின்றதே! என் மன்னன் மாண்டொழிந்தானே!

வானர திலகனே! உன் தேகமெல்லாம் தூசியும் ரத்தமும் கலந்து சுற்றிலும் நிறைந்திருக்கிறதே! ஐயோ! நீ மரணம் அடைகையில் உன்னை மார்புடன் தழுவி அணைப்பதற்கும் முடியாதபடி உன் மார்பில் நாட்டின பாணம் தடுக்கின்றதே" என்று புலம்பினள்.

அப்பொழுது நீலன் என்னும் வானரன் வாலியின் மார்பில் செலுத்தப்பட்டிருந்த ராமபாணத்தைப் பிடுங்கி எறிந்தனன். அவ்விடத்திலிருந்து ரத்த வெள்ளம் பெருகியது. தாரை தன் கணவனை கண்ணீர்களால் உடல் முழுவதும் நனைத்து தூசிகள் போகும்படி செய்தனள். தாரையின் கட்டளைப்படி அங்கதன் தந்தையின் பாதங்களைப் பிடித்துக் கொண்டு நமஸ்காரம் செய்தனன்.

அப்பொழுது தாரை வாலியைப் பார்த்து "வீரனே! அங்கதன் உன்னை வணங்கும்பொழுது 'குழந்தாய் நீ ஆயுள் வளரப்பெற்றிருப்பாயாகவென்று ஏன் ஆசீர்வதிக்கவில்லை?' என் ஐயனே! முன் தேவேந்திரன் உனக்குக்கொடுத்த காஞ்சனமாலை இப்பொழுது உன் மார்பில் எனக்குப் புலப்படாதிருக்கும் காரணமென்ன? நீ மரணமடைந்திருப்பினும் ராஜ்ஜியலக்ஷ்மி உன்னைவிடாதிருக்கின்றனள். ஐயோ! நீ நான் சொன்ன இதமான வார்த்தைகளைக் கேளாமல் சுக்கிரீவனுடன் சண்டைக்குச் சென்றமையாலல்லவோ உனக்கு இக்கதி நேர்ந்தது. இனி நீ இறந்த பின்பு எனக்கு இவ்வுலகில் என்ன இருக்கிறது?" என்று புலம்பினள்.

இருபத்துமூன்றுவது ஸர்க்கம் முற்றிற்று.

## இருபத்துநான்காவது ஸர்க்கம்.

### சுக்ரீவன் தாரையின் புலம்பலைக்கண்டு துக்கித்தலும், ராமன் அவனை சமாதானப்படுத்துதலும், ராமனிடம் தாரை பக்தி செய்தலும்.

இதைக்கேட்ட சுக்கிரீவன் துக்க சமுத்திரத்தில் மூழ்கினவனாய்த் தன்னால் வாலி கொல்லப்பட்டதற்கு மிகவும் பரிதாபமுற்றனன். அவன் ராமனைப் பார்த்து "அரசனே! நீ எனக்குக்கொடுத்த வாக்கின்படி வாலியைக் கொன்றனை. ஆனால் இவ்விதமான கோரமான காட்சியைக் கண்டபின் எனக்கு சுகங்களில்மாத்திரமன்று, உயிரை வைத்திருப்பதிலுங்கூட எள்ளளவும் விருப்பமில்லை. இந்த வாலியைக் கொன்று சுவர்க்கம் கிடைப்பதாயினும் எனக்கு வேண்டாம். பட்டமகிஷியான இந்தத் தாரை இங்ஙனம் பரிதாபமாய்ப் புலம்ப, வானரர்கள் துக்கத்தினால் வருந்த, வாலி உயிரிழக்க, அங்கதன் தந்தையின் மரணத்தினால் பிழைப்பானோ மாட்டானோவென்னும்படி சந்தேகப்படவேண்டியிருக்கையில் நான் மாத்திரம் ராஜ்ஜிய போகங்களையனுபவிப்பதில் எனக்குச் சிறிதும் விருப்பமில்லை.

முன்பு என்னைக் காரணமில்லாமல் துரத்தினதாலும் என் மனைவியை அபகரிக்கையாலும் நான் ஏதோ மனம் நொந்து வாலியைக் கொல்லவிரும்பினேன். ஆனால் இப்பொழுது அவ்வளவுக்கவ்வளவு பரிதபிக்கின்றனன். இனி என் உயிருள்ளவரையில் நான் பழையபடி ருச்யமூக மலையிலேயே காலம் கழிக்கிறேன். ஐயோ! நான் வாலியிடம் மகத்தான விரோதம் பாராட்டியிருந்தும் அவன் என்னைக்கொல்ல மாத்திரம் விருப்பமில்லாமல் இருந்தனனே! அப்படிப்பட்ட அண்ணனைக் கொன்ற பாபிஷ்டனான எனக்கு ராஜ்ஜியம் எதற்கு? வாலியுடன் நான் சண்டை செய்கையில் என்னைக் கொல்வதற்கு அவனுக்குப் பலவித சந்தர்ப்பங்கள் வாய்த்

திருந்தும் என்னைக்கொல்லாமலேவிட்டுக்கொண்டு வந்தனன். 'சுக்கிரீவா! உன்னைக்கொல்ல எனக்கு மனமில்லை. நீ மீளவும் இப்படிச் சண்டைக்கு வரவேண்டாம்' என்று கூறினன். ஐயோ! அப்படிப்பட்ட பெருந்தன்மை வாய்ந்தவனை நான் கொன்று கொடிய பாபிஷ்டனானேனே!

ராமா! நான் குலத்தைக் கெடுக்க வந்த கோடரிக்காம்பு போன்றவன். என்னுடைய பாபம் எவ்வித பரிகாரத்தினுலும் தீரத்தக்கதன்று. ஐயோ! உத்தம லக்ஷணங்கள் பொருந்திய அங்கதன் தந்தையின் சோகத்தினல் உயிர் விடுவானுயின் தாரையும் ஜீவித்திருக்க மாட்டாளென்பது நிச்சயம். ஒருக்கால் அங்கதன் பிழைப்பானுயின் அவன் பொருட்டுத் தாரை பிழைத்திருக்கக்கூடும். இப்படிப்பட்ட கொடிய பாவியான நான் நெருப்பில் வீழ்ந்து பிராணனை விட்டு விடுகிறேன். இவ்வானர வீரர்கள் நான் இறந்து போயினும் உனது கட்டளைப்படி சீதாதேவியைத்தேடி உன் காரியத்தை நிச்சயமாக நிறைவேற்றுவார்கள். ராமா! அக்கினிப் பிரவேசம் செய்ய எனக்கு அனுமதி கொடுப்பாயாக" என்றனன்.

இங்ஙனம் சொன்ன சுக்கிரீவனது வார்த்தைகளைக் கேட்ட ராமன் கண்களில் நீர்பெருகத் தானும் வருத்தமுற்று ஒன்றும் தோன்றுமல் வாளாவிருந்தனன். உடனே தாரை ராமனை நோக்கிச்சென்று தன் கணவனைக் கொன்றதால் மிகுந்த கோபாவேசத்துடன் அவனை நிந்திக்க எண்ணங் கொண்டாளாயினும், ராமனது வடிவழகின் கம்பீரத்தினுல் மனக்கலக்கம் தீர்ந்து நல்ல எண்ணம் உண்டாகப்பெற்று அவனை நோக்கி "எல்லையிலாத கீர்த்தியுடையவனே! குணக் கடலே! வீராதிவீரனே! தருமங்களின் வடிவு போன்றவனே! பூமியைப்போன்ற பொறுமை யுடையவனே! நீ உண்மையில் சாதாரண மனிதனன்று. துஷ்டர்களைக் கொல்லும்

பொருட்டு மானிட சரீரம் தாங்கிவந்த தருமதேவதையே என்று நினைக்கிறேன்.

நீ எந்த ஒரு பாணத்தினால் வாலியைக் கொன்றனையோ, அதே பாணத்தினால் என்னையும் கொன்று விடுவாயாக. வாலி சுவர்க்கமடைந்து அப்ஸர ஸ்திரீகளைக் கூடி யிருப்பினும் நானில்லாவிடில் சந்தோஷங் கொள்ளமாட்டான். நானும் அவனைக்காணாமல் சந்தோஷம் கொள்ளமாட்டேன். ஆகை யால் எங்கள் இருவரது மனதையும் குளிரச் செய்வாயாக. வீரனே! நீ இப்பொழுது சீதையை இழந்து எங்ஙனம் பரி தபிக்கிறாயோ, அவ்விதமே வாலி சுவர்க்கத்தை யடைந்தும் நானில்லாமல் பரிதபித்துக் கொண்டிருக்கிறான். நீ எல்லா ரையும் சந்தோஷிக்கச் செய்பவனாகையால் என்னைச் சீக்கிரம் கொல்வாயாக.

ராஜகுமாரனே! உனக்கு ஸ்திரீயைக் கொல்வதாலுண் டாகும் தோஷம் வருமென்று நினைக்கவேண்டாம். 'வாலி யின் ஆத்துமாவே இந்தத் தாரை' என்று நினைத்துக்கொண்டு என்னைச் சீக்கிரம் முடிப்பாயாக. மனைவி புருஷனுக்கு ஆத்துமாவென்று சாஸ்திரங்களில் சொல்லி யிருக்கிறபடியால் என்னைக் கொல்வது வாலியைக் கொல்வது போலாகுமே யன்றி ஸ்திரீவதமாகாது. நீ இவ்விதம் என்னைக்கொன்று வாலியுடன் சேர்ப்பதால் உனக்கு வாலியைக்கொன்ற பாப மும் நசித்துப்போகும். இன்னும் நீ வாலிக்கு மனைவியைக் கொண்டு கொடுத்தலால் (மனைவி தானம் செய்வதால்) என்னைக் கொல்வதாலுண்டாகும் பாபமும் உனக்கு சம்பவிக்காது. வாலியைப் பிரிந்து திக்கற்றிருக்கும் நான் வெகுகாலம் ஜீவித் திருக்க மாட்டேன். எப்படியாயினும் மரணமடைவது நிச் சயம். ஆகையால் நானே சாவதைக்காட்டிலும் நீயே என்னைக்கொன்று புண்ணியம் பெறுவது நலம்" என்றனள்.

இங்ஙனம் தாரை சொல்லக்கேட்ட ராமன் "தாரே! நீ வீரனுக்கு மனைவியாய் இருந்தும் இப்படிப்பட்ட வார்த்தைகளைச் சொல்வது சரியல்ல. இவ்வுலகமெல்லாம் படைத்த பிரமதேவன் சகல ஜனங்களுக்கும் சுக துக்க போகங்களை உண்டாக்கிறனென்பது அனைவருக்கும் தெரிந்த விஷயம். அப் பிரமனது விதி மூன்று உலகங்களுக்கும் கடக்க முடியாதது. ஆகையால் நீ துக்கப்பட வேண்டாம். உன் புதல்வன் இளவரசனாகப் போகிறான். நீயோ வாலி இருக்கும்போது அடைந்த சந்தோஷத்தையும் வென்று விளங்கும் பரம சந்தோஷத்தைப் பெறப்போகிறாய். வாலி இங்ஙனம் மரணமடைய வேண்டுமென்று பிரமதேவனது கட்டளையாய் இருக்கிறது. அதைத்தடுக்க எவராலுமாகாது. உன்னைப் போன்ற வீர பத்தினிகள் இங்ஙனம் வருந்த மாட்டார்கள்" என்று கூறித் தேற்றினன். ராமனது இனிய உரைகளைக் கேட்ட தாரை கொஞ்சம் சமாதானமடைந்து புலம்புதலை நிறுத்தி வாளாவிருந்தனள்.

**இருபத்துநான்காவது ஸர்க்கம் முற்றிற்று.**

---

### இருபத்தைந்தாவது ஸர்க்கம்.

### ராமன் அனைவருக்கும் சமாதானம் சொல்லுதலும், வாலியை தகனம் செய்வித்தலும்.

பிறகு ராமன் வருந்தி நிற்கும் வானரர்களை நோக்கி—கடவுளே ஸமஸ்த லோகங்களுக்கும் காரணம். அவரது கட்டளையை மீறி நடப்பது எவருக்கும் சாத்தியமன்று. எவனும் இவ்வுலகில் எக்காரியத்தையும் சுதந்திரமாகச் செய்பவனன்று. எவனும் எவனையாயினும் கொல்ல சக்தனல்லன். காலமே உலகிற்கெல்லாம் கதி. எல்லாம் தெய்வத்தினுடைய செயலேயாகும். ஆதியந்தமில்லாத கடவுளுக்கு நாசமாவது மற்று விகாரங்களாவது கிடையாது. பந்துக்களாவது

விரோதிகளாவது கிடையாது. ஆகையால் அவருக்குப் பக்ஷபாதம் என்பதே கிடையாது. அவர் கொடிய செய்கை யுடையவர்களை அப்பொழுதைக்கப்பொழுது தண்டித்துக் கொண்டேயிருப்பாராகையாலும் அவரவர் செய்த கருமத்திற்குத் தகுந்தபடி நன்மை தீமைகளைச் செய்து வருவதாலும் எவரும் இன்பம் நேர்ந்த காலத்தும் துன்பம் சம்பவித்த காலத்தும் மனக்கவலையற்றிருக்க வேண்டும். வானரோத்தமனை வாலி இப்பொழுது என் பாணத்தாலடிபட்டு உயிரிழக்கும்படி ஈச்வரனது ஆஞ்ஞையாகையால் அவ்விதமே நடந்து அவன் இப்பொழுது தன் நல்வினையின் பயனால் சுவர்க்க லோகமடைந்தனன். ஆகையால் நல்ல கதி அடைந்தவனைப் பற்றி வருந்தலாகாது'' என்றனன். பிறகு லக்ஷ்மணன் சுக்கிரீவனை நோக்கி "சுக்கிரீவா! இனி நீ அங்கதனைக்கொண்டு வாலிக்குச் செய்யவேண்டிய மரணச் சடங்குகளைச் சீக்கிரம் செய்து முடிப்பாயாக. அதற்கு வேண்டிய புஷ்பங்கள், வஸ்திரங்கள், நெய், எண்ணெய் முதலிய சாமான்களை உடனே கொண்டு வருவாயாக. தாரனே! நீ சீக்கிரமாகச் சென்று பல்லக்கைக் கொண்டுவருவாயாக'' என்றனன்.

தாரன் லக்ஷ்மணனது ஆஞ்ஞையின்படி உடனே தேவ தச்சனை விசுவகர்மாவினால் நிருமிக்கப்பட்ட அழகிய பல்லக்கைப் பல வானரவீரர்களைக்கொண்டு எடுத்துவந்தனன். அதன் பிறகு சுக்கிரீவன் வாலிக்கு நானாவிதமான அலங்காரங்களைச் செய்து அழுதுகொண்டே அங்கதனுடன் கூடி அவனைச் சிவிகையில் வைத்து வானரர்களைக்கொண்டு அதை எடுப்பித்துச் சுடுகாடு நோக்கிச் சென்றனன். சிவிகைக்கு முன் பல வானர வீரர்கள் வாலியின் பராக்கிரமங்களைப் பற்றிக் கூறிக்கொண்டே சென்றனர். பின்புறத்தில் வாலியின் மனைவிகளான தாரை முதலானோர் கேட்போர் மனம் உருகும் வண்ணம் அழுதுகொண்டே சென்றனர்.

பிறகு வானரர்களால் அடுக்கப்பட்ட கட்டைகளின் மேல் வாலியின் உடலைக்கிடத்தி சுக்கிரீவன் அங்கதனும் தானுமாக சாஸ்திரங்களில் சொல்லியபடி வாலிக்கு தகன சடங்குகளைச் செய்து ஜலதர்ப்பணம் செய்தனன்.

இருபத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## இருபத்தாறவது ஸர்க்கம்.

## சுக்கிரீவ பட்டாபிஷேகம்.

வாலியின் உத்தரகிரியைகளை நடத்திய பின் சுக்கிரீவனும் அவனது மந்திரிகளும் ராமனிடம் சென்று கைகூப்பிய வண்ணம் நின்றனர். அச்சமயம் அனுமான் ராமனைப் பார்த்து வெகு விநயமாக "பிரபூ! உனது அருளினால் சுக்கிரீவன் பெறமுடியாத பெரிய வானர ராஜ்ஜியத்தைப் பெற்றனன். நீ அன்புடன் கிஷ்கிந்தைக்கு வந்து வானரர்களை வருக்கும் சந்தோஷம் விளைவித்து சுக்கிரீவனுக்குப் பட்டாபிஷேகம் செய்வாயாக" என்றனன்.

ராமன் அனுமானை நோக்கி "நல்லியற்கையுடையவனே! நான் தந்தையின் ஆஞ்ஞையைப் பரிபாலனம் செய்கிறேனாகையால் இப்பதினான்கு வருஷங்களும் கிராமங்களுக்குள்ளாவது பட்டணங்களுக்குள்ளாவது புகக்கூடாதவனாய் இருக்கிறேன். நீங்களெல்லாரும் சுக்கிரீவனைக் கிஷ்கிந்தைக்கு அழைத்துக்கொண்டுபோய் விதிப்படி அவனுக்கு ராஜ்ஜியாபிஷேகம் செய்வீர்களாக" என்றனன்.

மீண்டும் ராமன் சுக்கிரீவனை நோக்கி "வீரா, பராக்கிரமத்தில் உன்னை நிகர்த்த இவ்வங்கதனுக்கு இளவரசுப்பட்டம் கட்டுவாயாக. இப்பொழுது மழைகாலம் வந்துவிட்டபடியால் இது யுத்தம் செய்ய ஏற்றகாலமல்ல. ஆகையால் நீ மழைகாலம் முழுதும் இனிமையான சுகங்களையநுபவித்துக்

கார்த்திகைமாதம் சென்றதும் நீ ராவண வதத்தின்பொருட்டுப் பிரயத்தனம் செய்வாயாக" என்றனன்.

இங்ஙனமாக, சுக்கிரீவன் ராமனிடத்தில் விடைபெற்றுக் கொண்டு கிஷ்கிந்தையை அடைந்தவுடன் கோடிக்கணக்கான வானரர்கள் அவனையடிபணிந்து கொண்டாடினர். பிறகு சுக்கிரீவன் தாரையைக் கைவசம் செய்துகொள்ளும் பொருட்டு வாலியின் அந்தப்புரத்திற்குச் சென்றனன்.

பிறகு மந்திரங்களையுணர்ந்த வானர புரோகிதர்கள் பட்டாபிஷேகத்தின் பொருட்டு வரவழைக்கப்பட்ட பிராம்மணோத்தமர்களுக்கு ரத்தினங்களையும் வஸ்திரங்களையும் நானாவித ஆகார வஸ்துக்களையும் கொடுத்து சந்தோஷப்படுத்தி நெருப்பை ஜ்வலிக்கச் செய்து சுற்றிலும் தர்ப்பங்களைப் பரப்பி விதியின்படி மந்திரங்களைச் சொல்லி நெய் பால் ஹோமம் செய்தனர்.

மிகவும் சிறந்த சிங்காசனத்தில் கிழக்கு முகமாக சுக்கிரீவனை உட்காரவைத்து சமுத்திரங்களிலிருந்தும் நதிகளிலிருந்தும் கொண்டுவந்த புண்ணிய தீர்த்தங்களைப் பொற்குடங்களில்வைத்து நல்ல முகூர்த்தத்தில் சாஸ்திரத்தில் சொல்லிய கிரமப்படி, கஜன், கவாக்ஷன், கவயன், சரபன், கந்தமாதனன், மைந்தன், துவிதன், அனுமான், ஜாம்பவான், நலன் ஆகிய இவர்கள் பரிமளம் மிக்க அப்புண்ணிய தீர்த்தங்களைப் பொற்கலசங்களால் எடுத்து சுக்கிரீவனுக்கு, வஸுக்கள் தேவேந்திரனுக்குப் பட்டாபிஷேகம் செய்வதுபோலப் பட்டாபிஷேகம் செய்தனர்.

சுக்கிரீவனுக்குப் பட்டாபிஷேகம் நடந்த சந்தோஷத்தால் வானரர்கள் கிலகிலவென்று சப்தம்செய்து சுக்கிரீவனைக் கொண்டாடினர். சுக்கிரீவனும் ராமனது கட்டளையைச் சிரஸாவகித்து அங்கதனை யணைத்து ஆலிங்கனம் செய்து அவனுக்கு

இளவரசுப் பட்டம் கட்டினன். பிறகு சுக்ரீவன் ராமனிடம் சென்று பட்டாபிஷேகம் நடந்த விருத்தாந்தத்தை விண்ணப்பம் செய்து தன் மனைவியான ருமையுடன் கூடி இந்திரன் தேவராஜ்ஜியத்தைப் பெறுவதுபோல் வானர ராஜ்ஜியத்தைப் பெற்றனன்.

இருபத்தாருவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## இருபத்தேழாவது ஸர்க்கம்

## ராமன் சீதாவிரகத்தால் சோகித்தலும் லக்ஷ்மணன் சமாதானப் படுத்துதலும்.

சுக்கிரீவன் ராமனிடம் விடைபெற்றுச் சென்றபிறகு ராமன் தம்பியோடுகூட கொடிய மிருகங்கள் வாழும் ப்ரஸ்ரவணமலைக்குச் சென்று அதன் சிகரத்தில் அகலமும் நீளமுமுடைய ஓர் குகையை வாசம் செய்வதற்காக ஏற்படுத்திக் கொண்டனன். அவன் அருகில் நின்ற லக்ஷ்மணனை நோக்கி "சத்துருக்களை அழிப்பவனே! இக்குகை மிகவும் ரமணீயமாய் விளங்குவதுடன் வேண்டிய அளவு காற்று மாத்திரம் வீசுகின்றது. மலையருவிகள் ருசியான தீர்த்தங்களுடன் அழகாக ஓடுகின்றன. நானாவிதமான மரங்களும் சூழ்ந்து பலவிதப் பக்ஷிகளும் கலகலவென்று கூவிக்கொண்டிருக்கின்றன. மயில்கள் ஆட குயில்கள் கூவ வண்டினங்கள் முரல, புஷ்பித்த ஜாதிச் செடிகள் பரிமளம் வீசப்பெற்ற இவ்விடம் மிக மனோகரமாய் இருக்கிறது. மலர்ந்த தாமரைகளால் அலங்கரிக்கப்பட்ட ரமணீயமான இத்தாமரை யோடையைப் பார். இக்குகை மழைகாலத்திற்கேற்ற வாசஸ்தானமாய் இருக்கிறது. இக்குகையின் கீழ்ப்பாகத்தில் கங்காநதியைப் போல் கிழக்குமுகமாகப் பெருகிவருகிற நதியைக் காண்பாயாக. இந்நதிக்கரையில் மல்லிகை, முல்லை, வஞ்சி, தாழை, தவம், கூந்தல் பனை, வெள்ளலத்தி, நீர்க்கடம்பு, சுரபுன்னை

முதலிய மரம் செடிகள் வரிசையாக விளங்குவதைக் கவனிப்பாயாக.

சுமித்திரையின் குமாரனே! பல நீர்ப்பறவைகளுடன் கூடி மயில்களும் அன்றிற் பறவைகளும் இனிய குரலோசை செய்யப்பெற்று, ரிஷிகள் கூட்டம் கூட்டமாய் வந்திறங்கி ஸ்நானம் செய்வதுபற்றி இந்நதி அதி ரமணீயமாக இருக்கிறது. கிஷ்கிந்தையும் இப்பிரதேசத்திற்கு மிகவும் சமீபத்திலிருக்கிறது. சுக்கிரீவன் இப்பொழுது தன் மனைவியானருமையையும் வானர ராஜ்ஜியத்தையும், சிறந்த ஐசுவரியங்களையும் பெற்று மிகவும் சந்தோஷமாக இருக்கின்றனன். நானோ எனதன்பிற்குரிய சீதையைப் பிரிந்து சோகத்தினால் வருந்திக்கொண்டிருக்கின்றேன். எனக்கு சீதையின் விரக தாபத்தால் எதிலும் சந்தோஷமுண்டாகவில்லை" என்றனன்.

லக்ஷ்மணன் நல்ல வார்த்தைகளால் அவனைத் தேற்ற விரும்பி "வீரர்களின் தலைவனே! துக்கத்தைவிட்டு தைரியத்தைக் கைக்கொள்வாயாக. துக்கப்படுகிறவர்களுக்கு சமஸ்த காரியங்களும் கெட்டுப்போகும். ஆஸ்திகனும் தருமங்களை புணர்ந்தவனுமான உனக்குத் தெரியாதது ஒன்றுமில்லை. நல்ல க்ஷத்திரிய குலத்தில் பிறந்த நீ இங்ஙனம் சோகிக்கலாகாது. தைரியத்துடன் விடாமுயற்சியையும் நீ கொள்வாயாயின் உன்னாலாகாத காரியம் எதுவுமே இல்லை. இப் பூமண்டலத்தை யெல்லாம் தலைகீழாகச் செய்யவல்ல உனக்கு ராவணனை வெல்வது எம்மாத்திரம்? ஆகையால் சரத்காலம் வரையில் பொறுத்திருப்பாயாக. பிறகு ராவணனை அவனது பந்து மித்திரர்களுடன் கொல்லப்போகிறாய்" என்றனன்.

இங்ஙனம் இனிமையாகவும் இதமாகவும் கூறின லக்ஷ்மணனது வார்த்தைகளைக் கேட்ட ராமன் "லக்ஷ்மணா! உன் இனிய மொழிகளால் இதோ நான் சோகத்தைவிட்டு

தைரியத்தையடைந்துவிட்டேன். உன் வார்த்தையின்படிச் சரத்காலம் வந்து நதிகள் தெளிந்து சுக்கிரீவன் அருள்புரியும் வரையில் எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறேன். அவன் நிச்சயமாய் எனக்குப் பிரதிக்கினை செய்தபடி உபகாரஞ் செய்வான்" என்றனன்.

லக்ஷ்மணன் ராமனைப் பார்த்து "ராஜனே! சுக்கிரீவன் உன் செய்நன்றியை மறவாமல் நிச்சயமாக உன் காரியத்தைச் செய்து முடிப்பான். நீ பகைவனை யடக்கும்பொருட்டு தைரியத்தையடைந்து மழைகாலம் கழித்து சரத் ருது வரும் வரையில் விரகதாபத்தைப் பாராட்டாமல் பொறுத்திருப்பாயாக" என்று கூறித்தேற்றினன்.

இருபத்தேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## இருபத்தெட்டாவது ஸர்க்கம்.

## ராமன் வர்ஷ ருதுவை வருணித்தல்.

ராமன் மால்யவானென்னும் ப்ரஸ்ரவண பர்வதத்தில் வாசம் செய்துகொண்டு லக்ஷ்மணனைப் பார்த்து "லக்ஷ்மணா! இதோ மழைகாலம் வந்துவிட்டது. வானம் முழுவதும் மலைபோன்ற மேகங்கள் நிறைந்திருக்கின்றன. இம்மலையானது மழைதாரைகளினால் அபிஷேகம் செய்யப்பெற்றிருக்கின்றது. ஆகாயத்திலுள்ள கருப்பம் தரித்த மேகங்கள் மின்னல்களுடன்கூடி மழையைப் பொழிகின்றன. இக்காலம் காமுகர்களுக்கு மிகுந்த சுகத்தையும் என்னைப்போல் மனைவியைப் பிரிந்த விரகி ஜனங்களுக்கு மிகுந்த வருத்தத்தையும் விளைவிக்கின்றது.

லக்ஷ்மணா! இப்பொழுது பூமியில் தூசி அடங்கிக் காற்று பனியோடுகூடி வீசுவதால் வெயிலால் ஏற்படக்கூடிய வெப்பம் முதலிய தோஷங்களெல்லாம் தொலைந்தன. மழை

ஜலங்களால் வழிகள் மூடப்பட்டு நலங்குலேந்திருப்பதால் வண்டிகளாவது ஜனங்களாவது எங்கும் செல்லமுடியாது. ஆகையால் அரசர்களும் யுத்தபிரயாணங்களை நிறுத்தி யிருக்கிறார்கள். மலையருவிகள் மிக்க வேகத்துடன் பெருகி வருகின்றன. கறுத்து இனிமையான நாவற் பழங்களை ஜனங்கள் புசிக்கின்றனர். மாம்பழங்கள் நன்றாகப் பழுத்து காற்றால் அடிக்கப்பட்டுத் தரையில் வீழ்கின்றன.

மேகங்கள் கர்ஜிப்பதைப் பார்த்தால் சிறந்த மத்தகஜங் களைப்போலிருக்கின்றன. நதிகள் வேகமாக சமுத்திரத்தை யடைகின்றன. கொக்குகள் சந்தோஷத்துடன் மேகத்தை அணுகுகின்றன. மடந்தையர்களும் பிரிவாற்றாது தமது காதலருடன் கூடுங்காலமாயிருக்கின்றது. மயில்கள் தோகை களை விரித்து நர்த்தனம் செய்கின்றன. எருதுகள் பசுக்க ளிடத்தில் மிகவும் காமவெறிகொண்டிருக்கின்றன. பூமி, பயிர்களும் காடுகளும் செழித்திருக்கப்பெற்று ரமணீயமாக இருக்கின்றது. மேகங்கள் 'ஜோ'வென்று மழையைப் பொழிகின்றன. காதலிகளைப் பிரிந்த காமுகர் விசனத்தில் ஆழ்ந்து சிந்தையுற்றிருக்கின்றனர். வண்டுகள் கடம்பப் பூக்களில் தேனைப்பருகி அதற்குப் போக்குவீடாகத் தென தெனவென்று இசை பாடுகின்றன.

கரிய மேகக் கூட்டங்கள் முழங்கக்கேட்ட யானை மற் றொரு யானையின் கர்ஜனை யென்று பிரமித்து யுத்தம் செய்ய விரும்பித் திரும்பிப் பார்க்கின்றது. பக்ஷிகள் நிர் மலமாகி முத்துப்போல் விளங்கும் ஜலத்தைப்பருகி தாகம் தீரப்பெறுகின்றன.

லக்ஷ்மணா! பலபல நதிகளானவை முத்தும் மணியும் வயிரமும் நற்பொன்னும் கொழித்துக்கொண்டு கடலை

நோக்கிக் கனவேகமாக ஓடிச்செல்வதை நோக்குங்கால் மாதர்கள் பலவகை அணிகலன்களைத் தரித்துக்கொண்டு தம்தம் காதலர்களை நோக்கி விரைந்துசெல்வதுபோலிராநின்றன காண். இங்ஙனே ஆறுகள் வெள்ளங்கோத்துப் பெருகுகின்ற தன்மை வெகு ரமணீயமாக இருக்கின்றது பார்.

மலைகளானவை தளிர் புஷ்பம் முதலியவற்றால் நன்கு விளங்கப் பெற்று மனோகரமாய் இருக்கின்றன. காற்றும் மழையும் ஒன்றாகக் கலந்து சலசலவென்று அடிக்கின்றன. ஜலாசயங்கள் பூரணமாக நிரம்பப்பெற்றுக் கரைகளை உடைத்துக்கொள்ளுமோ வென்கிற பயத்தை உண்டாக்குகின்றன. ஆகாயம் மேகங்களால் சூழப்பட்டிருப்பதால் இரவில் நக்ஷத்திரங்களும் பகலில் சூரியனும் புலப்படவில்லை. இருளானது பூச்சுப் பூசினாற்போல் மூடிக்கொண்டிருக்கையால் திசைகள் தோற்றாதிருக்கின்றன.

பக்ஷிகள் கூடுகளில் சேர்கையாலும் தாமரைகள் மூடிக்கொள்கையாலும் ஜாதிப்பூ மலர்தலாலும் சூரியன் அஸ்தமித்தானென்று தெரிகின்றதேயன்றி மேகம் சூழ்ந்திருக்கையால் சூரியன் அஸ்தமிப்பதை நேரே பார்க்க முடியாதிருக்கின்றது. அரசர்கள் யுத்த யாத்திரைகளை நிறுத்தியிருக்கிறார்கள்.

புரட்டாசி மாதத்தில் வேதம் ஓத விரும்பும் ஸாமவேத பிராமணர்களின் ஹஸ்த நக்ஷத்திரம் கூடிய வேதாரம்ப சமயம் இதோ வந்திருக்கின்றது. இப்பொழுது ஸரயூ நதியில் வெள்ளம் அதிகமாய் இருக்கும்.

இப்பொழுது சுக்கிரீவன் பகைவனை வென்று மனைவியைப் பெற்று ராஜ்ஜியத்தைக் கைப்பற்றினமையால் சகல சுதந்தரங்களையும் அநுபவிக்கின்றனன். நானோ மனைவியைப்

பறிகொடுத்துப் பெரிய ராஜ்ஜியத்தையும் போக்கடித்துக் கொண்டு இன்னும் சத்துருவை ஜெயிக்காதிருக்கிறேனாகை யால் சோகத்தில் மூழ்கிக்கிடக்கிறேன். என் சோகமோ அளவு கடந்ததாய் இருக்கின்றது. மழைகாலம் மிகவும் கடக்க முடியாதிருக்கின்றது. ராவணனோ பெரிய பகை யாளி. இம்மூன்றையும் கடப்பது மிகவும் அசாத்திய மென்று எனக்குத் தோற்றுகின்றது. நம் காரியமோ மிகவும் பெரியதாயும் அற்ப முயற்சியாலாவது ஸ்வல்ப காலத்தினு லாவது சாதிக்கக் கூடாததாயும் இருக்கின்றது. சுக்கிரீவன் மழைகாலமெல்லாம் இளைப்பாறி சரத்காலம் வந்ததும் நிச்சய மாக நான் செய்த உபகாரத்தைத் தெரிந்துகொண்டு நன்றி யுடன் எனக்குப் பதிலுபகாரம் செய்வான். அது வரையில் நாம் காத்துக்கொண்டிருப்போமாக" என்றனன்.

லக்ஷ்மணன் ராமனது வார்த்தைகளைப் பாராட்டி அவனை நோக்கி "புருஷோத்தமனே! சுக்கிரீவன் நீ சொல்லியபடி தவறுமல் மழைகாலம் சென்றதும் உன் விருப்பத்தைச் செய்து முடிப்பான். ஆகையால் பகைவரை அடக்கி அழிப்ப தற்கு வேண்டிய தைரியத்தை ஏற்றுக்கொண்டு நீ சரத் காலம் வரும்வரையில் பொறுத்திருப்பாயாக" என்றனன்.

இருபத்தெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று

---

## இருபத்தோன்பதாவது ஸர்க்கம்

அனுமான் ராமகாரியத்தை மறந்த சுக்கிரீவனுக்கு ஞாபகப் படுத்துதலும், சுக்கிரீவன் நலனைக்கொண்டு சகல சைன்னியங் களையும் வரவழைக்கும்படி கட்டளையிடுதலும்.

மழைகாலம் கழிந்த பின்பும் சுக்கிரீவன் தான் ராம னுக்குக் கொடுத்த வாக்குறுதியை அடியோடு மறந்து தன் பிராண நாயகியான ருமையையும் தான் மனதில் மிகவும்

ஆசைப்பட்டுக்கொண்டிருந்த தாரையையும் பெற்றானகையால் எப்பொழுதும் காமபரவசனாகவே காலம் கழித்து வரலாயினன். ராஜகாரியங்களை மந்திரிகள் வசம் ஒப்புவித்து விட்டு இரவும் பகலும் காம சுகத்திலேயே ஈடுபட்டு மனக்கவலை ஏது மின்றி காலம் கழித்து வந்தான்.

இதையறிந்த அனுமான் சுக்கிரீவனிடம் சென்று "வானரர்கோமானே! ராமனது உதவியால் வாலியைக் கொன்று ராஜ்ஜியத்தையடைந்து கீர்த்தியையும் அடைந்தனை. இனி நண்பர்களைப் பாராட்டி அவர்களது காரியங்களைச் செய்து முடிப்பது உன் கடமையாய் இருக்க நீ சரத்காலம் வந்தும் காம சுகத்தில் மூழ்கி நீ அவர்களுக்குக் கொடுத்த வாக்குறுதியை அடியோடு மறந்துவிட்டனை. இதனால் நாம் ராமனது கோபத்திற்காளாகி வாலியைப்போல் முடிவது திண்ணமென்றறிவாயாக. ஆகையால் நீ உடனே சிநேகிதனான ராமனது காரியத்தைச் செய்யவேண்டும்.

ராமன் தானாகவே வந்து நம்மைத் தூண்டுவதற்கு முன் நாமே அவனது காரியத்தைச்செய்ய முயன்றால் நாம் இது வரை தாமதித்ததைப்பற்றி அவன் நம்மைக் கோபிக்கமாட்டான்" என்றனன்.

இங்ஙனம் அனுமான் சொன்னதைக் கேட்ட சுக்கிரீவன் தன் பிழையை உணர்ந்து நலனைப் பார்த்து "சேனாபதி! நீ சமஸ்தமான வானரவீரர்களையும் சீக்கிரம் வரவழைப்பாயாக. எந்த வானரன் பதினைந்து தினங்களுக்குள் இங்கு வந்து சேரவில்லையோ அவனுக்கு மரணமே தண்டனையாகுமென்று கண்டிப்பாய் அறிவிப்பாயாக. நீ இந்த என் கட்டளையை அங்கதன் ஜாம்பவான் முதலியவர்களைக்கொண்டு நடத்துவாயாக" என்று உத்தரவிட்டனன்.

இருபத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

## முப்பதாவது ஸர்க்கம்.

## சரத் ருது வந்தும் சுக்கிரீவன் பிரயத்தனம் செய்யாமைக்கு ராமன் கோபித்தல்.

ராமன் சரத் ருது வந்ததைக்கண்டு சீதை காணுதிருப்புதையும் சுக்கிரீவன் மன்மத கிரீடைகளில் கால்தாழ்ந்திருப்பதையும் அவன் சொன்ன கெடு தவறிப்போனதையும் நினைத்து முன்பைவிட மிகவும் துக்கமுற்றவனுகி மூர்ச்சையடைந்தனன். பிறகு சீதையை நினைத்துப் பலவாறு புலம்பினன்.

அங்ஙனம் மிகுந்த பரிதாபமாகப் புலம்பும் ராமனை நோக்கி லக்ஷ்மணன் "அண்ணு! மனதைக் காமவிகாரத்திற்குட்படுத்துவதனுல் என்ன பயன்? ஆண்மையை இழந்து வருந்துவதில் சுகம் உண்டாகாது. ராமா! உன்னைக் கணவனுகப்பெற்ற சீதை மற்றொருவனுல் எவ்விதத்திலும் பெறக் கூடியவளல்லள். எவனுயினும் அக்கினிஜ்ஜுவாலையைக் கையால் பிடித்துக் கொளுத்தப்படாமல் போவானே!" என்று இங்ஙனே பலகூறித் தேற்றினன்.

லக்ஷ்மணனுடைய சமாதான வார்த்தைகளைக்கேட்ட ராமன் "லக்ஷ்மணு! சுக்கிரீவனே நம்மால் விரோதி தொலையப் பெற்றுத் தன்னுடைய வாக்குறுதியை அடியோடு மறந்து மன்மத கேளீவிலாசங்களில் காலங்கழிக்கின்றனன். அந்தோ! மழைகாலமாகிய நான்கு மாதங்கள் சென்றுவிட்டன. இப்பொழுது அரசர்கள் ஒருவர்மேல் ஒருவர் சண்டை போடுவதற்குத் தகுந்த காலமாய் இருக்கிறது. சரத் காலத்தில் காணக்கூடிய இயற்கைத் தோற்றங்கள் சகலமும் நிறைந்திருந்து மனதைக் கவர்கின்றன. காடுகளில் பெண் யானைகள் மன்மதவிகாரங்கொண்டு ஆண்யானைகளைச் சுற்றுகின்றன. எருதுகள் சரீர புஷ்டியும் காந்தியும் விளங்கப்பெற்று மிகவும் மதங்கொண்டு சந்தோஷமாகத் திரிகின்றன. லக்ஷ்மணு! இவற்றை யெல்லாம் நீ காணவில்லையா?

தெளிந்த ஜலங்களும் மலர்ந்த ஆம்பலும் அன்றிற் பறவைகளின் கலகல சப்தமும் மந்தமாருதமும் நிர்மலமான சந்திர மண்டலமும் மழைகாலம் கடந்து இப்பொழுது சரத் காலம் வந்ததென்று தெரிவிக்கின்றனவே. லக்ஷ்மணா! அரசர்கள் யுத்தத்திற்காக முதலில் பிரயாணம் செய்யவேண்டிய இக்காலத்தில் சுக்கிரீவன் என்னை அடியோடு மறந்து வாளா கிடக்கின்றனன். சீதையை இழந்து பரிதபிக்கின்ற எனக்கு மழை மாதங்கள் நான்கும் நூறாண்டுகள் கடந்தனபோல் இரா நின்றன. சுக்கிரீவனுக்கு என்னிடத்தில் தயை பிறவாதிருக்கின்றதே! செய்நன்றி மறந்த காதகனாகத் தோன்றுகின்றதே! நீ உடனே சுக்கிரீவனிடம் சென்று நான் சொன்னதாக இங்ஙனம் கூறுவாயாக. 'செய்நன்றி மறந்த பாபிஷ்டன் புருஷர்களில் கடையனாவன். அவன் மரணமடைந்த பின்கூட அவனது சரீரத்தை மாமிசம் தின்னும் ஜந்துக்களும் தின்னாது' என்றுரைப்பாயாக.

லக்ஷ்மணா! மராமரங்களை முறித்ததனாலும் வாலியைக்கொன்றதனாலும் என் பராக்கிரமத்தை நன்றாக அறிந்திருந்தும் இந்த சுக்கிரீவன் மழைகாலம் சென்ற பின்பும் இங்ஙனம் சிறிதும் என்னிடம் பயமில்லாமல் ஸ்திரீகளோடு விளையாடிக்கொண்டிருக்கிறானே! வாலி சென்றவழி அவனுக்கும் திறந்திருக்கிறதென்று அவனிடம் கூறுவாயாக. அவனை பந்துக்களோடு யமபுரம் அனுப்ப சித்தமாக இருப்பதாகத் தெரிவி. அப்படிப்பட்ட கதியை வரவழைத்துக்கொள்ள வேண்டாமென்று சொல்வாயாக" என்று மொழிந்தனன்.

முப்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

## முப்பத்தோராவது ஸர்க்கம்.

## லக்ஷ்மணன் கோபித்து வருவதை அங்கதன் சுக்கிரீவனோடு கூறுதல்.

இங்ஙனம் கூறின ராமனது வசனங்களைக் கேட்ட லக்ஷ்மணன் "ராமா! சத்தியம் தவறின சுக்கிரீவனை இன்றே கொன்றுவிடுகிறேன். வாலியின் குமாரனான அங்கதன் சீதா தேவியைத் தேடிக் கண்டுபிடிக்க சகாயம் செய்வான்" என்றனன்.

ராமன் "லக்ஷ்மணா! ஸதாசாரம் பொருந்திய நீ இப்படிப் பட்ட சிநேகிதனை ஆராயாமல் கொல்லலாகாது. அவனிடம் பழையபடி நல்ல குளிர்ந்த வார்த்தைகளைப் பேசி அவன் நம் விஷயத்தில் நன்றி கெட்டவனென்பதை நிச்சயமாகத் தெரிந்துகொண்ட பிறகு உன் விருப்பத்தின்படி செய்வாயாக" என்றனன்.

உடனே லக்ஷ்மணன் கிஷ்கிந்தாபுரிக்குள் சென்று சுக்கிரீவனது அரண்மனைக்குச் சென்றனன். சுக்கிரீவனிடத்திலுள்ள கோபாவேசத்தினால் உதடு துடிக்கப்பெற்று வேகமாக வரும் லக்ஷ்மணனைக் கண்ட வானரவீரர்கள் பயத்தினால் அவயவங்கள் விலவிலக்கப் பெற்றுக் கிடுகிடுவென்று நடுக்கமுற்றுக் குவியல் குவியலாக நாற்புறமும் பறந்தோடினர். சில வானரர்கள் சுக்கிரீவனிடம் ஓடோடியும் சென்று லக்ஷ்மணன் கோபத்துடன் வந்திருப்பதை அவனுக்கறிவித்தனர். அவன் மிகுந்த காமமோகங்கொண்டு தாரையுடன் கூடி கிரீடித்துக்கொண்டிருந்தமையால் அவர்கள் சொன்ன வார்த்தையைச் செவியுற்றிலன்.

கோபத்தினால் கண்கள் சிவக்கப்பெற்று விளங்கின லக்ஷ்மணனை அங்கதன் அணுகி பயத்தினால் மிகவும் வருத்தமுற்றனன். அவனை நோக்கி லக்ஷ்மணன் "அடா பயலே

நீ சுக்கிரீவனிடம் சென்று எனது வரவை அவனுக்குத் தெரியப்படுத்துவாயாக" என்றனன்.

அங்கதன் உடனே வேகமாக் சுக்கிரீவனிடம் ஓடி லக்ஷ்மணன் வந்திருக்கும் விஷயத்தையும் அதன் காரணத்தை யும் எவ்வளவு தூரம் எடுத்துச் சொன்னபோதிலும் அவன் மதுபான மயக்கத்திலும் மன்மத விகாரத்திலும் மதியிழந்திருந்தமையால் விழித்துக்கொள்ளவே இல்லை. அச்சமயம் லக்ஷ்மணனுடைய பயங்கரமான தோற்றத்தைக் கண்டு வானர வீரர்கள் மிகவும் பயந்து இடிபோல் பெருத்த குரலோசை உண்டாகும்படி கூக்குரலிட்டனர். இதைக் கேட்ட சுக்கிரீவன் மதத்தினால் கண்கள் சிவந்து உடல் துவண்டு ஆபரணங்கள் தாறுமாறாகக் கழன்றுவிழக் கண் விழித்துக் கொண்டனன்.

பிறகு அந்தப்புரத்தில் பிரவேசிக்கத் தகுந்தவர்களான பிலக்ஷணன், பிரபாஸன் என்கிற இரண்டு மந்திரிகள் அங்க தன் வசனத்தைக் கேட்டு சுக்கிரீவனிடம் சென்று செய்தி யைத் தெரிவித்தனர்.

அவர்கள் "சுக்கிரீவ ராஜனே! லக்ஷ்மணன் கண்களில் தீப்பொறி பறக்கப் பார்வையால் வானரர்களைக் கொளுத்திவிடு வான்போல் வாசலில் காத்துக்கொண்டிருக்கின்றனன். நீயும் உன் புதல்வனும் சீக்கிரம் அவனிடம் சென்று வணங்கி அவன் கோபத்தைப் போக்குவது நலம். நீ ராமனுக்குச் செய்த வாக் குறுதியைத் தவறாமல் நிறைவேற்றுவாயாக" என்றனர்.

முப்பத்தோராவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## முப்பத்திரண்டாவது ஸர்க்கம்.

## அனுமான் சுக்கிரீவனுக்கு இதோபதேசம் செய்தல்.

இதைக் கேட்ட சுக்கிரீவன் சிம்மாசனத்தினின்றும் இழிந்து அம்மந்திரிகளைப் பார்த்து "நான் இதுவரை பொய்

உரைத்ததுமில்லை. தப்புக்காரியமும் செய்ததில்லை. அப்படி இருக்க லக்ஷ்மணன் என்னைக் கோபிக்கவேண்டிய காரணம் இன்னதென்று விளங்கவில்லை. துராத்துமாக்களான விரோதிகள் எவரேனும் என்மேல் இல்லாத தோஷங்களை லக்ஷ்மணனுக்குச் சொல்லியிருப்பார்கள். இப்பொழுது எனக்கு லக்ஷ்மணனிடத்திலாவது ராமனிடத்திலாவது சிறிதும் பயமில்லை. ஆனால் நண்பனானவன் தகுந்த காரணமின்றிக் கோபமுறுவானாயின் ' எப்படிப்பட்டவனுக்கும் தத்தளிப்பு உண்டாகாமல் போகாது" என்றனன்.

உடனே அங்கிருந்த அனுமான் சுக்கிரீவனைப் பார்த்து "வானராதிபா! ராமன் உனக்குச் செய்த வாக்குறுதியை நிறைவேற்றி நான்கு மாதங்களுக்குமேலாயிற்று. நீயோ உன் வாக்குறுதியை மறந்து மதுபான மயக்கத்தினாலும் மன்மத கேளீவிலாசங்களாலும் உன்னையே மறந்து யுத்தத்திற்குப் பிரயத்தனம் செய்யவேண்டிய சமயம் வந்தும் ஒன்றும் செய்யாது இருக்கின்றனை. இப்பொழுது நீ தவறி ராமனுக்கு அபராதம் செய்தவனாயினை. ஆகையால் கைகூப்பி லக்ஷ்மணனுக்கு நல்வார்த்தை சொல்லி அருள்புரியச் செய்வதையொழிய வேறுவழி உனக்கில்லை. நீ அங்ஙனம் செய்யாயாயின் ராமனது கோபத்திற்காளாகி வாலியைப் பின்பற்ற நேரிடும் என்பதைத் திடமாக நம்புவாயாக. நீ உடனே சென்று உன் பந்து ஜனங்களுடன் கூடி அவனுக்குத் தலைசாய்த்து நமஸ்காரம் செய்து கணவன் வசத்தில் மனைவி இருப்பதுபோல் நீ அவன் வசத்தில் நின்று உன் பிரதிக்கினையைத் தவறாமல் நிறைவேற்றுவாயாக" என்றனன்.

முப்பத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

## முப்பத்து மூன்றாவது ஸர்க்கம்

## தாரை லக்ஷ்மணனை வேண்டுதல்.

லக்ஷ்மணன் சுக்கிரீவனது அரண்மனையிலுள்ள ஏழு கட்டுகளையும் தாண்டிப்போய் அப்புறத்திலுள்ள பெரிய அந்தப்புரத்தைக் கண்டனன். அங்கு வீணை முதலிய வாத்தியங்கள் முழங்கின. பொன், வெள்ளி இவற்றால் செய்யப்பட்ட மஞ்சங்களும் நவரத்தினங்களிழைக்கப்பட்ட பொற் பீடங்களும் காணப்பட்டன. அழகிய ஆபரணங்களணிந்து சௌந்தரியத்தினாலும் யௌவனத்தினாலும் மிடுக்குற்றிருக்கும் பல ஸ்திரீகளையும் லக்ஷ்மணன் கண்டனன். விலையுயர்ந்த ஆடையாபரணங்களை யணிந்த மற்றும் பல சுக்கிரீவனது பரிஜனங்களையும் கண்டனன்.

அப்பொழுதும் சுக்கிரீவன் ஸ்திரீலோலனாகவே இருப்பதை யறிந்த லக்ஷ்மணன் கோபம் மேன்மேலும் பெருகப் பெற்று திசைகளை யெல்லாம் சப்தத்தினால் நிரம்பச் செய்து கொண்டு வில்லின் நாணை இழுத்து ஒலிக்கச் செய்தனன். அவன் ஸ்திரீகளிருக்கும் அந்தப்புரத்தில் பிரவேசிக்கலாகா தென்று தனியே நின்று இருந்தனன்.

வில்லின் நாண் சப்தத்தைக் கேட்ட சுக்கிரீவன் மிகவும் பயந்து இடத்தை விட்டெழுந்து அருகிலிருந்த தாரையை நோக்கி "மனதுக்கினியவளே! மகாவீரனான லக்ஷ்மணனுக்கு நான் ஒன்றும் அபராதம் செய்யாமலிருக்க இங்ஙனம் பயங்கரமான கோபத்துடன் வந்திருக்கின்றனனே! நீ எனக்காக அவனிடம் சென்று உன் இனிய வார்த்தைகளால் அவனது கோபத்தைத் தெளியச் செய்யவேண்டும். பெரியோர்கள் எப்பொழுதும் ஸ்திரீகளிடத்தில் கொடியதாக நடக்கமாட்டார்கள். அவன் உனது நல்வார்த்தைகளால் மனம் தெளியப் பெற்றுக் கோபத்தைக் காட்டமாட்டான். பிறகு சாந்த

மடைந்தவுடன் நான் லக்ஷ்மணனைக் 'காண்பேன்'' என்று கூறினன்.

உடனே தாரை கலவியில் மெய் மறந்தவளாகையால் மதுபான மயக்கத்தினால் உடைகளும் ஆபரணங்களும் நழுவப் பெற்று சம்போக சின்னங்கள் விளங்கவும் நடிபோல் நுண்ணியதான மேனி தெரியும்படி வெட்கமில்லாமல் லக்ஷ்மணனிடம் சென்றனள். அவளை அவ்விதமான கோலத்தில் கண்ட லக்ஷ்மணன் அவளைக்காணக் கூசி வெள்கித் தலை வணங்கிக்கொண்டிருந்தனன்.

தாரை லக்ஷ்மணனை நோக்கி "ராஜகுமாரனே! உனக்குக் கோபம் வருவதற்குக் காரணம் என்ன? உனக்குக் கோபத்தை மூட்டிவிட்டவன் எவன்?'' என்றனள். லக்ஷ்மணன் அவளை நோக்கி "தாரே! நீ கணவனது நன்மையில் மன ஊக்கமுடையவளாகையால் விஷயம் இன்னதென்று அறியமாட்டாய். சுக்கிரீவன் ராமனால் நன்மையடைந்திருந்து அவனுக்குத் தான் கொடுத்த வாக்குறுதியை அடியோடு மறந்து விட்டனன். அவன் சீதையைத் தேடுவதற்கு நான்கு மாதங்கள் கெடு வைத்துக்கொண்டு வந்து இப்பொழுது மதுபான மயக்கத்தினாலும் மன்மத லீலைகளாலும் மதிமயங்கி அந்நான்கு மாதங்கள் கடந்தும் வாளா கிடக்கின்றனன். செய் நன்றி மறந்தவனுக்கு அறம் பொருள் இன்பம் வீடு என்கிற நான்கு புருஷார்த்தங்களும் கிடையாவென்று சாஸ்திரங்கள் கூறுகின்றன. இத்தகைய செய்நன்றி மறந்த சுக்கிரீவனிடம் நாங்கள் எப்படி நடந்துகொள்வதென்பதை நீயே கூறுவாயாக'' என்றனன்.

தாரை லக்ஷ்மணன் அங்கு ராமனாலனுப்பப்பட்ட காரணத்தை அறிந்து கொண்டவளாகி லக்ஷ்மணனைப் பார்த்து "வீரர்களில் தலைவனே! சுக்கிரீவன் காமபரவசனாகி யிருக்

கின்றமையால் அவன் மேல் கோபித்துக்கொள்வதற்கு இது சமயமன்று. காமக்கடலில் மூழ்கி யிருந்தமையால் உங்களை மறந்திருக்கும் சுக்கிரீவன் விஷயத்தில் நீ பொறுமையைக் காட்டவேண்டும். மிகுந்த பராக்கிரமமுடைய நீ உன்னைக் காட்டிலும் குறைந்த பலமுடைய அற்பனான சுக்கிரீவன்மேல் எவ்வண்ணம் கோபமுறலாகும்?

சுக்கிரீவனது நண்பனான ராமனுக்குக் கோபம் உண்டா வதையும் அந்தக் கோபம் இப்படிப்பட்டதென்பதையும் நானறிவேன். அதற்குக் காரணம் சுக்கிரீவன் சீதையைத் தேட முயற்சி செய்யாமல் காலதாமதம் செய்கையே என் பதையுமறிவேன். நீங்கள் எங்களுக்குச் செய்த பெரிய உபகாரத்தையுமறிவேன். இப்பொழுது சுக்கிரீவன் காமத்தினால் இடைவீடின்றி எவருடன் கூடி சுகித்துக்கொண்டிருக்கிறானோ, அந்த ஸ்திரீகளையும் அறிவேன். நீ இங்ஙனம் கோபமடைவதைக் கண்டால் உனக்கு எம்மைப்போல் மன்மத கேளி விலாசங்களில் அவ்வளவு ஞானம் இல்லையென்று தோன்றுகிறது. நீ அவற்றை அறிந்திருப்பவனாயின், காமத்தில் மூழ்கியிருக்கும் சுக்கிரீவனிடத்தில் இவ்விதம் கோபங் கொள்ளமாட்டாய். காம லோலனாகிய மனிதன் தேசகாலங்களையாவது தருமங்களையாவது பார்க்கமாட்டானல்லவா? ஆகையால் சுக்கிரீவனை இவ்வளவில் பொறுக்க வேண்டும். அவன் உங்கள் காரியத்தை நிறைவேற்றுவதிலேயே ஊக்கமுடையவனாய் இருக்கின்றனன். அதன்பொருட்டு அவன் வெகுநாளைக்கு முன்பே வானரர்களுக்குக் கட்டளை இட்டிருக்கிறான். மகா பராக்கிரமசாலிகளான பலகோடி நூறாயிரம் வானரர்கள் நான்கு திசைகளினின்றும் வந்து கொண்டே இருக்கிறார்கள். ஆகையால் நீ கோபத்தை யொழித்து அந்தப்புரத்திற்குள் வந்து சுக்கிரீவனைக் காண்பாயாக'' என்றனள்.

லக்ஷ்மணன் அவ்வண்ணமே உள் நுழைந்து பல அழகிய ஸ்திரீகளின் நடுவில் காமபரவசனுய் இருக்கின்ற சுக்கிரீவனைக் கண்டு மிகுந்த கோபாவேசங்கொண்டு கண்கள் சிவக்கப்பெற்று யமனைப்போல் பயங்கரனுய் இருந்தனன். ருமையை அழுந்த அணைத்துக்கொண்டு பொன்மயமான ஆசனத்திலுட்கார்ந்திருந்த சுக்கிரீவனும் லக்ஷ்மணனைக் கண்டனன்.

முப்பத்துமூன்ருவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## முப்பத்துநான்காவது ஸர்க்கம்

### சுக்கிரீவனோடு லக்ஷ்மணன் ராமன் சொன்ன சங்கதியைச் சொல்லுதல்.

லக்ஷ்மணனைக் கண்டதும் சுக்கிரீவன் கைகூப்பிய வண்ணம் அவனை எதிர்கொண்டு சென்று வரவேற்றனன். லக்ஷ்மணன் மிகுந்த கோபத்துடன் அவனை நோக்கி "நன்றி கெட்ட வானரனே! பிரம்ம ஹத்தியைச் செய்தவனுக்கும், மதுபானம் செய்தவனுக்கும், பொன் திருடினவனுக்கும், குரு பக்தி இல்லாதவனுக்கும், குருவின் மனைவியைக் காதலித்தவனுக்கும் பிராயச்சித்தம் பெரியோர்களால் விதிக்கப்பட்டிருக்கிறதேயன்றிச் செய்நன்றி மறந்தவனுக்கு மாத்திரம் பிராயச்சித்தமே இல்லை. சுக்கிரீவா! நீ முன்னம் ராமனுல் உன் காரியத்தை முடித்துக்கொண்டு அதை மறந்து இப்பொழுது அவனது காரியத்தைச் செய்யாதிருக்கின்றனை. நீ பாபாத்துமாவென்பதும் துர்ப்புத்தியுடையவனென்பதும் தெரியாமல் உன்னோடு சிநேகம் செய்து உனக்கு வானர ராஜ்ஜியத்தை சம்பாதித்துக் கொடுத்தோம். ராமன் எப்படிப்பட்ட காரியத்தையும் அவலீலையாகவே செய்து முடிக்கவல்லவன். அப்படிப்பட்ட ராமன் உனக்குச் செய்த உபகாரத்தை நினையாமல் மறப்பாயாயின் இப்பொழுதே

அவனது பாணங்களால் அடிக்கப்பட்டவனாகி வாலியைப் பின் தொடரப் போகிறாய். வாலி சென்ற மார்க்கம் இப்பொழுது மூடப்படவில்லை. ஆகையால் நீ செய்த வாக்குறுதியைத் தவறாமல் நிறைவேற்றுவாயாக. வீணாக ராமபாணத்தால் அடிபட்டு உயிரிழக்க வேண்டாம்'' என்றனன்.

முப்பத்துநான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## முப்பத்தைந்தாவது ஸர்க்கம்

### தாரை மீளவும் லக்ஷ்மணனை நல்வார்த்தைகளால் சமாதானப்படுத்துதல்.

லக்ஷ்மணன் இங்ஙனம் கூறிக்கொண்டிருக்கையில் தாரை அவனைப் பார்த்து "லக்ஷ்மணா! நீ கூறுகிறபடி சுக்கிரீவன் நன்றிகெட்டவனல்லன். கபடமற்றவன். இவன் ராமனால், ஒருவராலும் செய்யமுடியாத உபகாரத்தைப் பெற்றானதலால் அதை மறந்தவனன்று. ராமனது அருளினால் இப்பொழுது இவன் சாசுவதமான வானர ராஜ்ஜியத்தையும் மனைவியான ருமையையும் என்னையும் பெற்றனன். இவன் வெகுகாலமாக மிகவும் பெருங் கஷ்டங்களில் படுத்திருந்தானாகையால் இப்பொழுது மகா சுகத்தைப் பெற்று, காலம் கடந்து சென்றதையும் தெரிந்து கொள்ளாமலிருக்கின்றனன்.

லக்ஷ்மணா! முன்பு விசுவாமித்திர முனிவர் மேனகையுடன் மன்மதலீலைகளில் கால்தாழப் பெற்று காலம் சென்றதை அறியாதிருந்தாரல்லவா? இனி சபல புத்தியுடைய வானரனான சுக்கிரீவனைப்பற்றிச் சொல்லவும் வேண்டுமோ? இவன் காம பரவசனாய் இருந்து உங்கள் விஷயத்தில் சற்று காலதாமதம் செய்ததை நீ பொறுத்தருளல் மிகையோ? உன்னைப்போன்ற வீரர்கள், விஷயங்களை ஆராயாமல் திடீரென்று இங்ஙனம் கோபங் கொள்ளமாட்டார்கள்.

லக்ஷ்மணா! ராமனுக்குப் பிரீதி உண்டாகும் பொருட்டு சுக்கிரீவன் தன் மனைவியான ருமையையும் என்னையும் வானர ராஜ்ஜியத்தையும் தனதானிய சம்பத்துக்களையும் கைவிடு வானென்பதில் சிறிதும் சந்தேகமே இல்லை. லங்கையிலுள்ள கணக்கற்ற ராக்ஷசர்களையும் ராவணனையும் சுக்கிரீவனுடைய சகாயமில்லாமல் கொல்வது எவ்விதத்திலும் சாத்தியமன்று. ராவணனது பராக்கிரமங்களைப்பற்றி எனக்குத் தெரியாவிடினும் வாலி இந்த விஷயங்களையெல்லாம் எனக்குக் கூறி யிருக்கின்றனன்.

ராமனுக்கிளையோனே! உன் நிமித்தமாக சுக்கிரீவன் ஏற்கனவே சமஸ்த வானரவீரர்களையும் அழைத்துவரும் பொருட்டுப் பல வானரர்களை அனுப்பியிருக்கிறான். பதினேழு தினங்களில் இப்பூமண்டலத்திலுள்ள சகல வானர வீரர்களும் வந்துசேரவேண்டுமென்றும் அப்படி வாராதவர்களுக்கு மரண தண்டனை என்றும் கடுங்கட்டளை செய்திருக்கின்றனன். அதன்படி இன்றையதினம் மகாபலிஷ்டர்களான வானர வீரர்கள் இவ்விடம் வந்துசேரவேண்டும். மகாவீரனே! ஆயிரங்கோடி கரடிகளும் ஆயிரங் கொண்டை முசுக்களும், பல கோடி வானரர்களும் இப்பொழுது வந்து உன்னைப்பணிவார்கள். ஆகையால் நீ கோபத்தைவிட்டு அருள்புரிவாயாக" என்றனள்.

**முப்பத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.**

---

## முப்பத்தாறவது ஸர்க்கம்

### லக்ஷ்மணனும் சுக்கிரீவனும் சினேகத்துடன் சம்பாஷித்தல்.

தாரை இங்ஙனம் வணக்கமும் தருமமும் நிறைந்து உரைத்த வார்த்தைகளைக்கேட்ட லக்ஷ்மணன் கோபத்தைத் துறந்து அவ்வார்த்தைகளை அங்கீகரித்து மனந்தெளியப்

பெற்றனன். சுக்கிரீவன் லக்ஷ்மணனிடத்து உண்டான பயத்தைத் துறந்து வணக்கத்துடன் லக்ஷ்மணனை நோக்கி "சுமித்திரையின் புதல்வனே! ராமன் எனக்குச் செய்த உபகாரத்திற்கு நான் என்ன கைம்மாறு அவனுக்குச் செய்ய முடியும்? ஏழு மராமரம் துளைபடச் சிலை வளைத்த மகாவீரனுக்கு மற்றொருவனது உதவியால் என்னாகவேண்டும்? மகா பராக்கிரம சாலியான ராமன் ஒருவனே நினைத்த காரியத்தை சாதிக்க வல்லவனாயிருக்க அவனுக்கு நான் என்ன உதவி செய்யப்போகிறேன்? 'ராமன் நமது உயிர் நண்பனாகையால் நம்மை ஒன்றும் செய்யமாட்டான்' என்ற நம்பிக்கையால் உங்களைச் சிறிது மறந்திருந்தேனத்தனை; உங்கள் வேலைக்காரனான எனது பிழையைப் பொறுத்தருள வேண்டும். உலகில் பிழை செய்யாதவன் எவனுமில்லை" என்றனன்.

இப்படி சுக்கிரீவன் கூறுகையில் லக்ஷ்மணன் சந்தோஷமுற்றவனாகி "வானரர் கோவே! உனது நட்பினால் ராமன் தனது எண்ணம் ஈடேறப்பெற்று சீக்கிரத்தில் யுத்தத்தில் தனது விரோதிகளைக் கொல்லப்போகிறான். மேலும் நீ பலத்திலும் பராக்கிரமத்திலும் ராமனுக்குச் சமானமாகையால் உன்னைத் துணையாக எமக்கு தேவதைகள் கொடுத்தார்களேயன்றி வேறுவிதமாக உன்னைப்போன்றவனைப் பெறுவது சாத்தியமன்று. வீரா! நீ உடனே என்னைப் பின்பற்றி, மனைவியைப் பறிகொடுத்துப் பரிதபிக்கின்ற உன் நண்பனான ராமனை சமாதானப்படுத்துவாயாக. ராமன் துக்கத்தினால் வருந்திப் புலம்பும் வார்த்தைகளைக் கேட்டதனால் நான் உன்னைக் கோபிக்க நேர்ந்தது. இதை நீ மனதில் வைக்காமல் பொறுத்துக்கொள்வாயாக" என்றனன்.

முப்பத்தாறுவது ஸர்க்கம் முற்றிற்று.

## முப்பத்தேழாவது ஸர்க்கம்

### சுக்கிரீவன் சமஸ்த வானரர்களையும் வரவழைத்தல்.

லக்ஷ்மணன் இங்ஙனம் சொல்லுகையில் சுக்கிரீவன் அருகில் நின்ற அனுமானைப் பார்த்து "மகேந்திர பர்வதம், ஹிமவத் பர்வதம், விந்திய பர்வதம், கைலாச பர்வதம், மந்தர பர்வதம் ஆகிய இவ்வைந்து பர்வதங்களிலும், மேல் திசையில் சமுத்திர தீரத்திலுள்ள உதயபர்வதத்திலும், அஞ்சனம், மேரு, தூம்ரம், மகாருணம் முதலிய பர்வதங் களிலும் வசிக்கும் சமஸ்த வானரவீரர்களையும் இன்னும் இப்பூமண்டலத்திலுள்ள இதர விடங்களிலிருக்கும் வான ரோத்தமர்களையும் நீ சீக்கிரத்தில் வரவழைப்பாயாக. அவர் களை யழைத்துவர வானரத்தூதுவர்களை ஆங்காங்கு அனுப்பு வாயாக. நூறுயிரம்கோடி வானரர்கள் புறப்பட்டு உலகி லுள்ள சமஸ்த வானரர்களையும் அழைத்துக்கொண்டு வருவ தற்காக நாற்றிசைகளுக்கும் போவார்களாக" என்றனன்.

அனுமான் அவ்விதமே வானரர்களை சுக்கிரீவனது கட் டளைப்படி அனுப்பிவைத்தனன். தாழாமல் அந்தக் கட்டளை யின்படி நடக்கத்தவறின் கொடியதண்டனை கிடைக்குமென் றஞ்சி சமஸ்த வானரர்களும் தூதுவர்கள் வந்து சொன்ன வுடன் கூட்டங் கூட்டமாகக் கிஷ்கிந்தையை அடைந்தனர்.

அஞ்சன பர்வதத்தினின்றும் மூன்று கோடி வானரர் களும், அஸ்த பர்வதத்திலிருந்து பத்துகோடி வானரர் களும், கைலாச சிகரத்தினின்று ஆயிரம்கோடி வானரர் களும், ஹிமவத் பர்வதத்திலிருந்து பத்துகோடிபேர்களும், விந்தியமலையினின்று பலவாயிரம் கோடிபேர்களும் வந்து சேர்ந்தனர்.

க்ஷீரசமுத்திர தீரத்திலிருந்தும், கமலவனத்திலிருந் தும், நாரிகேள வனத்திலிருந்தும் கணக்கிட முடியாத

பலசாலிகளான பலகோடி நூறாயிரம் வானரர்கள் வந்து குழுமி னர். முன்பு நலனால் அனுப்பப்பட்டுச் சென்ற வானர வீரர் கள் ஹிமவத் பர்வதத்தில் மிகவும் பிரசித்தமான ஓர் பெரிய மரத்தைக் கண்டனர். ரமணீயமான அவ்விடத்தில் முன்பு மகேச்வர யாகம் ஒன்று நடத்தப்பட்டது. அவ்விடத்தில் ஹோமம் செய்தபொழுது கீழே விழுந்த நெய் முதலிய ஹவிஸ்ஸுக்களால் முளைத்தவைகளும் அமிருதம்போன்ற ருசியுடையவைகளுமான பழங்களையும் வேர்களையும் அங் குள்ள திவ்விய ஔஷதிகளையும் (மூலிகைகள்) எடுத்துக் கொண்டு சுக்கிரீவனுக்குக் காணிக்கையாகக் கொடுக்க விரும்பி னர். பிறகு பூமியிலுள்ள சமஸ்த வானரர்களையும் அழைத்துக்கொண்டு கிஷ்கிந்தைக்கு வந்துசேர்ந்தனர். சுக்கிரீவன் அவர்களால் கொடுக்கப்பட்ட காணிக்கைகளை யெல்லாம் அங்கீகரித்துச் சந்தோஷமுற்றனன்.

முப்பத்தேழாவது ஸர்க்கம் முற்றிற்று

---

## முப்பத்தெட்டாவது ஸர்க்கம்

### சுக்கிரீவனும் லக்ஷ்மணனும் ராமனிடம் போதல்.

உடனே லக்ஷ்மணனும் சுக்கிரீவனும் வானரர்களால் கொண்டுவரப்பட்ட அழகிய பல்லக்கிலேறிக்கொண்டு தலை யின்மேல் வெண்கொற்றக் குடை விளங்கவும், நாற்புறங்களி லும் வானரர்கள் சாமரங்கள் வீசவும், சங்கத் தொனிக ளுடனும் பேரி வாத்திய முழக்கங்களுடனும் ராமனிருக்கு மிடத்திற்குப் போயினர்.

சுக்கிரீவன் லக்ஷக்கணக்கான வானரர்களால் சூழப் பெற்றுக் கைகூப்பியவண்ணம் சாஷ்டாங்கமாக ராமனது சர ணங்களில் வீழ்ந்து நமஸ்கரித்தனன். ராமன் அவனை எழுந் திருக்கச் செய்து பிரீதியால் ஆலிங்கனம் செய்து தனதரு

கில் உட்காரவைத்தனன். பிறகு அவனை நோக்கி "நண்பா! நீ சொன்ன கெடுவின்படி வர்ஷா காலம் சென்று சரத் ருதுவும் வந்தது. யுத்தத்திற்குப் பிரயத்தனம் செய்யவேண்டிய காலம் வந்துவிட்டதாகையால் நீ செய்யவேண்டிய காரியத்தைக் குறித்து உனது மந்திரிகளான வானரர்களோடு ஆலோசிப்பாயாக" என்றனன்.

சுக்கிரீவன் ராமனைப் பார்த்து "ராஜாதி ராஜனே! நான் நீ செய்த உபகாரத்தை மறந்துவிடவில்லை. உன் காரியத்தின் பொருட்டு உலகிலுள்ள சமஸ்தமான வானரர்களையும், வீரசூரர்களான கரடிகளையும், கொண்டை முசுக்களையும் வரவழைத்திருக்கிறேன். ஆயிரம், லக்ஷம், கோடி, அற்புதம், கர்வம், மத்தியம், சமுத்திரஸங்கியம் முதலிய கணக்கிட்டுச் சொல்லமுடியாத மகாபலிஷ்டர்களும் சூரர்களுமான வானரவீரர்கள் உன்காரிய நிமித்தமாக வந்து குழுமியிருக்கின்றனர். அவர்கள் நிச்சயமாக ராவணனை பந்துக்களோடு கூட யுத்தத்தில் கொன்று சீதையைக் கொண்டுவந்து உன்னிடம் சேர்ப்பிக்க வல்ல மகாதீரர்கள்" என்றனன்.

இதைக்கேட்ட ராமன் மனமகிழ்ந்து மிகுந்த உத்ஸாகமடைந்தனன்.

முப்பத்தெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## முப்பத்தொன்பதாவது ஸர்க்கம்

### சமஸ்த வானர சைன்னியங்களும் வந்து கூடுதல்.

இங்ஙனம் உத்ஸாகம் கொண்ட ராமன் மனவருத்தம் நீங்கப்பெற்று சுக்கிரீவனைக் கட்டியணைத்து அவனை நோக்கி "நண்பனே! நீ செய்நன்றி மறவாத உத்தமசீலன் என்பதை நான் நன்கறிவேன். இனி உன் சகாயத்தினால் சத்துருக்களை

எளிதில் வெல்வேன். முன்பு இந்திரனுக்குத் தெரியாமல் புலோமனது புத்திரியாகிய சசீதேவியை அவனது அனுமதியால் அனுஹ்லாதனென்பவன் அபகரித்தாற்போல் கொடிய செய்கையுள்ள ராவணன் என்னை வஞ்சித்துச் சீதையைக் கொண்டுபோயினன். சசீதேவியை அபகரிப்பதற்கு அநுமதியளித்த புலோமனை இந்திரன் வதை செய்தாற்போல் சீக்கிரத்தில் நானும் ராக்ஷசப் பயலான ராவணனை எனது பாணங்களால் வதைக்கப் போகிறேன்" என்றனன்.

அச்சமயம் ஆகாயத்தில் பெருந் தூள் கிளம்பிற்று. பூமியடங்கலும் மலைகளோடும் வனங்களோடும் நடுக்கமுற்றது. பிறகு மலைபோன்ற உருவமுடையவர்களும், கூரான கோரப் பற்களையுடையவர்களும் மகாபலிஷ்டர்களுமான வானரவீரர்கள் கணக்கின்றி வந்து கூடினர்.

சதபலி என்னும் வானரவீரன் மேருமலையில் வசிக்கும் பதினாயிரம் கோடி வானரர்களால் சூழப்பட்டு வந்து புலப்பட்டனன். தாரையின் தந்தையான சுஷேணன் மற்றொரு பதினாயிரங் கோடி வானரர்களுடன் வந்து தோன்றினன்.

சுக்கிரீவனுக்கு மாமனும் ருமைக்குத் தந்தையுமான தாரன் என்பவன் ஆயிரங்கோடி வானரர்களுடன் வந்து சேர்ந்தனன். அனுமானுடைய தந்தையான கேசரி என்னும் வானரவீரன் அநேகமாயிரம் வானர சேனைகளுடன் வந்து சேர்ந்தனன். கொண்டை முசுக்களுக்கெல்லாம் அரசனான கவாக்ஷன் என்பவன் ஆயிரங்கோடி வானரர்களை அழைத்து வந்தனன்.

பிறகு தூம்ரன், பனஸன், நீலன், கவயன், தரீமுகன், அச்வனி தேவதைகளின் புதல்வர்களான இரண்டு வீரர்கள், கஜன், கரடிகளுக்குத் தலைவனான ஜாம்பவான், ருமண்வான், கந்தமாதன், இளவரசனான அங்கதன், இந்திரஜானு, ரம்பன்,

துர்முகன், அநுமான், நலன், ததிமுகன், சரபன், குமுதன் முதலியோர் ஒவ்வொருவரும் கோடிக்கணக்கான வானரவீரர்களை அழைத்துக்கொண்டுவந்து சுக்கிரீவனை மகிழச்செய்தனர். அனைவரும் சுக்கிரீவனைச் சுற்றி அணிவகுத்து நின்றனர்.

அவ்வானர வீரர்கள் மிகுந்த சந்தோஷத்துடன் பலவிதமான சிம்ம நாதங்களைச்செய்து தம்தம் தலைகளை மேலெடுத்துக் காட்டி சுக்கிரீவனுக்குத் தமது வரவைத் தெரிவித்து அவனைக் கைகூப்பி வணங்கினர். சுக்கிரீவன் அவர்களைத் தானும் கைகூப்பிய வண்ணம் வரவேற்று அனைவரையும் ராமனுக்கே அர்ப்பணம் செய்து அவரவர்களை உரிய இடங்களில் இருக்குமாறு கட்டளையிட்டனன்.

முப்பத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நாற்பதாவது ஸர்க்கம்

### சீதையைத் தேடும்பொருட்டு வினதன் என்பவனைக் கீழ்த்திசைக்கனுப்புதல்.

பிறகு சுக்கிரீவன் ராமனைப் பார்த்து "ராமா! இதோ கோடானு கோடிக்கணக்கான வானரவீரர்கள் உன் காரியத்தின் பொருட்டு வந்திருக்கின்றனர். இவர்களனைவரும் உன் வேலைக்காரர்களேயாவர். உன் இஷ்டப்படி நீயே இவர்களுக்குக் கட்டளையிடுவாயாக" என்றனன்.

ராமன் கைகளை நீட்டி சுக்கிரீவனை அழுந்தக் கட்டியணைத்து "ஆருயிர்நண்பனே! சீதை பிழைத்திருப்பதும் இல்லாததும் ராவணன் வசிக்குமிடமும் தெரியவேண்டும். பிறகு செய்யவேண்டிய காரியத்தைப்பற்றி நீயும் நானும் ஆலோசிப்போம். வானரர் தலைவனே! இது விஷயமாக நானாவது லக்ஷ்மணனாவது நியமிப்போமல்லோம். நீயே

இக்காரியத்தை சாதிப்பவன். என் காரியம் இன்னதென்பது உனக்கே தெரியும். நீ எனக்கு லக்ஷ்மணனைப்போல் இரண்டாவது நண்பனும் சகோதரனுமாவாய்'' என்றனன்.

உடனே சுக்கிரீவன் வினதனென்னும் வானர யூத பதியை விளித்து "நீ லக்ஷம் வானரர்களை யழைத்துக் கொண்டு, மலைகளும் காடுகளும் நிறைந்து விளங்கும் கீழ்த் திசையைக் குறித்துச் செல்வாயாக. அங்குள்ள மலைகளிலும், வனங்களிலும், நதிகளிலும் சீதையைத் தேடிப் பார்ப்பாயாக. ரமணீயமான கங்கை, யமுனை, ஸரஸ்வதி, சோண முதலிய நதி தீரங்களிலும், காசி, கோசலம், மகதம், அங்கம், வங்கம், கலிங்கம் முதலிய தேசங்களிலும் வெள்ளிகள் விளையும் பூமிக்கும் சென்று அந்தந்த இடங்களிலெல்லாம் சீதையைத் தேடுவாயாக.

கிராதர்கள் என்று பெயர்கொண்ட கொடிய பயங்கரமான உருவமுள்ள ஜனங்கள் வசிக்குமிடமான சமுத்திரத்தினிடையிலுள்ள மலைகளிலும் அகன்ற மந்தரமலையின் சிகரப் பிரதேசங்களிலும் சீதையைத் தேடுவாயாக. இன்னும் கீழ்த்திசையிலுள்ள சமஸ்தமான தீவுகளிலும் சென்று சீதையைத் தேடுவாயாக. பொன் விளையும் பூமிகள் விளங்கப் பெற்ற சுவர்ணரூப்யமென்னும் தீவிற்குச் சென்று தேடிய பிறகு, யவத்வீபத்தைக் கடந்து தேவதானவர்கள் உலாவப் பெற்று கொடிமுடிகளால் ஆகாயத்தை அளாவியிருக்கும் சிசிர பர்வதத்தை யடைந்து அதிலுள்ள குகைகளிலெல்லாம் சீதையைத் தேடுவீர்களாக.

பிறகு உப்பு சமுத்திரத்தைக் கடந்து அதன் மறுகரையில் சித்தசாரணர்கள் வசிக்கும் பிரதேசமெல்லாம் சீதையைத் தேடிப் பார்ப்பீர்களாக. அதன் பிறகு இக்ஷு சமுத்திரத்தை நீங்கள் கடக்கவேண்டும். அதில் அசுரர்கள் பிரம

தேவனது வரத்தின் மகிமையால் எப்பொழுதும் நிழலைப் பிடித்து இழுத்து மனிதர்களை விழுங்குவார்கள். இன்னும் அதில் மகா பயங்கரமான பெரிய சர்ப்பங்கள் நிறைந்திருக்கும். ஆகையால் நீங்கள் அந்த இக்ஷு சமுத்திரத்தை வெகு ஜாக்கிரதையாகத் தாண்டி மது சமுத்திரத்தையடைந்து அதன் கரையிலுள்ள விசாலமான ஓர் முள்இலவ மரத்தை யடையவேண்டும். அதன்கீழ் விசுவகர்மாவினால் நிருமிக்கப்பட்ட கைலாச மலைபோல் வெளுத்த நிறமுடைய கருத்மானுடைய வீட்டைக் காண்பீர்கள். அப்பிரதேசத்தில் மந்தேஹர் என்கிற கொடிய ராக்ஷசர்கள் வசிக்கின்றனர். அவர்கள் தினந்தோறும் சூரியோதய காலத்தில் அந்தணர்கள் ஜபிக்கும் காயத்திரி மந்திரப் பிரபாவத்தினால் அடிக்கப்பட்டு சூரியனால் கொளுத்தப்பட்டு ஜலத்தில் விழுவார்கள். மீளவும் எழுந்து மலைச்சிகரங்களில் வசிப்பார்கள். நீங்கள் ஒருவராலும் தடுக்கமுடியாதவர்களாகையால் அவர்களிடம் அகப்படாமல் தயிர் சமுத்திரம், கிரௌஞ்சத்வீபம் முதலியவற்றைத் தாண்டி, பால் சமுத்திரத்தையடைந்து அதன் நடுவிலுள்ள ருஷபமென்னும் பெரிய மலையை அடையவேண்டும்.

அதில் பொன் மயமான தாதுக்களுடன் தளதளவென்று விளங்கும் வெள்ளித் தாமரைகள் விளங்கப்பெற்று ராஜஹம்சங்கள் பிரகாசிக்கப்பெற்ற சுதர்சனமென்கிற ஓர் அழகிய குளமுண்டு. அப்படிப்பட்ட பால் சமுத்திரத்தைக் கடந்த பின் தூய்நீர் சமுத்திரத்தைக் காண்பீர்கள். அதற்கு அக்கரையில் பதின்மூன்று யோசனை தூரத்தில் 'ஜாதரூபசிலம்' என்கிற பெரிய பொன்மலையொன்றிருக்கிறது. அதில் சர்ப்ப மூர்த்தியான ஆதிசேஷனைக் காண்பீர்கள். பிறகு பொன் மயமான உதயபர்வதம் காணப்படும். அதன் நுனியில் ஒரு யோசனை விஸ்தாரமுடையதும் பத்து யோசனை உயரமுடையதும் பொன்மயமுமான ஸௌமனஸமென்னும் சிகரம்

ஒன்றுளது: விஷ்ணுதேவன் மூவுலகளந்தபோது முதலடியை இச்சிகரத்தின்மேலும், இரண்டாவது அடியை மேற்றிசையின் எல்லையான ஸாவர்ணி மேருமலையின் சிகரத்திலும் இட்டனனென்று பெரியோர் சொல்லுவார்கள்.

அந்த ஸௌமனஸ சிகரத்தில் வைகானஸர் வாலகில்யர் முதலிய முனி சிரேஷ்டர்கள் இருப்பார்கள். சூரியன் உதய பர்வதத்தின்மேல்தான் விளக்கமுற்றிருப்பான். அந்த உதய பர்வதத்தின் சிகரங்களிலும், குகைகளிலும், வனங்களிலும் திரிந்து சீதையையும் ராவணனையும் தேடுவீர்களாக.

அம்மலைக்கப்பால் சூரிய சந்திரர்களின் சஞ்சாரமில்லாததால் இருளடைந்த பிரதேசமாய் இருக்கும். நான் சொல்லாத இதர விடங்களும் கிழக்குத் திசையில் இருப்பதால் நீங்கள் அவ்விடங்களுக்கும் சென்று சீதையையும் ராவணனையும் தேடவேண்டும். ஒரு மாதத்திற்குள் நீங்கள் சீதையின் இருப்பிடத்தையறிந்து வந்து சேரவேண்டும். அந்த கெடு தவறிவரும் வானரர்கள் மரண தண்டனைக்கு உள்ளாவார்கள்" என்று கூறினன்.

நாற்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நாற்பத்தோராவது ஸர்க்கம்.

### தென்திசைக்கு அனுமான் முதலியவர்களை அனுப்புதல்.

பிறகு சுக்கிரீவன் அனுமான், நீலன், ஜாம்பவான், சுஹோத்திரன், சராரி, சரகுல்மன், கஜன், கவாக்ஷன், கவயன், சுஷேணன், ருஷபன், மைந்தன், துவிதன், விஜயன், கந்தமாதன், உல்காமுகன், அஙங்கன், அங்கதன் முதலான வானர வீரர்களைத் தென்திசையை நோக்கிப் போகும்படி கட்டளையிட்டனன். அவர்களுடன் சுக்கிரீவன் எங்கும் தடையின்றி

வேகமாகச் செல்லும் வல்லமையுடைய பெரிய வானர சைன்னியத்தை சகாயமாகச் செல்லும்படி ஆஞ்ஞாபித்தனன்.

சுக்கிரீவன் அவர்களை நோக்கி 'வானரோத்தமர்களே! நீங்கள் விந்திய பர்வதத்திலும் , நருமதை, கோதாவரி, கிருஷ்ணை, வரதா, மேகலா, உத்கலா முதலிய நதிதீரங்களிலும், தசார்ண தேசத்திலுள்ள நகரங்களிலும், குதிரைகள் நிறைந்த அவந்தி பட்டணத்திலும், விதர்ப்பம், ரிஷிகம், மாஹிஷிகம், வங்கம், கலிங்கம், காசி முதலிய தேசங்களிலும், தண்டகாரணியம், கோதாவரிதீரம், ஆந்திரம், புண்ட்ரம், சோழபாண்டியம், கேரளம் முதலிய தேசங்களிலும் ஆங்காங்குள்ள மலைகள் குகைகள் முதலியவற்றிலும் சீதையைத் தேடிப் பார்க்கவேண்டும்.

பிறகு ஸஹ்யபர்வதம், காவேரி முதலிய பிரதேசங்களைக் கடந்து அகஸ்திய முனிவர் வீற்றிருக்கும் சிகரத்தையுடைய மலயபர்வதத்தை அடைவீர்கள். அவரை வணங்கி ஆசீர்வாதம் பெற்று தாம்மிரபர்ணியைக் கடப்பீர்களாக. பிறகு தெற்கு திக்கில் பிரயாணம் செய்து சமுத்திர தீரத்தையடைவீர்கள். அதைத் தாண்டும் விஷயத்தைப் பற்றி நன்கு ஆலோசித்து நிச்சயித்துக்கொள்வீர்களாக. அந்த சமுத்திரத்தின் நடுவில் இக்கரையில் நூறு யோசனை விஸ்தீர்ணமுடையதும் மனிதர்களுக்குப் போக முடியாமல் மிக்க விளக்கமுற்றதுமாகிய ஓர் தீவு இருக்கிறது. அவ்விடத்தில் மாத்திரம் சீதையை வெகு ஜாக்கிரதையாயும் எல்லாப் பிரயத்தனங்களோடும் தேடிப் பார்க்கவேண்டும். ஏனெனில் அதுவே துர்ப்புத்தியுள்ள ராவணனது வாசஸ்தானமான லங்கை என்னும் தீவாகும்.

அந்த லங்கைத் தீவைத் தாண்டி நூறுயோசனை தூரத்தில் சமுத்திரத்தில் புஷ்பிதம் என்னும் பர்வதத்தை

அடைவீர்களாக. அது ஆகாயத்தை யளாவிய உயர்ந்த இரண்டு சிகரங்களையுடையது. தக்ஷிணாயனத்தில் சிவந்திருக்கும் சிகரத்தில் சூரியனும், வெள்ளி மயமாயிலங்கும் மற்றொரு சிகரத்தில் சந்திரனும் விளங்குவார்கள். வானரர்களே! கெட்ட நடத்தையுடையவர்களுக்கும் நாஸ்திகர்களுக்கும் அம்மலை புலப்படாது. நீங்கள் அம்மலையை வணங்கி அதில் சீதாதேவியைத் தேடிப் பார்ப்பீர்களாக.

பிறகு அங்கிருந்து சூரியவந்தம், வைத்யுதம், குஞ்சரம், முதலிய பர்வதங்களைக் கடந்து செல்லவேண்டும். குஞ்சர பர்வதத்தில் விசுவகர்மாவினால் நிருமிக்கப்பட்ட அகஸ்திய முனிவரது அழகிய மாளிகை யொன்று விளங்கும். இன்னும் அங்கு சர்ப்பங்களுக்கு வாசஸ்தானமான போகவதி என்கிற பட்டணம் இருக்கிறது. அதில் கொடிய விஷமுள்ள பயங்கரமான சர்ப்பங்கள் வசிக்கின்றன. அந்தப் பட்டணமெங்கும் மிகவும் ரகசியமாயிருக்கும் பிரதேசங்களிலெல்லாம் சீதையைத் தேடவேண்டும்.

பிறகு எருதைப்போன்ற உருவமுள்ள 'ரிஷபம்' என்று பெயருள்ள ஓர் பெரிய மலையைக் காண்பீர்கள். அதுவே பூமியின் கடைசி பாகமாகும். அதில் உள்ள ஏராளமான சந்தன மரங்களை நீங்கள் கையினால்கூடத் தொடலாகாது. ஏனெனில் பயங்கரமான உருவமுடைய 'ரோஹிதர்கள்' என்னும் கந்தர்வர்கள் அவற்றிற்குக் காவல் இருக்கின்றனர்.

இன்னும் அம்மலையில் சைலூஷன், கிராமணி, சிக்குரு, தப்பரன், பப்ரு முதலிய ஏழு கந்தருவ அரசர்கள் சூரியனைப் போன்ற ஒளியுடன் பிரகாசித்துக்கொண்டிருப்பார்கள். தவிர, புண்ணிய கர்மங்களால் சுவர்க்காதி புண்ணிய லோகங்களைவென்ற மகாபுருஷர்கள் மகா தேஜஸ்ஸுடன் பிரகாசித்துக்கொண்டிருப்பார்கள்.

அதற்குமேல் மிகவும் பயங்கரமான பித்ர்லோகமுளது. அது ஒருவராலும் புகக்கூடாத பேரிருள் மூடப்பெற்ற யமனுடைய ராஜதானியாகும். அதற்குமேல் உங்களால் செல்லமுடியாது. இதுவரை நான் சொன்ன விடங்களைத் தவிர, என்னுல் சொல்லப்படாத இதரவிடங்களிலும் தக்க முயற்சியுடன் நீங்கள் சீதையைத் தேடிப் பார்க்கவேண்டும்.

எவன் ஒரு மாதத்திற்குள் திரும்பிவந்து 'கண்டேன் சீதையை' என்று சொல்லுவானே, அவனே என் ஆருயிர் நண்பனும் பந்துவுமாவான். ஒருவராலும் இதுவரையில் அடையப்படாத மேலான ஐசுவர்யங்களையும் சுகங்களையும் அவன் பெறுவான்" என்றனன்.

நாற்பத்தோராவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நாற்பத்திரண்டாவது ஸர்க்கம்.

## சுஷேணன் முதலிய வானரர்களை மேற்றிசைக்கு அனுப்புதல்.

பிறகு சுக்கிரீவன் சுஷேணனைப் பார்த்துக் கைகூப்பி நமஸ்கரித்தவண்ணம் (சுஷேணன்=சுக்கிரீவனது மாமன்) 'மரீசிமாமுனிவரின் மூத்த குமாரனை மாரீசன் என்னும் வானரனையும் அவனது தம்பிமார்களான மாரீசர்கள் என்பவர்களையும் மேற்குத்திசைக்கு அனுப்பமுயன்று "வானர சிரேஷ்டர்களே! நீங்கள் சுஷேணனைத் தலைவனாகக்கொண்டு இரண்டு லக்ஷம் வானரர்களோடு சென்று மேற்குத் திக்கில் சீதையைத் தேடுவீர்களாக.

நீங்கள் சுராஷ்டிரம், பாஹ்லிகம், சூலம் முதலிய பல தேசங்களிலும் நகரங்களிலும், விசாலமான புந்நாக வனத்திலும், குக்ஷிதேசத்திலும், தாழைவனங்களிலும் சென்று சீதையைத் தேடுவீர்களாக. மார்க்கத்திலுள்ள சகல மலை

களிலும் நதிகளிலும், வனங்களிலும், பாலை வனங்களிலும், இன்னும் மேற்குத்திக்கு முழுவதும் தேடிப்பார்த்து, பிறகு மேற்கு சமுத்திரத்தை அடையவேண்டும். அங்கு சமுத்திரக் கரையோரத்திலிருக்கும் மலைகளிலும், வனங்களிலும் ராவணனது இருப்பிடத்தையும் சீதையையும் நன்கு தேடிப் பார்க்கவேண்டும்.

பிறகு ஜடபுரம், அநந்தபுரம், அங்கலோபம் முதலிய பட்டணங்களிலும், அலக்ஷிதமென்னும் பெயருடைய பெரிய காட்டிலும் வெகுஜாக்கிரதையாக சீதையைத் தேடவேண்டும். சிந்துநதி சமுத்திரத்தோடு கலக்குமிடத்தில் நூறு சிகரங்களையுடையதும் மிகவும் உயர்ந்ததுமான 'ஹேமகிரி' என்னும் ஓர் பெரிய பர்வதம் இருக்கிறது. அதன் சாரல்களில், இறகுடைய சிம்மங்கள் சஞ்சரிக்கும். மிகவும் உயர்ந்த அதன் சிகரங்களில் நன்கு சீதையைத் தேடுவீர்களாக.

பிறகு சமுத்திரத்தில் கொஞ்சதூரம் செல்கையில் அதன் நடுவில் பொன்மயமான 'பாரியாத்திரம்' என்னும் பர்வதத்தின் சிகரத்தைக் காண்பீர்கள். அதிலுள்ள காய் கிழங்குகளையும் பழங்களையும் நீங்கள் தொடலாகாது. ஏனெனில் மிகவும் பயங்கரமான விகாரரூபம்கொண்ட நான்கு கோடி கந்தர்வர்கள் அவற்றைக் காவல் செய்கின்றனர். அந்தவிடத்தில் வெகுஜாக்கிரதையாக சீதையைத்தேடுவீர்களாக.

அந்த சமுத்திரத்தில் பின்னும் சிறிதுதூரம் மேற்கில் செல்வீர்களாயின், வைடூரிய மணிபோன்ற காந்தியும், வஜ்ஜிர மணிபோன்ற கடினமும் உடைய 'வஜ்ஜிரகிரி' என்னும் பர்வதம் புலப்படும். நூறுயோசனை உயரமுள்ள அதன் சிகரங்களிலும் குகைகளிலும் சென்று சீதையைத் தேடிப் பார்க்கவேண்டும்.

பிறகு உப்பு சமுத்திரத்தின் மூன்று பாகங்களைக் கடந்து நான்காவது பாகத்திலுள்ள சக்கரவந்தமென்னும்

பர்வதத்தை அடைவீர்கள். அதில் முன்பு விசுவகர்மாவினால் ஆயிரம் இலைகளையுடைய சக்கராயுதம் நிருமிக்கப்பட்டிருந்தது. அம்மலையில் முன்பொருகால் விஷ்ணு தேவன் புருஷோத்தம ரூபத்துடன் அவதாரம் செய்து 'ஹயக்கிரீவன்' என்னும் தானவனைக்கொன்று சக்கராயுதத்தையும், பஞ்சசனனென்னும், தானவனைக்கொன்று 'பாஞ்சசன்னியம்' என்னும் சங்கையும் கைப்பற்றினன். அம்மலையின் தாழ்வரைகளிலும் குகைகளிலும் ராவணனையும் சீதையையும் தேடவேண்டும்.

பிறகு அறுபது யோசனை தூரத்தில் 'வராஹம்' என்னும் பர்வதம் உளது. அதில் நரகாஸுரன் வசிக்கும் 'பிராக்ஜோதிஷபுரம்' என்ற பட்டணம் இருக்கின்றது. அம்மலையிலுள்ள சிகரங்களிலும் குகைகளிலும் தாழ்வரைகளிலும் சீதையைத் தேடுவீர்களாக.

அதன்பிறகு தேவேந்திரனால் பரிபாலிக்கப்படும் 'மேகம்' என்னும் பர்வதத்தைக்கடந்து அறுபதினாயிரம் வேறு பர்வதங்களைக் காண்பீர்கள். அவற்றின் நடுவிலுள்ள 'ஸாவர்ணி மேரு' வென்னும் மலைக்கு சூரியனது அருளினால் பொன்மயமான மரங்களும் தேவ சித்த கந்தர்வ தானவ சாரணர்கள் வாசம்செய்யும் பாக்கியமும் ஏற்பட்டிருக்கின்றது. அந்த ஸாவர்ணிமேருவுக்குப் பதினாயிரம் யோசனை தூரத்தில் அஸ்தமய பர்வதம் இருக்கின்றது. சூரியன் அப்பதினாயிரம் யோசனை தூரத்தை ஒரே நாழிகையில் கடந்து சீக்கிரத்தில் அஸ்தமய பர்வதத்தை யடைவான். அதன் சிகரத்தில் விசுவகர்மாவினால் நிருமிக்கப்பட்ட வருணதேவனது அழகிய மாளிகை காணப்படும். நீங்கள் அந்தப் பிரதேசங்களிலெல்லாம் ராவணனையும் சீதையையும் தேடிப் பார்க்கவேண்டும்.

வானரர்களே! அஸ்தகிரிக்கு மேற்கில் எவராலும் செல்லமுடியாது. அதன்மேல் சூரியனது ஒளி இல்லாமையால்

இருள் மூடி இருக்கும். நீங்கள் அந்த அஸ்தமய பர்வதம் வரை சென்று சீதையைத் தேடி ஒருமாதத்திற்குள் திரும்பி வந்து அவளிருக்குமிடத்தை எனக்குத் தெரிவிக்கவேண்டும். தவறினால் மரண தண்டனை அடைவீர்கள்" என்று கட்டளையிட்டனன்.

உடனே, சுஷேணன் முதலான வானரர்கள் செலவு பெற்றுக்கொண்டு வருணனது திக்கான மேற்குத் திசையை நோக்கிச் சென்றனர்.

நாற்பத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நாற்பத்துமூன்றாவது ஸர்க்கம்.

### சதவலி முதலிய வானரர்களை வடதிசைக்கு அனுப்புதல்.

பிறகு சுக்கிரீவன் சதவலியைப் பார்த்து "நீ உன்னைப் போல் பராக்கிரமமுடையவர்களான லக்ஷம் வானரர்களைக் கூட்டிக்கொண்டு இமயமலையினால் அழகு செய்யப்பட்ட வட திசைக்குச் சென்று சீதாதேவியைத் தேடுவாயாக" என்று கூறி அந்த வானரர்களை நோக்கி "நீங்கள் வடதிசையிலுள்ள மிலேச்சம், புலிந்தம், சூரசேனம், பிரஸ்தலம், இந்திரப்ரஸ்தம் முதலிய பரததேசங்களிலும், தக்ஷிண குருதேசம், மத்ரதேசம், காம்போஜம், யவனம், சகதேசம், ஆரட்டதேசம், பாஹ்லிகம், ரிஷிகதேசம், பௌரவம், டங்கணம், சீனம், பரமசீனம், விஹாரம், தரதம் முதலிய தேசங்களிலும் இமயமலைகளிலும் சீதையை வெகு பிரயாசத்துடன் சென்று தேடவேண்டும்.

பிறகு வெள்ளலத்திக் காடுகளிலும், பத்மகவனங்களிலும் தேவதாரு வனங்களிலும் இடையிலுள்ள மலைகள் நதிகள் குகைகள் முதலியவற்றிலும் ராவணனையும் சீதையையும் தேடவேண்டும். அதன் பிறகு காலபர்வதத்தை

யடைந்து அதில் சீதையைத் தேடி உடனே சுதர்சனபர்வதத்திற்குப் போவீர்களாக. பிறகு தேவசகபர்வதத்தை யடைந்து அதிலுள்ள சிகரங்களிலும் குகைகளிலும் சீதையைத் தேடுவீர்களாக. அம்மலையைக் கடந்தபின் நூறு யோசனை விஸ்தீரணமுடைய ஓர் சூனியமான பிரதேசம் உளது. அங்கு மலைகளாவது நதிகளாவது மரங்களாவது கிடையாதாதலால் எவ்வித ஜந்துக்களும் வசிக்கமாட்டா. மகா பயங்கரமான அப்பிரதேசத்தை நீங்கள் சீக்கிரத்தில் கடந்து வெளுத்து விளங்கும் கைலாச மலையைக் கண்டு மகிழ்வீர்கள்.

அக்கைலாச மலையில் பொன் வேலைகள் செய்யப்பெற்று அழகான குபேரனது மாளிகை உளது. அதனருகில் தாமரைகள் நிறைந்து ரமணீயமான 'மானசம்' என்னும் ஓர் தாமரை யோடை இருக்கிறது. அதில் ஹம்சங்களும் நீர்க்காகங்களும் நிறைந்திருக்கும். அப்ஸர ஸ்திரீகள் கும்பல் கும்பலாக விளையாடிக்கொண்டிருப்பார்கள். அக்கைலாச மலையின் தாழ்வரைகளிலும் குகைகளிலும் திரிந்து ராவணனையும் சீதையையும் தேடவேண்டும்.

பிறகு கிரௌஞ்ச பர்வதம் மைநாகபர்வதம் முதலியவை காணப்படும். அவற்றின் தாழ்வரைகளிலும் குகைகளிலும் சிகரங்களிலும் சீதையையும் ராவணனையும் தேடுவீர்களாக. அதன் பிறகு தவச்சிரேஷ்டர்களான வைகானசர்களும் வாலகில்யர்களும் வசிக்கின்ற ஓர் ரமணீயமான ஆச்சிரமத்தை அடைவீர்கள். அம்முனிவர்களை நீங்கள் பக்திபூர்வகமாக நமஸ்கரித்து வணக்கத்துடன் சீதாதேவியின் விருத்தாந்தத்தை வினவ வேண்டும்.

அவ்வாச்சிரமத்தில் பொன் தாமரைகள் நிறைந்த வைகானசமென்னும் ஓர் அழகிய தடாகம் இருக்கிறது. குபேரனது பட்டத்து யானையாகிய சார்வபௌமமென்னும்

பக்கஜமும் தன் பேடைகளுடன் கூடி எப்பொழுதும் அங்கு விளையாடிக்கொண்டிருக்கும். அப் பிரதேசத்தைக் கடந்த பின் 'சைலோதை' என்னும் ஓர் நதி இருக்கிறது. அதன் இருகரைகளிலும் கீசகங்கள் (காற்று வீசும்பொழுது சப்திக்கும் தன்மையுள்ளவை) என்னும் மூங்கில்கள் மிகவும் உயர்ந்து ஒன்றோடொன்று பின்னிக்கொண்டிருக்கையால் சித்தர்கள் அவைகளின் வழியாக அக்கரைக்குப்போவதும் வருவதுமாய் இருப்பார்கள்.

பிறகு புண்ணியம் செய்தவர்களுக்கிருப்பிடமான உத்தர குரு தேசம் இருக்கிறது. அதில் வெகு ரமணீயமான பொற்றாமரைகள் நிறைந்த குளங்கள் விளங்கும். நீல வைடூரிய வர்ணமுடைய தாமரைக்கொடிகளால் அலங்கரிக்கப் ஜலம் நிறைந்திருக்கப்பெற்ற நதிகள் ஆயிரக் கணக்காக இருக்கின்றன. வைரம், மரகதம், மாணிக்கம், புஷ்பராகம், வைடூரியம், நீலம், கோமேதகம், முத்து, பவழம் என்கிற நவரத்தினக் குவியல்களும் அவற்றினல் செய்யப்பட்ட மலைகளும் குன்றுகளும் ஏராளமாய் இருக்கின்றன.

அங்குள்ள மரங்களில் எக்காலத்திலும் இனிய பழவர்க்கங்களும், செடிகளில் நல்ல வாசனை வீசும் புஷ்பங்களும் விளங்கும். சில மரங்கள் நவரத்தினங்களையுடையதாய் இருப்பதால் கேட்பவர்களுக்கு அவற்றைக்கொடுக்கும். சில மரங்கள் பொன் மயமான கட்டில்களை மெத்தென்ற பஞ்சினற் செய்யப்பட்ட படுக்கைகளுடன் கொடுக்கின்றன.

மேலும் அந்த உத்தர குரு தேசத்தில் சில மரங்கள் கேட்கும் புண்ணிய சீலர்களுக்கு, மனத்திற்கினிய பூமாலைகளையும், நானுவித பக்ஷணங்களையும், குணம் யௌவனம் அழகு இவற்றையுடைய மடந்தையர்களையும் கொடுக்கின்றன.

அங்கு கந்தர்வர்களும், கின்னரர்களும், கிம்புருடர்களும் சித்தர்களும், நாகர்களும், வித்தியாதரர்களும் சூரியனைப் போன்ற மிக்க ஒளியுடன் தங்கள் காதலிகளோடு விளையாடிக் கொண்டிருப்பார்கள். அங்குள்ளாரனைவரும் புண்ணியசீலர்களாகையால் உயர்ந்த ஐசுவரியங்களையும் மேலான சுகங்களையும் அநுபவித்துக்கொண்டிருப்பார்கள்.

அந்த உத்தர குருதேசத்தைக் கடந்துபோகையில் வடக்கு லவண சமுத்திரம் (உப்புக் கடல்) காணப்படும் அதன் நடுவில் சோமகிரியென்னும் ஓர் பெரிய மலை இருக்கிறது. விஷ்ணுலோகம், பிரம்மலோகம், இந்திரலோகம் முதலியவற்றிலுள்ள தேவதைகளுக்குத் தவிர மற்றவர்களுக்கு அதைப்பார்க்க முடியாது. அந்த சோமகிரியில், பிரம்மா, விஷ்ணு, ருத்திரன் முதலிய திரிமூர்த்திகளும் பிரம்மரிஷிகள் பலரால் சூழப்பெற்று வாசஞ் செய்கிறார்கள். அதற்கு மேல் வடக்கில் நீங்கள் செல்லவேண்டாம். அங்கு சூரிய சஞ்சாரமில்லாமையால் இருள் மூடி பயங்கரமாக இருக்குமாதலால் அதுவரையிலுள்ள ஸமஸ்தமான பிரதேசங்களிலும் சீதையைத் தேடி ஒரு மாதத்திற்குள் திரும்பிவிட வேண்டும். நீங்கள் குறித்த தவணைக்குள் சீதையின் இருப்பிடத்தைத் தெரிந்துகொண்டு திரும்பிவந்து என்னையும் ராமனையும் சந்தோஷமடையச் செய்வீர்களாயின் உயர்ந்த சுகபோகங்களையும் ஐசுவரியங்களையும் அடைந்து வாழ்வீர்கள்" என்றனன்.

நாற்பத்துமூன்றுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நாற்பத்துநான்காவது ஸர்க்கம்

## ராமன் அனுமானுக்கு அடையாளமாக மோதிரங் கொடுத்தல்.

அனுமான் காரியத்தைத் தப்பாமல் சாதிப்பவனென்று நிச்சயித்த சுக்கிரீவன் அவனை நோக்கி "வாயு குமாரனே!

பூமி, ஆகாயம், வாயுமண்டலம், சுவர்க்கம், சமுத்திரம் முதலிய எல்லாவற்றிலும் நீ தடையின்றி சஞ்சரிக்க வல்லவன். அசுரலோகம், கந்தர்வலோகம், தேவலோகம், சமுத்திரங்கள் முதலிய எல்லாப் பிரதேசங்களும் உனக்குத் தெரிந்தவைகள். வீரர்களில் சிறந்தவனே! நீ ஒன்பது வியாகரணங்களையறிந்த பண்டிதன். பலமும் புத்தியும் பராக்கிரமமும் நீதியும் உன்னிடத்திலிருப்பதுபோல் மற்றொருவரிடத்திலும் இராது. ஆகையால் சீதையைப் பெறும்படியான பிரயத்தனத்தை நீயே செய்து காரியத்தை நிறைவேற்ற வேண்டும்" என்றனன்.

இவ்வார்த்தைகளைக் கேட்ட ராமன் அநுமானுடைய குண விசேஷங்களையும் புத்தி சமத்காரங்களையும் முன்னமே அறிந்தவனாகையால் அவனிடத்தில் மிக்க நம்பிக்கைகொண்டு அவனை நோக்கி "வானரோத்தமனே! சீதாதேவியை நிச்சயமாக நீயே காணப்போகிறாயென்று எனக்கு நம்பிக்கையுண்டாகிறது. அவளுக்கு அடையாளமாக இதோ என் பெயர் செதுக்கப்பட்டு மிக அழகாய் விளங்குகிற என் மோதிரத்தைக் கொண்டுபோய்க் காட்டுவாயாக. இதைக் கண்டதும் சீதை உன்னிடத்தில் சந்தேகமாவது பயமாவது உண்டாகப் பெறாமல் நீ என்னுடைய தூதனென்று தெரிந்து கொள்வாள்" என்றனன்.

அநுமான் அந்த மோதிரத்தை வாங்கித் தலையில் வைத்துக்கொண்டு ராமனைக் கைகூப்பி நமஸ்காரம் செய்து உடனே புறப்பட்டனன். அவன் பின் பெரிய வானர சைன்னியம் செல்லும்போது, அவன் மேகங்களில்லாத ஆகாயத்தில் நக்ஷத்திரக் கூட்டங்களோடு விளங்கும் சந்திரனைப்போல் விளங்கினன்.

நாற்பத்துநான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

### நாற்பத்தைந்தாவது ஸர்க்கம்

## சீதையைத் தேட அனுப்பப்பட்ட வானர சைன்னியங்கள் புறப்படல்

சுக்கிரீவன் மீண்டும் எல்லா வானரர்களையும் பார்த்து "வானரர்களே! நான் எவரெவர்களை எங்கெந்த திக்கில் எப்படி எப்படி தேடச்சொன்னேனோ அவரவர் அந்தந்த திசைகளில் அப்படி அப்படியே சென்று தேடவேண்டும்" என்றனன்.

அவ்வுத்தரவின்படியே எல்லா வானரர்களும் விட்டில் கள்போல் கணக்கின்றி நாற்றிசைகளிலும் செல்லவாரம்பித்த னர். ராமனும் ஒருமாத காலம் எப்பொழுது கழியுமென்று எதிர்பார்த்த வண்ணம் லக்ஷ்மணனுடன் கூடி ப்ரஸ்ரவண மலையிலேயே வசித்திருந்தனன்.

அப்பொழுது வீரனை சதபலி இமயமலையினால் சூழப் பட்ட வடதிசையைக் குறித்துச் செல்லத் தொடங்கினன். வினதன் கிழக்குத் திக்கை நோக்கியும், அனுமான் தன் பரி வாரங்களுடன் தென் திசை நோக்கியும், சுஷேணன் மேற் றிசை நோக்கியும் பிரயாணமாயினர். அவ்வானரர்கள் ஒவ் வொருவரும் மிகுந்த உத்சாகத்துடன் "ராவணனைக் கொன்று சீதையைக்கொண்டு வருவோம்" என்று சொல்லிக்கொண்டே சென்றனர்.

ஒரு வானரன் மிகுந்த அட்டகாசத்துடன் "நான் ஒருவனே ராவணனை யுத்தத்தில் வென்று சீதையைக் கொண்டு வருவேன்" என்றனன். மற்றொருவன் 'ஓ வானரர் களே! நீங்கள் இவ்விடத்திலேயே நில்லுங்கள். நான் ஒருவ னாகவே சென்று ராவணனைக்கொன்று சீதையைக் கொண்டு வருகிறேன்' என்றனன். பின்னுமொருவன் 'சீதை பாதா ளத்திலிருப்பினும் நானே சென்று கொண்டு வருவேன்'

என்றனன். இன்னொருவன் 'நான் மரங்களை முறித்து சமுத்திரங்களைக் கலக்கிவிடுவேன்' என்றனன். வேறொருவன் 'நான் பத்து யோசனை தூரம் தாண்டுவேன்' என்றனன். இங்ஙனம் மிகுந்த அட்டகாசங்களுடன் பெரிய சிம்மநாதங்களைச் செய்துகொண்டே வானரர்கள் பிரயாணமாயினர்.

**நாற்பத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.**

---

## நாற்பத்தாறவது ஸர்க்கம்.

## சுக்கிரீவன் ராமனுக்கு சமஸ்த பூமண்டலமும் தனக்குத் தெரிந்த விதத்தைக் கூறுதல்.

சுக்கிரீவன் சமஸ்த பூமண்டல ஸ்திதியையும் அறிந்த விதத்தைப்பற்றி ராமன் கேட்க அவன் பின்வருமாறு கூறினன். "ராமா! முன்பு துந்துபியின் மகனான மாயாவி என்பவன் வாலியின்மேல் எதிர்த்து வரும்போது, வாலி மாயாவியை மலயபர்வதத்தின் குகைக்குள் துரத்தினன். அவனைக் கொல்லும்பொருட்டு வாலியும் பின்தொடர்ந்து போகும்போது என்னைக் குகையின் வாயிலில் காவலிருக்கும்படி ஆஞ்ஞாபித்தனன். நான் ஒரு வருடகாலம் காவலிருந்தும் வாலி வெளிவராததாலும், அக்குகையிலிருந்து ரத்தவெள்ளம் வேகமாக வரக்கண்டதாலும் எனதண்ணன் ஒருக்கால் முடிந்திருப்பானென்கிற எண்ணத்தினால், மாயாவி மறுபடி வெளிவராமலிருக்கும்பொருட்டு அக்குகையின் வாயிலை மலைபோன்ற பெருங்கல்லையிட்டு மூடிவிட்டேன்.

பிறகு கிஷ்கிந்தையை அடைந்து வாலியின் முடிவை அனைவர்க்குங்கூறி தாரையையும் ருமையையும் பெற்றுப் பெரிய வானர ராஜ்ஜியத்தையெல்லாம் கைப்பற்றிக்கொண்டேன். இங்ஙனமிருக்கையில் மாயாவியைக் கொன்று வாலி திரும்பி வந்தனன். உடனே நான் அவனை வணங்கி ராஜ்ஜி

யத்தை அவனிடமே கொடுத்தும், துஷ்டகுணமுடையவ னுகையால் என்மேல் கோபங்கொண்டு என்னைக் கொல்லும் பொருட்டுத் துரத்தி வந்தனன்.

நான் மிகுந்த பீதியுடன் எனது மந்திரிகளுடன்கூடி நானுவித நதிகளையும் வனங்களையும் பட்டணங்களையும் பார்த்துக்கொண்டு, கிழக்கு தெற்கு மேற்கு வடக்கு முத லிய நான்கு திசைகளிலும் வேகமாக ஓடினேன். எவ்வளவு தூரம் ஓடினபோதிலும் வாலி என்னை விடாமல் துரத்திக் கொண்டே வந்தானுகையால் என்னை ரக்ஷிக்கக்கூடியவனுவது தக்க இருப்பிடமாவது எனக்குக் கிடைக்கவில்லை.

அச்சமயம் புத்தியிற் சிறந்த அனுமான் என்னை நோக்கி 'வானரேச்வரனே! முன்பு மதங்கமுனிவர் அந்த ஆச்சிரம மண்டலத்தைக் குறித்து வாலியை சபித்திருக்கிறுரல்லவா? வாலி அவ்வாச்சிரமத்தில் பிரவேசிப்பானுயின் அவனது தலை நூறு சுக்கலாக வெடித்துப்போய்விடும். ஆகையால் நாம் அங்குச்சென்று வசிப்போம்' என்று ஒரு உபாயம் தெரி வித்ததனுல் உடனே நான் அவ்வண்ணமே எனது மந்திரிக ளுடன் கூடி இந்த ருச்சியமூக பர்வதம் வந்து சேர்ந்தேன். வாலியும் மதங்கரது சாப பயத்தினுல் இங்கு வரவில்லை. ராஜனே! நான் இவ்வண்ணம் அப்பொழுது பூமண்டலத்தை யெல்லாம் பிரத்தியக்ஷமாகக் கண்டேன்" என்றனன்.

நாற்பத்தாருவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நாற்பத்தேழாவது ஸர்க்கம்

### தென்திசைக்குப் போனவர் தவிர மற்ற திசைகளுக்குப் போனவரெல்லாரும் திரும்பி வருதல்.

சுக்கிரீவனுல் சீதையைத் தேடும்பொருட்டு அனுப்பப் பட்ட வானர வீரர்களெல்லாரும் அந்தந்தத் திசைகளில்

சென்று, காடு மலை வனாந்தரம் குகை செடிகள் புதர்கள் முதலியவை யெல்லாவற்றிலும் மிக்க மனவூக்கத்துடன் ஸீதாதேவியைத் தேடி அலைந்தார்கள். சுக்கிரீவன் சொன்ன ஒருமாத காலத்திற்குள் அவர்களால் ஸீதையினிருப்பிடம் கண்டுபிடிக்கப்பட முடியவில்லை யாதலால் நிராசராகி (ஆசை யற்றவராகி) சுக்கிரீவனிடம் வந்து சேர்ந்து தாம் போய் வந்த விருத்தாந்தத்தை அறிவித்து ப்ரஸ்ரவணமென்னும் மலய பர்வதத்திற்குப் போயினர்.

வினதன் தன்னுடன் வந்த வானரர்களுடனே கிழக்கு திக்கெல்லாம் தேடி ஸீதையைக் காணுமல் வந்து சேர்ந்தனன். சுஷேணனும் வானரர்களோடு மேல் திசையெல்லாம் தேடி மாதம் நிரம்பியும் ஸீதையைக் காணுமலே திரும்பிவந்து சேர்ந்தனன். சதபலியும் வட திசையிலிருந்து தன் வானர வீரர்களோடு ஸீதையின் இருப்பிடம் தெரியாமலே வந்து சேர்ந்தனன்.

அவர்களனைவரும் ப்ரஸ்ரவண பர்வதத்தின் நுனியில் ராமனுடன் உட்கார்ந்திருக்கிற சுக்கிரீவனிடம் வந்து நமஸ் கரித்து "நீ சொன்ன சகலவிடங்களிலும் வெகு பிரயாசத் துடன் சென்று ஸீதையைத்தேடினோம். ஆனல் நாங்கள் அவளை எங்கும் காணவில்லை. மிகவும் பருத்த பிராணிகளைக் கண்டு ஒருக்கால் ராவணனாய் இருக்கலாமென்றெண்ணிக் கொன்றுவிட்டனம். அனுமான் பலமும் தைரியமும் பொருந்தியவன். மேலும் ராவணன் ஸீதையை எத்திக்கை நோக்கி எடுத்துச்சென்றனனோ அத்திசைக்கே சென்றிருக் கின்றனன். ஆகையால் அவன் ஸீதையை நிச்சயமாகக்கண்டு வருவான்" என்றனர்.

நாற்பத்தேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

## நாற்பத்தெட்டாவது ஸர்க்கம்

## அனுமான் முதலியோர் தென்திசைக்குச்சென்று சீதையைத் தேடுதலும் அங்கோர் அசுரனைக் கொல்லுதலும்.

*அனுமான் முதலிய வானர வீரர்கள் தென்திசையில் எல்லாவிடங்களிலும் எவ்வளவு தேடிப்பார்த்தும் சீதையைக் காணவில்லை. கடைசியில் மிகவும் பயங்கரமானதும், புகமுடியாததும், பெரிய குகைகளையும் காடுகளையுமுடையதுமான விந்திய பர்வதத்தை அடைந்து அதன் பிரதேசங்களிலெல்லாம் சீதையைத் தேடினர்.*

*பிறகு அவ்வானர வீரர்கள் அவ்விடத்தைவிட்டு ஜனங்களும் ஜலங்களுமில்லாத பெரிய காடுகளிலெல்லாம் சென்று சீதையைத் தேடியபின் எப்படிப்பட்டவருக்கும் போகக்கூடாத மற்றொரு பிரதேசத்தில் புகுந்தனர். அவ்விடத்தில் மரங்கள் காய்களும் புஷ்பங்களும் இலைகளும் இல்லாமல் காணப்பட்டன. அங்குள்ள நதிகளில் ஜலமே இல்லை. மேலும் அங்கு வேர் முதலிய காய் கிழங்குகளாவது வனத்தில் திரியக்கூடிய யானை புலி முதலிய விலங்குகளாவது காணப்படவில்லை. குளமென்பதே அங்குக் கிடையாது.*

*'கண்டு' என்ற மகரிஷியின் புதல்வர் பதினாறுவயதுடைய ஒருவர் அவ்வனத்தில் மரணமடைந்தனர். அதைப் பற்றி அவ்வனத்தின்மேல் மிக்க கோபங்கொண்டு அதை எவர்க்கும் வசிக்க முடியாததும் புகக்கூடாததும் மிருகங்களும் பட்சிகளுமில்லாததுமான சூன்னியப் பிரதேசமாகச் சபித்தனர்.*

*அப்படிப்பட்ட கொடிய பயங்கரமான வனப்பிரதேசங்களிலுள்ள, குகை, புதர், உலர்ந்துபோன குளங்கள், நதிகள் முதலியவற்றிலெல்லாம் அவ்வானர வீரர்கள் எவ்வளவு தேடியும் சீதையையாவது ராவணனையாவது காணவில்லை.*

அப்பொழுது அவ்வானர வீரர்கள் கொடிகளும் புதர்களும் நிறைந்த பயங்கரமான ஓர் பிரதேசத்தில் நுழைகையில், அங்குத் தேவதைகளேயும் பொருள் செய்யாத கொடுஞ் செயலையுடைய பயங்கரமான ஓர் அரக்கனைக் கண்டனர். உடனே அனைவரும் துணியை இழுத்துக் கட்டிக்கொண்டு அவனை எதிர்க்கப் புகுந்தனர்.

பிறகு அந்த ராக்ஷசன் மிகுந்த கோபத்துடன் எழுந்து வானரர்மேல் எதிர்த்து வந்தனன். உடனே வாலிகுமாரனுன அங்கதன் அவனை 'ராவணன்' என்று நினைத்துச் சீக்கிரம் அவனை ஒரே அறையாக அறைந்தான். அவ்வசுரன் ரத்தத்தைக் கக்கிக்கொண்டு ஓர் பெரிய மலை விழுவதுபோல் தரையில் விழுந்தனன்.

அவ்வரக்கன் மரணமடைந்த பின்பு அவ்வானரர்கள் அவனே ராவணனென்றும், அக்குகையில் சீதை இருப்பாளென்றும் நினைத்து, அங்குள்ள மலைக்குகைகளெல்லாவற்றிலும் பலவாறு நன்ருகத் தேடிப் பார்த்தனர். எவ்வளவு தேடியும் சீதையைக் காணுமையால் இளைப்பும் வருத்தமுமுற்று ஓர் பெரிய மரத்தடியில் எல்லோரும் கூட்டமாக உட்கார்ந்தனர்.

நாற்பத்தெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நாற்பத்தோன்பதாவது ஸர்க்கம்

## அனுமான் மீளவும் வேறு இடங்களில் தேடிப்பார்த்தல்

பிறகு அங்கதன் மற்ற வானர வீரர்களை நோக்கி "வானரர்களே! நம்மால் இயன்றவளவும் சமஸ்தமான வனங்களிலும் மலைகளிலும் குகைகளிலும் நதிகளிலும் சீதையைத் தேடிப் பார்த்தோம். ஆனல் சீதையையாவது ராவணனையாவது

இதுவரை காணவில்லை. சுக்கிரீவன் நமக்குக் கொடுத்த தவணைக்காலமோ கடந்துவிட்டது. சுக்கிரீவனோ கொடிய தண்டனையை விதிக்கும் திறனுடையவன். ஆகையால் நீங்கள் ஜாக்கிரதையாக மீண்டும் தைரியத்துடனும் உத்சாகத்துடனும் மன வெறுப்பில்லாமல் மற்றொரு தடவை இம்மகா வனத்தில் தேடுவீர்களாக. இல்லாவிடில் சுக்கிரீவனால் நாம் கொடிய தண்டனைகளை நிச்சயமாக அடைவோம்" என்றனன்.

அச்சமயம் வானரர்கள் கொடிய தாகத்தினாலும் களைப்பினாலும் பிடிக்கப்பட்டிருந்தார்கள். அவர்களெல்லாரும் அங்கதனுடைய யுக்தமான வார்த்தைகளைக் கேட்டு உடனே சுருசுருப்புடன் எழுந்து மீளவும் தென் திசையில் விந்திய பர்வதத்தின் காடுகளில் தேடத் தொடங்கினர். அவர்கள் அப்பர்வதம் முழுவதிலும் சமஸ்த குகைகளிலும் சிகரங்களிலும் மற்றும் பாலை வனங்களிலும் சீதையைத் தேடினர், அனுமான் முதலான அவ் வானரோத்தமர்கள் மீளவும் சீதையைத் தேடும்பொருட்டு விந்திய பர்வதம் முதல் சமஸ்த பிரதேசங்களிலும் திரியலுற்றனர்.

நாற்பத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## ஐம்பதாவது ஸர்க்கம்

## அனுமான் முதலியவர்கள் ருக்ஷபிலத்தில் சுயம் பிரபையைக் காணுதல்.

வானரர்கள் இங்ஙனம் மிகவும் கொடிய அவ் வனப் பிரதேசங்களில் எல்லாம் தேடிக்கொண்டிருக்கும்பொழுதே சுக்கிரீவன் அவர்களுக்குக் கொடுத்த ஒருமாதத் தவணை கடந்துவிட்டது. அவர்கள் பிறகு தென்திசையில் வேறு இடங்களிலும் ஆங்காங்குத் தேட முயன்று விஸ்தீரணமான ஓர் பிலத்தை (குகையை)க் கண்டனர். அச்சமயம் அவர்கள்

பசியினாலும் தாகத்தினாலும் களைப்பினாலும் மிகவும் பீடிக்கப்பட்டிருந்தார்கள்.

அக்குகை மயன் என்னும் தானவனால் காக்கப்பட்டு எப்படிப்பட்டவருக்கும் பிரவேசிக்க முடியாமலிருந்தது. 'ருக்ஷபிலம்' என்ற பெயரையுடைய அக்குகை கொடிகளாலும் புதர்களாலும் மூடப்பட்டிருந்தது. அக்குகையினின்றும் கிரௌஞ்சங்களும் (அன்றில் பறவை) ஹம்ஸங்களும், ஸாரஸங்களும், சக்கரவாகப் பறவைகளும் ஜலத்தில் நனைந்து தாமரைத் தாதுகளின் தூள்களால் சிவந்த இறகுகளுடன் மேல் கிளம்பின.

அவ்வானர வீரர்கள் பயங்கரமான அப்பெரிய குகைக்குள் நுழைய முயன்றனர். அப்பொழுது அனுமான் அவர்களை நோக்கி "தெற்குத் திக்கில் பர்வதக் கூட்டங்கள் நிறைந்திருக்கும் பிரதேசங்களிலெல்லாம் தேடிப் பார்த்தோம். ஆயினும் சீதையைக் காணப்பெற்றிலோம். மேலும் இக்குகையினின்றும் அழகிய பறவைகள் ஜலத்தினால் நனைக்கப்பட்ட இறகுகளுடன் வெளிப்பட்டு வருகின்றன. இன்னும் இக்குகையின் வாசலில் மரங்கள் பச்சென்று இருக்கின்றன. ஆகையால் இதில் நீர் நிறைந்த கிணறாவது, குளமாவது இருக்கவேண்டும். சென்றுபார்ப்போம்" என்றனன்.

அப்பொழுது அவ் வானரர்கள் மிகவும் இருண்ட அக்குகையினுள் நுழைந்து ஜாக்கிரதையாகச் சென்றனர். பிறகு கொஞ்சதூரத்தில் வெளிச்சமுள்ளதும் ரமணீயமுமான ஓர் சிறந்த பிரதேசத்தைக் கண்டனர். அதன் பிறகு அவர்கள் கொடிய இருள் சூழ்ந்த அக்குகையில் வழி தப்பிப் போய் விடுவோமென்கிற பயத்தினால் ஒருவரையொருவர் பிடித்துக் கொண்டு ஒரு யோசனை தூரம் சென்றனர். மிகவும் கொடிய பசி தாகத்தினாலும் களைப்பினாலும் பீடிக்கப்பட்ட அவ் வானரர்கள் முகம் வாடிச் சோர்வடைந்து தங்கள் உயிரில்

ஆசையை ஒழித்துச் சென்றுகொண்டிருக்கையில் தைவாதீன மாக வெளிச்சமுள்ள ரமணீயமான ஓர் பிரதேசத்தை யடைந்தனர். அங்கு அழகிய தளிர்களுடனும், பூக்கள் காய்கள் பழங்கள் இவற்றுடனும் விளங்கிய மாமரங்களையும் குடஜ மரங்களையும் மகிழ மரங்களையும் கர்ணிகார மரங்களையும் கண்டனர்.

ஹம்ஸங்களும் சக்கரவாகங்களும் தாமரைகளும் நிறைந்த அழகிய குளங்களையும் கண்டனர். அவற்றில் பொன் மயமான மீன்களும் ஆமைகளும் விளங்கின. வானரர்கள் அக்குகையில் பொன் சாளரங்கள் பொருந்தி, முத்து சரங்களால் அலங்கரிக்கப்பட்ட பொன் விமானங்களும் வெள்ளி விமானங்களும் வெள்ளி உப்பரிகைகளும் அமைந்து நவரத்தினங்களால் அலங்காரம் செய்யப்பட்ட உயர்ந்த மாளிகைகளையும் நாற்புறத்திலும் கண்டனர். அவற்றுள் பொன் மயமான படுக்கைகளையும், ஆசனங்களையும், பொன் வெள்ளி இவற்றால் செய்யப்பட்ட பாத்திரங்களையும் வெண்கலப்பாத்திரங்களையும் உயர்ந்த வாசனையுள்ள சந்தனங்களையும் ருசியுள்ள காய் கிழங்குகளையும் சிறந்த பானத்திரவியங்களையும் உயர்ந்த வஸ்திரங்களையும் சித்திரக்கம்பளங்களையும் மான் தோல்களையும் நெருப்புப்போல் பளபள வென்று பிரகாசிக்கின்ற பொன் குவியல்களையும் கண்டு பிரமித்து நிற்கும்பொழுது அங்கொரு ஸ்திரீ வரக்கண்டனர். அவள் மரவுரியையும் மான்தோலையும் அணிந்து மிகுந்த தபோ மகிமையால் பிரகாசித்துக்கொண்டிருந்தனள்.

அப்பொழுது அனுமான் கை கூப்பிய வண்ணம் அவளைப் பார்த்து "நீ யார்! இக் குகை எவருடையது?" என்று வினவினன்.

ஐம்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

## ஐம்பத்தோராவது ஸர்க்கம்.

### சுயம்பிரபை வானரர்களுக்கு ருக்ஷபில விருத்தாந்தத்தைக் கூறுதல்.

பின்னும் அனுமான் சுயம்பிரபையை நோக்கி "நாங்கள் வழி நடந்த சிரமத்தினால் இளைப்புற்றுப் பசி தாகங்களால் பீடிக்கப்பட்டவராகி இங்கு ஜலம் முதலியவை இருக்குமென்று நினைத்து முன்பின் பாராமல் இருள் மூடப்பெற்ற பயங்கரமான இக் குகையில் நுழைந்தோம். இங்கு மிகவும் அற்புதங்களாகத் தோற்றுகின்ற பலவிதமான இனிய பதார்த்தங்களைக் கண்டவுடனே 'இது அசுர மாயையோ' என்று பயந்து, செய்வது இன்னதென்று தெரியாமல் திகைக்கின்றோம். இவ்வழகிய உயர்ந்த மாளிகைகளும், ஐசுவரியங்களும், மரங்களும், குளங்களும் யாருடையவை? இவற்றையெல்லாம் எங்களுக்குத் தெரியும்படி சொல்லவேண்டும்" என்றனன்.

தபசியான சுயம்பிரபை அவர்களைப் பார்த்து "மகா தேஜஸ்வியும் மாயாவியுமான மயனென்னும் தானவன் தன் விசித்திர சக்தியால் இந்தப் பொன் மயமான வனத்தையும் மாளிகைகளையும் நிருமித்தான், முன்பு அவன் தானவர்களுக்கு விசுவகர்மாவாய் இருந்தனன். அவன் வனத்தில் பலவாயிரமாண்டுகள் தவம் செய்து பிரமதேவனிடத்தில் சுக்கிரன் செய்த சிற்ப சாஸ்திரங்கள் எல்லாம் தனக்கு அதீனமாகும்படி வரம் பெற்றனன்.

அம் மயன் தான் பெற்ற வரத்தின் மகிமையால் இவ்வற்புதமான மாளிகைகளை நிருமித்துச் சில காலம் இங்கு வசித்து வந்தனன். அந்த மயன் ஒரு சமயம் 'ஹேமை' என்னும் அப்ஸரஸ் ஸ்திரீயினிடத்தில் பற்றுடையவனாயிருப்பதை தேவேந்திரன் அறிந்து வஜ்ஜிராயுதத்தினால்

அவனைக்கொன்றனன். மயன் இறக்கும்பொழுது இந்த உத்தம வனத்தையும் ரமணீயமான இதிலுள்ள போக்ய (அநுபவிக்கக்கூடிய) வஸ்துக்களையும் வெள்ளி மயமான இந்த மாளிகையையும் ஹேமைக்குக் கொடுத்தனன். வானரோத்தமனே! நான் மேருஸாவர்ணியின் குமாரத்தியான சுயம்பிரபை என்பவள். ஹேமை எனக்கு உயிர்த்தோழியாகையால் அவளது அநுமதியின்படி நான் இவற்றையெல்லாம் பாதுகாத்து வருகிறேன். நீங்கள் புகக்கூடாத இக்கொடிய வனத்துக்கு யாரைத்தேடி வந்தீர்கள்? நீங்கள் உண்ணக்கூடிய ரமணீயமான பழங்களையும் காய் கிழங்குகளையும் தின்று ஜலத்தைப்பருகி இளைப்பாறியபின் உங்கள் விருத்தாந்தங்களையெல்லாம் எனக்குச் சொல்லவேண்டும்" என்று இனிமையாக மொழிந்தனள்.

ஐம்பத்தோராவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## ஐம்பத்திரண்டாவது ஸர்க்கம்.

## அனுமான் சுயம்பிரபைக்குத் தான் வந்த காரியத்தைக் கூறுதல்.

உடனே சமஸ்த வானரர்களும் தங்கள் பசி தாகங்களைத் தீர்த்துக்கொண்டு களைப்பாறினர். பிறகு அனுமான் சுயம்பிரபையை நோக்கி "தசரத சக்கரவர்த்தியின் குமாரனை ராமன் தம்பி லக்ஷ்மணனோடும், மனைவி சீதையோடும் தண்டகாரணியத்துக்கு வந்தனன். சீதையை ஜனஸ்தானத்தினின்றும் ராவணன் பலவந்தமாக எடுத்துப் போயினன். அந்த ராமனுக்கு நண்பனும் குரங்கரசனுமான சுக்கிரீவ மகாராஜனால் சீதையைத் தேடும்பொருட்டு நாங்கள் தென்திசைக்கு அனுப்பப்பட்டோம். நாங்கள் அவன் கட்டளைப்படி தென்திசையெல்லாம் தேடி இளைப்புற்று மிகவும்

வருந்தி நாற்புறத்திலும் கண்வைத்து உற்றுப்பார்க்கையில் ஓர் குகை புலப்பட்டது. அது கொடிகளாலும் மரங்களாலும் மறைக்கப்பட்டு இருள் மூடப்பெற்றிருந்தது. அக்குகையினின்று ஹம்ஸங்கள், கிரௌஞ்சங்கள் முதலிய பறவைகள் ஜலத்தில் நனைந்த இறகுகளால் ஜலத்துளிகளை உதறிக்கொண்டு வெளிப்பட்டன. ஆகையால் இதில் ஜலமிருக்குமென்று நிச்சயித்து ராமகாரியத்திலுள்ள அவசரமிகுதியால் இதில் புகுவதற்கு நாங்கள் சம்மதித்து ஒருவரையொருவர் கெட்டியாகக் கட்டிக்கொண்டு சீக்கிரமாக, இருள் மூடிய பயங்கரமான பிரதேசத்தைக் கடந்து இங்கு வந்து சேர்ந்தோம். உன்னால் அன்புடன் உபசரிக்கப் பெற்று பசிப்பிணியைப் போக்கிக்கொண்டோம். பசியினால் இறந்து போகும் தருவாயிலிருந்த எங்களுக்கு நீ உயிர்ப்பிச்சையளித்துக் காப்பாற்றினாய். உனக்கு நாங்கள் எவ்விதமாகப் பிரதியுபகாரம் செய்யப்போகிறோம்" என்றனன்.

இதைக்கேட்ட சுயம்பிரபை "பலிஷ்டர்களான வானரர்களெல்லோரிடத்திலும் எனக்கு மிகுந்த சந்தோஷம் உண்டாயிற்று. நான் கேவலம் தர்மத்திலேயே முயன்று நடக்கும் தன்மையளாகையால் எனக்கு எவ்விதமான பிரதியுபகாரமும் செய்யவேண்டாம்" என்றனள்.

**ஐம்பத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.**

---

## ஐம்பத்துமூன்றாவது ஸர்க்கம்.

### சுயம்பிரபை வானரர்களைக் குகையினின்று தன் மகிமையால் வெளிப்படுத்துதலும், வானரர்கள் கெடு கடந்ததற்கும் சீதையைக் காணாமைக்கும் வெறுப்புறுதலும்.

பிறகு அநுமான் சுயம்பிரபையைப் பார்த்து "தருமஞ் செய்யும் சுபாவமுடையவளே! சுக்கிரீவன் எங்களுக்குக்

கொடுத்த கெடுவாகிய காலமும் முன்பே கடந்துவிட்டது சீதையைக் கண்டுபிடிக்கும் பெரிய காரியம் எங்களுக்குச் செய்யவேண்டியதாய் இருக்கின்றது; நாங்கள் இங்கிருப்பதால் அக் காரியத்தையும்கூடச் செய்யாதவராயினோம். ஆகையால் எங்கள்மேல் அருள்புரிந்து எங்களைப் பயங்கரமான இக் குகையினின்று வெளிப்படுத்தி ரக்ஷிக்கவேண்டும்" என்று வேண்டிக்கொண்டனன்.

சுயம்பிரபை வானரர்களை நோக்கி "இக்குகையில் புகுந்தவர் பிராணன்களோடு இதினின்று வெளிப்பட்டுப் போவது முடியாதகாரியமாகும். ஆயினும் நான் எனது தவ மகிமையினால் உங்களனைவரையும் வெளிப்படுத்துகிறேன். ஓ! வானரர்களே! நீங்களெல்லாரும் கண்களை மூடிக்கொள்ளுங்கள். கண்களை மூடாவிடில் வெளிப்படுவது அடியோடு முடியாத காரியம்" என்றனள்.

வானரர்கள் அங்ஙனமே கண்களை மூடிக்கொண்டதும் அவர் தன் தவ மகிமையால் அனைவரையும் அக் குகையினின்றும் வெளிப்படுத்தினள்.

பிறகு வானர வீரர்கள் வழி நடந்து பல தேசங்களையும் கடந்து தென் சமுத்திரத்தையடைந்தனர். அவர்கள் விந்திய பர்வதத்தின் தென்மேற்கு மூலையிலுள்ள தாழ் வரையின்கண் மரங்களின் கீழ் உட்கார்ந்து தங்களுக்குச் சுக்கிரீவனால் கொடுக்கப்பட்ட தவணை தவறிவிட்டதையும், அதுவரை சீதையையாவது ராவணனையாவது காணப்பெறாம லிருந்ததையும்பற்றிப் பலவாறு சிந்திக்கத் தொடங்கினர் அவர்கள் ஒன்றும் தோன்றப்பெறாமல் சுக்கிரீவனுடைய கட்டளையை நினைத்து மிகவும் பயந்து தரையில் வீழ்ந்தனர்.

அப்பொழுது அங்கதன் அவ்வானரர்களை நோக்கி "ஓ வானர வீரர்களே! சுக்கிரீவனது கட்டளைப்படி நாம் தென்

திசை முழுவதும் அலைந்து தேடியும் சீதையைக் காணப்பெற வில்லை. அவன் நமக்குக் கொடுத்த தவணையோ முன்பே கடந்துவிட்டது. ஆகையால் இனி நாம் உயிரிழக்க வேண் டியவர்களே. சுக்கிரீவனிடம் நாம் செல்வோமாயின் நாம் கெடுவைக் கடந்து போனது மாத்திரமன்றி சீதையின் சமா சாரத்தை யறியாமலும் போகுமளவில் நம்மை அவன் மரண தண்டனைக்குள்ளாக்குவானேயன்றி ஒருவனையும் மன்னிக்க மாட்டான். ஆகையால் அவனிடம் செல்வதில் யாது பயன்? நாம் அங்குச் சென்று கோரமான மரண தண்டனை யடை வதைக் காட்டிலும் இங்கேயே பிராயோபவேசத்தினால் (சத்தியாக்கிரகம்—அன்னாகாரமின்றி உயிர் விடுகை) மரண மடைவது நல்லது. சுக்கிரீவன் என் தந்தைக்கு ஜன்ம விரோதியாதலாலும் என்மீது அவனுக்குப் பழைய விரோ தமே நீடித்திருக்குமாதலாலும், இப்பொழுது என்மேல் உண்டான பிழையினால் என்னையவன் நிச்சயமாகக் கொன்று விடுவான். நான் அங்குச் சென்று என் நண்பர்கள் பலர் காணக் கொடிய மரணமடைவதைக் காட்டிலும் இப்புனித மான சமுத்திரக் கரையில் தானே உண்ணாவிரதமிருந்து உயிரை விடப்போகிறேன்" என்றனன்.

இதைக்கேட்ட மற்ற வானரவீரர்களனைவரும் "நல்லது. நல்லது. அங்கதா! நீ சொல்லுவது யுக்தமாயினும், நாம் இன்னும் சிலகாலம் சீதையைத் தேடுவோம். அவளது விருத்தாந்தத்தைத் தெரிந்துகொள்வோமாயின் சுக்கிரீவ னிடம் செல்லுவோம். இல்லையாயின் இவ்விடத்திலேயே பிராணன்களை விட்டு விடுவோம்" என்றனர்.

இங்ஙனம் பயத்தினால் வானரர்கள் சொன்ன வார்த்தை யைக் கேட்டுத் தாரன் "ஓ வானர சிரேஷ்டர்களே! நீங்கள் இதுவரை துக்கித்தது போதும். உங்களுக்கு விருப்பமுளா தாயின் இக்குகையிலேயே சென்று வசிப்போம். இது

மாயையால் நிருமிக்கப்பட்டதல்லவா? மேலும் இதில் அழகிய மரங்களும் ஜலங்களும் இனிய ஆகார வஸ்துக்களும் ஏராளமாய் இருக்கின்றன. இங்கு நமக்குத் தேவேந்திரனாலாவது ராமனாலாவது சுக்கிரீவனாலாவது எள்ளளவும் பயம் உண்டாகாதாகையால் இங்கு நாம் சுகமாக இருக்கலாம்" என்று கூறினன்.

அதுகேட்ட வானரர்கள் எல்லாரும் சந்தோஷமுற்றவராகி "எப்படிச் செய்தால் நமக்கு இம்சை உண்டாகாதோ அங்ஙனம் சீக்கிரமாக ஏற்பாடு செய்வீர்களாக" என்று மொழிந்தனர்.

ஐம்பத்துமூன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ஐம்பத்துநான்காவது ஸர்க்கம்

## அனுமான் அங்கதனுடைய மதத்தைக் கண்டித்து சுக்கிரீவனிடம் போகலாமென்றுரைத்தல்.

பிறகு அனுமான், அங்கதன் சுக்கிரீவனோடு வேறுபடாமல் அவனுக்கு அனுகூலனாய் இருக்கும்படி பல நீதிகளைச் சொல்லத் தொடங்கி அதற்குத் தகுந்த பயங்கரமான பல வாக்கியங்களைச் சொல்லி மிகுந்த கோபத்தோடு அங்கதனுக்குப் பயத்தை விளைவித்தனன்.

அஃது எங்ஙனே யென்னில்; "அங்கதா! நீ உன் தந்தையைப்போல் மிகுந்த பராக்கிரமசாலியல்லவா? அத்துடன் குரங்குராஜ்ஜியத்தையெல்லாம் வகிக்கவல்லவனல்லவா? உனக்குத் தெரியாதது ஒன்றுமில்லை. இவ்வானரர்கள் எப்பொழுதும் சஞ்சலமான மனமுடையவர்கள். இவர்கள் மனைவி மக்களையெல்லாம்விட்டு உனது கட்டளைக்குட்பட்டு எள்ளளவும் இருக்கமாட்டார்கள். இந்த ஜாம்பவானும் நலனும் பெரிய குரங்கான ஸுஹோத்திரனும் உன் பேச்சைக் கேட்க

மாட்டார்கள். அப்படியே நானும் கேட்கமாட்டேன். எங்களை உன் வசமிழுத்துக்கொள்ள உன்னால் முடியாது. இவ்வுலகில் பலம் மிகுந்திருக்கப்பெற்றவன் அற்ப பலமுடையவனோடு விரோதித்துக்கொள்ளலாமென்று நீதியுணர்ந்தவர் சொல்லுவார்களேயன்றி, அற்ப பலமுடையவன் பலவானோடு விரோதம் வைத்துக்கொள்வது ஒருவர்க்கும் சம்மதமன்று. பலஹீனன் தன் உயிரைக் காப்பாற்றிக் கொள்ளவேண்டியவனுகையால் பலவானோடு விரோதம் வைத்துக்கொள்ளுவது எள்ளளவும் யுக்தமன்று. தாரன் கூறினபடி இக்குகையே உங்களுக்கு அடைக்கலமென்று நினைப்பாயாயின் லக்ஷ்மணனது கூரான பாணங்களுக்கு இக்குகை எம்மாத்திரம்? இலைத்தொன்னையைக் கிழிப்பதுபோல் வெகு சுலபமாக இக்குகையை லக்ஷ்மணன் தன் கூரிய பாணங்களால் பேதித்துவிடுவானென்பதில் சந்தேகமா?

அங்கதா! சுக்கிரீவனை விரோதித்துக்கொண்டு நீ இவ்வானரர்களை நம்பி இக்குகைக்குள் வசிக்க முயன்றவுடன், மனைவி மக்களை நினைத்துக்கொண்டு இவர்கள் உன்னைத் தனியேவிட்டுப் போய்விடுவார்கள். பிறகு நீ உன் நண்பர்களையும் உறவினர்களையும் பிரிந்து மிகவும் திகிலடைந்து தத்தளிப்பாய். பயங்கரங்களும், பகைவரை உருமாய்க்க வல்லவைகளும் மகா வேகமுடையவைகளும் அணுக முடியாதவைகளுமான லக்ஷ்மணனது பாணங்கள், ராஜன் சொன்ன காரியத்தைச் செய்யாதிருக்கிற உன்னைத் தப்பாமல் கொன்றுவிடும்.

ஆகையால் நீயும் எங்களுடன் வந்து வணக்கமுடையவனுகி எப்பொழுதும்போல இருப்பாயாயின் உன்னை சுக்கிரீவன் கொல்லாமல் மன்னித்து தனக்குப்பின்பு கிரமமாக உனக்கு வானர ராஜ்ஜியத்தில் பட்டம் கட்டுவான். சுக்கிரீவன், தருமம் பொறுமை தயை முதலியவற்றிற்கு

இருப்பிடமானவன். மேலும் அவன் உன் தாயினிடத்தில் மிகுந்த அன்புள்ளவன். ஆகையால் அவளது பிரியத்தை விரும்பியும், தனக்கு வேறு மக்கட்பேறில்லாமைபற்றியும் அவன் உன்னை நிச்சயமாக மன்னிப்பதுடன் உன்னைத் தன் சொந்த மகனைப்போல் பாவித்து தனக்குப்பின் உன்னையே ராஜ்யாதிபதியாகச் செய்வான். ஆகையால் நீ அவனிடம் சென்று வணங்குவாயாக" என்றனன்.

ஐம்பத்துநான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## ஐம்பத்தைந்தாவது ஸர்க்கம்.

### அங்கதாதி வானரர்கள் உண்ணு விரதமிருத்தல்.

இங்ஙனம் அனுமான் கூறக்கேட்ட அங்கதன்; "அனுமானே! ஸ்திரபுத்தியும் ஆத்மசுத்தியும் தயையும் நன்றியும் கபடமில்லாமையும் பராக்கிரமமும் நீ கூறியபடி சுக்கிரீவனிடத்தில் சிறிதுமில்லை. ஏனெனில் தனக்குப் பெரியோனான வாலியின் மனைவி தன் தாய்போன்றவள்; அவளை உலகத்தவர் வெறுக்கும்படி கைப்பற்றினனே. மேலும் அண்ணன் மாயாவியைக் கொல்லும்பொருட்டுப் பெரிய குகையில் புகுந்தபொழுது 'இங்கு எதிரி தப்பிப்போவானாயின் நீ தடுப்பாயாக' என்று நியமித்துப்போனதும் அவன் பெரும் பாறையால் அக்குகையின் துவாரத்தை மூடிவிட்டானே! ராமன் வாலியைக்கொன்று அவனுக்குப் பட்டாபிஷேகம் செய்து வைத்தும், அவனையடியோடு மறந்து மழைகாலம் சென்றுங்கூட அவனது காரியத்தைச் செய்யாது மன்மத லீலைகளில் மூழ்கியிருந்தானல்லவா? இப்பொழுது நம்மை யெல்லாம் சீதையைத் தேடும்படி அனுப்பியது லக்ஷ்மணனுக்குப் பயந்தே தவிர, உண்மையில் அதருமத்திற்குப் பயந்தல்ல. இப்படி நிந்தைக்கிடமாய் இருப்பவனும், செய்நன்றி

மறந்த துரோகியுமான சுக்கிரீவனுக்கு எப்படி தருமம் தெரியும்? இப்படிப்பட்ட துன்மார்க்கனிடத்தில் எவனுக்கு நம்பிக்கை யுண்டாகும்? மேலும் அவன் தன் புதல்வனல்லாதவனும் பகைவனது புதல்வனுமாகிய என்னை எள்ளளவும் நினைக்கவிடான்.

இன்னும் சுக்கிரீவன் தன்னுடன் விரோதித்துக் கொண்டு ருக்ஷபிலத்தில் இருக்கவேண்டுமென்று நான் செய்த ஆலோசனையைக் கேட்டவுடன் என்மேல் இன்னும் கோபமுற்றவனாகி, என்னைக் கொன்றுவிடுவானேயன்றி வெறுமனே விடமாட்டான். ஆகையால் அவனிடம் சென்று குரூரமாய் மரணமடைவதைவிட இவ்விடமே உண்ணுவிரதமிருந்து உயிர் விடுவதே மேலானதென்று எனக்குத் தோன்றுகிறது. ஓ வானரர்களே! நீங்களெல்லாரும் கிஷ்கிந்தைக்குச் செல்லுங்கள். நான் நிச்சயமாக அங்கு வரமாட்டேன். இவ்விடமே இருந்து உயிர்விடப் போகிறேன். நீங்கள் பலிஷ்டர்களான ராம லக்ஷ்மணர்களைப் பார்த்து எனக்குப் பதிலாக நமஸ்காரம் செய்து க்ஷேமம் விசாரிக்கவேண்டும். சிற்றன்னையான ருமையிடம் சென்று க்ஷேமம் விசாரிக்கவேண்டும். என் தாயான தாரையைத் தகுந்த வார்த்தைகளால் சமாதானப் படுத்துவீர்களாக" என்றனன்.

அங்கதன் இங்ஙனம் மொழிந்து அவ்வானரர்களுக்கு நமஸ்காரம் செய்து மிக்க வருத்தத்துடன் அழுதுகொண்டு தர்ப்பங்களைப் பரப்பி அதன்மேல் படுத்தனன். இதைக் கண்ட மற்ற வானரர்களும் மிகவும் துக்கித்து சுக்கிரீவனை நிந்தித்தும் வாலியைப் புகழ்ந்தும் பேசி, தாங்களும் அங்கதனைப்போலவே தர்ப்பைமேல் படுத்து உண்ணுவிரதமிருந்து உயிரை விடுவதற்கு விரும்பினர். அவர்கள் ஜலமெடுத்து ஆசமனம் செய்து சமுத்திரத்தின் வடகரையில் பரப்பப்பட்ட தர்ப்பைகளின்மேல் கிழக்கு முகமாகப் படுத்துக்

கொண்டனர். அப்பொழுது அவர்கள் ராமன் வனத்திற்கு வந்தது முதல் தங்களை சுக்கிரீவன் ஸீதையைத் தேடும் பொருட்டு அனுப்பின வரையில் நடந்த விருத்தாந்தங்களை ஒன்றுகூட விடாமல் சொல்லிக்கொண்டிருந்தனர். அவர்களின் மேக கர்ஜனைபோன்ற வார்த்தைகளினால் அப்பெரிய பர்வதத்தின் குகைகள் முழுவதிலும் பெரிய பிரதி த்வனி உண்டாயிற்று.

**ஐம்பத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.**

---

## ஐம்பத்தாறுவது ஸர்க்கம்.

### ஸம்பாதி வருதலும் அவனைப் பார்த்து வானரர்கள் அஞ்சுதலும்.

வானரர்கள் உண்ணாவிரதமிருந்து உயிர்விடத் துணிந்த அவ்விடத்திற்கு, கழுகரசனான ஜடாயுவிற்கு அண்ணனான ஸம்பாதி வரத்தொடங்கினன். அக்கழுகு மிகுந்த பசியுடன் விந்திய பர்வதத்தின் குகையினின்று புறப்பட்டு உயிரை விடத் துணிந்து படுத்திருக்கும் வானரர்களை நெருங்கி "ஆ! கடவுளின் கருணையென்னே! இவ்வானரர்களை ஒவ்வொருவராகப் புசித்து என் பசியை ஆற்றிக்கொள்ளவன்றோ இன்று இவர்கள் என் கண்முன் தோன்றினார்கள்" என்று மொழிந்து கொண்டே வந்தது.

இங்ஙனம் ஸம்பாதி ஆகாரத்தின்பொருட்டுப் பேராசையுடன் மொழிந்த வார்த்தையைக்கேட்ட அங்கதன் அனுமானை நோக்கி "ஐயோ! நம்மைப் பாழ் செய்யும்பொருட்டு ஸீதையென்னும் காரணத்தினால் சூரியனது புத்திரனான ஸாக்ஷாத் யமனே இவ்விடம் வந்தனன் பார். ராமனது காரியத்தைத் தலைக்கட்டினோமில்லை. சுக்கிரீவனது கட்டளையை நிறைவேற்றினோமில்லை. இதற்குள் நமக்கு இத்தகைய ஆபத்து நேர்ந்திருக்கிறது. கழுகரசனான ஜடாயு

முன்பு சீதைக்கு நன்மை செய்ய விரும்பி ஜன ஸ்தானத்தில் செய்த காரியத்தையெல்லாம் நீங்கள் கேள்விப்படவில்லையா? அந்த ஜடாயு ராமனுக்கு உபகாரம் செய்யும்பொருட்டு உயிரையேவிட்டு நற்புகழ்பெற்றனன். நாமும் இப்பொழுது ராமகாரியத்தின் நிமித்தமாகத் திரிந்து திரிந்து இளைத்து உயிரில் ஆசையைத் துறந்து புகக்கூடாத இப்பிரதேசத்தில் புகுந்து உயிரிழக்கப் போகிறோம்.

ராம லக்ஷ்மணர்கள் சீதையோடு வனவாசம் செய்ததும், ராம பாணத்தால் வாலி இறந்ததும், கரன் முதலான ஜன ஸ்தானத்திலுள்ள ராட்சசர்கள் முடிந்ததும், ஜடாயு உயிரிழந்ததும் இப்பொழுது நாம் உயிரிழக்கப் போவதும் ஆகிய இவையெல்லாம் அந்தோ! தசரதன் கைகேயிக்குக் கொடுத்த வரத்தால் வந்தன" என்றனன்.

சம்பாதி இவற்றையெல்லாம் கேட்டு, வானரர்களெல்லாரும் பூமியில் விழுந்திருப்பதையும் பார்த்து மிகவும் மனக் கலக்கமடைந்து தீனனாகி மேல்வருமாறு சொல்லத் தொடங்கினன்.

ஐம்பத்தாறுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## ஐம்பத்தேழாவது ஸர்க்கம்

## சம்பாதிக்கும் வானரர்களுக்கும் சம்பாஷணை.

"ஐயோ! என் உயிரைக் காட்டிலும் மேலான என் தம்பி ஜடாயு கொல்லப்பட்டானென்று எவனோ சொல்லுகின்றனன். அவன் எவன்? ஜனஸ்தானத்தில் ஜடாயு எங்ஙனம் இறந்தான்? வெகுகாலம் கடந்த பின்பு இன்றே என் தம்பியின் பெயரைக் கேட்கப் பெற்றேன். வானரோத்தமர்களே! சூரிய கிரணங்களால் எனது இறகுகள் கொளுத்தப் பட்டனவாகையால் எனக்கு உங்களருகே வர சக்தி யில்லை.

இம்மலைமேலிருந்து நீங்களிருக்குமிடத்திற்கு இறங்க விரும்புகிறேனுகையால் என்னை நிதானமாக இறங்கிவிடுங்கள்" என்று மெலிந்த குரலில் மொழிந்தனன்.

அந்த சம்பாதியின் வார்த்தைகளைக் கேட்ட வானரர்கள் அவனிடத்தில் சிறிதும் நம்பிக்கை யுண்டாகப் பெறுமல் ஒருவரை யொருவர் நோக்கி "இக்கழுகு இப்பொழுது நம்மெல்லாரையும் கொன்று தின்னப்போகிறது. நாம் மரணத்தை விரும்பியல்லவா உண்ணுவிரதமிருக்க விரும்பினேம்? இக்கழுகு நம்மை இப்பொழுது புசித்துவிடுமாயின் நாம் சீக்கிரமாக நமதெண்ணம் நிறைவேறப்பெற்றுப் பிரயோஜனம் கைகூடப் பெறுவோம்" என்று கூறிக்கொண்டனர்.

அப்பொழுது அங்கதன் மலைச்சிகரத்தினின்றும் சம்பாதியை இறக்கி அவனை நோக்கி "ஓ கழுகரசனே! எனக்கு மகா பராக்கிரமசாலியான 'ருக்ஷரஜஸ்' என்னும் பாட்டன் ஒருவன் இருந்தான். அவனுக்கு நூறுகோடி புருஷர்களின் பலமுடைய வாலியென்றும் சுக்கிரீவனென்றும் இரண்டு பிள்ளைகள் உண்டாயினர். எனது பிதாவான வாலி பராக்கிரம காரியங்களால் உலகில் பிரசித்திபெற்று விளங்கினன்.

உலகுக்கெல்லாம் உயிர்நிலைபோன்ற தசரத சக்கரவர்த்தியின் குமாரனுன ராமன் தந்தையின் ஆஞ்ஞையைத் தலையால் வகித்துத் தம்பி லக்ஷ்மணனும் மனைவி சீதையும் தொடர்ந்து வரப்பெற்றுத் தண்டகாரணியம் வந்து வசிக்கும்பொழுது சீதையை ராவணன் பலாத்காரமாக அபகரித்துக்கொண்டு போயினன். ராவணன் சீதையை ஆகாயமார்க்கமாகக் கொண்டு செல்லுகையில் ராமனது தந்தைக்கு நண்பனுன ஜடாயுவென்கிற கழுகரசன்கண்டு மனம்தாங்காமல் ராவணனிடமிருந்து சீதையை விடுவிப்பதற்காக அவனுடன் சண்டை செய்து அவனது தேர் குதிரைகள் சாரதி

முதலியவற்றை நாசம்செய்து அவனது உடலைத் தன் கூரிய நகங்களினால் கீறி இரத்தம் பீறிட்டு வரும்படி செய்தனன். ராவணன் மிகுந்த கோபமுற்றவனாகி ஜடாயுவைத் தன் கத்தியினால் வெட்டி வீழ்த்தினன். பிறகு ஜடாயு ராமனால் தகனச் சடங்கு செய்யப்பெற்று உத்தம கதியை யடைந்தனன்.

பிறகு ராமன் சுக்கிரீவனுடன் சிநேகம் செய்து என் தந்தையான வாலியைக்கொன்று சுக்கிரீவனுக்கு வாலியால் ஏற்பட்ட விரோதத்தைப்போக்கி அவனுக்கே வானர ராஜ்ஜியத்தைப் பட்டங்கட்டினன். பிறகு சுக்கிரீவனது கட்டளையால் ராமனுக்காகச் சீதையைத் தேடும்பொருட்டு அனுப்பப்பட்டோம். எங்குத் தேடியும் சீதை காணப்படவில்லை. பிறகு ருக்ஷபிலத்தில் நுழைந்து ஸ்வயம்பிரபையைக்கண்டனம். அப்பொழுதே சுக்கிரீவன் ஏற்பாடுசெய்த கெடுவாகிய மாதம் கடந்துபோயிற்று. ஆகையால் நாங்கள் மீண்டும் அவ்விடம் செல்வோமாயின் நிச்சயமாக சுக்கிரீவனால் கொல்லப் படுவோமாதலின் இவ்விடத்திலேயே உண்ணாவிரதமிருந்து உயிரை மாய்த்துக்கொள்ள விரும்பினோம்” என்றனன்.

ஐம்பத்தேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## ஐம்பத்தெட்டாவது ஸர்க்கம்.

### சம்பாதி சீதை யிருக்குமிடத்தை வானரர்களுக்குக் கூறுதல்.

இங்ஙனம் பிராணன்களை விட முயன்றிருக்கிற அவ்வானரர்களின் துக்க வசனத்தைக் கேட்ட சம்பாதி மிகவும் துக்கித்துக் கண்ணீர் பெருக்கிக்கொண்டு அவர்களை நோக்கிப் பேரொலியுடன் “வானரர்களே! நீங்கள் யுத்தத்தில் ராவணனால் அடிக்கப்பட்டதாகச் சொன்ன ஜடாயு என் தம்பி. இப்பொழுது நான் கிழவனாய் இருப்பதோடு இறகுகளையும் இழந்திருப்பதால் என் தம்பியைக்கொன்ற பாவியான

ராவணனைக்கொன்று என் தம்பியின் பகையைத் தீர்த்துக் கொள்ளமுடியாதவனாய் இருக்கிறேன். ஐயோ! நான் என் செய்வேன்?

முன்பு விருத்திராசுர வதம் நடந்தபொழுது நாங்கள் அண்ணன் தம்பிகளிருவரும் ஒருவருக்கொருவர் வேகாதிசயத்தைப்பரீக்ஷிக்க விரும்பி ஆயிரம் கிரணங்களோடு ஜ்வலிக்கின்ற சூரியனது சமீபத்தில் போயினம். இருவரும் போட்டி போட்டுக்கொண்டு ஆகாயத்தில் வெகுதூரம் கடந்து செல்லுகையில் சூரியன் உச்சிநிலையை அடைந்தனன். அப்பொழுது என் தம்பி சூரியனது வெப்பத்தைப் பொறுக்க முடியாமல் வருத்தமுற்றதை அறிந்த நான் சகோதர வாஞ்சையினால் பரிதாபமுற்று என் இறகுகளால் சூரிய கிரணங்கள் அவன்மேல் படா வண்ணம் மறைத்தேன்.

வானரர்களே! உடனே நான் என் இறகுகள் சூரியனது கொடிய உஷ்ணத்தினால் தீயப்பெற்று இவ்விந்திய பர்வதத்தில் விழுந்தனன். அதுமுதல் நான் பறக்கமுடியாதவனானதையால் இவ்விடத்திலேயே வசித்து வர நேரிட்டது. அதனால் அதுமுதல் எனக்கு என் தம்பியின் சமாசாரம் ஒன்றும் தெரியவில்லை" என்றனன்.

உடனே அங்கதன் சம்பாதியை நோக்கி "நீ எங்கள் ஜடாயுவுக்குத் தமையனாயின், உனக்குத்தெரியுமானால் அந்த ராவணனிருக்குமிடத்தை எங்களுக்குச் சொல்லுவாயாக" என்றனன். பிறகு சம்பாதி, "ஓ வானர சிரேஷ்டர்களே! கிழவனும் இறகுகளிழந்தவனுமான என்னால் ராமனுக்கு என்ன செய்யமுடியும்? ஆயினும் எனது வார்த்தையினால் மேலான சகாயத்தைச் செய்கிறேன்.

நான் வருணனுக்குக் கீழுள்ள அதல விதலாதி லோகங்களையும், விஷ்ணுதேவன் அளந்த நீண்ட உலகங்களையும்,

தேவாசுரர்களது யுத்தங்களேயும், அமிர்த மதனத்தையும் பார்த்திருக்கிறேன். நான் உங்களெல்லாரையும் விட ராம காரியம் செய்ய அதிக ஊக்கம் கொண்டுளேன். மிகுந்த அழகுள்ளவளும் சர்வாலங்கார பூஷிதையுமான ஓர் யௌவன மடந்தையை துராத்மாவான ராவணன் தூக்கிக்கொண்டு போனதை நான்கண்டேன். அவள் 'ராமா! ராமா! லக்ஷ்மணா!' என்று கதறிக்கொண்டே சென்றது இப்பொழுது நினைவிற்கு வருகிறது. அவளே சீதையாக இருக்கவேண்டும்.

இனி ராவணனது இருப்பிடத்தைக் கூறுகிறேன். அவன் விச்சிரவஸ்ஸின் புதல்வன். குபேரனுக்குத் தம்பியுமாவான். அவன் லங்கை என்னும் நகரத்தில் வாசம் செய்கிறான். இங்கிருந்து நூறுயோசனை தூரத்தில் சமுத்திரத்தில் ஓர் தீவு இருக்கிறது. அதுதான் ரமணீயமான லங்கை என்பது. அது விசுவகர்மாவினுல் நிருமிக்கப்பட்டது. நவரத்தினங்களால் செய்யப்பட்ட திண்ணைகளேயும் வாசற்படிகளேயும் உடையது. சூரியனைப்போல் தகதகவென்று பிரகாசிக்கின்ற பெரிய மதிலால் சூழப்பட்டது. அந்த லங்காபுரத்தில் ராவணனது அந்தப்புரத்தில் ராக்ஷச ஸ்திரீகளின் நடுவில் துக்கித்துக்கொண்டிருக்கிறாள் சீதை.

ஓ வானரர்காள்! நூறுயோசனை தூரமுள்ள சமுத்திரத்தைத் தாண்டி லங்கையில் புகுவீர்களாயின் அங்கு ராவணனைக் காண்பீர்கள். நீங்கள் நிச்சயமாக சீதையைக்கண்டு சந்தோஷமாகத் திரும்பி வருவீர்களென்று நான் திவ்விய ஞானத்தினுல் கண்டு கொள்கிறேன். நான் இங்கிருந்தே சீதையையும் ராவணனையும் பார்க்கிறேன். நானும் என் குலத்தவர்களும் வினதையின் வம்சத்தில் பிறந்தவர்களாகையால் எங்களுக்கும் கருடனுக்குப்போல் ஞானதிருஷ்டியும் மகாபலமுமுண்டு. எங்களுக்கு நூறுயோசனைதூரம் வரையில் பார்வையுண்டு.

வானர வீரர்களே! துராத்மாவான ராவணனை ராமனால் கொல்லுவிப்பீர்களாயின் நான் என் தம்பி விஷயத்தில் ராவண னிடத்திலுள்ள பகையைத் தீர்த்துக்கொண்டவனாவேன். நீங்கள் உடனே சமுத்திரத்தைத் தாண்டுவதற்கு ஏதேனும் ஒரு உபாயத்தைத் தேடுவீர்களாக. நீங்கள் சீதையைக்கண்டு இஷ்டகாரியம் சித்திக்கப்பெற்றுக் கிஷ்கிந்தையை அடைவீர் கள். சுவர்க்கத்தையடைந்த என் தம்பி ஜடாயுவுக்கு நான் ஜலதர்ப்பணம் செய்கிறேன். அதற்காக என்னை நீங்கள் சமுத்திரத்தினருகில் கொண்டுபோய்ச் சேர்ப்பீர்களாக" என்றனன். வானரர்கள் அவ்வண்ணமே சம்பாதியை சமுத் திரக்கரையில் சேர்த்து அவன் தர்ப்பணம் செய்தபின் மீள வும் முன்பிருந்த இடத்திற்கே கொண்டுபோய்ச் சேர்த்தனர்.

ஐம்பத்தெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## ஐம்பத்தோன்பதாவது ஸர்க்கம்

### சம்பாதி தன் புத்திரனை ஸுபார்சுவன் மூலமாய், ராவணன் சீதையை எடுத்துச்சென்ற விருத்தாந்தம் தனக்குத் தெரியுமென்று கூறுதல்.

பிறகு வானரர்கள் சீதையின் இருப்பிடத்தை சம்பாதி யின் மூலமாய் அறிந்ததனால் மிகுந்த சந்தோஷமடைந்தனர். அப்பொழுது ஜாம்பவான் எழுந்து சம்பாதியை நோக்கி "சீதை எங்கே இருக்கின்றனள்? அவளை எவன் எடுத்துக் கொண்டு போயினன்? அப்படிப்போகையில் எவன் பார்த் தனன்? இவற்றை யெல்லாம் மறுபடியும் நீ கூறவேண்டும். நீயே எங்களுக்கெல்லாம் ரக்ஷகன். உன் மூலமாக நாங்கள் சந்தோஷ சமாசாரத்தைத் தெரிந்து கொள்வோமாக" என்று வினவினன்.

சம்பாதி அவர்களைநோக்கி "நான் இறகுகளிழக்கப்பெற்று எங்கும் செல்லமுடியாமல் இவ்விந்திய மலையின்குகையிலேயே

வெகு காலமாக வசித்துக் கிழவனுகி வலிமை குன்றியிருக்கிறேன். என்மீது இரக்கங்கொண்ட என் குமாரனுன ஸுபார்சுவன் என்பவன் காலம் தவறுமல் எனக்கு ஆகாரம் கொண்டுவந்து கொடுத்துப் போஷித்து வந்தான். ஒரு சமயம் நான் மிகுந்த பசியினுல் பீடிக்கப்பட்டு அவனது வருகையை ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். சூரியன் அஸ்தமித்த பின்பு அவன் மாமிசம் கொண்டுவாாமல் வெறுங்கையுடனே வந்தனன்.

நான் மிகுந்த கோபங்கொண்டு அவனை விரட்டினேன். அவன் என்மீது எப்பொழுதும் பிரிய முடையவனுகையால் கோபிக்கின்ற என்னை வெகுதூரம் மன்னிக்கும்படி வேண்டித் தான் வெறுங்கையுடன் வந்ததற்குக் காரணத்தை உள்ளவாறு சொல்லத்தொடங்கி 'என்னப்பனே! நான் எப்பொழுதும் போல் சமுத்திரத்தில் பலவாகத்திரிகின்ற ஜந்துக்களைப் பிடிக்கும் பொருட்டு அவைகளின் வழியைக் குறுக்கே தடுத்துக் கொண்டிருந்தேன். அச்சமயம் கறுத்த காந்தியுடைய எவனே ஒருவன் சூரியோதயம்போல் பிரகாசித்துக் கொண்டிருக்கின்ற ஒரு பெண்மணியை எடுத்துக்கொண்டு போகக் கண்டேன். நான் ஆகாரத்தை விரும்பினவனுகையால் அவ்விருவரையுமே ஆகாரமாகப் பிடித்துக்கொள்ள நிச்சயித்தேன். இதற்குள் அந்தப் புருஷன் வணக்கத்துடன் நல்ல வார்த்தைகளைச் சொல்லிக்கொண்டு 'என்னை வழிவிடுவாய்' என்று யாசித்தனன். நல் வார்த்தையுடன் வேண்டுவோர்களை இம்சிக்கக் கூடாதாகையால் நான் அவர்களை ஒன்றும் செய்யவில்லை. அப்புருஷன் தன் தேஜோ விசேஷத்தினுல் ஆகாயத்தைக் குறுகச் செய்பவன் போல் மிக்க வேகத்துடன் சென்றனன்.

பிறகு ஆகாயத்தில் திரிகின்ற பூதங்கள் என்னிடம் வந்து என்னைக் கௌரவித்தன. மகரிஷிகள் என்னைப்

பார்த்து 'அப்பா! நீ தெய்வாதீனமாகத் தப்பிப்பிழைத்தனே' என்றனர். பிறகு சித்தர்களால் அப் புருஷன் ராக்ஷசர் தலைவனான ராவணனென்றும், அப்பெண்மணி ஜனகராஜன் புதல்வியும் ராமனது மனைவியுமான சீதையென்றும் தெரிந்து கொண்டேன். இதனால் காலம் கடந்துவிட்டது. ஆகாரம் கொண்டுவர முடியவில்லை' என்று ஸுபார்சுவன் மொழிந்தனன். அதைக்கேட்டபின் ராவணனைத் தண்டித்து ராமனுக்கு உபகாரம் செய்யும் எண்ணம் எனக்கு உண்டாகியும் பலமற்றவனான என்னால் என்ன செய்ய முடியும்? இனி ராமனது காரியம் என்னுடைய காரியமே யன்றி வேறில்லை. ஆகையால் நீங்கள் விரைவிற்சென்று உங்கள் காரியத்தைக் கவனிப்பீர்களாக. கால தாமதம் வேண்டாம்" என்றனன்.

ஐம்பத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

அறுபதாவது ஸர்க்கம்

## சம்பாதி தன் இறகுகள் தீய்ந்து போனது முதலிய விருத்தாந்தங்களைக் கூறுதல்.

சம்பாதி ஜல தர்ப்பணம் செய்தபின் வானரர்கள் அந்தப் பர்வதத்தில் அவனைச் சுற்றி உட்கார்ந்தனர். அப்பொழுது சம்பாதி அங்கதனை நோக்கி "வானர யூதபதிகளே! நான் சீதா தேவியின் விருத்தாந்தத்தை அறிந்த விதத்தை உள்ளபடி சொல்லுகிறேன் கேளுங்கள். நான் முன்பு சூரிய கிரணங்களால் இறகுகள் கொளுத்தப்பட்டபொழுது இவ் விந்திய பர்வதத்தின் சிகரத்திலுள்ள பெருங்காட்டில் விழுந்தேன். அப்பொழுது இப் பிரதேசத்தில் தேவதைகளாலும் பூஜிக்கத் தக்க ஓர் பரிசுத்த ஆசிரமம் இருந்தது. அதில் நிசாகரரென்கிற சிறந்த தபோ மகிமையுள்ள முனிவர் இருந்தார். அவர் இறந்து இப்பொழுது எண்பதினாயிரம் வருடங்

களாயின. அவர் இருந்த காலத்து நான் இவ்வாச்சிரமத்தை அடைந்து, அவரை முன்பு நானும் என் தம்பி ஜடாயுவும் பலதடவை சேவித்திருந்தோமாகையால், அவரை மீண்டும் ஒருமுறை கண்டு வணங்க விருப்பங்கொண்டேன்.

ஆ! என்ன ஆச்சரியம்! அச்சமயம் சமஸ்த பூதங்களாலும் சூழப்பட்ட பிரமதேவனைப்போல் அம் முனிவர் கரடிகளாலும் சாமர மிருகங்களாலும் புலி சிம்மம் யானை முதலியவற்றாலும் சூழப்பட்டு என்னை நோக்கி வரக் கண்டேன். அவர் ஆச்சிரமத்தில் நுழைந்ததும் அவரைச் சூழ்ந்திருந்த பிராணிகளெல்லாம் தம் தம்மிடத்திற்குச் சென்றன. அவர் என்னை நோக்கி, 'முன்பு வேகத்தில் வாயுவை நிகர்த்து சமஸ்த கழுகுகளுக்கும் அரசர்களும், காமரூபிகளும் அண்ணன் தம்பிகளுமான இரண்டு கழுகுகளைப் பார்த்திருக்கிறேன்; சம்பாதீ! நீ அவற்றில் பெரியவனல்லவா? ஐயோ! இதென்ன? உன் இறகுகள் ஏன் வீழ்ந்துபோயின? உனக்கேதேனும் வியாதி உண்டாயிற்றா? அல்லது யாரேனும் உன்னைத் தண்டித்தார்களா? உண்மையைக் கூறுவாயாக' என்று வினவினர்.

**அறுபதாவது ஸர்க்கம் முற்றிற்று.**

---

## அறுபத்தோராவது ஸர்க்கம்

### சம்பாதி தான் இறகுகளை இழந்த விருத்தாந்தத்தை நிசாகர முனிவருக்குச் சொன்னதை வானரர்களுக்குச் சொல்லுதல்.

பிறகு நான் அவரை நோக்கி "மகானுபாவரே! முன்பு ஜடாயுவும் நானும் ஒருவர்மேலொருவர் போட்டி போட்டுக்கொண்டு கர்வத்தினால் உடம்பு தெரியாமல் ஒருவருக்கொருவர் பராக்கிரமத்தையறிய விரும்பி ஆகாயத்தில் கிளம்பிப் போயினம். இருவரும் கைலாச பர்வத சிகரத்தில் ரிஷிகளின் முன்னிலையில் 'சூரியன் அஸ்தமய பர்வதம் போய்ச்

சேரும் வரையில் அவனைப் பின் தொடர்ந்து நடக்கவேண்டும்' என்று பந்தயம் ஏற்படுத்திக்கொண்டு இருவரும் ஒரே காலத்தில் ஆகாயத்தில் கிளம்பினோம். மிகவும் உயரச் சென்று எங்களுக்குப் பூமியிலுள்ள பெரிய மலைகளும் காடுகளும் மிகச் சிறியவைகளாகக் காணப்பட்டன.

சூரிய மார்க்கத்தில் சஞ்சரிக்கும்பொழுது எங்களுக்குத் தீவிரமான புழுக்கமும் களைப்பும் மனமயக்கமும் பயமும் உண்டாகி, கண்கள் இருள் மூடப்பெற்று, ஒன்றும் தெரியாமல் பயங்கரமான மூர்ச்சையும் உண்டாகத் தொடங்கின. தக்க ஏற்பாடுகளுடனிருந்த உலகங்களெல்லாம் அழியப் பெற்று, பிரளய காலாக்கினியால் கொளுத்தப்பட்டு உருமாய்ந்திருப்பதுபோல் புலப்பட்டது. என் கண்கள் சுழன்று பார்வையும் அழிந்துவிட்டது.

மீளவும் மிகுந்த பிரயாசத்துடன் சூரியனைக் கண்டனன். அப்பொழுது சூரியன் எனக்குப் பூமியவ்வளவு பிரமாணமுள்ளவனாகப் புலப்பட்டனன். பிறகு ஜடாயுவும் என்னோடு சொல்லாமலே பூமியின்மேல் விழத்தொடங்கினன். அதைக் கண்டு நானும் சீக்கிரமாக என்னைக் கீழே விழவிட்டனன். ஜடாயுவை நான் என் இறகுகளால் மறைத்துக்கொண்டு வருவதுபற்றி அவன் கொளுத்தப்படவில்லை. நான் மாத்திரம் ஆகாயத்தினின்று விழும்பொழுது சூரிய கிரணங்களால் இறகுகள் கொளுத்தப்பெற்று இவ்விந்திய பர்வதத்தில் மூர்ச்சையடைந்து விழுந்தேன். என் தம்பியையும் இறகுகளையும் ராஜ்ஜியத்தையும் பராக்கிரமத்தையும் இழந்து இனி நான் உயிருடன் இருக்க விரும்பவில்லை. ஆகையால் இம் மலைச் சிகரத்தினின்று விழுந்து மரணம் அடையப் போகிறேன்" என்று மொழிந்தேன்.

அறுபத்தோராவது ஸர்க்கம் முற்றிற்று.

அறுபத்திரண்டாவது ஸர்க்கம்

## நிசாகரமுனி சம்பாதிக்கு இறகுகள் முளைக்கும் பிரகாரத்தைக் கூறினதைக் கூறுதல்.

வானரர்காள்! இங்ஙனம் நான் அம்முனிவரிடம் கூறி ரோதனம் செய்தேன். அம் மகானுபாவர் சிறிது நேரம் தியானம் செய்து என்னைப் பார்த்து "உனக்கு இறகுகளும் சிற்றிறகுகளும் நேத்திரங்களும் பல பராக்கிரமங்களும் மீளவும் புதிதாக உண்டாகும். முன் நான் இங்கு வரும் போது ஓர் பெரிய காரியம் நடக்கப்போகிறதென்று பெரியோர் மூலம் கேள்விப்பட்டிருக்கிறேன். அதாவது இக்ஷ்வாகு வமிசத்தில் தசரதனென்னும் ஓர் அரசன் உளன். அவனுக்கு மகாதேஜஸ்வியான ராமன் என்று பெயருள்ள ஓர் புதல்வன் பிறக்கப் போகின்றனன். தந்தையின் அனுமதியால் ராமன் தம்பி லக்ஷ்மணனுடனும், மனைவி சீதையுடனும் காட்டிற்கு வருவான். தேவதானவர்களாலும் வெல்ல முடியாத ராக்ஷச ராஜனை ராவணன் ராமனது மனைவி சீதையை அபகரிக்கப் போகின்றனன்.

தன் வசமாகும்பொருட்டுச் சீதைக்கு ராவணன் சிறந்த ஐசுவரியங்களையும் போஜன பதார்த்தங்களையும் ஆபரணங்களையும் கொடுத்தும் அவள் மகாபதிவிரதையாகையால் கணவனைப் பிரிந்த துக்கத்தில் மூழ்கி அவையெல்லாவற்றையும் திரஸ்கரிப்பாள். இந்திரன் அவளுக்குப் பசியாமலிருக்கச் சிறந்த அன்னங் கொடுப்பான்.

சீதை தேவர்களுக்கும் பெற முடியாத அந்த திவ்வியான்னத்தை இந்திரன் கொடுத்ததென்று தெரிந்து, அதில் முன் பாகத்தை எடுத்து, 'என் கணவனும் பிரபுவுமான ராமனும் மைத்துனனை லக்ஷ்மணனும் ஜீவித்திருப்பார்களாயினும், அல்லது மரணமடைந்து தேவர்களாய் இருப்பினும்

அவ்விருவர்க்கும் இவ்வன்னம் சேருமாக' என்று மொழிந்து பூமியில் வைப்பாள்.

நாளடைவில் ராமனால் அனுப்பப்பட்ட வானரர்கள் அவளைத் தேடும்பொருட்டு வரப்போகின்றனர். நீ அந்த வானரர்களுக்கு சீதையின் இருப்பிடத்தைச் சொல்ல வேண்டும். எல்லாவிதத்திலும் நீ இங்கிருப்பதே நலம். இறகுகளில்லாமையால் உன்னால் எங்குச்செல்லமுடியும்? உனக்கு மீளவும் இறகுகள் உண்டாகும். உனக்கு இப்பொழுதே இறகுகள் உண்டாகும்படி செய்ய நான் விரும்பவில்லை. ஏனெனில் நீ இங்கேயே இருப்பாயாயின் ராமனுக்கு நன்மை செய்தவனாவாய்.

இன்னும் ராமகாரியம் உனக்கு மாத்திரமேயன்றி சமஸ்த பிராமணர்களுக்கும் தேவதைகளுக்கும் முனிவர்களுக்கும் தேவேந்திரனுக்கும் அவசியம் செய்யத்தக்கது. எனக்கும் அந்த ராம லக்ஷ்மணர்களைக் காண விருப்ப மிருந்தபோதிலும் இனி வெருகாலம்வரை பிராணனை வைத்துக்கொண்டிருப்பது எனக்கிஷ்டமில்லை" என்று பற்பல உரைகளைச் சொல்லி என்னைப் புகழ்ந்து எனக்கு அனுமதிகொடுத்துத் தாம் ஆச்சிரமத்தில் புகுந்தனர்.

அறுபத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## அறுபத்துமூன்றாவது ஸர்க்கம்.

### சம்பாதிக்கு இறகுகள் முளைத்தலும், வானரர்கள் செய்ய வேண்டிய காரியத்தைச் சம்பாதி கூறுதலும்.

வானரர்களே! பிறகு, நான் அப்பர்வத குகையினின்று மெல்லநகர்ந்து விந்திய பர்வதத்தின்மேலேறி உங்கள் வரவை முனிவர் சொன்ன காலம் முதலாக எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறேன். எனது நிராதரவான நிலைமையை நினைத்து

நான் மரணமடைவதே நலம் என்று எனக்குத் தோன்றும் போதெல்லாம், மகரிஷி மொழிந்த வார்த்தைகளை நினைத்து மனதை சமாதானப்படுத்திக்கொள்வேன்.

நான் துராத்துமாவான ராவணனுடைய பராக்கிரமத்தை அறிந்தும் என் புதல்வனைப் பார்த்து 'நீ ராவணனைக் கொன்று சீதையைக் காப்பாற்றாமல் ஏன் வந்தனை?' என்று விரட்டினேன். என் மகனோ சீதையை விடுவித்து எனக்குப் பிரியம் செய்யாமல் போயினன்'' என்று சம்பாதி கூறினன்.

சம்பாதி இங்ஙனம் சொல்லிக்கொண்டிருக்கும்பொழுதே சமஸ்த வானரர்களின் கண் முன்னே அவனுக்கு இறகுகள் முளைக்க வாரம்பித்தன. சம்பாதி மிகுந்த சந்தோஷத்துடன் "வானரர்களே! இதோ எனக்கு நிசாகரமுனிவரது அருளினால் இறகுகள் முளைக்கின்றன. நான் காளைப்பருவமாய் இருந்தபொழுது எனக்கு எப்படிப்பட்ட பலமும் பராக்கிரமமும் இருந்தனவோ அவையெல்லாம் எனக்கு இப்பொழுது உண்டாயிருக்கின்றன. நீங்கள் தக்க பிரயத்தனம் செய்வீர்களாயின் நிச்சயமாக சீதையைக் காண்பீர்கள். இதோ எனக்கு இறகுகள் முளைத்தனவன்றோ! இதுவே உங்களுக்குக் காரியம் கைகூடும் என்கிற நம்பிக்கையை விளைவிக்கின்றது'' என்றனன்.

உடனே சம்பாதி தன் புதிய இறகுகளின் பலத்தினால் ஆகாயத்தில் கிளம்பிப் பறந்து சென்றனன். வானரர்கள் இவ்வாச்சரியமான சம்பவத்தைக் கண்டு மகிழ்ச்சியடைந்து மிகுந்த உத்சாகத்துடன் சீதாதேவியைத் தேடமுயன்று அபிஜித்தென்னும் முகூர்த்தத்தில் தென்திசை முகமாகப் போயினர்.

அறுபத்துமூன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

## அறுபத்துநான்காவது ஸர்க்கம்.

## வானரர்கள் சமுத்திரத்தினருகில் சேருதல்.

வானரர்கள் சீதையைக்காண ஆவலுடையவர்களாகி லங்கைக்குப்போக நினைத்து அதற்கு வழியாகிய தென் சமுத்திரத்தின் வடகரையைச் சேர்ந்தனர். அந்த சமுத்திரத்தில் மிகவும் பயங்கரமான பெரிய உருவங்களுடைய நானுவித ஜந்துக்கள் ஜலத்தில் விளையாடிக்கொண்டிருந்தன. பயங்கரமான பெரிய அலைகள் வீசின. பாதாள லோகத்திலுள்ள மேலான தானவர்களும் ஆங்காங்கு நிறைந்திருந்தனர். இங்ஙனம் காண்போர்களுக்கு மயிர்க்கூச்சலை விளைவிக்கின்ற அம் மகா சமுத்திரத்தைக் கண்டு அவ்வானர வீரர்கள் திகிலடைந்து வருத்தமுற்றனர்.

வானரர்தலைவனுன அங்கதன் வானரர்களெல்லாம் இங்ஙனம் சமுத்திரத்தைக்கண்டு பயப்படுவதைப் பார்த்து அவர்களை நோக்கி "மனதில் எள்ளளவும் வருத்தமுறவேண்டாம். கோபமுடைய சர்ப்பம் குழந்தையைக் கொல்வதுபோல், துக்கம் புருஷனைக் கொன்றுவிடும். பராக்கிரமத்தை உபயோகப்படுத்தவேண்டிய சமயத்தில் வருத்தம் உண்டாகுமாயின் அது கெடுதியையே விளைவிக்கும். அப்படிப்பட்ட மனவருத்தமுடையவனுக்கு எவ்விதமான புருஷார்த்தமும் சித்திக்காது" என்று கூறித் தைரியமுண்டாகச் செய்தனன்.

மீளவும் அங்கதன் வானரர்களில் பெரியோர்களுடன் கூடி சமுத்திரத்தைத் தாண்டும் விஷயத்தைக் குறித்து ஆலோசனை செய்தனன். தேவேந்திரனைச் சூழ்ந்திருக்கும் தேவ சேனையைப்போல அங்கதனைச் சூழ்ந்திருந்த வானர சேனை பிரகாசித்தது.

பிறகு அங்கதன் பேசத் தொடங்கி "இந்த சைன்னியங்களுள் மகா தேஜஸ்வியாக எவன் சமுத்திரத்தைத் தாண்ட

வல்லவன்? வானரர்களே! எந்த வீரன் நூறுயோசனை தூர முடைய சமுத்திரத்தைத் தாண்டி சீதையைக்கண்டுவந்து நமக்கு சுக்கிரீவனால் நேரிட்டிருக்கிற மகா பயத்தைப் போக்க வல்லவன்? எவனுடைய பிரபாவத்தினால் நாம் காரியம் கைகூடப்பெற்று சுகமாகக் கிஷ்கிந்தைக்குச்சென்று நமது மனைவிமக்களையும் வீடுகளையும் காண்போம்?" என்றனன்.

இங்ஙனம் அங்கதன் கூறினதும் வானரர்களில் எவனும் ஒன்றும் சொல்லவில்லை. அவ்வானரசேனை முழுதும் அசை யாமல் எழுதிய சித்திரம்போலிருந்தது. அங்கதன் மீண்டும் அவர்களைப் பார்த்து "வானரோத்தமர்களே! நீங்கள் மிகுந்த பலமுடையவர்களும் கௌரவமுடைய பெரிய குலத்தில் பிறந் தவர்களுமாய் இருக்கிறீர்கள். உங்களாலாகாத காரியமும் உண்டோ? உங்களில் எவரெவர்க்கு எவ்வெவ்வளவு தூரம் தாண்ட சக்தி உள்ளதோ அதைச்சொல்லுங்கள்" என்றனன்.

அறுபத்து நான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## அறுபத்தைந்தாவது ஸர்க்கம்

### வானரர்கள் சமுத்திரம் தாண்டுவதில் தம் தமக்குள்ள சக்தியின் அளவைக் கூறுதல்.

அப்பொழுது கஜன் எழுந்திருந்து 'நான் பத்துயோசனை தூரம் தாண்டுவேன்' என்றனன். கவாக்ஷன், கவயன், சரபன், கந்தமாதநன், மைந்தன், த்விவிதன், சுஷேணன் முதலிய வர்கள் முறையே, இருபதுயோசனை, முப்பதுயோசனை, நாற்பது யோசனை, ஐம்பது யோசனை, அறுபது யோசனை, எழுபது யோசனை, எண்பது யோசனை தூரம் தாண்டக் கூடுமென்று கூறினர்.

பிறகு கிழவனான ஜாம்பவான் வானரர்களை நோக்கி "நான் நல்ல யௌவனமான வயதில் விஷ்ணுதேவன் மூவுல

கங்களை அளந்தபொழுது அந்த விஷ்ணுவின் உருவத்தை (அதாவது—பிரம்மாண்டத்தை) பிரதக்ஷிணமாகச் சுற்றி வந்தேன். அப்பொழுது எனக்கு நல்ல பலம் இருந்தது. இப்பொழுது நான் வயது சென்று மூத்தபடியால் தொண்ணூறு யோசனை தூரம்தான் தாண்டமுடியுமென்று நினைக்கிறேன். ஆனால் லங்கைக்குச் செல்ல நூறு யோசனை தூரம் தாண்ட வேண்டியிருக்கையால் அது என்னால் எப்படி முடியும்?" என்றனன்.

பிறகு இளவரசனான அங்கதன் மற்றவர்களை நோக்கி "நான் இந்த நூறு யோசனை தூரமும் தாண்டிச் செல்ல வல்லவனேயாகிலும், மீளவும் திரும்பிவரச் சக்தி இருக்குமோ இராதோ என்பதை நிச்சயமாகச் சொல்ல வல்லேனல்லேன்" என்றனன்.

பேச்சில் வல்ல ஜாம்பவான் அங்கதனை நோக்கி "வானரர் தலைவனே! தாண்டுவதில் உன் சக்தி இப்படிப்பட்டதென்று தெரிந்தே இருக்கிறது. நூறு யோசனை மாத்திரமல்ல. ஆயிரம் யோசனைகளாயினும் நீ தாண்டிச்சென்று திரும்பி வர வல்லவனேயாவாய். ஆயினும் பிரபுவாகிய உன்னையனுப்புவது வேலைக்காரர்களான எங்களுக்குத் தகுதியன்று. வானர திலகனே! எங்களுக்கெல்லாம் தலைவனாகிய உன்னை நாங்கள் மனவூக்கத்துடன் பாதுகாத்து வரவேண்டும். ராம காரியத்திற்கு, மரத்திற்கு வேர்போல் நீ மூலமாய் இருக்கின்றனை. மேலும் ராஜகுமாரனுமிருக்கின்றனை. உன்னைப்பற்றியன்றோ நாங்கள் காரியத்தை நிறைவேற்றவல்லோம். நீ இல்லையாயின் எங்களால் என்ன செய்யமுடியும்? ஆகையால் நீ லங்கைக்குச் செல்வது கூடாது" என்றனன்.

இவற்றைக் கேட்ட அங்கதன் "சமுத்திரத்தைத் தாண்ட நானும் போகாமல் மற்றொரு வானரோத்தமனும் போகாமல் இருப்பின் இனி நாமெல்லோரும் மீளவும் உண்ணா

விரதமிருந்து உயிர் விடவேண்டியிருக்குமல்லவா? சுக்கிரீவனது கட்டளையின்படி காரியத்தை நிறைவேற்றாமல் கெடுவையும் தப்பிக் கிஷ்கிந்தைக்குப் போவோமாயின் நாம் எல்லோரும் குரூரமான மரண தண்டனைக்குள்ளாவோம். ஆகையால் எல்லாம் தெரிந்த ஓ ஜாம்பவானே! சமுத்திரத்தைத் தாண்டத்தக்க உபாயத்தை நீயே ஆலோசித்துச் சொல்ல வேண்டும்" என்று வேண்டினன்.

அப்பொழுது ஜாம்பவான் "வீரனே! நீ விரும்புமிக் காரியத்திற்குச் சிறிதும் குறை நேராது. இக்காரியத்தை முடிக்கவல்ல மகாவீரனை இதோ அனுப்புகின்றேன்" என்று கூறி அங்குள்ள வானரர்களெல்லாரையும் திரஸ்கரித்து மகாவீரனை அனுமானைப் பார்த்து அவனையே சமுத்திரத்தைத் தாண்டுவதில் உத்சாகப்படுத்தத் தொடங்கினன்.

அறுபத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## அறுபத்தாறவது ஸர்க்கம்

## ஜாம்பவான் அனுமானை சமுத்திரம் தாண்ட உத்சாகப்படுத்துதல்.

ஜாம்பவான் அனுமானைப்பார்த்து "வானரர்களில் சிம்மம் போன்றவனே! நீ தேஜஸ்ஸிலும் பலத்திலும் சுக்கிரீவனுக்கும் ராமலக்ஷ்மணர்களுக்கும் நிகராயிருப்பவனல்லவா! உன்னுடைய வேகமும் பராக்கிரமமும் கருடனுடைய பராக்கிரம வேகங்களைக் காட்டிலும் எள்ளளவும் குறைந்தவையல்ல. உனக்குள்ள பலமும், புத்தியும், தேஜஸ்ஸும், தைரியமும் மற்ற எந்தப் பிராணிகளிடத்திலும் காணேன். அப்படிப்பட்ட உன்னை நீ அறியமாட்டாயா என்ன?

என்னப்பனே! புஞ்சிகஸ்தலை என்னும் மிகவுமழகிய அப்ஸர ஸ்திரீ ஒருத்தி சாபத்தினால் பூமியிலுள்ள குஞ்சர

னென்னும் வானரோத்தமனுக்குப் பெண்ணாகி அஞ்சனை யென்னும் பெயர் பெற்றுக் கேஸரி என்னும் வானர வீரனை மணம் புரிந்தனள். அவள் வானர ஸ்திரீயாய் இருப்பினும் சர்வாங்க சுந்தரியாய் மனம் போனபடி வடிவம் தரிக்க வல்லவளாகையால் ஒரு சமயம் மானிட ஸ்திரீ ரூபம் தரித்து யௌவனத்தினால் விளக்கமுற்றுப் பலவிதமான பூமாலைகளையும் ஆபரணங்களையுமணிந்து மேலான பட்டு வஸ்திரம் தரித்து காளமேகம்போல் கறுத்த வர்ணம் பொருந்திய ஓர் பர்வத சிகரத்தில் உலாவிக்கொண்டிருந்தனள்.

அப்பொழுது வாயுதேவன் வீசிக்கொண்டு வந்து அவளது மேலான பச்சைப்பட்டு வஸ்திரத்தைச் சிறிது விலகச் செய்தனன். வஸ்திரம் விலகவே அவளது திரண்டுருண்ட அழகிய கொங்கைகளையும், அவளது துடைகளையும், அழகான பின்பிரதேசங்களையும் வாயுதேவன் கண்டு மன்மத விகாரத்தினால் மோகமுற்றுத் தனது நீண்ட புஜங்களால் அம்மடந்தையைக் கட்டியணைத்தனன்.

அவ்வஞ்சனாதேவி பதிவிரதையாகையால் மிகவும் தழதழப்புற்று "ஒருவனுக்கே மனைவியான என் பதிவிரதா தர்மத்தையழிக்க முயன்றவன் எவன்?" என்றனள். வாயுதேவன் அவளை நோக்கி "சுந்தராங்கி! நான் பதிவிரதையான உன்னை ஆலிங்கனம் செய்து மனத்தினால் உன்னோடு கலந்தேனன்றி வேறில்லை. உன் பதிவிரதா தர்மம் கெட்டுவிடவில்லை. இதுவன்றி உனக்கு மகா வீரியசாலியும் மிகுந்த புத்தியுடையவனுமான ஓர் புதல்வன் பிறப்பான். அவன் மிகுந்த பலமும் பராக்கிரமமும் பொருந்தித் தாண்டுவதிலும் ஆகாயத்தில் கிளம்பிப் போவதிலும் எனக்கு நிகராயிருப்பான்' என்றனன். அம்மகானுபாவனருளால் நீ அஞ்சனையிடத்து உதித்தவனல்லையோ?

பிறகு நீ பிறந்தவுடன் சூரியன் உதயமாகக் கண்டு அது ஓர் பழமென்று நினைத்து அதைத் தின்ன விரும்பிக் கிளம்பி ஆகாயத்திற்குப் போயினை. பிறகு நீ பல ஆயிரம் யோசனை தூரம் ஆகாயத்திற் சென்று சூரியனது உஷ்ண தேஜஸ்வி னால் தபித்துத் தூரத்தப்பட்டும் நீ வருத்தமுறுதிருந்தனை. வானர சிரேஷ்டனே! நீ அங்ஙனம் சூரியனை நெருங்கும் போது உன்னால் சூரியனுக்கு என்ன கெடுதி நேருமோ வென்று கோபங்கொண்ட தேவேந்திரன் தனது வஜ்ஜிரா யுதத்தினால் உன்னையடிக்க நீ அதன் வேகத்தினால் பர்வத சிகரத்தில் வீழ்த்தப்பட்டபோது உன் இடது கன்னத்தின் மேல்பாகம் முறிந்துபோயிற்று. இதைக் கண்ட உனது தந்தையான வாயுதேவன் மிகுந்த கோபங்கொண்டு மூன்று லோகங்களிலும் சிறிதும் காற்று வீசாதிருந்தனன். இதனால் தேவதைகள் தத்தளிப்புற்று வாயுதேவனை சமாதானப் படுத் தினர்.

புத்தியிற் சிறந்தவனே! அச்சமயம் பிரமதேவன் உனக்கு யுத்தத்தில் ஆயுதங்களினால் மரணமுண்டாகா திருக்குமாறு வரமளித்தனன். தேவேந்திரன் முதலிய தேவர்களும் உனக்குச் சிறந்த வரங்களைக் கொடுத்தனர். வாயு குமாரனே! பராக்கிரமத்தில் கருடனுக்கு அடுத்தவனே! நீயே இப்பொழுது எங்களைக் காப்பாற்றவேண்டும். தற்சமயம் நீயே எங்களனைவரினும் மிக்க சாமர்த்தியமுடையவன். அஞ்சனாதேவியின் செல்வப் புதல்வனே! தாண்டுபவர்களெல் லோரினும் மேலாய் இருப்பவனே! வானர சிம்மனே! சீக் கிரம் விம்மி வளர்ந்து விஷ்ணுதேவன் தன் மூன்றடிகளால் உலகையளந்ததுபோல் நாங்களெல்லாரும் கண்டு களிக்கும் படி மகாவேகத்தை ஏற்றுக்கொண்டு சமுத்திரத்தைத் தாண்டு வாயாக" என்றனன்.

இங்ஙனம் ஜாம்பவானால் தூண்டப்பட்ட அனுமான் தன் பராக்கிரமங்களையெல்லாமறிந்து மிகுந்த உத்சாகம் கொண்டு அவ்வானர சைன்னியமெல்லாம் சந்தோஷிக்கும்படி அற்புதமாக மேனியை வளர்த்திக்கொண்டனன்.

அறுபத்தாறுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## அறுபத்தேழாவது ஸர்க்கம்

### அனுமான் சமுத்திரத்தைத் தாண்டும்பொருட்டு மகேந்திர பர்வதத்தின் மேல் ஏறுதல்.

பிறகு அனுமானைப் பார்த்து அவ்வானரர்கள் துக்கத்தைவிட்டு மிகுந்த சந்தோஷமடைந்து அவனை ஸ்தோத்திரம் செய்யத் தொடங்கினர். அனுமான் சந்தோஷப் பெருக்கினால் பலம் வளரப்பெற்று வாலை உதறிப் பூமியில் தட்டி விருத்தி அடைந்தனன். அவனது உருவம் நிகரற்று விளங்கியது. அவனது முகம் ஜ்வலிக்கின்ற மடக்குபோலவும் புகையில்லாத நெருப்புப்போலவும் தகதகவென்று ஜ்வலித்துக்கொண்டிருந்தது.

பிறகு அனுமான் பெரியோர்களான வானரர்களுக்கெல்லாம் நமஸ்காரம் செய்து "நான் வாயு குமாரனாகையால் தாண்டுவதில் எனக்கு நிகரானவன் எவனுமில்லை. நான் மிகுந்த விஸ்தாரமுடையதும் ஆகாயத்தை யளாவியிருப்பதுமாகிய மேரு பர்வதத்தைச் சிறிதும் நடுவில் இளைப்பாறுமல் நூறுதரம் சுற்றிவருவேன். நான் எனது கைகளால் விரைவில் சமுத்திரத்தைக் கலக்கி இறைத்து இப்பூமண்டலத்தையெல்லாம் அதில் மூழ்கச் செய்ய வல்லவன்.

இன்னும் நான் சூரியன் உதய பர்வதத்தினின்று புறப்படும்போது அவனுடன் கூடவே புறப்பட்டு அவனுக்கு முன்னமே அஸ்தமய பர்வதத்தையடைந்து மீளவும் அவன்

ஆகாயமார்க்கத்தில் ஜ்வலிக்கும்பொழுதே அவனுக்கெதிரில் வருவேன். பிறகு பூமியில் இறங்கிச் சிறிதும் இளைப்பாறு. மலை முதலில் தொடங்கின அம்மகா வேகத்துடனே மீளவும் ஓர் தடவை சூரியனை எதிரிடவல்லேன்.

இதுமாத்திரமன்று. ஆகாயத்தில் திரியும் கிரக நக்ஷத்திரங்களையெல்லாம் வேகத்துடன் கடந்து நடக்க வல்லேன். வானரர்களே! நான் ஆகாயத்தில் கிளம்பும்போது சமுத்திரத்தை வற்றச் செய்வேன். பூமியைப் பிளப்பேன். பர்வதங்களைச் சூர்ணம் செய்வேன். நான் ஆகாயத்தில் செல்லும்பொழுது சமஸ்த பூதங்களும் என்னை வேடிக்கையுடன் பார்க்கப் போகின்றன. நீங்களும் கூடப் பார்ப்பீர்கள். எனக்குள்ள சக்தி கருடனுக்கும் வாயுவிற்குமுள்ளதே தவிர, மற்றெவருக்கும் கிடையாது. நான் சமுத்திரத்தைத் தாண்டும் பொழுது என் உருவம் முன்பு திரிவிக்கிரமாவதாரத்தில் மாவலி கொடுத்த மூன்றடி பூமியை யளக்கின்ற விஷ்ணுவின் உருவத்தைப்போல் பயங்கரமாகவும் மிக்க ஆச்சரியமாகவும் இருக்கும். வானரர்களே! இவையெல்லாம் என் புத்திக்குத் தோன்றுகின்றது. என் மனதும் வலக்கை துடிப்பது முதலான சேஷ்டைகளும் அங்ஙனமே தெரிவிக்கின்றன. நான் நிச்சயமாக சீதையைக் காண்பேன். நீங்கள் இவ்விடமே சந்தோஷமாய் இருப்பீர்களாக. நான் பதினாயிரம் யோசனைகள் தாண்டுவேனென்று எனக்குத் தோன்றுகிறது. நான் இந்திரனையாயினும், பிரமதேவனையேயாயினும் பராக்கிரமத்தினால் ஜெயித்து அவர்களிடமுள்ள அமிர்தத்தைக் கொண்டு வருவேன். பல சொல்லியென்? லங்கையையே பிடுங்கிக் கொண்டு வருவேனென்றும் கொள்ளுங்கள்" என்றனன்.

இங்ஙனம் மிதமிஞ்சின தேஜஸ்ஸுடன் பிரகாசிக்கின்ற அநுமானது வீர மொழிகளைக் கேட்டு வானரர்கள் ஸ்தம்

பித்து ஆச்சரியத்துடன் அவனையே பார்த்துக்கொண்டிருந்தனர். அப்பொழுது ஜாம்பவான் மிகுந்த சந்தோஷத்துடன் அநுமானை நோக்கி “வீரனே! கேசரி புத்திரனே! வாயு குமாரனே! அநுமானே! என்னப்பனே! நீ இப்பொழுது உனது பந்துக்களான சமஸ்த வானரர்களின் துக்கத்தையும் போக்கடித்தனை. எல்லாரும் நீ சுகமாகச் சென்று சீதையைக் கண்டுவரவேணுமென்று உனக்கு மங்களகரமான ஆசி கூறிக்கொண்டிருப்போம். நீ சீக்கிரம் இம்மகா சமுத்திரத்தைத் தாண்டுவாயாக. நீ திரும்பி வரும்வரையில் நாங்களெல்லோரும் ஒரு காலால் நின்றுகொண்டிருப்போம். இவ்வானரர்கள் அனைவருடையவும் பிராணன்கள் உன் கையில் இருக்கின்றன” என்றனன்.

பிறகு அநுமான் வானரர்களை நோக்கி “நான் சமுத்திரத்தைத் தாண்டும்பொழுது என் வேகத்தை இப்பூமி சகிக்க முடியாது. இம்மகேந்திர பர்வதத்தின் பெரிய சிகரங்களே என் வேகத்தைப் பொறுக்க வல்லவை. வானரர்களே! இங்கிருந்து நூறுயோசனை தூரம் தாண்டப் போகையில் என் பாதங்களின் உறைத்தலை இந்தப் பர்வத சிகரங்கள் தரிக்க வல்லவை” என்று கூறி, அம் மகேந்திர பர்வதத்தின்மேல் ஏறி விளையாடினன். அங்ஙனம் விளையாடிக்கொண்டிருக்கும் பொழுது அப்பெரிய பர்வதம் அநுமானது பாதங்களின் உறைப்பினால் நெருக்குண்டு சிம்மத்தினால் அடிக்கப்பட்ட பெரிய யானையைப்போன்று விளங்கியது.

இன்னும் அநுமானது அடி வைப்புக்களால் அதன் சிகரங்கள் சிதறப்பெற்று ஜலப் பிரவாகங்களைப் பெருக்கியது. மிருகங்களெல்லாம் பயந்தோடின. அம்மலையிலுள்ள நாகர்களும், கந்தருவ மிதுனங்களும், வித்தியாதரக் கூட்டங்களும் பயந்தோடிப் போயினர். பக்ஷிகள் மேலே கிளம்பின.

பெரிய சர்ப்பங்கள் பாழிகளில் மறைந்தன. அதிலுள்ள மக ரிஷிகள் பயந்து ஓடிப்போயினர். வீரர்களிற் சிறந்த அனு மான் வேகத்தைக் காட்ட முயன்று மனதில் சமுத்திரத்தைத் தாண்ட நிச்சயித்து அப்பொழுதே லங்காபுரியை அடைந்து விட்டதாக மனதில் எண்ணினன்.

அறுபத்தேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

ஸ்ரீமத் வால்மீகி ராமாயண மொழிபெயர்ப்பில்

## கிஷ்கிந்தா காண்டம்

முற்றுப்பெற்றது.

ஸ்ரீ ராமபிரான் திருவடிகளே சரணம்.

---